*உ*

*சிவமயம்*

*திருச்சிற்றம்பலம்*

சுந்தரமூர்த்தி சுவாமிகள்

அருளிச்செய்த

தேவாரத் திருப்பதிகங்கள்

# ஏழாந் திருமுறை

(பண்முறை)


பதிப்பாசிரியர்

**டாக்டர் இராச.வசந்தகுமார்**

வேந்தர்

கற்பகம் பல்கலைக்கழகம்



Enable | Enlighten | Enrich

KARPAGAM UNIVERSITY

(Under Section 3 of UGC Act 1956)

**பன்னிரு திருமுறை ஆய்வு மையம்**

## கற்பகம் பல்கலைக்கழகம்

ஈச்சநாரி, கோவை - 21

<u>நூற்குறிப்பு</u>


| | | |
|---|---|---|
| நூல் பெயர் | : | **ஏழாந் திருமுறை (தேவாரம்)** |
| ஆசிரியர் | : | **சுந்தரமூர்த்தி சுவாமிகள்** |
| நூல் வகை | : | செய்யுள் நூல் (பண் முறை) |
| வெளியீடு | : | **பன்னிரு திருமுறை ஆய்வு மையம்**<br>**கற்பகம் பல்கலைக்கழகம்** |
| வெளியீட்டு எண் | : | **44** |
| முதற்பதிப்பு | : | **2015** டிசம்பர் |
| பக்கங்கள் | : | 576 |
| தாள் | : | மேப்லித்தோ 80 gsm |
| அளவு | : | கிரவுன் 1/8 |
| அச்சகம் | : | செஞ்சுடர் அச்சகம்<br>கோ.வா.பாளையம்,<br>போத்தனூர், கோவை – 23.<br>செல் : 98431 74238 |




# ஏழாந் திருமுறை - பொருளடக்கம்

உ

*சிவமயம்*

*திருச்சிற்றம்பலம்*

# ஏழாந் திருமுறை

## வழிபாட்டுக் கருத்தரங்கம்



தேன்வடிக்கும் அமுதாம் உன்திருப்பாட்டைத் தினந்தோறும்
நான் படிக்கும் போதுஎன்னை நானறியேன் நாஒன்றோ
ஊன் படிக்கும் உளம் படிக்கும் உயிர்படிக்கும் உயிர்க்குயிரும்
தான் படிக்கும் அனுபவங்காண் தனிக் கருணைப் பெருந்தகையே

– ஆளுடைய நம்பிகள் அருள்மாலை, வள்ளலார்.

## பதிப்புரை

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன்அடி சேரா தார். – திருக்குறள்

**1. உயிரின் நோக்கம் / இலட்சியம்** - வீடுபேறு, முத்தி, மோட்சம். (சொர்க்க நரகங்கள் அல்ல)

**2. எடுத்துக்கொண்ட கொள்கைகள்**

அ) எந்நிலையில் நின்றாலும் எக்கோலம் கொண்டாலும் மன்னியசீர்ச் சங்கரன் தாள் மறவாமை

ஆ) யாதொரு தெய்வங் கொண்டீர்; அத்தெய்வமாகி மாதொரு பாகர் தாம் வருவார் எனத் தெளிதலும்/ உறுதிபட நிற்றலும்.

இ) பூதம் ஐந்தும் நிலையிற் கலங்கினும், மாதொரு பாகர் மலர்த்தாள் மறப்பிலாமை.

ஈ) மற்றொரு தெய்வத்தைக் கனவிலும் நினையாதிருத்தல்

உ) தம்மைத் தாம் முற்றிலும் மறத்தல்.

**3. வகுத்துக்கொண்ட நெறிகள்**

1) சிவபூசை – விசேட தீக்கை பெற்றுத் தினமும் சூரிய உதயத்தில் ஆன்மார்த்த படிகலிங்க மூர்த்திக்கு ஆனைந்துத் திருமஞ்சனத்துடன் 1008 போற்றி மலர் வழிபாடு.

2) எழில் ஞானபூசை – திருமுறைகளையும், சாத்திரங்களையும் ஓதுதல், ஓதுவித்தல்

3) சிவாலயத் திருப்பணிகள் – அன்றாட, வாராந்தர, மாதந்தர, வருடாந்தர பெருஞ்சாந்தி பெருவிழாக்கள் நடத்த உதவி செய்தல் – நல்விழாப் பொலிவு காணுதல் – காண்பித்தல்.

போதமுண்ட பிள்ளையென்பு பொருகண் மாது செய்ததோ
காதல்கொண்டு சொல்லின்மன்னர் கல்மிதப்ப உய்த்ததோ
வாய்திறந்து முதலைகக்க மகனை நீ ரழைத்ததோ
யாதுநம்பி அரிதுநன்று எனக்கியம்ப வேண்டுமே.

– நால்வர் நான்மணிமாலை
– சிவப்பிரகாச சுவாமிகள்

அன்புடையீர் வணக்கம்,

திருநெறியத் தமிழ்நெறி எனவும், ஞானவாரமுதமூட்டும் பெருநெறி எனவும், ஆறதேறுஞ் சடையான் அருள் மேவ வீறது ஏறும் தமிழால் நிலைநாட்டிய குருநெறி எனவும், திருப்பதிகத் தமிழ்ப்பெருநெறி எனவும் தமிழகத்து அருளாளர்களாற் பாராட்டபெற்ற தேவாரப் பெரு நெறியில் **தாவில் சராசரங்கௌல்லாம், சிவம் பெருக்கும் பிள்ளையார் எனப் பெரும் திருஞானசம்பந்தர், முதல் நின்றவராகிறார்.**

**அடுத்து நின்ற தாண்டகவேந்தர், “திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்டு திருவுழ வாரப்படை யேந்தி, வளர்திருத்தொண்டின் நெறி வாழ வருஞானத் தவ முனிவராய் வாய்மை குன்றா வாகீசர்” எனப் புகழ்ப் பெற்றவர்.**

**சமகாலத்துப் பெருந்தகைகளாகிய இவ்விருவரையும் ஒட்டி இரண்டு நூற்றாண்டுகளுக்குப் பின்னர், இந்நெறியில் நின்ற அருளாளர் திருநாவலூரர் எனப்படும் நம்பியாரூரர், தேவர் மூவர் என்ற தொடரின் மூன்றாவதாக நின்ற அருளாளர்.**

**பன்னிரு திருமுறைகளுள் முதல் மூன்றும் திருஞானசம்பந்தருடையன. நான்கு, ஐந்து, ஆறு என நின்ற மூன்று திருமுறைகளும் வாகீசப் பெருந்தகையின் வாய்மொழிகள். கடந்த ஓராண்டாக இரு மாதத்துக்கு ஒரு முறை ஒரு திருமுறை என மேற்கண்ட ஆறு திருமுறைகளையும் பிரசுரித்து, வெளியிட்டு, ஓதி உணரத் திருவருள் கூட்டுவித்தது. ஏழாவதாக நின்ற ஒரு திருமுறை நம்பியாரூரருடையதாகும். சென்றன போக நின்றனவாக நமக்குக் கிடைத்த பதிகங்களுள் இவருடைய பதிகங்கள் நூறு; திருப்பாடல்களின் தொகை ஓராயிரத்து இருபத்தாறு (1026) ஆகும். அதைப்பற்றி இம்மாதம் நூலாக வெளியிட்டுக் கலந்துரையாடச் சிவபெருமான் திருவுள்ளம் பற்றியுள்ள நிலையில் இப்பதிப்புரை இந்நூலை அலங்கரிக்கிறது.**

**திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் ஆகியோரைப் பின்பற்றியே அவர்தம் பதிகங்களை ஓதியும் உணர்ந்தும் பழகியவர் நம்பியாரூரர் என்ற செய்தியை அவரே,**

**நல்லிசை ஞான சம்பந்தனும் நாவினுக்**
**கரையனும் பாடிய நற்றமிழ் மாலை**
**சொல்லியே சொல்லி ஏத்துகப்பானை – 7-67-5 என்ற பாடலில் எடுத்துக்கூறியதே யன்றி,**

**“தொண்டனேன் அறியாமை அறிந்தது**
**கல்லியல் மனத்தைக் கசிவித்துக்**
**கழலடி காட்டி என் களைகளை அறுக்கும்**
**வல்லியல் வானவர் வணங்க நின்றானை**
**வலிவலந்தனில் வந்து கண்டேனே”**

**என்று அதே பாடலில் அமைப்பித்துச் சிறப்பிப்பதைக் காணும்போது வலியவந்து தன்னைக்காட்டி**

மாண்புறுத்துவது, அவன் எப்போதும் மேற்கொள்ளும் செயல் என உணரலாம்.

சைவப் பெருநெறியின் பல்வேறு புதுமைக் கொள்கைகளைத் தோற்றியும், வளர்த்தும் நிலைநிறுத்திய பீடுமிக்க வரலாறு நம்பியாரூரரின் வரலாறாகும். அதனாலேயே தெய்வச் சேக்கிழார் தாம் அருளிய பெரியபுராணம் எனப்பெறும் திருத்தொண்டர் மாக்கதை என்ற காப்பியத்துக்கு உரிய தனிப்பெருங்காப்பியத் தலைவராக நம்பியாரூரரை, நாம் தொழும் தெய்வமாக நிலைநிறுத்துகின்றார்.

நம்பியாரூரர், வன்தொண்டர், நாவலர் கோன், திருநாவலூரார், ஆரூரர், ஊரன், நாவலர் தனிநாதன், தமிழ்நாதன், தம்பிரான் தோழர், சடையன், இசைஞானி காதலன் என்றெல்லாம் தம்மைத் தம்முடைய பாடல்களில் குறித்துக் கொள்ளும் ஏழாந் திருமுறையின் ஆசிரியர் தம்மை எங்கும் சுந்தரர் என்று சொல்லிக் கொள்ளவில்லை. இது அதிசயமாகவுள்ளது.

ஆரூரரைக் காப்பியத் தலைவராக அமைத்து, அவர்தம் வரலாற்றை தெய்வப்புலமைச் சேக்கிழார் இரண்டு பகுதிகளாக அமைத்துக் கொள்கிறார்.

1. கயிலையில் வாழ்ந்த வாழ்வு
2. நிலவுலகில் வாழ்ந்த வாழ்வு

மாதவம் செய்த தென்திசை வாழ்ந்திட திருநாவலூரில் பிறந்து, திருவஞ்சைக் களத்திலிருந்து வெள்ளையானை மீதேறித் திருக்கயிலை செல்லும் வரையில் உள்ள அவர்தம் வாழ்வியல் வரலாற்றை, நிலவுலக வாழ்வு என அமைத்து, அவ்வாழ்வைத்

> தடுத்தாட் கொண்ட புராணம்
> ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணம்
> கழறிற்றறிவார் புராணம்
> வெள்ளானைச் சருக்கம்

என்ற நான்கு பிரிவுகளில் 776 பாடல்களில் அமைத்துத் திறம் பெறக் கூறுகிறார். இவை தவிர விறன் மிண்ட நாயனார் புராணத்திலும் இவர்தம் வரலாறு பேசப்பெறுகிறது.

நொடித்தான்மலை எனப்படும் பூலோகக் கயிலை ஒட்டிய பகுதியில் உபமன்யு முனிவர் மற்ற முனிவர்கள், சுத்தயோகிகள், மாணவர்கள் சூழ இருந்த காலையில், ஒரு சோதி போவது தெரிய, அனைவரும் அதிசயிக்க உபமன்யு முனிவர்,

> "............... தென்திசை
> வந்த நாவலர் கோன் புகழ்வன்தொண்டன்
> எந்தையார் அருளால் அணைவான்"

இங்கு வருகின்றவர் நம்பியாரூரர் சிவசமமானவர் என்று கூறி, கைகள் கூப்பி, வணங்கி, பின்னர், அத்திசை நோக்கியும் வணங்குகிறார். அப்போது சூழ இருந்தவர்கள் சிவன் சேவடியைத் தவிர யாரையும் வணங்காத தாங்கள் இப்போது வணங்கியது ஏன்? என்று வினவ அப்போது உபமன்யு முனிவர்

> "தம்பிரானைத் தன் உள்ளம் தழீஇயவன்
> நம்பி ஆரூரன் நாம் தொழும் தன்மையான்"

என்று கூறியபின், அந்த வரலாற்றை முனிவர்கள் விரிவாக விளக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ள, அப்போது தான் திருக்கயிலையிலிருந்து ஆலாலசுந்தரர் தென்னாடு போந்த வரலாற்றைக் கூறுகிறார். அவர் கயிலையிலிருந்து இரண்டு சேடியரை நந்தவனத்திற் கண்ட காட்சி காரணமாக இறைவனது ஆணைவழி பூவுலகில் அவதரித்து இறைவனால் தடுத்தாட்கொள்ளப்பெற்று, மாதவம் செய்த தென்திசை வாழத் திருத்தொண்டர்தொகை அருளி, அவ்விரு சேடியர்களையும் மணந்து பின்னர் இங்கு திரும்பி வருகின்றார் என அவர் சரிதம் முழுதும் சொல்லி அருளினார். அங்கேயும் சேக்கிழார் தம்முடைய கூற்றாக சுந்தரர் என்ற சொல்லை எடுத்தாளவில்லை.

மேலும் திருநாவலூரரை ஆலால சுந்தரர் என்று திருநாவுக்கரசு நாயனார் புராணத்துள் சேக்கிழார் கூறியுள்ளார்.

> மறந்தரு தீ நெறிமாற மணிகண்டர் வாய்மைநெறி
> அறந்தரு நாவுக்கரசும் ஆலால சுந்தரரும்
> பிறந்தரு உளதானால் நம்மளவோ பேருலகிற்
> சிறந்ததிரு முனைப்பாடித் திறம்பாடும் சீர்ப்பாடு – 1281

சிவபெருமான் கயிலையில் கண்ணாடியில் தோன்றிய உருவத்தை “சுந்தரா வருக” என்றழைக்க வந்த சுந்தரர், திருக்கயிலையில் அணுக்கத்தொண்டராக திருநீற்றுத் தொண்டும், திருமலர்த்தொண்டும் மேற்கொள்கிறார். பின்னர் நஞ்சு இருவகையாக வருகிறது. பாற்கடலைக் கடைந்தபோது அதிலிருந்து தோன்றிய நஞ்சு ஒன்று. வாசுகி என்னும் பாம்பைக் கயிறாகக் கொண்டு கடைந்ததால் தாங்க இயலாத நிலையில் வாசுகி தன்னுடைய வாயிலிருந்து சிந்திய நஞ்சு மற்றொன்று, கடல் தந்த ஆலம் + வாசுகி தந்த ஆலம் என்ற இவ்விரண்டும் ஆலம் + ஆலம் – ஆலாலமாகி நின்றன. அவையிரண்டும் அனைத்து உலகங்களையும் அழிக்கும் வகையில் பெருக்கெடுத்தபோது, அவைகளைத் திரட்டி, பெரியதைச் சிறிதாகி, இரண்டாக நின்றதை ஒன்றாக்கி, மிகச் சிறிய உருண்டையாக்கிக் கொண்டு வந்து இறைவனிடம் கொடுத்தார். ஆரூரருக்கு இவ்வளவு ஆற்றலாகிய நிலை திருநீறு மற்றும் மலர்த்தொண்டால் வந்தது. திருப்புத்தூரில் மணநாளன்று மங்கல அணி, ஆடைகள் எல்லாவற்றையும் பிறர் அணிவிக்க அணியும் நம்பியாரூரர் திருநீற்றை மட்டும் தாமே அணிகிறார். நஞ்சை விழுங்கிய இறைவனுக்குக் கண்டத்தில் கறை. ஆனால் சுந்தரரின் கையில் கறை படியவில்லை.

சோழநாட்டுக்கு வடக்கே, தொண்டை நாட்டுக்குத் தெற்கே மலை நாட்டுக்கு கிழக்கே, தென், வட ஆற்காடு மாவட்டங்களை இணைத்து நடுவிலே அமைந்தது நடுநாடு. அறுபத்து மூவரில் எண்மரைத் தன்னகத்தே தாங்கி வெளிப்படுத்திய பெருமையுள்ளது. நடுநாட்டில் தோற்றம் கொண்ட நாயன்மார்கள் பெரிதும் நாவலர்களாகவே இருந்துள்ளார்கள்.

அரசரும், நம்பிகளும் நாவலர்களே. இறைவனும் நாவலனே, பாண்டி நாட்டு மதுரையில் பாவலனாக – சங்கத்தமிழ் கவிஞனாக விளங்குகிறான். நடுநாட்டில் நாவலனாக – வாயாடியாக – வல் வழக்காடியாக – வழக்கில் வென்ற புண்ணியனாக விளங்குகிறான். தன்முனைப்பை அழிப்பது அந்த நாட்டின் இயல்பு என்பதால் திரு–முனைப்பு ஆடி எனப்பெயர் பெறுகிறது.

> வாயாடி மாமறை ஓதிஓர் வேதியனாகி வந்து
> தீயாடியார் இனக்கேழலின் பின்சென்றோர் வேடுவனாய்
> வேயாடியார் வெண்ணெய் நல்லூரில் வைத்தெனை ஆளுங்கொண்ட
> நாயாடியார்க்கிடம் ஆவது நந்திரு நாவலூரே 7 – 17 – 8

நடுநாட்டின் தலைநகராகிய திருநாவலூரில் முப்போதும் திருமேனி தீண்டிப் பூசையும் வழிவழி அடிமையும் செய்யும் ஆதிசைவ அந்தணாளர் சடையனார்க்கும், இசைஞானியாருக்கும் நம்பியாரூரர் திருஅவதாரம் நிகழ – நம்பியாரூரரின் தாய்வழிப்பாட்டனாரும், தந்தைவழிப் பாட்டனாரும் திருவாரூரைத் தாயகமாகக் கொண்டார்களாதலின் 'ஆரூரன்' என்ற பெயர் அவருக்கு இடப்பெற்றதாயிற்று. ஆரூர்த்தொடர்பு காரணமாக ஆரூரன் என்பதும், ஆடவர்களுள் சிறந்தார் என்பதைச் சுட்டும் வகையில் நம்பி என்பதும் அமைய இரண்டன் இணைப்பாக நம்பியாரூரர் என்ற பெயர் அக்குழந்தைக்கு இடப்பெறுகிறது. கயிலைப்பெயரான சுந்தரர் இங்கு இடப்படவில்லை. நரசிங்கமுனையரையர் வந்து, விரும்பி ஏற்று, இளவரசாக அமைக்கும் அளவு அழகுடைய குழந்தை என்ற செய்தியை,

> "நாதனுக்கூர் நமக்கு ஊர் நரசிங்கமுனையரையன்
> ஆதரித்து ஈசனுக்கு ஆட்செய்யும் ஊர் அணிநாவலூர் என்று
> ஓத நற்றக்க வன்தொண்டன் ஆரூரன்' (7–17–11)

என்று அவரே எடுத்துக்கூறும் வாக்கின் மூலம் அறியலாம்.

### ஆர்தலும் ஊர்தலும் இணைந்த ஆரூர்

பற்றி அமர்தல், ஒற்றி ஊர்தல் என்ற இரு நிலைகளைக் கொண்ட காரணத்தால் ஆர் + ஊர் – ஆரூர் எனப் பெற்றது. ஆர்தல் – சிறப்புற்று விளங்குதல் – அமைதல். பற்றப்பெறும் பொருள்களையெல்லாம் தன்னுள் அடக்கிக் கடந்து நிற்றல். ஊர்தல் ஒரு பொருளை ஒற்றி, அப்பொருள் உயர உயரத் தானும் உயர்ந்து, இறுதியில் அப்பொருளை விட உயர்ந்துநிற்கும் நிலை. ஓங்கி ஓர் ஊழியுள்ளான் (ஊர்தல்) என்ற கருத்தானது பங்குனி உத்திரப் பெருவிழாவாலும், உலகிறந்த ஒண்பொருள் என்ற கொள்கையானது (ஆர்தல்) ஆதிரை விழாவாலும் குறிக்கோளாக்கப் பெற்றன.

நாவலூர், புத்தூர் பின்னர் நல்லூர் ஆகிறது. நாவலூரர், புத்தூர் மணத்துக்கு வந்தார். புத்தூரிலிருந்து திருவெண்ணெய் நல்லூருக்கு அழைத்துச் செல்லப்பட்டு இறைவனால் முன்பு திருக்கயிலையில் அளித்த வாக்குப்படி தடுத்தாட் கொள்ளப் பெறுகிறார்.

### எதைத் தடுத்தாட் கொள்கிறார்?

முன்னே செய்த பல வினைகளுக்கு ஈடாக இப்பிறவிபெற்ற நாம் எதற்காக இப்பிறவி எடுத்தோமோ அதை மறந்து, மயங்கி மேன்மேலும் வினைகளைச் செய்து பெருக்கி, மேன்மேலும் பிறவிகளுக்கு இடஞ்செய்து கொண்டே போகிறோம். 'ஆனால் நாம் அனுபவிக்க வேண்டிய பிராரர்த்த வினைகள் என்ன? புதிதாகத் தேடிக் கொள்ளும் ஆகாமிய வினை எது?' என்று நாம் தெரிந்துகொள்வது அரிது. ஆதலின் நாமும் சுந்தரர் கயிலையில் இறைவனை வேண்டிக்கொண்டது போல, வராத புது ஆகாமிய வினையைத் தேட உள்ள சமயத்தில் தடுத்தாட் கொள்ள வேண்டுவோமாயின், வேண்டுவார் வேண்டுவதே ஈயும் சிவபெருமான் அவ்வாறே அருள்வான். ஆக, தடுத்தாட்கொள்ளப்பெற்று ஆகாமிய வினை ஏறாத நிலையில் – பிராரத்த வினையைத் திருவருளால் அனுபவித்து முடிக்க – சஞ்சிதம் இன்மையாக வீடுபேற்றை நெருங்கலாம்.

**நாமும் வந்த காரியம் பார்த்துக்கொண்டு வீடு சேர்வோம்**

"செய்ய சேவடி நீங்குஞ் சிறுமையேன்
மையன் மானுடமாய் மயங்கும் வழி
ஐயனே தடுத் தாண்டருள் செய்யேன்"

எனவரும் பெரியபுராணப் பாடலால் (திருமலைச்சிறப்பு – 28) இவ்வுண்மையை அறியலாம்.

சிவபெருமானது ஆணைவழி இப்பூவுலகில் அவதரித்த ஆலால சுந்தரர் உலகவழியில் செல்லாது அருள் வழியிலே சென்று நமக்கு வழிகாட்டியாகி விளங்கும் நிலைமைக்கு இறைவன் அவரைத் தடுத்தாட் கொண்டதே காரணமாகும்.

நம்பியாரூரர் திருவெண்ணெய் நல்லூர்த் திருக்கோயிலாகிய அருட்டுறையில் ஆவணங்காட்டி ஆளப்பெற்று

திருத்துறையில் தவநெறி யையும்
சித்தவட மடத்தில் மறுப்பவும் திருவடிசூடுதல் ஆகிய நற்பேற்றையும்,
தில்லையில் கூத்தப்பெருமான் திருக்கூத்து அருள்நிறைவு அனுபவப் பேற்றையும்,

கழுமலக்காட்சி அனுபவத்தையும் பெற்று பின் – ஆரூருக்கு நம்பால் வருக!" என்ற இறைவாக்கு ஆணையாக அமைய, ஆரூர் செல்லும் நம்பியாரூரர் அங்கு மூவகைப் பேறுகளையும் ஒருசேரப்பெறக்கூடிய வகையில் உடலில்லொலியாக இறைவன் ஆணையைக் கேட்கிறார்.

1. தோழமையாக நம்மைத் தந்தனம்
2. நாம் முன்பு தொண்டு கொண்ட வேள்வியில் அன்று நீ கொண்ட கோலம் என்றும் புனை
3. நின் வேட்கை தீர வாழி, மண்மேல் விளையாடுவாய்

நம்பியாரூரர் "தம்பிரான் தோழர்" என்ற பெயர் பெற்றதற்கு இதுவே காரணமாகும். தமிழகத்து சைவம் தந்த பெரும்பேறே, 'தோழமை நெறி' என்று பலராலும் பாராட்டப்பெறும், கடவுளான்ம உறவுமுறையை நம்பியாரூரர் தவிர, வேறு யாரும் மேற்கொண்டதாகத் தெரியவில்லை.

17ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த கற்பனைக் களஞ்சியம் சிவப்பிரகாச சுவாமிகள் தம்முடைய நால்வர் நான்மணி மாலையில்,

"அறிந்து செல்வம் உடையான் அளகைப் பதியான் தோழமை கொண்டு
உறழ்ந்த கல்வி உடையானும் ஒருவன் வேண்டும் என இருந்து
துறந்த முனிவர் தொழும் பரவை துணைவா நினைத்தோழமை கொண்டான்
செறிந்த அறிவு வடிவுமாய்த் திகழும் நுதற்கட் பெருமானே"

என்று எடுத்துக்கூறி, இறைவன் செல்வமுடைமைக்குத் தோழனாகக் குபேரனைக் கொண்டான். கல்விக்குற்ற தோழன் ஒருவன் வேண்டுமென்று பன்னாள் காத்திருந்து பின்னர் நம்பியாரூரரைத் தோழனாகக் கொண்டான் என்று விளக்கிக் காட்டியுள்ளார்.

ஆவணம் காட்டி வழிவழி அடிமை என்று வாதிட்டு, நிறுவி, அத்தகைய உறவில் நம்பியாரூரரை அமைத்துக் கொண்ட இறைவனே இப்போது தோழமை நெறியைப் பேசுகின்றான்.

திருஞானசம்பந்தப் பெருமான் திருவேள்விக்குடியும் திருத்துருத்தியும் என நின்ற இரண்டு திருப்பதிகளையும் இணைத்த நிலையில் ஒரு திருப்பதிகம் அருளுகின்றார். அவ்வாறே நம்பி ஆரூரரும் திருத்துருத்தியும் திருவேள்விக்குடியும் என்ற இரண்டையும் சேர்த்த நிலையில் அமையும் திருப்பதிகமாக 'மின்னுமா மேகங்கள்' எனத் தொடங்கும் திருப்பாட்டை உடைய பதிகம் ஒன்றை அருளியுள்ளார். துருத்தியில் எழுந்தருளியுள்ள பெருமான் "சொன்னவாறு அறிவார்" என்று போற்றப் பெறுகின்றார். இறைவன் நூல் எனப்படும் வேதம், ஆகமம் போன்ற நூல்களில் சொன்னவாறு அறியப்பெறுபவர் என்பதைப் பொருளாகக் கொள்ளல் ஒருவகை. பாடுமாறு அறிகிலேன், அறியுமாறு அறிகிலேன், சொல்லுமாறு அறிகிலேன், பிதற்றுமாறு ஒழிந்திலேன், இகழுமாறு அறிகிலேன், ஆருமாறு அறிகிலேன், விலங்குமாறு அறிகிலேன் என்றெல்லாம் நம்பியாரூரர் அப்பதிகத்தில் எடுத்துக்காட்டி ஒரு அரிய கருத்தையும் எடுத்து வைக்கிறார்.

> "துறக்குமா சொலப்படாய் துருத்தியாய் நின்னடி
> மறக்குமா றிலாதஎன்னை மையல் செய்து மண்ணின் மேல்
> பிறக்குமாறு காட்டினாய் பிணிப்படும் உடம்புவிட்டு
> இறக்குமாறு காட்டினாய்க்கு இழுக்குகின்றது என்னையே"

மேற்காண் பாடலில் திருஞானசம்பந்தரின் திருவாக்கின் வண்ணம் "நின்னடி மறக்கு மாறிலாத என்னை" என்பதன் வாழ்வின் முடிந்த குறிக்கோளாக கொள்ளலாம். "சிவனடி மறவாப்பேறு" என்பதே அக்குறிக்கோள். அதில் எஞ்சியுள்ள ஒரு பகுதியை நம்பியாரூரர் திருவாக்கில் காணமுடிகிறது.

"என்னை நான் மறக்குமாறு" என்ற ஒன்றும் முக்கியத் தேவை என்கிறார். திருத்துருத்தி – திருவேள்விக்குடிப் பதிகத்தின் முதற்பாட்டில்

> சொன்னவாறு அறிவார் துருத்தியார் வேள்விக்
> குடியுளார் அடிகளைச் செடியேன் நாயேன்
> **என்னை நான் மறக்குமாறு எம்பெருமானை**
> **என்னுடம்பு அரும்பணி இடர்கெடுத்தானை (7-74-1)**

**என அருளியதை எண்ணும்போது, என்னை நான் முற்றாக மறத்தலும் வேண்டும் என்பதை அக்குறிக்கோளின் மற்றைப் பாதியாகக் கொண்டால் திருவடியை மறவாமையுடன் தன்னையே மறத்தலும் வேண்டும் என்பதே வாழ்வியல் குறிக்கோள் என்பதாக அமைகிறது. அவ்வகையில் தன்னை முற்றாக மறந்து இறைவனையே முற்றாக நினைத்தல் என்பதையே குறிக்கோளாகக் கொண்டால் அதுவே "பித்து" என நிற்கும் நிலை. பித்தா என்று நம்பியாரூரர் முதலில் கூறியது வெறும் உலகியல் வழக்கு நிலையில், இங்கேதான் திருத்துருத்திப் பெருமான் நம்பியாரூரர் சொன்னவாறு அறியப் பெறுகிறார். திருத்துருத்திப் பெருமானைப் பித்தன் என்றே அறிகிறார் எனக் கொள்ள வேண்டும். சொன்னவாறு அறிவார் என்பதற்கு வேதங்கள், ஆகமங்கள் என அமைந்த நூல்களில் அவன் சொன்னவாறு இத்தலத்தில் அறியப் பெறுகிறான் என்பது பொதுமைப் பொருள்வகை. அதனுடன் பித்தா என நம்பியாரூரர் முன்னே சொன்னார். அவர் சொன்னவாறு நம்பியாரூரரே இங்கு இறைவனைப் பித்தன் என அறிகிறார் எனக் கொள்ளலாம். அவ்வகையில் "தன்னுயிர் தான் அறப்பெறுதல்" எனத் திருக்குறள் அமைத்துக்காட்டிய நெறியின் பொருள் இங்கே விளக்கமுறுகிறது.**

**இவ்வகையில் தன்னை முற்றாக மறத்தலும், சிவனடியை முற்றாக நினைத்தலும் என்ற இருமையை உடன்கொண்டதொரு கொள்கையே வாழ்வியற் குறிக்கோள் கொள்கை என்பதாக அமைகிறது. இதையே,**

“பெயர்த்தும் அவனுக்கே பிச்சி ஆனாள்” என்று முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள் என்ற (6-25-7) தாண்டகப் பாடலில் அப்பர் மிகவும் நுட்பமாக அமைத்துக் காட்டுகிறார்.

நாமம் கேட்டல், வண்ணம் கேட்டல், ஆரூர் கேட்டல் என்ற மூன்றால் மனம், புத்தி, அகங்காரம் மூன்றும் முற்றாக அழிந்துபோக எஞ்சி நின்ற சித்தம் தன் நிலைகெட்டு உருகி ஓட ஆரம்பிக்கிறது. சித்தம் தன் கடினத் தன்மை இழந்து நீராகப் பெருகிவரும் நிலை அமையும். இந்நிலையினரைச் “சித்தம் அழகியர்” என்பர். இந்நிலை மேன்மேல் பெருகும்போது மீண்டும் “பித்து ஆதல்” என்ற நிலை அமையும்.

முன்னம் அவனுடைய நாமங் கேட்டாள் மூர்த்தி யவனிருக்கும் வண்ணங் கேட்டாள்
பின்னை யவனுடைய ஆரூர் கேட்டாள் பெயர்த்தும் அவனுக்கே பிச்சி யானாள்
அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள் அகன்றாள் அகலிடத்தார் ஆசாரத்தைத்
தன்னை மறந்தாள்தன் நாமங் கெட்டாள் தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே (6-25-7)

என்ற திருத்தாண்டகத்துள் “தன்னை மறத்தல்” என்பதற்குரியதான விளக்க நிலைகள் இணைப்பைக் கோடிட்டுக் காட்டுகின்றார். அன்னையையும், அத்தனையும் நீத்தல், அகலிடத்தார் ஆசாரத்தை நீத்தல், தன்னை மறத்தல், தன் நாமம் கெடல், தலைவன் தாள் தலைப்படல் என்ற ஐந்து வகைகளை ஐயந்தீருமளவு இணைத்துக் காட்டுகிறார்.

திருவாரூரில் தம்பிரான் தோழரான பின், ஆரூர் இறைவனைத் தினமும் வழிபட்டு வரும் நாளில், தொடர்பினாலே பரவையாருக்கும் நம்பியாரூரருக்கும் அடியார் பெருமக்கள் திருமணஞ் செய்து வைத்தனர். இல்லறத்தாராக ஆரூரில் இறைவனைப் பாடி வரும் நாளில் அவர்தம் அவதார திருவருள் நோக்கமான – மாதவம் செய்த தென் திசைவாழ திருத்தொண்டத்தொகை அருளுகின்ற செயல் கைகூடும் நாள் நெருங்குகிறது. அதை ஆரூர் இறைவன் அரங்கேற்றம் செய்கிறார்.

திருவாரூர்ப் பூங்கோயிலின் திருமதில் வாயிலையடுத்துக் கோயிலுக்குள் முதலில் காணப்பெறுவது தேவாசிரிய மண்டபமாகும். இதன் வாயிலில் மால், பிரமன், இந்திரன் உள்ளிட்ட எல்லாத் தேவர்களும் காத்திருப்பர். உள்ளே மாதவர்களாகிய எண்ணிலாத அடியார் திருக்கூட்டம் எப்பொழுதும் நிறைந்து எழுந்தருளியிருக்கும். அவ்வடியார்கள் பலப்பல திறத்தில் உள்ளவர்கள். அவர்கள் திருநீறு, உருத்திராக்கம், சடையணிந்து திருவைந்தெழுத்தை ஓதிக்கொண்டே இருப்பவர்கள். கைத்திருத்தொண்டு செய்பவர்கள். அன்பின் மிகுந்தவர்கள். எப்பொழுதும் உள்ளங் கலங்காதவர்கள், சிவபெருமானை எப்போதும் மறவாத சிந்தையுடன் அவர் திருத்தொண்டிலே உறைந்து நிற்பவர்கள், மற்ற தெய்வங்களைக் கனவிலும் நினையாதவர்கள், அளவிடற்கரிய பெருமையும், குணமும் உடையவர்கள், முத்தியிலும் ஆசைப்படாத மனவன்மையுடையவர்கள்.

“இவர்களுக்கெல்லாம் என்னை அடியான் ஆகும்படி செய்கின்ற நாள் எந்நாளோ?” என்ற கருத்துடன், இறைவனது பாதங்களைத் துதித்து, நம்பிகள் கோயிலுக்குள் சென்று, இறைவரை வேண்ட, இறைவர் அவர் முன்தோன்றி, அவர்க்கு அருளிய செயல்பாட்டை தெய்வச் சேக்கிழார் நான்கு பாடல்களில் விளக்குகிறார்.

“பெருமையால் தம்மை ஒப்பார்; பேணலால் எம்மைப் பெற்றார்;
ஒருமையால் உலகை வெல்வார்; ஊனம் மேல் ஒன்றும் இல்லார்;
அருமையாம் நிலையில் நின்றார்; அன்பினால் இன்பம் ஆர்வார்;
இருமையும் கடந்து நின்றார்; இவரை நீ அடைவாய்” என்று பெ. பு. 342

நாதனார் அருளிச் செய்ய நம்பி ஆரூரர்" நான் இங்கு
ஏதந் தீர் நெறியைப் பெற்றேன்" என்றெதிர் வணங்கிப் போற்ற
"நீதியால் அவர்கள் தம்மைப் பணிந்து நீ நிறை சொன் மாலை
கோதிலா வாய்மையாலே பாடென அண்ணல் கூற" 343

தன்னை ஆளுடைய நாதன் தான் அருள் செய்யக் கேட்டுச்
சென்னியால் வணங்கி நின்ற திருமுனைப்பாடி நாடர்
"இன்னவாறு இன்ன பண்பு என்று ஏத்துகேன் அதற்கு யான் யார்
பன்னுபா மாலை பாடும் பரிசு எனக்கு அருள் செய்" என்ன. 344

தொல்லை மால் வரை பயந்த தூயாள் தன் திருப் பாகன்
அல்லல் தீர்ந்து உலகு உய்ய மறை அளித்த திரு வாக்கால்
"தில்லை வாழ் அந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்" என்று
"எல்லையில் வண் புகழாரை எடுத்து இசைப்பா மொழி" என்றார். 345

ஆரூர் மன்னவரை ஆரூரன் அடித்தொண்டன் அடிவணங்கி அடியவர் கூட்டத்தை அணுகி

தூரத்தே திருக் கூட்டம் பல முறையால் தொழுது அன்பு
சேரத் தாழ்ந்து எழுந்து அருகு சென்று எய்தி நின்று அழியா
வீரத்தார் எல்லார்க்கும் தனித் தனி வேறு அடியேன் என்று
ஆர்வத்தால் **திருத்தொண்டத்தொகைப் பதிகம் அருள் செய்வார். 347**

**இதுவரை ஆரூரில் அம்மானுக்கு ஆளாய்ப் பணி செய்யப் பெற்ற ஆரூரனாகிய அடியேன் இன்று தில்லை வாழந்தணர் தம் அடியார்க்கும் அடியேனாகப் பெற்றேன்; பெருமிழலைக் குறும்பருக்கும், பேயார்க்கும் அடியேனாகப் பெற்றேன்; பொய்யடிமையில்லாத புலவர்க்கும் அடியேனாயினேன்; சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கும் அடியேனாயினேன்; எனது இவ்வடிமைத்திறத்தைக் கேட்டுவப்பாரும் ஆரூர் அம்மானுக்கன்பராவார் என்று மேலும் மேலும் பாராட்டிப் போற்றி உலகினுக்குறுதி கூறுதல் அவரது ஆசைப்பாட்டின் மிகுதியைக் காட்டியுள்ளது.**

**இறைவனின் அடியார்கள் மிக மகிழ்ச்சியுடைய நம்பியாரூரர் அத்திருக்கூட்டத்துட் சென்று அணைந்த செய்தியைத் தெய்வச்சேக்கிழார்,**

**உம்பர் நாயகர் அடியார் பேர் உவகை தாம் எய்த**
**நம்பி ஆரூரர் திருக் கூட்டத்தின் நடுவணைந்தார்**
**தம்பிரான் தோழர் அவர் தாம் மொழிந்த தமிழ் முறையே**
**எம்பிரான் தமர்கள் திருத் தொண்டு ஏத்தல் உறுகின்றேன். பெ. பு. 349**

**நம்பியாரூரரின் திருத்தொண்டத்தொகை பதிகம் கேட்டு அடியார் பெருமக்கள் பேருவகை எய்த "அடியேன் உன் அடியார் நடுவுள் இருக்கும் அருளைப்புரியாய்" என்ற மணிவாசகர் வாக்குக்கேற்ப விண்ணப்பித்து அவனருளாலே அடியார் திறமுணர்ந்து பாடி வணங்கி, அவர் அருளால் அவ்வடியார் நடுவுள் அணைந்து அவருள் தாமும் ஒருவராயினார். அடியார் கூட்டத்தில் அணைவதே சைவ சித்தாந்தத்துள் சிவப்பேற்றின் எல்லையாகக் குறிக்கப்பெறும் பேறாவது நாமறிந்ததே. சிவஞானபோதத்தின் 12ஆம் சூத்திரமும் இதையே பேசுகின்றது.**

**தம்பிரான் தோழர் அவர்தாம் மொழிந்த தமிழ்**

தம்பிரானும், தோழரும் ஆகிய அவர்கள் சேர்ந்து மொழிந்த திருப்பதிகம். அதுவே திருத்தொண்டத்தொகை. இப்பதிகத்தின் முதல் தொடர் "தில்லை வாழந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்" என்பதாகும். தம்பிரானுடைய தாதலாலும், இதனை ஓதும் உணர்வு அவர் அருளியதாதலாலும் இஃது இருவரும் அத்துவிதமாய்க் கலந்த நிலையில் மொழிந்த விஞ்சு தமிழ் எனக் கொள்ளலாம். இச்சிறப்பு நம் தமிழைத்தவிர உலகில் வேறெந்த மொழிக்கும் இருப்பதாகத் தெரியவில்லை. இந்தக் கலப்பு நிலைதான் "நயத்துக்குச் சுந்தரர்" என்ற பெயரை நம்பியாரூரருக்கு ஈட்டித் தருகின்றது.

அடியார் சிறப்பும் வணக்கமும் மனிதப்பிறவிக்குப் பேறு தருவன. அரனிலும் அடுத்த துணைவர் அடியார்களேயாம்.

"ஆரூரன் ஆரூரில் அம்மானுக்காளே" என்று பாட்டுத் தோறும் விரவித் திருத்தொண்டத்தொகை முழுதும் நம்பிகளது சரிதம் பரந்தமையால் அதன் வழித்தாய் வந்த விரிநூலாகிய திருத்தொண்டர் புராணத்திலும் அவ்வாறே புராணம் முழுதும் அவர் சரிதம் விரவி நிறைவெய்தலைக் காணலாம்.

> **எங்கே னும்மிருந்துன் னடி யேன்உ னைநினைந்தால்**
> **அங்கே வந்தென்னொடும் முட னாகி நின்றருளி**
> **இங்கே என்வினையை யறுத் திட்டெ னையாளுங்**
> **கங்கா நாயகனே கழிப் பாலை மேயானே. 7-23-2**

**பூலோகத்தில் எங்கிருந்தாலும் அவர் நினைத்தால் அவரால் நம்மிடத்தில் நம்மைக் கண்டுபிடிக்க முடியுமா? எல்லாம் வல்ல சித்தரான அவரால் முடியாதது ஒன்றுமில்லை. ஆனால் இன்று சாதாரண மனிதர்களே யாரை வேண்டுமானாலும் கண்டுபிடிக்குமளவு புவியிடங்காட்டிகள் (Global Positioning System GPS) வந்துவிட்டன. அவற்றைப் பற்றிய சில தகவல்களை உங்களோடு பகிர்ந்து கொள்கிறோம். பல தொழில்நுட்பங்கள் இருந்தால் தான் புவியிடங்காட்டி வேலை செய்யும். ஆனால் அவரோ நினைத்த மாத்திரத்தில் செய்து முடிப்பார். அதுதான் சிவபரத்துவம்.**

**புவியிடங்காட்டி எனப்படும் ஜி.பி.எஸ். (GPS) தொழில்நுட்பம்**

**ஆதிகாலத்தில் இருந்தே மனிதன் காடுகளிலும், மலை மேடுகளிலும், பாலைவனங்களிலும் அலைந்து திரிந்திருக்கின்றான். காலம், காலமாக மனிதனுக்குத் தேடல் இருந்திருக்கிறது. ஆனால் புதிய இடங்களுக்குச் செல்லும் பொழுதும், அங்கே தேடல்களை மேற்கொள்ளும்போதும், ஒரு மிகப்பெரிய பிரச்சினை எழும். நாம் எங்கே இருக்கின்றோம் என்பதும், தொலைந்துவிடாமல் மீண்டும் நமது இனத்துடன் வந்து சேர வேண்டுமே என்பதும் தான் அந்த பிரச்சினை.**

**பழக்கப்பட்ட இடங்களில் இந்தப் பிரச்சினை இல்லை. ஆனால் புது இடங்களில் இப்பிரச்சினை எழும். ஏன் நாமே சிறுவயதில் ஒன்றிரண்டு தடவை எங்காவது தொலைந்திருப்போம். இன்றும் புதிய இடங்களுக்கு போகும்போது, செல்லும் பாதையை ஒரே தடவையில் ஞாபகம் வைத்துக் கொள்வதென்பது முடியாத காரியமாகத் தான் இருக்கிறது. என்ன செய்வது?**

**ஆதிகால மனிதன் மலை, குன்று, மரம், குளம் போன்ற இயற்கை அமைப்புகளை ஞாபகம் வைத்து அவன்**

இருக்கும் இடங்களை அடையாளப்படுத்தினான். பிற்காலத்தில் திசைகாட்டியைக் கண்டறிந்து பயன்படுத்தினான். தொடர்ந்து வந்த தொழில்நுட்ப வளர்ச்சியால், இன்று செயற்கைக் கோள்களின் உதவியுடன் (ஜி.பி.எஸ்) என்ற ஒன்றை விஞ்ஞானிகள் உருவாக்கிவிட்டார்கள். (Global Positioning Systme GPS) குளோபல் பொசிஸனிங் சிஸ்டம் என்பதன் சுருக்கமே ஜிபிஎஸ் (GPS) ஆகும். ஜி.பி.எஸ் (GPS) தொழில்நுட்பம், தமிழில், புவி இடங்காட்டி என்று அழைக்கப்படுகிறது. இதில் குளோபல் (Global) என்ற ஆங்கில வார்த்தை பூமியைக் குறிக்கிறது.

வானத்தில் இருந்து கொண்டு நம்மைப் பார்த்தபடி 24 செயற்கைக் கோள்கள் பூமியை சுற்றி வலம் வந்துகொண்டே இருக்கின்றன. அவை எந்த நேரத்திலும் நாம் இருக்கும் இடத்தை நமக்கு மிகத் துல்லியமாகத் தெரிவித்துவிடும்.

இன்று நாம் வாழும் உலகம் தொழில்நுட்ப மயமாகிவிட்டது. இன்று நம் எல்லோரது கையிலும் சர்வ சாதாரணமாக ஐபோன், ஆண்ட்ராய்டு போன்ற அலைபேசிகள் இருக்கின்றன. ஸ்மார்ட்போன் என அழைக்கப்படும் இவ்வகை அலைபேசிகள் தமக்குள்ளே ஜி.பி.எஸ் (GPS) தொழில்நுட்பத்திற்கான கருவியை உள்ளடக்கியுள்ளன.

நீங்கள் உங்கள் ஸ்மார்ட்போனைப் பயன்படுத்தி பேஸ்புக்கில் உரையாடல் செய்யும் போது, உங்களது பெயரின் கீழே, நீங்கள் எங்கிருந்து உரையாடல் செய்து கொண்டிருக்கிறீர்கள்? என்று, உங்கள் ஊரின் பெயரும் தெரியும். இது எப்படி சாத்தியம்? உங்கள் ஸ்மார்ட்போனில் உள்ள ஜி.பி.எஸ் (GPS) (GPS Receiver) வாங்கி மூலம் உங்களது இருப்பிடம் கண்டறியப்படுகிறது.

ஜி.பி.எஸ் (GPS) யைப் பயன்படுத்தி, நாம் இருக்கும் இடத்தை மிகத்துல்லியமாக (3.5 மீட்டருக்குள்) அறிந்து விடலாம். ஸ்மார்ட்போன்கள் எல்லாவற்றிலும் பெரும்பாலும் (GPS) (GPS Receiver) வாங்கி இருக்கும். இதனால் தான் உங்கள் ஸ்மார்ட்போன்களை பயன்படுத்தி, கூகிள் மேப்ஸ் என்ற ஆப்ஸ் மூலம் நீங்கள் எங்கே இருக்கிறீர்கள்? என்று பார்த்துவிடலாம். மேலும், நீங்கள் வீதி வழிச்செல்லும் பொழுது சரியான வழிகாட்டியாகவும் அது பயன்படுகிறது.

தற்பொழுது ஜி.பி.எஸ் (GPS) எல்லா நாடுகளிலும் பயன்படுத்தப்படுகிறது. ஆனால் ஜி.பி.எஸ் (GPS) தொழில்நுட்பம் உலகநாடுகளுக்குச் சொந்தமான ஒன்று இல்லை. ஜி.பி.எஸ் (GPS) அமெரிக்க வான்படைக்கு சொந்தமான ஒரு தொழில்நுட்பம். அமெரிக்க ராணுவம் அதை உருவாக்கி, பராமரித்து வருகிறது. ஆனால் ஜி.பி.எஸ் (GPS) வாங்கி வைத்திருக்கும் யார் வேண்டும் என்றாலும் ஜி.பி.எஸ் (GPS) தொழில்நுட்பத்தை இலவசமாக பயன்படுத்திக் கொள்ளலாம்.

பூமியின் சுற்றுப்பாதையில் அதாவது, பூமியில் இருந்து கிட்டத்தட்ட 20, 200 கிலோமீட்டர் உயரத்தில் 24 செயற்கைக்கோள்கள் பூமியை தினமும் இரண்டு முறை சுற்றி வருகின்றன. இவை மணிக்கு 14000 கிலோ மீட்டர்கள் வேகத்தில் பூமியைச் சுற்றி வருகின்றன. இந்த செயற்கைக் கோள்களே ஜி.பி.எஸ் (GPS) இன் அடிப்படைக் கட்டமைப்பாகும்.

இந்த 24 செயற்கைக்கோள்களும், சம இடைவெளி கொண்ட ஆறு அச்சுகளில், ஒவ்வொன்றிலும் 4 செயற்கைக் கோள்கள் வீதம் பூமியைச் சுற்றுகின்றன. இந்த செயற்கைக் கோள்களின் சுற்றுப்பாதை எவ்வாறு அமைக்கப்பட்டுள்ளன என்றால் பூமியில் எந்தவொரு இடத்தில் இருந்து தொடர்பு கொண்டாலும், குறைந்தது 4 செயற்கைக் கோள்களுடன் நாம் தொடர்பு கொள்ள முடியும்.

இந்த ஜி.பி.எஸ் (GPS) செயற்கைக்கோள்கள் தொடர்ந்து ரேடியோ சமிக்ஞைகளை பூமியை நோக்கிப் பரப்பிக் கொண்டே இருக்கின்றன. இந்த சமிக்ஞைகளில் குறிப்பிட்ட அந்த செயற்கைக் கோளின் தற்போதைய இடம் மற்றும் தற்போதைய துல்லியமான நேரம் என்பன அடங்கும். ஒவ்வொரு ஜி.பி.எஸ் (GPS) செயற்கைக் கோளும் அணுக்கடிகாரங்களைத் தன்னுள்ளே கொண்டுள்ளது.

அந்த செயற்கைக் கோள்களிலிருந்து பூமியை நோக்கி வரும் ரேடியோ சமிக்ஞைகளை ஒளியின் வேகத்தில் பயணிக்கும். நம் ஸ்மார்ட்போனில் இருக்கும் ஜி.பி.எஸ் (GPS) வாங்கி இந்த சமிக்ஞைகளை பெற்றுக் கொள்ளும். இப்படி பெற்றுக்கொள்ளும் அந்த சமிக்ஞைகள் வந்தடைந்த மிகத்துல்லியமான நேரத்தையும் குறித்துக் கொள்ளும். இப்படி குறைந்தது 4 செயற்கைக் கோள்களில் இருந்து சமிக்ஞைகளை பெற்றுக்கொண்டு, டிரைலேடரஷன் என்னும் கணிதவியல் முறையைப் பயன்படுத்தி அந்த ஜி.பி.எஸ் (GPS) வாங்கி தான் இருக்கும் இடத்தைத் தானாகவே கணித்துவிடும்.

இந்த ஜி.பி.எஸ் (GPS) தொழில்நுட்பம் பல்வேறு துறைகளில் பயன்படுகிறது. மற்றும் நம் வாழ்விலும் ஒரு முக்கிய அம்சமாகத் திகழ்கிறது. இதன் முழு கட்டுப்பாடும் அமெரிக்க இராணுவத்திடமே இருக்கிறது. இதனால் வேறு சில நாடுகளும் தங்களுக்கென்றே தனித்தனியாக ஜி.பி.எஸ் (GPS) அமைப்புகளை உருவாக்கியுள்ளன.

1. இந்தியா RNSS
2. ரஷ்யா Global Navigation Satellite Systems (GLONASS)
3. ஐரோப்பா Galileo Global Navigation Satellite Systems GNSS
4. சீனா Beidou

நான் எங்கிருக்கிறேன்?, நான் எங்கே போகிறேன்?, எனது நண்பர் எங்கிருக்கிறார்?, நான் போக வேண்டிய இடத்தைச் சென்றடைய சரியான வழி எது?, எவ்வளவு நேரத்தில் நான் அந்த இடத்திற்குச் செல்வேன்? போன்ற கேள்விகளுக்கு ஜி.பி.எஸ் (GPS) பதில் தருகிறது. நாம் தேடிச் சென்றடைய வேண்டிய இடங்கள் குறித்த சரியான தகவல்களை நமக்கு ஜி.பி.எஸ் (GPS) காட்டுகிறது.

தொலைந்த குழந்தைகள் இருக்கும் இடத்தை பெற்றோர் கண்டறியவும், குழந்தைகள் அறியாத வண்ணம் அவர்களைக் கண்காணிக்கவும், அப்படி கண்டறிவதன் மூலம் அவர்களின் அருகில் செல்லவும், குழந்தைகளை பாதுகாப்பாக அழைத்து வரவும், குழந்தைகள் தவறான செயல்களில் ஈடுபடாது தடுக்கவும் ஜி.பி.எஸ் (GPS)ஐ வெளிநாடுகளிலும் பயன்படுத்துகிறார்கள்.

அதேபோல் வணிக இணையதளங்கள், சமூக இணையதளங்கள் போன்றோர் தங்கள் இணையதளத்திற்கு வரும் பார்வையாளர்கள் எந்த நாட்டிலிருந்து எந்த இடத்திலிருந்து வருகிறார்கள் என்பதையும் ஜி.பி.எஸ் (GPS) ஐப் பயன்படுத்தி GeoLocation மூலம் கண்டறிகிறார்கள்.

இருபத்தொன்றாம் நூற்றாண்டின் மிதமிஞ்சிய விஞ்ஞானக் கண்டுபிடிப்புக்களான மின்சாரம், கணினி, அலை, தொலைபேசிகள், வாகன வசதிகள் இவற்றால் பல நன்மைகளையும், வசதிகளையும் பெற்று வாழ்ந்து வருகிறோம். சில தீமைகளும் உண்டு.

“முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளே
பின்னைப் புதுமைக்கும் போர்த்துமப் பெற்றியனே”

என்ற மாணிக்கவாசகர் வாக்குப்படி முன்னைப் பழம்பொருளைப்பற்றி இந்தப் பதிப்புரையின் 13 பக்கங்களிலே பித்து, அடிமை, உடைமை, தோழமை என்ற முறையில் சிந்தனை செய்தோம். நிறைவான 4 பக்கங்களிலே ஏற்கனவே உள்ளவற்றை “பின்னைப்புதுமைகளாக” அவன் அருளாலே கண்டுபிடிக்க முடிந்து ஆய்வு செய்து வருகிறோம். இவற்றுக்கெல்லாம் நேரத்தையும், அறிவையும், பொருளையும் அள்ளித் தரும் சிவபரம்பொருளுக்கு நன்றி சொல்லும் வகையாக இரு மாதத்துக்கு ஒரு முறை ஒரு திருமுறையாகக் கீழ்க்கண்டவாறு சிந்தித்து வருகிறோம்.

“சிவபெருமானைச் சிக்கெனப் பிடித்துக் கொண்டு, நம்பியாரூரர் நமக்கருளிய திருமுறைகளை, நாளும் ஓதி, மற்றவர்களையும் ஓதுவித்தலே, நாமெல்லாம் உய்யும் நெறி” எனக் கொண்டு ஏழாம் திருமுறை வழிபாட்டுக் கருத்தரங்கம் 2015-ம் ஆண்டு டிசம்பர் மாதம் 26, 27-ம் தேதிகளில் சனி, ஞாயிறு நாட்களில் பின்கண்ட நிகழ்வுப்படி நடைபெறும்.

| | | | | |
|---|---|---|---|---|
| முதல் திருமுறை | 136 | 1469 | திருஞானசம்பந்தர் | டிசம்பர் 27, 28.2014 |
| இரண்டாவது திருமுறை | 122 | 1331 | திருஞானசம்பந்தர் | பிப்ரவரி 21, 22.2015 |
| மூன்றாம் திருமுறை | 127 | 1369 | திருஞானசம்பந்தர் | ஏப்ரல் 18, 19.2015 |
| நான்காம் திருமுறை | 113 | 1070 | திருநாவுக்கரசர் | ஜூன் 27, 28.2015 |
| ஐந்தாம் திருமுறை | 100 | 1064 | திருநாவுக்கரசர் | ஆகஸ்டு 29, 30.2015 |
| ஆறாம் திருமுறை | 99 | 981 | திருநாவுக்கரசர் | அக்டோபர் 24, 25.2015 |
| ஏழாம் திருமுறை | 100 | 1026 | சுந்தரர் | டிசம்பர் 26, 27.2015 |

இரண்டு மாத இடைவெளியில் சுமார் 1500 பாடல்கள் கொண்ட ஒரு திருமுறையை முறையாகப் படித்து, அச்சுப்பிழை பலமுறை பார்த்துக் கடின உழைப்பின் பயனாக நூலை வெளியிடும், திருமதி ப. தமிழரசியைத் தலைவியாகக் கொண்டு செயல்படும் தமிழ்த்துறையின், திரு. இரா. மதன்குமார், திருமதி. ச. கவிதா, திரு. பு. பிரபுராம், திரு. செ. ஆறுச்சாமி ஆகியோருக்கும், நூலாக்க ஒருங்கிணைப்புப் பணியில் செயலாற்றுகின்ற திரு. ப. மணிசேகர், திரு. அ. இராமசாமி ஆகியோருக்கும், கணினி நிபுணர்களான திரு. மு. மகேஷ், திரு. து. சசி அவர்களுக்கும், நூலைச் சிறப்பாக வெளியிடும் செஞ்சுடர் அச்சகத்தார்க்கும், மனமுவந்த நன்றிகள். அவர்கள் இம்மை, மறுமை இன்பம் பெறுவார்களாக.

மென்னூல் வடிவம் http://www.panniruthirumurai.org என்ற இணைய முகவரியில் உள்ளது. அன்பர்கள் படித்தும், படியெடுத்தும், தாங்கள் பெற்ற இன்பத்தை மற்றவர்க்கு எடுத்துரைத்தும் இன்புற அன்புடன் அழைக்கின்றோம்.....

நன்றி,

அன்பன்,
**இராச. வசந்தகுமார்**
நிறுவன வேந்தர்
கற்பகம் பல்கலைக்கழகம்
கோவை - 21

# ஏழாந் திருமுறைக் கருத்தரங்கம்

## 26, 27 டிசம்பர் 2015 (சனி, ஞாயிறு)

### நிகழ்ச்சி நிரல்

| வ.எண் | நாள்/நேரம் | சொற்பொழிவாளர் | அமர்வு பொருள் |
|---|---|---|---|
| 1. | 26.12.2015 சனி<br>காலை 09.00 - 11.00 | மகாவித்துவான் மயிலம்<br>**வே. சுப்பிரமணியம்**<br>அவர்கள் | 1 - 14 திருப்பதிகங்கள் |
| 2. | 26.12.2015 சனி<br>நண்பகல் 11.00-01.00 | பேராசிரியர்<br>**ம.வே. பசுபதி** அவர்கள் | 15 - 28 திருப்பதிகங்கள் |
| 3. | 26.12.2015 சனி<br>பிற்பகல் 02.00-4.00 | பேராசிரியர்<br>**புரிசை. நடராசன்**<br>அவர்கள் | 29 - 42 திருப்பதிகங்கள் |
| 4. | 26.12.2015 சனி<br>மாலை 04.00-07.00 | தேவார இன்னிசை,<br>பக்க வாத்தியங்களுடன்<br>முனைவர்<br>**கோ.ப. நல்லசிவம்**<br>அவர்கள், தஞ்சாவூர் | |
| 5. | 27.12.2015 ஞாயிறு<br>காலை 09.00-11.00 | சைவத்திரு<br>**தியாகராசன்**<br>அவர்கள், பவானி | 43 - 57 திருப்பதிகங்கள் |
| 6. | 27.12.2015 ஞாயிறு<br>நண்பகல் 11.00-01.00 | சைவத்திரு **சிவ. காந்தி**<br>அவர்கள் | 58 - 72 திருப்பதிகங்கள் |
| 7. | 27.12.2015 ஞாயிறு<br>பிற்பகல் 02.00-04.00 | சைவத்திரு.<br>**சு. குஞ்சிதபாதம்**<br>அவர்கள் | 73 - 87 திருப்பதிகங்கள் |
| 8. | 27.12.2015 ஞாயிறு<br>மாலை 04.00- 06.00 | முதுமுனைவர்<br>**ந. இரா. சென்னியப்பனார்**<br>அவர்கள் | 88 - 100 திருப்பதிகங்கள் |

## ஏழாம் திருமுறைக்கு இதுவரை வெளிவந்துள்ள நூல்கள்

| வ. எண் | ஆண்டு | நூலின் பெயர் | வெளியீட்டாளர் / பதிப்பகத்தார் / அச்சகம் | ஆசிரியர் | கொடையாளர் | குறிப்புகள் |
|---|---|---|---|---|---|---|
| 1. | 1866 | மூவர் தேவாரம் (பண்முறை) | திருமயிலை சுப்பராய ஞானியார் குமாரய்யர் அச்சுக்கூடம் | காஞ்சிபுரம் வித்துவான் சபாபதி முதலியார் | | ஏழு திருமுறைகளாகப் பண்முறையில் வெளியிடப்பட்டது மூன்று தனி நூல்கள் |
| 2. | 1876 | மூவர் தேவாரம் (பண்முறை) | திருமயிலை சுப்பராய ஞானியார் குமாரய்யர் அச்சுக்கூடம் | காஞ்சிபுரம் வித்துவான் சபாபதி முதலியார் | | மறுபதிப்பு மூன்று தனி நூல்கள் |
| 3. | 1911 | தலமுறை மூவர் தேவாரம் | யாழ்ப்பாண வண்ணநகர்ச் சுவாமிநாத பண்டிதர், சென்னை வித்தியா நுட்பாலன அச்சுக்கூடம் | | | |
| 4. | 1917 | தேவார வேதசாரம் | சைவ சித்தாந்த மகாசமாஜம், இலங்கை | செந்தில்நாதய்யர், இலங்கை | மங்கையர்க்கரசி ஏகாம்பர முதலியார் | |
| | 1996 மறுபதிப்பு | | கலா சம்ரக்ஷண சங்கம், தஞ்சாவூர் | | மாதுஸ்ரீ பாலம் அம்மையார் | |
| 5. | 1929 -I<br>1935 -II | சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிய தேவாரப் பதிகங்கள் | அ. சோமசுந்தர செட்டியார் | சைவ சித்தாந்த மகாஜம் | | பெரிய புராண முறை |
| 6. | 1949 | சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிச் செய்த தேவாரம் | நேஷனல் ஆர்ட் பிரஸ், சென்னை | கி.வா. ஜகநாதன் | திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்துத் தலைவர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள் நந்தித் தம்பிரான் சுவாமிகள் | |

| 7. | 1964 | சுந்தரர் தேவாரம் ஏழாம் திருமுறை | ஞானசம்பந்தம் பதிப்பகம் தருமை ஆதீனம், மயிலாடுதுறை | முனைவர் சி. அருணை வடிவேலு முதலியார் | தருமை ஆதீனம் 25 ஆவது குருமகா சந்நிதானம் | முதற் பதிப்பு |
|---|---|---|---|---|---|---|
| 8. | 1968 | மூவர்தேவாரம் (தலமுறை) | திருப்பனந்தாள் காசித்திருமடம் | மூலப் பதிப்பு | பன்னிரு திருமுறைப் பதிப்புநிதி | 3000 படிகள் மூலம் மட்டும் |
| 9. | 1972 | பன்னிரு திருமுறை வரலாறு (இரண்டு தொகுதிகள்) | அண்ணாமலைப் பல்கலைக்கழகம் (காசித் திருமட நிதிய வெளியீடு) | வித்துவான் க. வெள்ளைவாரணர் | | 2412 பக்கங்கள் கொண்ட பெரிய வரலாற்று நூல் |
| 10. | 1997 | சுந்தரர் தேவாரம் ஏழாம் திருமுறை | காந்தளகம், சென்னை | முனைவர் சி. அருணை வடிவேலு முதலியார் | தருமை ஆதீனம் 25 ஆவது குருமகா சந்நிதானம் | இரண்டாம் பதிப்பு |
| 11. | 1998 | தேவாரம் அடங்கன் முறை | மயிலைக்கிழார் இளமுருகனார் மறுபதிப்பு | | | |
| 12. | 1998 -I 2002 -II 2005 -III | (அடங்கன் முறை தேவாரத் திருப்பதிகங்கள்) | கங்கை பதிப்பக நிலையம், சென்னை | முனைவர் அ.ச. ஞானசம்பந்தன் | | 7 திருமுறைகள் 8250 பாடல்கள் எண்ணிடப் பட்டுள்ளன. |
| 13. | 2000 | சுந்தரமூர்த்தி தேவாரம் | சக்தி எண்டர்பிரைசஸ் சென்னை | புலவர் பி.ரா. நடராஜன் | | |
| 14. | - | தேவாரம் மூன்று தொகுதிகள் | பிரெஞ்சு நிறுவனம் | கல்விக்கடல் கோபாலய்யர் | | |
| 15. | 2003 | சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிச் செய்த தேவாரம் | வர்த்தமானன் பதிப்பகம், சென்னை | வித்துவான் எம் நாராயண வேலுப்பிள்ளை | | |
| 16. | 2004 -I 2006 -II 2007 -III | சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிச் செய்த தேவாரம் | கயிலை மயூரப்பிரியா ஸ்ரீ கைலாஷ் அச்சகம், சென்னை | சுந்தரமூர்த்தி சுவாமிகள் | | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 17. | 2004 | நாவலர்கோன் நம்பி ஆரூரன் | திருவரசு புத்தக நிலையம் | வித்துவான் மா. சிவகுருநாத பிள்ளை | | |
| 18. | 2004 | சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம் | ஸ்ரீ குமரகுருபரர் ஆப்செட் பிரிண்டர்ஸ் காசித்திருமடம் | | திருவளர். திரு காசிவாசி முத்துக்குமார சுவாமித் தம்பிரான் சுவாமிகள் | |
| 19. | 2007, 2012 மறுபதிப்பு | பன்னிரு திருமுறை | மெய்யப்பனார் மணிவாசகர் அச்சகம் / பதிப்பகம் வெளியீடு | பதிப்பு ஆசிரியர் முனைவர் ச.வே. சுப்பிரமணியம் தமிழூர் | | மூலம் மட்டும் |
| 20. | 2008 | பன்னிரு திருமுறை | தமிழகச் சைவநெறிக் கழகம் | பதிப்பாசிரியர் சரவண பவானந்த தேசிகர் | | |
| 21. | 2008 | மூவர் தேவாரம் | சதுரா பதிப்பகம் | பதிப்பாசிரியர் சதுரா. ஜீ.ச. முரளி | | 7 திருமுறைகள் மூலம் மட்டும் |
| 22. | 2008 | சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம் | சதுரா பதிப்பகம் | சதுரா ஜீ.ச. முரளி | | |
| 23. | 2010 | சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம் | சதுரா பதிப்பகம் | சதுரா ஜீ.ச. முரளி | | |
| 24. | 2010 | பன்னிரு திருமுறைகள் | வர்த்தமானன் பதிப்பக வெளியீடு | உரைஆசிரியர் வ.த. இராம சுப்பிரமணியம் | அருட் செல்வர் மகாலிங்கம் | மூலமும், உரையும் |
| 25. | 2010 | ஸ்ரீ சுந்தரமூர்த்தி தேவாரம் | ஸ்ரீசுதர்ஸனா குடந்தை | திருநெறிய தமிழ்மணி முனைவர் சிவ. திருச்சிற்றம்பலம் | தமிழகச் சைவநெறிக் கழகம் | |
| 26. | 2011 | சுந்தரர் தேவாரம் ஏழாம் திருமுறை | காந்தளகம், சென்னை | முனைவர் சி. அருணை வடிவேலு முதலியார் | தருமை ஆதீனம் 25வது குருமகா சந்நிதானம் | மூன்றாம் பதிப்பு |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 27. | 2011 | பன்னிரு திருமுறை வரலாறு | இராமையா பதிப்பகம் | | மகாவித்துவான் க. வெள்ளை வாரணார் | 1972 ஆம் ஆண்டு வெளிவந்த நூல், நாட்டுடைமையானது |
| 28. | 2011 | மூவர் தேவாரச் சொல்லகராதி | இராமனந்த அடிகளார் அறக்கட்டளை | தொகுப்பு - பகுப்பு - முனைவர் புலவர் மணியன் | அருட்செல்வர் மகாலிங்கம், கற்பகம் பல்கலைக்கழகம் | 8250 பாடல்களின் சொற்களுக்கும் அகராதி 2-தொகுதிகள். மிகவும் பயனுள்ள நூல். |
| 29. | 2011 | தேவாரத் திருப்பதிகங்கள் | இராமனந்த அடிகளார் அறக்கட்டளை | | அருட்செல்வர் மகாலிங்கம் | மூவர் தேவாரம் (பண்முறை) |
| 30. | 2011 | சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம் | மணிவாசகர் நற்பணி மன்றம், கோவை | சுந்தரமூர்த்தி சுவாமிகள் | | |
| 31. | 2011 | சுந்தரர் தேவாரம் | விஜயா பதிப்பகம் | புலவர் வீ. சிவஞானம் | | |
| 32. | 2011 | சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம் | ஸ்ரீகுமரகுருபரர் ஆப்செட் பிரிண்டர்ஸ், தஞ்சாவூர் | | திருவளர் திரு காசிவாசி முத்துக்குமார சுவாமி தம்பிரான் சுவாமிகள் | |
| 33. | 2012 - I<br>2014 - II | சுந்தரமூர்த்தி சுவாமிகள் | சாகித்ய அகாடமி | அ.வே. சாந்திகுமார சுவாமிகள் | | |
| 34. | 2013 | சுந்தரமூர்த்தி நாயனார் தேவாரம் | மங்கையர்க்கரசியார் அறக்கட்டளை | | | |
| 35. | 2015 | ஏழாம் திருமுறை சுந்தரர் தேவாரம் | கற்பகம் பல்கலைக்கழகம் | பன்னிரு திருமுறை ஆய்வு மையம் | கற்பகம் அறக்கட்டளை | மூலமும், உரையும் |

* திருப்பனந்தாள் காசித் திருமடம் பத்துப் பதிப்புகளாக 30,000 படிகளை மூலமாக அடக்க விலையில் வெளியிட்டுப் பெரும்பணி செய்துள்ளார்கள்.
* வர்த்தமானன் பதிப்பகத்தார் சுருக்கமான உரையுடன் மூலத்தை ஏழு பதிப்புகளாகப் பல தொகுதிகளாக 12 திருமுறைகளையும் அருட்செல்வர் மகாலிங்கம் அருட்கொடையுடன் வெளியிட்டுத் திருமுறைகளுக்குச் சிறப்புச் செய்துள்ளார்கள்.
* இதுவரை வெளிவந்துள்ள உரைகளிலேயே மிக விரிவானது, விளக்கமானது 1963, 1997, 2011 ஆண்டுகளில் வெளிவந்த தருமையாதீன உரைதான். குருமகா சந்நிதானம் அவர்கள் சி. அருணை வடிவேல் முதலியார், தி.வே. கோபாலய்யர், குருசாமி தேசிகர் போன்ற உரையாசிரியர்களைக் கொண்டு வெளியிட்டருளினார்கள். அவற்றின் மறுபதிப்புகளை காந்தளகம் அச்சகம், கனரா பிரிண்டர்ஸ் மூலம் வெளியிட்டுள்ளார்கள்.
* நமது ஏழாம் திருமுறை நூலை வெளியிட மேற்காண் நூல்களின் தொகுப்புகள் மிக உதவியாக இருந்தன. அனைத்து குரு மகா சந்நிதானங்களுக்கும், நூல் வெளியீட்டாளர்களுக்கும், ஆசிரியர்களுக்கும் அப்பதிப்புகளின் கொடையாளர்களுக்கும் நெஞ்சார்ந்த நன்றிகள்.

# சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஏழாந் திருமுறைத் தேவாரம் "பாடியவாறு" அட்டவணை

| வ. எண் | திருத்தலமும் பாடிய இடமும் | தடுத்தாட் கொண்ட புராணச் செய்யுள் எண் | பதிக முதற் குறிப்பு | ஏழாம் திருமுறைப் பதிக எண் |
|---|---|---|---|---|
| | 807-ஆம் ஆண்டு சுந்தரர் திருஅவதாரம் | 3 | | |
| | 810-ஆம் ஆண்டு நரசிங்க முனையரையரால் மகன்மை கொள்ளப் பெறுதல் | 4<br>5 | | |
| | 823-ஆம் ஆண்டு மணப்பருவம் அடைதல் | 6 | | |
| | 823 -ஆம் ஆண்டு திருமணத்தின் போது தடுத்தாட் கொள்ளப் பெறுதல் | 67 | | |
| 1. | திருவெண்ணெய் நல்லூர் (ஆவணங்காட்டி ஆட்கொண்ட பின் கோயிலுட் புகுந்ததும், வேதியராக வந்தவர் மறைந்து, விடையின் மேல் காட்சி கொடுத்துப் பித்தன் என்று அடிஎடுத்துக் கொடுத்த போது | 74 | பித்தா பிறைசூடி | 1 |
| | திருநாவலூர் (தேவர் பிரானைப் பணிந்து பாடியது) | 78 | | |
| 2. | திருத்துறையூர் (தம்பிரான் முன்னின்று) | 79 | மலையார் அருவி | 13 |
| | பெண்ணையாறு கடந்து திருவதிகை அடைதல் | 82 | | |
| 3. | திருவதிகை (புறத்தே இருந்த சித்த வடமடத்தில் தலை மேல் இறைவர் திருவடிசூட்டிய போது) | 88 | தம்மானை அறியாத | 38 |
| 4. | திருத்தினை நகர் (வணங்கிப்பாடி) | 91 | நீறு தாங்கிய | 64 |
| 5. | காழி (ஊர் எல்லையை வலம் வந்த போது இறைக் காட்சி கண்டு) | 112<br>113 | சாதலும் பிறத்தலும் | 58 |

| வ. எண் | திருத்தலமும் பாடிய இடமும் | தடுத்தாட் கொண்ட புராணச் செய்யுள் எண் | பதிக முதற் குறிப்பு | ஏழாம் திருமுறைப் பதிக எண் |
|---|---|---|---|---|
| 6. | ஆரூர் (அடியார்களால் வரவேற்கப் பெற்று வீதியூடு செல்லும் போது) | 123 | கரையும், கடலும் | 73 |
| 7. | ஆரூர் (தேவாசிரியன் முன்பு நின்று) (பொது) | 202 | தில்லை வாழந்தணர் | 39 |
| | | ஏயர்கோன் கலிக்காமர் புராணச் செய்யுள் எண் | | |
| 8. | திருக்கோளிலி (நெல்மலை பெற்றபின்) | 20 | நீள நினைந்தடியேன் | 20 |
| 9. | நாட்டியத் தான்குடி | 41 | "பூண்நாண்" ஆவது | 15 |
| 10. | வலிவலம் (திருமுன்) | 43 | ஊனங்கத்துயிர்ப்பாய் | 67 |
| 11. | திருப்புகலூர் (செங்கல் பொன்னான பின்பு மீண்டும் திருமுன் சென்று பாடியது) | 51 | தம்மையே புகழ்ந்து | 34 |
| 12. | திருப்பனையூர் (ஊரின் புறத்தே திருக் காட்சி கண்ட பின் திருமுன் சென்று பாடியது) | 53 | மாடமாளிகை | 87 |
| 13. | நன்னிலம் | 56 | தண்ணியல் வெம்மை | 98 |
| 14. | திருவீழிமிழலை | 59 | நம்பினார்க்கருள் | 88 |
| 15. | திருவாஞ்சியம் | 60 | பொருவனார் | 76 |
| 16. | திருநறையூர் | 61 | நீரும் மலரும் | 93 |
| 17. | அரிசிற் கரைப் புத்தூர் | 62 | மலைக்கும் மகள் | 9 |
| 18. | திருவாவடுதுறை | 63 | மறையவன் | 66 |
| 19. | திருநாகேச்சரம் | 66 | பிறையணிவாணுலதாள் | 99 |
| 20. | திருக்கலய நல்லூர் | 67 | குரும்பை முலை | 16 |
| 21. | திருச் சோற்றுத்துறை | 70 | அழல் நீர் ஒழுகி | 94 |
| 22. | திருமழபாடி (திருவாலம் பொழில் பணிந்த பின் இறைவன் வரச்சொல்லி அழைக்க) | 73 | பொன்னார் மேனியனே | 24 |

| வ. எண் | திருத்தலமும் பாடிய இடமும் | தடுத்தாட் கொண்ட புராணச் செய்யுள் எண் | பதிக முதற் குறிப்பு | ஏழாம் திருமுறைப் பதிக எண் |
|---|---|---|---|---|
| 23. | திருவானைக்கா | 75, 76 | மறைகளாயின | 75 |
| 24. | திருப்பாச்சிலாச்சிராமம் (இறைவனை வணங்கித் திரும்பி அடியார்களை நோக்கி) | 80, 81 | வைத்தனன் தனக்கே | 14 |
| 25. | திருப்பைஞ்ஞீலி | 84 | காருலாவிய | 36 |
| 26. | திருப்பாண்டிக் கொடுமுடி | 87 | மற்றுப்பற்றெனக்கு | 48 |
| 27. | திருவெஞ்சமாக்கூடல் | 92 | எறிக்குங்கதிர் | 42 |
| 28. | திருக்கற்குடி | 93 | விடையாரும் | 27 |
| 29. | திருப்புறம்பயம் (இன்னம்பரி லிருந்து புறம்பயம் செல்லும் வழியில்) | 96 | அங்கம் ஓதி ஓர் | 35 |
| 30. | திருக்கூடலையாற்றூர் (வழிகாட்டி வந்த இறைவன் ஊர் எல்லையில் மறைந்து போன போது) | 103 | வடிவுடை மழு | 85 |
| 31. | திருமுதுகுன்றம் (திருமுன் தொழுது) | 105 | நஞ்சியிடை | 43 |
| 32. | திருமுதுகுன்றம் (பொருள் வேண்டும் என்ற குறிப்போடு மீண்டும் பாடியது) (பொது) | 106 | மெய்யை முற்றப்பொடிப் | 63 |
| 33. | தில்லை (கனகமன்றில் திருப்படியைத் தாழ்ந்து) (கோயில்) | 113 - 115 | மடித்தாடும் | 90 |
| 34. | திருக்கருப்பறியலூர் | 117 | சிம்மாந்து | 30 |
| 35. | திருப்பழமண்ணிப்படிக்கரை | 118 | முன்னவன் | 22 |
| 36. | திருவாழ் கொளிபுத்தூர் (கோயிலை நோக்கி வரும் போது) | 118 | தலைக்கலன் | 57 |
| 37. | திருக்கானாட்டு முள்ளூர் (ஊரைச்சாரும் போது இறைக்காட்சி கண்டு) | 120 | வள்வாய | 40 |

| வ. எண் | திருத்தலமும் பாடிய இடமும் | தடுத்தாட் கொண்ட புராணச் செய்யுள் எண் | பதிக முதற் குறிப்பு | ஏழாம் திருமுறைப் பதிக எண் |
|---|---|---|---|---|
| 38. | எதிர்கொள்பாடி (ஊரை நெருங்கி வரும் போது) | 121 | மத்தயானை | 7 |
| 39. | திருவேள்விக்குடியும் திருத்துருத்தியும் | 121 | மூப்பதும் இல்லை | 18 |
| 40. | திருவாரூர் (கமலாலயக் குளக்கரையில் திருமுது குன்றத்தில் மணிமுத்தாற்றில் இட்ட பொன்னை எடுக்கும்போது) | 132 | பொன் செய்த மேனியினீர் | 25 |
| 41. | திருவாரூர் (தங்கியிருக்கும் நாளில் திருமுன் நின்று தொண்டரை வினவிப்பாடியது) | 140<br>141 | பாறு தாங்கிய (பொது) | 33 |
| 42. | திருநள்ளாறு | 145 | செம்பொன்மேனி | 68 |
| 43. | திருக்கடவூர் மயானம் | 145 | மருவார் கொன்றை | 53 |
| 44. | திருக்கடவூர் வீரட்டம் | 146 | பொடியார் மேனி | 28 |
| 45. | திருவலம்புரம் | 147 | எனக்கினி | 72 |
| 46. | திருவெண்காடு | 148 | படங்கொள் நாகம் | 6 |
| 47. | திருநனிபள்ளி | 149 | ஆதியன் ஆதிரையன் | 97 |
| 48. | திருநின்றியூர் | 150 | திருவும் வண்மையும் | 65 |
| 49. | திருநின்றியூர் | 151 | அற்றவனார் | 19 |
| 50. | திருநீடூர் (நீடூரைப் பணியாது செல்லும் போது அவ்வூரை நினைந்து மீண்டும் அடைந்த போது) | 151 | ஊர்வதோர் விடை | 56 |
| 51. | திருக்கோலக்கா (இறைவர் காட்சி கொடுக்கக் கண்டு) | 153, 154 | புற்றில் வாளரவு | 62 |
| 52. | திருக்குருகாவூர் (செல்லும் வழியில் பொதிசோறு உண்டு உறங்கி விழித்த போது) | 163 | இத்தனை ஆமாற்றை | 29 |
| 53. | திருக்கழிப்பாலை | 166 | செடியேன் | 23 |
| 54. | திருநாவலூர் | 170 | கோவலன் நான்முகன் | 17 |

| வ. எண் | திருத்தலமும் பாடிய இடமும் | தடுத்தாட் கொண்ட புராணச் செய்யுள் எண் | பதிக முதற் குறிப்பு | ஏழாம் திருமுறைப் பதிக எண் |
|---|---|---|---|---|
| 55. | இடையாறு (பொது) | 171 | முந்தையூர் முதுகுன் | 31 |
| 56. | திருக்கழுக்குன்றம் | 173 | கொன்றுசெய்த | 81 |
| 57. | திருக்கச்சூர் (வழிபட்டபின் மதில் புறத்தே வந்து தங்கி இருக்கையில் வேதியராக வந்து தனக்கு அமுதளித்த இறைவர் மறைந்தவுடன்) | 182 | முதுவா யோரி | 41 |
| 58. | கச்சிமேற்றளி | 190 | நொந்தா ஒண்சுடரே | 21 |
| 59. | திருவோணகாந்தன் தளி | 191 | நெய்யும் பாலும் | 5 |
| 60. | கச்சி அனேகதங்காவதம் | 192 | தேனெய் புரிந்து | 10 |
| 61. | வன்பார்த்தான் பனங்காட்டூர் | 194 | விடையின் மேல் | 86 |
| 62. | திருக்காளத்தி | 197 | செண்டாடும் விடையாய் | 26 |
| 63. | காளத்தியில் இருந்தபடி திருப்பருப்பதம் பாடி | 198 | மானும்மரை | 79 |
| 64. | காளத்தியில் இருந்தபடி திருக்கேதாரம் பாடி | 198 | வாழ்வாவது மாயம் | 78 |
| 65. | திருவொற்றியூர் (திருமுன் குறுகி) | 203, 204 | பாட்டும்பாடி | 91 |
| 66. | சங்கிலியார் திருமணம் (திருவாரூரை நினைந்து) | 273 | பத்திமையும் மடிமையையுங் | 51 |
| 67. | திருவொற்றியூரை நீங்கியதும் கண்பார்வை மறைய ஒற்றியூரனை நினைந்து | 275, 276 | அழுக்குமெய்கொடு | 54 |
| 68. | வடதிருமுல்லை வாயில் | 277 | திருவும் மெய்ப்பொருளும் | 69 |
| 69. | திருவெண்பாக்கம் (இறைவர் ஊன்றுகோல் அளித்த போது) | 279 | பிழையுளன பொறுத்தி | 89 |
| 70. | திருவாலங்காடு (ஊரின் அயலேநின்று தொழுது) | 283 | முத்தாமுத்தி | 52 |
| 71. | திருக்கச்சி ஏகம்பம் (இடக்கண் பார்வை பெற்றதும்) | 288 | ஆலந்தான் உகந்து | 61 |
| 72. | காஞ்சிநகரைக் கடந்து வழிச் செல்லும் போது திருவாரூரை நினைந்து | 291 | அந்தியும் நண்பகலும் | 83 |

| வ. எண் | திருத்தலமும் பாடிய இடமும் | தடுத்தாட் கொண்ட புராணச் செய்யுள் எண் | பதிக முதற் குறிப்பு | ஏழாம் திருமுறைப் பதிக எண் |
|---|---|---|---|---|
| 73. | திருவாமாத்தூர் | 293 | காண்டனன் | 45 |
| 74. | திருநெல்வாயில்அரத்துறை | 294 | கல்வாய் அகிலும் | 3 |
| 75. | திருவிடைமருதூர் | 295 | கழுதை குங்குமம் | 60 |
| 76. | திருவாவடுதுறை | 296 | கங்கை வார் சடை | 70 |
| 77. | திருத்துருத்தி (வடகுளத்தில் நீராடி மேக நோய் நீங்கிய பின் கோயினுட்புக்குத் தொண்டரை நோக்கி) | 300 | மின்னுமா மேகம் | 74 |
| 78. | திருவாரூர் பரவையுண்மண்டளி | 303 | தூவாயா | 96 |
| 79. | திருவாரூர் மூலட்டானம் (மாலை வழிபாட்டுக்கு வந்து அன்பர்களின் எதிரே பாடியது) | 305 | குருகுபாய | 37 |
| 80. | திருவாரூர் மூலட்டானம் (திருமுன்வணங்கி) | 308, 309 | மீளா அடிமை | 95 |
| 81. | திருப்புன்கூர் (ஏயர் கலிக்காமனோரோடு கோயில் புக்குதிருமுன் போற்றியது) | 406 | அந்தணாளனுன் | 55 |
| | சில நாட்களுக்குப் பின் கலிக்காமனோரோடு திருவாரூர் சேர்தல் | | | |
| | | கழறிற்றறிவார் புராணச் செய்யுள் எண் | | |
| 82. | திருநாகைக் காரோணம் | 63 | பத்தூர்புக் | 46 |
| 83. | திருமறைக்காடு | 87 | யாழைப்பழித்த | 71 |
| 84. | கோடிக் குழகர் கோயில் | 89 | கடிதாய்கடற்காற்று | 32 |
| 85. | திருப்பூவணம் (ஊர் எல்லையில் அடியார்கள் பூவணம் இது என்று காட்டிய போது) | 98 | திருவுடையார் | 11 |
| 86. | திருப்பரங்குன்றம் (மூவேந்தருடன் சென்று திருமுன் இறைஞ்சி) | 103 | கோத்திட்டை | 2 |

| வ. எண் | திருத்தலமும் பாடிய இடமும் | தடுத்தாட் கொண்ட புராணச் செய்யுள் எண் | பதிக முதற் குறிப்பு | ஏழாம் திருமுறைப் பதிக எண் |
|---|---|---|---|---|
| 87. | திருக்கேதீச்சரம் (இராமேச்சுரத்தில் இருந்தபடி) | 109 | நத்தார்படை | 80 |
| 88. | திருச்சுழியல் | 111 | ஊனாய் உயிர் | 82 |
| 89. | திருக்கானப்பேர் (காளையார் கோயில்) (திருச்சுழியலில் கனவுகண்டு, புறப்பட்டுக் கானப் பேரை நெருங்கும் போது) | 114 | தொண்டரடித் தொழலும் | 84 |
| 90. | திருப்புனவாயில் | 118 | சித்தம் நீநினை | 50 |
| 91. | திருவாரூர் (தங்கி இனிதமரும் போது) நாட்டுத் தொகை | 125 | வீழக்காலனை | 12 |
| 92. | திருவாரூர் (ஊர்த்தொகை) (பொது) | 125 | காட்டூர்க்கடலே | 47 |
| 93. | திருவையாறு (காவிரியின் தென்கரையிலிருந்தபடி) | 134 | பரவும் பரிசொன்று | 77 |
| 94. | திருவஞ்சைக்களம் | 146 | முடிப்பது கங்கை | 44 |
| 95. | கொடுங்கோளூரில் தங்கி யிருந்த போது ஒரு நாள் திருவாரூரை நினைந்து பாடியது | 156 | பொன்னும் மெய்ப்பொருளும் | 59 |
| 96. | திருமுருகன்பூண்டி | 169, 170 | கொடுகு வெஞ்சிலை | 49 |
| | | வெள்ளானைச் சருக்கச் செய்யுள் எண் | | |
| 97. | திருவாரூர் | 3 | இறைகளோடிசைந்த | 8 |
| 98. | புக்கொளியூர் அவினாசி | 10, 11 | எற்றான் மறக்கேன் | 92 |
| 99. | திருவஞ்சைக்களம் | 29 | தலைக்குத்தலை மாலை | 4 |
| 100. | நொடித்தான் மலை | 39 | தானெனை முன் படைத்தான் | 100 |

உ

திருச்சிற்றம்பலம்



# சுந்தரமூர்த்தி சுவாமிகள் வரலாறு

திருக்கயிலையில் சிவபிரானுடைய பிரதிபிம்பத்தினின்று தோன்றி, அப்பெருமானுக்குத் திருத்தொண்டு புரிந்துவரும் ஆலாலசுந்தரர் என்பவர் ஒரு நாள் அருச்சனைக்காக மலர்கொய்யும் பொருட்டு நந்தவனத்துக்குச் சென்றார். அங்கே உமாதேவியாருடைய திருத்தொண்டில் ஈடுபட்ட அனிந்திதை, கமலினி என்னும் இரண்டு மகளிர் முன்பே மலர் கொய்திருந்தனர். உலகம் வாழ்வடையவும், ''தீதிலாத் திருத்தொண்டத்தொகை'' தந்து சைவம் தழைக்கச் செய்யவும் சிவபிரான் திருவருளால் அவர்களைக் கண்டபோது, ஆலால சுந்தரர் உள்ளத்தில் காதல் அரும்பியது, அம்மகளிருக்கும் அவர்பால் அன்பு பூத்தது. இதனை உணர்ந்த எம்பெருமான் ''உங்கள் அன்பு கனிவதற்குப் பூவுலகில் மக்களாகப் பிறத்தலே தகுதி ஆதலின் நீங்கள் மூவரும் தமிழ்நாட்டில் தோன்றி, ஒன்றுபட்டுக் காதல் புரிந்து நம் தொண்டும் செய்து விட்டு வாருங்கள்'' என்றருளி அனுப்பினர்.

இறைவன் திருவுள்ளப்படியே ஆலாலசுந்தரர் தமிழ்நாட்டில் திருமுனைப்பாடி நாட்டில் திருநாவலூர் என்னும் தலத்தில் ஆதி சைவ அந்தணராக அவதரித்தார். அவர் தந்தையார் சடையனார், தாயார் இசைஞானியார். நம்பிஆரூரர் என்ற திருநாமத்தோடு அவர் வளர்ந்து வருகையில், திருமுனைப்பாடி நாட்டை ஆண்ட சிற்றரசராகிய நரசிங்க முனையரையர் என்பவர் அவர்பால் அன்பு மிக்கவராகித் தம் வளர்ப்புப் பிள்ளையாக ஏற்றுப் போற்றி வளர்த்து வந்தார்.

உபநயனம் முதலியன முறையே நிறைவேறிய பின் மணப்பருவமடைந்த நம்பியாரூராருக்குப் புத்தூர் என்னும் ஊரிலுள்ள சடங்கவி சிவாசாரியாருடைய திருமகளாரை மணம் செய்விப்பதாக நிச்சயம் செய்தனர். உரிய நன்னாளில் புத்தூரில் நம்பியாரூரர் திருமணக் கோலத்தோடு சென்று இருந்தபோது, முன்னரே கயிலையில் கொடுத்திருந்த வாக்குறுதியின்படி அவரைத் தடுத்தாட் கொள்ளத் திருவுள்ளம்பூண்ட சிவபெருமான் ஒரு கிழ வேதியர் கோலங்கொண்டு எழுந்தருளினார். பெருமான் மணப்பந்தலின் முன்நின்று, ''இந்த நம்பியாரூரன் என் அடிமை'' என்றார் அது கேட்ட யாவரும் திகைத்து நிற்க, ''அந்தணர் அந்தணருக்கு அடிமையாவது எங்கும் இல்லையே! நீர் பித்தரோ!'' என்று நம்பியாரூரர் எள்ளி நகையாடினார். ''நான் பித்தனானாலும் பேயனானாலும் உன்னை விட்டொழியேன். எனக்கு ஏவல் புரியும் கடப்பாடுடையன் நீ'' என அவர் வற்புறுத்தினார். ஆரூரர், ''நான் அடிமை என்பதைக் காட்ட என் முன்னோர் எழுதித் தந்த ஓலை உண்டா?'' என்று வினவ, ''அடிமைத் தொழில் செய்வதற்குரிய நீ ஓலையைப் பார்க்க உரியவன் அல்லன்'' என்று கிழ வேதியர் கூற, ஆரூரர் அவர் கையிலிருந்த ஓலையைப் பிடுங்கிக் கிழித்தெறிந்தார். திருவெண்ணெய் நல்லூரில் வாழ்பவர் அவ்வேதியர் என்பதை உணர்ந்து அவ்வூர்ச் சபையினரிடம் வழக்குப் பேசலாமென யாவரும் சென்றனர். சபையினர்முன் சென்று முதியவர் தம் வழக்கைச் சொல்லவும் அவர்கள் நம்பவில்லை. அப்பால், ''இவன் கிழித்தது படி ஓலை மூல ஓலை இதோ இருக்கிறது'' என்று அவர் காட்டக்கண்ட சபையினர் நம்பியாரூரர் அம்முதியவருக்கு அடிமையாக ஏவல் செய்யவேண்டுமென்று முடிவு செய்தனர். பிறகு முதியவரை நோக்கி ''ஓலையில் நீர் இந்த ஊரினர் என்று குறித்திருக்கிறது, உம்முடைய இருப்பிடம் எது?'' என்று கேட்க, ''ஒருவரும் அறியீரோ?'' என்று சொல்லி வேதியர் நம்பி ஆரூரரையும் பிறரையும் அழைத்துச் சென்று திருவெண்ணெய் நல்லூர் திருவருட்டுறைக் கோயிலுக்குள்ளே புகுந்து மறைந்தார்,

தொடர்ந்து வந்தவர்கள் கோயிலுள் சென்றவரைக் காணாமல் வியந்து நிற்கச் சிவபெருமான் இடபவாகனத்தின் மேல் எழுந்தருளி ஆரூரருக்குக் காட்சி தந்து, ''நாமே உம்மைத் தடுத்தாட்கொண்டோம் எம்மை வன்மை பேசியமையால் நீ வன்தொண்டன் என்ற பெயருக்கு உரியாய். நமக்கு அருச்சனை பாட்டேயாதலால் தமிழ்ப் பதிகங்கள் பாடுவாயாக'' என்று அருளினர். நம்பியாரூரர், ''நான் எம்பெருமானைப் பாடுமாறு அறியேனே!'' என நைந்து கூற, ''நம்மைப் பித்தன் என்றாய் அதையே வைத்துப் பாடுக'' என்று பெருமான் அருள, அவ்வாறே ''பித்தா பிறைசூடி'' என்று திருப்பதிகத்தைத் தொடங்கி நிறைவேற்றினர்.

புத்தூர்ச் சடங்கவி சிவாசாரியார் திருமகளார் மணம் பெறாவிடினும் நம்பியாரூரரையே தலைவராக எண்ணி வாழ்ந்து பின் சிவபிரான் திருவடிநிழலை அடைந்தார்.

சிவபிரான் திருவருளாணையின் படியே நம்பியாரூரர் ''சொற்றமிழ் பாடும்'' திருத்தொண்டை மேற்கொண்டு, பல தலங்களுக்குச் சென்று வழிபட்டுத் திருப்பதிகம் பாடினார். திருத்துறையூரில் தவநெறிபெற்று திருவதிகை என்னும் தலத்துக்கருகே வந்து, அத்தலம் அப்பர் சுவாமிகள் உழவாரத்தொண்டு செய்த புண்ணிய பூமியாதலின் காலால் மிதித்தல் அடாதென்று, புறம்பே உள்ள சித்தவடமடத்தில் தங்கித் துயின்றனர். சிவபிரான் முதுவேதியராய் அங்கே சென்று துயில்வார்போலக் கிடந்து நம்பியாரூரர் தலைமேல் கால் நீட்டினார். பன்முறை கூறியும் மீண்டும் மீண்டும் தலையிற் கால்வைத்த அவர் சிவபெருமானே என்பதை உணர்ந்த ஆரூரர், ''தம்மானை அறியாத சாதியார் உளரோ'' என்ற திருப்பதிகத்தைப் பாடியருளினார்.

அப்பால் பலதலங்களைத் தரிசித்துக் கொண்டு சொற்றமிழ் பாடிச் சிதம்பரம் சென்று பணிந்தார். அங்கே இறைவர், ''திருவாரூருக்கு வா'' என்று அசரீரியாகப் பணித்தமையால் அத்தலத்தை நோக்கிப் புறப்பட்டார். சீகாழிக்குப் பக்கத்தில் வந்ததும் ஞானசம்பந்தசுவாமிகள் அவதரித்த தலமாதலின் மிதிக்க வொண்ணாதென்று புறம்பே நிற்கச் சிவபெருமான் காட்சி கொடுத்தருளினார். ''சாதலும் பிறத்தலும் தவிர்த்து'' என்னும் பதிகம் பாடிப் பணிந்து மேற்சென்றார் ஆரூரர்.

திருக்கோலக்கா முதலிய தலங்களுக்கு எழுந்தருளி இறைவரைப் பணிந்து பதிகம்பாடித் திருவாரூரை அணுகுகையில் சிவபிரான் ஏவலால் அத்தலத்திலுள்ளோர் நம்பியாரூரரை எதிர்கொண்டு திருக்கோயிலுக்கு அழைத்துச் சென்றனர். திருக்கோயில் சென்று வன்மீகநாதரை வழிபட்டனர். அப்பெருமான் ''நீ எனக்குத் தோழன், என்றும் நீ மணக்கோலத்தோடு இருப்பாயாக'' என்று கட்டளையிட்டருளினார். அது முதல் தம்பிரான் தோழர் என்ற திருநாமம் நம்பியாரூரருக்கு அமைந்தது.

தம்பிரான் தோழர் திருவாரூரிலே தங்கி நாள்தோறும் திருக்கோயில் சென்று வழிபட்டுவந்தார். திருக்கயிலையில் கமலினியாக இருந்தவர் அத்தலத்தில் உருத்திர கணிகையர் குலத்தில் தோன்றிப் பரவையார் என்ற திருநாமத்தோடு வளர்ந்து, திருக்கோயிற் பணிபூண்டு ஒழுகி வந்தார். தம்பிரான் தோழரும் பரவையாரும் இறைவர் சந்நிதானத்தில் ஒருவரை ஒருவர் கண்டு காதலுற்றுச் சிவபெருமான் ஆணைவழியே திருமணம் செய்துகொண்டு ஒருங்கு வாழலாயினர்.

ஒருநாள் தம்பிரான் தோழர் திருக்கோயிலுக்குச் செல்கையில் அங்கே முன்னிருக்கும் தேவாசிரியன் என்னும் மண்டபத்தில் சிவனடியார்கள் இருந்ததைக் கண்டு, அவர்களுக்கு அடிமையாக அவர்களைப் பாட எண்ணியபோது இறைவரே ''தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்'' என்று அடியெடுத்துக் கொடுக்க, அதனையே முதலாகக் கொண்டு திருத்தொண்டத்தொகை பதிகம்

பாடியருளினார். இந்தப்பதிகமே விரிநூலாக பெரியபுராணமாயிற்று. குண்டையூர்கிழார் என்பவர் சிவபிரான் அருளால் வன்றொண்டருக்கு வழங்கும் பொருட்டு மிகுதியான நெல்லைப் பெற்று வைத்திருக்க, அதனைத் திருவாரூருக்கு எடுத்துச் செல்ல ஆட்கள் வேண்டுமே என்று நம்பியாரூரர் எண்ணினார். ''நீள நினைந்தடியேன்'' என்ற பதிகம் பாடவே சிவபெருமான் ஏவலால் பூதங்கள் நெல்முழுவதையும் திருவாரூருக்குக் கொண்டு சேர்த்தன.

திருநாட்டியத்தான்குடியில் வாழ்ந்த கோட்புலி நாயனார் ஒருமுறை தம்பிரான்தோழரை அழைத்துச் சென்று உபசரித்துத் தம் பெண்களாகிய சிங்கடியார், வனப்பகையார் என்னும் இருவரையும் ஆட்கொள்ள வேண்டுமென்று விண்ணப்பம் செய்ய, அவர்களைத் தம் மக்களாக ஆரூரர் ஏற்றுக்கொண்டார். பங்குனி உத்தரத் திருநாளுக்குப் பொன் வேண்டுமென்று பரவையார் கூற, வன்றொண்டர் திருப்புகலூருக்குச் சென்று திருக்கோயிலுக்குள் இருந்த செங்கற்களைத் தலையணையாக வைத்துச் சிறிது துயின்று எழுந்துபார்க்க அச் செங்கற்களெல்லாம் பொன்னாக இருத்தலைக் கண்டார். இது சிவபிரான் அருளென்று வியந்து ''தம்மையே புகழ்ந்திச்சை பேசினும்'' என்ற பதிகத்தைப் பாடிப் பொன்னைப் பரவையாரிடம் கொணர்ந்து கொடுத்தார்.

திருமுதுகுன்றத்துக்குச் சென்று முதுகுன்றர் அருளால் பன்னீராயிரம் பொன்கிடைக்க, அதனைத் திருமணிமுத்தா நதியிலிட்டு அப்பால் திருவாரூர் சென்று அங்குள்ள கமலாலயத்திலிருந்து அப்பொன்னை எடுத்துப் பரவையாருக்கு வழங்கினார். திருக்குருகாவூரில் சிவபெருமான் அளித்த பொதிசோற்றை உண்டு, ''இத்தனையா மாற்றை அறிந்திலேன்'' என்ற பதிகம் பாடினார். தொண்டை நாட்டுத் தலங்களைத் தரிசிக்கையில் திருக்கச்சூரில் சிவபெருமான் பிச்சையெடுத்து வந்து தந்த உணவை உண்டு, ''முதுவாய் ஓரி கதற'' என்ற பதிகம் பாடினார்.

பல தலங்களைத் தரிசித்துக்கொண்டு வந்த நம்பியாரூரர் திருவொற்றியூர் வந்தடைந்தார். திருக்கயிலையில் இருந்த அநிந்திதையார் ஞாயிறு என்ற ஊரில் இருந்த வேளாளச் செல்வர் ஒருவருக்குத் திருப்புதல்வியாராகத் தோன்றிச் சங்கிலியார் என்ற திருப்பெயரோடு வாழ்ந்துவந்தார். மணப்பருவம் எய்தியும் யாரையும் மணக்க விரும்பாமல் அவர் திருவொற்றியூரில் கன்னிகாமாடம் அமைக்கச் செய்து அங்கே தங்கி, திருவொற்றியூர்ப் பெருமானுடைய திருத்தொண்டில் ஈடுபட்டிருந்தார். சங்கிலியாரைக்கண்டு உள்ளம் பிணிப்புண்ட நம்பியாரூரர் இறைவர்பால் விண்ணப்பித்து அவரைத் தமக்கு மணம் செய்விக்கும்படி வேண்டினர். ''உன்னைப் பிரியேன்'' என்ற உறுதி மொழியை பெற்றுக் கொள்ளும்படி சங்கிலியாருக்குச் சிவபிரான் உணர்த்தி, அவ்வாறே அவர்பெற, அடியவர்களைக் கொண்டு திருமணம் நிறைவேறச் செய்தருளினார். சங்கிலியாரோடு வாழ்ந்து வந்த வன்றொண்டர் ஆரூர்ப்பெருமானைப் பிரிந்திருத்தலை ஆற்றாதவராகித் திருவொற்றியூரை விட்டுப் புறப்பட்டார்.

சங்கிலியாருக்கு அளித்த உறுதி மொழியினின்றும் தவறியமையால் நம்பியாரூரர் தம் கண்ணை இழந்துவருந்தி மேற்செல்வாராய்த் திருமுல்லை வாயில் சென்று வணங்க அப்பால் திருவெண்பாக்கம் சென்று, ''பெருமானே, திருக்கோயிலில் உள்ளீரா?'' என்று கேட்கவே, ''உளோம் போகீர்'' என்று பெருமான் அருளி ஓர் ஊன்றுகோல் உதவினார். அங்கிருந்து பல தலங்களுக்குச் சென்று காஞ்சிபுரம் நண்ணி இறைவர் அருளால் ஆரூரர் இடக்கண் பெற்றார். அப்பால் இடையிலுள்ள தலங்களை வழிபட்டுப் பாடித் திருவாரூரை அடைந்தார் அங்கே இறைவரைப் பாடி வலக்கண்ணையும் பெற்றார்.

நம்பியாரூரர் சங்கிலியாரை மணந்த செய்தியை அறிந்த பரவையார் அவரை ஏற்றுக்கொள்ளாமல் ஊடியிருந்தார். வன்றொண்டர் வேண்ட, ஆரூர் இறைவர் இருகால் பரவையாரிடம்

தூது சென்று ஊடலை நீக்கி மீண்டும் இருவரும் இணைந்து வாழ அருள் புரிந்தார். இறைவரை ஏவல் கொண்டமைக்கு ஆற்றாத ஏயர்கோன்கலிக்காம நாயனார் நம்பியாரூரர்மேல் சினங்கொண்டிருக்க, அவ்விருவரையும் நட்புக் கொள்ளச் செய்ய எண்ணிய இறைவர் கலிக்காமருக்குச் சூலைநோய் வரச்செய்து, அதனைத் தீர்க்கும்படி நம்பியாரூரரை அனுப்பினார். இவரால் நோய் தீர்வதினும் இறப்பதே மேலென்று கருதிய ஏயர்கோன் உடைவாளால் தம் வயிற்றைக் கிழித்துக் கொண்டு இறந்தார். அதுகண்டு நம்பியாரூரர் வருந்தித் தாமும் உயிர்நீக்கத் துணிகையில் இறைவர் கலிக்காமரை உயிர்ப்பெய்து எழுப்பி அவ்விரண்டு பெரியார்களையும் நண்பராக்கியருளினார்.

சேர அரசராகிய சேரமான் பெருமான் நாயனார் நம்பியாரூரரை வந்து கண்டு நட்புப் பூண்டார். அவ்விருவரும் பல தலங்களைத் தரிசித்து வணங்கினர். ஆரூரர் சேர நாட்டுக்குச் சென்று சிலகாலம் தங்கி, அப்பால் திருவாரூர் வந்தார். பிறகு கொங்குநாட்டில் உள்ள திருப்புக்கொளியூர் அவிநாசியில் முதலை விழுங்கிய பிள்ளையைப் பதிகம் பாடி வருவித்தார். மீண்டும் திருவஞ்சைக்களத்திலிருந்த சேரமான் பெருமான் நாயனார்பால் சென்று தங்கியிருந்தார்.

ஒருநாள் திருவஞ்சைக்களத்துத் திருக்கோயிலுள் சென்று உலக வாழ்க்கையில் தமக்கு இருந்த வெறுப்பைப்பதிகம் பாடித் தெரிவித்தார். சிவபெருமான் தேவர்களோடு வெள்ளையானையை அனுப்பி நம்பியாரூரரைக் கைலாயத்திற்கு அழைத்துவரச் செய்தார். இதனை உணர்ந்த சேர வேந்தர் தாமும் குதிரையில் ஏறித் திருக்கைலாயம் சென்றார். பரவையாரும் சங்கிலியாரும் கயிலை சென்று பண்டைநிலையில் தொண்டு பூண்டொழுகினர்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் கைலாயம் அடைந்த நாள் ஆடி மாதம் சுவாதித்திருநாள் என்பர். பதினெட்டு ஆண்டுகள் சுவாமிகள் பூவுலகில் வாழ்ந்தனர் என்று ஒரு பழம்பாடல் தெரிவிக்கிறது.

### I) நம்பியாண்டார் நம்பி அருளிய திருத்தொண்டர் திருவந்தாதியில் சுந்தரரைப் பற்றியன

**தொழுதும் வணங்கியும் மாலயன் தேடரும் சோதிசென்றாங்கு**
**எழுதும் தமிழ்ப் பழ ஆவணம் காட்டி எனக்கு உன்குடி**
**முழுதும் அடிமைவந்து ஆட்செய் எனப்பெற்ற வன்முரல் தேன்**
**ஒழுகும் மலரின் நற்றார் எம் பிரான் நம்பி ஆரூரனே.**

**அருட்டுறை அத்தர்க்கு அடிமைப் பட் டேன் இனி அல்லன் என்னும்**
**பொருட்டுறை ஆவதென்னே என்ன வல்லவன் பூங்குவளை**
**இருட்டுறை நீர்வயல் நாவற் பதிக்குப் பிரான் அடைந்தோர்**
**மருட்டுறை நீக்கி நல்வான்வழி காட்டிட வல்லவனே.**

**நிதியார் துருத்திதென் வேள்விக் குடியாய் நினைமறந்த**
**மதியேற்கு அறிகுறி வைத்துப் புகர்பின்னை மாற்றிடென்று**
**துதியா அருள் சொன்னவாறு அறி வாரிடைப் பெற்றவன் காண்**
**நதியார் புனல்வயல் நாவலர் கோனென்னு நற்றவனே.**

நந்திக்கு நம்பெரு மாற்குநல் லாரூரில் நாயகற்குப்
பந்திப் பரியன செந்தமிழ் பாடிப் படர்புனலின்
சிந்திப் பரியன சேவடி பெற்றவன் சேவடியே
வந்திப் பவன்பெயர் வன்தொண்டன் என்பரிவ் வையகத்தே.

துணையும் அளவும்இல் லாதவன் தன்னரு ளேதுணையாக்
கணையும் கதிர்நெடு வேலுங் கறுத்த கயலிணையும்
பிணையும் நிகர்த்தகண் சங்கிலி பேர் அமைத் தோள் இரண்டும்
அணையு மவன்திரு ஆரூர னாகின்ற அற்புதனே.

கூற்றுக் கெவனோ புகல்திரு வாரூரன் பொன்முடிமேல்
ஏற்றுத் தொடையலும் இன்னடைக் காயும் இடுதருமக்
கோல்தொத்து கூனனும் கூன்போய்க் குருடனும் கண்பெற்றமை
சாற்றித் திரியும் பழமொழி யாமித் தரணியிலே.

பல்லவை செங்கதி ரோனைப் பறித்தவன் பாதம் புகழ்
சொல்லவன் தென்புக லூர் அரன் பால்துய்ய செம்பொன் கொள்ள
வல்லவன் நாட்டியத் தான்குடி மாணிக்க வண்ணனுக்கு
நல்லவன் தன்பதி நாவலூர் ஆகின்ற நன்னகரே.

கொடுத்தான் முதலைகொள் பிள்ளைக்கு உயிரன்று புக்கொளியூர்த்
தொடுத்தான் மதுர கவி அவி நாசியை வேடர் சுற்றம்
படுத்தான் திருமுரு கன்பூண் டியினிற் பராபரத்தேன்
மடுத்தான் அவனென்பர் வன்தொண்ட னாகின்ற மாதவனே.

தருமகட் பேசினோன் வீயவே நூல்போன சங்கிலிபால்
புகுமணக் காதலி னால்ஒற்றி யூருறை புண்ணியன் தன்
மிகுமலர்ப் பாதம் பணிந்தரு ளாலிவ் வியனுலகம்
நகும்வழக் கேநன்மை யாப்புணர்ந் தான் நாவ லூரரசே.

செழுநீர் வயல்முது குன்றினில் செந்தமிழ் பாடிவெய்ய
மழுநீள் தடக்கையன் ஈந்தபொன் ஆங்குக்கொள் ளாதுவந்து
பொழில்நீள் தருதிரு வாரூரில் வாசியும் பொன்னுங் கொண்டோன்
கெழுநீள் புகழ்த்திரு வாரூரன் என்றுநாம் கேட்பதுவே.

ஞானஆ ரூரரைச் சேரரை அல்லது நாமறியோம்
மானவ ஆக்கை யொடும்புக் கவரை வளரொளிப்பூண்
வானவ ராலும் மருவற் கரிய வடகயிலைக்
கோனவன் கோயில் பெருந்தவத் தோர் தங்கள் கூட்டத்திலே.

### சடையனார்

தலம் விளங் கும்திரு நாவலூர் தன்னில் சடையனென்னும்
குலம் விளங் கும்புக ழோனை உரைப்பர் குவலயத்தில்
நலம் விளங் கும்படி நாம்விளங் கும்படி நற்றவத்தின்
பலம் விளங் கும்படி ஆரூரனைமுன் பயந்தமையே.

### இசைஞானியார்

பயந்தாள் கறுவுடைச் செங்கண்வெள் ளைப்பொள்ளல் நீள்பனைக்கைக்
கயந்தான் உகைத்தநற் காளையை என்றும் கபாலங்கைக் கொண்டு
அயந்தான் புகும்அரன் ஆரூர்ப் புனித அரன்திருத்தாள்
நயந்தாள் தனதுஉள்ளத்து என்றும் உரைப்பது ஞானியையே.

## II) உமாபதி சிவாசாரியார் அருளிய திருத்தொண்டர் புராண சாரத்தில் சுந்தரரைப் பற்றியன

தண்கயிலை யதுநீங்கி நாவ லூர்வாழ்
சைவனார் சடையனார் தனய னாராய்
மண்புகழ அருட்டுறையான் ஓலை காட்டி
மணம்விலக்க வன்தொண்டாய் அதிகை சேர்ந்து
நண்பினுடன் அருள்புரிய ஆரூர் மேவி
நலங்கிளரும் பரவைதோள் நயந்து வைகித்
திண்குலவும் விறன்மிண்டர் திறங்கண் டேத்தும்
திருத்தொண்டத் தொகை அருளாற் செப்பீ னாரே.

செப்பலருங் குண்டையூர் நெல்ல ழைத்துத்
திருப்புகலூர்ச் செங்கல்செழும் பொன்னாச் செய்து
தப்பில்முது குன்றார்தரும் பொருள் ஆற் றிட்டுத்
தடத்தெடுத்துச் சங்கிலிதோள் சார்ந்து நாதன்
ஒப்பில்தனித் தூதுவந்தா றூடு கீறி
உறுமுதலை சிறுமதலை உமிழ நல்கி
மெய்ப்பெரிய களிறேறி அருளாற் சேர
வேந்தருடன் வடகயிலை மேவி னாரே.

### சடையனார்

சங்கையிலா அரன்மறையோர் நாவ லூர்வாழ்
தவரதிபர் தம்பிரான் தோழ ராய
எங்கள்பிரான் தவநெறிக்கோர் இலக்கு வாய்த்த
இசைஞானி யார்தனயர் எண்ணார் சிங்க

மங்கையர்கள் தொழும்பரவை மணவாள நம்பி
வந்துதித்த மாதவங்கள் வருந்திச் செய்தார்
வெங்கண் அரா விளங்கும்இளம் பிறைசேர் சென்னி
விடையினார் அருள்சேர்ந்த சடையி னாரே.

**இசைஞானியார்**

**நாவல் திருப்பதிக்கோர் செல்வச் சைவ**
**நாயகமாம் சடையனார் நயந்த இன்பப்**
**பூவைக் குலமடந்தை பொற்பார் கொம்பு**
**புனிதமிகு நீறணிந்து போற்றி செய்தே**
**ஆவில் திகழ்தலைவன் வலிய ஆண்ட**
**ஆரூரர் அவதரிக்க அருந்தவங்கள் புரிந்தார்**
**யாவர்க்கும் எட்டாத இசைந்த இன்ப**
**இசைஞானி எனஞானம் எளிதாம் அன்றே.**

**III) சிவப்பிரகாசர் அருளிய நால்வர் நான்மணி மாலையில் சுந்தரரைப் பற்றியன**

**படியிலா நின்பாட்டில் ஆரூர**
**நனிவிருப்பன் பரமன் என்பது**
**அடியனேன் அறிந்தனன் வான்தொழும்**
**ஈசனினைத் தடுத்தாட் கொண்டுமன்றித்**
**தொடியுலா மென்கைமட மாதர்பால்**
**நினக்காகத் தூது சென்றும்**
**மிடியிலா மனைகடொறும் இரந்திட்டும்**
**உழன்றமையால் விளங்குமாறே.**

**அறிந்து செல்வம் உடையானாம்**
**அளகைப் பதியான் தோழமை கொண்டு**
**உறழ்ந்த கல்வி உடையானும்**
**ஒருவன் வேண்டும் எனஇருந்து**
**துறந்த முனிவர் தொழும் பரவை**
**துணைவா நினைத்தோ ழமைகொண்டான்**
**செறிந்த அறிவு வடிவமாய்த்**
**திகழும் நுதற்கட் பெருமானே.**

**வாங்குசிலை புரையும் உடல் எனும்குளத்தில் மூல**
**மலமெனும் ஓர் வெங்கரவின் பகுவாயில் நின்றும்**
**தீங்கில்உயி ரெனும் பனவக்குலமகனை ஆதி**

திரோதாயி எனும்ஒரு வெந்திறற்கூற் றுவனால்
ஓங்குறுநா தாந்தம்எனப் பெயரியஅக் கரையில்
உமிழ்வித்துச் சிவமெனுமோர் தந்தையொடுங்கூட்டாய்
கோங்கமுகை கவற்றுமிள முலைப்பரவை மகிழக்
குண்டையூர் நென்மலைமுற் கொண்டஅருட் கடலே.

நோக்குறு நுதலோன் நின்னிடை விருப்பால்
நூற்பகவு அன்னநுண் மருங்குல்
வார்க்குவி முலைமென் மகளிர்தம் புலவி
மாற்றுவான் சென்றனன் என்றால்
கோக்கலிக் காமன் வயிற்றிடைக் குத்திக்
கொண்டதேதுக்கு நீ புகலாய்
காக்கரு மதலை விழுங்கிய முதலை
கான்றிடத் தோன்று நாவலனே.

உனற்கு அரும்புகழ் மேவிய சுந்தரன் உம்பல் மீதுஇவரா
நினைப்பருங் கயிலாயம் அடைந்தமை நின்று காண்குறவே
எனக்கு வந்துறுமோ மகவுஎன்று அழுகின்ற நாள் அலைபால்
தனித்த ருந்துபு மாலை உமிழ்ந்திடு தம்பிரான் நலனே.

அரசன் பரிமேல் வரநெடுநல்
யானை எருத்தத்து அமர்ந்துபோய்
வரதன் கயிலை மலை அடைந்த
மணியே! மணிநீர் இடுபசும்பொன்
திரைசங்கு எறியும் குளத்துவரச்
செங்கல் செம்பொ னாப்பாடும்
பரிசின்று எனக்கு உன்செம்பவளத்
திருவாய் மலர்ந்து பகர்வாயே.

போதமுண்ட பிள்ளையென்பு பொருகண் மாது செய்ததோ
காதல்கொண்டு சொல்லின்மன்னர் கல்மிதப்ப உய்த்ததோ
வாய்திறந்து முதலைகக்க மகனை நீ ரழைத்ததோ
யாதுநம்பி அரிதுநன்று எனக்கியம்ப வேண்டுமே.

பாவாய்ப் பொழிந்த வானமுதப்
பவளத் திருவாய் நம்பிநீ
சேவாய்ப் பொருதும் தருமமுடைத்
தேவன் மலைக்குப் போம்பொழுது
காவாய்ப் பயந்த தடக்கை மலர்க்
கழறிற் றறிவார் கடாவிவரும்

மாவாய்ப் பிறக்கக் கிடையாதே
மாவாய்ப் பிறக்குந் திருமாற்கே.

செல்வநல் ஒற்றி யூரன்
செய்யசங் கிலியால் ஆர்த்து
மல்லலம் பரவை தன்னுள்
மாழ்குற அமிழ்த்து மேனும்
அல்லுதன் பகலும் நீங்காது
அவன் மகிழ்அடியில் எய்தி
நல்ல இன்பு அடைந்திருப்பன்
நம்பி ஆரூரன் தானே.

பெருமிழலைக் குறும்பரெனும் பரமயோகி
பெரிதுவந்துன் திருவடித்தா மரையைப் போற்றி
விரைமலர்தூய் வந்தனைசெய் கின்றானென்றால்
விளங்கிழையார் இருவரொடும் முயங்கலாமோ
உரைமதிநின் றனைவெறுப்ப தென்கொனினை
உடையானுக் கடுத்தசெயல் உனக்குமாயின்
சுரர்முனிவர் பரவலுறும் பெருஞ் சீர்த்தொண்டத்
தொகைசெய்தோய் அறமுதல்நால் வகைசெய்தோயே.

### IV) வள்ளலார் அருளிய ஆளுடைய நம்பிகள் அருள்மாலையில் சுந்தரரைப் பற்றியன

**மதியணிசெஞ் சடைக்கனியை மன்றுள் நடம்புரி மருந்தைத்**
**துதியணிசெஞ் சுவைப் பொருளில் சொல்மாலை தொடுத்தருளி**
**விதியணி மாமறை நெறியும் மெய்ந்நிலை ஆகம நெறியும்**
**வதியணிந்து விளங்க வைத்த வன்தொண்டப் பெருந்தகையே.**

**நீற்றிலிட்ட நிலையாப் புன் னெறியுடையார் தமைக்கூடிச்**
**சேற்றிலிட்ட கம்பமெனத் தியங்குற்றேன் தனை ஆளாய்**
**ஏற்றிலிட்ட திருவடியை எண்ணி அரும் பொன்னை எல்லாம்**
**ஆற்றிலிட்டுக் குளத்தெடுக்க அருட்டலைமைப் பெருந்தகையே.**

**இலக்குளநீர் அழைத்து அதனில் இடங்கர்உற அழைத்து அதன்வாய்த்**
**தலைக்குதலை மதலை உயிர் தழைப்ப அழைத்தருளிய நின்**
**கலைக்கும் வடகலையின் முதற்கலைக்கும் உறுகணக்குஉயர்பொன்**
**மலைக்கும் அணுநிலைக்கும் உறா வன்தொண்டப் பெருந்தகையே.**

வேதமுதற் கலைகளெலாம் விரைந்து விரைந்து அனந்தமுறை
ஓத அவைக்கு அனுத்துணையும் உணர்வரிதாம் எம்பெருமான்
பாதமலர் நினது திருப் பணி முடிமேற் படப்புரிந்த
மாதவம் யாது உரைத்தருளாய் **வன்தொண்டப் பெருந்தகையே.**

**ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதாய் என்னுடைய**
**தோழனுமாய் என்றுமுன் நீ சொன்ன பெருஞ் சொற்பொருளை**
**ஆழநினைத் திடில் அடியேன் அருங்கரணம் கரைந்துகரைந்து**
**ஊழியல் இன்புறுவதுகாண் உயர்கருணைப் பெருந்தகையே.**

**வான்காண இந்திரனும் மாலயனும் மாதவரும்**
**தான் காண இறைஅருளால் தனித்தவள யானையின்மேல்**
**கோன் காண எழுந்தருளிக் குலவியநின் கோலமதை**
**நான் காணப் பெற்றிலனே நாவலூர்ப்பெருந்தகையே.**

**தேன்வடிக்கும் அமுதாம் உன் திருப்பாட்டைத் தினந்தோறும்**
**நான்படிக்கும் போது என்னை நானறியேன் நா ஒன்றோ**
**ஊன்படிக்கும் உளம்படிக்கும் உயிர்படிக்கும் உயிர்க்குயிரும்**
**தான் படிக்கும் அனுபவங்காண் தனிக்கருணைப் பெருந்தகையே.**

**இன்பு ஆட்டுத் தொழிற் பொதுவில் இயற்றுகின்ற எம்பெருமான்**
**உன்பாட்டுக்கு உவப்புறல் போல் ஊர்பாட்டுக் குவந்திலர்என்று**
**என்பாட்டுக்கு இசைப்பினும் என் இடும் பாட்டுக் கரணமெலாம்**
**அன்பு ஆட்டுக்கு இசைவதுகாண் அருட்பாட்டுப் பெருந்தகையே.**

**பரம்பரமாம் துரியமெனும் பதத்திருந்த பரம் பொருளை**
**உரம்பெறத் தோழமைகொண்ட உன்பெருமை தனை மதித்து**
**வரம்பெற நல் தெய்வமெலாம் வந்திக்கும் என்றால் என்**
**தரம்பெற என் புகல்வேன் நான் தனித்தலைமைப் பெருந்தகையே.**

**பேரூரும் பரவைமனப் பிணக்கறஎம் பெருமானை**
**ஊரூரும் பலபுகல ஓரிரவில் தூதன் எனத்**
**தேரூரும் திருவாரூர்த் தெருவுதொறும் நடப்பித்தாய்**
**ஆரூர நின்பெருமை அயன்மாலும் அளப்பரிதே.**

# சுந்தரமூர்த்தி சுவாமிகள் செந்தமிழ்ச் செய்யுளியல்

- பேராசிரியர் ம.வே. பசுபதி

**சு**ந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிய திருப்பனுவல்களின் தொகுப்பு சைவத் திருமுறைகளில் ஏழாம் திருமுறையாக அமைந்துள்ளது. ஏழாம் திருமுறையின் திருப்பதிகங்கள் 100, பனுவல்கள் 1026. தமிழ் இலக்கணங்களுக்கு – குறிப்பாகச் செய்யுள் இலக்கணங்களுக்குத் தேவாரவாசிரியர்கள் புதியனவும் சிறப்பானவையுமான பல நுட்பங்களை வழங்கியுள்ளனர். அவ்வகையில் சுந்தரமூர்த்தி சுவாமிகளின் பங்களிப்பும் கணிசமான அளவில் உள்ளன.

சுந்தரமூர்த்தி சுவாமிகளின் திருப்பனுவல்கள், ஆசிரியப்பா இனங்கள், கலிப்பா, அதன் இனங்கள் ஆகிய நிலைகளில் அமைந்துள்ளன.

ஆசிரியப்பாவின் இனங்களாகிய ஆசிரியத்துறை, ஆசிரிய விருத்தங்கள் ஆகிய வகைகளில் 53 திருப்பதிகங்கள் ஏழாம் திருமுறையுள் உள்ளன. ஆசிரிய விருத்தங்களில் அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தங்கள், எழுசீர் கழிநெடிலடி ஆசிரிய விருத்தங்கள், எண்சீர் கழிநெடிலடி ஆசிரிய விருத்தங்கள் என இம்மூவகைகளிலும் சந்த விருத்தங்கள் பல உள்ளன.

கலிப்பாவில் தரவு கொச்சகங்களும், கலிப்பா இனங்களில் கட்டளைக் கலித்துறை, கலிவிருத்தம் ஆகியனவும் உள்ளன. கலிவிருத்தங்களில் பல, சந்த விருத்தங்களாக உள்ளன.

## ஆசிரியத் துறைகள்

செய்யுள் இனங்களைத் தாழிசை, துறை, விருத்தம் என்ற நிரலில் குறிப்பிடுவதே மரபாகும். சுந்தரரின் செந்தமிழ்ப் பதிகங்களில் ஆசிரியத் தாழிசைகள் இல்லை. ஆசிரியத் துறைப் பதிகங்களாக 87, 88 எண்களுள்ள திருப்பதிகங்கள் உள்ளன. இவ்விரண்டு பதிகங்களைத் தவிர எஞ்சிய 51 திருப்பதிகங்களும் மூவகை ஆசிரிய விருத்தப் பதிகங்களே.

முதலடியும் மூன்றாம் அடியும் சீரெண்ணிக்கையில் அளவொத்து வந்து, இரண்டாமடியும் நான்காமடியும் சீரெண்ணிக்கையில் அளவு குறைந்து வருவது ஆசிரியத்துறை ஆகும். இரண்டாமடியின் சீரெண்ணிக்கையே நான்காமடியிலும் இருத்தல் சிறப்பாகும். எண்பத்தேழாம் எண்ணுள்ள திருப்பதிகத்தின் திருப்பனுவல் ஒன்றைப் பார்க்கலாம். (7–87–1)

| | | |
|---|---|---|
| அடி 1 | மாட மாளிகை கோபு ரத்தொடு<br>மண்ட பம்வள ரும்வ ளர்பொழில்.... | 8 சீர்கள் |
| அடி 2 | பாடல் வண்டறை யும்பழ னத்திருப் பனையூர்... | 5 சீர்கள் |
| அடி 3 | தோடு பெய்தொரு காதி னிற்குழை<br>தூங்கத் தொண்டர்கள் துள்ளிப் பாடநின்... | 8 சீர்கள் |
| அடி 4 | றாடு மாறுவல் லாரவ ரேய ழகியரே | 5 சீர்கள் |

என்னுமித் திருப்பனுவலில் முதலடியிலும் மூன்றாமடியிலும் எட்டெட்டுச் சீர்களும், இரண்டாமடியிலும் நான்காமடியிலும் ஐந்தைந்து சீர்களும் வந்துள்ளமை காண்க. மூன்றாமடியின்

ஆறாம்சீர் "தொண்டர்கள்" எனத் தேமாங்காய்ச் சீராக உள்ளது. எஞ்சிய அனைத்துச் சீர்களும் ஆசிரிய உரிச்சீர்களே. விளங்கனிச் சீர்கள் (கூவிளங்கனி, கருவிளங்கனி) வரலாகாது. எஞ்சிய எல்லாம் ஆசிரியத்துள் மயங்கும். அன்றியும் காய்ச்சீர் விளச்சீருக்குச் சமம் எனத் தேவாரவாசிரியர்கள் செய்கையால் அறிவித்த யாப்பிலக்கணக் குறிப்பின்படியும் இஃது ஒக்கும். கூவிளம் என்பதிலும் தேமாங்காய் என்பதிலும் ஒற்று நீக்கி மூன்றெழுத்துக்களே உள்ளமை அறிக.

கூவிளச்சீருக்குத் தேமாங்காய்ச்சீர், ஒற்று நீக்கி எழுத்தெண்ணிக்கையால் சமன்படும். புளிமாங்காய் (நான்கெழுத்து) கூவிளங்காய் (நான்கெழுத்து) கருவிளங்காய் (ஐந்தெழுத்து) என்னும் சீர்கள் கூவிளம் (மூன்றெழுத்து) என்னும் சீருக்குச் சமனாகாது. சுந்தரர் அவற்றை விளச்சீருக்குச் சமனாகும்படி அமைக்க வேறோர் நுட்பத்தைக் கையாண்டார். ஒருபனுவற் சான்று காண்போம். (7–88–6)

அடி 1 எறிந்த சண்டி இடந்தகண் ணப்பன்
ஏத்து பத்தர்கட் ஏற்றம் நல்கினீர்

8 சீர்கள் : ஒற்றுநீக்கி 21 எழுத்துகள்

அடி 2 செறிந்த பூம்பொழில் தேன்துளி வீசும் திருமிழலை

5 சீர்கள் : ஒற்றுநீக்கி 16 எழுத்துகள்

அடி 3 நிறைந்த அந்தணர் நித்த நாள்தொறும்
நேசத் தாலுமை பூசிக் கும்மிடம்

8 சீர்கள் : ஒற்றுநீக்கி 21 எழுத்துகள்

அடி 4 அறிந்து வீழிகொண்டீரடியேற்கும் அருளுதிரே

5 சீர்கள் : ஒற்றுநீக்கி 16 எழுத்துகள்

இவ்ஆசிரியத்துறைப் பனுவலில், திருமிழலை அருளுதிரே என்னுமிரு காய்ச்சீர்கள் விளச்சீருக்கு எழுத்தெண்ணிக்கையால் சமனாகவில்லை எனினும் ஐந்து சீர்களாலான இரண்டாமடியும் நான்காமடியும் பதினாறு பதினாறு எழுத்துக்களாக அமைந்து சமனாகின்றன. இப்படிச் சமன் செய்யும் அழகைப் பின்னர் வந்த யாப்பு நூலாசிரியர்கள், ஏனோ அறிந்து அறிவித்திலர் ?

## அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தங்கள்

ஆறுசீர்களாலான நான்கடிகளைக் கொண்ட ஆசிரிய விருத்தப்பா அறுசீர் ஆசிரிய விருத்தம் எனப்பெறும். ஓரடிக்கு நான்கு சீர்கள் என்பதே சரியான அளவு. அதனால் நான்கு சீர்களைக் கொண்ட அடிகளை அளவடிகள் என்பர். ஐந்து சீர்கள் கொண்ட அடி, நெடிலடி எனப் பெறும். நெடில் – நீளம். ஓரடிக்கு ஐந்து சீர்களுக்கு மேற்படின் கழிநெடிலடி எனப்பெறும். கழிநெடில் – மிகுந்த நீளம். ஓரடிக்கு ஆறு சீர்கள் கொண்ட செய்யுள் கழிநெடிலடிச் செய்யுளாகும். ஓரடிக்கு ஏழுசீர்கள். எண் சீர்கள் கொண்டவையும் அவற்றிற்கும் மேற்பட்ட சீர்களைக் கொண்டவையும் கழிநெடிலடிச் செய்யுட்களேயாகும்.

கழிநெடிலடிச் செய்யுட்களில் முதலடியில் அமைந்த சீர்க் கட்டளையே எஞ்சிய

மூன்றடிகளிலும் இருக்கும். இனிக் கட்டளை அமைத்துக்கொண்டு செய்யுள் செய்தல் பற்றிப் பார்ப்போம். ஏழாம் திருமுறையுள் எட்டாம் திருப்பதிகத்திற்கான கட்டளை.

விளம் – மா – தேமா
விளம் – மா – தேமா

என்பதாகும். விளச்சீர்களில் கூவிளமும் வரலாம். கருவிளமும் வரலாம். மாச்சீர்களில் தேமாவும் வரலாம். புளிமாவும் வரலாம். தேமா என்ற கட்டளையில் தேமாச்சீர் மட்டுமே வரவேண்டும். அங்கே புளிமாச்சீர் வரலாகாது. முதலடியில் முதற்சீர் கூவிளம் எனத் தொடங்கினால், எஞ்சிய மூன்றடி களின் முதற்சீர்களும் கூவிளமாகவே அமையவேண்டும். அதேபோல முதலடியின் முதற்சீர் கருவிளம் எனத் தொடங்கினால் எஞ்சிய மூன்றடிகளின் முதற்சீர்களும் கருவிளமாகவே அமைய வேண்டும்.

ஊன்மிசை உதிரக் குப்பை
ஒருபொரு ளிலாத மாயம்
மான்மறித் தனைய நோக்கின்
மடந்தைமார் மதிக்கும் இந்த
மானுடப் பிறவி வாழ்வு
வாழ்வதோர் வாழ்வு கண்டேன்
ஆனல்வெள் ஏற்ற ஆரூர்
அப்பனே அஞ்சி னேனே **(7–8–2)**

இப்பனுவலில் நான்காமடியின் முதற்சீர் (ஆனல்வெள்) தேமாங்காய்ச் சீராக உள்ளது. இது விளச்சீருக்குச் சமம். இந்நுட்பம் முன்னரும் எழுதப்பட்டது.

ஒவ்வோரடியிலும் இரண்டாம் எழுத்து ஒரே எழுத்தாக அமைவது எதுகை. இப்பனுவலில் ன், னு, ன என்பன எதுகை எழுத்துகளாக உள்ளன. இவை னகர வர்க்கம் என்ற ஒரே வர்க்க எழுத்துகள். எனவே இவற்றை வர்க்க எதுகை என்பர்.

முப்பதாம் திருப்பதிகத் திருப்பனுவல்களுக்கான கட்டளை,

காய் – காய் – காய்
காய் – மா – மா

என்பதாகும்.

முட்டாமே நாள்தோறும் நீர்மூழ்கிப்
பூப்பறித்து மூன்று போதும்
கட்டார்ந்த இண்டைகொண் டடிசேர்த்தும்
அந்தணர்தம் கருப்ப றியலூர்க்
கொட்டாட்டுப் பாட்டாகி நின்றானைக்
குழகனைக் கொகுடிக் கோயில்
எட்டான மூர்த்தியை நினைத்தபோ
தவர்நமக் கினிய வாறே **(7–30–3)**

இப்பனுவலில் மூன்றாமடியின் நான்காம் சீரும், நான்காமடியின் 2, 3, 4 சீர்களும் காய்ச் சீர்கட்கு இணையாக வந்த விளச்சீர்கள். இரண்டாமடியின் இரண்டாம் சீரில் வரும் ஐகாரத்தைக் குறுக்கமாகக் கொள்ளாமல் அலகுகாரியம் செய்யின் அது காய்ச்சீரேயாகும்.

கனிச்சீர்களை ஆசிரியவிருத்தக் கட்டளைகட்கு உட்படுத்துவது அரிதினும் அரிதாகும். கனிச்சீர்களைக் கட்டளையாக்கினால், விளங்கனிச் சீர்கள் இடைப்புகுந்து, "விளங்கனி வந்து ஆம்சீரடையா அகவலகத்து" என்னும் விதிக்கு மாறாகிக் கவிதை சிதையுமோ எனும் அச்சம் எம்போலியர்க்கு எழும். கூவிளங்கனி கருவிளங்கனிச் சீர்கள் கலவாமல், தேமாங்கனி, புளிமாங்கனிச் சீர்கள் மட்டுமே விரவுமாறு, அமைத்தருளிய 42 ஆம் திருப்பதிகக் கட்டளை,

கனி – விளம் – காய்
கனி – விளம் – காய்

என்பதாகும். இக்கட்டளையிலமைந்த திருப்பனுவல் ஒன்றைக் காண்போம்.

தொழுவார்க்கெளி யாய்துயர் தீரநின்றாய்
சுரும்பார்மலர்க் கொன்றைதுன் றுஞ்சடையாய்
உழுவார்க்கரி யவ்விடை யேறியொன்னார்
புறந்தீஎழ ஓடுவித் தாய்அழகார்
முழவாரொலி பாடலொ டாடலறா
முதுகாடரங் காநட மாடவல்லாய்
விழவார்மறு கில்வெஞ்ச மாக்கூடல்
விகிர்தாஅடி யேனையும் வேண்டுதியே (7–42–6)

இப்பனுவலில் நான்காமடியின் இரண்டாம்சீர் விளச்சீருக்குச் சமமாக வந்த காய்ச்சீர்.

42ஆம் எண்ணுள்ள திருப்பதிகத் திருப்பனுவல்களினால், பூச்சீர்காய்ச் சீருக்கிணையானதே என்ற நுட்பத்தையும் தண்பூச்சீர் கனிச்சீருக்குச் சமமாக வரலாம் என்ற நுட்பத்தையும் யாப்புலகிற்கு சுந்தரமூர்த்தி சுவாமிகள் வழங்கியருளினர். இத்திருப்பதிகத்தின் பத்தாம் திருப்பனுவலில் இந்நுட்பங்கள் அமைந்த சீர்களைப் பார்ப்போம்.

1. வடிவேற்கண்நல் – புளிமாந்தண்பூ – இது புளிமாங்கனிக்குச் சமனாயிற்று. (5 எழுத்துக்கள் என்ற ஒற்றுமை)
2. பத்தும்வல்லார் – தேமாந்தண்பூ – இது புளிமாங்காய்ச் சீருக்குச் சமனாக வந்தது. (நான்கெழுத்துகள் என்ற ஒற்றுமை)

மேலும், கருவிளங்காய்ச்சீர் புளிமாங்கனிச்சீருக்கு எழுத்தெண்ணிக்கையால் சமனாதலையும் இப்பத்தாம் திருப்பனுவல் வாயிலாக அறிவித்தருளினார். அச்சீர் வருமாறு;

வனப்பகையப் – கருவிளங்காய் – இது புளிமாங்கனிக்குச் சமனாகிறது.
(ஐந்தெழுத்துக்கள் என்ற ஒற்றுமை)

இக்காலத்தில் அறுசீர், எட்டுச்சீர், ஆசிரிய விருத்தங்கள் செய்வோர், முதலில் வரும் அரையடிக்கு வகுத்துக் கொள்ளும் கட்டளையையே, பின் அரையடிக்கும் கொள்வர். இம்முறையைக் கட்டளை மடக்கு என்பர். **8, 42**ஆம் எண்களுள்ள திருப்பதிகங்கள் கட்டளை மடக்கில் அமைந்தவை எனப் பார்த்தோம். **30**ஆம் எண்ணுள்ள திருப்பதிகத்திருப் பனுவல்கள் முதல் நான்கு சீர்களுக்கு ஒரு கட்டளையும், பின்னிரு சீர்கட்குப் பிறிதொரு கட்டளையுமாக அமைந்தவை. **47**ஆம் எண்ணுள்ள திருப்பதிகக் கட்டளை,

மா – மா – மா
மா – மா – காய்

என முதலைந்து சீர்கட்கு ஒருகட்டளையும் ஆறாம் சீருக்கு வேறு கட்டளையுமாக அமைந்துள்ளது.

தேனைக் காவல் கொண்டு
விண்ட கொன்றைச் செழுந்தாராய்
வானைக் காவல் கொண்டு
நின்றார் அறியா நெறியானே
ஆனைக் காவில் அரனே
பரனே அண்ணா மலையானே
ஊனைக் காவல் கைவிட்
டுன்னை உகப்பார் உணர்வாரே. **(7–47–7)**

என்னுமிப் பனுவல் மேற்காண் கட்டளையிலமைந்தது. மேலும் தான தான தான தான தான தனதானா என்னும் குழிப்புடைய சந்தப்பனுவலும் ஆகும். இதே கட்டளையில் **95**ஆம் எண்ணுள்ள திருப்பதிகமும் அமைந்துள்ளது.

அறுசீர், முடுகியல் சந்தக் கழிநெடிலடி ஆசிரிய விருத்தங்களாக அமைந்த திருப்பதிகத்தின் எண் **49.** இத்திருப்பதிகத்தின் கட்டளை,

மா – விளம் – மா – விளம்
மா – காய்

என்பதாகும். இக்கட்டளையில் அமைந்த பனுவலொன்றைக் காண்போம்.

கொடுகு வெஞ்சிலை வடுக வேடுவர்
விரவ லாமைசொல்லித்
திடுகு மொட்டெனக் குத்திக் கூறைகொண்
டாற லைக்குமிடம்
முடுகு நாறிய வடுகர் வாழ்முரு
கன்பூண்டி மாநகர்வாய்
இடுகு நுண்ணிடை மங்கை தன்னொடும்
எத்துக் கிங்கிருந்தீர் ? – எம்பிரானிரே **(7–49–1)**

– இத்திருப்பனுவலில், கன்பூண்டி என்ற சீர், புளிமாவுக்கு இணையாக வந்த தேமாங்காய்ச்சீர். எம்பிரானிரே என்பதே சரியான பாடம்.

எம்பிரானிரே, என்ற கூவிளங்கனிச்சீர், கட்டளை நிறைவு பெற்ற பிறகு வந்த விளியாதலின் தனித்துத் தரப்பட்டுள்ளது. இவ்வாறு வருதலை யாப்பிலக்கண நூலார் கூன் என்பர். கூன் என்னும் புறஉறுப்பு பாடல் பொருள் முழுவதும் தழுவியதாய், பாடலின் இலக்கணத்திற்கு மிகையாகத் தனித்து வருவது. ஓரசையும் கூனாக வரும் என்பார் தொல்காப்பியர். ஈண்டுச் சொற்சீர் கூனாக வந்துள்ளது. 'கூனெனினும் தனிச்சொல் எனினும் ஒக்கும்' என்பார் குணசாகரர். அவ்வாறு கொள்ளின் அசையும் கூனாகும் என்னும் தொல்காப்பிய இலக்கணத்திற்கு முரணாகுமாதலின் அக்கருத்துப் பொருந்தாது.

பொருளோ டடிமுதல் நிற்பது கூன்; அதுவே பொருந்தி
இருள்சேர் விலாவஞ்சி ஈற்றினும் நிற்கும்.

என்பது யாப்பருங்கலக் காரிகையின் கருத்து. அது தொல்காப்பியத்திற்கு ஒப்ப முடிந்ததே ஆயினும், தொல்காப்பியருக்குக் காலத்தால் பிற்பட்டு அவதரித்த சுந்தரரின் கருத்தை உளங்கொள்ளாததே யாகும். "இலக்கியம் கண்டு அதற்கு இலக்கணம் இயம்ப வேண்டும்" என்ற நியதி அமிதசாகரர்க்கு இல்லை போலும்.

கூன் என்பது மேற்புறம் வளைந்த பாத்திரத்தைக் குறிக்கும். மடைநூற் கலைஞர்கள் அதனைச் 'சாம்பார் வாளி' என்பர். அதன் கூன்பகுதியை மூக்கு என்பர்.

எம்பிரானிரே என்ற கூன், பனுவல் கருத்தை முழுவதும் தழுவி வருவதாகும். விளிப்பொருளில் வந்த சொற்சீர். இவ்விளி இல்லையெனில் யாரிடம் தெரிவிக்கிறார் என விளங்கிக் கொள்ளவியலாது. வஞ்சிப் பாவுள் மட்டுமன்றி ஆசிரியத்திலும் பனுவலின் ஈற்றில் கூன் வந்து பொருள் தழுவும் என்பது சுந்தரர் சுவாமிகளின் செந்தமிழால் யாப்புலகிற்குக் கிடைத்த இலக்கணக் கொடையாகும்.

ஏழாம் திருமுறையின் **52**, **53**, **77**ஆம் எண்களுள்ள அறுசீர்க் கழி நெடிலடி ஆசிரிய விருத்தத் திருப்பதிகங்கள்.

மா – மா – காய்
மா – மா – காய்

ஒரே கட்டளையில் அமைந்துள்ளன. இது கட்டளை மடக்கு. குழந்தைப் பாக்கள் புனையும் இக்காலக் கவிஞர்கள் இக்கட்டளையிலேயே பெரும்பாலான கவிதைகளைப் புனைகின்றனர்.

**49**ஆம் திருப்பதிகத்தில் 'எம்பிரானிரே' எனச் சொற்சீர் கூனாக வந்ததுபோல **73**ஆம் எண்ணுள்ள திருப்பதிகத்தில் அசை, கூன் ஆதலும் உரித்தே என்ற தொல்காப்பிய விதிக்கொப்ப 'அவர்' என்ற நிரையசை இடையில் கூனாக வந்தது. பனுவலின் தொடக்கத்திலும் இன்றி, பனுவல் நிறைந்த பிற்பாடுமின்றிப் பனுவலின் எந்த அடியை ஒட்டிக் கூன்வரினும் இது இடைக்கூன் ஆகும். ஓரசையே வந்தமையால் அதனைத் தனிச்சொல் எனலாகாது. கட்டளைக்கு மிக்கு முன்பின் உள்ள செய்திகளை அவ்அசைதழுவுகிறது. பதினொரு பனுவல்களைக் கொண்ட

இத்திருப்பதிகத்தில் பத்துப்பனுவல்களில் அவர் என்னும் நிரையசைக் கூன் உள்ளது. இத்திருப்பதிகக் கட்டளை,

மா – மா – மா
விளம் – விளம் – மா

என்பதாகும். இக்கட்டளை கொண்ட முதல் திருப்பனுவல்,

கரையும் கடலும் மலையும்
காலையும் மாலையும் எல்லாம் ஒற்று நீக்கி 17 எழுத்துகள்
உரையில் விரவி வருவான்
ஒருவனு ருத்திர லோகன் ஒற்று நீக்கி 17 எழுத்துகள்
வரையின் மடமகள் கேள்வன்
வானவர் தானவர்க் கெல்லாம் ஒற்று நீக்கி 17 எழுத்துகள்
அரையன் இருப்பதும் ஆரூர் அவர்
எம்மையும் ஆள்வரோ கேளீர் ஒற்று நீக்கி 17 எழுத்துகள் **(7–73–1)**

என்பது. இதில் நான்காம் அடியின் முதல் மூன்று சீர்களும் நிறைவானபின் அவர் என்பது மிகுந்து வருகிறது. எனவே 'அவர்' என்பது அசைக்கூன் எனப்படும்.

உருத்திர லோகனாகவும், மடமகள் கேள்வனாகவும், அரையனாகவும் இருக்கும் அவர் – என முன்னைய செய்திகளைத் தழுவுவதுடன், அவர் எம்மையும் ஆள்வாரோ எனப் பின்னரும் தழுவுவதால் அவர் என்னும் நிரையசை, கிடைக்கூன் ஆகிறது.

மாச்சீர்கள் இருக்கவேண்டிய ஈரிடங்களில் மடமகள் இருப்பதும் என இரண்டு விளச்சீர்கள் உள்ளன. அடிதோறும் 17 எழுத்துக்களே வந்து இவற்றைச் சமன் செய்கின்றன.

75, 76 ஆம் எண்களுள்ள திருப்பதிகங்கள் மா–விளம்–மா–விளம்–விளம்–மா என்னும் ஒரே கட்டளையில் அமைந்தவை.

90 ஆம் எண்ணுள்ள திருப்பதிகம்,

காய் – காய் – காய் – காய்
மா – தேமா

என்னும் கட்டளைப்படியான பனுவல்களைக் கொண்ட திருப்பதிகமாகும். ஒரு பனுவற் சான்று பார்ப்போம்.

நரியார்தம் கள்ளத்தால் பாங்கான பரிசொழிந்து
நாளும் உள்கித்
திரியாத அன்பராய்ச் சென்றுமுன் னடிவீழும்
சிந்தை யாரைத்
தரியாது தருமனார் தமர்செக்கி லிடும்போது
தடுத்தாட் கொள்வான்

பெரியோர்கள் புலியூர்ச்சிற் றம்பலத்தெம் பெருமானைப்
பெற்றா மன்றே **(7–90–3)**

இப்பனுவலுள் இரண்டாமடியின் இரண்டு, மூன்றாம் சீர்கள் காய்ச்சீர்கட்கு இணையாக வந்த விளச்சீர்கள்.

**குறுந்தாண்டகங்களோ ?**

அப்பரடிகளின் ஆறாம் திருமுறை, தாண்டகத் திருமுறை என்பதை யாவரும் அறிவர். அப்பரடிகள் வடமொழித் தாண்டக இலக்கணத்தைச் சற்றும் தழுவாது, முற்றுமாய்த் தமிழுக்கெனத் தனியாகத் தாண்டக இலக்கணம் வகுத்துக்கொண்டு திருப்பனுவல்கள் அருளினார். அவர் தோற்றிய இலக்கணப்படி ஆறுசீர்கள் கொண்ட எழுத்தெண்ணுநிலைப் பனுவல்கள் குறுந்தாண்டகங்கள் எனப்பெறும். எட்டுச்சீர்கள் கொண்ட எழுத்தெண்ணுநிலைப் பனுவல்கள் நெடுந்தாண்டகங்கள் எனப்பெறும்.

அப்பரடிகளின் காலத்துக்குப் பின்னே அவதரித்து, திருஞானசம்பந்த சுவாமிகளையும், திருநாவுக்கரசு சுவாமிகளையும் வெகுவாகப் போற்றிக் கொண்டாடியவர் சுந்தரமூர்த்தி சுவாமிகள். அவர், அப்பரடிகள் தமிழுக்கெனத் தனியே உருவாக்கியருளிய யாப்பியலை ஆங்காங்கே பின்பற்றியிருத்தல் கூடும். இக்கருத்துருவாக்கத்தின் அடிப்படையில் தேடல் செய்தால் சுந்தரர் அருளிய திருப்பதிகங்களில் 2, 3, 4, 9 எண்களுள்ள திருப்பதிகங்கள் குறுந்தாண்டகப் பதிகங்கள் எனக் கருத இடமுண்டு. இவ்வண்ணமே, 32ஆம் எண்ணுள்ள திருப்பதிகத் திருக்குறுந்தொகை எழுத்தெண்ணுநிலைப் பதிகங்களாகக் கருதலாம். அதனைக் கலிவிருத்தம் என்னும் சிறுதலைப்புள் காண்போம்.

ஏழாம் திருமுறையின் இரண்டாம் திருப்பதிகத்தில் நேரசையில் தொடங்கும் பனுவல்கள் ஒன்பது. நிரையசையில் தொடங்கும் பனுவல்கள் இரண்டு. நேரசையில் தொடங்கும் பனுவல்கள் ஓரடிக்கு ஒற்றுநீக்கி இருபத்து மூன்றெழுத்துக்கள் உடையன. நிரையசையில் தொடங்கும் பனுவல்கள் ஓரடிக்கு ஒற்று நீக்கி இருபத்து நான்கெழுத்துகள் உடையன.

மூன்றாம் திருப்பதிகத்தில் ஆறு பனுவல்கள் நேரசையிலும், நான்கு பனுவல்கள் நிரையசையிலும் தொடங்குகின்றன. இடையீரடிகளில் ஒவ்வொரெழுத்துக் குறைதல், ஓரடியில் ஒரெழுத்துக் குறைதல், இடையிட்டு ஒவ்வொரெழுத்துக் குறைதல், மூவடிகளில் ஒவ்வோரெழுத்துக் குறைதல் என்பனவாகிய தமிழ்த் தாண்டக அமைப்புகளும் இப்பதிகப் பனுவல்களில் உள்ளன.

நான்காம் திருப்பதிகத்தில் நேரசையில் தொடங்கும் பனுவல்கள் நான்கு. நிரையசையில் தொடங்கும் பனுவல்கள் ஆறு. இவை, இரண்டாம் திருப்பதிகம் போலவே எழுத்தெண்ணிக்கை உடையன.

ஒன்பதாம் திருப்பதிகத்தில் நேரசையில் தொடங்கும் பனுவல்கள் நான்கு. நிரையசையில் தொடங்குவன ஏழு. இவை, இரண்டு நான்காம் பதிகங்களைப் போலவே எழுத்தெண்ணிக்கை உடையன. இத்திருப்பதிக நான்காம் திருப்பனுவல் நிரையில் தொடங்கி 22, 23, 23, 23 என்ற எழுத்தெண்ணிக்கை உடையதாகும்.

தாண்டகச் செய்யுட்களுக்குக் கட்டளை, கூடுதல் சிறப்பாகுமேயன்றிக் கட்டாயமின்று. எனினும் இந்நான்கு திருப்பதிகங்களும்,

கனி – விளம் – காய்
கனி – விளம் – காய்

என்னும் ஒரே கட்டளையுடையன. ஒன்பதில் ஆறாம் பனுவல்

விளம் – விளம் – காய்
விளம் – விளம் – காய்

என்னும் கட்டளை கொண்டது. இணைச்சீர்கள் மிக்குள்ளன.

ஓரடிக்கு ஒற்று நீங்க 23 எழுத்துகள் பெற்ற திருப்பனுவலுக்குச் சான்று. (7–3–1)

| அடி எண் | பனுவல் | ஒற்று நீக்கி எழுத்துக்கள் |
|---|---|---|
| 1. | கல்வாய்அகி லுங்கதிர் மாமணியும் கலந்துந்திவ ரும்நிவ வின்கரைமேல் | 23 |
| 2. | நெல்வாயில ரத்துறை நீடுறையும் நிலவெண்மதி சூடிய நின்மலனே | 23 |
| 3. | நல்வாயில்செய் தார்நடந் தார் உடுத்தார் நரைத்தாரிறந் தாரென்று நானிலத்தில் | 23 |
| 4. | சொல்லாய்க்கழி கின்றத றிந்தடியேன் தொடர்ந்தேனுய்யப் போவதோர் சூழல்சொல்லே. | 23 |

இணைச்சீர்கள் மிக்குவரினும் எழுத்தெண்ணிக்கை, சமன்படுதலினால் அச்சிறப்புக் கருதியும் இத்திருப்பதிகங்களை (2, 3, 4, 9) குறுந்தாண்டகப் பதிகங்கள் எனக் கொள்ளும் கருத்து வலுப்பெறுகிறது.

ஓரடிக்கு ஒற்று நீங்க 24 எழுத்துக்கள் பெற்ற பனுவலுக்குச் சான்று. (7–4–8)

| அடி எண் | பனுவல் | ஒற்று நீக்கி எழுத்துக்கள் |
|---|---|---|
| 1. | வெறுத்தேன்மனை வாழ்க்கையை விட்டொழிந்தேன் விளங்குங்குழைக் காதுடை வேதியனே | 24 |
| 2. | இறுத்தாய்இலங் கைக்கிறை யாயவனைத் தலைபத்தொடு தோள்பல இற்றுவிழக் | 24 |
| 3. | கறுத்தாய்கடல் நஞ்சமு துண்டுகண்டம் கடுகப்பிர மன்தலை ஐந்திலுமொன் | 24 |
| 4. | றறுத்தாய்கட லங்கரை மேல்மகோதை அணியார்பொழில் அஞ்சைக்க ளத்தப்பனே | 24 |

–ஆக, ஏழாம் திருமுறையுள் 8, 30, 42, 47, 49, 52, 53, 73, 75, 76, 77, 90, 95 ஆகிய எண்களுள்ள பதின்மூன்று திருப்பதிகங்கள் அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தத் திருப்பதிகங்கள் எனவும், 2, 3, 4, 9 எண்களுள்ள நான்கு திருப்பதிகங்கள் குறுந்தாண்டகத் திருப்பதிகங்களாகக் கொள்ளத்தக்கவை எனவும் அறியலாம்.

## எழுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தங்கள்

ஏழுசீர்களைக் கொண்ட அடி, கழிநெடிலடி ஏழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தங்களாக ஏழாம் திருமுறையுள் பத்துத் திருப்பதிகங்கள் உள்ளன. அத்திருப்பதிகங்களின் எண்கள் வருமாறு, 10, 14, 15, 33, 34, 35, 36, 41, 38, 69 இவற்றுள் 10, 15 எண்களைக் கொண்ட இரு திருப்பதிகங்களைத் தவிர, எஞ்சிய எட்டுத் திருப்பதிகங்களும் சந்தவிருத்தத் திருப்பதிகங்களே யாகும்.

14, 69 எண்களுள்ள திருப்பதிகங்கள்,

விளம் – மா – விளம் – மா
விளம் – விளம் – மா

என்னும் ஒரே கட்டளையில் அமைந்த திருப்பதிகங்கள் ஒரு சான்று காண்போம்.

நம்பனே அன்று வெண்ணெய்நல் லூரில்
நாயினேன் தன்னைஆட் கொண்ட
சம்புவே உம்ப ரார்தொழு தேத்தும்
தடங்கடல் நஞ்சுண்ட கண்டா
செம்பொன்மா ளிகைசூழ் திருமுல்லை வாயில்
தேடியான் திரிதர்வேன் கண்ட
பைம்பொனே அடியேன் படுதுயர் களையாய்
பாசுப தாபரஞ் சுடரே. (7–69–8)

இப்பனுவலில் ஐந்து இடங்களில் இணைச்சீர்கள் வந்துள்ளன. அவற்றுள் இரண்டிடங்கள் திருத்தலப் பெயர்கள். கட்டளைக்காகத் திருத்தலப் பெயர்களை இடைக்குறை செய்வதோ சுருக்குவதோ இவருக்கு உடன்பாடன்று என்ற நுட்பத்தையும் கூடுதல் தகவலாக அறிதல் தகும்.

33, 34, 35, 36, 48 எண்களுள்ள திருப்பதிகங்கள்,

மா – விளம் – மா – விளம்
மா – மா – விளம்

என்னும் ஒரே கட்டளையில் அமைந்தவை.

செந்த மிழ்த்திறம் வல்லி ரோசெங்கண்
அரவம் முன்கை யிலாடவே

வந்து நிற்குமி தென்கொ லோபலி
　　மாற்ற மாட்டோ மிடகிலோம்
பைந்தண் மாமலர் உந்து சோலைகள்
　　கந்தம் நாறுபைஞ் ஞீலியீர்
அந்தி வானமும் மேனி யோசொலும்
　　ஆர ணீய விடங்கரே. **(7–36–4)**

என்பது மேற்காண் கட்டளைப் பனுவலுக்கோர் சான்றாகும். முதலடியின் நான்காம்சீர் விளச்சீருக்கு இணையாக வந்த காய்ச்சீர். எஞ்சிய நான்கு திருப்பதிகங்களும் இவ்வாறே கட்டளை கொண்டுள்ளமையைக் கண்டுகொள்க.

பத்தாம் எண்ணுள்ள திருப்பதிகத்தின் கட்டளை,

மா – விளம் – விளம் – விளம்
　　மா – விளம் – காய்

என்பதாகும். இதற்குச் சான்றாக ஒரு திருப்பனுவலைக் காண்போம்.

தேனெய் புரிந்துழல் செஞ்சடை எம்பெரு
　　மான திடந்திகழ் ஐங்கணையக்
கோனை எரித்தெரி யாடிஇ டம்குல
　　வான திடங்குறை யாமறையா
மானை இடத்ததொர் கையனி டம்மத
　　மாறு படப்பொழி யும்மலை போல்
ஆனை யுரித்தபி ரானதி டங்கலிக்
　　கச்சி அனேகதங் காவதமே. **(7–10–1)**

என்னுமித் திருப்பனுவல் இணைச்சீர்களின்றி முழுவதும் கட்டளைப்படியே அமைந்த திருப்பனுவலாகும்.

அச்சுப்பிரதிகளில், பொருளுணர்தற்கு எளிமை செய்யும் விதமாகப் பலவற்றைச் சொற் சீர்களாகப் பதிப்பித்திருப்பர். கட்டளைப் பொருத்தம் பார்க்கும் நோக்கில், அவற்றை ஏற்றபெற்றி வகையுளிகள் செய்துகொள்ள வேண்டும். இப்பதிகத்தில் ஓரடியைச் சான்றாகப் பார்ப்போம்.

அச்சில்

'வீடு பெறப்பல ஊழிகள் நின்று
நினைக்கும் இடம்வினை தீர்க்குமிடம்' **(7–10–10)**

இதில் உள்ளபடியே வைத்து அலகு காரியம் செய்தால், நான்காம் சீர் (நின்று) தேமாச்சீர் எனல் வேண்டும். அங்கே இருக்கவேண்டிய சீர், விளச்சீர். ஐந்தாம் சீரின் முதலெழுத்தை நான்காம் சீரோடு இணைத்தால் விளச்சீராகும்.

'வீடு பெறப்பல ஊழிகள் நின்றுநி
னைக்கு மிடம்வினை தீர்க்குமிடம்'

என அமைத்துக் கட்டளைப் பொருத்தத்தைச் சுவைக்கலாம்.

பதினைந்தாம் திருப்பதிகக் கட்டளை,

மா – விளம் – விளம் – மா
மா – விளம் – மா

என்பதாகும். இதற்குப் பனுவற் சான்றொன்று காண்போம்.

பூணாண் ஆவதோர் அரவங்கண் டஞ்சேன்
புறங்காட் டாடல்கண் டிகழேன்
பேணா யாகிலும் பெருமையை உணர்வேன்
பிறவே னாகிலும் மறவேன்
காணா யாகிலும் காண்பனென் மனத்தால்
கருதா யாகிலும் கருதி
நானேல் உன்னடி பாடுத லொழியேன்
நாட்டி யத்தான்குடி நம்பீ **(7–15–1)**

இப்பனுவலில் முதலடியிலேயே இரண்டு இணைச்சீர்கள் வந்துள்ளன. அவற்றை விளச்சீர்கட்கு இணையாக வந்த காய்ச்சீர்களாகக் கொள்ளாமல்,

விளம் – விளம் – காய் – மா
மா – காய் – மா

என்பதே கட்டளை எனக்கொண்டால் எஞ்சிய மூன்றடிகளும் முன்னர்க் கட்டளையாகவே உள்ளதனோடு மாறுபடும். எனவே அவற்றை (அரவங்கண், டாடல்கண்) இணைச்சீர்களாகக் கொள்வதே ஏற்புடையதாகும். ஈற்றடியின் ஆறாஞ்சீர் தேமாங்கனிச் சீராக உள்ளது. கட்டளைக்காகத் தலத்திருப்பெயரைச் சுருக்கவோ மாற்றவோ செய்வதில்லை என்ற கருத்து முன்னரும் குறிக்கப்பட்டுள்ளது.

41ஆம் எண்ணுள்ள திருப்பதிகத்தின் கட்டளை,

மா – மா – மா – மா
மா – மா – காய்

என்பதாகும். ஒரு சான்று வருமாறு

மேலை விதியே விதியின் பயனே
விரவார் புறமூன் றெரிசெய்தாய்
காலை எழுந்து தொழுவார் தங்கள்
கவலை களைவாய் கறைக்கண்டா

மாலை மதியே மலைமேல் மருந்தே
மறவேன் அடியேன் வயல்சூழ்ந்த
ஆலைக் கழனிப் பழனக் கச்சூர்
ஆலக் கோயில் அம்மானே. (7–41–5)

இத்திருக்கச்சூர்த் திருப்பதிக இரண்டாம் திருப்பனுவலின் முதலடி

கச்சேர் அரவொன் றரையில் அசைத்துக்
கழலும் சிலம்பும் கலித்துப்பலிக்கென்

என அமைந்துள்ளது. ஏழாம் சீர் காய்ச்சீராக வரவேண்டும். ஆயின் புளிமா நறும்பூச் சீராக உள்ளது. "கண்ணிய பூவிளம் காய்ச்சீரனைய" என்பது பிற்கால யாப்பிலக்கண நூலார்க்கும் ஒப்ப முடிந்த கருத்தாகும். அவ்விலக்கணம் இத்தேவாரச் சான்றுகளால் உண்டானது எனலாம்.

## எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தங்கள்

ஏழாம் திருமுறையாகிய நூறு திருப்பதிகங்களில் இருபத்தைந்து திருப்பதிகங்கள் எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தப் பாக்களாலானவை. இத்திருமுறையின் காற்பங்களவுக்கு இவ்வகைப் பனுவல்களைக் கொண்ட பதிகங்கள் இருப்பதுடன் அவை யாவையும் ஐந்தே கட்டளைகளில் அடங்குவது வியப்புக்குரிய செய்தியாகும். அதனினும்,

மா – விளம் – விளம் –மா
மா – விளம் – விளம் –மா

என்னும் ஒரே கட்டளையில் 54, 55, 56, 57, 59, 60, 61, 62, 64, 65, 66, 67, 68, 70 என்னும் எண்களுள்ள பதினான்கு திருப்பதிகங்கள் அமைந்திருப்பது பெருவியப்புக்குரியதாகும்.

ஒரு திருப்பதிகத்தின் முதற்பனுவலுக்கு அமைந்த கட்டளை எதுவோ அதுவே எஞ்சிய திருப்பனுவல்களிலும் அமையவேண்டும் என்பது நியதியன்று. 67ஆம் திருப்பதிகத்தின் முதற்பனுவல்.

ஊனங் காத்துயிர்ப் பாய்உல கெல்லாம்
ஓங்கா ரத்துரு வாகிநின் றானை
வானங் கைத்தவர்க் கும்அளப் பரிய
வள்ள லையடி யார்கடம் உள்ளத்
தேனங் கைத்தமு தாகியுள் ளூறும்
தேச னைத்திளைத் தற்கினி யானை
மானங் கைத்தலத் தேந்தவல் லானை
வலிவ லந்தினில் கண்டுகொண் டேனே. (7–67–1)

என்பது இப்பனுவல் 'மா–விளம்–விளம்–மா–மா–விளம்–விளம்–மா' என்னும் கட்டளை கொண்டுள்ளது. இத்திருப்பதிகத்தின் பதினொரு பனுவல்களுள் 4, 7, 9, 11 ஆம் எண்ணுள்ள

பனுவல்கள் இதே கட்டளை கொண்டவை. 2, 3, 5, 6, 8, 10 ஆம் எண்ணுள்ள பனுவல்கள்,

விளம் – விளம் – விளம் – மா
விளம் – விளம் – விளம் –மா

என்னும் கட்டளையில் அமைந்தவை. அவற்றுள்ளும்

நல்லிசை ஞானசம் பந்தனும் நாவினுக்
கரையனும் பாடிய நற்றமிழ் மாலை
சொல்லிய வேசொல்லி ஏத்துகப் பானைத்
தொண்ட னேன்அறி யாமைய றிந்து
கல்லி யல்மனத் தைக்கசி வித்துக்
கழலடி காட்டியென் களைகளை அறுக்கும்
வல்லியல் வானவர் வணங்கநின் றானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. (7–67–5)

என்னும் பனுவலில் 'நாவினுக்' என மாச்சீருக்கு விளச்சீர் வந்துள்ளது. மேலும் மூன்றிடங்களில் விளச்சீர் வந்துள்ளது. இதனால் இப்பனுவலை இத்திருப்பதிகத்திற்குரிய இரண்டு கட்டளைகளும் விரவி வந்த திருப்பனுவல் எனல் வேண்டும். இதனைக் கட்டளைக்கலப்பு என்பது மரபிலக்கணம். மகுட அரையடி முதற்கட்டளைப்படியே உள்ளமையால், மா – விளம் – விளம் – மா – மா – விளம் – விளம் – மா என்னும் கட்டளைகளிலமைந்த பதினான்கு திருப்பதிகங்களில் ஒன்றாகச் சேர்க்க நேர்ந்தது.

காய் – காய் – காய் –மா
காய் – காய் – காய் –மா

என்னும் கட்டளையில் 16, 38, 39, 40, 46 என்னும் ஐந்து திருப்பதிகங்கள் ஏழாம் திருமுறையில் உள்ளன. இக்கட்டளையில் நான்காம் சீரும், எட்டாம் சீரும் புளிமாச் சீராகவும் அமையலாம். சான்றொன்று காண்போம்.

மறியேறு கரதலத்தீர் மாதிமையே லுடையீர்
மாநிதியம் தருவனென்று வல்லீராய் ஆண்டீர்
கிறிபேசிக் கீழ்வேளூர் புக்கிருந்தீர் அடிகேள்
கிறியுமாற் படுவேனோ திருவாணை யுண்டேல்
பொறிவிரவு நற்புகர்கொள் பொற்சுரிகை மேலோர்
பொற்பூவும் பட்டிகையும் புரிந்தருள வேண்டும்
கறிவிரவு நெற்சோறு முப்போதும் வேண்டும்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே. (7–46–10)

என்னுமித் திருப்பனுவலின் முதலடி நான்காம் சீர் உடையீர் என்றும், இரண்டாம் அடி நான்காம் சீர் அடிகேள் என்றும் புளிமாச்சீர்களாக வந்தமை காண்க.

இத்திருப்பதிகத்தில் மூன்றாம் திருப்பனுவலின் முதல் மூன்றடிகளில் முதற்சீர்கள் காய்ச்சீர்களாக வாராது விளச்சீர்களாக வந்துள்ளன. நான்கு மற்றும் எட்டாம் திருப்பனுவல்களிலும் அவ்வாறே வந்துள்ளன. அவற்றைக் கட்டளைக் கலப்பாகக் கொள்ளாமல், காய்ச்சீர்கட்கு இணையாக வந்த விளச்சீர்களாகக் கொள்ளவேண்டும்.

இக்கட்டளையில் அமைந்த 38–ஆம் எண்ணுள்ள திருவதிகைத் திருப்பதிகத்தின் மூன்றாமடி,

தம்மான்தன் அடிக்கொண்டென் முடிமேல்வைத் திடுமென்
னுமாசையால் வாழ்கின்ற அறிவிலா நாயேன்

என அச்சுப்பிரதிகளில் இருக்கும். இது பொருணர் திறனுக்கேற்பப் பதிப்பித்த முறை நான்காம் சீர் தேமா அல்லது புளிமாச் சீராக இருக்க வேண்டும் திருமென் என்பது வரை புளிமா. 'னும்' என்னும் நேரசை அடுத்த அரையடியில் வரவேண்டியதாகும். ஓலைச்சுவடிகளில் இடைவெளி இன்றியும் சீர்ப்பிரிப்பின்றியும் எழுதப்பட்டிருக்கும். யாப்பியல் நோக்கில்,

தம்மான்தன் அடிக்கொண்டென் முடிமேல்வைத் திடுமென்
னுமாசையால் வாழ்கின்ற அறிவிலா நாயேன்

என அமையும். இவ்வகையில் முதலரையடி கட்டளைப்படி அமையும். ஐந்தாம் சீரும் ஏழாம் சீரும் காய்ச்சீர்கட்கு இணைச்சீர்களாக வந்த விளச்சீர்கள். அவை இரண்டும் நன்னான்கெழுத்து களுடன் காய்ச்சீர்கட்கு இணையாகின்றன.

39ஆம் எண்ணுள்ள திருப்பதிகமாகிய திருத்தொண்டத் தொகையுள்ளும் இல்லையே, வெல்லுமா, அல்லிமென் (பனுவல் 1) செம்மையே, அம்மையான் (பனுவல் 3) என வருவனவும் காய்ச்சீர்கட்கு நிகராக வந்த விளச்சீர்களே. ஐந்தாம் திருப்பனுவலின் அடிமுதற் சீர்களாக வம்பறா, எம்பிரான், நம்பிரான், அம்பரான் என வருவனவும் இணைச்சீர்களே.

நாற்பதாம் திருப்பதிகமாகிய கானாட்டு முள்ளூர்த்திருப்பதிகத்தின் பதினொன்றாம் திருப்பனுவலில் அடிகளின் முதற்சீர்கள் நான்கும் விளச்சீர்களாகவே வந்து காய்ச்சீர்களுக்கு இணையாகின்றன. இப்பனுவலை வேறு கட்டளையுடையதாகக் கொள்ளலாகாது. அதாவது,

விளம் – காய் – காய் – மா
காய் – காய் – காய் –மா

எனக் கொள்ளலாகாது. அறுசீர் விருத்தங்களின் கட்டளைகள் முன்னரை அடிக்கு ஒன்றாகவும் பின்னரையடிக்கு வேறாகவும் அமைதல் கூடும். எண்சீர் விருத்தங்களில் முன் அரையடியின் கட்டளையே இரட்டித்து வரும் – கட்டளை மடக்காக வரும். இது மரபிலக்கணம் எனப்பெறும். திருநெடுந்தாண்டகங்கள் கட்டளையாப்பல்ல என்பதையும், கட்டளை உள்ளவை கூடுதல் சிறப்புடையவை என்பதையும் ஈண்டுக் கருதுதல் நலம்.

ஏழாம் திருமுறையுள் 58, 63, 74 என்னும் எண்களுள்ள மூன்று திருப்பதிகங்கள்,

விளம் – விளம் – விளம் – மா

விளம் – விளம் – விளம் – மா

என்னும் கட்டளையில் அமைந்த எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தப்பனுவல்களைக் கொண்டவை. இக்கட்டளையிலும் அடிதோறும் வரும் நான்காம் சீரும், எட்டாம் சீரும் தேமாவாகவும் இருக்கலாம். புளிமாவாகவும் இருக்கலாம்.

ஏழாம் திருமுறையுள் எட்டுச் சீர்களும் மாச்சீர்களாகவே உள்ள திருப்பதிகங்கள் இரண்டு. அவை **5, 6** ஆம் எண்களுக்குள்ளவை. ஐந்தாம் எண்ணுள்ள ஓணகாந்தன் தளிப் பதிகத்துள் சில இடங்களில் மாச்சீர்கட்குப் பதிலாக விளச்சீர்கள் உள்ளன.

உ–ம்.

நெய்யும் பாலும் தயிரும் கொண்டு
நித்தல் பூசனை செய்ய லுற்றார்
கையி லொன்றும் காண மில்லைக்
கழல டிதொழு துய்யி னல்லால்
ஐவர் கொண்டிங் காட்ட வாடி
ஆழ்கு ழிப்பட் டழுந்து வேனுக்
குய்யு மாறொன் றருளிச் செய்யீர்
ஓண காந்தன் தளியு ளீரே. **(7–5–1)**

இப்பனுவலில் 'பூசனை' என்பது கூவிளச்சீர். புளிமா என்பதில் ஒற்று நீக்கி மூன்றெழுத்துக்கள். பூசனை என்னும் கூவிளச் சீரும் ஒற்று நீக்கி மூன்றெழுத்துக்களே கொண்டுள்ளது. எனவே மாச்சீரின் ஓசையையே தந்து நிற்கிறது. ஆறாம் எண்ணுள்ள திருவெண்காட்டுத் திருப்பதிகத்தின் **10**ஆம் திருப்பனுவலும் கூவிளச் சீர்வந்து புளிமாச் சீரின் ஓசையைத் தந்துள்ளது.

ஏழாம் திருமுறையுள் எண்பத்து நான்காம் எண்ணுள்ள ஒரே பதிகம்

விளம் – காய் – விளம் – காய்
விளம் – காய் – விளம் – காய்

என்னும் கட்டளையில் அமைந்ததாகும். அச்சுப் பிரதிகளில் பொருளுணர்தற்கு எளிதாக்கும் வண்ணம் பதிப்பித்திருத்தலைக் கொண்டு அலகு காரியம் செய்தால்

மா – காய் – மா – காய்
மா – காய் – மா – காய்

என்ற கட்டளையும்,

மா – காய் – விளம் – காய்
மா – காய் – விளம் – காய்

என்ற கட்டளையும் வரையறையின்றி விரவுதல் போல் தோன்றும். அஃதன்று, திருப்பதிகம்

முழுவதும்,

விளம் – காய் – விளம் – காய்
விளம் – காய் – விளம் – காய்

என்ற ஒரு கட்டளையிலேயே நடக்கிறது. இஃதறிய ஏற்றபெற்றி வகையுளிகள் செய்துகொள்ள வேண்டும். சான்றுக்காக இருதிருப்பனுவல்கள் கட்டளைக்கொப்ப வகையுளிகள் செய்து தரப் பெற்றுள்ளன. அச்சுப் பிரதிகளுடன் ஒப்பிட்டுப் பொருந்துமாறுணர்க.

தொண்டர டித்தொழலும் சோதியி ளம்பிறையும்
சூதன மென்முலையாள் பாகமும் ஆகிவரும்
புண்டரி கப்பரிசாம் மேனியும் வானவர்கள்
பூசலி டக்கடல்நஞ் சுண்டக ருத்தமரும்
கொண்டலெ னத்திகழும் கண்டமும் எண்தோளும்
கோலந றுஞ்சடைமேல் வண்ணமும் கண்குளிரக்
கண்டுதொ ழப்பெறுவ தென்றுகொ லோவடியேன்
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. **(7–84–1)**

கூதலி டும்சடையும் கோளர வும்விரவும்
கொக்கிற கும்குளிர்மா மத்தமும் ஒத்துனதாள்
ஓதலு ணர்ந்தடியார் உன்பெரு மைக்குநினைந்
துள்ளுரு காவிரசும் ஓசையைப் பாடலு நீ
ஆதலு ணர்ந்தவரோ டன்புபெ ருத்தடியேன்
அங்கையின் மாமலர்கொண் டென்கண தல்லல்கெடக்
காதலு றத்தொழுவ தென்றுகொ லோவடியேன்
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. **(7–84–2)**

என இவ்வகையில் எஞ்சிய பனுவல்களையும் ஏற்றபெற்றி வகையுளிகள் செய்து கொள்ள வேண்டும். இதனால் விளம் – மா – விளம் – மா – விளம் – மா – விளம் – மா என்ற கட்டளை முற்றப் பொருந்துதலை உணரலாகும். அன்றியும் புறநீர்மைப் பண்ணொலி எளிதில் எழுதலையும் உணரலாம்.

இரண்டாம் திருப்பனுவலின் மூன்றாம் அடியிலுள்ள எட்டாம்சீர் தேமாங்கனிச்சீராக உள்ளது. அங்குக் காய்ச்சீர் இருக்கவேண்டும். புளிமாங்காய் கூவிளங்காய் ஆகிய சீர்கட்கு நான்கு, நான்கு எழுத்துக்கள். அல்லல்கெட என்பதில் ஒற்று நீக்கி நான்கெழுத்துக்களே உள்ளமையின் அந்தக் கனிச்சீர் காய்ச்சீருக்குச் சமனாகிறது.

## தரவு கொச்சகக் கலிப்பாக்கள்

கலிப்பா என்பது கலித்து எழும் ஓசை உடையது. கலித்து எழுதலாவது துள்ளுதல். கலிப்பாவுள் தேமா, கூவிளம்கனி, கருவிளங்கனி ஆகிய சீர்கள் வாரா. வெண்பா உரிச்சீர்களாகிய காய்ச்சீர்கள் வரும். அவற்றுள்ளும் புளிமாங்காய், கருவிளங்காய்ச்சீர்கள் மிக்கு வரும். ஓரடிக்கு

நான்கு சீர்கள் இருக்கும். கலித்தளையும் வெண்டளைகளும் விரவி வரும். பிற தளைகளும் வருதலுண்டு.

தரவு என்பது கொச்சகக் கலியின் முதலுறுப்பு. இது தனிச்சொல். சுரிதகம் என்னும் உறுப்புகளுடன் வந்தால் தரவு கொச்சகக் கலிப்பா எனப்பெறும். தனிச்சொல், சுரிதகம் என்னும் உறுப்புகளின்றித் தரவு மட்டுமே வரினும் தரவு கொச்சகக் கலிப்பாவேயாகும். இதனையே சிறந்ததாகக் கவிஞர்கள் கொண்டாடுகின்றனர். தேவார ஆசிரியர்களும் இவ்வகைக் கலிப்பாக்களையே அருளினர்.

ஏழாம் திருமுறையுள் 25, 29, 51, 86, 89 எண்களுள்ள திருப்பதிகங்கள் தரவு கொச்சகக் கலிப்பாக்களாலான திருப்பனுவல்கள் கொண்டவை.

பாடுவார் பசிதீர்ப்பாய் பரவுவார் பிணிகளைவாய்
ஓடுநன் கலனாக உண்பலிக் குழல்வோனே
காடுநல் லிடமாகக் கடுவிருள் நடமாடும்
வேடனே குருகாவூர் வெள்ளடை நீயன்றே. **(7–29–3)**

இப்பனுவலில் எட்டு விளச்சீர்களும், எட்டு காய்ச்சீர்களும் உள்ளன. இரண்டு கலித்தளைகள், ஆறு வெண்டளைகள், ஏழு நிரையொன்றாசிரியத் தளைகள் கொண்டது இப்பனுவல். பிற தளை விரவிய கலி.

ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதாய் என்னுடைய
தோழனுமாய் யான்செய்யும் துரிசுகளுக் குடனாகி
மாழையொண்கண் பரவையைத்தந் தாண்டானை மதியில்லா
ஏழையேன்பி ரிந்திருக்கேன் என்னாரூர் இறைவனையே. **(7–51–10)**

என்னுமித் திருப்பனுவலில் 16 சீர்களும் காய்ச்சீர்களே. இதனுள் ஆறுகலித்தளைகளும் ஒன்பது வெண்சீர் வெண்டளைகளும் உள்ளன.

பிழையுளன பொறுத்திடுவீர் என்றடியேன் பிழைத்தக்கால்
பழியதனைப் பாராதே படலமென்கண் மறைப்பித்தாய்
குழைவிரவு வடிகாதா கோயிலுளா யேஎன்ன
உழையுடையா னுள்ளிருந்து உளோம்போகீர் என்றானே. **(7–89–1)**

இப்பனுவலும் அனைத்தும் காய்ச்சீர்களே. இதனுள் எட்டுக் கலித்தளைகளும், ஏழு வெண்சீர் வெண்டளைகளும் உள்ளன.

விடையின்மேல் வருவானை வேதத்தின் பொருளானை
அடையில்அன் புடையானை யாவர்க்கும் அறிவொண்ணா
மடையில்வா ளைகள்பாயும் வன்பார்த்தான் பனங்காட்டூர்ச்
சடையிற்கங்கை தரித்தானைச் சாராதார் சார்வென்னே. **(7–86–1)**

இப்பனுவலின் இரண்டாமடியின் முதற்சீர் ‘அடையில்அன்’ என உள்ளது.

புள்ளியீற்றுமுன் உயிர்தனித்தியலாது;
மெய்யொடும் சிவணும், அவ்வியல் கெடுத்தே. தொல் – **138.**

என்னும் தொல்காப்பிய விதிப்படி, லகர ஒற்றின்மேல் அகரம் ஏறி அடையிலன் என்றாதல் வேண்டும். அவ்வாறு செய்கை செய்யின் கருவிளச்சீராகும். விளச்சீர் தரவு கொச்சகக் கலியில் வருவதற்குரியதேயாகும். அடையிலன் புடையானை என்பவற்றின் இடையில் நிரையொன்றாசிரியத்தளை வரும். அஃதும் ஒக்கும் எனினும், 'அடையிலன்' என்ற சொல் அடைதல் இல்லாதவன் என்பதன் சுருக்கமாகி ஆண்டைக்குப் பொருந்தாப் பொருளும், அடையாகிய சிறப்புச்சொல் ஏதும் இல்லாதவன் என இறைநிலைக்கு ஒவ்வாப் பொருளும் வரும். இவ்வாறு ஒவ்வாமையும், பொருந்தாமையுமாகிய பொருட்பேறுகள் தருதலைக் 'கவர் பொருட்பேறு' என்னும் கடும்குற்றமாக யாப்பு நூலார் இயம்புவர். எனவே அடையில் அன்(பு) என்பதே சரி.

இப்பனுவலின் நான்காம் அடியின் முதற்சீர் 'சடையிற்கங்கை' என உள்ளது. இது புளிமாந்தண்பூ, தரவு கொச்சகக் கலியில் கூவிளங்கனி, கருவிளங்கனி நீங்கலாக எஞ்சிய கனிச்சீர்கள் வரலாம். "கண்ணிய பூவினம் காய்ச்சீரனைய" என்பவாகலின் தளை பார்க்கும் போது "சடையிற்கங்கை" என்ற புளிமாந்தண்பூச்சீர், காய்ச்சீராகக் கொள்ளப்படும். அதனால் 'சடையிற் கங்கை தரித்தானை' என்னுமிடையில் ஒன்றாத வஞ்சித்தளை வந்ததாகக் கொள்ளாமல், கலித்தளை (காய் முன்நிரை) வந்ததாகக் கொள்ளலாம். இவ்வகையில் இப்பனுவலில் பத்துக்கலித்தளைகளும், ஐந்து வெண்சீர் வெண்டளைகளும் உளவாகின்றன.

**25**ஆம் எண்ணுள்ள திருமுதுகுன்றத் திருப்பதிகத்துள் **1,2,3,4,7** எண்களுள்ள ஐந்து திருப்பனுவல்கள் கட்டளைக் கலித்துறைகள்; எஞ்சிய ஐந்தும் தரவு கொச்சகங்கள். ஒரு பதிகத்துக்குள்ளே கட்டளை மாற்றங்கள் கொண்ட விருத்தப்பாக்களுண்டு. பாமாற்றம் இல்லை யாகையாலும், கட்டளைக் கலித்துறையாக எழுத்தெண்ணிக்கை உடைய மேற்காண் எண்களுள்ள பனுவல்களை தரவு கொச்சக வடிவிலும் காண இயல்வதாலும் அப்பதிகத்தைத் தரவு கொச்சகப் பதிகமாகவே கொள்ள நேர்ந்தது. ஒரு பனுவலை இரு வடிவிலும் பார்ப்போம்.

| பனுவல் எண் **1**<br>கட்டளைக் கலித்துறை வடிவம் (நேர் தொடக்கம்) | எழுத்தெண்ணிக்கை<br>ஒற்று நீக்கி |
|---|---|
| பொன்செய்த மேனியி னீர்புலித் தோலை அரைக்கசைத்தீர் | **16** |
| முன்செய்த மூவெயிலும் மெரித்தீர்முது குன்றமர்ந்தீர் | **16** |
| மின்செய்த நுண்ணிடை யாள்பர வையிவள் தன்முகப்பே | **16** |
| என்செய்த வாறடி கேள்அடி யேன்இட் டளங்கெடவே | **16**<br>**(7–25–1)** |

இது, நேரசையில் தொடங்கி அடிதோறும் பதினாறெழுத்துகள் பெற்று ஒவ்வோரடியின் ஈற்றுச் சீரும் விளங்காய்ச் சீராக, வெண்டளைகளாலேயே தளைக்கப்பட்டிருத்தல் காண்க.

இப்பனுவலைத் தரவு கொச்சக வடிவில் காண்போம்.

> பொன்செய்த மேனியினீர் புலித்தோலை அரைக்கசைத்தீர்
> முன்செய்த மூவெயிலும் மெரித்தீர்முது குன்றமர்ந்தீர்
> மின்செய்த நுண்ணிடை யாள்பர வையிவள் தன்முகப்பே
> என்செய்த வாறடி கேள்அடி யேன்இட் டளங்கெடவே 7.25.1

இதில் ஐந்து கலித்தளைகளும் பத்து வெண்டளைகளும் உள்ளன. இவ்வடிவமே அச்சுப் பிரதிகளில் காணப்பெறும் வடிவமாகும்.

2,3,4,7 ஆம் திருப்பனுவல்களை இரு பாவகையிலும் வடிவமைத்துக் கண்டின்புறுக. ஓவிய, சிற்பக் கலைகளில் ஒன்றில் இரு வடிவங்களைக் காட்சிப்படுத்தி வியப்பூட்டுவதுண்டு. ஆனால் கவிதைக் கலையில் இவ்வதிசயத்தை நிகழ்த்த அவதாரிகைகளாகிய நம் ஆசாரியர்களாலேயே இயலும்.

## கட்டளை கலித்துறைகள்

கலித்துறைப் பனுவல்கள் ஐஞ்சீர்களாலானவை. கலித்துறைப் பனுவல்களில், சில கட்டளைகள் பொருந்திவரின் அவை கட்டளைக் கலித்துறை எனப்பெறும்.

நேரசையில் தொடங்கும் பனுவல்கள் ஒற்றுநீக்கிப் பதினாறெழுத்துகள் கொண்டிருக்க வேண்டும். நிரையில் தொடங்கும் பனுவல்கள் ஒற்றுநீக்கிப் பதினேழெழுத்துகள் கொண்டிருக்கவேண்டும் என்பதும், வெண்சீர் வெண்டளை இயற்சீர் வெண்டளை என்னும் இருதளைகளால் மட்டுமே தளைக்கப்பட்டிருக்க வேண்டும் என்பதும், அடிதோறும் ஐந்தாம்சீர் கூவிளங்காய் கருவிளங்காய்ச் சீர்களில் யாதானுமொன்றையோ, அவற்றிற் கொப்பான எழுத்தளவுள்ள சீரையோ கொண்டிருக்க வேண்டுமென்பதும் இன்றியமையாத கட்டளைகள் ஆகும். ஓரடியின் ஈற்றுச்சீருக்கும் அடுத்த அடியின் முதற்சீருக்குமாகத் தளை பார்க்க வேண்டியதில்லை.

ஏழாம் திருமுறையுள் 17, 18, 19 எண்களுள்ள திருப்பதிகங்கள் கட்டளைக் கலித்துறைத் திருப்பதிகங்களாகும். அவை,

| பதிக எண் | தலம் | நேர் தொடக்கமானவை | நிரை தொடக்கமானவை |
|---|---|---|---|
| 17 | திருநாவலூர் | 9 | 2 |
| 18 | வேள்விக்குடி, துருத்தி | 9 | 1 |
| 19 | திருநின்றியூர் | 10 | 1 |

என்றவாறுள்ளன. இவற்றுள் நேர் தொடக்கமான ஒரு கட்டளைக் கலித்துறை திருப்பனுவலைக் காண்போம்.

| | |
|---|---|
| தன்மையி னாலடி யேனைத்தாம் ஆட்கொண்ட நாட்சபைமுன் | 16 எழுத்துகள் |
| வன்மைகள் பேசிட வன்தொண்ட னென்பதோர் வாழ்வுதந்தார் | 16 எழுத்துகள் |
| புன்மைகள் பேசவும் பொன்னைத்தந் தென்னைப்போ கம்புணர்த்த | 16 எழுத்துகள் |
| நன்மையி னார்க்கிடம் ஆவது நம்திரு நாவலூரே | 16 எழுத்துகள் |

(7–17–2)

– அடியடி தோறும் ஐஞ்சீராகிக் கடையொடு சீரும் விளங்காயாகி ஒற்றுநீக்கி அடிதோறும் பதினாறெழுத்துக்களுடன் வெண்டளைகளே பெற்றனவாக இப்பனுவல் அமைந்திருத்தல் காண்க. இனி நிரைதொடக்கமானதொரு கட்டளைக் கலித்துறைப் பனுவலைக் காண்போம்.

| | |
|---|---|
| குறவனார் தம்மகள் தம்மக னார்மண வாட்டிகொல்லை | 17 எழுத்துகள் |
| மறவனா ராயங்கோர் பன்றிப்பின் போவது மாயங்கண்டீர் | 17 எழுத்துகள் |
| இறைவனார் ஆதியார் சோதியா ராயங்கோர் சோர்வுபடா | 17 எழுத்துகள் |
| அறவனா ராவ தறிந்தோமேல் நாமிவர்க் காட்படோமே | 17 எழுத்துகள் |

(7–18–6)

இத்திருப்பனுவலில் கட்டளைக் கலித்துறை இலக்கணங்கள் பொருந்தி அடிதோறும் ஒற்றுநீக்கிப் பதினேழெழுத்துக்கள் பெற்றுள்ளமை காண்க.

கட்டளைக் கலித்துறைக்குக் கோவைக்கலித்துறை எனவும் ஒரு பெயருண்டு. கோவை இலக்கியங்கள் இவ்வகைப் பாடல்களால் அமைவதால் கோவைக் கலித்துறை என்னும் பெயர் அமைந்தது.

### கலித்துறை

"ஐஞ்சீர் அடியின் அடித்தொகை நான்மையொடு
எஞ்சா தியன்றன எல்லாம் கலித்துறை"

என்பது காக்கை பாடினியார் நூற்பா. ஐஞ்சீரடி – நெடிலடி. நான்கு நெடிலடிகள் கொண்டது கலித்துறை. வேறெக்கட்டுப்பாடும் இதற்கில்லை. கதை பொதிபாடல்களாகிய காப்பியங்களில் இவ்வகைப் பனுவல்கள் வரும். அதனால் இவற்றைக் காப்பியக் கலித்துறை எனப் பிற்காலத்தார் குறிப்பதுண்டு. சிலம்பு, மேகலை, பெருங்கதை போன்ற காப்பியங்களில் ஆசிரியமே மிகுதி. இதிகாச புராணங்களில் ஆசிரிய விருத்தங்களே மிகுதி.

ஏழாம் திருமுறையுள் 12, 20, 21, 22, 23, 24, 26, 27, 28, 31, 43, 44, 45, 50, 81, 92, 97, 98, 99, 100 ஆகிய எண்களுள்ள இருபது திருப்பதிகங்கள் கலித்துறைப் பதிகங்களாகும். அவற்றுள் பண் இசைக்கேற்பப் பதிப்பித்த முறைமையால் கலிவிருத்த வடிவமே தோற்றாத பதிகங்கள் பதினொன்று. பதிகங்களின் எண்கள் வருமாறு; 20, 21, 22, 24, 26, 27, 28, 97, 98,

99, 100 என்பன. இவை பதினொன்றும் பண்ணிசைக்கேற்ற வடிவங்களில் உள்ளன. இவற்றில் முதலாறு பதிகங்கள் நட்டராகத்தில் அமைந்தவை. பின் நான்கு, பஞ்சமப்பண்ணில் அமைந்தவை.

**பண்ணுக்கேற்ற வடிவம்**

ஊழிதோ றூழிமுற்றும் உயர் பொன்நொடித் தான்மலையைச்
சூழிசை யின் கரும்பின் சுவை நாவல் ஊரன்சொன்ன
ஏழிசை இன்தமிழால் இசைந் தேத்திய பத்தினையும்
ஆழி கடலரையா அஞ்சை யப்பர்க் கறிவிப்பதே. (7–100–10)

**கலித்துறைக்கேற்ற வடிவம்**

ஊழிதோ றூழிமுற் றும் உயர் பொன்நொடித் தான்மலையைச்
16 எழுத்துகள், 4 வெண்டளைகள்
சூழிசை யின்கரும் பின்சுவை நாவல் ஊரன்சொன்ன
16 எழுத்துகள், 4 வெண்டளைகள்
ஏழிசை இன்தமி ழாலிசைந் தேத்திய பத்தினையும்
16 எழுத்துகள், 4 வெண்டளைகள்
ஆழி கடலரை யாஅஞ்சை யப்பர்க் கறிவிப்பதே
16 எழுத்துகள், 4 வெண்டளைகள்

இவ்வாறான வடிவம் செய்து கொண்டால் மேற்காண் பதினொரு பதிகங்களின் பனுவல்களும் கலித்துறைப் பனுவல்கள் என்பது தெற்றெனப் புலப்படும்.

கட்டளைக் கலித்துறையும், கலித்துறையும் வேறுவேறு பாவினங்களல்ல. அடிக்கு ஐந்து சீர் என அடுக்கிவரும் ஓரினமே. கலிவிருத்தப் பனுவல்களில் வெண்டளைகள் பொருந்தும் போது இயற்கையாகவே நேர் 16, நிரை 17 என்ற எழுத்தெண்ணிக்கையும் பொருந்தி வருதலுண்டு. அவ்வியல்பின்படி மேற்காண் பதினொரு பதிகங்களில் மிகப்பல கட்டளைக்கலித்துறைப் பனுவல்களும் விரவியுள்ளன. அவ்விவரம் காண்போம்.

இருபதாம் எண்ணுள்ள திருப்பதிகம் திருக்கோளிலித் திருப்பதிகம். அது கலித்துறைத் திருப்பதிகமேயாகும். அப்பதிகத்தின் முதற்பனுவலும் பத்தாம் பனுவலும் தவிர எஞ்சிய எட்டுத் திருப்பனுவல்களும் கட்டளைக் கலித்துறைப் பனுவல்களாகவே உள்ளன. சான்று

கலித்துறையாக உள்ள முதற்பனுவல்

நீள நினைந்தடி யேனுமை நித்தலும் கைதொழுவேன்
16 எழுத்துகள், 4 வெண்டளைகள்

வாளன கண்மட வாளவள் வாடி வருந்தாமே

15 எழுத்துகள், 4 வெண்டளைகள்

கோளிலி எம்பெரு மான்குண்டை யூர்ச்சில நெல்லுப்பெற்றேன்

16 எழுத்துகள், 4 வெண்டளைகள்

ஆளிலை எம்பெரு மானவை அட்டித் தரப்பணியே

16 எழுத்துகள், 4 வெண்டளைகள் (7–20–1)

இரண்டாமடியில் எழுத்தெண்ணிக்கை 15 ஆக உள்ளமையால் இது கலித்துறைப்பனுவல் எனப்பெறுகிறது. இத்திருப்பதிகத்தின் பத்தாம் பனுவலின் மூன்றாமடி.

நெல்லிட ஆட்கள் வேண்டிநினைந் தேத்திய பத்தும் வல்லார் (16 எழுத்துக்கள்) என உள்ளது. 'ஆட்கள் வேண்டி' என்பதனிடையில் நேரொன்றாசிரியத்தளை உள்ளது. வெண்டளை இல்லை. எனவே பத்தாம் திருப்பனுவலும் கலித்துறைப்பனுவலே.

**கட்டளைக் கலித்துறையாக உள்ள 2–9 திருப்பனுவல்களில் சான்றாக இரண்டாம் திருப்பனுவல் வருமாறு**

வண்டம ருங்குழ லாளுமை நங்கையோர் பங்குடையாய்

16 எழுத்துகள், 4 வெண்டளைகள்

விண்டவர் தம்புரம் மூன்றெரி செய்தஎம் வேதியனே

16 எழுத்துகள், 4 வெண்டளைகள்

தெண்டிரை நீர்வயல் சூழ்திருக் கோளிலி எம்பெருமான்

16 எழுத்துகள், 4 வெண்டளைகள்

அண்டம தாயவ னேஅவை அட்டித் தரப்பணியே

16 எழுத்துகள், 4 வெண்டளைகள் (7–20–2)

இவ்வண்ணமே 3–9 பனுவல்களையும் வடிவமைத்து எழுத்தெண்ணி, தளைப்பொருத்தங்கள் காண, அவை கட்டளைக் கலித்துறைகள் என்பது பெறப்படும்.

21ஆம் திருப்பதிகத்தை வடிவமைத்துச் சந்தக் கலித்துறை என அறிக.

22ஆம் எண்ணுள்ள பழமண்ணிப்படிக்கரைத் திருப்பதிகத்துள் 5, 10 திருப்பனுவல்கள் கலித்துறைகளாகவும் எஞ்சிய திருப்பனுவல்கள் கட்டளைக் கலித்துறைகளாகவும் உள்ளன.

24ஆம் எண்ணுள்ள திருமழபாடி திருப்பதிகத்துள் கட்டளை ஏதும் அமையவில்லை. இதன் பனுவல்களை நன்னான்கு சீர்களாக அமைக்கலாமெனினும் அதனாற் பாமாற்றம் நிகழாது. எனவே ஐயைந்து சீர்களாகவே வடிவமைத்துக்கொண்டு சந்தக்கலித்துறை என அறிதல் வேண்டும்.

26ஆம் எண்ணுள்ள காளத்தித் திருப்பதிகமும், 27ஆம் எண்ணுள்ள கற்குடித்

திருப்பதிகமும் நேரசையில் தொடங்கும் பனுவல்கள் 15 எழுத்துகளும், நிரையசையில் தொடங்கும் பனுவல்கள் 16 எழுத்துகளும் கொண்டுள்ளன. பலதளைகளாக விரவியுள்ளன. இப்பதிகங்களையும் சந்தக் கலித்துறைகள் எனல் வேண்டும். 28ஆம் எண்ணுள்ள கற்குடிப் பதிகமும் அவ்வண்ணமே அமைந்துள்ளது.

97ஆம் எண்ணுள்ள திருநனிபள்ளித் திருப்பதிகத்துள் 1, 7 எண்ணுள்ள திருப்பனுவல்கள் தவிர எட்டுத் திருப்பனுவல்களும் கட்டளைத் கலித்துறைப் பனுவல்களே.

98 ஆம் எண்ணுள்ள நன்னிலத்துப் பெருங்கோயில் திருப்பதிகத்துள் 3, 9, 11 ஆகிய திருப்பனுவல்கள் தவிர எட்டு திருப்பனுவல்களும் கட்டளைக் கலித்துறைப் பனுவல்களே.

99ஆம் திருநாகேச்சரப்பதிகம் சந்தக் கலித்துறைப்பதிகமாக உள்ளது.

திருமுறையின் ஏழாம் நிறைவுத் திருப்பதிகமாகிய திருநொடித்தான் மலைத்திருப்பதிகத்துள் 1, 4, 5, 6 ஆகிய திருப்பனுவல்கள் தவிர எஞ்சிய ஆறு திருப்பனுவல்களும் கட்டளைத் கலித்துறைகளே.

மேலெழுதிய பதினொரு பதிகங்களைச் சிலர் நன்னான்கு சீர்களையுடையனவாக வடிவமைத்துக் காண்பர். அதனாற் பயனொன்றுமின்று.

எஞ்சிய ஒன்பது பதிகங்களில் உள்ள பனுவல்களும் இனிய சந்த ஓசையுடையனவே. அவற்றின் சந்தச்சுவைக்கு ஒரு பாடற்சான்று காண்போம்.

> சித்தம் நீநினை என்னொடு சூள்அறு வைகலும்
> மத்த யானையின் ஈருரி போர்த்த மணாளன்ஊர்
> பத்தர் தாம்பலர் பாடிநின் றாடும் பழம்பதி
> பொத்தில் ஆந்தைகள் பாட்ட றாப்புன வாயிலே (7–50–1)

ஐந்து சீரடுக்கில் பல்வேறு சந்தவோசைகளை உருவாக்கலாம் எனும் சிறப்பை 31, 43, 44, 45, 81, 92 என்னும் எண்களுள்ள பதிகப் பனுவல்களால் அறியலாம்.

### கலிவிருத்தங்கள்

ஓரடிக்கு நான்கு சீர்கள் பெற்ற நாலடிப்பாட்டு, கலிவிருத்தம் எனப்படும்.

> "நாலொரு சீரான் நடந்த அடித்தொகை
> ஈரிரண் டாகி இயன்றன யாவையும்
> காரிகை சார்ந்த கலிவிருத் தம்மே"

என்பது காக்கை பாடினியம். நாற்சீர் நாலடிப் பாடல்கள் பலவாதலின், கலிவிருத்தம் கட்டளைப் பாக்களாகி வேறுபடுகிறது. கலிவிருத்தக் கட்டளைகள் துள்ளலோசையை எழுப்புவன.

தளைகளால் துள்ளலோசை எழுப்புவதற்கொப்பக் கட்டளைகளாலும் துள்ளலோசை எழும். கட்டளைகள் அமைத்துக்கொள்ளும் திறன் காரணமாக எழும் ஓசை, சந்த ஓசைகளாகவே மிளிரும். வெண்டளைகள் கலித்தளைகள் அமையப்பாடுதல் கூடுதல் சிறப்பாகும். தளைகள் அமைத்தல் கட்டாயமன்று.

சைவத்திருமுறைகள் பன்னிரண்டனுள் இரண்டு திருமுறைகள் (5, 10) கலிவிருத்தத் திருமுறைகள் என்பதே இப்பாவகைக்கு அமைந்த மிகுபெரும் சிறப்பாகும்.

ஏழாம் திருமுறையுள் 1, 7, 11, 13, 32, 37, 71, 72, 78, 79, 80, 82, 83, 85, 91, 93, 94, 96 என்னும் எண்களுள்ள பதினெட்டு திருப்பதிகங்கள் சந்தக் கலிவிருத்தத் திருப்பதிகங்களாக உள்ளன.

இப்பதினெட்டுத் திருப்பதிகங்களில் 1, 71, 78, 80, 82 என்னும் எண்கள் உள்ள ஆறு திருப்பதிகங்கள் கனி–கனி–கனி–மா என்னும் ஒரே கட்டளையில் உள்ளன. 91, 93, 94 என்னும் எண்களுள்ள மூன்று திருப்பதிகங்கள் மா–மா–மா–மா என்னும் ஒரே கட்டளையில் உள்ளன. 11, 72 என்னும் எண்களுள்ள இரண்டு திருப்பதிகங்கள் விளம் – விளம் – விளம் – மா என்னும் ஒரே கட்டளையில் உள்ளன. 83, 85 என்னும் எண்களிலுள்ள இரண்டு திருப்பதிகங்கள் விளம் – காய் – விளம் – காய் என்னும் ஒரே கட்டளையில் உள்ளன. எஞ்சிய ஐந்து திருப்பதிகங்களின் எண்களும் கட்டளைகளும் வருமாறு:

| | |
|---|---|
| பதிக எண் 7 | காய் – காய் – காய் – மா |
| பதிக எண் 13 | கனி – விளம் – விளம் – மா |
| பதிக எண் 32 | மா – காய் – காய் – மா |
| பதிக எண் 37 | விளம் – விளம் – விளம் – விளம் |
| பதிக எண் 96 | காய் – விளம் – காய் – விளம் |

சில சான்றுகள் காண்போம்.

கனி – கனி – கனி – மா என்னும் கட்டளைப் பனுவலுக்குச் சான்று.

பித்தாபிறை சூடிப்பெரு மானேயரு ளாளா
எத்தான்மற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னை
வைத்தாய்பெண்ணைத்* தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
அத்தாவுனக் காளாயினி யல்லேனென லாமே (7–1–1)

*இவ்வுடுக்குறியிட்ட சீர்கள், தேமாங்கனிக்கு இணையாக வந்த தேமாந்தண்பூச் சீர்கள். தேமாங்கனி என்னும் சீர் ஒற்றுநீக்கி நான்கெழுத்துகள் உடையது. தேமாந்தண்பூ என்பதும் ஒற்று நீக்கி நான்கெழுத்துகள் உடையது. எனவே கனிச்சீருக்குப் பூச்சீர் இணையாகிறது.

ஒப்பீட்டுக்கு உதவியாக இதே கட்டளையுடைய மற்றொரு திருப்பதிகத் திருப்பனுவலைக் காண்போம்.

<u>கனி கனி கனி மா</u>
வாழ்வாவது மாயம்மிது மண்ணாவது திண்ணம்
பாழ்போவது பிறவிக்கடல் பசிநோய்செய்த* பறிதான்
தாழாதறஞ் செய்மின்தடங் கண்ணான்மல ரோனும்
கீழ்மேலுற நின்றான்திருக் கேதாரமெ னீரே **(7–78–1)**

*இவ்வுடுக்குறியிட்ட புளிமாந்தண்பூச்சீர், புளிமாங்கனிச் சீருக்கு இணையாக வந்தது. புளிமாங்கனி என்னும் சீர் ஒற்றுநீக்க ஐந்தெழுத்துகளை உடையது. புளிமாந்தண்பூ என்னும் சீர் ஒற்று நீக்க ஐந்தெழுத்துகளை உடையது. எனவே கனிச்சீருக்கு இணையாகப் பூச்சீர் வந்தது. தாழாது என்பதில் உள்ள 'ழா' வர்க்க மோனை.

மா – மா – மா – மா என்னும் கட்டளைப் பனுவலுக்குச் சான்று;

என்ன தெழிலும் நிறையும் கவர்வான்
புன்னை மலரும் புறவில் திகழும்
தன்னை முன்னம் நினைக்கத் தருவான்
உன்னப் படுவான் ஒற்றி யூரே. **(7–91–4)**

இத்திருப்பனுவலில் **11, 11, 10, 9** என எழுத்தெண்ணிக்கை குறுமை அளவில் உள்ளன. **11, 11, 10** எனவரும் முதல் மூன்றடிகளின் எழுத்தெண்ணிக்கை அளவடிக்கான குறுமை எண்ணிக்கை. ஈற்றடியின் **9** எழுத்துகள் என்னும் எண்ணிக்கை. சிந்தடிக்கான எண்ணிக்கை **93, 94** ஆகிய எண்களுள்ள திருப்பதிகங்களிலும் இவ்வாறே எழுத்தெண்ணிக்கைகள் குறுமை அளவில் உள்ளன. அனைத்தடிகளிலும் எண்ணிக்கைச்சமன் இன்மையால் இவற்றைக் குறுந்தொகைப் பனுவலாகக் கொள்ளவியலவில்லை.

விளம் – காய் – விளம் – காய் என்னும் கட்டளைப் பனுவலுக்குச் சான்று.

நல்லநி னைப்பொழிய நாள்களில் ஆருயிரைக்
கொல்லநி னைப்பனவும் குற்றமும் அற்றொழியச்
செல்வவ யற்கழனித் தென்திரு வாரூர்புக்
கெல்லைமி தித்தடியேன் என்றுகொல் எய்துவதே **(7–83–4)**

இத்திருப்பனுவலில் அடிதோறும் முதலிரு சீர்களையொட்டி வகையுளிகள் செய்து விளம் – காய் – விளம் – காய் என்னும் கட்டளை வருவிக்கப்பட்டுள்ளது. முதல் மூன்று திருப்பனுவல்களிலும் இவ்வாறே வகையுளிகள் செய்தே கட்டளைப் பொருத்தத்தை வருவிக்க வேண்டும். ஏனெனில் இத்திருப்பதிகங்களின் பின் ஆறு திருப்பனுவல்களும் விளம் – காய் –

விளம் – காய் என்னும் கட்டளை நேரே பொருந்துமாறுள்ளன. ஆகையினால் முன்னர் உள்ள நான்கு திருப்பனுவல்களையும் தக்கவாறு வகையுளிகள் செய்து இப்பதிகப்பனுவல்கள் அனைத்தும் ஒரே கட்டளையில் அமைந்தவாற்றைப் புலப்படுத்த நேர்கிறது.

இனி ஒரு கட்டளைக்கொரு பதிகம் என்றவாறுள்ள ஐந்து திருப்பதிகங்களில் ஒரு கட்டளைக்குச் சான்று காண்போம்.

காய் – காய் – காய் – மா என்னும் கட்டளைக்குச் சான்று

மத்தயானை ஏறிமன்னர் சூழவரு வீர்காள்
செத்தபோதில் ஆருமில்லை சிந்தையுள்வைம் மின்கள்
வைத்தவுள்ளம் மாற்றவேண்டா வம்மின்மனத் தீரே
அத்தர்கோயில்* எதிர்கொள்பாடி என்பதடை வோமே **(7–7–1)**

*இவ்வுடுக்குறியிட்ட சீர் காய்ச்சீருக்கு இணையாக வந்த பூச்சீர். இவ்வாறான ஆன்றோர் செய்யுட்களின் அடிப்படை கொண்டே "கண்ணிய பூவினம் காய்ச்சீரனைய" என இலக்கணம் செய்தார் அமிர்தசாகரர்.

இவ்வேழாம் திருப்பதிகத்தை அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தமாகக் கொள்வாரும் உளர். அஃதும் ஒக்கும். அந்நிலையில் இத்திருப்பதிகம் இரு வடிவத் திருப்பதிகமாகும். இத்திருப்பதிகத்தின் அறுசீர்விருத்த வடிவுக்குக் கட்டளை.

மா – மா – மா மா
மா – காய்

என்பதாகும்.

தோற்றம் உண்டேல் மரணமுண்டு
துயரம் மனைவாழ்க்கை
மாற்றம் உண்டேல் வஞ்சம்உண்டு
நெஞ்ச மனத்தீரே
நீற்றர் ஏற்றர் நீல கண்டர்
நிறைபுனல் நீள்சடைமேல்
ஏற்றர் கோயில் எதிர்கொள்பாடி
என்ப தடைவோமே. **(7–7–2)**

இதில் மூன்றாமடியின் ஐந்தாம் சீர் நிறைபுனல் எனக் கருவிளச்சீர் வந்துள்ளது. இவ்வண்ணமே மூன்றாம் பனுவலில் ஓரிடத்திலும், ஐந்தாம் பனுவலில் ஈரிடங்களிலும், ஆறாம் பனுவலில் ஓரிடத்திலும், ஏழாம் பனுவலில் ஓரிடத்திலும், ஒன்பதாம் பனுவலில் ஈரிடங்களிலும், பத்தாம் பனுவலில் ஈரிடங்களிலும் மாச்சீர்களுக்குப் பதிலாக விளச்சீர்கள் விரவியுள்ளன. நான்காம்

பனுவலின் ஓரிடத்தில் மாச்சீருக்குப் பதிலாகக் காய்ச்சீர் விரவியுள்ளது.

ஏழாம் திருமுறையிலுள்ள பதினெண் கலிவிருத்தத் திருப்பதிகங்களுள் 11, 32 என்னும் எண்களுள்ள திருப்பதிகங்கள் தனித்துச் சிந்திக்கத்தக்கன.

பதினொன்றாம் திருப்பதிகத்தில் எட்டுத் திருப்பனுவல்களே உள்ளன. அவற்றுள் நேரிசையில் தொடங்கும் 2, 3 திருப்பனுவல்கள் ஓரடிக்குப் பதினோர் எழுத்துகள் வீதம் கொண்டுள்ளன. நிரையசையில் தொடங்கும் 1, 4, 5 ஆம் திருப்பனுவல்கள் ஓரடிக்குப் பன்னிரெண்டெழுத்துகள் வீதம் கொண்டுள்ளன. நேரசையில் தொடங்கும் பத்தாம் எண் தரப்பெற்றுள்ள திருப்பனுவல் அடிதோறும் பன்னிரெண்டெழுத்துகள் கொண்டுள்ளன. 6, 7 எண்களுள்ள திருப்பனுவல்கள் நேரசையில் தொடங்குவன. அவை 12, 12, 12, 11 எழுத்துகளும், 12, 11, 11, 11 எழுத்துகளும் உடையன.

32ஆம் எண்ணுள்ள திருப்பதிகத்தில் 2, 3, 4, 5, 10 எண்களுள்ள திருப்பனுவல்கள் நேரசையில் தொடங்குவன. அவை ஓரடிக்கு ஒற்று நீக்கிப் பன்னிரெண்டெழுத்துகள் உடையன. 1, 6, 7, 9 எண்களுள்ள திருப்பனுவல்கள் நிரையசையில் தொடங்குவன. அவை ஓரடிக்கு ஒற்று நீக்கிப் பதின்மூன்றெழுத்துகள் உடையன. எட்டாம் திருப்பனுவல் நேரசையில் தொடங்குவது. அதன் முதலடி பதின்மூன்றெழுத்துகள் உடையது. எஞ்சிய மூன்றடிகள் பன்னிரெண்டெழுத்துகள் வீதம் உடையன.

இவ்விரு திருப்பதிகங்களும், ஐந்தாம் திருமுறையின் திருக்குறுந்தொகைத் திருப்பதிகங்கள் போல எழுத்தெண்ணுநிலைத் திருப்பதிகங்கள் எனக் கொள்ளலாம்.

## ஏழாந் திருமுறை

# பண், தல, பதிக அட்டவணை

| பதிக எண் | தலம் | பதிகம் |
|---|---|---|
| | **இந்தளம்** | |
| 1. | திருவெண்ணெய்நல்லூர் | பித்தா பிறை |
| 2. | திருப்பரங்குன்றம் | கோத் திட்டை |
| 3. | திருநெல்வாயில் அரத்துறை | கல்வாய் |
| 4. | திருவஞ்சைக்களம் | தலைக்கு |
| 5. | திருவோணகாந்தன்தளி | நெய்யும் |
| 6. | திருவெண்காடு | படங் கொள் |
| 7. | திருஎதிர்கொள்பாடி | மத்த யானை |
| 8. | திருவாரூர் | இறை களோ |
| 9. | திருஅரிசிற்கரைப்புத்தூர் | மலைக்கும் |
| 10. | திருக்கச்சிஅனேகதங்காவதம் | தேனெய் |
| 11. | திருப்பூவணம் | திரு வுடையார் |
| 12. | பொது (திருநாட்டுத்தொகை) | வீழக்கால |
| | **தக்கராகம்** | |
| 13. | திருத்துறையூர் | மலை யாரரு |
| 14. | திருப்பாச்சிலாச்சிராமம் | வைத்தனன் |
| 15. | திருநாட்டியத்தான்குடி | பூணாண் |
| 16. | திருக்கலயநல்லூர் | குரும்பை |
| | **நட்டராகம்** | |
| 17. | திருநாவலூர் | கோவலன் |
| 18. | திருவேள்விக்குடியும் திருத்துருத்தியும் | மூப்பதும் |
| 19. | திருநின்றியூர் | அற்றவனா |
| 20. | திருக்கோளிலி | நீளநினைந் |
| 21. | திருக்கச்சிமேற்றளி | நொந்தா |
| 22. | திருப்பழமண்ணிப் படிக்கரை | முன்னவன் |
| 23. | திருக்கழிப்பாலை | செடியேன் |
| 24. | திருமழபாடி | பொன்னார் |
| 25. | திருமுதுகுன்றம் | பொன்செய் |
| 26. | திருக்காளத்தி | செண்டா |
| 27. | திருக்கற்குடி | விடையா |
| 28. | திருக்கடவூர் வீரட்டம் | பொடியார் |
| 29. | திருக்குருகாவூர் வெள்ளடை | இத்தனை |
| 30. | திருக்கருப்பறியலூர் | சிம்மாந்து |
| | **கொல்லி** | |
| 31. | திருஇடையாறு | முந்தையூர் |
| 32. | திருக்கோடிக்குழகர் | கடிதாய் |
| 33. | பொது (நமக்கடிகளாகியவடிகள்) | பாறு தாங்கிய |
| 34. | திருப்புகலூர் | தம்மையே |
| 35. | திருப்புறம்பயம் | அங்கம்ஓதி |
| 36. | திருப்பைஞ்ஞீலி | காரு லாவிய |
| 37. | திருவாரூர் | குருகுபாய |
| | **கொல்லிக் கௌவாணம்** | |
| 38. | திருவதிகை வீரட்டானம் | தம்மானை |
| 39. | பொது (திருத்தொண்டத் தொகை) | தில்லை வாழ் |
| 40. | திருக்கானாட்டுமுள்ளூர் | வள்வாய |
| 41. | திருக்கச்சூர் ஆலக்கோயில் | முதுவாய் |
| 42. | திருவெஞ்சமாக்கூடல் | எறிக்குங் |
| 43. | திருமுதுகுன்றம் | நஞ்சிஇடை |
| 44. | பொது (முடிப்பதுகங்கை) | முடிப்பது |
| 45. | திருவாமாத்தூர் | காண்டனன் |
| 46. | திருநாகைக்காரோணம் | பத்தூர்புக் |

| பதிக எண் | தலம் | பதிகம் |
|---|---|---|
| | **பழம் பஞ்சுரம்** | |
| 47. | பொது (ஊர்த்தொகை) | காட்டூர் |
| 48. | திருப்பாண்டிக்கொடுமுடி | மற்றுப்பற் |
| 49. | திருமுருகன்பூண்டி | கொடுகு |
| 50. | திருப்புனவாயில் | சித்த நீதி |
| 51. | திருவாரூர் | பத்திமை |
| 52. | திருவாலங்காடு | முத்தா |
| 53. | திருக்கடவூர் மயானம் | மருவார் |
| | **தக்கேசி** | |
| 54. | திருவொற்றியூர் | அழுக்கு |
| 55. | திருப்புன்கூர் | அந்தணர் |
| 56. | திருநீடூர் | ஊர்வதோர் |
| 57. | திருவாழ்கொளிபுத்தூர் | தலைக் கலன் |
| 58. | திருக்கழுமலம் | சாதலும் |
| 59. | திருவாரூர் | பொன்னும் |
| 60. | திருவிடைமருதூர் | கழுதைகுங் |
| 61. | திருக்கச்சி ஏகம்பம் | ஆலந்தானு |
| 62. | திருக்கோலக்கா | புற்றில் |
| 63. | பொது | மெய்யை |
| 64. | திருத்தினைநகர் | நீறுதாங்கிய |
| 65. | திருநின்றியூர் | திருவும் |
| 66. | திருவாவடுதுறை | மறையவன் |
| 67. | திருவலிவலம் | ஊனங்கத்து |
| 68. | திருநள்ளாறு | செம்பொன் |
| 69. | வடதிருமுல்லைவாயில் | திருவும் |
| 70. | திருவாவடுதுறை | கங்கை |
| | **காந்தாரம்** | |
| 71. | திருமறைக்காடு | யாழைப்பழி |
| 72. | திருவலம்புரம் | எனக்கினி |
| 73. | திருவாரூர் | கரையுங் |

| பதிக எண் | தலம் | பதிகம் |
|---|---|---|
| 74. | திருத்துருத்தியும் திருவேள்விக்குடியும் | மின்னுமா |
| 75. | திருவானைக்கா | மறைகளா |
| | **பியந்தைக் காந்தாரம்** | |
| 76. | திருவாஞ்சியம் | பொரு வனார் |
| | **காந்தார பஞ்சமம்** | |
| 77. | திருவையாறு | பரவும் |
| | **நட்டபாடை** | |
| 78. | திருக்கேதாரம் | வாழ்வாவது |
| 79. | திருப்பருப்பதம் | மானும்மரை |
| 80. | திருக்கேதீச்சரம் | நத்தார் |
| 81. | திருக்கழுக்குன்றம் | கொன்று |
| 82. | திருச்சுழியல் | ஊனாய் |
| 83. | திருவாரூர் | அந்தியும் |
| | **புறநீர்மை** | |
| 84. | திருக்கானப்பேர் | தொண்டர் |
| 85. | திருக்கூடலையாற்றூர் | வடியுடை |
| | **சீகாமரம்** | |
| 86. | திருவன்பார்த்தான் பனங்காட்டூர் | விடையின் |
| 87. | திருப்பனையூர் | மாட மாளிகை |
| 88. | திருவீழிமிழலை | நம்பினார் |
| 89. | திருவெண்பாக்கம் | பிழையுளன |
| | **குறிஞ்சி** | |
| 90. | கோயில் | மடித்தாடும் |
| 91. | திருவொற்றியூர் | பாட்டும் |
| 92. | திருப்புக்கொளியூர் அவினாசி | எற்றான் |
| 93. | திருநாறையூர்ச் சித்தீச்சரம் | நீரும் மலரும் |
| 94. | திருச்சோற்றுத்துறை | அழல்நீர் |

| பதிக எண் | தலம் | பதிகம் |
|---|---|---|
| | **செந்துருத்தி** | |
| 95. | திருவாரூர் | மீளா அடிமை |
| | **கௌசிகம்** | |
| 96. | திருவாரூர்ப் பரவையுண் மண்டளி | தூவாயா |
| | **பஞ்சமம்** | |
| 97. | திருநனிபள்ளி | ஆதியன் |
| 98. | திருநன்னிலத்து பெருங்கோயில் | தண்ணியல் |
| 99. | திருநாகேச்சரம் | பிறையணி |
| 100. | திருநொடித்தான் மலை | தானெனை |



# ஏழாந் திருமுறை, பண்கள், கட்டளைகள் அட்டவணை

| வ. | பண் | பதிகங்கள் | பதிக எண்கள் | கட்டளைகள் | பண்களின் சுவை (அடைவு) | தற்போதைய இராகம் | கால வரையறை (நாழிகை) |
|---|---|---|---|---|---|---|---|
| 1. | இந்தளம் | 12 | 1-12 | 9 | பெருமிதம், மருட்கை | நெளிவு பஞ்சமி | 9-12 பகல் |
| 2. | தக்கராகம் | 4 | 13-16 | 4 | பெருமிதம், மருட்கை | கன்னட காம்போதி | 30-33¾ இரவு |
| 3. | நட்டராகம் | 14 | 17-30 | 2 | உவகை, மருட்கை | பந்துவராளி | 15-18 பகல் |
| 4. | கொல்லி | 7 | 31-37 | 3 | அவலம், மருட்கை | நாதநாமக் கிரியை | 37½ - 41½ இரவு |
| 5. | கொல்லிக் கௌவாணம் | 9 | 38-46 | 4 | பெருமிதம், மருட்கை | இச்சிச்சி | 3-6 பகல் |
| 6. | பழம்பஞ்சுரம் | 7 | 47-53 | 5 | மருட்கை | சங்கராபரணம் | 21-24 பகல் |
| 7. | தக்கேசி | 17 | 54-70 | 1 | அச்சம், உவகை | காம்போதி | 12-15 பகல் |
| 8. | காந்தாரம் | 5 | 71-75 | 4 | பெருமிதம, மருட்கை | இச்சிச்சி | 3-6 பகல் |
| 9. | பியந்தைக் காந்தாரம் | 1 | 76 | 2 | மருட்கை | இச்சிச்சி | 3-6 பகல் |
| 10. | காந்தார பஞ்சமம் | 1 | 77 | 1 | உவகை, மருட்கை | கேதார கௌளை | 24-27 பகல் |
| 11. | நட்டபாடை | 6 | 78-83 | 2 | உவகை, மருட்கை | நாட்டைக் குறிஞ்சி | 18-21 பகல் |
| 12. | புறநீர்மை | 2 | 84-85 | 2 | உவகை, மருட்கை | ஸ்ரீகண்டி | 0-3 பகல் |
| 13. | சீகாமரம் | 4 | 86-89 | 2 | அவலம், மருட்கை | நாத நாமக்கிரியை | 37½ - 41½ இரவு |
| 14. | குறிஞ்சி | 5 | 90-94 | 2 | உவகை, மருட்கை | பிலகரி | 52½ - 56¼ இரவு |
| 15. | செந்துருத்தி | 1 | 95 | 1 | மருட்கை | மத்திமாவதி | பொது |
| 16. | கௌசிகம் | 1 | 96 | 2 | அவலம், மருட்கை | பைரவி | 6-9 பகல் |
| 17. | பஞ்சமம் | 4 | 97-100 | 1 | உவகை, மருட்கை | பந்துவராளி | 15-18 பகல் |

# ஏழாந் திருமுறை கட்டளை, யாப்பு விகற்ப விளக்கங்கள்

**ந**ம்பியாரூரர் அருளிய தேவாரத் திருப்பதிகங்கள் யாவும் ஏழாந்திருமுறை என ஒரே திருமுறையாக வகுக்கப் பெற்றமை நாமறிந்ததே. இத்திருமுறையில் 1 முதல் 12 வரை அமைந்த பதிகங்கள் இந்தளப் பண்ணுக்கு உரியன. இப்பதிகங்களில் ஒன்பது யாப்பு விகற்பங்கள் உள்ளன.

### இந்தளம்

யாப்பு 1

பித்தாபிறை சூடீபெரு மானேயரு ளாளா
தானாதன தானாதன தனாதான தானா

எனவரும் இவ்வாறு வகையுளியாக்காது,

பித்தா பிறைசூடீ பெருமானே அருளாளா
தானா தனதானா தனதனா தனதானா

எனப்பொருள் இனிது புலப்படப் பிரித்திசைத்தலும் ஏற்புடையதேயாகும். முதல் திருமுறையில் 9 முதல் 18 வரையுள்ள நட்டபாடைப் பதிகங்களை அடியொற்றியமைந்தது இப்பதிகமாகும்.

யாப்பு 2

கோத்திட்டை யுங்கோவ லுங்கோயில் கொண்டீர்
உமைக்கொண்டு ழல்கின்ற தொர் கொல்லைச் சில்லைச்
தானான தானான தானான தானா
தானான தானான தானான தானா

என எண்சீரடியாக வரும். இதனை,

கோத்திட்டையும் கோவலுங் கோயில்கொண்டீர்
உமைக்கொண்டுழல் கின்றதோர் கொல்லைச்சில்லைச்
தானாதன தானன தானதானா
தனனாதன தானன தானதானா

என ஆறு சீரடியாகப் பிரித்திசைத்தலும் பொருந்தும். இத்திருமுறையில் 2, 4, 9–ஆம் பதிகங்கள், ஒரே யாப்பின.

நாலாந்திருமுறையில் முதற்பதிகமாகிய கூற்றாயின என்பதன் யாப்பினை அடியொற்றியமைந்தன இப்பதிகங்களாகும்.

யாப்பு 3

**கல்வா யகிலுங்** கதிர்மா மணியுங்
கலந்துந் திவருந் நிவவின் கரைமேல்
தானா தனனா தனனா தனனா
தனனா தனனா தனனா தனனா

எனவரும். 'தானா' தனனா ஆதலும், 'தனனா' தானா ஆதலும் அமையும். இரண்டாந் திருமுறையில் 17 முதல் 24 வரையுள்ள இந்தளப் பதிகங்களின் கட்டளையடி இரண்டு கொண்டது ஓரடியாக வருதல், இம்மூன்றாந் திருப்பதிகத்தின் கட்டளையடியாகும்.

யாப்பு 4

> நெய்யும் பாலுந் தயிருங் கொண்டு நித்தல் பூசனை செய்ய லுற்றார்
> தானா தானா தனனா தான தானா தானன தான தானா

எனவரும் 5, 6—ஆம் பதிகங்கள் ஒரே யாப்பின. 'தானா' தனனா ஆதலும், தனனா' தானா ஆதலும் அமையும்.

யாப்பு 5

> மத்த யானை யேறிமன்னர் சூழ வருவீர்காள்
> தான தானா தான தானா தான தனதானா

எனவரும். தான தனன ஆதலும், தானா தனனா ஆதலும், தனதானா தானாதன ஆதலும் அமையும். இத்திருமுறையில் ஏழாந் திருப்பதிகமாகிய இது, காரைக்காலம்மையார் அருளிய திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகங்கள் இரண்டினுள் எட்டியிலவம் என்னும் இந்தளப்பதிக யாப்பினை ஒத்தமைந்ததாகும்.

யாப்பு 6

> இறைகளோ டிசைந்த இன்பம் இன்பத்தோ டிசைந்த வாழ்வு
> கருவிளம் புளிமா தேமா தேமாங்காய் புளிமா தேமா

எனவருவது ஒன்பதாந் திருப்பதிகத்தின் கட்டளையடியாகும். இது திருநாவுக்கரசர் அருளிய திருநேரிசை யாப்பில் அமைந்தமை காணலாம். இதன் கண் தேமாங்காய் எனும் வாய்பாடமைந்த இன்பத்தோ என்ற சீர் கூவிளம் என்ற சீரளவாய் நின்றமை செவி கருவியாக உணரத்தக்கதாகும்.

யாப்பு 7

> தேனெய் புரிந்துழல் செஞ்சடை யெம்பெரு மானதி
> டந்திகழ் ஐங்கணையக்
> தான தனாதனதானன தானன தானன
> தானன தானதனா

என வருவது பத்தாந் திருப்பதிகத்தின் அடியமைப்பாகும்.

இதனை,

> தேனெய்புரிந் – துழல் – செஞ்சடையெம்பெரு
> மானதிடந் – திகழ் – ஐங்கணையக்
> தானதனா – தன – தானன தானன
> தானதனா – ன – தானதனா

எனப் பிரித்துப் பாடுதலும் பொருந்தும்.

யாப்பு 8

திருவுடை யார்திரு மாலய னாலும்
கருவிளம் கூவிளம் கூவிளம் தேமா

என நாற்சீரடியாய் வெண்டளை தழுவி வருவது பதினொராந் திருப்பதிகம்.

இப்பதிகம், நாலாந்திருமுறையில் 17–ஆம் பதிகமாகிய "எத்தீபுகினும்" என்னும் இந்தளப் பதிகத்தினை அடியொற்றியமைந்திருத்தல் உணரத்தக்கதாகும்.

யாப்பு 9

வீழக் காலனைக் கால்கொடு பாய்ந்த விலங்கலான்
தானா தானனா தானன தான தனதனா

எனவரும் அடியமைப்பினையுடையது பன்னிரண்டாந் திருப்பதிகமாகும். 'தானா' தனனா ஆதலும் தானன ஆதலும், 'தனதனா' தானனா ஆதலும் அமையும்.

"ஈண்டிசைசேர் இந்தளத்துக்கு இரண்டாக" என்றமையின் மேற்போந்த பன்னிரண்டு பதிகங்களிடையே பத்து யாப்பு விகற்பங்கள் உளவேனும், தாள விகற்பங்கள் இரண்டெனவே கொள்ளல் வேண்டும் என்பர் யாழ் நூலார் (பக்கம் 251).

**13 முதல் 16 வரையுள்ள பதிகங்கள் தக்கராகப் பண்ணுக்குரியன. இவற்றில் நான்கு யாப்பு விகற்பங்கள் உள.**

யாப்பு 1

மலையாரரு வித்திரள் மாமணி யுந்திக்
தனனாதன தானன தானன தானா.

எனவரும். 13–ஆம் பதிகம். இத்திருப்பதிகப் பாடல்களின் இரண்டாமடிகளில் முதற்சீர்களாகிய குலையார, சுரும்பார, நாடார, மொட்டார, தாதார, செய்யார, மண்ணார என்பவற்றின் ஈற்று ரகரவுயிர்மெய் மெய்ந்நீர்மை பெறும் என்பர் யாழ் நூலார்.

யாப்பு 2

வைத்தனன் தனக்கே தலையுமென் னாவும் நெஞ்சமும் வஞ்சமொன் றின்றி
கூவிளம் புளிமா கருவிளம் தேமா கூவிளம் கூவிளம் தேமா.

என எழுசீரடி பெற்று வரும். (14–ஆம் பதிகம்).

தானன தனனா தனதன தானா தானன தானன தானா

என்பதனைக் கட்டளையடியாகக் கொள்ளலாம்.

யாப்பு 3

பூணா ணாவதோ ரரவங்கண் டஞ்சேன் புறங்காட் டாடல்கண் டிகழேன்
தேமா கூவிளம் கருவிளம் தேமா புளிமா கூவிளம் புளிமா

என எழுசீராய் வரும். இவ்வடியில் 'ரரவங்கண்' என்புழி ஙகர வொற்றும் 'டாடல்கண்' என்புழி லகரவொற்றும் ஒலியடங்கி நிற்க, அவ்வொற்றின் முன்னும் பின்னும் நின்ற குறில்கள் இணைந்து நிரையசையாயின, ஆதலால் அச்சீர்கள் முறையே கருவிளம், கூவிளம் என ஓசையூட்டப்பெற்றன **(15–ஆம் பதிகம்).**

தானா தானன தனதன தானா தனனா தானன தனனா

என்பதனை இப்பதிகத்தின் கட்டளையடியாகக் கொள்ளலாம்.

யாப்பு 4

குரும்பைமுலை மலர்க்குழலி கொண்டதவங் கண்டு<br>
குறிப்பினொடுஞ் சென்றவள்தன் குணத்தினைநன் கறிந்து

என எண்சீரடியாய் வருவது **16–ஆம்** பதிகம்.

தனனதன தனதனன தானதன தானா<br>
தனனதன தானதன தனதனன தானா

என்பதனை இதன் கட்டளையடியாகக் கொள்ளலாம். 'தனனதன' தானதன ஆதலும், தானா தனனா ஆதலும் பொருந்தும். "நீண்ட தக்கராகத்துக்கு இரண்டாக நிகழ்வித்தார்" எனத் திருமுறை கண்ட புராணம் கூறுதலால், மேலே காட்டிய நான்கு யாப்பு விகற்பங்களையும் ஓசை யொற்றுமையும் தாள அமைதியும் நோக்கி முன்னுள்ளோர் இரண்டு கட்டளையாக அடக்கினார்கள் என்பது புலனாம்.

**17 முதல் 30 வரையுள்ள பதிகங்கள் நட்டராகம்** என்ற பண்ணுக்கு உரியன. "கூறிய நட்டராகத்து இரண்டு" என்பது திருமுறை கண்ட புராணமாதலின் இப்பதிகங்கள் இரண்டு கட்டளையுள் அடங்கும் எனத் தெரிகிறது. 17 முதல் 29 வரையுள்ள பதிகங்கள் ஒரு கட்டளையாகக் கொள்ளத்தக்கன. 30–ஆம் பதிகம் மற்றொரு கட்டளையாகும். முதற் கட்டளைக்குரிய பதிகங்களில் இரண்டு யாப்பு விகற்பகங்கள் உள.

யாப்பு 1

கோவல னான்முகன் வானவர் கோனுங்குற் றேவல்செய்ய<br>
கூவிளம் கூவிளம் கூவிளம் தேமாங்காய் கூவிளங்காய்

எனக் கட்டளைக் கலித்துறை யாப்பாக அமைந்துள்ளன 17–20, 22, 24–28–ஆம் பதிகங்களாகும். இவற்றில் "ஏவல் செய்ய" என்றாங்கு அடியின் ஈற்றில் வரும் சீர்களில் இடையே லகரம் முதலிய ஒற்றுக் காரணமாகக் "கடையொரு சீரும் விளங்காய் ஆகி" என்னும் விதி மாறுபடுமாயின், அச்சீர்களின் இடையே நின்ற லகரம் முதலிய ஒற்றினைக் குறைந்த ஒலியினதாகக் கொண்டு அதனை விட்டு, அதன் முன்னும் பின்னும் உள்ள குறில்களை இணைத்து நிரையசையாக்கி விளங்காய்ச் சீராக அமைத்துக் கொள்ளுதல் வேண்டும். இப்பதிகங்கள் மூன்றாந் திருமுறையிற் பஞ்சமப் பண்ணுக்குரியனவாக 56 முதல் 62 வரையுள்ள திருப்பதிகங்களையொத்து அமைந்தன. கட்டளைக் கலித்துறை யாப்பில் வரும் இத்திருப்பதிகங்களை,

பொன்னார் மேனியனே – புலித் – தோலை யரைக்கசைத்து
தானா தானதனா தன தானா தனதனனா (21, 23)

என இவ்வாறு பிரித்து இசைத்தல் மரபாகும்.

**யாப்பு 2**

21, 23, 29–ஆம் பதிகங்கள் இவை போன்று கட்டளைக் கலித்துறையாக அமைந்தன அல்லவாயினும்,

நொந்தா ஒண்சுடரே – நுனை – யேநி னைந்திருந்தேன்
தானா தானதனா – தன – தான தானதனா

என மேற்குறித்த வண்ணம் பிரித்துப் பாடுதற்கேற்ற ஒத்த ஓசையினவாக உள்ளன. ஆகவே இப்பதிகங்கள் மேற்குறித்த பதிகங்களுடன் சேர்த்து ஒரே கட்டளையாகக் கொள்ளப்பெற்றன.

**கட்டளை 2**

சிம்மாந்து சிம்புளித்துச் சிந்தையினில் வைத்துகந்து திறம்பா வண்ணம்
தேமாங்காய் கூவிளங்காய் கூவிளங்காய் கூவிளங்காய் புளிமா தேமா

என முன்னுள்ள சீர்கள் நான்கும் காய்ச்சீர்களாகவும் பின் வந்த சீர்கள் இரண்டும் மாச்சீர்களாகவும் வருதல் நட்டராகத்தின் இரண்டாங் கட்டளையாகும். 30–ஆம் பதிகமாகிய இது, முதல் திருமுறையில் 129 முதல் 132 வரையுள் மேகராகக் குறிஞ்சிப் பதிகங்களையொத்த யாப்பமைதியுடையதாயினும், அப்பதிகங்கள் போன்று தொடர்ந்து செல்லும் ஒழுகிய ஓசையின தாகாது சீர்தோறும் தாள அறுதிபட இடையறவு பட்டிசைக்கும் ஓசையினிதாதல் நுணுகி நோக்கத்தக்கதாகும்.

**31 முதல் 37 வரையுள்ள பதிகங்கள் கொல்லிப்பண்ணுக்கு** உரியன. "கொல்லிக்கு வேறு வகை மூன்றாக" எனத் திருமுறை கண்ட புராணம் கூறுதலால் கொல்லிக்கு உரிய பதிகங்கள் மூன்று கட்டளைபெறும் என்பது புலனாம்.

**கட்டளை 1**

முந்தை யூர்முது குன்றங் குரங்கணின் முட்டம்
தான தானன தான தனாதன தானா

எனவரும் 'தான' தனன ஆதலும் "தானா" தனனா ஆதலும் அமையும். பதின்மூன்று எழுத்துக்களால் இயன்ற இக்கட்டளையடியில் தான தானன என்னும் முதலிரண்டு சீர்களும் "தனனா தன" என ஒரு சீராக ஒன்றியிசைத்தலும், "தான தனாதன" என்னும் மூன்றாம் நான்காஞ் சீர்கள் தானன தானா எனப் பிரிந்திசைத்தலும் பொருந்தும்.

கடிதாய்க் கடற் காற்றுவந் தெற்றக் கரைமேல்
தனனாதன தானன தான தனனா

என வருதல் காண்க. 31, 32–ஆம் பதிகங்கள் ஒரே யாப்பின.

**கட்டளை 2**

பாறு தாங்கிய காட ரோபடு தலைய ரோமலைப் பாவையோர்
தான தானன தான தானன தனன தானன தானனா

எனவரும் ஈற்றுச்சீர் 'தனதனா' ஆதலும் ஒழிந்த சீர்களில் 'தான' தனன ஆதலும் அமையும். 33 முதல் 36 வரையுள்ள பதிகங்கள் ஒரே யாப்பின. இவை மூன்றாந் திருமுறையில் கொல்லிப் பண்ணுக்கு உரியனவாக 37 முதல் 39 வரை அமைந்த திருப்பதிகங்களின் யாப்பமைதியினை உடையன.

**கட்டளை 3**

குருகுபா யக்கொழுங் கரும்புக ணெரிந்தசா
தனதனா தானனா தனதன தனதனா

என வருவது 37–ஆம் பதிகம். இது, மூன்றாந் திருமுறையில் கொல்லிப் பண்ணைச் சேர்ந்த 24 முதல் 36 வரையுள்ள திருப்பதிகங்களை அடியொற்றி அமைந்ததாகும்.

திருமுறைகண்ட புராணத்தில் சுந்தரர் அருளிய திருப்பதிகங்களைக் குறிக்குமிடத்து கொல்லிப் பண்ணையடுத்துப் பழம்பஞ்சரம் என்ற பண் குறிக்கப்பெற்றதே யன்றிக் கொல்லிக் கௌவாணம் என்ற பண் குறிக்கப் பெறவில்லை. இவ்வாறே ஆளுடைய பிள்ளையார் அருளிய பதிகங்களைக் குறிக்குமிடத்தும் கொல்லியின் வேறாகக் கொல்லிக் கௌவாணம் என்ற பண் குறிக்கப் பெறவில்லை. ஆயினும் கொல்லியின் வேறாகக் (கொல்லிக்) கௌவாணம் என்ற பண் உள்ளமை முன்னர் விளக்கப்பெற்றது. "கொல்லிக்கு வேறு வகை மூன்றாக" எனத் திருமுறை கண்ட புராணம் கூறுதலைக் கூர்ந்து நோக்குங்கால் கொல்லிப் பண்ணுக்குரிய கட்டளைப் பதிகங்களும் அக்கட்டளைகளின் தொடர்புடைய கொல்லிக் கௌவாணப் பண்ணுக்குரிய திருப்பதிகங்களுடன் உள என்பது குறிப்பாற் புலனாதல் காணலாம்.

இத் திருமுறையில் 38 முதல் 41 வரையுள்ள பதிகங்கள் கொல்லிக் கௌவாணப் பண்ணமைந்தன. இப்பதிகங்களில் அமைந்த யாப்பு விகற்பங்கள் நான்காகும்.

**யாப்பு 1**

தம்மானை யறியாத சாதியா ருளரே
சடைமேற்கொள் பிறையானை விடைமேற்கொள் விகிர்தன்

என எண்சீரடியால் வரும்.

காய் காய் காய் மா காய் காய் காய் மா

என்பதனை இதன் கட்டளையடியாகக் கொள்ளலாம். 38, 39, 40, 46 ஆம் பதிகங்கள் ஒரே யாப்பின. இப்பதிகங்களில் 'சாதிய்யார்' 'வெல்லும்மா' என ஓர் ஒற்றெழுத்தினைப் பெய்து காய்ச்சீர் கொள்ள வேண்டிய இடங்களும், "தில்லை வாழ்" "இல்லை–யே" என ஐகாரத்தை இரண்டு

மாத்திரையுடையதாகக் கொண்டு காய்ச்சீர் கொள்ள வேண்டிய இடங்களும் "வம்ப–றா" "எம்பி–ரான்" எனக் குற்றெழுத்தினை விட்டிசைத்துக் காய்ச்சீர் கொள்ள வேண்டிய இடங்களும் உள.

யாப்பு 2

முதுவா யோரி கதற முதுகாட் டெரிகொண் டாடல் முயல்வானே
தனனா தானா தனன தனனா தனனா தானா தானனா தானா

என வருவது 41ஆம் பதிகமாகும்.

யாப்பு 3

எறிக்குங்கதிர் வேயுதிர் முத்தம்மோ டேலமில வங்கந்தக் கோலமிஞ்சி
தனனாதன தானன தானனா தானாதன தானான தானதானா

என வருவது 42ஆம் பதிகம். இது நான்காம் திருமுறையிற் கொல்லிப் பண்ணுக்குரிய "கூற்றாயின" என்ற பதிகத்தின் யாப்பினை ஒத்திருத்தல் காணலாம்.

யாப்பு 4

நஞ்சி யிடையின்று நாளையென் றும்மை நச்சுவார்
தான தனதான தானனா தானா தானனா

என வருவது 43ஆம் பதிகம். இக்கட்டளையடியினை,

தானன தானன தானன தான தானனா

எனவும்,

தனதன தானன தான தானன தானனா

எனவும்,

தானன தானன தானதான தனதனா

எனவும், பிரித்திசைக்கும்படி இப்பதிகப் பாடல்கள் அமைந்துள்ளன. 43, 45ஆம் பதிகங்கள் ஒரே யாப்பின. கொல்லிப் பதிகங்களுக்கு மூன்று கட்டளைகள். எனவே அவற்றுடன் தொடர்புடைய கொல்லிக் கௌவாணப் பதிகங்களின் கட்டளைகளும் மூன்றெனக் கொள்ளுதல் பொருந்தும். மேற்காட்டிய யாப்பு விகற்பங்களுள் 1, 2 ஆம் விகற்பங்கள் இரு வேறு கட்டளைகளாகவும், 3, 4 ஆம் விகற்பகங்கள் இரண்டும் ஓசையொப்புமை பற்றி ஒரு கட்டளையாகவும் கொள்ளுதல் பொருந்தும்.

**47 முதல் 53 வரையுள்ள பதிகங்கள் பழம் பஞ்சுரம் என்ற பண்ணைச் சார்ந்தன.** இவற்றில் யாப்பு விகற்பங்கள் ஐந்து உள்ளன.

**யாப்பு 1**

> காட்டூர்க் கடலே கடம்பூர் மலையே கானப் பேரூராய்
> தேமா புளிமா புளிமா புளிமா தேமா தேமாங்காய்

என அறுசீரடியாய், முன்னுள்ள ஐந்து சீர்களும் மாச்சீர்களாகவும், ஆறாஞ் சீராகிய கடைச்சீர் மட்டும் காய்ச்சீராகவும் வருவது 47ஆம் பதிகம்.

**யாப்பு 2**

> மற்றுப் பற்றெனக் கின்றி நின்திருப் பாத மேமனம் பாவித்தேன்
> தேமா கூவிளம் தேமா கூவிளம் தேமா கூவிளம் தேமாங்காய்

என மாச்சீரும் விளச்சீரும் ஒன்றன்பின் ஒன்றாக அடுத்தடுத்து வந்து இறுதிச்சீர் பெரும்பாலும் காய்ச்சீராகவும் சிறுபான்மை விளச்சீராகவும் அமைய எழு சீரடியால் இயன்றது 48ஆம் பதிகம்.

> தான தானன தான தானன தான தானன தானனா

என்பதனை இதன் கட்டளையடியாகக் கொள்ளலாம். இதன் கண் தான தனன ஆதலும், தானன தானனா எனவரும் பின்னிரண்டு சீர்களும் தானாதானா என வருதலும் அமையும். இவ்வாறு,

> கொடுகு வெஞ்சிலை வடுக வேடுவர் விரவ லாமை சொல்லி
> தனன தானன தனன தானன தனன தானா தானா

என வருவது 49ஆம் பதிகம். இதன் கண் பாடல் தோறும் நான்காமடியின் நான்காஞ்சீரின் பின் "எத்துக்கிங்கிருந்தீர்" என இரு சீர்கள் வந்து முடிய, அத்தொடரின்பின் "எம்பிரானீரே" என்ற தொடர் வைப்பு ஆக அமைந்துள்ளமை காணலாம். வைப்பாக வந்த "எம்பிரானீரே" என்ற விளியையும் அதன் முன் வந்த "எத்துக் கிங்கிருந்தீர்" என்ற வினாவையும் மீண்டும் ஒருமுறை இசைக்குமிடத்து அத்திருப்பாடற் பொருளும் இசை நலமும் சிறந்து விளங்குதல் அறிந்து பாடி மகிழத்தக்கதாகும்.

**யாப்பு 3**

> சித்த நீநினை என்னொடு சூளறும் வைகலும்
> தான தானன தானன தானன தானனா

என்னும் கட்டளையடி பெற்றது 50ஆம் திருப்பதிகம். முதற்சீராகிய 'தான' தனன ஆதலும், 'தான தானன' என்னும் முதலிரு சீர்களும் ஒன்றித் 'தானா தன' என வருதலும், முதற்சீர் தனதான என நிற்க, ஏனைச்சீர்கள் வேறுபடாமல் வருதலும் முதலிய விகற்பகங்களை இப்பதிகத் திருப்பாடல்களில் காணலாம்.

யாப்பு 4

பத்திமையும் அடிமையையுங் கைவிடுவான் பாவி–யேன்
கூவிளங்காய் கருவிளங்காய் கூவிளங்காய் தேமாங்காய்

எனக் காய்ச்சீர் நான்குகொண்ட அடிகளாலாய தரவு கொச்சகக் கலிப்பாக்களாக அமைந்தது 51ஆம் பதிகம்.

யாப்பு 5

முத்தா முத்தி தரவல்ல முகிழ்மென் முலையாள் உமைபங்கா
தேமா தேமா புளிமாங்காய் புளிமா புளிமா புளிமாங்காய்

என்றாங்கு, மா, மா, காய், மா, மா, காய் என்னும் அறு சீரடிகளால் இயன்றன. 52, 53ஆம் பதிகங்கள். இவ்விரு பதிகங்களும் நாலாந்திருமுறையில் 15ஆம் எண்ணுள்ள "பற்றற்றார்சேர்" என்னும் முதற் குறிப்புடைய பழம்பஞ்சுரப் பதிகத்தினை ஒத்துள்ளமை காணலாம். பழம்பஞ்சுரத்தின் ஏழு பதிகங்களும் மேற்கூறிய வண்ணம் ஐந்து யாப்பு விகற்பகங்கள் பெற்றன. "மிகுந்த பழம்பஞ்சுரத்துக் கேறும் வகை இரண்டாக்கி" எனத் திருமுறை கண்டபுராணம் கூறுதலை ஆழ்ந்து நோக்குங்கால், வாகீசர் அருந்தமிழில் பழம்பஞ்சுரப் பதிகம் பெற்ற கட்டளை ஒன்றோடு மேலும் இரண்டு கட்டளை பெறுவன சுந்தரர் பாடிய பழம் பஞ்சுரப் பதிகங்கள் என்பதும், எனவே அவை பெற்ற மொத்த கட்டளைகள் மூன்றென்பதும் நன்கு புலனாகும். மேற்குறித்த ஐந்து யாப்பு விகற்பங்களும் 1, 2, 3 ஆம் யாப்பு விகற்பங்கள் சீர் வகையால் வேறுபடினும் ஓசையொப்புமை நோக்கி ஒரு கட்டளையாகவும் 4ஆம் யாப்பு விகற்பகம் ஒரு கட்டளையாகவும், 5ஆம் யாப்பு ஒரு கட்டளையாகவும் கொள்ளத்தக்கனவாகும்.

இனி, 54 முதல் 70 வரையுள்ள பதிகங்கள் தக்கேசிப் பண்ணுக்கு உரியன.

அழுக்கு மெய்கொடுன் திருவடி யடைந்தேன்
அதுவும் நான்படற் பாலதொன் றானால்
தனன தானன தானன தனனா
தனன தானன தானனா தானா

என்றாங்கு மாச்சீரும் விளச்சீரும் விரவி எண்சீரடியாக வருதல் இத்திருப்பதிகங்களின் கட்டளையடியாகும். 'தனன' தான ஆதலும், 'தானன' தனதன ஆதலும், 'தனனா' தானா ஆதலும், 'தானா' தனனா ஆதலும் அமையும். 54 முதல் 70 வரையுள்ள தக்கேசிப் பண்ணமைந்த திருப்பதிகங்கள் யாவும் ஒரே யாப்பினவாய் ஒரே கட்டளையின் அடங்குதலால், "தக்கேசிப் பேரிசையாறாக்கி'' எனவரும் திருமுறைக்கண்ட புராணத் தொடர், ''தக்கேசிப் பேரிசையொன்றாக்கி" என்று இருத்தல் வேண்டும் என்பது யாழ் நூலாசிரியர் கருத்தாகும்.

**71 முதல் 75 வரையுள்ள பதிகங்கள் காந்தாரப் பண்ணுக்கு உரியன.** இவற்றில் அமைந்துள்ள யாப்பு வகை நான்காகும்.

**யாப்பு 1**

யாழைப்பழித் தன்னமொழி மங்கையுமை பங்கன்
தானத்தன தானாதன தானாதன தானா

என வருவது 71ஆம் பதிகம். இதன் கண் முதற் சீராகிய "தானத்தன" என்பது, தனதத்தன, தந்தந்தன, தந்தத்தன, தனதனதன, தனந்தனதன, தனனாதன, தானாதன என வருதலும், இரண்டாஞ் சீராகவும் மூன்றாஞ்சீராகவும் வந்த தானாதன என்பது தன்னாதன ஆதலும், நான்காஞ் சீராகிய "தானா" தனனா ஆதலும் பொருந்தும்.

**யாப்பு 2**

எனக்கினித் தினைத்தனைப் புகலிட மறிந்தேன்
தனத்தன தனத்தன தனதன தனனா

என வருவது 72ஆம் பதிகம். 'தனத்தன' என்பது தனதன, தானன ஆதலும், ஈற்றுச் சீராகிய தனனா என்பது தானனா எனவும் தனதன எனவும் வருதலும் பொருந்தும்.

**யாப்பு 3**

கரையுங் கடலும் மலையுங் காலையும் மாலையு மெல்லாம்
தனனா தனனா தனனா தானன தானன தானா

எனவரும் 73, 75ஆம் பதிகங்கள் ஒரே யாப்பின் பாற்படும்.

**யாப்பு 4**

மின்னுமா மேகங்கள் பொழிந்திழிந் தருவி
வெடிபடக் கரையொடுந் திரைகொணர்ந்தெற்றும்
தானனா தானனா தனதன தானா
தனதன தனதன தனதன தானா

என எண் சீரடியாக வருதல் 74ஆம் பதிகத்தின் கட்டளையாகும். "காந்தாரம் பிரித்திரண்டாம்" எனத் திருமுறை கண்ட புராணம் கூறுதலால், காந்தாரப் பண்ணமைந்த திருப்பதிகங்கள் காந்தாரமும், பியந்தைக் காந்தாரமும் என இருதிறப்பட்டு இரண்டு கட்டளை பெறுவன எனக் கொள்ளுதல் ஏற்புடையதாகும். மேலே காட்டிய காந்தாரப் பதிகங்களில் 1, 2 ஆம் யாப்பு விகற்பங்கள் ஒரு கட்டளையாகவும் 3, 4 ஆம் விகற்பங்கள் மற்றொரு கட்டளையாகவும் கொள்ளத்தக்கன.

**76ஆம் பதிகம் பியந்தைக் காந்தாரமாகும்**

பொருவ னார்புரி நூலர் புணர்முலை யுமையவ ளோடும்
தனன தானன தானா தனதன தனதன தானா

எனவரும் இரண்டாந் திருமுறையில் 90ஆம் எண்பெற்ற "எந்தை யீசனெம் பெருமான்" என்னும் பியந்தைக் காந்தாரப் பதிகத்தை ஒத்து இத்திருப்பதிகம் அமைந்திருத்தல் அறியத்தக்கதாகும்.

77ஆம் பதிகம் காந்தாரப் பஞ்சமம், "ஒன்றாகுந் காந்தார பஞ்சமத்துக்கு" என்றமையால் இப்பண்ணமைந்த பதிகம் ஒரே கட்டளையினதாதல் பெறப்படும்.

பரவும் பரிசொன் றறியேன்நான் பண்டே யும்மைப் பயிலாதேன்
தனனா தனனா தனதானா தானா தானா தனதானா

என அறுசீராய் வருவது இதன் கட்டளையடியாகும். ஒவ்வொரு பாடலின் ஈற்றிலும் வந்துள்ள அடிகளோ என்பதனை நடுவேயுள்ள ககரமாகிய குற்றெழுத்து அடிக–ளோ என விட்டிசைத்து நிற்க அச்சொல் புளிமாங்காய் எனக் காய்ச்சீராயிற்று.

78 முதல் 82 வரையுள்ள பதிகங்கள் நட்ட பாடைப் பண்ணில் அமைந்தன. "ஓர் இரண்டாம் நன்றான சீர் நட்டபாடைக்கு" என்றமையால் இப்பதிகங்களில் அமைந்த கட்டளைகள் இரண்டு என்பது பெறப்படும்.

**கட்டளை 1**

வாழ்வாவது மாயம்மிது மண்ணாவது திண்ணம்
தானாதன தானாதன தானாதன தானா

எனவரும் "தானாதன" தனனாதன ஆதலும், "தானா" தனனா ஆதலும் அமையும். முதல் திருமுறையில் 11 முதல் 18 வரையுள்ள நைவள (நட்ட பாடை)ப் பதிகங்களையும் இத்திருமுறையில் முதலாகவுள்ள பித்தா பிறைசூடீ என்னும் இந்தளப்பதிகத்தையும், அடியொற்றியமைந்தது இக்கட்டளையடியாகும். 78, 79, 80, 82 ஆம் பதிகங்கள் ஒரே யாப்பின.

**கட்டளை 2**

கொன்று செய்த கொடுமை யாற்பல சொல்லவே
தான தான தனன தானன தானனா

எனவருவது 81 ஆம் பதிகமாகும்.

83 முதல் 85 வரையுள்ள பதிகங்கள் புறநீர்மை என்ற பண்ணமைந்தன. "குன்றாத புறநீர்மைக்கு இரண்டாகக் கூறும் இசை ஒன்றாக" எனத் திருமுறை கண்ட புராணம் கூறுதலால்

இப்பதிகங்களில் இரண்டு கட்டளைகள் உள என்பதும், கட்டளைகள் இரண்டாயினும் இப்பதிகங்களை இசைக்கும் ஓசை முறை ஒன்றே என்பதும் நன்கு புலனாம்.

**கட்டளை 1**

அந்தியும் நண்பகலும் அஞ்சுப தஞ்சொல்லி
தானன தானதனா தானன தானானா

எனவரும். முதற்சீரின் ஈற்றெழுத்து அடுத்த சீருடன் இயையவரும், தான தன தனனா தானன தானதனா என்னும் விகற்பமும், அவ்வாறே மூன்றாஞ்சீரின் ஈற்றெழுத்து நான்காஞ்சீருடன் இயையவரும், "தான தனனதனா தான தனனதனா" என்னும் விகற்பமும் இம்முதற் கட்டளையுள் அடங்கும். மூன்றாந் திருமுறையில் **56** முதல் **62** வரையுள்ள பஞ்சமம் என்ற பண்ணமைந்த பதிகங்களின் கட்டளையடியாகிய

தானன தானதனா – தன – தானன – தானதனா,

என்பதில் நடுவே நின்ற தன என்னும் ஓரசையை நீக்கப் புற நீர்மைப் பதிகங்களுக்கு உரியதாக மேற்காட்டிய கட்டளையடி வந்தெய்தும்.

**கட்டளை 2**

தொண்ட ரடித்தொழலும் சோதி யிளம்பிறையும்
சூதன மென்முலையாள் பாகமு மாகிவரும்

எனவரும் **84**ஆம் பதிகம்.

தான தனதனனா தான தனதனனா
தானன தானதனா தானன தானதனா

என மேற்குறித்த கட்டளையினை இரட்டிக்க வரும் கட்டளையடியினையுடையதாகும்.

**86** முதல் **89** வரையுள்ள பதிகங்கள் சீகாமரப் பண்ணைச் சார்ந்தன. இப்பதிகங்களில் யாப்பு விகற்பங்கள் இரண்டுள்ளன.

**யாப்பு 1**

விடையின்மேல் வருவானை வேதத்தின் பொருளானை
புளிமாங்காய் புளிமாங்காய் தேமாங்காய் புளிமாங்காய்

எனக் காய்ச்சீர் நான்கு கொண்ட அடியினால் இயன்ற தரவு கொச்சகக் கலிப்பாவாக அமைந்தன **86**, **89**ஆம் பதிகங்கள். இவை இரண்டாந் திருமுறையில் **40** முதல் **48** வரையுள்ள சீகாமரப் பதிகங்களை ஒத்தமைந்தன.

யாப்பு 2

மாட மாளிகை கோபு ரத்தொடு மண்ட பம்வள ரும்வளர்பொழில்
பாடல் வண்டறையும் பழனத் திருப்பனையூர்
தான தானன தான தானன தான தானன தானனாதனா
தான தானதனா தனனா தனதானா

என முன்னிரண்டடிகளைப் போன்று பின்னிரண்டடிகளும் வரும். 87, 88ஆம் பதிகங்கள் ஒரு யாப்பின. இவை, இரண்டாந் திருமுறையில் 49 முதல் 53 வரையுள்ள சீகாமரப் பதிகங்களையும், நாலாந் திருமுறையில் 20ஆம் எண் பெற்ற சீகாமரப் பதிகத்தினையும் ஒத்தமைந்திருத்தல் அறியத் தக்கதாகும்.

"காமரத்துக்கு ஒன்றாகப் போற்றினார்" எனத் திருமுறை கண்ட புராணம் கூறுதலால் மேற்காட்டிய யாப்பு விகற்பங்கள் இரண்டும் ஒரே கட்டளையாய் அடங்குமென்பது புலனாம்.

**90 முதல் 93 வரையுள்ள பதிகங்கள் குறிஞ்சிப் பண்ணைச் சார்ந்தன.** "உற்றவிசைக் குறிஞ்சிக்கு ஓர் இரண்டாக வகுத்தமைத்து" எனத் திருமுறை கண்டபுராணம் குறிப்பிடுதலால் சுந்தரர் பாடிய குறிஞ்சிப் பதிகங்கள் இரண்டு கட்டளையுடையன என்பது பெறப்படும். இப்பதிகங்களில் உள்ள யாப்பு விகற்பங்கள் மூன்றாகும்.

யாப்பு 1

மடித்தாடு மடிமைக்க ணன்றியே மனனே நீ வாழு நாளும்
புளி மாங்காய் புளிமாங்காய் தேமாங்காய் புளிமாங்காய் தேமா தேமா

எனக் காய்ச்சீர் நான்கும் மாச்சீர் இரண்டும் பெற்று அறுசீரடியாய் வரும். முதல் திருமுறையில் 129 முதல் 132 வரை அமைந்த பதிகங்களையும், இவ்வேழாந்திருமுறையில் 30ஆம் எண் பெற்ற நட்டராகப் பதிகத்தினையும் அடியொற்றியது 90ஆம் எண்ணுள்ள இத்திருப்பதிகமாகும்.

யாப்பு 2

பாட்டும் பாடிப் பரவித் திரிவார்
தானா தானா தனனா தனனா

எனவும்,

பந்துங் கிளியும் பயிலும் பாவை
தானா தனனா தனனா தானா

எனவும் பத்தெழுத்தடிகளாகவும்,

என்ன தெழிலு நிறையுங் கவர்வான்
தானா தனனா தனனா தனனா

எனவும்,

பணங்கொ ளரவம் பற்றிப் பரமன்
தனனா தனனா தானா தனனா,

எனவும் பதினோரெழுத்தடிகளாகவும்,

முழுநீ றணிமே னியின்மொய் குழலார்
தனனா தனனா தனனா தனனா

எனப் பன்னிரண்டெழுத்தடிகளாகவும் வருதல், இதன் கட்டளையமைப்பாகும். **91, 93, 94** ஆம் பதிகங்கள் ஒரே யாப்பின.

யாப்பு **3**

எற்றான் மறக்கே னெழுமைக்கு மெம்பெரு மானையே
தானா தனனா தனதான தானன தானனா

எனவரும் **92**ஆம் பதிகம் பலவாறு விகற்பித்து வரும் கட்டளையடியினையுடையதாகும்.

இப்பதிகமானது, **91, 93, 94** என்னும் எண் பெற்ற பதிகங்களோடு தாளம் ஒன்றப் பாடுதற்குரியது.

மேற்குறித்த பதிகங்களுள் **94**ஆம் எண் பெற்ற "அழல்நீர் ஒழுகி யனைய சடையும்" என்ற திருப்பதிகம் கௌசிகம் என்ற பண்ணுக்குரியதாக வெளிவந்த பதிப்புகளில் குறிக்கப் பெற்றுள்ளது. திருமுறை கண்ட புராணத்தில் சுந்தரர் அருளிய ஏழாந்திருமுறைப் பண்களை நிரல்படிக் கூறுமிடத்துக் குறிஞ்சிப் பண்ணின் பின் செந்துருத்தியும் அதனையடுத்துக் கௌசிகப் பண்ணும் முறையே இடம்பெற்றிருத்ததனாலும், குறிஞ்சிக்கும் செந்துருத்திக்கும் இடையேயுள்ள அழனீரொழுகி என்னும் **94**ஆம் பதிகம் முன் குறிஞ்சிப் பண்ணுக்கு உரியனவாகக் குறித்த இரண்டு கட்டளைகளுள் ஒன்றெனத் தெளிவாகத் தெரிதலாலும் அதனைக் கௌசிகம் எனக் கொள்வதைக் காட்டிலும் குறிஞ்சியெனக் கொள்ளுதலே ஏற்புடையதாகும்.

"உற்றவிசைக் குறிஞ்சிக்கோ ரிரண்டாக வகுத்தமைத்துப்
பற்றரிய செந்துருத்திக் கொன்றாகக் கவுசிகப்பாற்
றுற்றவிசை யிரண்டாக்கி"

எனத் திருமுறைகண்டபுராணம் கூறுதலால் **95**ஆம் பதிகமாகிய "மீளா அடிமை" என்னும் செந்துருத்திப் பதிகத்திற்கு முன்னுள்ள **94**ஆம் பதிகம் குறிஞ்சிப் பண்ணுக்கு உரியதென்பதும், செந்துருத்திப் பதிகத்தின் பின்னுள்ள "தூவாயா" என்னும் **96**ஆம் பதிகம் கௌசிகப் பண்ணுக்கு உரியதென்பதும் நன்கு பெறப்படும்.

செந்துருத்தி என்ற பண்ணின் பழைய பெயர் செந்நிறம் என்பதாகும். செந்துருத்திக்கு ஒன்றாக்கி என்றதனால் இஃது ஒரு கட்டளை பெறும் என்பது புலனாம்.

மீளா அடிமை யுமக்கே யாளாய்ப் பிறரை வேண்டாதே
தானா தனனா தனனா தானா தனனா தானானா

எனவரும் "தானா" தனனா ஆதலும், "தனனா" தானா ஆதலும், "தானானா" தனதானா ஆதலும் அமையும். ஏழாந்திருமுறையில் **96**ஆம் எண்பெற்ற இப்பதிகம். முதல் திருமுறையில் **66** முதல் **74** வரையுள்ள தக்கேசிப் பதிகங்களின் யாப்பினை ஒத்திருத்தல் இங்கு ஒப்புநோக்கத் தகுவதாகும்.

**96**ஆம் திருப்பதிகம் பஞ்சமம் என்ற பண்ணிற்கு உரியதாக அச்சிடப்பெற்ற பதிப்புகளிற் குறிக்கப் பெற்றுள்ளது. சுந்தரர் பாடியருளிய திருப்பதிகங்களில் செந்துருத்தி என வழங்கும் செந்நிறப் பண்ணிற்கும் பஞ்சமம் என்ற பண்ணிற்கும் இடையே கௌசிகம் என்ற பண் அமைந்ததாகத் திருமுறை கண்ட புராணம் கூறுதலால், தூவாயா என்ற முதற் குறிப்புடைய **96**ஆம் பதிகத்தினைக் கௌசிகப் பண்ணுக்கு உரியதாகக் கொள்ளவேண்டும் என்பது, விபுலானந்த அடிகளார் கருத்தாகும்.

> தூவாயா தொண்டுசெய் வார்படு துக்கங்கள்
> தனானா தானனா தானன தானானா

என்பது **96**ஆம் பதிகத்தின் கட்டளையடியாகும். "தானானா" தனதானான ஆதலும், "தானன" தனதன ஆதலும், அமையும். "கவுசிகப்பாற், றுற்றவிசை இரண்டாக்கி" என்பதனால், இப்பண் ஆளுடைய பிள்ளையார் அருளிய கவுசிகப் பதிகங்களிற் போன்று இங்கும் இரண்டு கட்டளை பெறுமெனக் கருத வேண்டியுள்ளது.

மூன்றாந் திருமுறையிலும் ஏழாந்திருமுறையிலும் கௌசிகம் என்ற பண்ணமைந்த பதிகங்களின் பின் பஞ்சமம் என்னும் பண்ணுக்குரிய பதிகங்கள் முறைப்படுத்தப் பெற்றுள்ளன. இம்முறையில் கௌசிகப் பண்ணுக்குரிய இறுதிப் பதிகம் பஞ்சமத்திற்கு உரியதாகவும் பஞ்சமத்திற்குரிய முதற்பதிகம் கௌசிகத்திற்கு உரியதாகவும் ஏடுகளிற் பண் பெயர்கள் இடம் மாறிக் குறிக்கப்படுதல் நிகழக்கூடியதேயாம். மூன்றாம் திருமுறையில் "விரையார் கொன்றையினாய்" என்ற முதற் குறிப்புடைய திருப்பதிகம் பஞ்சமம் என்ற பண்ணுக்குரிய இயலிசையமைப்புடையதாகவும், முன்னுள்ள கௌசிகப் பதிகங்களுடன் சேர்த்தெண்ணப் பட்டுள்ளது. அது போலவே இவ் ஏழாந் திருமுறையில் கௌசிகம் என்ற பண்ணுக்கு உரிய "தூவாயா" என்னும் **96**ஆம் பதிகம் பின்னுள்ள பஞ்சமம் என்ற பண்ணுக்குரிய பதிகங்களுடன் சேர்த்து எண்ணப் பெற்றிருத்தல் வேண்டும் எனத் தெரிகிறது.

**97** முதல் **100** வரையுள்ள திருப்பதிகங்கள் பஞ்சமம் என்ற எண்ணில் அமைந்தன. "தூய இசைப் பஞ்சமத்துக்கு அற்ற இசை ஒன்றாகி அரனருளால் விரித்துரைத்தார்" எனத் திருமுறை கண்ட புராண ஆசிரியர் தேவாரப் பண்களின் கட்டளை வகையினைக் கூறி முடித்துள்ளார். எனவே, ஏழாந்திருமுறையின் கடைசிப் பண்ணாக அமைந்தது பஞ்சமம் என்பதும், அப்பண்ணுக்குரிய பதிகங்கள் ஒரே கட்டளையாய் அடங்கும் என்பதும் நன்கு புலனாம்.

> ஆதியன் ஆதிரையன் – அயன் – மாலறி தற்கரிய
> தானன தானதனா தன தானன தானதனா

என வருவது இதன் கட்டளையடியாகும். **97–100** ஆம் பதிகங்கள் ஒரே யாப்பின. இவை மூன்றாந் திருமுறையிற் பஞ்சமம் என்ற பண்ணுக்கு உரிய **56–62** பதிகங்களை அடியொற்றி அமைந்தனவாகும்.

## 1. திருவெண்ணெய்நல்லூர்

### பதிக வரலாறு

திருக்கயிலாயத்தில் சிவபெருமானுக்குத் திருத்தொண்டு புரிந்துவந்த ஆலாலசுந்தரர் திருத்தொண்டத் தொகை வெளிப்படுதற்கேதுவாக, பூக்கொய்யவந்த சேடியர் இருவர்பால் சிறிது மனத்தைச் செலுத்த, பெருமான் கட்டளைப்படி திருமுனைப்பாடி நாட்டில் திருநாவலூரில் ஆதிசைவ அந்தணர் குலத்தில் சடையனாருக்கும் இசைஞானியாருக்கும் மகவாகத் தோன்றி நம்பியாரூரர் என்னும் திருநாமம் பெற்று வளர்ந்தார். மணப்பருவம் அடைந்த அவருக்குப் புத்தூரில் சடங்கவி சிவாசாரியாருடைய மகளை மணம் புரிவிக்க ஏற்பாடு செய்தனர். மணப்பந்தரில் சிவபெருமான் தாம் முன்பு கயிலையில் அளித்த வாக்கின்படி கிழவேதியராக வந்து ஓலைகாட்டி, ஆரூரரைத் தமக்கு அடிமை என்று திருவெண்ணெய்நல்லூரில் வழக்கிட்டு ஆட்கொண்டு "நம்மைச் சொற்றமிழ் பாடுக" என்று கட்டளையிட்டருளினார். அதுபோழ்து வன்றொண்டர் முன்பு இறைவனைப் "பித்தன்" என்று பேசிய சொல்லையே முதலாகக் கொண்டு பாடும்படி அருளிய இறைவன் அருளாணையின் வண்ணம் பாடியருளியது இத்திருப்பதிகம் (தி. 12 தடுத்தாட்கொண்ட புராணம் 70–74).

இத்திருப்பதிகம், சிவபிரானை நோக்கி, "அடியேன் உனக்கு முன்பே ஆளாகி, இப்பொழுது நீ வந்து என்னை உனக்கு அடியான்" என்று சொல்லியபொழுது, 'அடியவன் அல்லேன்' என, "எதிர்வழக்குப் பேசியது தகுமோ" என இரங்கி அருளிச்செய்தது.

**பண் : இந்தளம்** **பதிக எண் : 1**

மருதப் பெரும்பண்ணின் இரண்டாவது திறமான வடுகு என்ற திறத்தில் அகநிலைப் பண்ணாக 73 எண் பெற்றது. சம்பந்தர் இப்பண்ணில்தான் மிக அதிகமான 39 பதிகங்கள் பாடியிருக்கிறார். அப்பர் 3, சுந்தரர் 12 ஆக 54. திருமுறைகளிலேயே இப்பண்ணுக்குத்தான் அதிகமான பதிகங்கள். இவையன்றி, பதினோராந் திருமுறையிலுள்ள காரைக்காலம்மையாரின் பதிகங்களில் இரண்டாம் பதிகம் இந்தளம். சுந்தரமூர்த்தி சுவாமிகள் தம்மை இறைவன் "பித்தா" என்று தொடங்கிப் பாடும்படிப் பணித்தவுடன் பாடியதாகிய "பித்தா பிறைசூடிப் பெருமானே" என்று தொடங்கும் இப்பதிகம் இந்தளப் பண்ணுக்குரியது. இது ஹிந்தோளகம் என்ற இராகம் என்பர். பெருமிதம், மருட்கை, வெகுளி என்னும் சுவைகளையுடையது. 36 ஆம் மேளமாகிய சலநாடா என்பதில் ஜன்னியம். இதற்குரிய இராகம் லளிதபஞ்சமி என்றும், நாதநாமக்கிரியை என்றும் சொல்வதுண்டு. இந்தளத்துக்கு யாப்பு விகற்பகங்கள் பலவாகும். சம்பந்தர் விடந்தீர்த்த பதிகமாகிய சடையாயெனுமால், சதுரம் மறைதான் என்ற மறைக்காடு கதவு அடைக்கப் பாடிய பதிகம் முதலாயின இப்பண்ணுக்குரியவை. சுந்தரர் முதல்பதிகம் இந்தப் பண்ணில் தொடங்கினார் என்பதைச் சேக்கிழார், "முறையால் வருமதுரத்துடன் மொழி இந்தளம் முதலா" என்று தாமே பாடுகிறார். ஏனையோருக்கு இவ்வாறு கூறவில்லை.

திருவிசைப்பாவில் திருவாலியமுதனார் கோயில் மூன்றாம் பதிகம் இந்தளப் பண்.

### இந்தளம் (இயந்தளம்) இலக்கணம்

இயந்தளந் தளமாய் நயந்த பூவாய்
இலைமறை காய்மறை யெய்தும் நறும்பூ
பூவும் ஆகிப் பூச்சீர் பொருந்தி
அமைந்த நிற்பது இயந்தளப் பண்ணாம்

### பொருள்

இசை கொள்ளும் ஓசையானது தளந்தளமாகவும் (அடுக்காகவும்) சான்றோர்கள் விரும்பிய பூவாகவும், இலையிலும் காயிலும் மறைந்து நிற்கும் நறும்பூவாகவும், தண்பூவாகவும் ஆகிப் பூச்சீர் பொருந்தி நிற்பது இயந்தளப் பண்ணாகும்.

| மூர்த்தி | அருள்தரும் வேற்கண்ணி அம்மை உடனமர் அருள்மிகு தடுத்தாட் கொண்ட நாதர். | | |
|---|---|---|---|
| தல இருப்பிடம் | நடுநாட்டில் விழுப்புரம், பண்ருட்டி, திருக்கோயிலூர் முதலிய ஊர்களிலிருந்து பேருந்து வசதி உள்ளது. | | |
| தல மரம் | மூங்கில், வில்வம் | | |
| தீர்த்தம் | பெண்ணையாறு, தண்டதீர்த்தம் | | |
| பாடியவர் | சுந்தரர் | பதிகங்கள் | 2 |

1. பித்தாபிறை சூடீபெரு
 மானேயரு ளாளா
 எத்தான்மற வாதேநினைக்
 கின்றேன்மனத் துன்னை
 வைத்தாய்பெண்ணைத் தென்பால்வெண்ணெய்
 நல்லூரருட் டுறையுள்
 அத்தாஉனக் காளாய்இனி
 அல்லேன்என லாமே. 1

பித்தன் – பேரருள் உடையவன். பேரருள் பித்தோடு ஒத்தலின் 'பித்து' எனப்படும். எனவே பேரருள் உடைய சிவபெருமானுக்கே 'பித்தன்' என்னும் பெயர் உரியதாயிற்று.
எத்தான் – எதனாலும்

பித்தனே! பிறையைக் கண்ணியாகச் சூடியவனே! பெருமை உடையவனே! பெண்ணையாற்றின் தென்பால் உள்ள திருவெண்ணெய்நல்லூரின் கண்ணதாகிய, 'அருட்டுறை' என்னும் திருக்கோயிலின்கண் எழுந்தருளியிருக்கும் தலைவனே! எனது நெஞ்சத்துள் உன்னை அகலாது வைத்தருளினாய்; அதனால், எவ்வாற்றானும் உன்னை மறவாமலே நினைந்து, முன்பே உனக்கு அடியவனாகி, இப்பொழுது, 'உனக்கு அடியவன் அல்லேன்' என எதிர்வழக்குப் பேசியது பொருந்துமோ!

2. நாயேன்பல நாளும்நினைப்
 பின்றிமனத் துன்னைப்
 பேயாய்த்திரிந் தெய்த்தேன்பெற
 லாகாவருள் பெற்றேன்
 வேயார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய்
 நல்லூரருட் டுறையுள்
 ஆயாஉனக் காளாய்இனி
 அல்லேன்என லாமே. 2

இழிவு மிகுதிக்கு உவமை கூறுங்கால் நாயைக் கூறுதல் வழக்காதல் பற்றி "நாயேன்" என்றருளினார். பேய் பயனின்றி விரையத்திரியும், அலமரலை மிக உடைமை பற்றியே பேய்க்கு "அலகை" என்ற பெயரும் உண்டு.

மூங்கில்கள் நிறைந்து வரும் பெண்ணையாற்றின் தென்பால் உள்ள திருவெண்ணெய்நல்லூரின் கண்ணதாகிய அருட்டுறைத் திருக்கோயிலின்கண் எழுந்தருளியிருக்கும் தலைவனே; நாய்போலும் கீழ்மையுடையேனாகிய யான் உன்னை எனது இளைய நாள்கள் பலவற்றினும் மனத்தால் நினைத்தல் இன்றிப் பேய்போல அலைந்து இளைத்தேன்; ஆயினும், இதுபோழ்து, பெறுதற்கு அரிய உனது திருவருளை நான் பெற்றேன். இப்பேற்றை எனக்கு அளிக்க வந்த உனக்கு, முன்பே நான் அடியவனாகி, இப்பொழுது, 'அடியவன் அல்லேன்' என எதிர்வழக்குப் பேசியது பொருந்துமோ!

3. மன்னேமற வாதேநினைக்
கின்றேன்மனத் துன்னைப்
பொன்னேமணி தானேவயி
ரம்மேபொரு துந்தி
மின்னார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய்
நல்லூரருட் டுறையுள்
அன்னேஉனக் காளாய்இனி
அல்லேன்என லாமே. 3

தலைவனே, கரையை மோதி, பொன்னும் மணியும், வயிரமும் ஆகிய இவற்றைத் தள்ளிக் கொண்டு, ஒளிமிக்கு வருகின்ற பெண்ணையாற்றின் தென்பால் உள்ள திருவெண்ணெய்நல்லூரின் கண்ணதாகி அருட்டுறைத் திருக்கோயிலின்கண் எழுந்தருளியுள்ள தாய் போன்றவனே! உனக்கு நான் முன்பே அடியவனாகி, இப்பொழுது, 'அடியவன் அல்லேன்' என்று எதிர்வழக்குப் பேசியது பொருந்துமோ! இனிமேல், உன்னை என் மனத்தில் ஒருபோதும் மறவாமலே நினைப்பேன்.

இப்பதிகத்தின் முதற் சொல்லாகிய "பித்தா" இறைவன் அளித்த சொல்லாகும். அச்சொல்லை இறைவன் முன்னை ஆசிரியரது மொழியினின்றே எடுத்து அளித்தனன் என்பது அச்சொல்லை அடுத்து சுவாமிகளது பயிற்சி வாயிலாகத் தோற்றுவித்த "பிறைசூடீ" என்னும் தொடரால் பெறப்படும்.

4. முடியேன்இனிப் பிறவேன்பெறின்
மூவேன்பெற்றம் ஊர்தீ
கொடியேன்பல பொய்யேஉரைப்
பேனைக்குறிக் கொள்நீ
செடியார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய்
நல்லூரருட் டுறையுள்
அடிகேள்உனக் காளாய்இனி
அல்லேன்என லாமே. 4

இடபத்தை ஊர்பவனே! ஒளி நிறைந்த பெண்ணையாற்றின் தென்பால் உள்ள திருவெண்ணெய்நல்லூரின் கண்ணதாகிய அருட்டுறைத் திருக்கோயிலின்கண் எழுந்தருளியிருக்கும் தலைவனே! உனக்கு நான் முன்பே அடியவனாகி, இப்பொழுது, 'அடியவன் அல்லேன்' என எதிர்வழக்குப் பேசியது பொருந்துமோ! அப்பொருந்தாமையை அகற்றி என்னை நீ தெளிவித்தருளினமையால், இனி நான் இறக்கவும், மீளப் பிறக்கவும், இவ்வுலகில் வாழப் பெறின் மூப்படைந்து வருந்தவும் ஆற்றேனாகின்றேன். நெறிகோடினே னாகிப் பொய்ம்மைகள் பலவற்றையே பேசுவேனாகிய என்னை நீ வெறாது ஏற்றருள்.

பித்தா, பிறைசூடீ என்னும் தொடர் திருஞானசம்பந்த சுவாமிகளால் முதலிலேயே கையாளப்பட்டுள்ளது.
"விண்ணோர் பெருமானே விகிர்தா விடையூர்தீ
பெண்ணா ணலியாகும் பித்தா பிறைசூடீ
எண்ணா ரெருக்கத்தம் புலியூ ருறைகின்ற
அண்ணா எனவல்லார்க் கடையா வினைதானே"
பெற்றம் – எருது. ஊர்தி – வாகனம். 1–89–3
ஊர்தீ – ஊர்கின்றவன்

5. பாதம்பணி வார்கள்பெறு
பண்டம்மது பணியா
யாதன்பொரு ளானேன்அறி
வில்லேன்அரு ளாளா
தாதார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய்
நல்லூரருட் டுறையுள்
ஆதீஉனக் காளாய்இனி
அல்லேன்என லாமே. 5

திருஞானசம்பந்தரைப் பின்பற்றுவதாகச் சுந்தரர்
"நல்லிசை ஞானசம்பந்தனும் நாவினுக்
கரசனும் பாடிய நற்றமிழ் மாலை
சொல்லியவே சொல்லி ஏத்துகப்பானை" 7–67–5
என்ற பாடல் மூலம் இயம்புகிறார்.
பண்டம் – முத்தி.

அருளாளனே, பூக்களின் மகரந்தம் நிறைந்த பெண்ணையாற்றின் தென்பால் உள்ள திருவெண்ணெய்நல்லூரின் கண்ணதாகி அருட்டுறைத் திருக்கோயிலின்கண் எழுந்தருளியுள்ள முதல்வனே! உனக்கு நான் முன்பே அடியவனாகி, இப்பொழுது, 'அடியவன் அல்லேன்' என எதிர் வழக்குப் பேசியது பொருந்துமோ! அப்பொருந்தாச் செய்கையைச் செய்தமையால் அறிவில்லேனாயினேன்; அதனால், 'ஆதன்' என்னும் சொற்குப் பொருளாயினேன்; ஆயினும், என்னை இகழாது உன் திருவடியை வணங்கி வாழ்கின்ற அறிவர் பெறும் பேற்றை அளித்தருள்.

6. தண்ணார்மதி சூடீதழல்
போலுந்திரு மேனீ
எண்ணார்புர மூன்றும்எரி
யுண்ணநகை செய்தாய்
மண்ணார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய்
நல்லூரருட் டுறையுள்
அண்ணாஉனக் காளாய்இனி
அல்லேன்என லாமே. 6

"இப்பொழுது அல்லேன் எனல் ஆமே"
என்றதனால் "ஆளாயது முன்பே" என்பது போந்தது.

தட்பம் நிறைந்த திங்களைச் சூடியவனே! நெருப்புப் போலும் திருமேனியை உடையவனே! உன்னை மதியாதவரது அரண்கள் மூன்றையும் தீ உண்ணும்படி சிரித்தவனே! மூழ்குவோரது பாவத்தைக் கழுவுதல் பொருந்திய பெண்ணையாற்றின் தென்பால் உள்ள திருவெண்ணெய்நல்லூரின் கண்ணதாகிய அருட்டுறைத் திருக்கோயிலின்கண் எழுந்தருளியிருக்கும் தலைவனே! உனக்கு நான் முன்பே அடியவனாகி, இப்பொழுது, 'அடியவன் அல்லேன்' என எதிர்வழக்குப் பேசியது பொருந்துமோ!

7. ஊனாய்உயி ரானாய்உட
லானாய்உல கானாய்
வானாய்நில னானாய்கட
லானாய்மலை யானாய்
தேனார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய்
நல்லூரருட் டுறையுள்
ஆனாய்உனக் காளாய்இனி
அல்லேன்என லாமே. 7

பூக்களின் தேன் நிறைந்த பெண்ணையாற்றின் தென்பால் உள்ள திருவெண்ணெய்நல்லூரின் கண்ணதாகிய அருட்டுறைத் திருக்கோயிலின்கண் நீங்காது எழுந்தருளியிருப்பவனே! நீ உடலிடத்து நின்று பொருள்களை உணர்ந்து வருகின்ற உயிர்கள் ஆகியும், அவைகள் நிற்கின்ற அவ்வுடல்களாகியும், வானாகியும், நிலமாகியும், கடலாகியும், மலையாகியும் நிற்கின்றாய்; இப்பெற்றியன் ஆகிய உனக்கு நான் முன்பே அடியவனாகி, இப்பொழுது, 'அடியவன் அல்லேன்' என எதிர்வழக்குப் பேசியது பொருந்துமோ!

எல்லாவற்றையும் உடைய பெரியோனாகிய உனக்கு ஆளாதலினும் சிறந்த பேறு ஒன்று உளதோ! அப்பேறு எனக்குக் கிடைத்திருக்கவும் அதன் பெருமை அறியாது இகழ்ந்தது பொருந்துமோ?

ஆனாய் – இடப வாகனக் கடவுளே.

8. ஏற்றார்புரம் மூன்றும்மெரி
யுண்ணச்சிலை தொட்டாய்
தேற்றாதன சொல்லித்திரி
வேனோசெக்கர் வான்நீர்
ஏற்றாய்பெண்ணைத் தென்பால்வெண்ணெய்
நல்லூரருட் டுறையுள்
ஆற்றாய்உனக் காளாய்இனி
அல்லேன்என லாமே. 8

பெண்ணையாற்றின் தென்பால் உள்ள திருவெண்ணெய்நல்லூரின் கண்ணதாகிய அருட்டுறைத் திருக்கோயிலின்கண் எழுந்தருளியிருக்கும் நன்னெறியானவனே! நீ, உனக்குப் பகையாய் எதிர்ந்தவர்களது அரண்கள் மூன்றையும் தீ உண்ணும்படி, போர் செய்து அழித்தாய். சிவந்த சடையிடத்து ஆகாய கங்கையைத் தாங்கினாய். அப்பெருமைகளை அறியாமை காரணமாகத் தோன்றும் சொற்களைச் சொல்லி நான் வீணே உழல்வேனோ! அங்ஙனம் உழலும் நெறியானே, முன்பு உனக்கு அடியவனாயதற்கு மாறாக இப்பொழுது, 'அடியவன் அல்லேன்' என எதிர்வழக்குப் பேசியது பொருந்துமோ!

"உனக்காளாய் இனி அல்லேன் எனலாமே" என்பது பதிக மகுடமாகும்.

ஏற்றார் – எதிர்த்தவர்.

9. மழுவாள்வலன் ஏந்தீமறை
யோதீமங்கை பங்கா
**தொழுவாரவர் துயராயின**
**தீர்த்தல்லுன தொழிலே**
செழுவார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய்
நல்லூரருட் டுறையுள்
அழகாஉனக் காளாய்இனி
அல்லேன்என லாமே. 9

மழுப்படையை வலப்பக்கத்தில் ஏந்தியவனே! வேதத்தை ஓதுபவனே! உமையை ஒரு பாகத்தில் உடையவனே! செழுமை வாய்ந்து இடையறாது ஒழுகுகின்ற பெண்ணையாற்றின் தென்பால் உள்ள திருவெண்ணெய்நல்லூரின் கண்ணதாகிய அருட்டுறைத் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் அழகனே! **உன்னை வணங்குவாரது துன்பங்களை நீக்குதல் உனது தொழில்** என்பதனால், என்னை வலிந்து ஆட்கொள்ள வந்தாய். அதனை அறியாது, முன்பே உனக்கு அடியவனாகியதனை மறுத்து, இப்பொழுது, 'அடியவன் அல்லேன்' என எதிர்வழக்குப் பேசியது பொருந்துமோ!

கோயிலுக்குத் திருவருட்டுறை என்று பெயர்.

10. காரூர்புன லெய்திக்கரை
கல்லித்திரைக் கையால்
பாரூர்புக ழெய்தித்திகழ்
பன்மாமணி யுந்திச்
சீரூர்பெண்ணைத் தென்பால்வெண்ணெய்
நல்லூரருட் டுறையுள்
ஆரூரன்என் பெருமாற்காள்
அல்லேன்என லாமே. 10

கல்லி – தோன்ற.

மேகத்தினின்றும் ஒழுகும் தன்மையை உடைய நீர் திரண்டு பொருந்தி, அலைகளாகிய கைகளால் கரையைக் குத்தி, நிலம் முழுதும் பரவிய புகழைப்பெற்று, ஒளி விளங்குகின்ற பல சிறந்த மணிகளைத் தள்ளிவந்து, அழகு மிகுகின்ற பெண்ணையாற்றின் தென்பால் உள்ள திருவெண்ணெய்நல்லூரின் கண்ணதாகிய அருட்டுறைத் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானுக்கு, ஆரூரன் 'அடியவனல்லேன்' என எதிர்வழக்குப் பேசியது பொருந்துமோ!

## 2. திருப்பரங்குன்றம்

பண் : இந்தளம் பதிக எண் : 2

### பதிக வரலாறு

சுந்தரர் மூவேந்தர்களோடும் மதுரையில் ஆலவாய்ப் பெருமானையும், ஆப்பனூர், ஏடகம் முதலான பதிகளின் நாயகர்களையும் பாடியபின் பரங்குன்றம் சென்று பழிப்பது போலப் புகழ்தல் வகையாகப் பாடியருளியது இப்பதிகமாகும். (உள்ளுறைச் சிறப்பு வகையால் பாடியது).

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் ஆவுடையம்மை உடனமர் அருள்மிகு பரங்கிரிநாதர். | | |
| **தல இருப்பிடம்** | பாண்டிய நாட்டில் மதுரையம்பதியிலிருந்து திருநெல்வேலி செல்லும் நெடுஞ்சாலையில் 3 கி. மீட்டர் தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | கல்லுத்தி | | |
| **தீர்த்தம்** | சரவணப்பொய்கை, இலக்குமி தீர்த்தம் | | |
| **பாடியவர்** | திருஞானசம்பந்தர், நம்பியாரூரர் | **பதிகங்கள்** | 2 |

11. கோத்திட்டையுங் கோவலுங் கோயில்கொண்டீர்
உமைக்கொண்டுழல் கின்றதோர்
கொல்லைச்சில்லைச்
சேத்திட்டுக்குத் தித்தெரு வேதிரியுஞ்
சிலபூதமும் நீரும் திசைதிசையன
சோத்திட்டுவிண் ணோர்பல ருந்தொழநும்
மரைக்கோவணத் தோடொரு
தோல்புடைசூழ்ந்
தார்த்திட்டதும் பாம்புகைக் கொண்டதும்பாம்
படிகேள்உமக் காட்செய அஞ்சுதுமே. 1

கோத்திட்டை – மிக்க மேட்டு நிலம்.
கோவல் – மிக்க வன்னிலம். சில நூல்களில் திருக்கோவலூர் என்று உள்ளது.
பரங்குன்று – மேலான மலை.
திட்டு – மேடு.
சோத்தம் – தாழ்ந்தோர், உயர்ந்தோரிடத்துக் கூறும் வணக்கச் சொல்.
சில்லை – முரடு. கொல்லை – முல்லை நிலம்.

இறைவரே! நீர், பெரிய மலையையும், சுரத்தையும் கோயிலாகக் கொண்டுள்ளீர். உம்மைச் சுமந்து கொண்டு திரிகின்ற முல்லை நிலத்து இளைய ஓர் எருது, மண்மேடுகளைத் தன் கொம்பால் குத்தித் தெருவில் துள்ளித் திரியும். சில பூதங்களும், அவற்றின் உரப்பல் முதலிய செயல்களும் உம்மைச் சூழ்ந்த பல திசைகளிலும் உள்ளன. தேவர் பலரும், 'சோத்தம்' எனச் சொல்லி வணங்குமாறு, நீர் அரையிற் கோவணத்தோடு, ஒரு தோலைச் சுற்றி, அதன்மேற் கச்சாகக் கட்டியுள்ளதும் பாம்பு; கையிற் பிடித்திருப்பதும் பாம்பு; அதனால் அடியேங்கள் உம்மை அணுகி நின்று உமக்குப் பணி செய்ய அஞ்சுவேம்.

12. முண்டந்தரித் தீர்முது காடுறைவீர்
முழுநீறுமெய் பூசுதிர் மூக்கப்பாம்பைக்
கண்டத்திலுந் தோளிலுங் கட்டிவைத்தீர்
கடலைக்கடைந் திட்டதோர் நஞ்சையுண்டீர்
பிண்டஞ்சுமந் தும்மொடுங் கூடமாட்டோம்
பெரியாரொடு நட்பினி தென்றிருந்தும்
**அண்டங்கடந் தப்புறத்தும் மிருந்தீர்**
அடிகேள்உமக் காட்செய அஞ்சுதுமே. 2

தம் வாழ்நாளில் ஒவ்வொரு உயிரும் ஆகாய விமானத்தில் ஒருமுறையாவது பயணம் செய்து 40,000 அடி உயரத்தில் அண்டங்கள் எப்படி இருக்கின்றன என்று சன்னல்கள் வழியாகப் பார்த்துச் சிவபரத்துவத்தை அனுபவித்து உணர வேண்டும்.
இவ்வுடம்பு கொண்டு உம்மை அணுகுதல் இயலாது என்பது உள்ளுறைப் பொருள்.
முண்டம் – மூன்று கீற்றாக அணியும் திருநீறு.
பிண்டம் – உடம்பு.

இறைவரே! அடியோங்கள் 'பெரியாரொடுநட்டல் இன்பந் தருவது' என்று கருதியிருப்போமே ஆயினும், நீர் தலை மாலையை அணிந்துள்ளீர், மயானத்தில் வாழ்வீர், அதன்கண் உள்ள சாம்பலை உடல் முழுதும் பூசிக் கொள்வீர். கொடிய பாம்பைக் கழுத்திலும் தோளிலும் கட்டி வைத்திருக்கின்றீர். தேவர்கள், கடலைக் கடைந்து கொணர்ந்து ஊட்டிய பெருவிடத்தினை எளிதாக உண்டீர். இவ்வண்டத்தைக் கடந்து, அதற்குமேல் உள்ள அண்டத்துக்கும் அப்பால் இருப்பீர், அதனால், ஊனினது திரட்சியாகிய இவ்வுடம்பைச் சுமந்துகொண்டு உம்மோடு தொடர்புகொள்ள வல்லேம் அல்லேம். ஆதலின், உம்மை அணுகிநின்று உமக்குப் பணி செய்ய அஞ்சுவேம்.

13. மூடாய முயலகன் மூக்கப்பாம்பு
முடைநாறிய வெண்டலை மொய்த்தபல்பேய்
பாடாவரு பூதங்கள் பாய்புலித்தோல்
பரிசொன்றறி யாதன பாரிடங்கள்
தோடார்மலர்க் கொன்றையும் துன்னெருக்குந்
துணைமாமணி நாகம் அரைக்கசைத்தொன்
றாடாதன வேசெய்தீர் எம்பெருமான்
அடிகேள்உமக் காட்செய அஞ்சுதுமே. 3

எம்பெருமானிரே! இறைவரே! உம்மிடத்து உள்ளவை அறியாமையுடைய முயலகன், கொடிய பாம்பு, முடை நாற்றம் வீசும் வெண்டலை, நெருங்கிய பல பேய்கள், பாட்டுப் பாடித்திரிகின்ற பூதங்கள், பாய்கின்ற புலியின் தோல், நன்மை, தீமை அறியாத பாரிடங்கள் என்னும் இவையே. உமக்கு மாலை – இதழ் நிறைந்த கொன்றைமலரும் எருக்கம்பூவுமாம். இவற்றோடு அரையில், பெரிய மணியையுடைய பாம்பைக் கட்டிக் கொண்டு, எங்கட்குப் பொருந்தாத செயல்களையே மேற்கொண்டீர்; அதனால், அடியேங்கள் உம்மை அணுகி உமக்குப் பணி செய்ய அஞ்சுவேம்.

"அடிகேள் உமக்காட் செய அஞ்சுதுமே" பதிக மகுடம்.

திருக்கடைக் காப்பிலே நம்பிகள் தாமே பதிகக் கருத்துரைத்தலையும் காணலாம்.

பாரிடங்கள் – சிவபூதங்கள்

14. மஞ்சுண்டமா லைமதி சூடுசென்னி
மலையான்மடந் தைமண வாளநம்பி
பஞ்சுண்டவல் குற்பணை மென்முலையா
ளொடுநீருமொன் றாயிருத் தல்லொழியீர்
நஞ்சுண்டுதே வர்க்கமு தங்கொடுத்த
நலமொன்றறி யோம்உங்கை நாகமதற்
கஞ்சுண்டுப டம்மது போகவிடீர்
அடிகேள்உமக் காட்செய அஞ்சுதுமே. 4

இறைவரே! மேகம் சூழ்ந்த மாலைப்பொழுதில் தோன்றும் பிறையைச் சூடிய முடியினையுடைய, மலைமகளாகிய நங்கைக்கு மணவாள நம்பியாகிய நீர், துகில் சூழ்ந்த புறத்தினையும், பெருத்த ஊற்றினிமை பொருந்திய தனங்களையும் உடைய அவளும் நீரும் ஒன்றாய் இருத்தலை ஒரு ஞான்றாயினும் ஒழிகின்றிலீர். நீர் நஞ்சினை உண்டு, தேவர்கட்கு அமுதம் ஈந்த நற்செயலை நாங்கள் சிறிதும் அறிந்திலோம்; உமது கையில் உள்ள பாம்பிற்கோ படங்கள் ஐந்து உள்ளன. அப்பாம்பினை ஒருஞான்றும் அப்பாற்போக விடுகின்றிலீர்; அடியோங்கள் உம்மை அணுகி உமக்குப் பணி செய்ய அஞ்சுவேம்.

மஞ்சுண்ட – மேகத்துள் மறைந்த "அடிகேள் உமக்காட்செய அஞ்சுதுமே" என்பது பதிக மகுடம்.

15. பொல்லாப்புறங் காட்டகத் தாட்டொழியீர்
புலால்வாயன பேயொடு பூச்சொழியீர்
எல்லாம்அறி வீர்இது வேயறியீர்
என்றிரங்குவேன் எல்லியும் நண்பகலும்
கல்லால்நிழற் கீழொரு நாட்கண்டதுங்
கடம்பூர்க்கரக் கோயிலின் முன்கண்டதும்
அல்லால்விர கொன்றிலம் எம்பெருமான்
அடிகேள்உமக் காட்செய அஞ்சுதுமே. 5

பூச்சு – இணங்கிய ஆடல்; கூத்து.
விரகு – அறிவு.

எம்பெருமானிரே! இறைவரே! நீர், பொல்லாங்குடை மயானத்தில் ஆடுதலைத் தவிரீர்; அங்குப் புலால் வாயோடு திரிவனவாகிய பேய்களோடு ஆரவாரித்தலை ஒழியீர்; 'எல்லாவற்றையும் அறிகின்ற நீர் இது மட்டில் அறிகின்றிலிரே' என்று, உம் அடியவனாகிய யான், இரவும் பகலும் கவல்வேன். முன் ஒருநாள் கல்லால நிழலில் ஆசிரியக் கோலமாகக் கண்டதும், மற்றொருநாள் கடம்பூர்க் கரக்கோயிலில் இலிங்க மூர்த்தியாகக் கண்டதும் தவிர, பிறிதொரு காலத்தும் மயானத்தின் இழிவை நீர் அறிந்து நீங்கியதை யாம் சிறிதும் கண்டதிலம். அதனால், அடியேங்கள் உம்மை அணுகி உமக்குப் பணி செய்ய அஞ்சுவேம்.

16. தென்னாத்தெனாத் தெத்தெனா என்றுபாடிச்
சில்பூதமும் நீருந் திசைதிசையன
பன்னான்மறை பாடுதிர் பாசூருளீர்
படம்பக்கங்கொட் டுந்திரு வொற்றியூரீர்
பண்ணார்மொழி யாளையொர் பங்குடையீர்
படுகாட்டகத் தென்றுமோர் பற்றொழியீர்
அண்ணாமலை யேன்என்றீர் ஆரூருளீர்
அடிகேள்உமக் காட்செய அஞ்சுதுமே. 6

படம்பக்கநாதர் – திருவொற்றியூர் இறைவர் பெயர்
படுகாடு – யாவரும் அழியும் காடு.

இறைவரே! 'தென்னாத்தெனாத் தெத்தெனா' என்று வாயில் வந்தபடி பாடுகின்ற சில பூதங்களும், அவற்றின் செயல்களும் உம்மைச் சூழ்ந்த பல திசைகளிலும் உள்ளன. ஆயினும், நீர், பலவாகிய நான்கு வகைப்பட்ட வேதங்களைப் பாடுவீர்; திருப்பாசூரில் இருக்கின்றீர் எனினும், 'படம்பக்கம்' என்னும் பறையைக் கொட்டும் தலமாகிய திருவொற்றியூரீராய்த் தோன்றுகின்றீர். பண் போலும் மொழியினை உடைய உமையை ஒரு பாகத்தில் நீங்காது கொண்டு, குடிவாழ்க்கையீராய்க் காணப்படுகின்றீர். ஆயினும், புறங்காட்டிடத்தில் பற்று நீங்கமாட்டீர். 'அண்ணாமலையிடத்தேன்' என்றீர் ஆயினும், ஆரூரில் இருக்கின்றீர். அதனால், உம்மை ஒருதலையாகத் துணிதல் கூடாமையால், அடியோங்கள் உமக்கு ஆட்பட்டுப் பணிசெய்ய அஞ்சுவேம்.

17. சிங்கத்துரி மூடுதிர் தேவர்கணந்
தொழநிற்றீர்பெற் றமுகந் தேறிடுதிர்
பங்கம்பல பேசிடப் பாடுந்தொண்டர்
தமைப்பற்றிக்கொண் டாண்டு
விடவுங்கில்லீர்
கங்கைச்சடை யீர்உம் கருத்தறியோம்
கண்ணுமூன்றுடை யீர்கண்ணே
யாய்இருந்தால்
அங்கத்துறு நோய்களைந் தாளகில்லீர்
அடிகேள்உமக் காட்செய அஞ்சுதுமே. 7

பங்கம் – இழிவு.

"சிங்கம்" என்றது நரசிங்கத்தை.

திருமால் நரசிங்கமாய்த் தோன்றி, இரணியனை அழித்துச் செருக்குற்று உயிர்களைத் துன்புறுத்த, சிவப்பரம்பொருள் அதைக் கொன்று போர்த்திய வரலாறு.

கங்கையை உடைய சடையை உடையவரே! இறைவரே! நீர், வேட்டுவர்போல நரசிங்கத்தின் தோலைப் பார்த்துக் கொள்வீர் ஆயினும், தேவர் கூட்டம் வணங்க நிற்பீர். யானை முதலியன இன்றி எருதை விரும்பி ஊர்வீர். ஆயினும், 'இவர் சிலரை ஒட்டி அடிமைகொள்ளல் எற்றிற்கு' என உம்மைப் பலரும் பலகுறை சொல்லுமாறு, பாடவல்ல தொண்டர்களை வலிந்து ஈர்த்து அடிமை கொண்டு, அவர்களை விடவும்மாட்டீர். அதனால், உம் கருத்தினை நாங்கள் அறியகில்லோம். கண்களோ மூன்றுடையீர். ஆயினும், நாங்கள் உம் எதிர்நின்று அகலாதிருக்கின்றோம் என்றால், நீர் எங்கள் உடம்பில் பொருந்தியுள்ள நோயைத் தீர்த்துப் பணிகொள்ள மாட்டீர் ஆகலின், அடியோங்கள் உமக்கு ஆட்பட்டுப் பணி செய்ய அஞ்சுவேம்.

18. பிணிவண்ணத்த வல்வினை தீர்த்தருளீர்
பெருங்காட்டகத் திற்பெரும் பேயும்நீரும்
துணிவண்ணத்தின் மேலும்ஓர் தோலுடுத்துச்
சுற்றுநாகத்த ராய்ச்சுண்ண நீறுபூசி
மணிவண்ணத்தின் மேலும்ஓர் வண்ணத்தராய்
மற்றும்மற்றும் பலபல வண்ணத்தராய்
அணிவண்ணத்த ராய்நிற்றீர் எம்பெருமான்
அடிகேள்உமக் காட்செய அஞ்சுதுமே. 8

இறைவனைச் சார்ந்த பொருள் யாதாயினும், அஃது அழகுடையதாகி அவனுக்குப் பேரழகு செய்வதால் அணிவண்ணத்தாராகிறார்.

எம்பெருமானிரே! இறைவரே! நீர், பிணிக்கும் இயல்பினையுடைய எங்கள் வலியவினையை நீக்கி அருள் பண்ணுகின்றிலீர்; அன்றியும், பெரிய காட்டிடத்திற் பெரிய பேயும் நீருமாய்த் துணிந்து நிற்கின்ற தன்மையின் மேலும், தோல் ஒன்றை உடுத்து, அதன் மேற் சுற்றிய பாம்பை உடையவராய், சாம்பலை நறுமணப் பொடியாகப் பூசிக் கொண்டு, நீல மணிபோலும் நிறத்தின் மேலும் மற்றொரு நிறத்தையுடையவராய், அதன்மேலும் பற்பல நிறத்தை உடையவராய், எல்லாவற்றானும் அழகிய வடிவத்தை உடையவராகியே நிற்றலால் அடியோங்கள் உமக்கு ஆட்பட்டுப் பணிசெய்ய அஞ்சுவேம்.

| | |
|---|---|
| **19.** கோளாளிய குஞ்சரங் கோளிழைத்தீர்<br>மலையின்தலை யல்லது கோயில்கொள்ளீர்<br>வேளாளிய காமனை வெந்தழிய<br>விழித்தீர்அது வன்றியும் வேய்புரையும்<br>தோளாள்உமை நங்கையொர் பங்குடையீர்<br>உடுகூறையுஞ் சோறுந்தந் தாளகில்லீர்<br>ஆளாளிய வேகிற்றீர் எம்பெருமான்<br>அடிகேள்உமக் காட்செய அஞ்சுதுமே. 9<br><br>கோளாளிய – கொல்ல வந்த<br>கோளிழைத்தீர் – கொன்றீர்<br>கூறையுஞ்சோறும் – உடையும், உணவும் | எம்பெருமானிரே! இறைவரே! நீர், கொலைத் தொழிலை மேற்கொண்ட யானையைக் கொல்லுதல் செய்தீர்; மலை உச்சியில் அல்லது கோயில் கொள்ளமாட்டீர்; வேட்கையை விளைக்கும் அம்பினை ஏவிய காமனை வெந்து அழியுமாறு அழித்தீர்; அதற்கு மாறாயும், மூங்கில் போலும் தோள்களை யுடையவளாகிய, 'உமை' என்னும் நங்கையை ஒருபாகத்தில் உடையீர்; நும் அடியவர்க்கு, உடுக்கின்ற கூறையையும், உண்கின்ற சோற்றையும் கொடுத்து ஆளமாட்டீர்; அடியவரை அடிமை கொள்ளுதல் மட்டுமே வல்லீர்; அதனால், அடியேங்கள், உமக்கு ஆட்பட்டுப் பணிசெய்ய அஞ்சுவேம். |
| **20.** பாரோடுவிண் ணும்பக லுமாகிப்<br>பனிமால்வரை யாகிப் பரவையாகி<br>நீரோடுதீ யுந்நெடுங் காற்றுமாகி<br>நெடுவெள்ளிடை யாகி நிலனுமாகித்<br>தேரோட வரையெடுத் தவரக்கன்<br>சிரம்பத்திறுத் தீரும் செய்கையெல்லாம்<br>ஆரோடுங்கூ டாஅடி கேள்இதுஎன்<br>அடியோம்உமக் காட்செய அஞ்சுதுமே. 10 | இறைவரே! மண்ணுலகமும் விண்ணுலகமும் ஆகியும், மலை ஆகியும், கடல் ஆகியும், எவ்விடத்தும் இயங்குகின்ற காற்றும் ஆகியும், எல்லையற்ற வெளி ஆகியும், நிலம் ஆகியும் இவ்வாறு எல்லாப் பொருளும் ஆகி நின்றீர். இனி, தனது ஊர்தி தடையின்றி ஓடுதற் பொருட்டு நுமது மலையைப் பெயர்த்த அரக்கனது தலைகள் பத்தினையும் நெரித்தீர். உம்முடைய இச்செய்கைகள் எல்லாம், யார் செய்கையோடும் ஒவ்வா; இஃது என்! இவற்றால் அடியோங்கள் உமக்குப் பணிசெய்ய அஞ்சுவேம். |
| **21.** அடிகேள்உமக் காட்செய அஞ்சுதுமென்<br>றமரர்பெரு மானையா ரூரன்அஞ்சி<br>**முடியால்உல காண்டமூ வேந்தர்முன்னே**<br>**மொழிந்தாறுமோர் நான்குமோ**<br>ரொன்றினையும்<br>படியாஇவை கற்றுவல் லவடியார்<br>பரங்குன்றமே யபர மன்னடிக்கே<br>குடியாகிவா னோர்க்கும்ஓர் கோவுமாகிக்<br>குலவேந்தராய் விண்முழு தாள்பவரே. 11<br><br>மூவேந்தர்களும் உடனின்று வணங்க அவர் முன்பு இப்பதிகம் பாடப்பட்டதென்பதற்கும், நம்பிகளின் பாண்டி நாட்டு யாத்திரை வரலாற்றுக்கும் சரித ஆதரவாகிய அகச்சான்று இப்பாடலாகும். படிதல் – வணங்குதல். படி – முறை; நெறி. | தேவர் பெருமானாகிய சிவபெருமானிடத்தில் அச்சங்கொண்டு, நம்பி ஆரூரன், முடியொடு நின்று உலகத்தை ஆள்கின்ற மூவேந்தர் முன்னிலையில், 'அடிகேள் உமக்கு ஆட்செய அஞ்சுதும்' என்று சொல்லிப் பாடிய இப்பதினொரு பாடல்களையும், இவையே தமக்கு நெறியாகும்படி ஓதி உணரவல்ல அடியார்கள், திருப்பரங்குன்றத்தை விரும்பி எழுந்தருளியுள்ள அப்பரமனது திருவடி நிழலிலே வாழ்கின்றவராய், அரசர் குடியில் தோன்றிய அரசரோடு ஒருங்கொத்து மண்முழுதும் ஆண்டு, பின் தேவர்க்கும் ஒப்பற்ற அரசராகி விண் முழுதும் ஆள்பவரே ஆவர். பதிகப் பயன் சொல்கிறார். |

## 3. திருநெல்வாயில் அரத்துறை

**பண் : இந்தளம்** **பதிக எண் : 3**

"ஒரு கண்ணிலேன்; உன்னையன்றி ஒரு பற்றிலேன்; அடியேனுய்யப் போவதோர் சூழல் சொல்லே" என்று ஆரூரர் இப்பதிகம் பாடுகிறார். இப்பதிகம் தமிழ் இலக்கிய நயமும், நீதி ஞான மொழிகளின் நயமும், தத்துவ நிச்சயமாகிய உபதேச நயமும் செறிந்த அருமைப்பாடுடையது. திருக்குறட் கருத்துக்களும் காணப்படுவது. எந்தை ஈசன் ஏறமர் கடவுளென்ற ஆளுடைய பிள்ளையாரின் பதிகம் பெற்ற பதி இதுவாகும். "கொச்சையிற் சதுர்வேதச் சிறுவ நிற்கருட் கவிகை நித்திலச் சிவிகையைக் கொடுத்தருளீசன்" என்று இத்தலத்து அருணகிரியார் திருப்புகழில் ஆளுடையப் பிள்ளையார் முத்துச்சிவிகை பெற்ற வரலாறு குறிக்கப்பட்டுள்ளது.

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் ஆனந்தநாயகி உடனமர் அருள்மிகு அரத்துறைநாதர். | | |
| **தல இருப்பிடம்** | நடுநாட்டில் தொழுதூர் – விருத்தாச்சலம் சாலையில் தொழுதூரிலிருந்து 20 கி.மீ தொலைவிலும் விருத்தாச்சலத்திலிருந்து 25 கி.மீ. தொலைவிலும் உள்ளது. | | |
| **தல மரம்** | ஆலமரம் | | |
| **தீர்த்தம்** | நீலமலர்ப்பொய்கை, அன்ன மலர்ப்பொய்கை | | |
| **பாடியவர்** | மூவர் | **பதிகங்கள்** | 3 |

22. கல்வாய்அகி லுங்கதிர் மாமணியுங்
கலந்துந்தி வருந்நிவ வின்கரைமேல்
நெல்வாயி லரத்துறை நீடுறையுந்
நிலவெண்மதி சூடிய நின்மலனே
நல்வாயில்செய் தார்நடந் தார்உடுத்தார்
நரைத்தார்இறந் தார்என்று நானிலத்தில்
சொல்லாய்க்கழி கின்ற தறிந்தடியேன்
தொடர்ந்தேன்உய்யப் போவதொர்
சூழல்சொல்லே. 1

"உய்யப் போவதொர் சூழல் சொல்லே" பதிக மகுடமாகும்.
கல் – மலை. நிவ – நிவா நதி.
ஈற்றேகாரம் குறுகி வந்தது.
நல்வாயில் செய்தல் – குழவி பிறந்த மகிழ்ச்சி நலம் பகர்ந்து சடங்கு செய்தல்.

மலையிடத்துள்ள அகில்களையும், ஒளியை யுடைய மாணிக்கங்களையும் ஒன்று கூட்டித் தள்ளிக்கொண்டு வருகின்ற நிவாநதியின் கரைமேல் உள்ள திருநெல்வாயில் அரத்துறையின்கண் என்றும் எழுந்தருளி யிருக்கும், நிலவினையுடைய வெள்ளிய பிறையைச் சூடிய மாசற்றவனே! உலகியலில் நின்றோர் அனைவரும், 'நல்ல துணையாகிய இல்லாளை மணந்தார்; இல்லற நெறியிலே ஒழுகினார்; நன்றாக உண்டார்; உடுத்தார்; மூப்படைந்தார்; இறந்தார்' என்று உலகத்தில் சொல்லப்படும் சொல்லை உடையவராய் நீங்குவதன்றி நில்லாமையை அறிந்து, உன்னை அடைந்தேன்; ஆதலின், அடியேன் அச்சொல்லிலிருந்து பிழைத்துப் போதற்குரிய ஒரு வழியினைச் சொல்லியருள்.

23. கறிமாமிள கும்மிகு வன்மரமும்
மிகவுந்தி வருந்நிவ வின்கரைமேல்
நெறிவார்குழ லாரவர் காணடஞ்செய்
நெல்வாயி லரத்துறை நின்மலனே
வறிதேநிலை யாகஇம் மண்ணுலகின்
நரனாக வகுத்தனை நானிலையேன்
**பொறிவாயில்இவ் வைந்**தினை யும்மவியப்
பொருதுன்னடி யேபுகுஞ் சூழல்சொல்லே. 2

இத்திருப்பாடல் "பொறிவாயில் ஐந்தவித்தான்" என்னும் திருக்குறளை (6) நினைப்பிப்பது.

கறிக்கப்படுகின்ற மிளகையுடைய கொடியையும், மிக்க வலிய மரங்களையும் மிகுதியாகத் தள்ளிக்கொண்டு வருகின்ற நிவா நதியின் கரைமேல் உள்ள, நெறித்த நீண்ட கூந்தலையுடைய மகளிர்தாம் பிறர் அனைவரும் விரும்பிக் காணத்தக்க நடனத்தைப் புரிகின்ற திருநெல்வாயில் அரத்துறையின்கண் எழுந்தருளியிருக்கும் மாசற்றவனே! உயிர்கள் பலவும் பயன் ஏதும் இன்றிப் பிறந்து இறக்கும் இம் மண்ணுலகத்தில் அடியேனை மகனாகப் படைத்தாய்; ஆதலின், நான்இறவாது இரேன்; அதனால், 'பொறி' எனப்படுகின்ற, அவாவின் வாயில்களாகிய இவ்வைந்தினையும் அடங்குமாறு வென்று, உன் திருவடிக்கண்ணே புகுதற்குரிய ஒரு வழியினைச் சொல்லியருள்.

24. புற்றாடர வம்மரை ஆர்த்துகந்தாய்
புனிதாபொரு வெள்விடை யூர்தியினாய்
**எற்றேஒரு கண்ணிலன்** நின்னையல்லால்
நெல்வாயி லரத்துறை நின்மலனே
மற்றேல்ஒரு பற்றிலன் எம்பெருமான்
வண்டார்குழ லாள்மங்கை பங்கினனே
அற்றார்**பிற விக்கடல் நீந்தியேறி**
அடியேன்உய்யப் போவதொர்
சூழல்சொல்லே. 3

அறக்கடவுள் உருத்திரிந்து வந்த இடபம் அறவிடை. திரிபுர தகன காலத்தில் திருமால் உருத்திரிந்து வந்து தாங்கிய இடபமே போர்விடை. "விடை" ஆகும் பேற்றைப் பல அடியார்களும் பெற்றுள்ளனர். ஒவ்வொரு கால யுகத்திலும் அது ஒருவருக்குப் புண்ணியம்.
அற்றம் – இறுதி. இத்திருப்பாடல் "பிறவிப் பெருங்கடல் நீந்துவர்" என்னும் திருக்குறளை (10) நினைப்பிப்பது.

புற்றின்கண் வாழ்கின்ற ஆடுகின்ற பாம்பை விரும்பி அரையின்கண் கட்டியவனே! தூய்மையானவனே! போர் செய்கின்ற வெண்மையான இடப ஊர்தியை உடையவனே! எம்பெருமானே! வண்டுகள் ஒலிக்கின்ற கூந்தலையுடைய உமையம்மையை ஒரு பாகத்தில் உடையவனே! திருநெல்வாயில் அரத்துறையின்கண் எழுந்தருளியிருக்கும் மாசற்றவனே! அடியேன் ஒருகண் இல்லாதவனாய் இருக்கின்றேன்; இஃது எத்தன்மைத்து என்பேன்! மற்றும் வினவின், உன்னையன்றி வேறொரு பற்றுக்கோடு இல்லேன்; ஆதலின், அடியேன், இறப்புப் பொருந்திய பிறவிக் கடலைக் கடந்து கரையேறிப் பிழைத்துப் போதற்குரிய ஒரு வழியினைச் சொல்லியருள்.

25. கோஒடுயர் கோங்கலர் வேங்கையலர்
மிகவுந்தி வருந்நிவ வின்கரைமேல்
நீடுயர் சோலைநெல் வாயிலரத்
துறைநின்மல னேநினை வார்மனத்தாய்
ஓஒடுபு னற்கரை யாம்இளமை
**உறங்கிவ்விழித் தாலொக்கும் இப்பிறவி**
வாஅடியி ருந்துவருந் தல்செய்யா
தடியேன்உய்யப் போவதொர்
சூழல்சொல்லே. 4

கோடு – கொம்பு. கோங்கு – மரவகை.
பிறப்பு – உறங்கியபின் விழித்தாற் போல்வது.
இறப்பு – விழித்தபின் உறங்கினாற் போல்வது.
இது, உறங்குவது போலும் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு
என்னும் திருக்குறளை (339) மேற்கொண்டு ஓதியது.

கிளைகள் உயர்ந்த கோங்க மரத்தின் மலர்களையும், வேங்கை மரத்தின் மலர்களையும் மிகுதியாகத் தள்ளிக் கொண்டு வருகின்ற நிவா நதியின் கரைமேல் உள்ள, நெடியனவாக ஓங்கிய சோலைகளை உடைய திருநெல்வாயில் அரத்துறையின்கண் எழுந்தருளியிருக்கின்ற மாசற்றவனே! உன்னை நினைக்கின்றவரது நெஞ்சத்தில் வாழ்பவனே! இப்பிறப்பு உறங்கியபின் விழித்தாற் போல்வது; இதன்கண் உள்ள இளமையோ, ஓடுகின்ற நீரின் கரையை ஒக்கும்; ஆதலின், 'என் செய்வது' என்று மெலிவுற்று நின்று வருந்தாது, அடியேன், இப் பிறவியிலிருந்து பிழைத்துப் போதற்குரிய ஒரு வழியினைச் சொல்லியருள்.

26. உலவும்முகி லிற்றலை கற்பொழிய
உயர்வேயொ டிழிநிவ வின்கரைமேல்
நிலவும்மயி லாரவர் தாம்பயிலும்
நெல்வாயி லரத்துறை நின்மலனே
புலன்ஐந்து மயங்கி அகங்குழையப்
பொருவேலொர் நமன்றமர் தாம்நலிய
அலமந்தும யங்கி அயர்வதன்முன்
அடியேன்உய்யப் போவதொர்
சூழல்சொல்லே. 5

"புலன் ஐந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி"
என்ற திருஞானசம்பந்தர் தேவாரத்தைப் பின்பற்றுகிறார்.
கல் பொழிய – மலை மேல் மழை பொழிய.
மயிலார் – மயில் போன்ற சாயலையுடைய பெண்கள்.
அலமந்து – வருந்தி.

உலாவுகின்ற மேகங்களினின்றும் மலையின்கண் மழை பொழியப்பட, அந்நீர், ஓங்கிய மூங்கில்களோடு இழிந்து வருகின்ற நிவாநதியின் கரைமேல் உள்ள, விளங்குகின்ற மயில்போலும் மகளிர் ஆடல் பாடல்களைப் புரிகின்ற திருநெல்வாயில் அரத்துறையின் கண் எழுந்தருளியுள்ள மாசற்றவனே! ஐந்து புலன்களும் தத்தமக்கு உரிய பொறிகளுக்கு எதிர்ப்படாது மாறும்படியும், மனம் மெலியும்படியும், போர் செய்கின்ற முத்தலை வேலை (சூலத்தை) உடைய கூற்றுவனது ஏவலர் வந்து வருத்த, பற்றுக்கோடின்றி, உணர்வு தடுமாறி நின்று இளைத்தற்குமுன், அடியேன், இறப்பினின்றும் பிழைத்துப் போதற்குரிய ஒரு வழியினைச் சொல்லியருள்.

27. ஏலம்மில வங்கம் எழிற்கனகம்
மிகவுந்தி வருந்நிவ வின்கரைமேல்
நீலம்மலர்ப் பொய்கையில் அன்னமலி
நெல்வாயி லரத்துறை யாய்ஒருநெல்
வாலூன்ற வருந்தும் உடம்பிதனை
மகிழாதழ காஅலந் தேன்இனியான்
ஆலந்நிழ லில்லமர்ந்தாய் அமரா
அடியேன்உய்யப் போவதொர்
சூழல்சொல்லே. 6

அமரன் – மரித்தல் இல்லாதவன்.
நெல்வால் – நெல்லின் சிறிய நுனி

'ஏலம் இலவங்கம்' என்னும் மரங்களையும், அழகிய பொன்னையும் மிகுதியாகத் தள்ளிக் கொண்டு வருகின்ற நிவா நதியின் கரையில் உள்ள, நீலோற்பல மலர்ப் பொய்கையில் அன்னங்கள் நிறைந்திருக்கும் திருநெல்வாயில் அரத்துறையில் எழுந்தருளியுள்ளவனே! அழகனே! ஆல் நிழலில் அமர்ந்தவனே! என்றும் இறவாதிருப்பவனே! ஒரு நெல்லின் வால் ஊன்றினும் பொறாது வருந்துவதாகிய இவ்வுடம்பினை யான் உறுதியுடையது என்று கருதி மகிழாது உறுதியை நாடி உழன்றேன்; அடியேன் இதனினின்றும் பிழைத்துப் போதற்குரிய ஒரு வழியினைச் சொல்லியருள்.

28. சிகரம்முகத் திற்றிர ளாரகிலும்
மிகவுந்தி வருந்நிவ வின்கரைமேல்
நிகரின்மயி லாரவர் தாம்பயிலுந்
நெல்வாயி லரத்துறை நின்மலனே
மகரக்குழை யாய்**மணக் கோலமதே**
**பிணக்கோலம தாம்பிற வியிதுதான்**
**அகரம்முத லின்னெழுத் தாகிநின்றாய்**
அடியேன்உய்யப் போவதொர்
சூழல்சொல்லே. 7

இத்திருப்பதிகத்திலேயே நான்காவது முறையாகத் திருக்குறளை மேற்கொண்டு அருளிச் செய்கிறார். மணக்கோலமதே பிணக்கோலமதாம் பிறவி – மணமென மகிழ்வர் பின்னே பிணமெனச் சுடுவர் – என்ற ஞானம்.
"மணமகனே பிணமகனாய் மணப்பறையே பிணப்பறையாய் அணியிழையார் வாழ்த்தொலிபோ யழுகையொலியாய்க் கழியக் கணமதனிற் பிறந் திறுமிக் காயத்தின் வரும் பயனை உணர்வுடையார் பெறுவர் உணர் வொன்று மிலார்க்கொன்று மிலை" – திருவிளையாடற் புராணம்
"அகர வுயிர்போல அறிவாகிஎங்கு நிகரில் இறை நிற்கு நிறைந்து" திருவருட்பயன் – உமாபதிசிவம்.

மலைச் உச்சியினின்றும், திரளாய் நிறைந்த அகிலையும் பிறவற்றையும் மிகுதியாகத் தள்ளிக்கொண்டு வருகின்ற நிவா நதியின் கரையில் உள்ள, உலகின் மயில்கள் போலாத வேறுசில மயில்கள்போலும் சிறந்த மகளிர் ஆடல் பாடல்களைப் புரிகின்ற திருநெல்வாயில் அரத்துறையின்கண் எழுந்தருளியிருக்கின்ற மாசற்றவனே! காதில் மகர குண்டலத்தை அணிந்தவனே! எழுத்துக்களுக்கு எல்லாம் அகரமாகிய முதல் எழுத்துப்போன்று, பொருள்களுக்கெல்லாம் முதற்பொருளாகி நிற்பவனே! இவ்வுடம்புதான், மணக் கோலந்தானே கடிதிற் பிணக்கோலமாய் மாறுகின்ற நிலையாமையை உடையது; ஆதலின், அடியேன் இதனினின்றும் பிழைத்துப் போதற்குரிய ஒரு வழியைச் சொல்லியருள்.

29. திண்டேர்நெடு வீதி யிலங்கையர்கோன்
திரள்தோள்இரு பஃதும்நெ ரித்தருளி
ஞெண்டாடுநெ டுவயல் சூழ்புறவின்
நெல்வாயி லரத்துறை நின்மலனே
**பண்டேமிக நான்செய்த பாக்கியத்தாற்**
பரஞ்சோதிநின் நாமம் பயிலப்பெற்றேன்
அண்டாஅம ரர்க்கம ரர்பெருமான்
அடியேன்உய்யப் போவதொர்
சூழல்சொல்லே. 8

திண்ணிய தேர்களை உடைய, நீண்ட தெருக்களையுடைய இலங்கையில் உள்ளார்க்கு அரசனாகிய இரவாணனது திரண்ட தோள்கள் இருபதையும் முன்னர் நெரித்துப் பின்னர் அவனுக்கு அருள்பண்ணி, நண்டுகள் உலாவுகின்ற நீண்ட வயல் சூழ்ந்த, முல்லை நிலத்தையுடைய திருநெல்வாயில் அரத்துறையின்கண் எழுந்தருளியிருக்கின்ற மாசற்றவனே! மேலான ஒளி வடிவினனே! தேவனே! தேவர்க்குத் தேவராய் உள்ளார்க்குத் தலைவனே! நான் முற்பிறப்பிற் செய்த நல்வினையினால் உனது பெயரைப் பலகாலும் சொல்லும் பேற்றினைப் பெற்றேன்; இனி, அடியேன், உலகியலினின்றும் பிழைத்துப் போவதற்குரிய ஒரு வழியினைச் சொல்லியருள்.

பண்டே நான் செய்த பாக்கியத்தாற் – "என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே இருங் கடல் வையத்து" என்ற திருஞானசம்பந்தர் பாசுரத்தை நினைவு கூர்கிறார்.

இத்திருப்பாடல் உட்பட இப்பதிகத்தின் நிறைவுப் பாடலிலும் திருத்தேர் நெடுவீதிகளைக் குறிப்பிடுகிறார்.

நாமம் – திருவைந்தெழுத்து.

நாமம் பயின்றதற்காகப் பலனைக் கேட்கிறார்.

30. மாணாவுரு வாகியொர் மண்ணளந்தான்
மலர்மேலவன் நேடியுங் காண்பரியாய்
நீணீண்முடி வானவர் வந்திறைஞ்சுந்
நெல்வாயி லரத்துறை நின்மலனே
வாணார்நுத லார்வலைப்பட் டடியேன்
பலவின்கனி ஈயது போல்வதன்முன்
ஆணோடுபெண் ணாமுரு வாகிநின்றாய்
அடியேனுய்யப் போவதொர்
சூழல்சொல்லே. 9

சிறப்பில்லாத குறள் உருவாகி உலகத்தை அளந்த திருமாலும், மலரின்கண் இருக்கும் பிரமனும் தேடியும் காணுதற்கு அரியவனே! நீண்ட முடியினையுடைய தேவர்கள் வந்து வணங்குகின்ற, திருநெல்வாயில் அரத் துறையின்கண் எழுந்தருளியிருக்கின்ற மாசற்றவனே! ஆணும் பெண்ணுமாகிய உருவத்தைக் கொண்டு நிற்பவனே! அடியேன், ஒளி பொருந்திய நெற்றியையுடைய மாதரது மையலாகிய வலையிற்பட்டு, பலாப்பழத்தில் வீழ்ந்த ஈயைப் போல அழிவதற்குமுன், அவர் மையலினின்றும் பிழைத்துப் போவதற்குரிய ஒரு வழியினைச் சொல்லியருள்.

31. நீரூரு நெடுவயல் சூழ்புறவின்
நெல்வாயி லரத்துறை நின்மலனைத்
தேரூர்நெடு வீதிநன் மாடமலி
தென்னாவலர் கோனடித் தொண்டன்அணி
ஆரூரன் உரைத்தன நற்றமிழின்
மிகுமாலையொர் பத்திவை கற்றுவல்லார்
காரூர்களி வண்டறை யானைமன்ன
ரவராகியொர் விண்முழு தாள்பவரே. 10

நீர் பாய்கின்ற நீண்ட வயல்கள் சூழ்ந்த முல்லை நிலத்தை உடைய திருநெல்வாயில் அரத்துறையின்கண் எழுந்தருளியிருக்கின்ற மாசற்றவனாகிய இறைவனை, தேர் ஓடும் நீண்ட தெருக்களில் நல்ல மாடமாளிகைகள் நிறைந்த, தென்னாட்டில் உள்ள திருநாவலூரில் உள்ளவர்க்குத் தலைவனும், சிவபெருமானுக்கு அடித்தொண்டனும் ஆகிய அழகிய ஆரூரன் பாடிய, நல்ல தமிழ்மொழியினால் ஆகிய உயர்ந்த பாமாலையின்கண் உள்ள பத்துப் பாடல்களாகிய இவற்றைக் கற்று உணரவல்லவர், கருமை மிக்க, களிப்பினை உடைய வண்டுகள் ஒலிக்க வருகின்ற யானையை உடைய மன்னர்களாகி மண்ணுலகம் முழுதும் ஆண்டு, பின் தேவர்க்குத் தலைவராய் ஒப்பற்ற விண்ணுலகம் முழுதும் ஆள்பவர் ஆவர்.

அடித்தொண்டு – சிவபூசை; தவநெறி.

சுந்தரர் சங்கிலியைப் பிரியேன் என்று உரைத்துப் பின் பிரிந்தமையால் இரண்டு கண்களையும் இழந்து கச்சி ஏகம்பனைப்பாடி இடக்கண் மட்டும் பெற்றுத் திருவாரூர் நோக்கிச் செல்கையில் இத்தலத்துக்கு வருகிறார்.

இப்பதிகத்தின் மூன்றாவது பாடலில் அவர் பாடியது அகச்சான்றாகும்.

## 4. திருஅஞ்சைக்களம்

**பண் : இந்தளம்** **பதிக எண் : 4**

சுந்தரர் திருவஞ்சைக் களம் சென்று சிவபெருமான் உலகத்தவர் வெறுக்குங் கோலங்கள் பலவற்றை விரும்பி மேற்கொள்ளுதற்குக் காரணம் என்ன என்று வினவும் முகத்தால், அவையனைத்தும் அவன் தன் பொருட்டன்றி உயிர்களின் பாசத்தை அறுத்தற் பொருட்டே கொள்கின்றனவாதலைப் பெறவைத்து, தமது வாழ்க்கையாகிய பாசத்தையும் அறுத்திட வேண்டும் என்று இப்பதிகத்தை அருளிச்செய்ய சிவபெருமான் நாயனாரைக் கயிலைக்கு அழைத்து வரும்படி வெள்ளை யானையுடன் தேவர்களை விடுத்தருளினார். "என்னே ?" என்று 1, 2, 5, 6 ஆம் பாடல்களில் இறைவரை முன்னிலைப்படுத்தி வினாவுரைப் பதிகம் போல அருளிச் செய்துள்ளார். திருஞானசம்பந்தரும், அரசுகளும் பாடிய பதிகங்களில் வினாவுரை அடியாரை நோக்கிக் கேட்பதாய் அமைந்துள்ளன.

| **மூர்த்தி** | அருள்தரும் உமையம்மை உடனமர் அருள்மிகு அஞ்சைக் களத்தப்பர் | | |
|---|---|---|---|
| **தல இருப்பிடம்** | கேரள மாநிலத்தில் திருச்சூர் – கொடுங்கோளூரிலிருந்து இரண்டு கி.மீ. தூரத்தில் உள்ளது. | | |
| **தல மரம்** | சரக்கொன்றை | | |
| **தீர்த்தம்** | சிவகெங்கை | | |
| **பாடியவர்** | நம்பியாரூரர் | **பதிகம்** | 1 |

32. தலைக்குத்தலை மாலை அணிந்ததென்னே
சடைமேற்கங்கை வெள்ளந் தரித்ததென்னே
அலைக்கும்புலித் தோல்கொண் டசைத்ததென்னே
அதன்மேற்கத நாகங்கச் சார்த்ததென்னே
மலைக்குந்நிக ரொப்பன வன்றிரைகள்
வலித்தெற்றி முழங்கி வலம்புரிகொண்
டலைக்குங்கட லங்கரை மேல்மகோதை
அணியார்பொழில் அஞ்சைக் களத்தப்பனே.
1

மகோதை – ஊரின் பெயர்
திருவஞ்சைக்களம் – கோயிலின் பெயர்
சிவபெருமான் தலைமாலையை மார்பில் அணிதலே யன்றித் தலையிலும் அணிந்துள்ளான். இது தலையில் அணியும் உருத்திராக்கம் போல்வதாம். தலைகள் – இறந்த பிரமன் முதலியோருடையவை. கதம் – சினம். திருவஞ்சைக்களக் கோயில் சிவலிங்கத் திருமேனியின் மேல் பின்புறம் ஒரு சிறு புடைப்பாகிய அடையாளம் காணலாம்.
அதனையே தலைக்கு தலை மாலையாகவும் ஆரூரர் பாடியிருக்கலாம்.
கச்சு – உடையினை நெகிழவிடாமல் மேற்கட்டும் உடை அல்லது வார்.

மலைக்கு நிகராகிய தன்மையால் தம்மில் ஒப்பனவாகிய வலிய அலைகள் வலம்புரிச் சங்குகளைப் பற்றி ஈர்த்து வந்து எறிந்து முழங்கி மோதுகின்ற கடலினது அழகிய கரையின் கண்ணதாகிய 'மகோதை' என்னும் நகரத்தின்கண் உள்ள, அழகு நிறைந்த சோலைகளையுடைய, 'திருவஞ்சைக்களம்' என்னும் திருக்கோயிலில் எழுந்தருளி யிருக்கின்ற தந்தையே! நீ தலைக்கு அணிகலமாகத் தலைமாலையை அணிந்தது ஏன்? சடையின்மேல், 'கங்கை' என்னும் ஆற்றைத் தாங்கியது ஏன்? கொல்லும் தன்மையுடைய புலியினது தோலை உரித்தெடுத்து அரையில் உடுத்தது ஏன்? அவ்வுடையின்மேல் சினத்தையுடைய பாம்பைக் கச்சாகக் கட்டியது ஏன்?

33. பிடித்தாட்டிஓர் நாகத்தைப் பூண்டதென்னே
பிறங்குஞ்சடை மேற்பிறை சூடிற்றென்னே
பொடித்தான்கொண்டு மெய்ம்முற்றும்
பூசிற்றென்னே
புகர்ஏறுகந் தேறல் புரிந்ததென்னே
மடித்தோட்டந்து வன்றிரை யெற்றியிட
வளர்சங்கம்அங் காந்துமுத் தஞ்சொரிய
அடித்தார்கட லங்கரை மேல்மகோதை
அணியார்பொழில் அஞ்சைக் களத்தப்பனே.
2

"அணியார் பொழில் அஞ்சைக் களத்தப்பனே" பதிக மகுடம்.

வலிய அலைகள் தம் வடிவத்தைச் சுருளாகச் செய்து ஓடிவந்து மோதுதலினால், கரு வளர்கின்ற சங்குகள் வாய் திறந்து முத்துக்களை ஈன, இங்ஙனம் அலைந்து முழங்குகின்ற கடலினது அழகிய கரையின் கண்ணதாகிய, 'மகோதை' என்னும் நகரின்கண் உள்ள, அழகு நிறைந்த சோலைகளையுடைய திருவஞ்சைக்களம் என்னும் திருக்கோயிலில் எழுந்தருளி யிருக்கின்ற தந்தையே! நீ, விரும்பத் தகாத பாம்பை, பிடித்து ஆட்டுதலையும், பூணாகப் பூணுதலையும் மேற்கொண்டது ஏன்? விளங்குகின்ற சடையின்கண் பிறையைச் சூடியது ஏன்? சாம்பலை எடுத்து உடம்பு முழுதும் பூசிக் கொண்டது ஏன்? இழிந்த எருதினையே ஊர்தியாகக் கொள்ள விரும்பியது ஏன்?

**34.** சிந்தித்தெழு வார்க்கு நெல் லிக்கனியே
**சிறியார்பெரி யார்மனத் தேறலுற்றால்**
முந்தித்தொழு வார்இற வார்பிறவார்
முனிகள்முனி யேஅம ரர்க்கமரா
சந்தித்தட மால்வரை போற்றிரைகள்
தணியாதிட றுங்கட லங்கரைமேல்
அந்தித்தலைச் செக்கர்வா னேஒத்தியால்
அணியார்பொழில் அஞ்சைக்
களத்தப்பனே. 3

மனத்தேறல் உற்றார் சிறியார் பெரியார் – உம்மைத் தம் மனத்தின் கண்ணே தெளிவடைதலைப் பெற்றால் சிறியவர் பெரியவராகிறார்.

மூங்கில்களையுடைய பெரிய மலைகள் போலும் அலைகள் இடைவிடாது மோதுகின்ற கடலினது அழகிய கரையின் கண்ணதாகிய, மகோதை என்னும் தலத்தில் உள்ள அழகு நிறைந்த சோலைகளையுடைய 'திருவஞ்சைக்களம்' என்னும் திருக்கோயிலில் எழுந்தருளி யிருக்கின்ற தந்தையே! உன்னை நினைந்து துயிலுணர்வார்க்கு நெல்லிக்கனி போன்றவனே! முனிவர்கட்கெல்லாம் முனிவனே! தேவர்கட்கெல்லாம் தேவனே! உன்னை உள்ளந்தெளியப்பெற்றால், சிறியாரும் பெரியாராவர். விரைந்து வந்து உன்னை வணங்குபவர் இறத்தலும் பிறத்தலும் இலராவர். அவரது உள்ளத்தைப் பிணித்தற்கு நீ, மாலைக் காலத்தில் தோன்றும் செவ்வானம் போலும் அழகிய திருமேனியை உடையையாய் இருக்கின்றனை.

**35.** இழைக்கும்மெழுத் துக்குயி ரேஒத்தியால்
இலையேஒத்தி யால்உளை யேஒத்தியால்
குழைக்கும்பயிர்க் கோர்புய லேஒத்தியால்
அடியார்தமக் கோர்குடி யேஒத்தியால்
மழைக்குந்நிக ரொப்பன் வன்றிரைகள்
வலித்தெற்றி முழங்கி வலம்புரிகொண்
டழைக்குங்கட லங்கரை மேல்மகோதை
அணியார்பொழில் அஞ்சைக் களத்தப்பனே.
4

இழைக்கும் – ஒலிக்கும்.
இழைத்தல் – செய்தல். குழைதல் – வாடுதல்.
மெய்யெழுத்து – நாம்.
உயிர்எழுத்து – சிவம்.
மெய்யெழுத்துக்கு உயிர் அதனை இயக்கும் உயிரெழுத்து. இலை – இல்லாதவர். உளை – உள்ளவர்.
ஒத்தி – ஒப்பாய் – ஒத்து இருக்கின்றாய்.
இறைவன் இல்லாதவன் போறலாவது – ஆய்வு முறையில் எவ்வாற்றால் தேடினும் அங்ஙனம் தேடுவார்க்கு அகப்படாதே நிற்றல்.
இறைவன் உள்ளவன் போறலாவது – அன்பினால் அடைந்தார்க்குப் பல்லாற்றானும் அனுபவப் பொருளாதல்.

துளிகளைத் தூற்றுதலால் மேகத்திற்கு நிகராகும் தன்மையில் தம்மில் ஒப்பனவாகிய வலிய அலைகள், பல பொருள்களை ஈர்த்து வந்து மோதி முழங்கி, வலம்புரிச் சங்கின் இனிய ஓசையால் யாவரையும் தன்பால் வருவிக்கின்ற கடலினது அழகிய கரையின் கண்ணதாகிய, 'மகோதை' என்னும் தலத்தில் உள்ள அழகு நிறைந்த சோலைகளையுடைய 'திருவஞ்சைக்களம்' என்னும் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கின்ற தந்தையே! நீ, உலகத்தை இயக்குதலில், எழுதப்படும் எழுத்துக்களுக்கு உயிரெழுத்துப் போல்கின்றாய்; இல்லாதாய் போல்கின்றாய்; ஆயினும், உள்ளாய் போல்கின்றாய்; உயிர்கட்கு உதவுதலில் தளிர்க்கும் பயிர்க்கு, மேகம் போல்கின்றாய்; அடியார்களுக்கு அணியையாதலில், அவரோடு ஒருகுடிப் பிறப்பினை போல்கின்றாய்.

36. வீடின்பய னென்பிறப் பின்பயனென்
 **விடையேறுவ தென்மத யானை நிற்கக்**
கூடும்மலை மங்கை யொருத்தியுடன்
 சடைமேற்கங்கை யாளைநீ சூடிற்றென்னே
பாடும்புல வர்க்கரு ளும்பொருளென்
 நெதியம்பல செய்த கலச்செலவின்
ஆடுங்கட லங்கரை மேல்மகோதை
 அணியார்பொழில் அஞ்சைக் களத்தப்பனே.
5

பொன், மணி முதலிய செல்வங்களைத் தந்த மரக்கலங்களினது செலவினையுடைய, மூழ்குதற்குரிய கடலினது அழகிய கரையின்கண்ணதாகிய, 'மகோதை' என்னும் நகரின்கண் உள்ள, அழகு நிறைந்த சோலைகளையுடைய 'திருவஞ்சைக்களம்' என்னும் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் தந்தையே! நீ, 'வீடு, பிறப்பு' என்னும் இரண்டனுள் ஒன்றையே அமையாது, மறுதலைப் பொருள்களாகிய அவ் விரண்டனையும் அமைத்ததன் பயன் யாது ? மதத்தையுடைய யானை இருக்க, எருதினை ஊர்வது ஏன் ? திருமேனியில் நீங்காது பொருந்தியுள்ள மலைமகளாகிய ஒருத்தியோடு கங்கை என்பவளையும் சடையில் வைத்தது ஏன் ? உன்னைப் பாடுகின்ற புலவர்க்கு நீ அளிக்கும் பரிசில் யாது ?

வீட்டை அமைத்தது – உயிர்களை நிலையான இன்பத்தில் இருத்துதற் பொருட்டு.

பிறப்பை அமைத்தது – அவ்வின்ப நுகர்ச்சிக்குத் தடையாய் உள்ள பாசத்தை அறுத்தற் பொருட்டு.

விடையை ஊர்வது – அறத்தை நிலைபெறுதற் பொருட்டு

மலைமங்கையோடிருப்பது – உயிர்கள் போகம் பெற.

கங்கையைத் தரித்தது – அப்போகம் பிறவாற்றால் தடை பெறாமைக்காக.

எல்லாவற்றையும் நம்மில் யாராவது எய்தினால் வீடுபேற்றைக் கேட்கலாம்.

37. இரவத்திடு காட்டெரி யாடிற்றென்னே
 இறந்தார்தலை யிற்பலி கோடலென்னே
பரவித்தொழு வார்பெறு பண்டமென்னே
 பரமாபர மேட்டி பணித்தருளாய்
உரவத்தொடு சங்கமொ டிப்பிமுத்தங்
 கொணர்ந்தெற்றி முழங்கி வலம்புரிகொண்
டரவக்கட லங்கரை மேல்மகோதை
 அணியார்பொழில் அஞ்சைக் களத்தப்பனே.
6

யாவர்க்கும் மேலானவனே! எல்லார்க்கும் மேலிடத்தில் உள்ளவனே! வலிமையோடு, 'சங்கு, இப்பி, முத்து' என்பவற்றைக் கொணர்ந்து வீசி, வலம்புரிச்சங்கை மேலே கொண்டு முழங்கி, ஆர்ப்பரவத்தையுடையதாகின்ற கடலினது அழகிய கரையின் கண்ணதாகிய 'மகோதை' என்னும் நகரின்கண் உள்ள அழகுநிறைந்த சோலைகளையுடைய 'திருவஞ்சைக்களம்' என்னும் திருக்கோயிலின்கண் எழுந்தருளி யிருக்கும் தந்தையே! நீ இராப் பொழுதில் புறங்காட்டில் எரியில் நின்று ஆடியது ஏன் ? இறந்தவரது தலையில் பிச்சையேற்றல் ஏன் ? உன்னை ஏத்தி வணங்குவோர் பெறும் பொருள் யாது ? சொல்லியருளாய்.

உரவம் – வலிமை. பண்டம் – நற்பொருள்

38. ஆக்குமழி வும்மைய நீயென்பன்நான்
சொல்லுவார்சொற் பொருளவை
நீயென்பன்நான்
நாக்கும்செவி யும்கண்ணும் நீயென்பன்நான்
நலனேஇனி நான்உனை நன்குணர்ந்தேன்
நோக்குந்நெதி யம்பல எத்தனையும்
கலத்திற்புகப் பெய்துகொண் டேறநுந்தி
ஆர்க்குங்கட லங்கரை மேல்மகோதை
அணியார்பொழில் அஞ்சைக்
களத்தப்பனே. 7

எப்பொருட்கும் தலைவனே! இன்பம் தருபவனே! விரும்புகின்ற நுகர்ச்சிப் பொருள்கள் எத்துணை வகையினவற்றையும் மிகுதியாக மரக்கலங்களில் ஏற்றி, நடுவண் செல்லச் செலுத்தி ஆரவாரிக்கின்ற கடலினது அழகிய கரையின்கண்ணதாகிய 'மகோதை' என்னும் நகரின்கண் உள்ள, அழகு நிறைந்த சோலைகளையுடைய, 'திருவஞ்சைக்களம்' என்னும் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் தந்தையே! அடியேன் இதுபோழ்து உன்னை நன்குணர்ந்தேன் ஆதலின், 'எப்பொருளின் ஆக்கத்திற்கும், அழிவிற்கும் காரணன் நீயே' என்றும், அவற்றிற்குக் காரணங்களாகப் பிறவற்றைச் சொல்லுவாரது சொற் பொருள்களும் நீயே' என்றும், 'புலனுணர்வுக்குக் காரணமான, 'நாக்கு, செவி, கண்' என்பனவும் நீயே' என்றும் துணிந்து சொல்லுவேன்.

கலம் – கப்பல். நுந்தி – செலுத்தி.
சொல்லுக்கெல்லாம் பொருளானவர்.

39. வெறுத்தேன்மனை வாழ்க்கையை
விட்டொழிந்தேன்
விளங்குங்குழைக் காதுடை வேதியனே
இறுத்தாய்இலங் கைக்கிறை யாயவனைத்
தலைபத்தொடு தோள்பல இற்றுவிழக்
கறுத்தாய்கடல் நஞ்சமு துண்டுகண்டங்
கடுகப்பிர மன்தலை யைந்திலும்ஒன்
றறுத்தாய்கட லங்கரை மேல்மகோதை
அணியார்பொழில் அஞ்சைக்
களத்தப்பனே. 8

ஒளிவிடுகின்ற குழையையணிந்த காதினை யுடைய அந்தணனே! கடலினது அழகிய கரையின் கண்ணதாகிய 'மகோதை' என்னும் நகரின்கண் உள்ள, அழகு நிறைந்த சோலைகளையுடைய 'திருவஞ்சைக்களம்' என்னும் திருக்கோயிலில் எழுந்தருளி யிருக்கின்ற தந்தையே! நீ இலங்கைக்கு அரசனாகிய இராவணனை அவனது பத்துத் தலைகளோடு பல தோள்களும் அற்று விழுவன போலும்படி நெரித்தாய்; பாற்கடலில் தோன்றிய நஞ்சினை அமுதமாக உண்டு, கண்டம் கறுப்பாயினாய்; பிரமன் தலைகள் ஐந்தனுள் ஒன்றை விரைவில் அறுத்தலும் செய்தாய்; அடியேன் எனது மனை வாழ்க்கையை மனத்தாலும் வெறுத்தேன்; உடம்பாலும் துறந்து விட்டேன்.

வினைத்தொடக்கை அறுத்தல் – இராவண, பிரம ஒறுப்பு.
அருள்பண்ணுதல் – நஞ்சுண்டமை.

40. பிடிக்குக்களி றேஒத்தி யால்எம்பிரான்
பிரமற்கும் பிரான்மற்றை மாற்கும்பிரமன்
நொடிக்கும்மள விற்புரம் மூன்றெரியச்
சிலைதொட்டவ னேஉனை நான்மறவேன்
வடிக்கின்றன போற்சில வன்றிரைகள்
வலித்தெற்றி முழங்கி வலம்புரிகொண்
டடிக்குங்கட லங்கரை மேல்மகோதை
அணியார்பொழில் அஞ்சைக்
களத்தப்பனே. 9

புரம் எரித்தமை – பாசம் அறுத்தல்
தலைவனாயிருத்தல் – இன்பம் வழங்குதல்

மூன்று அரண்கள், ஒருமுறை கைந்நொடிக்கும் அளவிலே எரிந்தொழியுமாறு வில்லை வளைத்தவனே! முத்துக்கள் முதலியவற்றை வடித்தெடுத்துச் சேர்ப்பனபோல, சில வலிய அலைகள் அவைகளை ஈர்த்து வந்து வீசி, வலம்புரிச்சங்கினால், கரையிலுள்ளாரைத் தாக்குகின்ற கடலினது அழகிய கரையின் கண்ணதாகிய 'மகோதை' என்னும் நகரின்கண் உள்ள அழகிய சோலைகளை யுடைய, 'திருவஞ்சைக்களம்' என்னும் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கின்ற தந்தையே! நீ பெண்யானைக்கு ஆண்யானை போல உயிர்கட்கு யாண்டும் உடன்செல்லும் துணைவனாய் உள்ளாய்; என்போலும் மக்கட்கும், பிரமன், திருமால் முதலிய தேவர்கட்கும் தலைவனாய் உள்ளாய்; இவற்றையெல்லாம் உணர்ந்து, அடியேன் உன்னை மறத்தல் ஒழிந்தேன்.

41. எந்தம்மடி களிமை யோர்பெருமான்
எனக்கென்றும் அளிக்கும் மணிமிடற்றன்
அந்தண்கட லங்கரை மேல்மகோதை
அணியார்பொழில் அஞ்சைக் களத்தப்பனை
மந்தம்முழ வுங்குழ லும்மியம்பும்
வளர்நாவலர் கோன்நம்பி ஊரன்சொன்ன
சந்தம்மிகு தண்தமிழ் மாலைகள்கொண்
டடிவீழவல் லார்தடு மாற்றிலரே. 10

குரல், துத்தம், கைக்கிளை, விளரி, தாரம், உழை, இளி என்னும் ஏழிசைகளையும் தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக் கருவி என்னும் ஐவகைக் கருவிகளினின்றும் எழுப்புமிடத்து மந்தம், மத்திமம், உச்சம் என்னும் மூவகை நிலையில் எழுப்பப் படுமாகலின் அவற்றுள் மெல்லிதாகிய மந்தம் இயம்புதலை எடுத்தோதி அருளினார். மந்தம் மெலிவும், மத்திமம் சமமும், உச்சம் வலிவுமாகும்.

'ஞானசம்பந்தரை', 'சம்பந்தர்' என்றாற்போல 'ஆரூரன்' என்பதை 'ஊரன்' என்று அருளிச் செய்தார்.

என்போலும் அடியவர்கட்கு முதல்வனும், தேவர்கட்குத் தலைவனும், எனக்கு எஞ்ஞான்றும் அருள் பண்ணும் சிவனும் ஆகிய, அழகிய குளிர்ந்த கரையின் கண்ணதாகிய, 'மகோதை' என்னும் நகரின்கண் உள்ள 'திருவஞ்சைக்களம்' என்னும் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கின்ற தந்தையை, மத்தளமும் வேய்ங்குழலும், 'மந்தம்' என்னும் அளவாக இயம்பப்படுகின்ற, நன்மை வளர்கின்ற திருநாவலூரில் உள்ளார்க்குத் தலைவனாகிய நம்பியாரூரன் போற்றிய இசைநலம் மிக்க, தமிழ்ச்சொற்கள் என்னும் மலர்களால் இயன்ற இம்மாலைகளை வாயிலாகக் கொண்டு அப்பெருமானது திருவடிகளில் பணிய வல்லவர் நிலையாமை நீங்கப் பெற்று, நிலை பேறுடையவராவர்.

## 5. திருவோணகாந்தன்தளி

பண் : இந்தளம் பதிக எண் : 5

ஓணன், காந்தன் என்னும் அசுரர்கள் வழிபட்டு பேறுபெற்ற தளி (கோயில்) ஆதலால் இப்பெயர் வந்தது. ஆரூரர் எழுந்தருளிப் பதிகம் பாடிப் பொன் பெற்றார். இத்திருப்பதிகம் இறைவன், தன் அடியாரிடத்து வைத்துள்ள பேரருட் பெருக்குக்குக் காரணமாக அவர்கட்கு அவன் மாட்டு உளதாகும் உரிமை புலப்படுமாறு அருளிச்செய்தது. இதனைத் தெய்வச் சேக்கிழார்

"ஓண காந்தன் றளிமேவு மொருவர் தம்மை யுரிமையுடன்
பேணி யமைந்த தோழமையாற் பெருகு மடிமைத் திறம்பேசி
காண மோடு பொன்வேண்டி "நெய்யும்பாலுங் கலைவிளங்கும்
யாணர்ப் பதிக மெடுத்தேத்தி யெண்ணி னிதி பெற்றிருந்தனர்"

என்று அருளிச் செய்தார். எண்ணில் நிதி – அளவில்லாத நிதியம் பெற்றார் என்றும் எண் + நில் என்று பிரித்து, தமது எண்ணத்தில் – கருத்தில் – நின்ற அளவு பெற்றார் என்றும் பொருள் கொள்ளலாம். இதற்கு மேல் என்ன வேண்டும்?

| **மூர்த்தி** | அருள்மிகு ஓணகாந்தீசுவரர் – அருள்தரும் காமாட்சியம்மை. | | |
|---|---|---|---|
| **தல இருப்பிடம்** | தொண்டை நாட்டில் காஞ்சிபுரம் ஏகம்பரநாதர் கோயிலுக்கு வடமேற்கே இரண்டு கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | புளி | | |
| **தீர்த்தம்** | சர்வதீர்த்தம் | | |
| **பாடியவர்** | நம்பியாரூரர் | **பதிகம்** | 1 |

42. நெய்யும் பாலுந் தயிருங் கொண்டு
**நித்தல் பூசனை** செய்ய லுற்றார்
கையி லொன்றுங் காண மில்லைக்
கழல டிதொழு துய்யி னல்லால்
ஐவர் கொண்டிங் காட்ட வாடி
ஆழ்கு ழிப்பட் டழுந்து வேனுக்
குய்யு மாறொன் றருளிச் செய்யீர்
ஓண காந்தன் தளியு ளீரே. 1

'திருவோணகாந்தன்தளி' என்னும் திருக்கோயிலில் வாழும் பெருமானிரே! 'நெய், பால், தயிர் முதலியவற்றால் உம்மை நாள்தோறும் வழிபடுவாரது கையில் காசு ஒன்றும் காணப்படுகின்றதில்லை. அவ்வாறே, உமது கழலணிந்த பாதத்தைக் கும்பிட்டு ஏதேனும் பெற்றாலன்றி, இவ்வுலகத்தில், புலன்களாகிய ஐவர் தண்டலாளர் ஐந்து பக்கம்

பற்றி ஈர்த்துச் சுழற்றச் சுழன்று, அச்சுழற்சியாலாகிய துன்பம் என்னும் ஆழ்ந்த குழியில் அகப்பட்டு ஏறமாட்டாது அழுந்திப் போவேனாகிய அடியேனுக்கு, அதனினின்றும் கரையேறும் வழியொன்றனைச் சொல்லியருளீர்

"எண்ணில் ஆகமம் இயம்பிய ஈசர் விரும்பும் உண்மையாவது பூசனை" – சேக்கிழார்.

"பூசனை உகந்து என் உளந்தனில் புகுந்து
பூங்கழல் காட்டிய பொருளே" – மணிவாசகர்.

'சந்தி மூன்றிலும் தாபர நிறுத்திச் சகளி செய்து இறைஞ்சும் அகத்தியன்' – ஆரூரர், திருநின்றியூர் தேவாரம்.

"காலையிலும் மாலையிலும் கடவுளடி பணிந்து கசிந்த மனத்தவர் பயிலும்" – ஆரூரர், கலயநல்லூர்.
"நித்தல் பூசனை என்றதனால் நம்பிகள் நாடொறும் உடையவர் பூசையாகிய பெருந்தவநெறி கொண்டொழுகிய நிலை புலப்படும். நாமும் அவர் வழியைப் பின்பற்றுவோமாக!

"நித்தல் பூசனை செய்யலுற்றால் கையிலொன்றுங் காணமில்லை" – நம்பிகள்.

பொன் வேண்டுவதெல்லாம் ஆண்டவரது சிவபூசைக்கும், அடியார் பூசைக்குமாம் என்பதற்கு அகச்சான்றாகும். அற்புத அடிகள். அவருக்காக அவர்வேண்டவில்லை.

காணம் – காசு. பொன் – அணிகளுக்காகத்தக்க படிக்குள்ள பொன்.

43. திங்கள் தங்கு சடையின் மேலோர்
திரைகள் வந்து புரள வீசும்
கங்கை யாளேல் வாய்தி றவாள்
கணப தியேல் வயிறு தாரி
அங்கை வேலோன் குமரன் பிள்ளை
தேவி யார்கோற் றட்டி யாளார்
உங்க ளுக்காட் செய்ய மாட்டோம்
ஓண காந்தன் தளியு ளீரே. 2

வயிறுதாரி – வயிறு பெருத்தவர். பேருண்டி உண்பவர். குமரன் பிள்ளை – சிறுவர்; சிறு பிள்ளை. தேவியார் கோற்றட்டி ஆளார் – பணியாளரின் தராதரம் அறிந்து கூலிகொடுத்து ஆட்கொள்ள மாட்டார். தோழமை உரிமையில் நிந்தாதுதிகள். இவ்வாறே "மதியுடையவர் செய்கை செய்யீர்". ஆபத் காலத் தடிகே ளும்மை ஒற்றி வைத்திங் குண்ணலாமோ" – 3, "இல்லை என்னீர் – உண்டும் என்னீர்" – 4, ஓடிப் போகீர் – பற்றுந்தாரீர்–5, "நீர் போய் ஊரிடும் பிச்சை கொள்வதென்னே" – 6, "ஏதும் வேண்டீர் ஏதும் தாரீர் ஏதும் ஓதீர்" – 7, பல பாடல்களில் பாடி அருள்கிறார்.

'திருவோணகாந்தன்தளி' என்னும் திருக்கோயிலில் வாழும் பெருமானிரே! பிறை தங்குமாறு சேர்த்துக் கட்டியுள்ள உமது சடையின் மேலும், ஒப்பற்ற அலைகள் தோன்றிப் புரளுமாறு வீசுகின்ற, 'கங்கை' என்னும் தேவியோவெனில், உமது பக்கத்தில் எஞ்ஞான்றும் உள்ள உமாதேவியார்க்கு அஞ்சி ஒருஞான்றும் வாய் திறத்தலே இல்லை; உம் மூத்த மகனாகிய விநாயகனோவெனில், வயிறு ஒன்றையே முதன்மையாக உடையவன்; (பிறிதொன்றையும் அறியான்). இளைய மகனாகிய, அகங்கையில் வேற்படையையுடைய முருகனோவெனில், விளையாட்டுப் பிள்ளை; (யாதொன்றையும் பேணான்). தேவியாராகிய உமையம்மையாரோவெனில், உம்மை ஒழிந்து அடியவரை ஆளுவாரல்லர்; (நீரோ அடியவர் குறை நோக்கி யாதும் செய்யீர்) ஆதலின், உம் குடிக்கு யாங்கள் அடிமை செய்ய மாட்டேமாகின்றேம்.

44. பெற்ற போழ்தும் பெறாத போழ்தும்
பேணி உம்கழல் ஏத்து வார்கள்
மற்றோர் பற்றிலர் என்றி ரங்கி
மதியு டையவர் செய்கை செய்யீர்
அற்ற போழ்தும் அலந்த போழ்தும்
ஆவற் காலத் தடிகேள் உம்மை
ஒற்றி வைத்திங் குண்ண லாமோ
ஓண காந்தன் தளியு ளீரே. 3

தலைவரே! 'திருவோணகாந்தன்தளி' என்னும் திருக்கோயிலில் வாழும் பெருமானிரே! உம்மால் யாதானும் ஒன்றை அடையினும், அடையாதொழியினும் அவ்வாற்றான் வேறுபடுதல் இன்றி எஞ்ஞான்றும் ஒரு பெற்றியே உம் திருவடியைப் பற்றிநின்று துதிக்கும் அடியவர், 'நம்மையன்றி வேறொரு துணையும் இல்லாதவர்' என்று நினைத்து, அறிவுடையவர்க்கு உரிய செய்கை ஒன்றும் நீர் செய்கின்றிலீர்; அதனால், உம் அடியவர் தங்கள் கையிற் பொருள் இல்லாதொழிந்த காலத்தும், அது காரணமாக வழியொன்றும் காணாது அலைந்த காலத்தும், உம்மைப் பிறருக்கு ஒற்றியாகவைத்துப் பிழைத்தல்தான் செயற்பாலதோ? (சொல்லீர்)

பெற்ற போழ்தும் பெறாத போழ்தும் – இன்பத்திலும் துன்பத்திலும். பேணி – ஒன்றுபோலவே விரும்பி மதியுடையவர் செய்கை செய்யீர் – இப்போது வேண்டியது தாராது நீர் வாளா இருப்பது மதியுடையவர் செய்கையன்று என்பதைச் சொல்லாமல் சொல்கிறார்.

45. வல்ல தெல்லாம் சொல்லி உம்மை
வாழ்த்தி னாலும் வாய்தி றந்தொன்
றில்லை என்னீர் உண்டும் என்னீர்
எம்மை ஆள்வான் இருப்ப தென்நீர்
பல்லை உக்க படுத லையிற்
பகல்எ லாம்போய்ப் பலிதி ரிந்திங்
கொல்லை வாழ்க்கை ஒழிய மாட்டீர்
ஓண காந்தன் தளியு ளீரே. 4

'திருவோணகாந்தன்தளி' என்னும் திருக்கோயிலில் வாழும் பெருமானிரே! யாம் வல்ல கருத்துக்கள் பலவும் சொல்லி உம்மை வாழ்த்தியபோதும், நீர் வாய்திறந்து, எமக்கு ஈய யாதேனும் ஒரு பொருளை, 'இல்லை' என்றும் சொல்கின்றிலீர்; 'உண்டு' என்றும் சொல்கின்றிலீர்; நீர் எம்மைப் பணிகொள்ள இருத்தல் எவ்வாறு? நாள்தோறும் சென்று, பல் நீங்கிய, இறந்தாரது தலையில் இவ்வுலகில் பிச்சை ஏற்கத் திரிந்தும், இல்வாழ்க்கையை விரைவில் விட்டொழிய மாட்டீர்.

"ஓணகாந்தன் தளியுளீரே" – பதிக மகுடம்

46. கூடிக்கூடித் தொண்டர் தங்கள்
கொண்ட பாணி குறைப டாமே
ஆடிப் பாடி அழுது நெக்கங்
கன்பு டையவர்க் கின்பம் ஓரீர்
தேடித் தேடித் திரிந்தெய்த் தாலும்
சித்தம் என்பால் வைக்க மாட்டீர்
ஓடிப் போகீர் பற்றுந் தாரீர்
ஓண காந்தன் தளியு ளீரே. 5

‘திருவோணகாந்தன்தளி’ என்னும் திருக்கோயிலில் வாழும் பெருமானிரே! நீர், தம்மிற் பலகாலும் கூடி, அடியவர்க்கு உரிய, பொருந்திய தாளத்தொடுபட்ட பாட்டுக்களைக் குற்றம் உண்டாகாமலே பாடியும், ஆடியும், மனம் நெகிழ்ந்து அழுதும் மற்றும் அவ்வாற்றால் அன்புடையராய் இருப்பவர்க்கு நன்மை செய்யு மாற்றினை நினைக்கின்றிலீர்; உம்மைக் காண பலவிடத்திலும் தேடித்தேடித் திரிந்தாலும், என்னிடத்தில் இரக்கம் வைத்துக் காட்சியளிக்க மாட்டீர்; கோயிலை விட்டுப் போகவும் மாட்டீர்; கோயிலில் வந்து பாடுகின்ற எனக்குப் பற்றுக்கோடும் தரமாட்டீர். (என் செய்வேன்!)

எய்த்தாலும் – இளைப்புற்றாலும்.

ஓடிப்போகீர் – இத்தலத்திற்கு சுவாமிகள் சென்ற பொழுது, இறைவர் ஆங்குள்ளதொரு புளியமரத்தில் ஒளிந்து கொண்டதாகவும், அதனை அறிந்த சுவாமிகள் அங்கு சென்று இத்திருப்பதிகத்தைப் பாட, இறைவர் அப்புளிய மரத்தில் இருந்த காய்களைப் பொற் காய்களாக்கி உதிர்க்க, சுவாமிகள் அவற்றைப் பெற்று மகிழ்ந்ததாகவும் ஆங்கு செவி வழிச்செய்தி நிலவுகிறது.

47. வாரி ருங்குழல் வாள்நெ டுங்கண்
மலைம கள்மது விம்மு கொன்றைத்
தாரி ருந்தட மார்பு நீங்காத்
தைய லாள்**உல குய்ய வைத்த**
காரி ரும்பொழில் கச்சி மூதூர்க்
**காமக் கோட்டம்**உண் டாக நீர்போய்
ஊரி டும்பிச்சை கொள்வ தென்னே
ஓண காந்தன் தளியு ளீரே. 6

‘திருவோணகாந்தன்தளி’ என்னும் திருக்கோயிலில் வாழும் பெருமானிரே! தேன் ததும்புங் கொன்றை மாலையை உடைய உமது பெரிய அகன்ற மார்பினின்றும் நீங்காத, நீண்ட கரிய கூந்தலையும், வாள்போலும் நெடிய கண்களையும் உடைய மலைமகளாகிய தேவி, உலகமெல்லாம் துன்பமின்றி வாழ்தற் பொருட்டு வைத்துள்ள சிறந்த அறச்சாலையாகிய, மேகம் தவழும் பெரிய சோலையையுடைய, ‘கச்சி’ என்னும் பழைய ஊரின்கண் உள்ள திருக்காமக் கோட்டம் இருக்க, நீர் சென்று, ஊரவர் இடும் பிச்சையை ஏற்பது ஏன்?

உலகுய்ய வைத்த காமக் கோட்டம் உண்டாக – காஞ்சி காமக் கோட்டத்தில் அம்மையார் 32 அறங்களைச் செய்து உலகைக் காக்கும் நிலையைப் பாடி அருள்கிறார்.

48. பொய்ம்மை யாலே போது போக்கிப்
**புறத்தும் இல்லை அகத்தும் இல்லை**
மெய்ம்மை சொல்லி ஆள மாட்டீர்
மேலை நாள்ஒன் றிடவுங் கில்லீர்
எம்மைப் பெற்றால் ஏதும் வேண்டீர்
ஏதுந் தாரீர் ஏதும் ஓதீர்
உம்மை யன்றே எம்பெரு மான்
ஓண காந்தன் தளியு ளீரே. 7

புரவலர் புரத்தலும் இரவலர் இரத்தலும் இருவேறியற்கையும் இவ்வுலகுடைத்தே அதா அன்று, ஒரு காலத்தின் உருவ மற்றொன்றே இடப்பால் முப்பத்திரண்டறம் வளர்ப்ப வலப்பால் இரத்தல் மாநிலத்தின்றே. – குமரகுருபரர்

நம்பியாரூரரைப் பின்பற்றி குமரகுருபரர் திருவாரூர் நான்மணி மாலையில் இந்த நிந்தா துதி பாடி மகிழ்கிறார்.

'திருவோணகாந்தன்தளி' என்னும் திருக்கோயிலில் வாழும் பெருமானிரே! நீர் பொய்ச்சொல்லினாலே காலங் கழித்து திருக்கோயிலின் புறத்தும் காணப்படீர்; அகத்தும் காணப்படீர். ஆகவே நீர் நும் அடியவரை மெய்சொல்லி ஆளமாட்டீர் போலும்! இனி, பின்வரும் நாள்களிலும் ஒன்றும் தரமாட்டீரேயாம்; ஏனெனில், எம்மை ஆளாகப் பெருமளவும் விடாது வழக்காடுதல் அல்லது, பெற்றுவிட்டால் பின்பு எம்பால் ஒரு பணியையும் விரும்புகின்றிலீர். எவ்வாற்றான் நோக்கினும், நீர் எமக்கு யாதும் ஈகின்றவராயோ, யாதும் சொல்கின்றவராயோ தோன்றவில்லை. இந்நிலையில் நீர் எமக்குத் தலைவராய் இருத்தல், இப்பிறப்பு வந்தபின்னன்று; முற்பிறப்புத் தொட்டேயாம்.

49. வலையம் வைத்த கூற்ற மீவான்
வந்து நின்ற வார்த்தை கேட்டுச்
சிலைஅு மைத்த சிந்தை யாலே
திருவ டீதொழு துய்யின் அல்லால்
கலைஅு மைத்த காமச் செற்றக்
குரோத லோப மதவ ரூடை
உலைஅு மைத்திங் கொன்ற மாட்டேன்
ஓண காந்தன் தளியு ளீரே. 8

வலையம் – உயிர் கொள்ளும் பாசம்.

'திருவோணகாந்தன்தளி' என்னும் திருக்கோயிலில் வாழும் பெருமானிரே! எத்தகையோரையும் கொண்டு செல்ல, பாசத்தைக் கையிலே கொண்டுள்ள கூற்றுவன் வந்து வானத்தின்மேல் நின்ற செய்தியைக் கேட்டு, அடியேன், நீர் கற்போல அமைத்துத் தந்த அம் மனத்தைக் கொண்டே உமது திருவடியைத் தொழுது அக்கூற்றுவனுக்குத் தப்ப நினைக்கின்றேனேயன்றி, விதி அமைத்துத் தந்த ஐம்பொறிகளாகிய ஐந்து உலைக்களக் கூட்டத்தைப் பொருளாக உள்ளத்தமைத்து, 'காமம், மாற்சரியம், குரோதம், உலோபம், மதம்' என்ப வரிடைப் பொருந்தி வாழ நினைக்கின்றிலேன்.

50. வார மாகித் திருவ டிக்குப்
பணிசெய் தொண்டர் பெறுவ தென்னே
ஆரம் பாம்பு வாழ்வ தாரூர்
ஒற்றி யூரேல் உம்ம தன்று
தார மாகக் கங்கை யாளைச்
சடையில் வைத்த அடிகேள் உந்தம்
ஊரும் காடு உடையும் தோலே
ஓண காந்தன் தளியு ளீரே. 9

வாரம் – அன்பு.
ஒற்றியூர் – பணயம் வைத்த ஊர்

'திருவோணகாந்தன்தளி' என்னும் திருக்கோயிலில் வாழும் பெருமானிரே! 'கங்கை' என்பவளைத் தாரமாகக் கொண்டு, இடமின்றிச் சடையில் வைத்துள்ள அடிகளே, நீர் மார்பில் அணியும் ஆரமாவது பாம்பு; வாழும் ஊர் உமக்கு உரிமையில்லாதது; 'ஒற்றியூர் உளதே' எனில் 'ஒற்றி' யெனவே, அஃது உம்முடையது அன்றாயிற்று. உமக்கு இல்லமாவது சுடுகாடு; உமது உடையாவது தோல். இங்ஙனமாதலின், உம்மிடத்து அன்புடையவராய் உம் திருவடிக்குத் தொண்டு செய்யும் அடியவர் உம்மிடத்தினின்றும் பெறுவது எதனை ?

51. ஒவ ணம்மேல் எருதொன் றேறும்
ஓண காந்தன் தளியு ளார்தாம்
ஆவ ணஞ்செய் தாளுங் கொண்ட
வரைது கில்லொடு பட்டு வீக்கிக்
கோ ணம்மேற் கொண்ட வேடம்
கோவை யாகஆ ரூரன் சொன்ன
பாவ ணத்தமிழ் பத்தும்வல் லார்க்குப்
பறையுந் தாஞ்செய்த பாவந் தானே. 10

நீக்கப்படும் தன்மையின்றி ஏற்றுள்ள ஒற்றை எருதை ஊர்தியாகக் கொள்ளும், திருவோணகாந்தன்தளியில் வாழ்கின்ற இறைவர், நம்பியாரூரனை, தாமே பத்திரம் எழுதிக் கொண்டுவந்து ஆட்கொண்ட எல்லைக்கண், துகிலும் பட்டும் உடுத்திருந்து, பின்பு அவர் ஆணைவழியே அவரை அவன் அணுகிப் பாடுதலாகிய தொண்டினைச் செய்யும் எல்லைக்கண் கோவண மட்டிலே உடையவராய் நின்ற கோலத்தின் தன்மைகள் பலவும் நிரல்படத் தோன்றுமாறு அமைத்து அவன் பாடிய, பா வடிவாகிய இத் தமிழ்ச் செய்யுள்கள் பத்தினையும் பொருளுணர்ந்து அன்பு மீதூரப் பண்ணொடு நன்கு பாட வல்லவர்க்கு அவர் செய்த பாவம் விரைந்து நீங்கும்.

## 6. திருவெண்காடு

(இறைவனது அருட்செயல்களை வினவும் வகையாக அருளிய பதிகம்)

பண் : இந்தளம் பதிக எண் : 6

| மூர்த்தி | அருள்மிகு பிரம்ம வித்தியாதாரணி உடனமர் அருள்மிகு சுவேதாரண்ய சுவாமிகள். | | |
|---|---|---|---|
| தல இருப்பிடம் | மயிலாடுதுறை – ஆக்கூர் சென்று அங்கிருந்து 5 கி.மீ. தொலைவில் உள்ளது. காவிரி வடகரை. சோழநாடு. | | |
| தல மரம் | வில்வம், கொன்றை | | |
| தீர்த்தம் | சூரிய, சந்திர, அக்கினி தீர்த்தங்கள். "வெண்காட்டு முக்குளநீர்" – தி.ஞா.ச. | | |
| பாடியவர் | மூவர் | பதிகங்கள் | 7 |

52. படங்கொள் நாகஞ் சென்னி சேர்த்திப்
பாய்பு லித்தோல் அரையில் வீக்கி
அடங்க லார்ஊர் எரியச் சீறி
அன்று மூவர்க் கருள்பு ரிந்தீர்
மடங்க லானைச் செற்று கந்தீர்
மனைகள் தோறுந் தலைகை யேந்தி
விடங்க ராகித் திரிவ தென்னே
வேலை சூழ்வெண் காட னீரே. 1

மடங்கலான் – கூற்றுவன்.
எல்லா உயிர்களும் மடங்குவதற்கு இடமானவன்.
விடங்கர் – பேரழகுடையவர்.
அடங்கலார் – அடங்காதவர், பகைவர்.
வேலைசூழ் – கடல்சூழ்ந்த

கடல் சூழ்ந்த திருவெண்காட்டையுடைய இறைவரே! நீர், படத்தையுடைய பாம்பைத் தலையிலே வைத்து, பாய்கின்ற புலியினது தோலை அரையிற் கட்டி, பகைவரது திரிபுரங்கள் எரிந்தொழியுமாறு வெகுண்டு, அந்நாளிற்றானே அவ்வூரிலுள்ள மூவருக்கு அருள் பண்ணினீர்; கூற்றுவனை முன்னர்க் கொன்று, பின்னர் உயிர்ப்பித்து, அவனை மகிழ்ந்து ஏற்றுக்கொண்டீர்; இன்ன பெருமைகளையுடையீராய் இருந்தும், தலை ஓட்டினைக் கையில் ஏந்திக்கொண்டு, பேரழகுடைய உருவத்துடன் மனைகள் தோறும் பிச்சைக்குத் திரிவது ஏன்?

53. இழித்து கந்தீர் முன்னை வேடம்
இமைய வர்க்கும் உரைகள் பேணா
தொழித்து கந்தீர் நீர்முன் கொண்ட
வுயர்த வத்தை அமரர் வேண்ட
அழிக்க வந்த காம வேளை
அவனு டைய தாதை காண
விழித்து கந்த வெற்றி யென்னே
வேலை சூழ்வெண் காட னீரே. 2

கடல் சூழ்ந்த திருவெண்காட்டையுடைய இறைவரே! நீர், அரி பிரமர்க்கும் அவரது முன்னை உடம்புகளை நீக்கி, அவற்றை விரும்பி தோள்மேற் கொண்டீர்; 'என்றும் இறவாதபடி காப்பவன்' என்னும் புகழை விரும்பாது, எல்லா பொருள்களையும் அழித்தொழித்து, அதன்பின்னர் அவைகளை மீளத் தோன்றச் செய்தலை விரும்பினீர்; அங்ஙனமாக, நீர் முன்பு மேற்கொண்ட, மேலான தவத்தினை, தேவர் வேண்டிக் கொண்டமையால் அழித்தற்கு வந்த மன்மதனை, அவனுடைய தந்தையாகிய திருமால், ஒன்றும் செய்யமாட்டாது பார்த்துக் கொண்டிருக்க, நெற்றிக்கண்ணால் எரித்து, பின் உயிர்ப்பித்த வெற்றியை விரும்பியது ஏன்?

"வேலைசூழ் வெண் கடனீரே" – பதிக மகுடம்.
வெண்காடு தீர்த்தச் சிறப்புள்ள பதியாகும்.
இத்தலத்து முக்குளநீரில் நீராடி சுவாமியைத் தொழுதால் பிள்ளைப் பேறு கிடைக்குமென்று திருஞானசம்பந்தர் "பேயடையாப் பிரிவெய்தும்" என்ற தேவாரப் பாடலில் அருளிச் செய்துள்ளார்.

54. படைக ளேந்திப் பாரி டம்மும்
பாதம் போற்ற மாதும் நீரும்
உடையோர் கோவ ணத்த ராகி
உண்மை சொல்லீர் உம்மை யன்றே
சடைகள் தாழக் கரண மிட்டுத்
தன்மை பேசி இல்ப லிக்கு
விடைய தேறித் திரிவ தென்னே
வேலை சூழ்வெண் காட னீரே. 3

கடல் சூழ்ந்த திருவெண்காட்டையுடைய இறைவரே! நீர், பூதகணங்கள் பலவகையான படைகளை ஏந்திக் கொண்டு உம் திருவடிகளை வணங்கித் துதிக்க, உம் தேவியுடனே, உடையைக் கோவண உடையாக உடுத்துக் கொண்டு, சடைகள்நீண்டு அசையக் கூத்தாடிக் களித்துப் பின்னர், இல்வாழ்க்கை யுடையாரைப் பெருமையாகச் சொல்லி, அவர்தம் இல்லங்களில் பிச்சைக்குத் திரிதல் ஏன்? உமது உண்மை நிலையைச் சொல்லியருளீர்.

இல்பலி – வீடுகளில் பெறும் பிச்சை.
பாரிடம் – பூதகணம்.
பாரிடம் உம் – பாதம் போற்ற என்று படிக்க வேண்டும்.
உம்மையன்றே – வாய் திறவாமல் வாளா இருத்தலின் உம்மைத் தானே வினவுகின்றேன் என்று அவரது கவனத்தைப் பெறக் குறித்தழைக்கும் மொழி.

55. பண்ணு ளீராய்ப் பாட்டு மானீர்
பத்தர் சித்தம் பரவிக் கொண்டீர்
கண்ணு ளீராய்க் கருத்தில் உம்மைக்
கருது வார்கள் காணும் வண்ணம்
மண்ணு ளீராய் மதியம் வைத்தீர்
வான நாடர் மருவி ஏத்த
விண்ணு ளீராய் நிற்ப தென்னே
வேலை சூழ்வெண் காட னீரே. 4

கடல் சூழ்ந்த திருவெண்காட்டையுடைய இறைவரே! நீர், விண்ணுலகத்தில் உள்ளோர் சூழ்ந்து போற்ற ஆங்கு உள்ளீராய் இருந்தும், இம் மண்ணுலகத்தில் பண்களாகியும், அவற்றையுடைய பாட்டுக்களாகியும், அடியார்களது உள்ளத்தில் நிறைந்தும், மக்கள் முதலிய உயிர்களின் கண்களாகியும், உம்மை உள்ளத்தில் நினைபவர், புறத்தேயும் காணும்படி உருவங் கொண்டும் இருத்தல் ஏன்?

56. **குடமெ டுத்து நீரும் பூவுங்**
**கொண்டு தொண்டர் ஏவல் செய்ய**
நடமெ டுத்தொன் றாடிப் பாடி
நல்கு வீர்நீர் புல்கும் வண்ணம்
வடமெ டுத்த கொங்கை மாதோர்
பாக மாக வார்க டல்வாய்
விடம்மி டற்றில் வைத்த தென்னே
வேலை சூழ்வெண் காட னீரே. 5

கடல் சூழ்ந்த திருவெண்காட்டையுடைய இறைவரே! அடியார்கள் குடத்தைச் சுமந்து நீரையும் பூவையும் ஈட்டிக் கொண்டு வந்து உமக்குப் பணிசெய்ய, நீர், உம்மை என்றும் பிரியாது உடனிருத்தற்பொருட்டு, மணிவடம் அணிந்த தனங்களையுடைய மங்கை ஒரு பாகத்தில் இருக்க நடனத்தை மேற்கொண்டு, ஆடலும் பாடலும் நன்கு இயைய ஆடியும் பாடியும் அவர்கட்கு இன்பந் தருவீர்; அவ்வாறிருந்தும், நீண்ட கடலில் தோன்றிய நஞ்சினைக் கண்டத்தில் வைத்தது ஏன்?

இயன்ற இடங்களிலெல்லாம் சிவபூசையின் முக்கியத்துவத்தைச் சொல்லிச் செல்கிறார்.

நாமும் பின்பற்றி உய்வோமாக.

57. மாறு பட்ட வனத்த கத்தின்
மருவ வந்த வன்க ளிற்றைப்
பீறி இட்ட மாகப் போர்த்தீர்
பெய்ப லிக்கென் றில்லந் தோறுங்
கூறு பட்ட கொடியும் நீருங்
குலாவி யேற்றை அடர ஏறி
வேறு பட்டுத் திரிவ தென்னே
வேலை சூழ்வெண் காட னீரே. 6

கடல் சூழ்ந்த திருவெண்காட்டையுடைய இறைவரே! நீர் உம்மொடு மாறுபட்டு நின்ற, காட்டில் வாழப்பிறந்த, வலிய களிற்றை உரித்து, அதன் தோலை, விருப்பம் உண்டாகப் போர்த்தீர்; அன்ன வீரத்தை உடையீராயும், உமக்கு ஒரு கூறாகப் பொருந்திய மங்கையும் நீரும் எருதையே ஊர்தியாகச் செறிய ஊர்தலும், பிறர் இடுகின்ற பிச்சைக்கென்று இல்லந்தோறும் திரிதலும் செய்து, நுமது பெருமையினின்றும் வேறுபட்டு ஒழுகுதல் ஏன்?

சைவ சாத்திர நூலான சிவஞான சித்தியாரின் ஆசிரியர் அருள்நந்தி சிவாசாரியார் கயிறு சார்த்திப் பார்த்துச் சொன்ன பின்னர்தான் பலநாள் குழந்தைப் பேறு இல்லாத அச்சுதகளப்பர் இத்தலத்து தேவாரம் பாடி, முக்குள நீராடி சிவஞானபோத நூலின் ஆசிரியரான மெய்கண்ட தேவரை மகவாகப் பெறுகிறார்.

பிற்காலத்தில் அத்தகைய மெய்கண்டாரே, அருள்நந்தி சிவாசாரியார் உள்ளிட்ட நமக்கெல்லாம் குருவாகிறார். இவையெல்லாம் பிரம்ம வித்தியாநாயகி உடனமர் சுவேதாரணியப் பெருமானின் பெருங்கருணையால் நிகழ்ந்தவையாகும்.

58. காத லாலே கருதுந் தொண்டர்
கார ணத்த ராகி நின்றே
பூதம் பாடப் புரிந்து நட்டம்
புவனி யேத்த ஆட வல்லீர்
நீதி யாக ஏழி லோசை
நித்த ராகிச் சித்தர் சூழ
வேத மோதித் திரிவ தென்னே
வேலை சூழ்வெண் காட னீரே. 7

கடல் சூழ்ந்த திருவெண்காட்டையுடைய இறைவரே! நீர், உம்மை நினைக்கின்ற அடியார் நிமித்தமாக நின்று, பூதங்கள் பாட, உலகம் உயர்த்துக்கூறுமாறு, நடனத்தை விரும்பி ஆடவல்லீர்; அவ்வாறாகவும், உலகியல் விளங்குதற் பொருட்டு, யோகியர் சூழ, ஏழிசையின்வழி நிலைத்து நின்று, வேதத்தை ஓதித் திரிதல் ஏன்?

59. குரவு கொன்றை மதியம் மத்தங்
கொங்கை மாதர் கங்கை நாகம்
விரவு கின்ற சடையு டையீர்
விருத்த ரானீர் கருத்தில் உம்மைப்
பரவும் **என்மேற் பழிகள் போக்கீர்**
பாக மாய மங்கை அஞ்சி
வெருவ வேழஞ் செற்ற தென்னே
வேலை சூழ்வெண் காட னீரே. 8

பழிகள் – குற்றங்கள். முன் வந்தனவும், இனி வருவனவுமாகிய பழிச்சொற்கள்.

கடல் சூழ்ந்த திருவெண்காட்டையுடைய இறைவரே! நீர், 'குரா மலர், கொன்றை மலர், ஊமத்த மலர், பிறை, தனங்களையுடைய நங்கையாகிய கங்கை, பாம்பு' ஆகிய எல்லாம் தலைமயங்கிக் கிடக்கின்ற சடையினை யுடையீர்; யாவர்க்கும் மூத்தீர்; அங்ஙன மாயினும், எஞ்ஞான்றும் உம்மையே கருத்தில் வைத்துப் பாடுகின்ற என்மேல் உள்ள பாவத்தைப் போக்கீராதலோடு, உமது பாகத்தில் உள்ள மங்கை மிகவும் அச்சங் கொள்ளுமாறு, யானையை உரித்துப் போர்த்தது ஏன்?

60. மாடங் காட்டுங் கச்சி யுள்ளீர்
நிச்ச யத்தால் நினைப்பு ளார்பால்
பாடுங் காட்டில் ஆட லுள்ளீர்
பரவும் வண்ணம் எங்ங னேதான்
நாடுங் காட்டில் அயனும் மாலும்
நணுகா வண்ணம் அனலு மாய
வேடங் காட்டித் திரிவ தென்னே
வேலை சூழ்வெண் காட னீரே. 9

கடல் சூழ்ந்த திருவெண்காட்டையுடைய இறைவரே! நீர், உம்மைத் தெளிந்த உள்ளத்துடன் நினைப்பவர் முன்னே, உயர்ந்த மாளிகைகளையுடைய கச்சியம்பதியில் எழுந்தருளியுள்ளீர்; என்றாலும், பேய்கள் பாடும் காட்டில் ஆடலை உடையீர்; அதுவன்றியும், அயனும் மாலும் தமது தலைமையை ஆய்ந்து காணுதற்குக்கொண்ட சான்றிடத்து, அவர்கள் உம்மை அணுகாதவாறு தீப்பிழம்பாய் நின்ற வடிவத்தையே எங்கும் காட்டித் திரிவது ஏன்? உம்மை யாங்கள் வழிபடுவது எவ்வாறு?

61. விரித்த வேதம் ஓத வல்லார்
வேலை சூழ்வெண் காடு மேய
விருத்த னாய வேதன் றன்னை
விரிபொ ழிற்றிரு நாவ லூரன்
அருத்தி யால்ஆ ரூரன் தொண்டன்
அடியன் கேட்ட **மாலை பத்துந்**
தெரித்த வண்ணம் மொழிய வல்லார்
செம்மை யாளர் வானு ளாரே. 10

மாலை பத்து – ஒவ்வொரு பாட்டும் தனித்தனி மாலை எனப்படும்.

விரிவாகச் செய்யப்பட்டுள்ள வேதங்களை ஓத வல்லவர் வாழ்கின்ற, கடல் சூழ்ந்த திருவெண்காட்டில் எழுந்தருளியுள்ள, யாவர்க்கும் மூத்தோனாகிய அந்தணனை, அவனுக்குத் தொண்டனும், அவன் அடியார்க்கு அடியனும், அகன்ற சோலையையுடைய திருநாவலூரனும் ஆகிய நம்பியாரூரன் விருப்பத்தொடு சிலவற்றை வினவிச் செய்த, தமிழ்ச் சொற்களாலாகிய மாலை பத்தினையும், அவன் தெரித்துச் சொன்ன குறிப்பில் நின்று பாடவல்லவர், கோட்டம் நீங்கிய உணர்வினை யுடையராய், சிவலோகத்தில் இருப்பவராவர்.

## 7. திருவெதிர்கொள்பாடி

"இறைவரது திருக்கோயில் எதிர்கொள் பாடியினை அடைவோம்" என்றெழுந்த திருவுள்ளக்குறிப்பாகிய மகிழ்ச்சியில் இப்பதிகம் வரும் வழியில் பாடியது. சுவாமிகள் திருமுன்பு பாடிய பதிகம் பெறும் பேறு நமக்குக் கிட்டவில்லை. யாக்கை, செல்வம் நிலையாமையைக் குறித்து இப்பதிகத்தில் பாடுகிறார்.

**பண் : இந்தளம்** **பதிக எண் : 7**

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்மிகு அயிராவதநாதர் – அருள்தரும் மலர்க்குழல் நாயகி. | | |
| **தல இருப்பிடம்** | சோழநாடு காவிரி வடகரை, நாகை மாவட்டம், மயிலாடுதுறை வட்டத்தில் குத்தாலத்திலிருந்து ஐந்து கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | வில்வம், வன்னி | | |
| **தீர்த்தம்** | ஐராவத தீர்த்தம் | | |
| **பாடியவர்** | நம்பியாரூரர் | **பதிகம்** 1 | |

62. மத்த யானை யேறி மன்னர்
சூழ வருவீர்கள்
செத்த போதில் ஆரு மில்லை
சிந்தையுள் வைம்மின்கள்
வைத்த உள்ளம் மாற்ற வேண்டா
வம்மின் மனத்தீரே
அத்தர் கோயில் எதிர்கொள் பாடி
யென்ப தடைவோமே. 1

மதத்தையுடைய யானையின்மீது ஏறி சிற்றரசர்கள் புடைசூழ உலாவருகின்ற பேரரசர்களே! நீவிர் இறந்தால், அதுபோது உம்மோடு துணையாய் வருவார் இவர்களுள் ஒருவரும் இலர்; **இறைவன் ஒருவனே அத்தகையனாய் உளன்;** இதனை உங்கள் மனத்தில் நன்கு பதிய வைத்துக் கொள்ளுங்கள். அவ்வாறு வைத்த மனத்தைப் பின் அந்நிலையினின்றும் வேறுபடுத்தி மீள, இவ் வாழ்க்கையை உறுதியாக நினைக்க வேண்டா. என் நெஞ்சீரே! நீரும் வாரும்; அவர்களுடன், யாவர்க்கும் தந்தையாராகிய இறைவரது திருக்கோயிலை 'திருஎதிர்கொள்பாடி' எனப்படுவதாகிய ஊரிடத்துச் சென்று அடைவோம்.

மணக்கோலத்துடன் வந்த அன்பனாகிய அரசகுமாரன் ஒருவனை இறைவர் மாமனாய் எதிர்கொண்டு அழைத்துச் சென்ற வரலாற்றினால் எதிர்கொள்பாடி என்று பெயர் பெற்றது.

63. தோற்ற முண்டேல் மரண முண்டு
துயர மனைவாழ்க்கை
மாற்ற முண்டேல் வஞ்ச முண்டு
நெஞ்ச மனத்தீரே
நீற்றர் ஏற்றர் நீல கண்டர்
நிறைபுனல் நீள்சடைமேல்
ஏற்றர் கோயில் எதிர்கொள் பாடி
யென்ப தடைவோமே. 2

நினைத்தற்றன்மையையுடைய நெஞ்சீரே! யாவர்க்கும், பிறப்பு உளதாயின், இறப்பும் ஒருதலையாக உண்டு; அவற்றிற்கு இடையே உள்ள இல்வாழ்க்கையும் துன்பம் தருவதே. அவ்வாழ்க்கையின் பொருட்டுச் சொல்லப்படும் சொல் உளதாயின் அதன்கண் பெரும்பாலும் வஞ்சனை உளதாவதேயாம். அதனால், அவைகளின் நீங்குதற் பொருட்டு, வெண்ணீற்றை யணிந்தவரும், இடப வாகனத்தை உடையவரும், மிக்க நீரை நீண்ட சடையிலே தாங்கியவரும் ஆகிய இறைவரது திருக்கோயிலை, **'திருஎதிர்கொள்பாடி'** எனப்படுவதாகிய ஊரிடத்துச் சென்று அடைவோம்; வாரீர்.

"கோயில் எதிர்கொள்பாடி என்பதடை வோமே" என்பது பதிக மகுடம்.

64. செடிகொள் ஆக்கை சென்று சென்று
தேய்ந்தொல்லை வீழாமுன்
வடிகொள் கண்ணார் வஞ்ச னையுட்
பட்டு மயங்காதே
கொடிகொள் ஏற்றர் வெள்ளை நீற்றர்
கோவண ஆடையுடை
அடிகள் கோயில் எதிர்கொள் பாடி
யென்ப தடைவோமே. 3

நெஞ்சீரே! துன்பத்தைக் கொண்ட உடம்பானது, உலகியலில் உழன்று உழன்று மெலிந்து, விரைய வீழ்ந்தொழியாத முன்னே, மாவடுவின் வடிவைக் கொண்ட கண்களையுடைய மாதரது மயக்கத்திற்பட்டு மயங்காது, தம் கொடி தன்னிடத்துப் பொருந்தக் கொண்ட இடபத்தை யுடையவரும், வெண்மையான நீற்றை அணிந்தவரும், கோவணமாக உடுத்த ஆடையை உடைய தலைவரும் ஆகிய இறைவரது திருக்கோயிலை, **'திருஎதிர்கொள்பாடி'** எனப்படுவதாகிய ஊரிடத்துச் சென்று அடைவோம்; வாரீர்.

செடி – துன்பம், சிதைவு. வீழ்தல் – இறந்துபடுதல்

65. வாழ்வர் கண்டீர் நம்முள் ஐவர்
வஞ்ச மனத்தீரே
யாவ ராலு மிகழப் பட்டிங்
கல்லலில் வீழாதே
மூவ ராயும் இருவ ராயும்
முதல்வன் அவனேயாம்
தேவர் கோயில் எதிர்கொள் பாடி
யென்ப தடைவோமே. 4

மூவர் – பிரம்மா, திருமால், குணிருத்திரன்
இருவர் – சிவம், சத்தி
முதல்வன் – மகாருத்திரன் – சிவபெருமான்.

சுத்தமாயைத் தொழிற்படுத்துமிடத்து சிவம் தாமே முத்தொழிலையும் செய்யும். அவரே பிரம்ம, விட்டுணு, உருத்திரன். அசுத்த மாயையின் கீழ் உள்ள பிரகிருதி மாயைத் தொழிற்படுத்துமிடத்து நம் போன்றவரை இப்பணிகளுக்காக அமர்த்திக் கொண்டு முத்தொழில் (ஐந்தொழில்) புரிவார்.

வஞ்சனையையுடைய நெஞ்சீரே! நமக்கு உட்பட்டவராயே ஐவர் பகைவர் வாழ்வர்; அதனால், அவரது தீமையால் யாவராலும் இகழப்படும் நிலையை எய்தித் துன்பத்தில் வீழாது, தாமே மும்மூர்த்திகளாயும், தமது ஆணை வழியால் மாலும் அயனுமாயும், எல்லாவற்றானும் உலகிற்கு அவரே முதல்வராகும் முழு முதல்வராகிய இறைவரது திருக்கோயிலை, **'திருஎதிர்கொள்பாடி'** எனப்படுவதாகிய ஊரிடத்துச் சென்று அடைவோம்; வாரீர்.

66. அரித்து நம்மேல் ஐவர் வந்திங்
காறலைப்பான் பொருட்டால்
சிரித்த பல்வாய் வெண்டலை போய்
ஊர்ப்புறஞ் சேராமுன்
வரிக்கொ டுத்தி வாள ரக்கர்
வஞ்சமதில் மூன்றும்
எரித்த வில்லி எதிர்கொள் பாடி
யென்ப தடைவோமே. 5

அரித்து – சிறிது சிறிதாய் இடைவிடாது வருத்தி அழித்து.
ஆறவைத்தல் – வழிப்பறி செய்தல்
பல்வாய் சேர்தல் – இறந்தபின் வாய்திறந்த வண்ணம் சுடலை சேர்தல்.
வரி – அழகு. துத்தி – பாம்பின் படப்பொறி.

நெஞ்சீரே! ஐவர் ஆறலை கள்வர் நம்மேல் வந்து துன்புறுத்தி நன்னெறியின் இடையே அலைத்தலால் வாணாள் வீணாளாய்க் கழிய, மகிழ்ச்சியாற் சிரித்த பல்லினை உடைய வாய், வெண்டலையாய்ப் போய் ஊர்ப்புறத்திற் சேராத முன்பே, அழகினைக் கொண்ட படப்புள்ளிகளை யுடைய பாம்பை அணிந்த, கொடிய அசுரரது பகைமை தங்கிய மதில்கள் மூன்றினையும் எரித்த வில்லையுடைய பெருமானது திருக்கோயிலை, **'திருஎதிர்கொள்பாடி'** எனப்படுவதாகிய ஊரிடத்துச் சென்று அடைவோம்; வாரீர்.

67. பொய்யர் கண்டீர் வாழ்க்கை யாளர்
பொத்தடைப் பான்பொருட்டால்
மையல் கொண்டீர் எம்மொ டாடி
நீரும் மனத்தீரே
நைய வேண்டா இம்மை யேத்த
அம்மை நமக்கருளும்
ஐயர் கோயில் எதிர்கொள் பாடி
யென்ப தடைவோமே. 6

பொத்தடைப்பான் பொருட்டால் – வஞ்சமாகிய துவாரங்களுள்ளே அகப்படுத்து வைக்கும் வகை காரணமாக பொத்தடைத்தல் – பொறிகளுள்ளே பட வைத்தல். பொத்தல் – துளைத்தல்.

நெஞ்சீரே! நம் இல்வாழ்க்கையை ஆளுதலுடைய சுற்றத்தார், நம்மீது நிலையற்ற அன்புடையரே; அதனை நினையாது, அவர்கள் குறையை முடித்தற் பொருட்டு நீரும் எம்மொடு கூடித்திரிந்து, மயக்கத்தையுடையீராயினீர்; இனி, அவ்வாற்றால் துன்புறுதல் வேண்டா; இப்பிறப்பில் நாம் வழிபட்டிருக்க, வருகின்ற பிறப்பில் வந்து நமக்கு அருள் பண்ணும் நம் பெருமானது திருக்கோயிலை, **'திருஎதிர்கொள்பாடி'** எனப்படுவதாகிய ஊரிடத்துச் சென்று அடைவோம்; வாரீர்.

68. கூச னீக்கிக் குற்றம் நீக்கிச்
செற்ற மனம்நீக்கி
வாச மல்கு குழலி னார்கள்
வஞ்ச மனைவாழ்க்கை
ஆசை நீக்கி அன்பு சேர்த்தி
என்பணிந் தேறேறும்
ஈசர் கோயில் எதிர்கொள் பாடி
யென்ப தடைவோமே. 7

கூசம் – கூச்சம். அன்பு – இறைவரிடம் செலுத்துவது. குற்றம் நீங்கிய ஒழுக்கமே வீடு தரும்.

நெஞ்சே! கும்பிட்டுக் கூத்தாடக் கூசுதலை ஒழித்து, காமம் வெகுளி முதலிய குற்றங்களை அகற்றி, யாரிடத்தும் பகை கொள்ளுதலைத் தவிர்த்து, மணம் நிறைந்த கூந்தலையுடைய மகளிரது, வஞ்சனையையுடைய மனை வாழ்க்கையில் உள்ள ஆசையைத் துறந்து எலும்பை அணிதலோடு, விடையை ஊரும் இறைவரது திருக்கோயிலை, அவரிடத்து அன்பு வைத்து, **'திருஎதிர்கொள்பாடி'** எனப்படுவதாகிய ஊரிடத்துச் சென்று அடைவோம். அதுவே செயற்பாலது; வாரீர்.

69. இன்ப முண்டேல் துன்ப முண்டு
ஏழை மனைவாழ்க்கை
முன்பு சொன்னால் மோழை மையாம்
முட்டை மனத்தீரே
அன்ப ரல்லால் அணிகொள் கொன்றை
யடிகளடி சேரார்
என்பர் கோயில் எதிர்கொள் பாடி
யென்ப தடைவோமே. 8

மோழைமை – அறியாமை. முட்டை – கீழ்மை

பொறியொன்றும் இல்லாத முட்டைபோலும் நெஞ்சீரே! அறியாமையால் வரும் மனை வாழ்க்கையில் இன்பம் உள்ளதுபோலவே துன்பமும் உளதாதல் கண்கூடு; "அழகிய கொன்றை மாலையை அணிந்த இறைவரது திருவடிகளை, அவற்றிற்கு அன்பராய் உள்ளவரல்லது அடையமாட்டார்" என்று, அறிந்தோர் கூறுவர்; இவற்றை முன்பு உமக்குச் சொன்னால் நீர் உணரமாட்டாமையின், அறியாமையாய் முடியும்; ஆதலாற் சொன்னோமில்லை. இனி மனை வாழ்க்கையைக் கைவிட்டு, இறைவரது திருக்கோயிலை, **'திருஎதிர்கொள்பாடி'** எனப்படுவதாகிய ஊரிடத்துச் சென்று அடைவோம்; வாரீர்.

70. தந்தை யாருந் தவ்வை யாரு
மெட்டனைச் சார்வாகார்
வந்து நம்மோ டுள்ள ளாவி
வான நெறிகாட்டும்
சிந்தை யீரே னெஞ்சி னீரே
திகழ்மதி யஞ்சூடும்
எந்தை கோயில் எதிர்கொள் பாடி
யென்ப தடைவோமே. 9

நெஞ்சீரே! தந்தையாரும் தமக்கையாரும் நமக்கு எள்ளளவும் துணையாக மாட்டார்; ஆதலின், நீர் எம்பால் வந்து உள்ளாய்க் கலந்து, உசாவி, எமக்கு வீட்டு நெறியைக் காட்டும் நினைவுடையீராயின், விளங்குகின்ற திங்களைச் சூடும் நம் தந்தை கோயிலை, **'திருஎதிர்கொள்பாடி'** எனப்படுவதாகிய ஊரிடத்துச் சென்று அடைவோம்; வாரீர்.

தவ்வையார் – தாயார். எட்டனை – எள்தனை – எள்ளளவேனும்

---

71. குருதி சோர ஆனையின் தோல்
கொண்ட குழற்சடையன்
மருது கீறி ஊடு போன
மாலய னும்அறியாச்
சுருதி யார்க்குஞ் சொல்ல வொண்ணாச்
சோதியெம் மாதியான்
கருது கோயில் எதிர்கொள் பாடி
யென்ப தடைவோமே. 10

நெஞ்சீரே! யானையின் தோலை உதிரம் ஒழுகப் போர்த்த, குழல்போலும் சடையை உடையவனும், இருமருத மரங்களை முரித்து, அவற்றின் இடையே தவழ்ந்த மாயோனும், பிரமனும் காண முடியாதவனும், வேதத்தை உணர்ந்தோர்க்கும் சொல்ல ஒண்ணாத ஒளி வடிவினனும், எங்கள் முதல்வனும் ஆகிய சிவபிரான் தன் இடமாக விரும்புகின்ற திருக்கோயிலை 'திருஎதிர்கொள் பாடி' எனப்படுவதாகிய ஊரிடத்துச் சென்று அடைவோம்; அதுவே செயற்பாலது; வாரீர்.

குழல் – மகளிர் கூந்தலை முடிக்கும் வகைகளுள் ஒன்று.

---

72. முத்து நீற்றுப் பவள மேனிச்
செஞ்சடை யானுறையும்
பத்தர் பந்தத் தெதிர்கொள் பாடிப்
பரமனை யேபணியச்
சித்தம் வைத்த தொண்டர் தொண்டன்
சடைய னவன்சிறுவன்
பத்தன் ஊரன் பாடல் வல்லார்
பாதம் பணிவாரே. 11

முத்துப்போலும் வெள்ளிய நீற்றையும், பவளம் போலும் செய்ய திருமேனியையும், சிவந்த சடையையும் உடைய இறைவன் வாழும் – அடியவர் மனம் பிணிப்புண்ணுதலையுடைய **'திருஎதிர்கொள்பாடி'**யில் உள்ள பெருமானை வணங்கவே விரும்பின் – சிவனடியானும், சிவனடியாாக்கு அடியானும், 'சடையன்' என்பானுக்கு மகனும் ஆகிய நம்பியாரூரனது இப்பாடல்களை நன்கு பாடவல்லவர், அப்பெருமானது திருவடியை அடைந்து வணங்கியிருப்பர்.

## 8. திருவாரூர்

சேரமான் பெருமாள் நாயனாருடன் ஆரூர் வந்த போது பாடியருளியது. திருவாரூர் சிவலோக ராஜதானியாகும். திருவாரூர் எல்லையை அடைந்துவிட்டாலே, சிவலோகம் வந்தது போன்ற உணர்வு வரவேண்டும். திருவாரூர்ப் பதிகத்துக்கு (படிக்கும் போது) வந்துவிட்டாலே சொந்த ஊர் வந்த உணர்வு வரவேண்டும். கோயில் எல்லையில் புகுந்துவிட்டால் சொந்த வீட்டிற்கு வந்த உணர்வு வரவேண்டும். அவர்தான் சைவர். அவர்தான் அடியார்.

மனுநீதி சோழன் ஆண்ட ஊருக்கு வந்துள்ளீர்கள்.

ஆழித்தேர் வித்தகனின் திருவடிகள் பட்ட இடங்களில் நீங்கள் நிற்கிறீர்கள்.

எட்டுத் திசைகளும், சூரியனும் தோன்றுவதற்கு முன்னே தோன்றிய கோயிலின் முன்னே நிற்கிறீர்கள்.

முசுகுந்தன் கொணர்ந்த இந்திரலோகத்து தியாகேசரைக் காணப் போகிறீர்கள்.

கோயிலும் ஐந்து வேலி; குளமும் ஐந்து வேலி; செங்கழு நீர் ஓடையும் ஐந்து வேலி; பிரம்மாண்டமான குளத்தையும் பார்க்கிறீர்கள்.

உருத்திர பல்கணத்தினர், மாவிரதிகள், முனிவர்கள், காபாலிகள் என்று எவ்வளவோ அடியார்கள் எவ்வளவோ காலம் பாடி ஆடித் தொழுத வீதிகளில் நடக்கிறீர்கள். பழைய அடியார்களைக் காணும் பேறு பெறுகிறீர்கள்.

அடியார் பெருமைகளை உலகறியச் செய்த திருத்தொண்டத்தொகை பாடப்பட்ட பதியாகும்.

ஏனைய தலங்கள் போலன்றி வீதிவிடங்கருக்கும், திருமூலட்டானருக்கும் தனித்தனிப் பதிகங்கள் உள்ளமை திருவாரூரின் தனிபெருஞ் சிறப்புகளுள் ஒன்று. உதாரணமாக, 'மூலட்டனீரே' என்று நிறைவுறும் பாடல்களைக் கொண்ட பதிகம், சுவாமிகள் மூலட்டானரைப் பாடினார் என்று கொள்ளலாம். 'முத்துவிதானம்' போன்ற பதிகங்கள், தியாகேசராகிய வீதிவிடங்கரைப் போற்றும் பதிகமாகக் கொள்ளவேண்டும். 'ஆரூரே' என்று முடியும் பதிகங்களை ஆழ்ந்து நோக்கினால்தான், அது மூலவருக்கா அல்லது உற்சவருக்கா என்று விளங்கும். கொங்கு நாட்டிலும் கோவை மாவட்டம் ஒத்தக்கால் மண்டபத்தில் புற்றிடங்கொண்டீசர் எழுந்தருளி பதிப்பாசிரியர் உள்ளிட்ட பல்லாயிரக்கணக்கான அடியார்களுக்கு அருள்பாலித்து வருகிறார்.

**பண் : இந்தளம்** **பதிக எண் : 8**

| **மூர்த்தி** | அருள்தரும் அல்லியங்கோதை உடனமர் அருள்மிகு புற்றிடங்கொண்டீசர் | | |
|---|---|---|---|
| **தல இருப்பிடம்** | சோழநாட்டில் காவிரி தென்கரை தற்போதைய திருவாரூர் மாவட்டத்தின் தலைநகர். தஞ்சையிலிருந்து 70 கி.மீ. நகரின் மையத்தில் உள்ளது. | | |
| **தல மரம்** | பாதிரி | | |
| **தீர்த்தம்** | கமலாலயம் | | |
| **பாடியவர்** | மூவர் | **பதிகங்கள்** | **33** |

73. இறைகளோ டிசைந்த இன்பம்
இன்பத்தோ டிசைந்த வாழ்வு
பறைகிழித் தனைய போர்வை
பற்றியான் நோக்கி னேற்குத்
திறைகொணர்ந் தீண்டித் தேவர்
செம்பொனும் மணியுந் தூவி
அறைகழல் இறைஞ்சும் ஆரூர்
அப்பனே அஞ்சி னேனே. 1

இறைகளோடிசைந்த இன்பம் – சிவத்தோடு ஒன்றிய பெருவாழ்வினால் ஏற்பட்ட இன்பம். பறை கிழித்தனைய போர்வை – பறை கிழிந்தால் அதன் தோல் பயன்படாதவாறு போல இறந்துபட்டால் பயன்படாத உடம்பு. திறை – கப்பம்.

தேவர்கள் செம்பொன்னையும், மணிகளையும் திறையாகக் கொணர்ந்து திரண்டு வந்து, நினது ஒலிக்கும் கழலையணிந்த திருவடிகளை, மலர் தூவி வணங்குகின்ற, திருவாரூரில் உள்ள தந்தையே! பறையைக் கிழித்தாற்போன்ற உடம்பைப் பற்றிநின்று பார்த்தேனாகிய எனக்கு, அவ்விடத்துச் சிறுபொருள்களோடு பொருந்திவந்த இன்பத்தையும், அவ்வின்பத்தோடு பொருந்தி நிகழ்ந்த இல்வாழ்க்கையையும் அஞ்சுதலுடையனாயினேன்.

74. ஊன்மிசை உதிரக் குப்பை
ஒருபொரு ளிலாத மாயம்
மான்மறித் தனைய நோக்கின்
மடந்தைமார் மதிக்கும் இந்த
மானுடப் பிறவி வாழ்வு
வாழ்வதோர் வாழ்வு வேண்டேன்
ஆனல்வெள் ளேற்ற ஆரூர்
அப்பனே அஞ்சி னேனே. 2

வெள்ளிய நல்ல ஆனேற்றையுடையவனே! திருவாரூரில் உள்ள தந்தையே! இறைச்சியை உள்ளடக்கி ஓடுகின்ற குருதிக்குப் பையாய் உள்ள இவ்வுடம்பு, பொருட்டன்மையாகிய உண்மையை உடைத்தல்லாத பொய்ப்பொருள்; ஆதலின், அத்தன்மையை அறியாத, மான் மருண்டாற்போலும் பார்வையினையுடைய பெண்டிரே மதிக்கின்ற இந்த மானுடப் பிறவி வாழ்வினை, இன்புற்று வாழ்வதொரு வாழ்வாக விரும்புகின்றிலேன்; அத்துன்ப நிலைக்கு அஞ்சுதலுடையனாயினேன்.

75. அறுபதும் பத்தும் எட்டும்
ஆறினோ டஞ்சும் நான்கும்
துறுபறித் தனைய நோக்கிச்
சொல்லிற்றொன் றாகச் சொல்லார்
**நறுமலர்ப் பூவும் நீரும்**
**நாள்தொறும் வணங்கு வாருக்**
கறிவினைக் கொடுக்கும் ஆரூர்
அப்பனே அஞ்சி னேனே. 3

''ஆரூர் அப்பனே அஞ்சினேனே'' பதிக மகுடம். 'அவ்வச்சத்தை நீக்கியருள்' என்பது குறிப்பெச்சம். அறுபது, பத்து என்பவையெல்லாம் தத்துவ, தாத்துவீகங்கள். அவை முறையே 36, 96 ஆகும்.
சிவபூஜையின் முக்கியத்துவத்தை மீண்டும் இப்பாடலில் நினைவுபடுத்துகிறார்.

மணம் கமழும் பூவும், நீருங் கொண்டு உன்னை நாள்தோறும் வழிபடுவோர்க்கு மெய்யுணர்வைத் தருகின்ற, திருவாரூரில் உள்ள தந்தையே! பூதங்கள் ஐந்தும், ஞானேந்திரியம் கண்மேந்திரியம் என்னும் இந்திரியங்கள் பத்தும், தன்மாத்திரை ஐந்து அந்தக்கரணம் மூன்று என்னும் நுண்ணுடம்புறுப்புக்கள் எட்டும், தாத்துவிகங்கள் அறுபதும், 'காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன்' என்னும் வித்தியா தத்துவங்களாகிய ஆறும், 'சுத்தவித்தை, ஈசுரம், சாதாக்கியம், சத்தி' என்னும் நான்கும் ஆகிய எல்லாம் புதராக, வேறாகக் கண்டு சொல்லின், அவற்றை அறிவுடைய தம்மியல்பாக ஒருவருங் கூறார். ஆதலின், தம்மை, நானாகவே மயங்கும் வண்ணம் என் இயல்பை மறைத்து நிற்கின்ற அவற்றிற்கு அடியேன் அஞ்சுதலுடைய னாயினேன்.

76. சொல்லிடில் எல்லை யில்லை
சுவையிலாப் பேதை வாழ்வு
நல்லதோர் கூரை புக்கு
நலமிக அறிந்தே னல்லேன்
மல்லிகை மாட நீடு
மருங்கொடு நெருங்கி யெங்கும்
அல்லிவண் டியங்கும் ஆரூர்
அப்பனே அஞ்சி னேனே. 4

நல்லதோர் கூரை – வீடுபேறு
ஒட்டைக் குடில் – நமது உடம்பு

மேல் மாடங்கள் உயர்ந்துள்ள இடங்களி லெல்லாம், வண்டுகள் மல்லிகை மலரின் அகவிதழில் வீழ்ந்து கிண்டுகின்ற திருவாரூரில் உள்ள தந்தையே! யான், ஒட்டைக் குடில்களுள் துச்சிலிருந்து வாழ்ந்த, பேதைக் குரித்தாய, துன்பமே நிறைந்த வாழ்க்கைகளைச் சொல்லப்புகின், அவற்றிற்கு ஓர் எல்லை இல்லை. அங்ஙனமாகவும், நல்லதொரு புக்கிலுட் குடிபுகுந்து இன்பம் மிக வாழும் நெறியினை அறிந்திலேன்; அதனால், அஞ்சுதலுடையனாயினேன்.

77. நரம்பினோ டெலும்பு கட்டி
நசையினோ டிசைவொன் றில்லாக்
குரம்பைவாய்க் குடியி ருந்து
குலத்தினால் வாழ மாட்டேன்
விரும்பிய கமழும் புன்னை
மாதவித் தொகுதி யென்றும்
அரும்புவாய் மலரும் ஆரூர்
அப்பனே அஞ்சி னேனே. 5

குரம்பை – உடம்பு. குலம் – உயர்ந்தாரது தொகுதி. உயர்ந்தார் – வெளிப்படைப் பொருளில் செல்வர். குறிப்புப் பொருளில் வீடுபெற்றார். நசை – விருப்பம்.

புன்னையும் மாதவியுமாகிய அவற்றையுடைய சோலைக்கண், யாவரும் விரும்புமாறு மணங் கமழ்கின்ற பேரரும்புகள் எந்நாளும் வாய்மலர்கின்ற திருவாரூரில் உள்ள தந்தையே! அடியேன், எலும்புகளை நரம்பாற் கட்டின, விருப்பத்தோடு சிறிதும் இசைவில்லாத (அருவருப்பைத் தருவதான) குடிசைக்கண் குடியிருத்தலால், நன்மாளிகையில் வாழும் உயர்ந்தார் நடுவுள்ளிருந்து வாழ இயலாதவனாயுள்ளேன்; அதனால், அஞ்சுதலுடையனாயினேன்.

78. மணமென மகிழ்வர் முன்னே
மக்கள்தாய் தந்தை சுற்றம்
பிணமெனச் சுடுவர் பேர்த்தே
பிறவியை வேண்டேன் நாயேன்
பணையிடைச் சோலைதோறும்
பைம்பொழில் விளாகத் தெங்கள்
அணைவினைக் கொடுக்கும் ஆரூர்
அப்பனே அஞ்சி னேனே. 6

பணை – கிளை. விளாகம் – வளாகம் – பரப்பு – மருதநிலம்.

வயல்களின் நடுவேயுள்ள சோலைகளிலெல்லாம், பசிய இளமரக்காக்களை உடைய விளையாடுமிடங்களில், மக்கட்குத் தங்குமிடங்களைத் தருகின்ற திருவாரூரில் உள்ள தந்தையே! உலகில் தாய், தந்தை, சுற்றத்தார் என்போர் முன்பு (இளமையில்) தம் மக்கட்குத் திருமணம் நிகழாநின்றது என மகிழ்வார்கள். பின்பு அவர்தாமே அவர்களை, 'பிணம்' என்று சொல்லி ஊரினின்றும் அகற்றிப் புறங்காட்டிற் கொண்டுபோய் எரிப்படுத்து நீங்குவர்; ஆதலின், இத்தன்மைத்தாகிய பிறவியை அடியேன் விரும்புகின்றிலேன்; அதன்கண் வீழ்தற்கு அஞ்சுதலுடையனாயினேன்.

79. தாழ்வெனுந் தம்மை விட்டுத்
தனத்தையே மனத்தில் வைத்து
வாழ்வதே கருதித் தொண்டர்
மறுமைக்கொன் றீய கில்லார்
ஆழ்குழிப் பட்ட போது
அலக்கணில் ஒருவர்க் காவர்
யாழ்முயன் றிருக்கும் ஆரூர்
அப்பனே அஞ்சி னேனே. 7

தாழ்வு – பணிவு; அகங்காரம் இல்லாத தன்மை. தாழ்வு என்பது சைவத்திற்கு அடிப்படையான கொள்கை. "தாழ்வெனும் தன்மையோடு சைவமாம் சமயம் சாரும் ஊழ்பெறல் அரிது" சித்தியார்.

மக்கள் யாழிசைத்து இன்புற்றிருக்கின்ற திருவாரூரில் உள்ள தந்தையே! உலகத்தார் பொருள் ஒன்றனையே பெரிதாக மனத்துட் கொண்டு, அதனால் பெருமையுடன் வாழ்வதையே விரும்பி, பணிவு என்னும் பெருந்தன்மையை விட்டு, மறுமை நலத்தின் பொருட்டு வறியார்க்கு ஒன்று ஈதலை இலராகியே வாழ்வர்; துன்பத்துள் அகப்பட்டவர்க்கு அப்போது உதவியாய் நில்லாது, துன்பமின்றி இன்புற்றிருக்கின்ற மற்றொருவருக்கு உதவியாவர். அவரது தன்மையைக் கண்டு அவரொடு கூடி வாழ்வதற்கு அஞ்சுதலுடையனாயினேன்.

| | | | |
|---|---|---|---|
| 80. | உதிரநீர் இறைச்சிக் குப்பை<br>எடுத்தது மலக்கு கைம்மேல்<br>வருவதோர் மாயக் கூரை<br>வாழ்வதோர் வாழ்வு வேண்டேன்<br>கரியமா லயனுந் தேடிக்<br>கழலிணை காண மாட்டா<br>அரியனாய் நின்ற ஆரூர்<br>அப்பனே அஞ்சி னேனே. | 8 | கருமை நிறத்தையுடைய திருமாலும், பிரமனும் தேடித் திருவடியைக் காணமாட்டாத அருமையையுடையோனாய் நின்ற திருவாரூரில் உள்ள தந்தையே! குருதியாகிய நீராற் பிசைந்த இறைச்சியாகிய மண்குவியலைக் கொண்டு எடுத்ததாகிய, மலக்குகையின்மேல் காணப்படுவதாகிய, விரையக்கெடும் தோலாகிய கூரையினுள்ளே வாழ்வதாகிய இழிந்த வாழ்க்கையை அடியேன் விரும்புகின்றிலேன். அதனது தீமைகள் பலவும் அறிந்து அதற்கு அஞ்சுதலுடையனாயினேன். |
| 81. | பொய்த்தன்மைத் தாய மாயப்<br>போர்வையை மெய்யென் றெண்ணும்<br>வித்தகத் தாய வாழ்வு<br>வேண்டிநான் விரும்ப கில்லேன்<br>முத்தினைத் தொழுது நாளும்<br>முடிகளால் வணங்கு வாருக்<br>கத்தன்மைத் தாகும் ஆரூர்<br>அப்பனே அஞ்சி னேனே. | 9 | முத்துப்போல அரிதிற் கிடைக்கும் நின்னை நாள் தோறும் தொழுது, தலையால் வணங்கும் அன்பர்கட்கு அத்தன்மையதாகிய சிறந்த பொருளாய் நின்று பெரும்பயனைத் தருகின்ற திருவாரூரில் உள்ள தந்தையே! நிலையாத தன்மையையுடைய உடம்பை நிலையுடைய தாகக் கருதும் சதுரப்பாட்டினையுடையதாகிய இவ்வுலக வாழ்க்கையை அடியேன் இன்றியமையாததாக நினைத்து விரும்பும் தன்மையில்லேன்; அதற்கு, அஞ்சுதலுடைய னாயினேன். |
| 82. | தஞ்சொலார் அருள்ப யக்குந்<br>தமியனேன் தடமு லைக்கண்<br>அஞ்சொலார் பயிலும் ஆரூர்<br>அப்பனை ஊரன் அஞ்சிச்<br>செஞ்சொலால் நயந்த பாடல்<br>சிந்தியா ஏத்த வல்லார்<br>நஞ்சுலாங் கண்டத் தெங்கள்<br>நாதனை நணுகு வாரே. | 10 | பற்றுக் கோடாதற்குப் பொருந்தாத மகளிர் பொருட்டு மனம் உடைகின்ற தமியேனாகிய நம்பியாரூரன், அவரது பெருத்த தனங்களின் இன்பத்திலே அச்சந்தோன்றப் பெற்றவனாய், அழகிய சொற்களையுடைய மகளிர் ஆடல், பாடல்களைப் பயிலுகின்ற திருவாரூரிலுள்ள தந்தையைச் செவ்விய சொற்களால் வேண்டிப் பாடிய இப்பாடல்களை எண்ணிப் பாடவல்லவர், நஞ்சை அணிகலமாகத் தாங்கிய கண்டத்தை யுடைய எங்கள் பெருமானை அடைவார்கள். |

## 9. திருவரிசிற்கரைப்புத்தூர்

பண் : இந்தளம் பதிக எண் : 9

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் அழகம்மை உடனமர் அருள்மிகு படிக்காசு வைத்த பரமர். | | |
| **தல இருப்பிடம்** | சோழநாட்டுக் காவிரித் தென்கரைத்தலம். கும்பகோணத்துக்கும் நாச்சியார் கோயிலுக்கும் இடையில் கும்பகோணத்திலிருந்து 9 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | வில்வம் | | |
| **தீர்த்தம்** | அரசலாறு. (பூசையின் பொருட்டு அரி (திருமால்) சொல்லின் வழிவந்தமையால் அரி+சொல்+ஆறு – அரிசலாறு) இந்நாளில் மருவி அரசலாறு எனப்படுகிறது. | | |
| **பாடியவர்** | மூவர் | **பதிகங்கள்** | 3 |

83. மலைக்கும்மக ளஞ்ச மதகரியை
உரித்தீர்எரித் தீர்வரு முப்புரங்கள்
சிலைக்குங்கொலைச் சேவுகந் தேறொழியீர்
சில்பலிக்கில் கள்தோறுஞ் செலவொழியீர்
கலைக்கொம்புங் கரிமருப் பும்மிடறிக்
கலவம்மயிற் பீலியுங் காரகிலும்
அலைக்கும்புனல் சேரரி சிற்றென்கரை
அழகார்திருப் புத்தூர் அழகனீரே. 1

சிலைக்கும் – ஒலிக்கும். சே – இடபம்

மான்களின் கொம்புகளையும், யானையின் தந்தங்களையும் எடுத்தெறிந்து, தோகையை யுடைய மயிலினது இறகுகளையும், கரிய அகிற்கட்டைகளையும், அலையப் பண்ணுகின்ற நீர்பொருந்திய அரிசிலாற்றின் தென்கரை யிலுள்ள, அழகு நிறைந்த திருப்புத்தூரில் எழுந்தருளியுள்ள அழகரே! நீர் இமயமலைக்கு மகளாகிய உம் தேவி அச்சங்கொள்ளும்படி மதம் பொருந்திய யானையை உரித்தீர்; பெயர்ந்து வந்து எதிர்த்த மூன்று நகரங்களை எரித்தீர். முழங்குகின்ற கொல்லுந் தொழிலை உடைய காளையை விரும்பி ஏறுதலை விடமாட்டீர்; சிலவகையான பிச்சைக்கு இல்லங்கள் தோறும் செல்லுதலையும் நீங்கமாட்டீர்.

84. அருமல ரோன்சிரம் ஒன்றறுத்தீர்
செறுத்தீர்அழற் சூலத்தில் அந்தகனைத்
திருமகள் கோனெடு மால்பலநாள்
சிறப்பாகிய பூசனை செய்பொழுதில்
ஒருமலர் ஆயிரத் திற்குறைவா
நிறைவாகவோர் கண்மலர் சூட்டலுமே
பொருவிறல் ஆழி புரிந்தளித்தீர்
பொழிலார்திருப் புத்தூர் புனிதனீரே. 2

அந்தகன் – இங்கு அந்தகாசுரன் என்று பொருள் கொள்ள வேண்டும். பைரவரால் சூலத்தால் அழிக்கப்பட்ட அசுரன். நம்மையெல்லாம் சிறப்பாகிய பூசனை செய்யச் சொல்கிறார்.

சோலைகள் நிறைந்த திருப்புத்தூரில் எழுந்தருளியுள்ள புனிதரே! நீர், அரிதாகிய தாமரை மலரின்கண் இருக்கும் பிரமதேவனது தலையொன்றை அறுத்தீர்; நெருப்பை வீசும் சூலத்தினால் அந்தகாசுரனை அழித்தீர்; திருமகட்குத் தலைவனாகிய நீண்ட வடிவினைக் கொண்ட திருமால் உமக்குப் பலநாள் சிறப்பாய் உள்ள வழிபாட்டினைச் செய்து வரும் நாள்களில் ஒருநாள், அவன் சாத்துகின்ற ஆயிரந் தாமரை மலர்களுள் ஒன்று குறைவாகி மறைய, அது நிறைவாகும்படி, தனது கண்ணாகிய மலரைப்பறித்துச் சாத்த மகிழ்ந்து, போரின்கண் வெற்றியைத் தருகின்ற சக்கரப் படையை அருளினீர்.

| | |
|---|---|
| 85. தரிக்குந்தரை நீர்தழல் காற்றந்தரஞ்<br>சந்திரன்சவி தாஇய மானன்ஆனீர்<br>சரிக்கும்பலிக் குத்தலை அங்கையேந்தித்<br>தையலார்பெய்யக் கொள்வது தக்கதன்றால்<br>முரிக்குந்தளிர்ச் சந்தனத் தோடுவேயும்<br>முழுங்குந்திரைக் கைகளால் வாரிமோதி<br>அரிக்கும்புனல் சேர்அரி சிற்றென்கரை<br>அழகார்திருப் புத்தூர் அழகனீரே. 3<br><br>சவிதா – சூரியன். அந்தரம் – ஆகாசம். சரிக்கும் – உலவும். முரிக்கும் – தளிர்க்கும். | கிள்ளி அணியத்தக்க தளிர்களையுடைய சந்தன மரத்தையும் மூங்கிலையும், ஒலிக்கின்ற அலைகளாகிய கைகளால் வாரிக்கொண்டு வந்து, கரையை மோதி அதனை ஒழித்து ஓடுகின்ற அரிசிலாற்றின் தென்கரையிலுள்ள, அழகு நிறைந்த திருப்புத்தூரில் எழுந்தருளியுள்ள அழகரே! நீர், 'எல்லாவற்றையும் தாங்குகின்ற நிலம், நீர், நெருப்பு, காற்று, வானம், சந்திரன், சூரியன், ஆன்மா' ஆகிய எல்லாப் பொருள்களுமானீர். ஆதலின், ஒன்றும் இல்லாதார் திரிந்து எடுக்கின்ற பிச்சையின் பொருட்டுத் தலை ஓட்டினை அங்கையில் ஏந்திச் சென்று பெண்டிர் சில பொருள்களை இட, அவற்றை ஏற்பது உமக்குத் தகுவதன்று. |
| 86. கொடியுடை மும்மதில் வெந்தழியக்<br>குன்றம்வில்லா நாணியிற் கோலொன்றினால்<br>இடிபட எய்தெரித் தீர்இமைக்கும்<br>மளவில்லுமக் காரெதிர் எம்பெருமான்<br>கடிபடு பூங்கணை யான்கருப்புச்<br>சிலைக்காமனை வேவக் கடைக்<br>கண்ணினால்<br>பொடிபட நோக்கிய தென்னைகொல்லோ<br>பொழிலார்திருப் புத்தூர் புனிதனீரே. 4<br><br>கோல் – அம்பு. கடி – வாசனை. | எம்பெருமானிரே! சோலைகள் நிறைந்த திருப்புத்தூரில் எழுந்தருளியுள்ள புனிதரே! நீர், கொடிகளையுடைய மூன்று அரண்கள் வெந்து அழியும்படி, மலை வளைந்து வில்லாகுமாறு கட்டிய நாணியில் தொடுத்த ஓர் அம்பினாலே ஓசையுண்டாக எய்து, இமைக்கும் அளவில் எரித்தீர்; ஆதலின், உமக்கு நிகராவார் யாவர்? ஒருவரும் இல்லை; அங்ஙனமாக, மணம் பொருந்திய மலர்களையே அம்பாகவும், கரும்பையே வில்லாகவும் கொண்ட காமவேளை வெந்து சாம்பராய் அழியக் கடைக்கண்ணால் சிவந்து நோக்கியது என் கருதியோ? |
| 87. வணங்கித்தொழு வாரவர் மால்பிரமன்<br>மற்றும்வானவர் தானவர் மாமுனிவர்<br>உணங்கற்றலை யிற்பலி கொண்டலென்னே<br>உலகங்களெல் லாமுடையீர் உரையீர்<br>இணங்கிக்கயல் சேல்இள வாளைபாய<br>இனக்கெண்டைதுள் ளக்கண்<br>டிருந்தஅன்னம்<br>அணங்கிக்குணங் கொள்ளரி சிற்றென்கரை<br>அழகார்திருப் புத்தூர் அழகனீரே. 5<br><br>உணங்கல் தலை – ஊன் உலர்ந்த கபாலம். | கயலும், சேலும் இளைய வாளையுமாகிய மீன்கள், ஒன்றோடு ஒன்று பொருந்தி மேலெழுந்து பாயவும், கூட்டமாகிய கெண்டை மீன்கள் துள்ளவும் அவற்றைக்கண்டு, முன்பு வாளாவிருந்த அன்னப்பறவைகள் அவை களைத் துன்புறுத்தித் தம் இயல்பினை மேற்கொள்கின்ற (உண்கின்ற) அரிசிலாற்றின் தென்கரையிலுள்ள, அழகு நிறைந்த திருப்புத்தூரில் எழுந்தருளியிருக்கின்ற அழகரே! உலகம் எல்லாவற்றையும் உடையவரே! உம்மை அடிபணிந்து, கைகூப்பித் தொழுகின்ற அடியவராவார், திருமாலும், பிரமனும், மற்றைய தேவரும், அசுரரும், பெரிய முனிவருமாவர்; அங்ஙனமாக, நீர் உலர்ந்த தலையோட்டில் பிச்சை ஏற்பது என்னோ? சொல்லியருளீர். |

88. **அகத்தடி மைசெய்யும் அந்தணன்றான்**
அரிசிற்புனல் கொண்டுவந் தாட்டுகின்றான்
மிகத்தளர் வெய்திக் குடத்தையும்நும்
முடிமேல்விழுத் திட்டு நடுங்குதலும்
வகுத்தவ னுக்குநித் தற்படியும்
வரும்என்றொரு காசினை நின்றநன்றிப்
புகழ்த்துணை கைப்புகச் செய்துகந்தீர்
பொழிலார்திருப் புத்தூர் புனிதனீரே. 6

புகழ்த்துணை நாயனாருக்கு அருளிய திறத்தை போற்றி மகிழ்கிறார். அகத்தடிமை – அணுக்கத் தொண்டு. அஃதாவது இறைவர் திருமேனி அண்மையிலிருந்து அவரது திருமேனியைத் தீண்டிச் செய்வதற்குரிய பணிவிடைகளைச் செய்தல். "புடைசூழ்ந்த புலியதன் மேல் அரவாட ஆடி பொன்னடிக்கே மனம் வைத்த புகழ்த் துணை" – திருத்தொண்டத் தொகை.

சோலைகள் நிறைந்த திருப்புத்தூரில் எழுந்தருளியுள்ள புனிதரே! நீர் உமக்கு அகத்தொண்டு செய்யும் அந்தணர் ஒருவர் தம் நியமப்படி ஒருநாள் அரிசிலாற்றின் நீரைக் கொணர்ந்து உமக்கு ஆட்டுகின்றவர், பசியினால் மிகவும் உடல் மெலிவடைந்து, நீர்க்குடத்தையும், உமது முடியின் மேல் நழுவி விழவிட்டு, அப்பிழைக்காக நடுக்கமுற, நீர் அவரது கனவில் தோன்றி, 'அன்பனே! நீ அறியாதவாறு உன்னால் நிகழ்ந்த பிழையை நினைந்து வருந்தற்க'. 'உன் உடல் மெலிவிற்குக் காரணமான இவ்வற்கடம் நீங்குங்காறும், நாள்தோறும் உனக்குப் படியாக ஒரு காசும் கிடைக்கும்' என்று அருளிச் செய்து, நாள்தோறும் ஒரு பொற்காசினை – வற்கடத்திலும் தவறாது நிலைபெற்ற திருத்தொண்டினைச் செய்த – அப்புகழ்த் துணையாரது கையிற் சேரும்படி செய்து, அவரை ஆட்கொண்டருளினர்.

89. பழிக்கும்பெருந் தக்கன்எச் சம்மழியப்
பகலோன்முத லாப்பல தேவரையும்
தெழித்திட்டவர் அங்கஞ் சிதைத்தருளுஞ்
செய்கையென்னைகொ லோமைகொள்
செம்மிடற்றீர்
விழிக்குந்தழைப் பீலியொ டேலமுந்தி
விளங்கும்மணி முத்தொடு பொன்வரன்றி
அழிக்கும்புனல் சேர்அரி சிற்றென்கரை
அழகார்திருப் புத்தூர் அழகனீரே. 7

எச்சம் – யாகம். தெழித்தல் – தண்டித்தல். விழிக்கும் தழைப்பீலி – கண் போன்ற அமைப்பும் தழை போன்ற வடிவுமுடைய மயிற்பீலி.

சிறிதிடத்தில் கருமை நிறத்தைக் கொண்ட, முழுவதும் செம்மையாயுள்ள கண்டத்தை யுடையவரே! கண்விழிப்பது போலத் தோன்றும் அழகிய வட்டங்களையுடைய தழையாகிய மயிற்றோகையோடு ஏலக்காய் மரங்களைத் தள்ளி, ஒளி வீசுகின்ற மாணிக்கம், முத்து, பொன் என்பவற்றையும் வாரிக்கொண்டு, கரைகளை அழித்து ஓடும் நீர் பொருந்திய அரிசிலாற்றின் தென்கரையிலுள்ள அழகு நிறைந்த திருப்புத்தூரில் எழுந்தருளியிருக்கும் அழகரே! நீர், உம்மை இகழ்ந்த பெரிய தேவனாகிய தக்கனது வேள்வி அழியும்படி, சூரியன் முதலாக நின்ற தேவர் பலரையும் அவர் நடுங்கும்படி அதட்டி, அவரது உறுப்புக்களில் ஒவ்வொன்றைச் சிதைத்தது என்னையோ ?

90. பறைக்கண்ணெடும் பேய்க்கணம் பாடல்செய்யக்
குறட்பாரிடங் கள்பாறை தாம்முழக்கப்
பிறைக்கொள்சடை தாழப் பெயர்ந்துநட்டம்
பெருங்காடரங் காகநின் றாடலென்னே
கறைக்கொள்மணி கண்டமுந் திண்டோள்களுங்
கரங்கள்சிரந் தன்னிலுங் கச்சுமாகப்
பொறிக்கொள்ளர வம்புனைந் தீர்பலவும்
பொழிலார்திருப் புத்தூர்ப் புனிதனீரே. 8

பாம்புகள் பலவற்றை
1. நீலகண்டத்தில் கண்டசரமாகவும்
2. தோள்களில் வாகுவலயமாகவும்
3. முன்கைகளில் கங்கணமாகவும்
4. தலையில் கச்சரவாகவும் அணிந்து அவரது நித்தத்தன்மையை உயிர்களின் பொருட்டு விளக்கியருளுகிறார். அணிந்துள்ளது ஒற்றைப் பாம்பல்ல.
பாரிடம் – பூதம்

நஞ்சைக் கொண்ட நீல கண்டத்தில் கண்ட சரமாகவும், திண்ணிய தோள்களில் வாகுவலயமாகவும், முன் கைகளிற் கங்கணமாகவும், தலையில் தலைச் சூட்டாகவும், அறையில் கச்சாகவும் புள்ளிகளைக் கொண்ட பாம்புகள் பலவற்றையும் அணிந்தவரே! சோலைகள் நிறைந்த திருப்புத்தூரில் எழுந்தருளியிருக்கும் புனிதரே! நீர், பறை போலும் பெரிய கண்களையுடைய பேய்க் கூட்டம் பாடுதலைச் செய்யவும், குறுகிய வடிவத்தையுடைய பூதங்கள் பறைகளை முழக்கவும், பிறையைக் கொண்ட சடை கீழே தாழ்ந்து அலைய, காலங்கடந்த காடே அரங்கமாக நின்று, அடிபெயர்த்து நடனமாடுதல் என்?

91. மழைக்கண்மட வாளையொர் பாகம்வைத்தீர்
வளர்புன்சடைக் கங்கையை பணிகலனா
முழைக்கொள்ளர வோடென் பணிகலனா
முழுநீறுமெய் பூசுதல் என்னைகொலோ
கழைக்கொள்கரும் புங்கத லிக்கனியுங்
கமுகின்பழுக் காயுங் கவர்ந்துகொண்டிட்
டழைக்கும்புனல் சேர்அரி சிற்றென்கரை
அழகார்திருப் புத்தூர் அழகனீரே. 9

கழை – கரும்பின் வகை.

'கழை' என்னும் தன்மையைக் கொண்ட கரும்புகளையும், வாழைப் பழங்களையும், கமுக மரத்தின் முற்றிய காய்களையும் வாரிக் கொண்டு வந்து கூப்பிடுகின்ற நீர் பொருந்திய அரிசிலாற்றின் தென்கரையில் உள்ள அழகு நிறைந்த திருப்புத்தூரில் எழுந்தருளி யிருக்கின்ற புனிதரே! நீர், மேகம்போலும் பெரிய கண்களையுடைய உமாதேவியை ஒரு பங்கில் வைத்தீர்; அதன் மேலும், வளர்கின்ற புல்லிய சடையின்மேல், 'கங்கை' என்பவளை விரும்பி வைத்தீர். அங்ஙனமாக, செல்வ வாழ்க்கை வாழ நினையாது, புற்றினை இடமாகக் கொள்ளும் பாம்பும், எலும்புமே அணிகலங்களாக, மேனி முழுவதும் சாம்பலைப் பூசி வாழ்தல் என்னோ?

| | | |
|---|---|---|
| 92. | கடிக்கும்மர வால்மலை யாலமரர்<br>கடலைக்கடை யவ்வெழு காளகூடம்<br>ஒடிக்கும்முல கங்களை யென்றதனை<br>உமக்கேஅமு தாகவுண்டீர் உமிழீர்<br>இடிக்கும்மழை வீழ்த்திழுத் திட்டருவி<br>யிருபாலுமோ டிய்யிரைக் குந்திரைக்கை<br>அடிக்கும்புனல் சேரரி சிற்றென்கரை<br>அழகார்திருப் புத்தூர் அழகனீரே. 10 | இடிக்கின்ற மேகத்தைக் கீழே தள்ளி இழுத்துக் கொண்டு, முன்பு அருவியாய் ஓடிப் பின்பு, ஒலிக்கின்ற அலைகளாகிய கைகளால் இருபக்கத்தும் உள்ள கரைகளை மோதும் வெள்ளமாய்ப் பெருகி ஒலிக்கின்ற நீர் பொருந்திய அரிசிலாற்றின் தென்கரையிலுள்ள அழகு நிறைந்த திருப்புத்தூரில் எழுந்தருளி யிருக்கின்ற அழகரே! நீர், கடிக்கும் பாம்பாகிய கயிற்றைக் கொண்டு மலையாகிய மத்தினால் தேவர்கள் பாற்கடலைக் கடைந்தபோது உண்டாகிய பெருநஞ்சு எல்லாவுலகத்தையும் அழித்துவிடும் என்று இரங்கி, அதனையே உமக்கு உரிய பங்காகிய அமுதமாக ஏற்று உண்டீர்; பின்பு இதுகாறும் அதனை உமிழவும் இல்லை. |
| 93. | காரூர்மழை பெய்து பொழிஅருவிக்<br>கழையோடகில் உந்திட் டிருகரையும்<br>போரூர்புனல் சேர்அரி சிற்றென்கரைப்<br>பொழிலார்திருப் புத்தூர்ப் புனிதர்தம்மை<br>**ஆரூரன் அருந்தமிழ் ஐந்தினொடைந்**<br>**தழகால்உரைப் பார்களுங் கேட்பவரும்**<br>**சீரூர்தரு தேவர்க ணங்களொடும்**<br>**இணங்கிச்சிவ லோகம தெய்துவரே.11** | மேகங்கள் மிக்க மழையைப் பெய்ய, அதனாலே வீழ்ந்த அருவியிடத்துள்ள மூங்கிலையும், அகிற்கட்டையையும் தள்ளிக்கொண்டு, இரு கரைகளின்மீதும் போரினை மேற்கொள்ளும் நீர் பொருந்திய அரிசிலாற்றின் தென்கரையிலுள்ள, சோலைகள் நிறைந்த திருப்புத்தூர்ப் புனிதரை, நம்பியாரூரனது அரிய தமிழ்ப்பாடல்கள் பத்தினாலும், மொழிக்குற்றம், இசைக்குற்றம் இன்றித் துதிப்பவர்களும், அத்துதியைக் கேட்பவர்களும், சிறப்பு மிக்க தேவர் கூட்டத்துட் கூடி வாழ்ந்து, பின் சிவலோகத்தை அடைவார்கள். |

## 10. திருக்கச்சியனேகதங்காவதம்

பண் : இந்தளம் பதிக எண் : 10

| | |
|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் காமாட்சியம்மை உடனமர் அருள்மிகு அனேகதங்காவதேசுவரர். |
| **தல இருப்பிடம்** | தொண்டை நாட்டில் காஞ்சிபுரத்தில் ஏகம்பத்திற்கு தென்மேற்கே அமைந்து உள்ளது. |
| **தல மரம்** | வில்வம், மா |
| **தீர்த்தம்** | கம்பாநதி |
| **பாடியவர்** | நம்பியாரூரர் — **பதிகம்** 1 |

**94.** தேனெய் புரிந்துழல் செஞ்சடை எம்பெரு
மானதி டந்திகழ் ஐங்கணையக்
கோனை எரித்தெரி யாடி இடம்குல
வான திடங்குறை யாமறையா
மானை இடத்ததொர் கையன் இடம்மத
மாறு படப்பொழி யும்மலைபோல்
**ஆனை யுரித்த பிரான திடங்கலிக்**
கச்சி அனேகதங் காவதமே. 1

குலவான் – மேலானவன். ஐங்கணை அக்கோன் – மன்மதன். மறையாம் மான் – மறைஒலி செய்யும் மான். அனேகதம் – யானை. விநாயகர் பூசித்த தலம் என்பது பொருளாகும்.

தேனாகிய நெய்யை விரும்பி உழல்கின்ற சிவந்த சடையையுடைய எம்பெருமானும், அழகு விளங்கும் ஐங்கணையை உடைய அத்தலைவனாகிய மன்மதனை எரித்தவனும், தீயில் நின்று ஆடுபவனும், மேலானவனும், மிக்க புள்ளிகள் பொருந்திய மானை இடப்பக்கத் திலுள்ள ஒரு கையில் தாங்கினவனும், மும்மதங்களும் ஒன்றினொன்று முற்பட்டுப் பாய்கின்ற மலைபோலும் யானையை உரித்த பெரியோனும் ஆகிய இறைவன் விரும்பி உறையும் இடம், ஆரவாரத்தையுடைய கச்சிமாநகர்க்கண் உள்ள, 'திருவனேகதங்கா வதம்' என்னும் திருக்கோயிலே.

**95.** கூறு நடைக்குழி கட்பகு வாயன
பேயுகந் தாடநின் றோரியிட
வேறு பட**க்குட கத்தில்லை** யம்பல
வாணனின் றாடல் விரும்புமிடம்
ஏறு விடைக்கொடி எம்பெரு மான்இமை
யோர்பெரு மான்உமை யாள்கணவன்
ஆறு சடைக்குடை அப்பன் இடங்கலிக்
கச்சி அனேகதங் காவதமே. 2

குடகத்தில்லை – மேலைச்சிதம்பரம் என்னும் பேரூர். கூறுநடை – குறுகக்குறுக அடியிடும் நடை. ஓரி – நரி. அனேகதம் – யானை.

மேலைத்தில்லை அம்பலவாணன், குறுநடையையும், குழிந்த கண்களையும், பிளந்த வாயினையுமுடையனவாகிய பேய்கள் உடன் விரும்பியாடவும் நரிகள் நின்று ஊளையிடவும், சிறப்புண்டாக நின்று ஆடுதலை விரும்புவதும், உயர்ந்த இடபக் கொடியையுடைய எம்பெருமானும், தேவர்பெருமானும் உமாதேவிக்குக் கணவனும், சடையின்கண் கங்கையையுடைய தந்தையும் ஆகிய அவ்விறைவனுக்கு உரித்தாயதுமாகிய இடம், ஆரவாரத்தையுடைய கச்சிமா நகர்க்கண் உள்ள, 'திருவனேகதங்காவதம்' என்னும் திருக்கோயிலே.

96. கொடிக ளிடைக்குயில் கூவு மிடம்மயி
லாலும் மிடம்மழு வாளுடைய
கடிகொள் புனற்சடை கொண்ட நுதற்கறைக்
கண்டன் இடம்பிறைத் துண்டமுடிச்
செடிகொள் வினைப்பகை தீரும் இடம்திரு
வாகும் இடம்திரு மார்பகலத்
தடிக ளிடம்மழல் வண்ணன் இடம்கலிக்
கச்சி அனேகதங் காவதமே. 3

துன்பத்தைக் கொண்ட வினையாகிய பகை நீங்குவதும், நன்மை வளர்வதும், மழுப்படையை யுடைய, விளக்கத்தைக் கொண்ட நீரைச் சடையில் ஏற்ற, பிறைத்துண்டமாகிய கண்ணியையணிந்த நெற்றியை யுடைய நீலகண்டனும், அழகிய மார்பிடத்தனவாகிய பல அணிகலங்களையுடைய தலைவனும், நெருப்புப் போலும் நிறத்தையுடையவனும் ஆகிய இறைவனுக்கு உரியதும் ஆகிய இடம், கொடி போலும் மகளிர் பாடல்களுக்கு இடையே குயில்கள் கூவுவதும், அவர் ஆடல்களுக்கு இடையே மயில்கள் ஆடுவதும் ஆகிய ஆரவாரத்தை யுடைய கச்சிமாநகர்க்கண் உள்ள 'திருவனேகதங்காவதம்' என்னும் திருக்கோயிலே.

பதிக மகுடம் – "இடம் கலிக் கச்சி அனேகதங்காவதமே". சிவபெருமானுக்கு உவகையைத் தருமிடம் இதுவாகும். கச்சி – காஞ்சி மாநகர். வடநாட்டில் உள்ளது, அனேகதங்காவதம். இத்தலம் கச்சி அனேகதங்காவதம். இரண்டும் வெவ்வேறு பாடல் பெற்ற தலங்கள்.

97. கொங்கு நுழைத்தன வண்டறை கொன்றையுங்
கங்கையுந் திங்களுஞ் சூடுசடை
மங்குல் நுழைமலை மங்கையை நங்கையைப்
பங்கினிற் றங்க உவந்தருள்செய்
சங்கு குழைச்செவி கொண்டரு வித்திரள்
பாயவி யாத்தழல் போலுடைத்தம்
அங்கை மழுத்திகழ் கையன் இடங்கலிக்
கச்சி அனேகதங் காவதமே. 4

தேனால் நுழைவிக்கப்பட்டனவாகிய வண்டுகள் ஒலிக்கின்ற கொன்றை மாலையையும், கங்கையையும், பிறையையும் அணிந்த சடையினையுடைய, மேகங்கள் தவழும் மலையில் வளர்ந்த மங்கையும் சிறந்த தேவியு மாகிய உமையை ஒரு பாகத்தில் பொருந்தியிருக்குமாறு மகிழ்ந்து வைத்து உயிர்கட்கு அருள்புரிகின்ற, சங்கக் குழையை அணிந்த காதினின்றும் வெள்ளொளிக் கற்றை யாகிய அருவித்திரள் பாய, அவற்றாலும் அவியாத நெருப்புப்போலத் தோன்றுதலை யுடைய அங்கையின் மழுவானது இடையறாது ஒளி வீசுகின்ற தன்மையையுடைய இறைவனது இடம், ஆரவாரத்தையுடைய கச்சி மாநகர்க்கண் உள்ள, 'திருவனேகதங்காவதம்' என்னும் திருக்கோயிலே.

கொங்கு – மணம்.

**98.** பைத்த படத்தலை ஆடர வம்பயில்
கின்ற இடம்பயி லப்புகுவார்
சித்தம் ஒருநெறி வைத்த இடந்திகழ்
கின்ற இடந்திரு வானடிக்கே
வைத்த மனத்தவர் பத்தர் மனங்கொள
வைத்த இடம்மழு வாளுடைய
அத்தன் இடம்மழல் வண்ணன் இடங்கலிக்
கச்சி அனேகதங் காவதமே. 5

ஆடும் பாம்பாகிய ஆதிசேடனது பையின் தன்மையைப் பெற்ற படத்தினையுடைய தலையின்கண் நீங்காதிருக்கின்ற இடமாகிய நிலவுலகத்தில் வாழப்புகுவோர், தமதுள்ளத்தை ஒரு நெறிக்கண்ணே வைத்தபொழுது, அவர்க்கு உயர்ந்து விளங்குவதும், திருவாளனாகிய சிவபிரானது திருவடிக் கண்ணே பிறழாது வைத்த மனத்தையுடையவ ராகிய அடியார், தம் மனம், விரும்பிக் கொள்ளுமாறு அதனுள் இருத்தப்பட்டதும், மழுப்படையையுடைய தலைவனும், நெருப்புப் போலும் நிறத்தையுடையவனும் ஆகிய அப் பெருமானுக்கு உரித்தாயதும் ஆகிய இடம் ஆரவாரத்தையுடைய கச்சிமாநகர்க்கண் உள்ள, 'திருவனேகதங்காவதம்' என்னும் திருக்கோயிலே.

பயில.... வைத்த இடம் – பயிலப் புகுதல் – சிவன் பணி, சிவயோகம், சிவநெறி பயிலத் தொடங்குதல்.

---

**99.** தண்ட முடைத்தரு மன்தமர் என்தம
ரைச்செயும் வன்றுயர் தீர்க்குமிடம்
பிண்ட முடைப்பிற வித்தலை நின்று
நினைப்பவர் ஆக்கையை நீக்குமிடம்
கண்ட முடைக்கரு நஞ்சை நுகர்ந்த
பிரான திடங்கடல் ஏழுகடந்
தண்ட முடைப்பெரு மான திடங்கலிக்
கச்சி அனேகதங் காவதமே. 6

தண்டாயுதத்தையுடைய இயமனது ஏவலாளர், என் சுற்றத்தாராகிய சிவனடியாரை நலியக் கருதும் வலிய துன்பத்தைத் தீர்ப்பதும், உடம்பையுடைய இப்பிறவியின்கண் மனம் பொருந்தி நின்று நினைப்பவரது பிறவியை அறுப்பதும், தனது கண்டம் உடைத்தாயுள்ள கரிய நஞ்சினை, உண்ணும் பொருளாக உண்ட தலைவனும், ஏழு கடல்களின் உள்ளே உள்ள நிலமேயன்றி அண்டம் முழுவதையும் உடைய பெரியோனும் ஆகிய இறைவனுக்கு உரித்தாயதும் ஆகிய இடம், ஆரவாரத்தை யுடைய கச்சிமாநகர்க்கண் உள்ள, 'திருவனேகதங்காவதம்' என்னும் திருக்கோயிலே.

தண்டம் – தண்டு ஆயுதம்.
தமர் – எமன் தூதர்.

| | |
|---|---|
| 100. கட்டு மயக்க மறுத்தவர் கைதொழு<br>தேத்தும் இடங்கதி ரோனொளியால்<br>விட்ட இடம்விடை யூர்தி இடங்குயிற்<br>பேடைதன் சேவலொ டாடுமிடம்<br>மட்டு மயங்கி அவிழ்ந்த மலர்ஒரு<br>மாதவி யோடு மணம்புணரும்<br>அட்ட புயங்கப் பிரான திடங்கலிக்<br>கச்சி அனேகதங் காவதமே. 7<br><br>கட்டுமயக்கம் – மலத்தினால் வரும் அறியாமை. "பொருளல்லவற்றைப் பொருளென்றுணரும் மருள்" குறள். | பாசப் பிணிப்பால் உண்டாகும் திரிபுணர்வை நீக்கியவர், கைகுவித்துக் கும்பிட்டுத் துதிப்பதும், இடப வாகனத்தையுடையவனும், அட்டமா நாகங்களையும், அணிந்தவனுமாகிய இறைவனுக்கு உரித்தாயதுமான இடம், பகலவனது ஒளியினின்று நீங்கியதும், குயிற்பேடை தனது சேவலோடு கூடி விளையாடுவதும் ஆகிய சோலைக்கண் ஒப்பற்ற மாதவியில் தேன் ததும்பி மலர்ந்த மலர் மணத்தைப் பொருந்துகின்ற, ஆரவாரத்தை யுடைய கச்சிமாநகர்க்கண்ணுள்ள, 'திருவனேகதங்காவதம்' என்னும் திருக்கோயிலே. |
| 101. புல்லி யிடந்தொழு துய்துமெ னாதவர்<br>தம்புர மூன்றும் பொடிப்படுத்த<br>வில்லி இடம்விர வாதுயிர் உண்ணும்வெங்<br>காலனைக் கால்கொடு வீந்தவியக்<br>கொல்லி இடங்குளிர் மாதவி மவ்வல்<br>குராவகு ளங்குருக் கத்திபுன்னை<br>அல்லி யிடைப்பெடை வண்டுறங் குங்கலிக்<br>கச்சி அனேகதங் காவதமே. 8<br><br>புல்லி – பெயர். வில்லி – வில்லை ஏந்தியவர். கொல்லி – கொன்றவர். | 'முன்பே அடையப்பட்டவனைக் கடைபோகத் தொழுது உய்வோம்' என்று நினையாது, புத்தனது பொய்யுரையால் மயங்கிய அசுரரது அரண்கள் மூன்றினையும் சாம்பலாக்கிய வில்லை யுடையவனும், யாவரிடத்தும் கண்ணோடாது உயிரை வௌவும் கொடிய காலனை அழிந்தொழியும்படி காலால் கொன்றவனும் ஆகிய இறைவனுக்கு உரித்தாய இடம், குளிர்ந்த வனமல்லிகை, முல்லை, குரா, மகிழ், குருக்கத்தி, புன்னை இவற்றின் மலர்களது அகவிதழில் பெண் வண்டுகள் உறங்குகின்ற, ஆரவாரத்தை யுடைய கச்சிமாநகரில் உள்ள, 'திருவனேகதங்காவதம்' என்னும் திருக் கோயிலே. |
| 102. சங்கை யவர்புணர் தற்கரி யான்றள<br>வேனகை யாள்தவி ராமிகுசீர்<br>மங்கை யவள்மகி ழச்சுடு காட்டிடை<br>நட்டநின் றாடிய சங்கரனெம்<br>மங்கைய வன்னன லேந்து பவன்கனல்<br>சேரொளி யன்னதொர் பேரகலத்<br>தங்கை யவன்னுறை கின்ற இடங்கலிக்<br>கச்சி அனேகதங் காவதமே. 9<br><br>சங்கை – ஐயம். சங்கையர் – சிவனே பதி என்ற உறுதியறிவில்லாதவர். தளவு ஏல் நகை – முல்லையைப் போன்ற பாதங்களை உடைய. | ஐயப்பாடுடையவர் அடைதற்கரியவனும், முல்லையரும்புபோலும் நகையினையுடை யாளாகிய, என்றும் பிரிவில்லாத, மிக்க புகழையுடைய உமாதேவி மகிழும்படி சுடுகாட்டில் நின்று நடனமாடுகின்ற சங்கரனும், எம் அங்கைப் பொருளாய் உள்ளவனும், நெருப்பை ஏந்துபவனும், நெருப்பிற் பொருந்தியுள்ள ஒளிபோலும் ஒளியையுடைய பெரிய மழுப்படையை ஏந்திய அங்கையை யுடையவனும் ஆகிய இறைவன் நீங்காது உறைகின்ற இடம், ஆரவாரத்தையுடைய கச்சி மாநகர்க்கண் உள்ள 'திருவனேகதங்காவதம்' என்னும் திருக்கோயிலே. |

103. வீடு பெறப்பல ஊழிகள் நின்று
நினைக்கும் இடம்வினை தீருமிடம்
பீடு பெறப்பெரி யோர திடங்கொண்டு
மேவினர் தங்களைக் காக்கும்இடம்
பாடு மிடத்தடி யான்புகழ் ஊரன்
உரைத்த**இம் மாலைகள் பத்தும்வல்லார்**
**கூடும் இடஞ்சிவ லோகன் இடங்கலிக்**
**கச்சி அனேகதங் காவதமே.** 10

முத்தி பெறுதற்பொருட்டுப் பல்லூழிக் காலமாயினும் இவ்வுடம்போடே நின்று இறைவனை நினைத்தற்குரிய இடமும், அதனால் வினை நீங்கப்பெறும் இடமும், பெருமையை அடைதற்குரிய வழியைப் பெரியோரது அடிக்கீழ் நின்று பெற்று, அவ்வழியாலே விரும்பி வந்தவர்களைப் பிறவிக் கடலில் வீழாதவாறு காக்கும் இடமும் ஆகிய, ஆரவாரத்தையுடைய கச்சிமாநகர்க்கண் உள்ள, 'திருவனேகதங்காவதம்' என்னும் திருக் கோயிலைப் பாடப் புகும்பொழுது, சிவபிரானுக்கு அடியவனாகிய, புகழையுடைய நம்பியாரூரன் பாடிய இச்சொல்மாலைகள் பத்தினையும் நன்கு பாடவல்லார் அடையும் இடம், சிவபிரானது இடமேயாகும்.

## 11. திருப்பூவணம்

(முடிவேந்தர்கள் மூவரும் உடன்வர சேரமான் பெருமாள் நாயனாரோடு சென்று பாடிய தலம்)

**பண் : இந்தளம்** **பதிக எண் : 11**

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் மின்னம்மை உடனமர் அருள்மிகு பூவணநாதர். | | |
| **தல இருப்பிடம்** | பாண்டிநாட்டில் மதுரை – மானாமதுரை சாலையில் மதுரையிலிருந்து 18 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | பலா, வடஆலம். | | |
| **தீர்த்தம்** | வைகை (வைகையாற்றின் தென்கரையில் தலம் அமைந்துள்ளது) | | |
| **பாடியவர்** | மூவர் | **பதிகங்கள்** | 4 |

104. திருவுடை யார்திரு மாலய னாலும்
உருவுடை யார்உமை யாளையொர் பாகம்
பரிவுடை யார்அடை வார்வினை தீர்க்கும்
புரிவுடை யார்உறை பூவணம் ஈதோ! 1

புரிவு – விருப்பம். பூவணம் அந்நாளில் உலகியலில் பெருநகரமாய் விளங்கிற்று. மூவேந்தர்களும் தத்தம் உரிமையுடன் சென்று வணங்கும் பொதுத்தலமெனவும் கருத இடமுண்டு.

திருமால், பிரமன் ஆகிய காரணக் கடவுளிலும் மேலான செல்வத்தையுடையவரும், தமது திருமேனியில் உமையம்மையை ஒரு பாகமாக உடையவரும், அன்புடையவராய்த் தம்மை அடைவாரது வினைகளைத் தீர்க்கும் விருப்பம் உடையவரும் ஆகிய இறைவர் எழுந்தருளியுள்ள, 'திருப்பூவணம்' என்னும் தலம் இதுதானோ?

105. எண்ணி யிருந்து கிடந்தும் நடந்தும்
அண்ண லெனாநினை வார்வினை தீர்ப்பார்
பண்ணிசை யார்மொழி யார்பலர் பாடப்
புண்ணிய னார்உறை பூவணம் ஈதோ! 2

இருப்பினும், கிடப்பினும், நடப்பினும், தம்மையே முதல்வராக ஒர்ந்து நினைவாரது வினைகளை நீக்குபவரும், அறவடிவினருமாகிய இறைவர், பண்ணாகிய இசைபோலப் பொருந்திய மொழியினையுடைய மகளிர் பலர் இனிய பாடல்களைப் பாட எழுந்தருளியிருக்கின்ற, 'திருப்பூவணம்' என்னும் தலம் இதுதானோ?

எண்ணி – என்பதனை இருந்தும், கிடந்தும், நடந்தும் என்ற மூன்றுடனும் கூட்டிப் படித்துப் பொருள் காண வேண்டும். எண்ணுதல் – அழுந்தி அறிதல்.

106. தெள்ளிய பேய்பல பூத மவற்றொடு
நள்ளிருள் நட்டம தாடல் நவின்றோர்
புள்ளுவ ராகும் அவர்க்கவர் தாமும்
புள்ளுவ னார்உறை பூவணம் ஈதோ! 3

தெளிவையுடைய பல பேய்பூதங்களுடன், செறிந்த இருளில் நடனத்தைப் புரிகின்றவரும், வஞ்சகராகின்றவருக்குத் தாமும் வஞ்சகராவோரும் ஆகிய இறைவர் எழுந்தருளியுள்ள, 'திருப்பூவணம்' என்னும் திருத்தலம் இதுதானோ?

சிவபெருமானது கணங்களாகிய பேய் பூதங்கள் "சிவபெருமானே முதல்வன்" என்னும் தெளிவுணர்வுடைமையின் "தெள்ளிய பேய் பூதம்" என்றருளினார். புள்ளுவர் – பொய்யர்.

107. நிலனுடை மான்மறி கையது தெய்வக்
கனலுடை மாமழு ஏந்தியோர் கையில்
அனலுடை யார்அழ கார்தரு சென்னிப்
புனலுடை யார்உறை பூவணம் ஈதோ! 4

நிலத்தை வாழும் இடமாக உடைய மான்கன்று கையிடத்ததாக, தெய்வத் தீயாம் தன்மையையுடைய பெரிய மழுவை ஒரு கையிற் பிடித்து, அதனோடே மற்றொரு கையில் நெருப்பையுடையவரும் ஆகிய இறைவர் எழுந்தருளியுள்ள 'திருப்பூவணம்' என்னும் திருத்தலம் இதுதானோ?

"உறை பூவணம் ஈதோ" பதிக மகுடம்.

| | | |
|---|---|---|
| **108.** | நடையுடை நல்லெரு தேறுவர் நல்லார்<br>கடைகடை தோறிடு மின்பலி என்பார்<br>துடியிடை நன்மட வாளொடு மார்பில்<br>பொடிஅணி வார்உறை பூவணம் ஈதோ! 5 | பெருமித நடையையுடைய நல்ல ஆனேற்றின் மீது ஏறுபவரும், மகளிரது வாயில்தோறும் சென்று, 'பிச்சை இடுமின்' என்று இரப்பவரும், உடுக்கை போலும் இடையினையுடைய தேவியின் அழகிய மேனியின் பொலிவோடு, சாம்பலைப் பூசிக் கொள்வோரும் ஆகிய இறைவர் எழுந்தருளியுள்ள 'திருப்பூவணம்' என்னும் திருத்தலம் இதுதானோ? |
| **109.** | மின்னனை யாள்திரு மேனிவி ளங்கவொர்<br>தன்னமர் பாகம தாகிய சங்கரன்<br>முன்னினை யார்புரம் மூன்றெரி யூட்டிய<br>பொன்னனை யான்உறை பூவணம் ஈதோ! 6<br><br>மின்னனையாள் – தலத்து அம்பிகை. சங்கரன் – இன்பத்தைச் செய்பவன். பொன்னனையாளின் பொருட்டு சித்தராகி வந்து பொன்மேனியாக அமைந்த தல வரலாற்றைப் போற்றி மகிழ்கிறார். | மின்னல் போலும் மாதராள் திருமேனி தனது திருமேனியின் ஒரு பாகத்தில் விளங்க விரும்பி வைத்த 'சங்கரன்' என்னும் பெயரை யுடையவனும், தன்னை நினையாதவரது அரண்களை முன்பு தீக்கு இரையாக்கிய, பொன் போலும் நிறத்தையுடையவனும் ஆகிய இறைவன் எழுந்தருளியுள்ள 'திருப்பூவணம்' என்னும் திருத்தலம் இதுதானோ? |
| **110.** | மிக்கிறை யேயவன் துன்மதி யாலிட<br>நக்கிறை யேவிர லாலிற வூன்றி<br>நெக்கிறை யேநினை வார்தனி நெஞ்சம்<br>புக்குறை வான்உறை பூவணம் ஈதோ! 7<br><br>x x x x x x x x x 8, 9<br><br>இறைஏயவன் – அரக்கர்களுக்கு இறைமை பொருந்திய இராவணன். இறையே – சிறிதே.<br>நெக்கு – நெஞ்சம் உருகி.<br>இறையே நெக்கு – சிறிதளவேனும் நெகிழ்ந்து. | தனது தலைமையை எல்லை கடந்து மதித்தவனாகிய இராவணனது தீய எண்ணங் காரணமாக வெகுளி நகை செய்து, தனது இடமாகிய கயிலையை அவன் நெரியுமாறு, விரலால் சிறிதே ஊன்றி, தன்னையே உருகி நினைவாரது ஒப்பற்ற நெஞ்சிலே குடிபுகுந்து, ஒருஞான்றும் நீங்காது உறையும் இறைவன் எழுந்தருளியுள்ள, 'திருப்பூவணம்' என்னும் திருத்தலம் இதுதானோ? |
| **111.** | சீரின் மிகப்பொலி யுந்திருப் பூவணம்<br>ஆர விருப்பிட மாவுறை வான்றனை<br>ஊரன் உரைத்தசொன் மாலைகள் பத்திவை<br>பாரில் உரைப்பவர் பாவம் அறுப்பரே. 10<br><br>ஆர – பொருந்த – நிறைய. | அழகினால் மிகப் பொலிகின்ற, 'திருப்பூவணம்' என்னும் திருத்தலத்தில் விருப்பம்மிக இடமாகக் கொண்டு எழுந்தருளியிருக்கும் இறைவனை, நம்பியாரூரன் பாடிய இச்சொல், மாலைகள் பத்தினையும் இந்நிலவுலகில் பாடுபவர், தம் பாவத்தை அறுப்பவராவர். |

## 12. திருநாட்டுத்தொகை

நாட்டின் தலைமையைப் பெற்ற இறைவன் எழுந்தருளியுள்ள நிலங்களைத் தொகுத்து அந்நாட்டினைக் குறிக்குமுகத்தால் விதந்தோதி அருளினவை.

**பண் : இந்தளம்** **பதிக எண் : 12**

112. வீழக் காலனைக் கால்கொடு
பாய்ந்த விலங்கலான்
கூழை ஏறுகந் தான்இடங்
கொண்டது கோவலூர்
தாழை யூர்தகட் டூர்தக்க
ளூர்தரு மபுரம்
வாழை காய்க்கும் வளர்மரு
கன்னாட்டு மருகலே. 1

கூற்றுவனை, அவன் உயிரற்று விழுமாறு, காலால் உதைத்த கயிலாய நாதனும், எருதினை ஏறுதலை விரும்பியவனு மாகிய இறைவன் தனக்கு இடமாகக் கொண்ட ஊர், 'திருக்கோவலூர், தாழையூர், தகட்டூர், தக்களூர், தருமபுரம், வாழைகள் காய்க்கின்ற, செல்வம் வளர்கின்ற மருகல் நாட்டில் உள்ள மருகல்' என்பவை.

113. அண்டத் தண்டத்தின் அப்புறத்
தாடும் அமுதன்ஊர்
தண்டந் தோட்டந்தண் டங்குறை
தண்டலை யாலங்காடு
கண்டல் முண்டல்கள் சூழ்கழிப்
பாலை கடற்கரை
கொண்டல் நாட்டுக்கொண் டல்குறுக்
கைநாட்டுக் குறுக்கையே. 2

இவ்வண்டத்திற்கு அப்பால் உள்ள அண்டங் களுக்கும் அப்பால் நின்று நடனம் ஆடுகின்ற அமுதமாய் உள்ள இறைவனது தலங்கள், 'தண்டந்தோட்டம், தண்டங்குறை, தண்டலை, ஆலங்காடு, கடல் முள்ளியும் தாழையும் சூழ்ந்த கழிப்பாலை, கடற்கரை, கொண்டல் நாட்டிலுள்ள கொண்டல், குறுக்கை நாட்டிலுள்ள குறுக்கை' என்பவை.

114. மூல னூர்முத லாயமுக்
கண்ணன் முதல்வன்ஊர்
நால னூர்நரை ஏறுகந்
தேறிய நம்பன்ஊர்
கோல நீற்றன்குற் றாலங்
குரங்கணின் முட்டமும்
வேல னூர்வெற்றி யூர்வெண்ணிக்
கூற்றத்து வெண்ணியே. 3

அழகிய திருநீற்றை அணிந்த, வெள்விடையை விரும்பியேறின, முக்கண் முதல்வனது தலங்கள், 'மூலனூர், முதல்வனூர், நாலனூர், குற்றாலம், குரங்கணின்முட்டம், வேலனூர், வெற்றியூர், வெண்ணிக் கூற்றத்திலுள்ள வெண்ணி' என்பவை. ஊர் எனப்பட்டவை ஐந்தும் வைப்புத் தலங்கள்.

வெண்ணிக்கூற்றத்தின் தலைநகர் வெண்ணி.

| | | |
|---|---|---|
| **115.** தேங்கூ ருந்திருச் சிற்றம்<br>பலமுஞ் சிராப்பள்ளி<br>பாங்கூ ரெங்கள் பிரானுறை<br>யுங்கடம் பந்துறை<br>பூங்கூ ரும்பர மன்பரஞ்<br>சோதி பயிலும்ஊர்<br>நாங்கூர் நாட்டுநாங் கூர்நறை<br>யூர்நாட்டு நறையூரே. 4 | எமக்குத் துணையாய் வரும் தலைவனும், எப்பொருட்கும் மேலானவனும், எல்லா ஒளிகட்கும் மேலான ஒளியாய் உள்ளவனும் ஆகிய இறைவன் நீங்காது வாழும் அழகு மிகுந்த ஊர்கள், 'தேங்கூர், சிற்றம்பலம், சிராப்பள்ளி, அழகு மிக்க கடம்பந்துறை, நாங்கூர் நாட்டிலுள்ள நாங்கூர், நறையூர் நாட்டிலுள்ள நறையூர்' என்பவை. தேங்கூரும், நாங்கூரும் வைப்புத் தலங்கள். |
| **116.** குழலை வென்ற மொழிமட<br>வாளைஓர் கூறனாம்<br>மழலை யேற்று மணாளன்<br>இடம்தட மால்வரைக்<br>கிழவன் கீழை வழிபழை<br>யாறு கிழையமும்<br>மிழலை நாட்டு மிழலைவெண்<br>ணிந்நாட்டு மிழலையே. 5 | குழலிசையை வென்ற மொழியினையுடைய உமாதேவியை ஒரு பங்கில் உடையவனாகிய, இளமையான இடபத்தையுடைய அழகனும், பெரிய கயிலாய மலைக்கு உரியவனும் ஆகிய இறைவனது தலங்கள், 'கீழைவழி, பழையாறு, கிழையம், மிழலை நாட்டிலுள்ள மிழலை', வெண்ணி நாட்டிலுள்ள மிழலை என்பவை. |
| **117.** தென்னூர் கைம்மைத் திருச்சுழி<br>யற்றிருக் கானப்பேர்<br>பன்னூர் புக்குறை யும்பர<br>மற்கிடம் பாய்நலம்<br>என்னூர் எங்கள்பி ரான்உறை<br>யுந்திருத் தேவனூர்<br>பொன்னூர் நாட்டுப்பொன் னூர்புரி<br>சைநாட்டுப் புரிசையே. 6<br><br>தென்னூர், தேவனூர், பொன்னூர், புரிசை.<br>இவை வைப்புத் தலங்கள். | சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற தலங்களிலே எழுந்தருளியிருக்கும் சிவபெருமானுக்கு இடமாய், பரவிய புகழையுடையன எவ்வூர்கள் எனின்; அவை, எங்கள் பெருமான் எழுந்தருளியுள்ள, 'தென்னூர், ஒழுக்கம் நிறைந்த சுழியல், கானப்பேர், தேவனூர், பொன்னூர் நாட்டிலுள்ள பொன்னூர், புரிசை நாட்டிலுள்ள புரிசை' என்பவை. |
| **118.** ஈழ நாட்டுமா தோட்டந்தென்<br>னாட்டிரா மேச்சுரம்<br>சோழ நாட்டுத் துருத்திநெய்த்<br>தானந் திருமலை<br>ஆழி யூரன நாட்டுக்கெல்<br>லாம்அணி யாகிய<br>கீழை யில்லர னார்க்கிடங்<br>கிள்ளி குடியதே. 7 | சிவபெருமானாருக்கு உரிய தலங்கள், ஈழநாட்டில் உள்ள மாதோட்டம், தென்னாட்டில் உள்ள இராமேச்சுரம், சோழநாட்டிலுள்ள துருத்தி, நெய்த்தானம், திருமலை, கடல் சூழ்ந்த நிலவுலகிற் கெல்லாம் அணியாய் விளங்கும் கீழையில், கிள்ளிகுடி என்பவை. மாதோட்ட நகரில் அமைந்திருப்பது திருக்கேதீசுவரர் சிவாலயம் ஆகும். |

| | | | |
|---|---|---|---|
| 119. | நாளும் நன்னிலந் தென்பனை<br>யூர்வட கஞ்சனூர்<br>நீள நீள்சடை யான்நெல்லிக்<br>காவு நெடுங்களம்<br>காள கண்டன் உறையுங்<br>கடைமுடி கண்டியூர்<br>வேளா நாட்டுவே ளூர்விளத்<br>தூர்நாட்டு விளத்தூரே. | 8 | 'நன்னிலம், பனையூர், கஞ்சனூர், நெல்லிக்கா, நெடுங்களம், கடைமுடி, கண்டியூர், வேளா நாட்டில் உள்ள வேளூர், விளத்தூர் நாட்டிலுள்ள விளத்தூர்' என்பவைகளில், மிக நீண்ட சடையையுடையவனும், நஞ்சணிந்த கண்டத்தையுடையவனுமாகிய இறைவன் எந்நாளும் எழுந்தருளியிருப்பன். வேளூரும், விளத்தூரும் வைப்புத் தலங்கள். |
| 120. | தழலு மேனியன் தையலொர்<br>பாகம் அமர்ந்தவன்<br>தொழலுந் தொல்வினை தீர்க்கின்ற<br>சோதிசோற் றுத்துறை<br>கழலுங் கோவை யுடையவன்<br>காதலிக் கும்மிடம்<br>பழனம் பாம்பணி பாம்புரந்<br>தஞ்சைதஞ் சாக்கையே. | 9 | தழல் போல ஒளிவிடும் திருமேனியை உடையவனும், மங்கையை ஒரு பங்கில் விரும்பி வைத்துள்ளவனும், தன்னைத் தொழுதவுடன் தொழுதவரது பழவினையை அறுக்கின்ற ஒளியாய் உள்ளவனும், கழல் அணிந்த மணிவடத்தை உடையவனும் ஆகிய இறைவன் விரும்புகின்ற தலங்கள், 'சோற்றுத்துறை, பழனம், பாம்பணி, பாம்புரம், தஞ்சை, தஞ்சாக்கை' என்பவை. |
| 121. | மைகொள் கண்டன்எண் டோளன்முக்<br>கண்ணன் வலஞ்சுழி<br>பைகொள் வாளர வாட்டித்<br>திரியும் பரமனூர்<br>செய்யில் வாளைகள் பாய்ந்துக<br>ளுந்திருப் புன்கூர்நன்<br>றையன் மேய பொழில்அணி<br>ஆவடு துறையதே. | 10 | கருமை நிறத்தைக் கொண்ட கண்டத்தையும், எட்டுத் தோள்களையும், மூன்று கண்களையும் உடையவனும் படத்தைக்கொண்ட கொடிய பாம்பை ஆட்டித் திரியும் மேலவனுமாகிய இறைவனுடைய தலங்கள், 'வலஞ்சுழி, வயல்களில் வாளை மீன்கள் மேலெழுந்து பாய்ந்து பிறழ்கின்ற திருப்புன்கூர், அவன் மிக விரும்பிய, சோலைகளை உடைய அழகிய ஆவடுதுறை' என்பவை. |
| 122. | பேணி நாடத னிற்றிரி<br>யும்பெரு மான்றனை<br>ஆணை யாஅடி யார்கள்<br>தொழப்படும் ஆதியை<br>நாணிஊரன் வனப்பகை யப்பன்வன்<br>றொண்டன்சொல்<br>பாணி யால்இவை ஏத்துவார்<br>சேர்பர லோகமே. | 11 | நாடுகளில் எல்லாம் விரும்பித் திரியும் பெருமானும், அடியார்கள் தமக்குத் தலைவனாக அறிந்து தொழப்படுகின்ற முதல்வனும் ஆகிய இறைவனை, நாணுடையவளாகிய வனப்பகை என்பவளுக்குத் தந்தையும், இறைவன்முன் வன்மை பேசிப் பின் அவனுக்குத் தொண்டன் ஆகியவனும் ஆகிய நம்பியாரூரன் பாடிய இப்பாடல்களைத் தாளத்தொடு பாடித் துதிப்பவர் அடையும் இடம் சிவலோகமேயாம். |

## 13. திருத்துறையூர்

**பண் : தக்கராகம்** **பதிக எண் : 13**

இது பாலை யாழ் என்ற பெரும்பண்ணின் முதல் திறமாகிய அராகத்தில் அகநிலைப் பண்ணாக 17 என்ற எண் பெறுகிறது. இது பெருமிதம், மருட்கை, வெகுளி என்னும் சுவைகளையுடையது. இப்பண்ணைச் சம்பந்தரும், சுந்தரரும் பாடியிருக்கிறார்கள். சம்பந்தர் 1.23–46, சுந்தரர் 12–16, ஆக 28 பதிகங்கள். இதில் 7 கட்டளைகள் உள்ளன. சம்பந்தர் திருத்தாளம் பெற்ற திருக்கோலக்காப் பதிகம், மடையில் வாளை பாய மாதரார், அந்தமும் ஆதியும் ஆகிய அண்ணல் என்ற திருவேட்களப் பதிகம், முயலகன் நோய் நீங்கிய துணிவளர் திங்கள் துளங்கி விளங்க என்ற பதிகம், துஞ்ச வருவாரும் தொழுவிப்பாரும் என்ற திருஆலங்காட்டுப் பதிகம் முதலாயின இப்பண்ணில் அமைந்தன. சுந்தரர் இப்பண்ணில் பாடிய நான்கு பதிகங்களும் சிறப்புடையன. துறையூரில் தவநெறி வேண்டிக் கொள்வேன் என்பது, இவரலா தில்லையோ பிரானார் என்ற திருப்பாச்சிலாச்சிராமப் பதிகம், நாட்டியத்தான் குடி நம்பி, இயற்கை வருணனை நிரம்பிய குரும்பைமுலை மலர்க்குழலி என்ற திருக்கானாட்டு முள்ளூர்ப்பதிகம். இந்த இராகம் காம்போதிக்கு நேரானது என்று கொள்வார்கள். இது இரவுப் பண் என்று சொல்லப்பெறும். பொழுது சாய்ந்தவுடன் பாடத்தக்கது.

சிவஞானசித்தியாரின் ஆசிரியர் அருணந்தி சிவாசாரியாரின் அவதாரத்தலம். தற்காலத்தில் மக்கள் திருத்தளூர் என்று வழங்குகின்றனர். பெண்ணையாற்றின் வடகரையில் உள்ளது.

| **மூர்த்தி** | அருள்தரும் பூங்கோதைநாயகி உடனமர் அருள்மிகு துறையூர் நாதர் | | |
|---|---|---|---|
| **தல இருப்பிடம்** | நடுநாட்டில் விழுப்புரம் மாவட்டத்தில் கடலூரிலிருந்து விழுப்புரம் செல்லும் இருப்புப் பாதையில் தற்போது திருத்தளூர் என்று அமைந்து உள்ளது. | | |
| **தல மரம்** | கொன்றை | | |
| **தீர்த்தம்** | பெண்ணை நதி | | |
| **பாடியவர்** | நம்பியாரூரர் | **பதிகம்** | 1 |

123. மலையாரரு வித்திரள்
மாமணி யுந்திக்
குலையாரக்கொணர்ந் தெற்றிஓர்
பெண்ணை வடபால்
கலையார் அல்குற் கன்னியர்
ஆடுந் துறையூர்த்
**தலைவா**உனை வேண்டிக்கொள்
வேன்தவ நெறியே. 1

மலையிற் பொருந்திய அருவிக் கூட்டம், பெரிய மணிகளைத் தள்ளிக் கொணர்ந்து கரை நிறைய எறிவதாகிய ஒப்பற்ற பெண்ணை யாற்றின் வடகரைக்கண், நல்லஆடையை அணிந்த அல்குலையுடைய கன்னிப்பெண்கள் மூழ்கி விளையாடும் ஒருதுறையைச் சார்ந்த ஊராகிய திருத்துறையூரின்கண் எழுந்தருளி யுள்ள தலைவனே! உன்பால் அடியேன் தவநெறியையே வேண்டிக் கொள்வேன்; வேறொன்றையும் வேண்டேன்.

குலை – கரை. வேண்டிக் கொள்வேன் – வேண்டிப் பெற்றுப் பின்னர்க் கைக்கொள்வேன் தலைவா! அத்தா! எந்தாய்! விரும்பா! வேடா! சிட்டா! நாதா! ஐயா! அண்ணா! தேவா! என்று விளிக்கும் எல்லாப் பாடல்களையும் நோக்குவோமாக.

124. மத்தம்மத யானையின்
வெண்மருப் புந்தி
முத்தங்கொணர்ந் தெற்றிஓர்
பெண்ணை வடபால்
பந்தர்பயின் றேத்திப்
பரவுந் துறையூர்
**அத்தா**உனை வேண்டிக்கொள்
வேன்தவ நெறியே. 2

மயக்கங்கொண்ட மதயானைகளின் கொம்புகளைத் தள்ளிக்கொண்டுவந்து அவற்றில் உள்ள முத்துக்களை கரையில் எறிவதாகிய ஒப்பற்ற பெண்ணையாற்றின் வடகரைக்கண் உள்ள, அடியவர் பலகாலும் வந்து ஏத்தி வழிபடுகின்ற திருத்துறையூரில் எழுந்தருளியுள்ள தந்தையே! உன்பால் அடியேன் தவநெறியையே வேண்டிக் கொள்வேன்; வேறொன்றையும் வேண்டேன்.

125. கந்தங்கமழ் காரகில்
சந்தன முந்திச்
செந்தண்புனல் வந்திழி
பெண்ணை வடபால்
மந்திபல மாநடம்
ஆடுந் துறையூர்
**எந்தாய்**உனை வேண்டிக்கொள்
வேன்தவ நெறியே. 3

நறுமணம் கமழ்கின்ற கரிய அகில் மரங்களையும், சந்தன மரங்களையும் தள்ளிக் கொண்டு, சிவந்த குளிர்ந்த நீர் இடையறாது வந்து பாய்கின்ற பெண்ணையாற்றின் வடகரைக் கண்ணுள்ள, பெண் குரங்குகள் பல வகையான நடனங்களை ஆடுகின்ற திருத்துறையூரில் எழுந்தருளியுள்ள எம் தந்தையே! உன்பால் அடியேன் தவநெறியையே வேண்டிக் கொள்வேன்; வேறொன்றையும் வேண்டேன்.

தவநெறி – சிவபூசையில் செல்லும் வழி. புலன்வழிச் செல்லாது மனத்தை ஒன்றுவித்துச் சிவபெருமானை இடைவிடாது நினைத்தலும், பூசித்தலுமே தவநெறியாகும்.

126. அரும்பார்ந்தன மல்லிகை
சண்பகஞ் சாடிச்
சுரும்பாரக்கொணர்ந் தெற்றிஓர்
பெண்ணை வடபால்
கரும்பார்மொழிக் கன்னியர்
ஆடுந் துறையூர்
**விரும்பா**உனை வேண்டிக்கொள்
வேன்தவ நெறியே. 4

அரும்புகள் நிறைந்தனவாகிய 'மல்லிகை, சண்பகம்' என்னும் மரங்களை முரித்து, அவற்றில் உள்ள வண்டுகள் நிறையக் கிடக்கக் கொணர்ந்து கரையில் எறிவதாகிய ஒப்பற்ற பெண்ணையாற்றின் வடகரைக்கண், கரும்பு போலும் மொழியினையுடைய கன்னிப் பெண்கள் மூழ்கி விளையாடும் ஒருதுறையைச் சார்ந்த திருத்துறையூரில் எழுந்தருளியுள்ள என் விருப்பத்திற்குரியவனே! உன்பால் அடியேன் தவநெறியையே வேண்டிக்கொள்வேன்; வேறொன்றையும் வேண்டேன்.

எதையும் வேண்டாத சுந்தரர் தவநெறியை வேண்டலாமா? "வீடும் வேண்டா விறலினர் விளங்கினார்" என்ற அடியார் இலக்கணத்துடன் மாறுபடுமா? மாறுபடாது. பிராரத்தத்தை அனுபவித்து, ஆகாமியம் ஏறாமல் தடுத்துச் சிவநெறியில் புகுவிக்கும் தவநெறியை மட்டும் கேட்கலாம்.

127. பாடார்ந்தன மாவும்
பலாக்களுஞ் சாடி
நாடாரவந் தெற்றிஓர்
பெண்ணை வடபால்
மாடார்ந்தன மாளிகை
சூழுந் துறையூர்
**வேடா**உனை வேண்டிக்கொள்
வேன்தவ நெறியே. 5

பக்கங்களில் நிறைந்துள்ளனவாகிய மா மரங்களையும், பலா மரங்களையும் முரித்துக் கொணர்ந்து நாடெங்கும் நிறையும்படி எறிவதாகிய ஒப்பற்ற பெண்ணையாற்றின் வடகரைக் கண் உள்ள, செல்வம் நிறைந்தனவாகிய மாளிகைகள் சூழ்ந்த துறையூரில் எழுந்தருளியுள்ள, பல அருட்கோலங்களை யுடையவனே! உன்பால் அடியேன் தவநெறியையே வேண்டிக் கொள்வேன்; வேறொன்றையும் வேண்டேன்.

பாடு – பக்கங்களில். பொன் முதலியவை வேண்டுவதும் – அதைப் பயன்படுத்தி பிராரத்தத்தைக் கழித்து – ஆகாமியத்தை ஏறாமல் கண்காணித்து வீடுபேறடை வதற்கன்றி இம்மை போகங்களை நுகர்வதற்கன்று.

128. மட்டார்மலர்க் கொன்றையும்
வன்னியுஞ் சாடி
மொட்டாரக்கொணர்ந் தெற்றிஓர்
பெண்ணை வடபால்
கொட்டாட்டொடு பாட்டொலி
ஓவாத் துறையூர்ச்
**சிட்டா**உனை வேண்டிக்கொள்
வேன்தவ நெறியே. 6

மட்டு – தேன். கொட்டு – வாத்தியம்.
ஓவா – நீங்காத. சிட்டா – மேலானவனே.

தேன் நிறைந்த மலர்களை யுடையகொன்றை மரம், வன்னி மரம் இவைகளை முரித்து, அரும்புகளோடு நிரம்பக் கொணர்ந்து எறிவதாகிய ஒப்பற்ற பெண்ணையாற்றின் வடகரைக்கண், வாச்சிய முழக்கமும், ஆடலும், பாடலும் நீங்காது கொண்டு விளங்குகின்ற திருத்துறையூரில் எழுந்தருளியுள்ள மேலானவனே! உன்பால் அடியேன் தவநெறியையே வேண்டிக் கொள்வேன். வேறொன்றையும் வேண்டேன்.

129. மாதார்மயிற் பீலியும்
வெண்ணுரை யுந்தித்
தாதாரக்கொணர்ந் தெற்றிஓர்
பெண்ணை வடபால்
போதார்ந்தன பொய்கைகள்
சூழுந் துறையூர்
**நாதா**உனை வேண்டிக்கொள்
வேன்தவ நெறியே. 7

மாதார் – விருப்பத்தைத் தருகிற; அழகிய.

அழகு நிறைந்தனவான மயிற்பீலியையும், வெள்ளிய நுரைகளையும் தள்ளி, பல மலர்களை மகரந்தத்தோடு நிரம்பக் கொணர்ந்து எறிவதாகிய ஒப்பற்ற பெண்ணையாற்றின் வடகரைக்கண், மலர்கள் நிறைந்தனவாகிய பொய்கைகள் சூழப்பெற்று விளங்கும் திருத்துறையூரில் எழுந்தருளியுள்ள தலைவனே! உன்பால் அடியேன் தவநெறியையே வேண்டிக் கொள்வேன்; வேறொன்றையும் வேண்டேன்.

130. கொய்யார்மலர்க் கோங்கொடு
வேங்கையுஞ் சாடிச்
செய்யாரக்கொணர்ந் தெற்றிஓர்
பெண்ணை வடபால்
மையார்தடங் கண்ணியர்
ஆடுந் துறையூர்
**ஐயா**உனை வேண்டிக்கொள்
வேன்தவ நெறியே. 8

கொய்தல் பொருந்திய மலரையுடைய கோங்க மரம், வேங்கை மரம் இவைகளை முரித்துக் கொணர்ந்து, வயல் நிறைய எறிவதாகிய, ஒப்பற்ற பெண்ணையாற்றின் வடகரைக்கண், மை பொருந்திய கண்களையுடைய மகளிர் மூழ்கியாடும் ஒரு துறைக்கண் உள்ள திருத்துறையூரில் எழுந்தருளியுள்ள தலைவனே! உன்பால் அடியேன் தவநெறியையே வேண்டிக் கொள்வேன்; வேறொன்றையும் வேண்டேன்.

செய்யார – வயல்கள் நிறைய.
சிவனுறையும் திருத்துறையூர் சென்றணைந்து "தீவினையால் அவநெறியே செல்லாமே தடுத்தாண்டாய் அடியேற்குத் தவநெறி தந்தருள்" என்று தம்பிரான் முன்னின்று. பவநெறிக்கு விலக்காகுந் திருப்பதிகம் பாடினார் என்று சேக்கிழார் இந்த அருள் வரலாற்றைப் பதிவு செய்துள்ளார்.

131. விண்ணார்ந்தன மேகங்கள்
நின்று பொழிய
மண்ணாரக்கொணர்ந் தெற்றிழ்
பெண்ணை வடபால்
பண்ணார்மொழிப் பாவையர்
ஆடுந் துறையூர்
**அண்ணா**உனை வேண்டிக்கொள்
வேன்தவ நெறியே. 9

இப்பதிகம் பாடுவோர் பவநெறிக்கு விலக்கு ஆவார்கள் என்பது சேக்கிழார் வாக்கு.

வானத்தில் நிறைந்தனவாகிய மேகங்கள் நிலைத்து நின்று பொழிவதனால், மலைக்கண் உள்ள பொருள்களை வாரிக் கொணர்ந்து நிலம் நிறைய எறிவதாகிய, ஒப்பற்ற பெண்ணை யாற்றின் வடகரைக்கண், பண்போலும் மொழியினையுடைய மகளிர் மூழ்கியாடும் ஒரு துறைக்கண் உள்ள திருத்துறையில் எழுந்தருளியுள்ள தலைவனே! உன்பால் அடியேன் தவநெறியையே வேண்டிக் கொள்வேன்; வேறொன்றையும் வேண்டேன்.

132. மாவாய்ப்பிளந் தானும்
மலர்மிசை யானும்
ஆவாஅவர் தேடித்
திரிந்தல மந்தார்
பூவார்ந்தன பொய்கைகள்
சூழுந் துறையூர்த்
**தேவா**உனை வேண்டிக்கொள்
வேன்தவ நெறியே. 10

"உனை வேண்டிக் கொள்வேன் தவநெறியே" என்பது பதிக மகுடமாகும்.

பூக்கள் நிறைந்தனவாகிய பொய்கைகள் சூழ்ந்துள்ள திருத்துறையூரில் எழுந்தருளியுள்ள பெருமானே! 'கேசி' என்னும் அசுரன் கொண்ட வஞ்சனை உருவமாகிய குதிரையின் வாயைக் கிழித்த திருமாலும், மலர்மிசையோனாகிய பிரமனும் ஆகிய அவ்விருவரும் உன்னை வழிபட்டுத் தவநெறியை வேண்டிக் கொள்ள மாட்டாது, அந்தோ! உன் அளவினை ஆராய்ந்து தேடியலைந்தனர்; ஆயினும், உன்பால் அடியேன் தவநெறியையே வேண்டிக் கொள்வேன்; வேறொன்றையும் வேண்டேன்.

133. செய்யார்கம லம்மலர்
நாவலூர் மன்னன்
கையால்தொழு தேத்தப்
படுந்துறை யூர்மேல்
**பொய்யாத்தமிழ் ஊரன்**
**உரைத்தன வல்லார்**
**மெய்யேபெறு வார்கள்**
**தவநெறி தானே.** 11

வயல்கள் நிறையத் தாமரை மலரும் திருநாவலூருக்குத் தலைவனும், மெய்ம்மையையே கூறும் தமிழ்ப் பாடலைப் பாடுபவனும் ஆகிய நம்பியாரூரன், யாவராலும் கையால் கும்பிட்டுத் துதிக்கப்படும் திருத்துறையூரில் உள்ள இறைவன் மீது பாடியனவாகிய இப்பாடல்களை நன்கு பாடவல்லவர் தவநெறியைத் தப்பாது பெறுவர்.

பொய்யாத் தமிழ் – கருதியது கருதியவாறு கொடுத்தே விடும் தமிழ். சத்தாகிய சிவனைக் காட்டும் பதிகமும் சத்தாகிய உண்மையேயாம். ஆதலின் அவை எஞ்ஞான்றும் பொய்க்கின்றதில்லை. இப்பதிகம் நம்பிகளுக்குத் தவநெறி தந்ததுமன்றி இதனைக் கற்றுப் பயின்று ஒழுகும் உலகினர் யாவருக்கும் பாசநீக்கம் செய்து தவநெறி தருவதாகும்.

## 14. திருப்பாச்சிலாச்சிராமம்

இப்பதிகம் இறைவர் திருமுன்பு நின்றவாறே புறம்பு நின்ற அடியார்களை முகநோக்கி முறைப்பாடு உரைப்பார் போல் அருளிச் செய்யப்பட்டது. 'இவரலாது' என்ற அண்மைச் சுட்டினால் நம்பிகள் அண்மையில் நின்று சுட்டிக் கூறிய திறம் உணரப்படுகிறது. பதிகம் பாடிப் பொருள் பெற்றார்.

**பண் : தக்கராகம்** **பதிக எண் : 14**

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் பாலசுந்தரி உடனமர் அருள்மிகு மாற்றறிவரதர். | | |
| **தல இருப்பிடம்** | சோழநாட்டில் காவிரியின் வடகரையில் திருச்சி – முசிறி சாலையில் திருச்சியிலிருந்து 8 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | வன்னி | | |
| **தீர்த்தம்** | அன்னமாம் பொய்கை | | |
| **பாடியவர்** | திருஞானசம்பந்தர், நம்பியாரூரர் | **பதிகங்கள்** | 2 |

134. வைத்தனன் தனக்கே தலையும்என் நாவும்
நெஞ்சமும் வஞ்சமொன் றின்றி
உய்த்தனன் தனக்கே திருவடிக் கடிமை
உரைத்தக்கால் உவமனே யொக்கும்
பைத்தபாம் பார்த்தோர் கோவணத் தோடு
பாச்சிலாச் சிராமத்தெம் பரமர்
பித்தரே யொத்தோர் நச்சில ராகில்
இவரலா தில்லையோ பிரானார். 1

எனது தலையையும், நாவையும், நெஞ்சத்தையும், இத் திருப்பாச்சிலாச் சிராமத்தில் உள்ள எம்பெருமானார்க்கே உரியன ஆக்கினேன்; திருவடித் தொண்டினையும் அவருக்கே வஞ்சனை சிறிதும் இன்றிச் செலுத்தினேன்; இவற்றை யானே சொல்லின், பொய் போல்வதாகும். இந்நிலையில், இவர் படம் விரித்த பாம்பினைக் கட்டிக்கொண்டு ஒரு கோவணத்தோடு இருந்து, பித்தரோடே ஒத்து, சிறிதும் திருவுளம் இரங்கிலராயினும், எம்மைப் புரக்கும் தலைவர் இவரன்றி வேறொருவர் இல்லை; என் செய்கோ!

நச்சு – விருப்பம்; அருள். வைத்தனன் – படைத்து அளித்தல்.

135. அன்னையே என்னேன் அத்தனே என்னேன்
அடிகளே யமையுமென் றிருந்தேன்
என்னையும் ஒருவன் உளனென்று கருதி
இறைஇறை திருவருள் காட்டார்
அன்னமாம் பொய்கை சூழ்தரு பாச்சி
லாச்சிரா மத்துறை அடிகள்
பின்னையே அடியார்க் கருள்செய்வ தாகில்
இவரலா தில்லையோ பிரானார். 2

அடிகள் – மிக்க பெருமையுடையாரைக் குறிக்கும் சிறப்பு மொழி.

அடியேன் என்னைப் பெற்ற தாயைத் துணையென்று நினைந்திலேன்; தந்தையைத் துணையென்று நினைந்திலேன்; என்னை ஆண்ட தலைவனே சாலும் என்று நினைத்தேன். இவ்வாறு 'ஒருவன் உளன்' என்று, தம் சீரடியாரை நினைத்தற்கிடையில், அன்னங்கள் மிக்கு வாழும் பொய்கை சூழ்ந்த திருப்பாச்சிலாச்சிராமத்தில் எழுந்தருளியுள்ள இறைவர் என்னையும் சிறிது திருவுள்ளத் தடைத்து, சிறிது திருவருளைப் புலப்படுத்திலர். இவர் தம் அடியவர்க்கு, மறுமை நலம் ஒன்றையே அளித்தலல்லது, இம்மை நலத்தை அருளுவதில்லையாயினும், இம்மையில் அடியேனைப் புரக்கும் தலைவர் இவரன்றி வேறொருவர் இல்லை; என் செய்கோ!

136. உற்றபோ தல்லால் உறுதியை உணரேன்
உள்ளமே அமையுமென் றிருந்தேன்
செற்றவர் புரமூன் றெரியெழச் செற்ற
செஞ்சடை நஞ்சடை கண்டர்
அற்றவர்க் கருள்செய் பாச்சிலாச் சிராமத்
தடிகள்தாம் யாதுசொன் னாலும்
பெற்றபோ துகந்து பெறாவிடி லிகழில்
இவரலா தில்லையோ பிரானார். 3

இவரலாதில்லையோ பிரானார் – இல்லையோ என்ற ஓகாரம் இல்லையே என்ற ஏகாரப் பொருளில் வந்தது. எமக்குப் பதியாகிய பற்றுக்கோடாவார் பிறரில்லையே யாதலின் இவர் பாலே தான் வேண்டவுள்ளது. இதுவே கற்புடைய உயிரின் பண்பாகும். உயிரின் கற்பு மற்ற தெய்வங்களையெல்லாம் கனவிலும் கூட நினையாததும், கண்ணால் துளிகூடப் பார்க்காமல் இருப்பதுமாக வாழ்ந்து கொண்டு சிவத்தோடு மட்டும் ஒன்றும் பெருவாழ்வாகும். உற்ற – பயன் கைவரப் பெற்ற. உள்ளமே – எண்ணிய அளவே.

யான், ஒரு பொருளினால் நன்மையாதல் தீமையாதல் வந்த காலத்தில் அதனைக் கண்டபின் அல்லது, அதற்கு முன்பே அதன் உண்மை இயல்பை ஓர்ந்துணரும் சிறப்புணர்வு இல்லேன்; அதனால், என் பொதுமையுணர்வே சாலும் என்று அமைந்திருந்தேன். இத்தன்மை யேனிடத்து, தேவர்பொருட்டு அவரைப் பகைத்த அசுரரது முப்புரத்தில் தீயெழச் செய்தும், நஞ்சினையுண்டு கண்டத்தில் வைத்தும், சிவந்த சடை முதலிய தவக்கோலத்தைப் பூண்டும், 'களை கண் இல்லாது அலமந்தவர்க்கு அருள் பண்ணுபவர்' எனப் பெயர்பெற்ற திருப்பாச்சிலாச்சிராமத்தில் எழுந்தருளியுள்ள இறைவர், அடியேன் யாது சொல்லி இரந்தாலும், தாம் மனம் மகிழ்ச்சி அடையப் பெற்றபோது இரக்கம் வைத்து, பெறாதபோது இரக்கம் வையாது விடினும் அடியேனைப் புரக்கும் தலைவர் இவரன்றி வேறொருவர் இல்லை; என் செய்கோ!

137. நாச்சில பேசி நமர்பிற ரென்று
நன்றுதீ தென்கிலர் மற்றோர்
பூச்சிலை நெஞ்சே பொன்விளை கழனிப்
புள்ளினஞ் சிலம்புமாம் பொய்கைப்
பாச்சிலாச் சிராமத் தடிகளென் றிவர்தாம்
பலரையும் ஆட்கொள்வர் பரிந்தோர்
பேச்சிலர் ஒன்றைத் தரவில ராகில்
இவரலா தில்லையோ பிரானார். 4

"இவரலா தில்லையோ பிரானார்" – பதிக மகுடம்.
பூச்சு – முகமன் செய்தல்.

மனமே! பொன் விளையும் என புகழத்தக்க கழனிகளில் பறவைக் கூட்டம் ஒலிப்பதும், நீர் நிறைந்த பொய்கைகளையுடையதும் ஆகிய திருப்பாச்சிலாச்சிராமத்தில் எழுந்தருளி யிருக்கும் அடிகள் எனப்பட்ட இவர்தாம், சிலரை, 'நம்மவர்' என்றும், சிலரை, 'பிறர்' என்றும், நாவாற் சிலவற்றைச் சொல்லுதலும், அவர் சொல்வனவற்றைத் தாம், 'நன்று' என்று புகழ்தலாதல், 'தீது' என்று இகழ்தலாதல் செய்தலும் இலர். மற்றும் ஓர் முகமன் செய்தலும் இவரிடத்து இல்லை. ஆயினும், பலரையும் தமக்கு அடிமை என்று மட்டும் ஆளாக்கிக் கொள்வர். அதன் பின்பு அவரிடம் அன்பு கொண்டு ஓர் இனிய பேச்சுப் பேசுதல் இலர்; ஒன்றைத் தருதலும் இலர்; ஆயினும் அடியேனைப் புரக்கும் தலைவர் இவரையன்றி வேறொருவர் இல்லை; என் செய்கோ!

---

138. வரிந்தவெஞ் சிலையால் அந்தரத் தெயிலை
வாட்டிய வகையின ரேனும்
புரிந்தஅந் நாளே புகழ்தக்க **அடிமை
போகும்நாள் வீழும்நா ளாகிப்**
பரிந்தவர்க் கருள்செய் பாச்சிலாச் சிராமத்
தடிகள்தாம் யாதுசொன் னாலும்
பிரிந்திறைப் போதிற் பேர்வதே யாகில்
இவரலா தில்லையோ பிரானார். 5

எயில் – மதில். வாட்டிய – அழித்த.
புரிதல் – இடைவிடாது சொல்லுதல்.
"இறைவன் பொருள்சேர் புகழ் புரிந்தார்" குறள்.
அடிமை போகும் நாள் – வீழும் நாள்.

கட்டப்பட்ட வெவ்விய வில்லால், வானத்தில் இயங்கும் அரண்களை அழித்த வன்கண்மையை உடையவராயினும், தொண்டு புரிந்த அந்த நாட்களே புகழத்தக்க நாட்களும், **தொண்டு புரியாது போகும் நாட்கள் பயனின்றிக் கழிந்த நாட்களுமாம்** என்று கொண்டு, அன்புசெய்பவருக்கு அருள் செய்பவராகிய, திருப்பாச்சிலாச்சிராமத்தில் எழுந்தருளியிருக்கின்ற இறைவர், என்னளவில், யாது சொல்லி இரந்தாலும் திருச்செவியில் ஏலாது, நொடிப் பொழுதில் நீங்குதலையே உடையவராயினும், அடியேனைப் புரக்கும் தலைவர் இவரன்றி வேறொருவர் இல்லை; என் செய்கோ!

139. செடித்தவஞ் செய்வார் சென்றுழிச் செல்லேன்
தீவினை செற்றிடும் என்று
அடித்தவம் அல்லால் ஆரையும் அறியேன்
ஆவதும் அறிவர்எம் மடிகள்
படைத்தலைச் சூலம் பற்றிய கையர்
பாச்சிலாச் சிராமத்தெம் பரமர்
பிடித்தவெண் ணீறே பூசுவ தானால்
இவரலா தில்லையோ பிரானார். 6

செடித்தவம் – பொய்த்தவம்
அடித்தவம் – வழிவழி அடிமை செய்யும் தவம்

அடியேன், 'பணிபிழைத்தற் குற்றம் வந்து அழிவைச் செய்யும்' என்று அஞ்சி, நன்றல்லாத் தவத்தைச் செய்வார் சென்ற வழியையும் மிதியேன்; தமது திருவடித் தொண்டினையன்றி மற்று யாவரது பணியையும் யான் அறிந்திலேன்; அடியேன் இத்தன்மையேனாதலை எம்பெருமானாராகிய இவரும் அறிவர். அங்ஙனமாக, என்னைப் புரத்தற்கு, படைகளுள் முதன்மையுடைத்தாகிய சூலத்தைப் பிடித்த கையை உடையவராகிய திருப்பாச்சிலாச் சிராமத்தில் எழுந்தருளியிருக்கும் எம் கடவுளாகிய இவரது நிலைமை, பிசைந்த வெள்ளிய சாம்பலைப் பூசுவதே யாயினும், அடியேனைப் புரக்கும் தலைவர் இவரன்றி வேறொருவர் இல்லை; என் செய்கோ!

140. கையது கபாலங் காடுறை வாழ்க்கை
கட்டங்க மேந்திய கையர்
மெய்யது புரிநூல் மிளிரும்புன் சடைமேல்
வெண்டிங்கள் சூடிய விகிர்தர்
பையர வல்குற் பாவைய ராடும்
பாச்சிலாச் சிராமத்தெம் பரமர்
மெய்யரே யொத்தோர் பொய்செய்வ தாகில்
இவரலா தில்லையோ பிரானார். 7

கையின் கண்ணதாகிய தலை ஓட்டினையும், காட்டில் வாழும் வாழ்க்கையினையும், 'கட்டங்கம்' என்னும் படையினை ஏந்திய கையினையும், மார்பின் கண்ணதாகிய முப்புரி நூலினையும் உடைய ஒளிவிடுகின்ற புல்லிய சடையின்மேல் வெள்ளிய பிறையைச் சூடிய விகிர்தரும், அரவப்படம் போலும் அல்குலினை உடைய மகளிர் ஆடலைப் புரியும் திருப்பாச்சிலாச்சிராமத்தில் எழுந்தருளி யிருக்கும் எம் கடவுளும் ஆகிய இவரது தன்மை, சொல் பிறழாதவர்போல வந்து ஆட்கொண்டு, பின்பு பிறழ்தலைச் செய்வதேயாய்விடினும், அடியேனைப் புரக்கும் தலைவர் இவரன்றி வேறொருவர் இல்லை; என் செய்கோ!

141. நிணம்படு முடலை நிலைமையென் றோரேன்
நெஞ்சமே தஞ்சமென் றிருந்தேன்
கணம்படிந் தேத்திக் கங்குலும் பகலும்
கருத்தினாற் கைதொழு தெழுவேன்
பணம்படும் அரவம் பற்றிய கையர்
பாச்சிலாச் சிராமத்தெம் பரமர்
பிணம்படு காட்டில் ஆடுவ தாகில்
இவரலா தில்லையோ பிரானார். 8

நிணம் –மாமிசம். பணம் – படம்.

அடியேன், நிணம் பொருந்தியதாகிய இவ்வுடம்பை நிலைத்த தன்மையுடையதென்று நினையாது, நெஞ்சம் இறைவருக்கு உரியது என்றே துணிந்தேன்; இரவும் பகலும் அடியவர் குழாத்தின் ஊடே சென்று தம்மை அன்போடு துதித்துக் கைகூப்பித் தொழுவேன்; இவ்வாறாக, படம் பொருந்திய பாம்பைப் பிடித்த கையை உடையவராகிய திருப்பாச்சிலாச் சிராமத்தில் எழுந்தருளியிருக்கின்ற எம் கடவுளாராகிய இவரது தன்மை, பிணம் பொருந்திய காட்டில் ஆடுவதேயாய்விடினும், அடியேனைப் புரக்கும் தலைவர் இவரன்றி வேறொருவர் இல்லை; என் செய்கோ!

142. குழைத்துவந் தோடிக் கூடுதி நெஞ்சே
குற்றேவல் நாள்தொறுஞ் செய்வான்
இழைத்தநாள் கடவார் அன்பில ரேனும்
எம்பெரு மானென்றெப் போதும்
அழைத்தவர்க் கருள்செய் பாச்சிலாச் சிராமத்
தடிகள்தாம் யாதுசொன் னாலும்
பிழைத்தது பொறுத்தொன் றீகில ராகில்
இவரலா தில்லையோ பிரானார். 9

இழைத்த நாள் – குறித்த ஆயுள் நாளின் எல்லை.

நெஞ்சே! நீ அன்பால் இளகி மகிழ்ச்சியோடும் விரைந்து சென்று நாள்தோறும் குற்றேவல் செய்ய அடைகின்றாய்; ஆயினும், தமக்கு வரையறுத்த நாளெல்லையைத் தவத்தாற் கடக்க மாட்டாத சிலர், இயல்பில் அன்பில்லாதவராயினும், தாம் கேட்டவற்றால் வாயினால் எப்போதும், 'சிவனே சிவனே' என்று கூப்பிடுந் தன்மையுடையவராயின், அவர்க்கு அருள் செய்பவராகிய திருப்பாச்சிலாச் சிராமத்தில் எழுந்தருளியிருக்கின்ற பெருமானார், யாது சொல்லி வேண்டினும், நீ பிழை செய்ததைப் பொறுத்து உனக்கு ஒன்றையும் ஈகின்றிலர்; ஆயினும் உன்னைப் புரக்கும் தலைவர் இவரன்றி வேறொருவர் இல்லை; நீ என் செய்தியோ!

143. துணிப்படும் உடையுஞ் சுண்ணவெண் ணீறுந்
தோற்றமுஞ் சிந்தித்துக் காணில்
மணிப்படு கண்டனை வாயினாற் கூறி
மனத்தினால் தொண்டனேன் நினைவேன்
பணிப்படும் அரவம் பற்றிய கையர்
பாச்சிலாச் சிராமத்தெம் பரமர்
பிணிப்பட ஆண்டு பணிப்பில ராகில்
இவரலா தில்லையோ பிரானார். 10

வட்டாதல் தன்மையிற் பட்ட உடையும், நறும் பொடியாகப் பூசிய வெள்ளிய நீறும், மற்றும் இன்ன தோற்றமும் ஆகிய இவற்றது பெருமையை யுணர்ந்து, அவற்றைக் கண்டால், அடியேன் நீல கண்டத்தையுடைய எம்பெருமானாரைக் கண்டதாகவே மனத்தால் நினைத்து, வாயால் துதிப்பேன்; அவ்வாறாக, படத்தையுடையதன் வகையிற்பட்ட பாம்பைப் பிடித்த கையையுடையவராகிய, திருப்பாச் சிலாச்சிராமத்தில் எழுந்தருளியிருக்கின்ற எம் கடவுளாராகிய இவர், என்னைத் தம்பால் கட்டுண்டு கிடக்குமாறு ஆட்கொண்டு, ஒன்றையும் ஈயாராயினும், அடியேனைப் புரக்கும் தலைவர் இவரன்றி வேறொருவர் இல்லை; என் செய்கோ!

---

**144. ஒருமையே யல்லேன் எழுமையும் அடியேன்
அடியவர்க் கடியனு மானேன்
உரிமையால் உரியேன் உள்ளமும் உருகும்
ஒண்மலர்ச் சேவடி காட்டாய்**
அருமையாம் புகழார்க் கருள்செயும் பாச்சி
லாச்சிரா மத்தெந்தம் மடிகள்
பெருமைகள் பேசிச் சிறுமைகள் செய்யில்
இவரலா தில்லையோ பிரானார். 11

எய்தற்கரிய புகழையுடையராய் பெரியோர்க்கு அருள் செய்பவராகிய திருப்பாச்சிலாச் சிராமத்தில் எழுந்தருளியிருக்கின்ற எம் **கடவுளாராகிய இவர்க்கு யான் ஒரு பிறப்பில் அடியேன் அல்லேன்; ஏழ் பிறப்பிலும் அடியேன்; அதுவேயுமன்றி, இவர் தம் அடியார்க்கும் அடிய னாயினேன். என்னை விற்கவும், ஒற்றி வைக்கவுமான எல்லா உரிமைகளுமாக இவர்க்கு நான் உரியவனாயினேன்;** இவர்தம் ஒளி பொருந்திய மலர்போலும் செம்மையான திருவடிகளே எனக்கு உறுதுணையாக, என் உள்ளம் அவற்றிடத்து உருகா நிற்கும்; இவ்வாறாக, இவர், முன்பு பெருமைகள் பேசி, பின்பு சிறுமைகள் செய்வாராயினும், அடியேனைப் புரக்கும் தலைவர் இவரன்றி வேறொருவர் இல்லை; என் செய்கோ!

அடிமை ஒருமை – அடிமைத்திறத்தில் இரண்டுற மனம் வையாது சிவனோடு ஒன்றித்து நின்ற ஒருமைப்பாடு. எழுமையும் – எழுவகைப் பிறப்பின் கண்ணேயும். ஒருமையாம் எழுமையுமடிமைத்திறம் இப்பதிகத்துட் பாடல்தோறும் காணலாம். 5 – 8– 10 – 11 பாடல்களை உற்றுப் படித்தால் அடிமைத்திறம் உருக்கொள்ளும்.

145. ஏசின அல்ல இகழ்ந்தன அல்ல
எம்பெரு மான்என்றெப் போதும்
பாயின புகழான் பாச்சிலாச் சிராமத்
தடிகளை அடிதொழப் பன்னாள்
வாயினாற் கூறி மனத்தினால் நினைவான்
வளவயல் நாவல்ஆ ரூரன்
பேசின பேச்சைப் பொறுத்தில ராகில்
இவரலா தில்லையோ பிரானார். 12

ஏசுதல் மனத்தொடு படாதது; இகழ்தல் மனத்தொடு பட்டது.

'எம்பெருமான்' என்று, எப்போதும் உரிமையோடு பரவிய புகழையுடையவனும், திருப்பாச்சிலாச் சிராமத்தில் எழுந்தருளியிருக்கின்ற இறைவரை யடைந்து அவரது திருவடிகளைத் தொழ வேண்டுமென்று பல நாட்கள் வாயினாற் சொல்லி, மனத்தினால் நினைந்தவனும் ஆகிய, வளப்பமான வயல்கள் சூழ்ந்த, திருநாவலூரில் தோன்றிய நம்பியாரூரன் இவரைப் பேசிய பேச்சுக்கள், உண்மையில் ஏசினவும் அல்ல; இகழ்ந்தனவும் அல்ல; ஆதலின், அவைகளை இவர் பொறுத்துக் கொள்ளுதல் வேண்டும்; அது செய்யாராயினும், அடியேனது பிழைகளைப் பொறுத்து ஆளும் தலைவர் இவரன்றி வேறொருவர் இல்லை; என் செய்கோ!

## 15. திருநாட்டியத்தான்குடி

கோட்புலி நாயனார் அவதாரத்தலம். அவர் மக்கள் சிங்கடியார், வனப்பகையார் இருவரையும் தூய மக்களென்று ஏற்றுக் கொண்டு அவர்களை பதிகங்களில் வைத்துப் பாடுகின்றார்.

பண் : தக்கராகம் பதிக எண் : 15

| **மூர்த்தி** | அருள்மிகு இரத்னகிரி நாதர் – அருள்தரும் மலர்மங்கை நாயகி | | |
|---|---|---|---|
| **தல இருப்பிடம்** | சோழநாட்டில் காவிரி தென்கரை. திருவாரூர் – திருத்துறைப்பூண்டி சாலையில் மாவூர் கூட்டு ரோடு சென்று – வடபாதி மங்கலம் செல்லும் பாதையில் திருவாரூரிலிருந்து 30 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | மாவிலங்கை | | |
| **தீர்த்தம்** | சூரிய தீர்த்தம் | | |
| **பாடியவர்** | நம்பியாரூரர் | **பதிகம்** | 1 |

146. பூணாண் ஆவதொ ரரவங்கண் டஞ்சேன்
புறங்காட் டாடல்கண் டிகழேன்
**பேணா யாகிலும் பெருமையை உணர்வேன்**
பிறவே னாகிலும் மறவேன்
காணா யாகிலுங் காண்பன்என் மனத்தால்
கருதா யாகிலுங் கருதி
நானேல் உன்னடி பாடுத லொழியேன்
நாட்டியத் தான்குடி நம்பீ. 1

திருநாட்டியத்தான் குடியில் எழுந்தருளியிருக்கின்ற நம்பியே! உனக்கு அணிகலமும், அரைநாணும் சிறுமையையுடைய பாம்பாதல் கண்டு அஞ்சேன்; நீ புறங்காட்டில் ஆடுதலைக் கண்டு இகழேன்; நீ எனது சிறுமையை யுணர்ந்து என்னை விரும்பாதொழியினும் யான் உனது பெருமையை உணர்ந்து உன்னை விரும்புவேன். வேறோராற்றால் நான் பிறவி நீங்குவேனாயினும், உன்னை மறவேன்; நீ என்னைக் கடைக்கணியாதொழியினும், உன்னை கண்ணாரக் காண்பேன்; நீ என்னை உன் திருவுள்ளத்தில் நினைந்து ஏதும் அருள் பண்ணாதொழியினும், நானோ, என் மனத்தால் உன்னை நினைந்து பாடுதலை ஒழியமாட்டேன்; இஃது என் அன்பிருந்தவாறு.

பூண் நாண் ஆவதோர் அரவம் – பூண்நாண் – பூணூல். ஐந்தலை அரவினைப் பூணூலாகச் சிவபெருமான் அணிவார் என்ற நிலை. நாட்டியம் – கூத்து. நாட்டியத்தான் – கூத்தன் – சிவபெருமான். நாட்டியத்தான்குடி – எல்லா உயிர்களையும் ஆட்டுவிக்கும் கூத்தன் எழுந்தருளியுள்ள குடி.

நம்பி – நம்பி அடையத்தக்கவன்.

147. கச்சேர் பாம்பொன்று கட்டிநின் றிடுகாட்
டெல்லியி லாடலைக் கவர்வன்
துச்சேன் என்மனம் புகுந்திருக் கின்றமை
சொல்லாய் திப்பிய மூர்த்தீ
**வைச்சே இடர்களைக் களைந்திட வல்ல**
மணியே மாணிக்க வண்ணா
நச்சேன் ஒருவரை நான்உனை யல்லால்
நாட்டியத் தான்குடி நம்பீ. 2

கச்சு – இடையில் அணியும் உடை வகை.
துச்சு – கீழான செய்கை. ஏர் – அழகிய.
திப்பியம் – தூய்மை. துச்சேன் – பொய்யன்.
மாணிக்கவண்ணர் – தல இறைவர் பெயர்.
இடர்களை வைச்சே களைந்திட வல்ல – வினைத் தீர்வின் பொருட்டுத் துன்பங்களை அனுபவிக்கக் கொடுத்துத் தீர்க்கின்ற வல்லமைத்தன்மை
நச்சேன் – விரும்பமாட்டேன்.

உண்மையான தெய்வத் திருமேனியை உடையவனே! துன்பங்களை உளவாக்கவும், களையவும் வல்ல உயர்வுடையவனே! மாணிக்கம் போலும் நிறத்தை உடையவனே! திருநாட்டியத்தான் குடியில் எழுந்தருளியிருக்கின்ற நம்பியே! நான் உன்னையன்றி வேறொருவரையும் விரும்பேன்; உயர எழுகின்ற பாம்பு ஒன்றைக் கச்சாகக் கட்டி நின்று இடுகாட்டில் ஆடுகின்ற உன் கோலத்தையே மனத்தில் விரும்பியிருத்துவேன்; இழிபுடையேனாகிய என் மனத்தில் நீ இவ்வாறு புகுந்து நிற்றற்குரிய காரணத்தைச் சொல்லியருளாய்! இஃது என் அன்பிருந்தவாறு.

148. **அஞ்சா தேஉனக் காட்செய வல்லேன்**
**யாதினுக் காசைப் படுகேன்**
பஞ்சேர் மெல்லடி மாமலை மங்கை
பங்கா எம்பர மேட்டீ
மஞ்சேர் வெண்மதி செஞ்சடை வைத்த
மணியே மாணிக்க வண்ணா
நஞ்சேர் கண்டா வெண்டலை யேந்தீ
நாட்டியத் தான்குடி நம்பீ. 3

பரமேட்டி – தன் விருப்பப்படி எதையும் செய்பவன்.
மஞ்சேர்மதி – மேகங்களால் சூழப்பட்ட அழகிய வெண்மையான சந்திரன்.

பஞ்சு ஊட்டிய அழகிய மெல்லிய பாதங்களையுடைய, பெரிய மலைக்கு மகளாகிய உமையை ஒரு பாகத்தில் உடையவனே! மேலான இடத்தில் உள்ள, எங்கள் பெருமானே! மேகங்களின்மேற் செல்லுகின்ற வெள்ளிய திங்களைச் செவ்விய சடையின் கண் வைத்த உயர்வுடையவனே! மாணிக்கம்போலும் நிறத்தையுடையவனே! நஞ்சு தோன்றுகின்ற கண்டத்தையுடையவனே! வெள்ளிய தலையை ஏந்தியவனே! திருநாட்டியத்தான்குடியில் எழுந்தருளியிருக்கின்ற நம்பியே! அஞ்சாமலே உனக்கு நான் தொண்டுபுரிய வல்லேன்; அதன் பயனாக எதற்கு ஆசைப்படுவேன்? ஒன்றிற்கும் ஆசைப்படேன்; இஃது என் அன்பிருந்தவாறு.

149. கல்லே னல்லேன் **நின்புகழ் அடிமை**
**கல்லா தேபல கற்றேன்**
நில்லே னல்லேன் நின்வழி நின்றார்
தம்முடை நீதியை நினைய
வல்லே னல்லேன் பொன்னடி பரவ
மாட்டேன் மறுமையை நினைய
நல்லே னல்லேன் நானுனக் கல்லால்
நாட்டியத் தான்குடி நம்பீ. 4

திருநாட்டியத்தான் குடியில் எழுந்தருளியிருக்கின்ற நம்பியே! நான் உனது புகழைக் கல்லாதேனல்லேன்; அடிமைச் செயல்களைப் பிறரிடம் கல்லாமலே நீ உள்நின்று உணர்த்த அவை எல்லாவற்றையும் கற்றேன்; அங்ஙனங் கற்றற்குத்தக நினது வழியில் நில்லாதவ னல்லேன்; அங்ஙனம் நின்றாரது வரலாறுகளை நினைய மாட்டாதவனல்லேன்; உனது பொன் போலும் திருவடிகளைப் பரவுமிடத்து அதற்குப் பயனாக மறுமையின்பத்தை நினைய மாட்டேன். உனக்கல்லது வேறு ஒருவற்கு நான் உறவினன் அல்லேன்; இஃது என் அன்பிருந்தவாறு.

150. மட்டார் பூங்குழல் மலைமகள் கணவனைக்
கருதா தார்தமைக் கருதேன்
ஒட்டா யாகிலும் ஒட்டுவன் அடியேன்
உன்னடி அடைந்தவர்க் கடிமைப்
பட்டே னாகிலும் பாடுதல் ஒழியேன்
பாடியும் நாடியும் அறிய
நட்டேன் ஆதலால் நான்மறக் கில்லேன்
நாட்டியத் தான்குடி நம்பீ. 5

திருநாட்டியத்தான் குடியில் எழுந்தருளியிருக்கின்ற நம்பியே! தேன் நிறைந்த பூவை யணிந்த கூந்தலையுடைய மலைமகளுக்குக் கணவனாகிய உன்னை நினையாதவரை நான் நினையேன்; நீ எனக்குத் தலைவனாய் என்னொடு ஒட்டாதே போவாயாயினும், நான் உனக்கு அடியவனாய், உன்னொடு ஒட்டியே நிற்பேன்; உன் திருவடியையே பற்றாக அடைந்த அடியார்க்கு அடியவனாகிய பெருமையை நான் பெற்றுடையேனாயினும், உன்னைப் பாடுதலை விடமாட்டேன்; உன் புகழைப் பாடியும், உனது பெருமைகளை ஆராய்ந்தும் யாவருமறிய உன்னொடு நட்புக் கொண்டேனாதலின், உன்னை நான் மறக்கமாட்டேன்; இஃது என் அன்பிருந்தவாறு.

நட்டேன் – நட்பு பூண்டேன்.

மட்டுஆர் – தேன்நிறைந்த.

151. படப்பாற் றன்மையில் நான்பட்ட தெல்லாம்
படுத்தாய் என்றல்லல் பறையேன்
குடப்பாச் சில்லுறை கோக்குளிர் வானே
கோனே கூற்றுதைத் தானே
மடப்பாற் றயிரொடு நெய்மகிழ்ந் தாடு
மறையோ தீமங்கை பங்கா
நடப்பா யாகிலும் நடப்பனுன் னடிக்கே
நாட்டியத் தான்குடி நம்பீ. 6

படப்பாற்றன்மை – படவேண்டிய – அனுபவிக்க வேண்டிய – பான்மை – நியதி – ஊழ்.

மேற்கிலுள்ள திருப்பாச்சிலாச்சிராமத்தில் எழுந் தருளியிருக்கும், நீரைப் பொழிகின்ற குளிர்ந்த மேகம் போல்பவனே! யாவர்க்கும் தலைவனே! இயமனை உதைத்தவனே! அடியவர் அகங்களில் பால் தயிர் நெய் இவைகளை மகிழ்ச்சியோடு ஆடுகின்ற, வேதத்தை ஓதுபவனே! உமையை ஒரு பாகத்தில் உடையவனே! திருநாட்டியத்தான்குடியில் எழுந்தருளியிருக்கின்ற நம்பியே! துன்பங்கள் படுமாறு அமைந்த ஊழினது தன்மையால், தான் பட்ட துன்பங்களை எல்லாம் நீ படுத்தினாய் என்று சொல்லி நான் முறையிடமாட்டேன். நீ என்னை விட்டு நீங்குவாயாயினும், நான் உன் திருவடியைப் பெறுதற்கே முயல்வேன்; இஃது என் அன்பிருந்தவாறு.

152. ஐவாய் அரவினை மதியுடன் வைத்த
அழகா அமரர்கள் தலைவா
எய்வான் வைத்ததொர் இலக்கினை அணைதர
நினைந்தேன் உள்ளம்உள் ளளவும்
உய்வான் எண்ணிவந் துன்னடி யடைந்தேன்
உகவா யாகிலும் உகப்பன்
நைவா னன்றுனக் காட்பட்ட தடியேன்
நாட்டியத் தான்குடி நம்பீ. 7

எய்வான் வைத்ததொர் இலக்கினை – வில்லின் அம்பு கோத்து எய்பவர் ஓர் இலக்கு வைத்து எய்தல் போல் நீர் ஒரு இலக்கு – குறி வைத்துப் பிறவியில் செலுத்தினீர் அதை மறவாமல் கடைப்பிடித்தேன்.

ஐந்து தலைப் பாம்பினைச் சந்திரனோடு முடியில் வைத்துள்ள அழகனே! தேவர்கட்குத் தலைவனே! திருநாட்டியத்தான் குடியில் எழுந்தருளியிருக்கின்ற நம்பியே! நான் அன்று உனக்கு ஆட்பட்டது, துன்பத்தால் வருந்துதற்கு அன்று; துன்பத்தினின்றும் உய்ந்து, இன்பம் உற எண்ணிவந்தே உன் திருவடியை அடைந்தேன்; அதனால், நீ என்னை விரும்பாதொழியினும், நான் உன்னை விரும்பியே நிற்பேன்; ஆதலின், நான் எய்தற்கு வைத்த குறியினை உயிருள்ள அளவும் எவ்வாற்றாலேனும் அடையவே நினைத்தேன்; இஃது என் அன்பிருந்தவாறு.

153. கலியேன் மானுட வாழ்க்கைஒன் றாகக்
கருதிடிற் கண்கள்நீர் மல்கும்
பலிதேர்ந் துண்பதொர் பண்புகண் டிகழேன்
பசுவே ஏறினும் பழியேன்
வலியே யாகிலும் வணங்குதல் ஒழியேன்
மாட்டேன் மறுமையை நினைய
நலியேன் ஒருவரை நான்உனை யல்லால்
நாட்டியத் தான்குடி நம்பீ. 8

கலியேன் – மகிழேன். வலியேயாகிலும் – பல துன்பங்கள் வரினும்.

திருநாட்டியத்தான் குடியில் எழுந்தருளியிருக் கின்ற நம்பியே! யான் இம்மானுட வாழ்க்கையை ஒருபொருளாக நினைத்துச் செருக்கேன்; இதன் நிலையாமை முதலியவற்றை நினைத்தால், கண்களில் நீர் பெருகும். ஆதலின், பிச்சை எடுத்து உண்ணும் உனது இயல்பைக் கண்டும், அதுபற்றி உன்னை இகழேன்; நீ எருதையே ஏறினாலும் அதுபற்றி உன்னைப் பழியேன்; எனக்கு மெலிவு நீங்க வலியே மிகினும், உன்னை வணங்குதலைத் தவிரேன்; மறுமை இன்பத்தையும் நினைக்க மாட்டேன்; உன்னையன்றி வேறொருவரை நீங்காது நின்று இரக்கமாட்டேன்; இஃது என் அன்பிருந்தவாறு.

154. குண்டா டிச்சமண் சாக்கியப் பேய்கள்
கொண்டா ராகிலுங் கொள்ளக்
கண்டா லுங்கரு தேன்எரு தேறுங்
கண்ணா நின்னல தறியேன்
**தொண்டா டித்தொழு வார்தொழக் கண்டு**
**தொழுதேன்** என்வினை போக
நண்டா டும்வயல் தண்டலை வேலி
நாட்டியத் தான்குடி நம்பீ. 9

குண்டாடி – கலகம் செய்யும்
தண்டலை – சோலை.

எருதினை ஏறுகின்ற, எனக்குக் கண்போலச் சிறந்தவனே! நண்டுகள் விளையாடும் வயல்களையும், சோலையாகிய வேலியையும் உடைய திருநாட்டியத்தான் குடியில் எழுந்தருளியிருக்கின்ற நம்பியே! சமணரும், சாக்கியரும் ஆகிய பேய்கள் மூர்க்கத் தன்மையை மேற்கொண்டு தாங்கள் பிடித்தது சாதித்தார் என்பது கேள்வியால் அறியப் பட்டாலும், அதனை நேரே கண்டாலும் அதனை யான் ஒரு பொருளாக நினையேன்; உன்னை யன்றி பிறிதொரு கடவுளை நான் அறியேன்; உனது தொண்டினை மேற்கொண்டு உன்னைத் தொழுகின்ற பெரியோர்கள் அங்ஙனம் தொழும்பொழுது கண்டு, அதுவே நெறியாக என் வினைகள் ஒழியுமாறு உன்னை யான் தொழத் தொடங்கினேன்; இஃது என் அன்பிருந்தவாறு.

155. கூடா மன்னரைக் கூட்டத்து வென்ற
கொடிறன் கோட்புலி சென்னி
நாடார் தொல்புகழ் நாட்டியத் தான்குடி
நம்பியை நாளும் மறவாச்
சேடார் பூங்குழற் சிங்கடி யப்பன்
திருவா ரூரன் உரைத்த
**பாடீ ராகிலும் பாடுமின் தொண்டீர்**
**பாடநும் பாவம்பற் றறுமே.** 10

கொடிறன் – வல்லமை உடையவன்.
பாடுவதில் உமக்கு விருப்பமில்லாவிட்டாலும் பயன் கருதியாவது பாடுங்கள்.

அடியவர்களே! பிற பாடல்களை நீர் பாட மறந்தாலும், பகையரசரை அவர் எதிர்ப்பட்ட ஞான்று தப்பிப் போக விடாது வென்ற கொடிறு போல்பவராகிய **கோட்புலி நாயனார்க்கு, இடமாயதும்,** சோழனது நாட்டில் உள்ளதும், பழமையான புகழையுடையதும் ஆகிய திருநாட்டியத்தான்குடியில் எழுந்தருளியிருக் கின்ற நம்பியை, அவனை ஒரு நாளும் மறவாத – திரட்சியமைந்த, பூவையணிந்த கூந்தலை யுடைய, **'சிங்கடி'** என்பவளுக்குத் தந்தையாகிய, திருவுடைய – நம்பியாரூரன் பாடிய பாடல்களைப் பாடுங்கள். பாடின், உங்கள் பாவங்கள் எல்லாம் பற்றற்று ஒழியும்.

## 16. திருக்கலயநல்லூர்

இப்பதிகத்துள் ஒவ்வொரு பாட்டிலும் மாபுராண வரலாறுகள் ஒவ்வொன்றைச் சிறப்பாக விரித்தோதி மிக அழகாகப் போற்றியிருத்தலைக் காணலாம். இவற்றைக் குறிக் கொள்ள வேண்டுமென்பது தெய்வச் சேக்கிழார் ஆணையாகும். தற்காலத்தில் இவ்வூர் சாக்கோட்டை என்று வழங்கப்படுகிறது. உயிர்களை அடைத்த கும்பத்தின் கலயம் பிரளய வெள்ளத்தில் தங்கிய இடமாதலின் கலயநல்லூர் என்னும் பெயர் ஏற்பட்டது.

பண் : தக்கராகம் — பதிக எண் : 16

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் அமிர்தவல்லி உடனமர் அருள்மிகு அமிர்தகலாநாதர் | | |
| **தல இருப்பிடம்** | சோழநாடு. காவிரி அரிசிலாற்றுக்குத் தென்கரை. கும்பகோணம். நீடாமங்கலம் சாலையில் கும்பகோணத்திலிருந்து 3 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | வன்னி | | |
| **தீர்த்தம்** | சதுர்வேத தீர்த்தம் | | |
| **பாடியவர்** | நம்பியாரூரர் | **பதிகம்** | 1 |

156. குரும்பைமுலை மலர்க்குழலி கொண்டதவங் கண்டு
குறிப்பினொடுஞ் சென்றவள்தன் குணத்தினைநன் கறிந்து
விரும்பும்வரங் கொடுத்தவளை வேட்டருளிச் செய்த
விண்ணவர்கோன் கண்ணுதலோன் மேவியஊர் வினவில்
அரும்பருகே சுரும்பருவ அறுபதம்பண் பாட
அணிமயில்கள் நடமாடும் அணிபொழில்சூழ் அயலின்
கரும்பருகே கருங்குவளை கண்வளருங் கழனிக்
கமலங்கள் முகமலருங் கலயநல்லூர் காணே. 1

'தென்னங் குரும்பை போலும் தனங்களையும், பூவையணிந்த கூந்தலையும் உடையவளாகிய உமையம்மை தவம் மேற்கொண்டிருத்தலை அறிந்து, அவளை மணக்குங் குறிப்போடும் அங்குச் சென்று அவளது அன்பினை ஆய்ந்தறிந்து, அவள் விரும்பிய வரத்தைக் கொடுத்து, அவளை மணஞ்செய்தருளிய தேவர் தலைவனும், கண்ணையுடைய நெற்றியை உடையவனும் ஆகிய இறைவனது ஊர் யாது ?' என்று வினவின், பேரரும்புகளின் அருகே சென்று, 'சுரும்பு' என்னும் ஆண் வண்டுகள் இசை கூட்ட, ஏனைய பெண் வண்டுகள் பண்களைப்பாட, அழகிய மயில்கள் நடனம் ஆடுகின்ற அரங்காகிய அழகிய சோலையைச் சூழ்ந்த அயலிடத்தில், கரும்பின் அருகே கரிய குவளை மலர் கண்ணுறங்கு கின்ற வயல்களில் தாமரைகள் முகமலரும் திருக்கயலநல்லூரே; அறிக.

இப்பாடல் பார்வதியம்மையின் திருமண நிகழ்வு குறித்தது. கந்தபுராணத்தில் தவம் காண் படலம், பார்வதியம்மையார் திருமணப் படலம் ஆகிய படலங்களில் இவ்வரலாறு இயற்றப்பட்டுள்ளது.
குவளை மலர் சந்திரன் முன் மலர்ந்து, சூரியன் முன் குவிவதும், கண் போலத் தோன்றுவதும் ஆதலின், காலையில் அது கண் வளர்வது போலக் காணப்படுவதாயிற்று.

157. செருமேவு சலந்தரனைப் பிளந்தசுடர் ஆழி
செங்கண்மலர் பங்கயமாச் சிறந்தானுக் கருளி
இருள்மேவும் அந்தகன்மேல் திரிசூலம் பாய்ச்சி
இந்திரனைத் தோள்முரித்த இறையவன்ஊர் வினவில்
**பெருமேதை** மறையொலியும் பேரிமுழ வொலியும்
பிள்ளையினந் துள்ளிவிளை யாட்டொலியும் பெருகக்
கருமேதி புனல்மண்டக் கயல்மண்டக் கமலங்
களிவண்டின் கணம்இரியும் கலயநல்லூர் காணே. 2

தம்மை வினவும் மாணாக்கனுக்கு அருளிச் செய்யுமாற்றான் அருளுதலின், "வினவின், காண்" என்றருளினார். மேதை – அறிவுப் பெருமை.

'போரை விரும்பிய **சலந்தராசுரனை** அழித்த ஒளியையுடைய சக்கரத்தை, தன் சிவந்த கண்ணாகிய மலரையே தாமரை மலராகச் சாத்தி, வழிபாட்டிற் சிறந்து நின்றவனாகிய திருமாலுக்கு அளித்து, இருள் போலும் அந்தகாசுரன் மேல் கூர்மையான சூலத்தைப் பாய்ச்சி அழித்து, இந்திரனைத் தோள் முரித்த கடவுளது ஊர் யாது **?'** என்று வினவின், மிக்க பேறறிவைத்தரும் வேகத்தினது ஓசையும், முரசு, மத்தளம் ஆகிய வாச்சியங்களது ஓசையும், சிறுவர் கூட்டம் துள்ளி விளையாடுதலின் ஓசையும் மிக்கெழுதலினால், கரிய எருமை நீரிற் புக, அதனால் துள்ளி விழுந்த கயல் மீன்கள், தாமரை மலரின்மேல் நெருங்கி விழ, தாமரை மலரைச் சூழ்ந்திருந்த களிப்புடைய வண்டுகளின் கூட்டம் அஞ்சி ஓடுகின்ற திருக்கலயநல்லூரே; அறிக.

---

158. இண்டைமலர் கொண்டுமணல் இலிங்கமது இயற்றி
இனத்தாவின் பாலாட்ட இடறியதா தையைத்தாள்
துண்டமிடு சண்டியடி அண்டர்தொழு தேத்தத்
தொடர்ந்தவனைப் பணிகொண்ட விடங்கனதூர் வினவில்
மண்டபமும் கோபுரமும் மாளிகைசூ ளிகையும்
மறைஒலியும் விழவொலியும் மறுகுநிறை வெய்திக்
கண்டவர்கள் மனங்கவரும் புண்டரிகப் பொய்கைக்
காரிகையார் குடைந்தாடுங் கலயநல்லூர் காணே.

3

சூளிகை – மேல்மாடம்.

'இண்டை மாலையும் விடுபூவும் திரட்டிக் கொண்டு சென்று மண்ணியாற்றில் மணல் இலிங்கத்தை அமைத்து, கூட்டமான பசுக்களின் பாலைக் கொணர்ந்து சொரிய, அதனைக் கண்டு வெகுண்டு காலால் இடறிய தந்தையின் தாளை வெட்டிய **சண்டேசுர நாயனாரது** திருவடிகளைத் தேவர்களும் தொழுது துதிக்கும்படி, அவரை விடாது சென்று ஆட்கொண்ட அழகனது ஊர் யாது **?'** என்று வினவின், மண்டபங்களிலும், கோபுரங்களிலும், மாளிகைகளிலும், சூளிகைகளிலும் வேதங்களின் ஓசையும், மங்கல ஓசைகளும் வீதிகளில் நிரம்புதல் பொருந்திக் கண்டவர்களது மனத்தைக் கவர்கின்ற, தாமரைப் பொய்கைகளில் மகளிர் மூழ்கி விளையாடுகின்ற திருக்கலயநல்லூரே; அறிக.

159. மலைமடந்தை விளையாடி வளையாடு கரத்தால்
மகிழ்ந்தவள்கண் புதைத்தலுமே
வல்லிருளாய் எல்லா
உலகுடன்றான் மூடவிருள் ஓடும்வகை நெற்றி
ஒற்றைக்கண் படைத்துகந்த உத்தமனூர்
வினவில்
அலைஅடைந்த புனல்பெருகி யானைமருப் பிடறி
அகிலொடுசந் துந்திவரும் அரிசிலின்
தென்கரைமேல்
கலையடைந்து **கலிகடியந் தணர்**ஓமப் புகையால்
கணமுகில்போன் றணிகிளருங் கலயநல்லூர்
காணே. 4

'மலைமகள், விளையாட்டை மேற்கொண்டு, மகிழ்ச்சி மேலிட்டவளாய், அவளது வளை பொருந்திய கைகளால் தனது கண்களை மூடினமையால், எல்லா உலகங்களையும் ஒருங்கே வலி இருள் பரந்து மூடிக்கொள்ள, அவ்விருள் நீங்கும்படி நெற்றியிடத்து ஒரு கண்ணைத் தோற்றுவித்து அருள் புரிந்த மேலானவனது ஊர் யாது ?' என்று வினவின், அலை பொருந்திய நீர் பெருக்கெடுத்து, யானைத் தந்தத்தைப் புரட்டி, அகில் மரத்தையும், சந்தன மரத்தையும் தள்ளிக் கொண்டு வருகின்ற அரிசிலாற்றின் தென்கரைமேல் உள்ள, நூல்களையுணர்ந்து அந்நெறியானே வறுமையை ஓட்டுகின்ற அந்தணர்களது வேள்விப்புகையால், கூட்டமாகிய மேகத்தின் தோற்றம் போன்ற அழகு மிகுகின்ற திருக்கலயநல்லூரே அறிக.

கலிகடியந்தணர் என்பதை "கற்றாங்கு எரி ஓம்பிக் கலியை வாராமே'' என்ற திருஞானசம்பந்தர் தேவாரத்தோடு ஒருங்குவைத்து உணரலாம்.

160. நிற்பானும் கமலத்தில் இருப்பானும் முதலா
நிறைந்தமரர் குறைந்திரப்ப நினைந்தருளி
யவர்க்காய்
வெற்பார்வில் அரவுநாண் எரிஅம்பால் விரவார்
புரமூன்றும் எரிவித்த விகிர்தனூர் வினவில்
**சொற்பால பொருட்பால சுருதி ஒரு நான்கும்**
**தோத்திரமும் பலசொல்லித் துதித்திறைதன்**
திறத்தே
கற்பாருங் கேட்பாரு மாயெங்கும் நன்கார்
கலைபயில்அந் தணர்வாழுங் கலயநல்லூர்
காணே. 5

'தன்னை வழிபடுவோர்க்கு நின்ற கோலமாய்த் தோன்றுபவனாகிய திருமாலும், தாமரை மலரில் இருப்பவனாகிய பிரமனும் முதல்வராகத் தேவர் பலரும் குறையுடையராய் நிறைந்து வந்து இரக்க, அவரது துன்பத்தைத் திருவுள்ளத்தடைத்து அவர் பொருட்டாக, மலையாகிய வில்லும், பாம்பாகிய நாணும், தீயாகிய அம்பும் என்னும் இவற்றால் பகைவரது முப்புரங்களையும், எரித் தொழியச் செய்த, உலகியலுக்கு வேறுபட்டவனது ஊர் யாது ?' என்று வினவின், சொல்வகைகள் பலவற்றையும், பொருள் வகைகள் பலவற்றையும் உடைய வேதங்கள் நான்கையும், தோத்திரங்கள் பலவற்றையும் சொல்லித் துதிக்குமாற்றால் இறைவனது நெறிக்கண் கற்பாரும் கேட்பாருமாய் நின்று, எவ்விடத்திலும் நன்மை யமைந்த நூல்களைப் பயில்கின்ற அந்தணர்கள் வாழ்கின்ற திருக்கலயநல்லூரே; காண்.

சொற்பால சுருதி ஒரு நான்கும்
பொருட்பால தோத்திரமும் எனக் கொள்ள வேண்டும்.

161. பெற்றிமைஒன் றறியாத தக்கனது வேள்விப்
**பெருந்தேவர் சிரந்தோள்பல் கரங்கள்பீ டழியச்**
செற்றுமதிக் கலைசிதையத் திருவிரலால் தேய்வித்
தருள்பெருகு சிவபெருமான் சேர்தரும் ஊர் வினவில்
தெற்றுகொடி முல்லையொடு மல்லிகைசெண் பகமும்
திரைபொருது வருபுனல்சேர் அரிசிலின்தென் கரைமேல்
கற்றினம்நல் கரும்பின்முளை கறிகற்கக் கறவை
கமழ்கழுநீர் கவர்கழனிக் கலயநல்லூர் காணே. 6

'தக்கது சிறிதும் அறியாத தக்கனது வேள்வியில் பெரிய தேவர்கள், தங்கள் தலை, தோள், பல், கை, கண் என்னும் உறுப்புக்கள் வலிமையழிந் தொழியுமாறு ஒறுத்து, சந்திரனது கலைகள் சிதையும்படி கால் திருவிரலால் தேய்த்து, பின்பு அவர் எல்லாரிடத்தும் கருணையை மிக வழங்கிய சிவபெருமான் சேர்ந்திருக்கும் ஊர் யாது ?' என்று வினவினால், பின்னிக்கிடக்கின்ற முல்லைக் கொடியோடு, 'மல்லிகைக்கொடி, சண்பகமரம்' என்னும் இவைகளும் அலைகளால் உந்தப்பட்டு வருகின்ற நீர் பொருந்திய அரிசிலாற்றின் தென்கரையில், கன்றுக்கூட்டம் நல்ல கரும்பின் முளையில் கறித்தலைப் பழக, பசுக்கூட்டம் மணம் வீசுகின்ற செங்கழுநீர்க் கொடியை மேய்கின்ற வயல்களையுடைய திருக்கலய நல்லூரே; அறிக.

தக்க யாகத்தில் கலந்து கொண்ட
எச்சனது – சிரம்
இந்திரனது – தோள்
சூரியனது – பல்
தீயின் – கரம்
பகன் (மற்றோர் சூரியன்) – கண்
இவை பீடழிந்தன. நாயகனே தண்டித்தால் சயமன்றோ வானவர்க்கு.

162. இலங்கையர்கோன் சிரம்பத்தோ டிருபதுதிண் தோளும்
இற்றலற ஒற்றைவிரல் வெற்பதன்மேல் ஊன்றி
நிலங்கிளர்நீர் நெருப்பொடுகாற் றாகாசம் ஆகி
நிற்பனவும் நடப்பனவாம் நின்மலன்ஊர் வினவில்
பலங்கள்பல திரைஉந்திப் பருமணிபொன் கொழித்துப்
பாதிரிசந் தகிலினொடு கேதகையும் பருகிக்
கலங்குபுனல் அலம்பிவரும் அரிசிலின்தென் கரைமேல்
கயல்உகளும் வயல்புடைசூழ் கலயநல்லூர் காணே. 7

'இலங்கைக்கு அரசனாகிய இராவணன் தனது பத்துத் தலைகளும், இருபது தோள்களும் சிதைந்து அரற்றுமாறு ஒரு விரலைக் கயிலை மலையின்மேல் ஊன்றி, 'நிலம், மிக்க நீர், நெருப்பு, காற்று, வானம் என்னும் பெரும் பொருள்களாகியும், நிற்பனவும் நடப்பனவுமாகிய உயிர்களாகியும் நிற்கின்ற தூயவனுடைய ஊர் யாது ?' என்று வினவினால், அலைகளால் பல பழங்களைத் தள்ளி, பெரிய மாணிக்கங் களையும், பொன்னையும் கொழித்து, 'பாதிரி, சந்தனம், அகில்' என்ற மரங்களையும், தாழம் புதர்களையும் உள்வாங்கி, இவற்றால் எல்லாம் கலங்கல் பொருந்திய நீர், ஆரவாரித்து வருகின்ற அரிசிலாற்றின் தென்கரையில் உள்ள கயல் மீன்கள் பிறழும் வயல்கள் புடைசூழ்ந்த திருக்கலயநல்லூரே; அறிக.

கலங்குபுனல் – பெருகிய வெள்ளம்.

163. மாலயனுங் காண்பரிய மால்எரியாய் நிமிர்ந்தோன்
வன்னிமதி சென்னிமிசை
வைத்தவன்மொய்த் தெழுந்த
வேலைவிடம் உண்டமணி கண்டன்விடை ஊரும்
விமலன்உமை யவளோடு மேவியஊர்
வினவில்
**சோலைமலி குயில்கூவக் கோலமயில் ஆலச்**
**சுரும்பொடுவண் டிசைமுரலப் பசுங்கிளிசொல்**
**துதிக்கக்**
**காலையிலும் மாலையிலும் கடவுள்அடி பணிந்து**
**கசிந்தமனத் தவர்பயிலுங் கலயநல்லூர்**
**காணே. 8**

சிவனது அளவிலாற்றலுடைமை குறித்த செய்திகள் குறிக்கப்பட்டன. நிமிர்ந்தோன் – வைத்தவன் – கண்டன் – விடை ஊர்வன் – விமலன் – உமைபாகன் எனக் கண்டு கொள்ளலாம். குயில், மயில், வண்டு, கிளி இவையெல்லாம் தத்தம் அளவில் ஆடிப் பாடிக் கூவித் துதி செய்தன. "பாரிகையும் பண்டிதர்கள் பன்னாளும் பயின்றோதும் ஓசை கேட்டு – கிள்ளை – வேதங்கள் பொருட்சொல்லும் மிழலை" – தி.ஞா.ச. தேவாரம். கசிந்த மனம் – கடவுள் வழிபாட்டிற்கு இன்றியமையாத பண்பும் பயனுமாம்.

திருமாலும் பிரமனும், அடிமுடி தேடி அறியாதபடி நெருப்புருவமாய் நீண்டு நின்றவனும், வன்னியும், பிறையும் சடையிற் சூடியவனும், கடலிற் றோன்றிய விடத்தை உண்டு கறுத்த நீலமணி போலும் கண்டத்தையுடையவனும், இடபவாகனத்தை ஊர்பவனும் ஆகிய இறைவன் உமாதேவியோடு விரும்பி யிருக்கின்ற ஊர் யாது ? என்று வினவினால், சோலைகளில் நிறைந்த குயில்கள் கூவவும், அழகிய மயில்கள் ஆடவும், சுரும்பும் வண்டும் இசை கூட்டவும், பசிய கிளிகள் தாம் கேட்டவாறே சொல்லி இறைவனைத் துதிக்கும்படி, காலை, மாலை இரண்டு பொழுதிலும் இறைவனது திருவடிகளை வணங்கி, உருகிய மனத்தை உடைய அடியார்கள் மிக்கிருக்கின்ற திருக்கலய நல்லூரே; அறிக.

164. பொரும்பலம துடையசுரன் தாரகனைப் பொருது
பொன்றுவித்த பொருளினைமுன்
படைத்துகந்த புனிதன்
கரும்புவிலின் மலர்வாளிக் காமன்உடல் வேவக்
கனல்விழித்த கண்ணுதலோன் கருதும்ஊர்
வினவில்
இரும்புனல்வெண் டிரைபெருகி ஏலம்இல வங்கம்
இருகரையும் பொருதலைக்கும்
அரிசிலின்தென் கரைமேல்
கரும்புனைவெண் முத்தரும்பிப் பொன்மலர்ந்து
பவளக்
கவின்காட்டுங் கடிபொழில்சூழ் கலயநல்லூர்
காணே. 9

'போர் செய்கின்ற வலிமையையுடைய அசுரனாகிய, 'தாரகன்' என்பவனைப் போர் செய்து அழியச்செய்த முதல்வனாகிய முருகனை முன்பு படைத்து, அவனைத் தன் மகனாக விரும்பிக்கொண்ட தூயவனும், கரும்பினால் இயன்ற வில்லையும், மலர்களால் இயன்ற அம்புகளையும் உடையவனாகிய மன்மதன் உடம்பு வெந்தொழியுமாறு நெருப்பாக நோக்கிய கண்ணையுடைய நெற்றியை யுடையவனும் ஆகிய சிவபெருமான் தனக்கு இருப்பிடமாகக் கொள்ளும் ஊர் யாது ?' என்று வினவினால், மிக்க நீரினது அலைகள்மேல் எழுந்துசென்று, 'ஏலம், இலவங்கம்' என்னும் மரங்களோடே இருகரைகளையும் மோதி யழிக்கின்ற அரிசிலாற்றின் தென்கரையில், பசிய புன்னை மரங்கள் வெள்ளிய முத்துக்களை அரும்பி, பொன்னை மலர்ந்து, பவளத்தினது அழகைக் காட்டுகின்ற நறுமணச் சோலைகள் சூழ்ந்த திருக்கலயநல்லூரே; அறிக.

165. தண்கமலப் பொய்கைபுடை சூழ்ந்தழகார் தலத்தில்
தடங்கொள்பெருங் கோயில்தனில்
தக்கவகை யாலே
வண்கமலத் தயன்முன்னாள் வழிபாடு செய்ய
மகிழ்ந்தருளி இருந்தபரன் மருவியஊர்
வினவில்
வெண்கவரி கரும்பீலி வேங்கையொடு கோங்கின்
விரைமலரும் விரவுபுனல் அரிசிலின்தென்
கரைமேல்
கண்கமுகின் பூம்பாளை மதுவாசங் கலந்த
கமழ்தென்றல் புகுந்துலவு கலயநல்லூர்
காணே. 10

'குளிர்ச்சியை உடைய தாமரைக் குளங்கள் நாற்புறத்தும் சூழப்பெற்ற ஊரில், திருக்குளத்தைக் கொண்ட பெருங்கோயிலின் கண் முறைப்படி, வளவிய தாமரை மலரில் இருக்கும் பிரமதேவன் முற்காலத்தில் வழிபாடு செய்ய, அதற்கு மகிழ்ச்சியுற்று இருந்த சிவபெருமான் எழுந்தருளியுள்ள ஊர் யாது ?' என்று வினவினால், வெண்மையான கவரி மயிரும், நீலமான மயில் இறகும், வேங்கை மரம், கோங்க மரம் இவற்றினது வாசனை பொருந்திய மலர்களும் கலந்து வருகின்ற நீரையுடைய அரிசிலாற்றின் தென்கரையில், கணுக்களை யுடைய கமுக மரத்தின் அழகிய பாளையில் வண்டுகள் சேர்த்த தேனினது வாசனையோடு கலந்த பல மணங்களை வீசும் தென்றற் காற்றுப் புகுந்து உலாவுகின்ற திருக்கலய நல்லூரே; அறிக.

166. தண்புனலும் வெண்மதியும் தாங்கியசெஞ்
சடையன்
தாமரையோன் தலைகலனாக் காமரமுன்
பாடி
உண்பலிகொண் டுழல்பரமன் உறையும்ஊர்
நிறைநீர்
ஒழுகுபுனல் அரிசிலின்தென் கலயநல்லூர்
அதனை
நண்புடைய நன்சடையன் இசைஞானி சிறுவன்
நாவலர்கோன் ஆரூரன் நாவின்நயந்
துரைசெய்
பண்பயிலும் பத்தும் இவை பத்திசெய்து பாட
வல்லவர்கள் அல்லலொடு பாவம்இலர்
தாமே. 11

குளிர்ந்த நீரையும், வெள்ளிய திங்களையும் தாங்கிய சடையை உடையவனும், பிரமதேவனது தலை ஓட்டினையே பாத்திரமாக ஏந்தி, முன்னதாக இசையைப் பாடிக் கொண்டு, உண்ணுகின்ற பிச்சைப் பொருள்களை ஏற்றுத் திரிகின்ற மேன்மையை உடையவனும் ஆகிய சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்ற ஊராகிய, நிறைந்த நீர் ஒடுகின்ற அரிசிலாற்றின் தென்கரையில் உள்ள திருக்கலய நல்லூரை, யாவரிடத்தும் நண்பாந் தன்மையையுடைய நல்லோராகிய சடையன், இசைஞானி என்பவர்க்கு மகனும், திருநாவலூருக்குத் தலைவனும் ஆகிய நம்பியாரூரன் விரும்பிப் பாடிய, இசை பொருந்திய பத்துப் பாடல்களாகிய இவற்றை அத்தலப் பெருமானிடத்து அன்பு செய்து நாள்தோறும் பாடவல்லவர்கள், துன்பமும், பாவமும் இலராவர்.

"பலி" என்றது பலியாக இடுதலும், ஏற்றலும் உடைய பொருளைக் குறித்தது. நண்பு – சிவன் பாலன்பு. இந்தப் பாடலில் நம்பிகள் தமது தந்தை, தாய், வயது (சிறுவன்), ஊர், பேர், பண்பு முதலிய எல்லாம் ஒரு சேரப் பெற வைத்த சிறப்பைக் காணலாம்.

## 17. திருநாவலூர்

(சுந்தரமூர்த்தி நாயனாரின் திரு அவதாரத்தலம். "நமக்கு ஊர்" என்று அவரே நிறைவுப் பாடலில் அருளியுள்ளார்).

**பண் : நட்டராகம்** **பதிக எண் : 17**

இது குறிஞ்சி என்னும் பெரும்பண்ணில் ஏழாந் திறமாகிய அரற்று என்னும் திறத்தின் புறநிலைப் பண்ணாக 62 என்ற எண் பெற்றுள்ளது. 62–ஆவது மேளம் சுபபந்துவராளியில் கிளைத்தது என்பார்கள். இது பாமர ரஞ்சகமான பண். எச்சரிக்கையாயில்லாவிட்டால் சாதாரி கலந்துவிடும் என்பார்கள். இதன் சுவை உவகையும், மருட்கையும். சம்பந்தரும் சுந்தரரும் இதைப் பாடியிருக்கிறார்கள். சம்பந்தர் 2.97–112, சுந்தரர் 17–30 ஆக 30 பதிகங்கள். இதற்கு கட்டளை 4. சம்பந்தர் இன்று நன்று நாளை நன்று. மிகவும் பிரசித்தமான என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே, சுந்தரர் நீளநினைந்தடியேன் என்று நெல்லை அகற்றுமாறு பாடிய பதிகம். "பொன்னார் மேனியனே", "சிம்மாந்து சிம்புளித்து" என்ற பதிகங்கள் இப்பண்ணுக்குரியவை. இது பகற்பண். இது பந்துவராளியிற் பாடப்படுமென்று சொல்வர். பந்துவராளி பழமையான இராகம். (வடநாட்டில் இப்போது ராமப்பிரிய என்று சொல்கிறார்கள்)

### நட்டராகப் பண்ணின் (இலக்கணம்)

மோனை சீர்தரவு முதலன தழுவிப்
பிரிய நட்புப் பெற்று வந்ததால்
நட்ட ராகம் என நவிலப் பெற்றது.

### பொருள்

அடிகளில் மோனை தழுவி வருதலும், சீர்கள் முறையாக ஒன்றோடு ஒன்று பொருந்தும் தன்மையுடன் பிரியத்துடன் கூடிய நட்பினைப் பெற்றும் வந்துள்ளதால் இது நட்ட ராகம் என்று சொல்லப் பெற்றது.

| மூர்த்தி | அருள்தரும் சுந்தராம்பிகை உடனமர் அருள்மிகு நாவலேசுவரர். | | |
|---|---|---|---|
| தல இருப்பிடம் | நடுநாட்டில் விழுப்புரத்துக்கும், உளுந்தூர்ப் பேட்டைக்கும் இடையில் பண்ருட்டிப் பாதையில் கெடில நதிக்கரையில் அமைந்து உள்ளது. | | |
| தல மரம் | நாவல் | | |
| தீர்த்தம் | கோமுகி, கெடிலம் | | |
| பாடியவர் | நம்பியாரூரர் | பதிகம் | 1 |

**167.** கோவலன் நான்முகன் வானவர்
கோனுங்குற் றேவல்செய்ய
மேவலர் முப்புரம் தீயெழு
வித்தவர் ஓரம்பினால்
ஏவல னார்வெண்ணெய் நல்லூரில்
வைத்தெனை ஆளுங்கொண்ட
நாவல னார்க்கிடம் ஆவது
நந்திரு நாவலூரே. 1

ஓர் அம்பினாலே பகைவரது திரிபுரத்தில் தீ எழுமாறு செய்தவரும், அதனால், 'அம்பு எய்தலில் வல்லவர்' எனப் புகழத்தக்க வராயினாரும், என்னைத் திருவெண்ணெய் நல்லூரில் கொண்டு போய் நிறுத்தி அடிமை யுங்கொண்ட வழக்கு வல்லவரும் ஆகிய இறைவருக்கு, 'திருமால், பிரமன், இந்திரன்' என்னும் மூவரும் வந்து சிறிய பணி விடைகளைச் செய்யுமாறு இடமாய் இருப்பது, நமது **திருநாவலூரே** ஆகும்.

கோவலன் – திருமால்.
மேவலர் – பகைவர்.
வெண்ணெய்நல்லூரில் வைத்தெனை ஆளுங்கொண்ட திருநாவலூரிலே எழுந்தருளிய இறைவனே புத்தூரில் வேதியராய் வந்து வழக்கிட்டு, நான் வன்மைகள் பேசவும் விடாது என்னைத் திருவெண்ணெய் நல்லூரிலே சபைமுன்னே கொண்டு வந்து வைத்து ஓலை காட்டி ஆளாகக் கொண்டருளியவன். "பித்தனென்றே பாடுவாய்" என்ற ஆணையின்படி பாடிய முதற் பதிகத்துக்குப்பின்" இன்னும் பல்லாறுலகினில் நம் புகழ் பாடு" என்ற ஆணையின்படி பாடியது இதுவே முதல் பதிகம். நம்பிகள் பாடிய தேவாரப் பதிகங்களில் இரண்டாவது பதிகம். தடுத்தாட்கொண்ட தொடக்கத்தில் பாடிய பதிகமாகையில் அவ்வரலாறு முழுவதையும் இப்பதிகத்தில் சொல்லியிருப்பதை ஓதி மகிழலாம். ஆரூரரின் வாழ்க்கைக்கு அகச்சான்றுகள் இப்பதிகத்தில் உள்ளன.

**168.** தன்மையி னால்அடி யேனைத்தாம்
ஆட்கொண்ட நாட்சபைமுன்
வன்மைகள் பேசிட வன்றொண்டன்
என்பதோர் **வாழ்வு**தந்தார்
புன்மைகள் பேசவும் பொன்னைத்தந்
தென்னைப்போ கம்புணர்த்த
நன்மையி னார்க்கிடம் ஆவது
நந்திரு நாவலூரே. 2

தமக்கு இயல்பாக உள்ள 'பேரருளுடைமை' என்னுங் குணத்தினால், என் பிழையைத் திருவுளங்கொள்ளாது, அடிமை என்பது ஒன்றையே கருதி, என்னைத் தாம் ஆட்கொள்ள வந்த அந்நாளின்கண் பலர் கூடியிருந்த சபை முன்பு தம்மை என் பேதைமையால் வசைச்சொற்கள் பல சொல்லவும் அவற்றை இசைச்சொற்களாகவே மகிழ்ந்தேற்று எனக்கு, 'வன்றொண்டன்' என்பதொரு பதவியைத் தந்தவரும், பின்னரும் நான் கெழுதகைமையை அளவின்றிக்கொண்டு பல வசைப்பாடல்களைப் பாட அவற்றிற்கும் மகிழ்ந்து, எனக்கு வேண்டுமளவும் பொன்னைக் கொடுத்துப் போகத்தையும் இடையூறின்றி எய்துவித்த நன்றிச் செயலை உடையவரும் ஆகிய இறைவர்க்கு இடமாய் இருப்பது, நமது **திருநாவலூரே** ஆகும்.

**169.** வேகங்கொண் டோடிய வெள்விடை
ஏறியோர் மெல்லியலை
ஆகங்கொண் டார்வெண்ணெய் நல்லூரில்
வைத்தெனை ஆளுங்கொண்டார்
போகங்கொண் டார்கடற் கோடியின்
மோடியைப் பூண்பதாக
நாகங்கொண் டார்க்கிடம் ஆவது
நந்திரு நாவலூரே. 3

கடற்கோடி – கோடிக்கரை
உமையம்மை இறைவரது சத்தியேயாதலை "ஆகங் கொண்டார்" என்பதனாலும், பிற தெய்வங்கள் அச்சத்தி பதியப் பெற்றனவாதலை, "போகங்கொண்டார்" என்பதனாலும் அருளிச் செய்தார். மோடி – துர்க்கை.

விரைவைக் கொண்டு ஓடுகின்ற வெள்ளிய விடையை ஊர்பவரும், மெல்லிய இயல்பினை உடையாளாகிய மங்கை ஒருத்தியைத் திருமேனியிற் கொண்டவரும், என்னைத் திருவெண்ணெய்நல்லூரிற் கொண்டு போய் நிறுத்தி அடிமையுங் கொண்டவரும், தென்கடல் முனையில் உள்ள கொற்றவையைக் கூடி இன்பங் கொண்டவரும், பாம்பை அணியும் பொருளாகக் கொண்டவரும் ஆகிய இறைவர்க்கு இடமாய் இருப்பது, நமது **திருநாவலூரே** ஆகும்.

**170.** அஞ்சுங்கொண் டாடுவர் ஆவினிற்
சேவினை ஆட்சிகொண்டார்
தஞ்சங்கொண் டார்அடிச் சண்டியைத்
தாமென வைத்துகந்தார்
நெஞ்சங்கொண் டார்வெண்ணெய் நல்லூரில்
வைத்தெனை ஆளுங்கொண்டு
நஞ்சங்கொண் டார்க்கிடம் ஆவது
நந்திரு நாவலூரே. 4

"சேவினை ஆட்சிகொண்டார்" என்றது உயிர்களை அடிமையாக உடையவர் என்பதைக் குறித்ததாம்.

ஆனிடத்துத் தோன்றுகின்ற ஐந்து பொருள்களை ஆடுதல் செய்பவரும், ஆனேற்றையே ஆளப்படும் பொருளாகக் கொண்டவரும், தம் அடியையடைந்த சண்டேசுவர நாயனாரை அடைக்கலப் பொருளாகக் கொண்டு அவரைத் தம்மோடு ஒப்ப வைத்து மகிழ்ந்தவரும், என்னைத் திருவெண்ணெய்நல்லூரிற் கொண்டுபோய் நிறுத்தி அடிமையும் கொண்டு, என் நெஞ்சத்தை ஈர்த்துக்கொண்டவரும், நஞ்சத்தை உண்டவருமாகிய இறைவர்க்கு இடமாய் இருப்பது, நமது **திருநாவலூரே** ஆகும்.

**171.** உம்பரார் கோனைத்திண் தோள்முரித்
தார்உரித் தார்களிற்றைச்
செம்பொனார் தீவண்ணர் தூவண்ண
நீற்றர்ஓர் ஆவணத்தால்
எம்பிரா னார்வெண்ணெய் நல்லூரில்
வைத்தெனை ஆளுங்கொண்ட
நம்பிரா னார்க்கிடம் ஆவது
நந்திரு நாவலூரே. 5

பதிக மகுடம் – வெண்ணெய்நல்லூரில் வைத்தெனை ஆளுங்கொண்டார்க்கிடமாவது நந்திருநாவலூரே.

தேவர்கட்கு அரசனாகிய இந்திரனைத் தோள் முரித்தவரும், யானையை உரித்தவரும், சிவந்த பொன்போல்வதும், நெருப்புப் போல்வதும் ஆகிய நிறத்தை உடையவரும், வெள்ளிய நிறத்தையுடைய நீற்றை அணிந்தவரும், என்போலும் அடியவர்கட்குத் தலைவரும், ஓர் ஆவணத்தினால் என்னைத் திருவெண்ணெய் நல்லூரில் கொண்டு போய் நிறுத்தி அடிமையும் கொண்ட, நம் அனைவர்க்கும் தலைவரும் ஆகிய இறைவருக்கு இடமாயிருப்பது, நமது **திருநாவலூரேயாகும்.**

172. கோட்டங்கொண் டார்குட மூக்கிலுங்
கோவலுங் கோத்திட்டையும்
வேட்டங்கொண் டார்வெண்ணெய் நல்லூரில்
வைத்தெனை ஆளுங்கொண்டார்
ஆட்டங்கொண் டார்தில்லைச் சிற்றம்
பலத்தே அருக்கனைமுன்
நாட்டங்கொண் டார்க்கிடம் ஆவது
நந்திரு நாவலூரே. 6

கோட்டம் – கோயில்.

திருக்குடமூக்கு (கும்பகோணம்) திருக்கோவலூர், திருப்பரங்குன்றம் இத்தலங்களைக் கோயிலாகக் கொண்டவரும், வேட உருவம் கொண்டு வேட்டையை மேற்கொண்டவரும், என்னைத் திருவெண்ணெய் நல்லூரில் கொண்டுபோய் நிறுத்தி அடிமையும் கொண்டவரும், தில்லைத் திருச்சிற்றம்பலத்தில் நடனமாடுதலை மேற்கொண்டவரும், சூரியனை ('பகன்' என்பவனை) கண்பறித்தவரும் ஆகிய இறைவர்க்கு இடமாய் இருப்பது நமது **திருநாவலூரே** ஆகும்.

173. தாயவ ளாய்த்தந்தை ஆகிச்
சாதல் பிறத்தலின்றிப்
போயக லாமைத்தன் பொன்னடிக்
கென்னைப் பொருந்தவைத்த
வேயவ னார்வெண்ணெய் நல்லூரில்
வைத்தெனை ஆளுங்கொண்ட
நாயக னார்க்கிடம் ஆவது
நந்திரு நாவலூரே. 7

எனக்குத் தாயாகியும், தந்தையாகியும் இறத்தல் பிறத்தல்கள் இல்லாதவாறு என்னைத் தமது பொன் போலும் திருவடிக்கண் அகலாதபடி இருக்க வைத்த, மூங்கில் இடத்தவரும், என்னைத் திருவெண்ணெய் நல்லூரில் கொண்டுபோய் நிறுத்தி அடிமையும் கொண்ட தலைவரும் ஆகிய இறைவருக்கு இடமாயிருப்பது, நமது **திருநாவலூரே** ஆகும்.

174. வாயாடி மாமறை ஓதிஓர்
வேதிய னாகிவந்து
தீயாடி யார்சினக் கேழலின்
பின்சென்றோர் வேடுவனாய்
வேயாடி யார்வெண்ணெய் நல்லூரில்
வைத்தெனை ஆளுங்கொண்ட
நாயாடி யார்க்கிடம் ஆவது
நந்திரு நாவலூரே. 8

"நா" என்பது தலைமைப் பண்பை உணர்த்தும் உரிச்சொல். அதனடியாகப் பிறந்தவை நாதன், நாயகன், நாயன், நாச்சி என்ற சொற்கள்.
நா அடியார் – தலைமையை ஆள்பவர்.

தீயின்கண் நின்று ஆடுபவரும், சினம் பொருந்திய ஒரு பன்றியின் பின் வேடுவராய்ச் சென்று வில்தொழிலைப் புரிந்தவரும், பெருமை பொருந்திய வேதத்தை ஓதிக்கொண்டு வேதிய வடிவாய் வந்து சொல்லாடி என்னைத் திருவெண்ணெய்நல்லூரில் கொண்டு போய் நிறுத்தி அடிமையும் கொண்ட தலைவர் ஆகிய இறைவருக்கு இடமாயிருப்பது, நமது **திருநாவலூரே** ஆகும்.

175. படமாடு பாம்பணை யானுக்கும்
பாவைநல் லாள்தனக்கும்
வடமாடு மால்விடை ஏற்றுக்கும்
பாகனாய் வந்தொருநாள்
இடமாடி யார்வெண்ணெய் நல்லூரில்
வைத்தெனை ஆளுங்கொண்ட
நடமாடி யார்க்கிடம் ஆவது
நந்திரு நாவலூரே. 9

பாகன் – கணவன் (பாகத்தை உடையவன்) – நடத்துபவன் என்று இருவகையாகப் பொருள் கொள்ளலாம்.

படமாடுகின்ற, பாம்பாகிய படுக்கையையுடைய திருமாலுக்கும், பாவை போலும் நல்லாளாகிய உமாதேவிக்கும், மணிவடம் அசைகின்ற ஆனேற்றுக்கும், 'பாகன்' எனப்படும் தன்மையுடையவராய், ஒருநாள் என்னிடம் வந்து, தம் இடமாக ஆளப்பட்டுப் பொருந்தியுள்ள திருவெண்ணெய் நல்லூரில் என்னைக் கொண்டு போய் நிறுத்தி அடிமையும் கொண்ட, நடனமாடும் பெருமானாராகிய இறைவற்கு இடமாயிருப்பது, நமது **திருநாவலூரே** ஆகும்.

176. மிடுக்குண்டென் றோடியோர் வெற்பெடுத்
தான்வலி யைநெரித்தார்
அடக்கங்கொண் டாவணங் காட்டிநல்
வெண்ணையூர் ஆளுங்கொண்டார்
தடுக்கவொண் ணாததோர் வேழத்
தினையுரித் திட்டுமையை
நடுக்கங்கண் டார்க்கிடம் ஆவது
நந்திரு நாவலூரே. 10

தனக்கு வலிமை உண்டு என்று செருக்கி விரைந்து சென்று தமது கயிலை மலையைப் பெயர்த்தவனாகிய இராவணனது வலிமையை நெரித்து அழித்தவரும், மூல ஆவணத்தை மறைவாக வைத்திருந்து அதனை நடுவுநிலையாளர் உள்ள திருவெண்ணெய் நல்லூரில் காட்டி என்னை அடிமையும் கொண்டவரும், தடுக்கவொண்ணாத வலிமை யுடைய யானை ஒன்றினை உரித்து, உமையையும் நடுங்கச் செய்தவருமாகிய இறைவற்கு இடமாயிருப்பது நமது **திருநாவலூரே** ஆகும்.

177. நாதனுக் கூர்நமக் கூர்நர
சிங்க முனையரையன்
ஆதரித் தீசனுக் காட்செயும்
ஊர்அணி நாவலூர்என்
றோதநற் றக்கவன் றொண்டன்ஆ
ரூரன் உரைத்ததமிழ்
காதலித் துங்கற்றுங் கேட்பவர்
தம்வினை கட்டறுமே. 11

நரசிங்கமுனையரையர் – நாயனாரை வளர்த்த மன்னர் சுவாமிகள். இப்பதிகத்தில் தமது வரலாற்றை இனிது விளங்க வைத்து அருளியுள்ளார்.

முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானுக்குரிய ஊரும், நமக்கு உரிய ஊரும், நரசிங்கமுனை யரையன் – அப்பெருமானுக்கு, விரும்பித் தொண்டு செய்யும் ஊரும் அழகிய **திருநாவலூரே** என்று அனைவரும் உணர்ந்து பாடுமாறு, நல்ல தகுதியை உடையவனும், 'வன்றொண்டன்' என்னும் பெயரைப் பெற்றவனுமாகிய நம்பியாரூரன் பாடிய இத் தமிழ்ப்பாடலை விரும்பியும், கற்றும் கேட்பவரது வினைகள் வலியற்று ஒழியும்.

## 18. திருவேள்விக்குடியும் திருத்துருத்தியும்

(மூப்பதும் இல்லை)

பண் : நட்டராகம் பதிக எண் : 18

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | வேள்விக்குடி– அருள்தரும் பரிமள சுகந்த நாயகி உடனமர் அருள்மிகு கல்யாண சுந்தரர். துருத்தி – அருள்தரும் மிருதுமுகிழாம்பிகை உடனமர் அருள்மிகு உத்தரவேதீசுவரர். | | |
| **தல இருப்பிடம்** | சோழநாட்டில் மயிலாடுதுறை – குத்தாலம் சாலையில் எதிரெதிராய்க் காவிரியின் இருகரையிலும் உள்ளன. தென்கரை துருத்தி. வடகரை வேள்விக் குடி இரண்டும் சேர்ந்து ஒருதலமாகக் கருதப்படும். | | |
| **தல மரம்** | வேள்விக்குடி – வில்வம். துருத்தி – ஆத்தி. | | |
| **தீர்த்தம்** | வேள்விக்குடி – மங்களதீர்த்தம். துருத்தி – காவிரி, பத்ம, சுந்தர தீர்த்தம். | | |
| **பாடியவர்** | வேள்விக்குடி – அப்பர், நம்பியாரூரர்<br>துருத்தி – மூவர் | **பதிகங்கள்** | 2<br>3 |

178. மூப்பதும் இல்லை பிறப்பதும்
இல்லை இறப்பதில்லை
சேர்ப்பது காட்டகத் தூரினு
மாகச்சிந் திக்கினல்லால்
காப்பது வேள்விக் குடிதண்
துருத்திஎங் கோன்அரைமேல்
ஆர்ப்பது நாகம் அறிந்தோமேல்
நாம்இவர்க் காட்படோமே. 1

ஆராயுங்கால் எங்கள் தலைவர், பிறத்தலும் இல்லை; பின்பு வளர்ந்து முதுமை அடைதலும் இல்லை; முடிவில் இறந்தொழிதலுமில்லை; உறைவிடம் காட்டிடத்துள்ளது; அதுவன்றி ஊர்களுள் தமக்கு உரித்தாகக் காப்பது திருவேள்விக்குடியும், தண்ணிய திருத்துருத்தியும், அன்றியும் அரைக்கண் இறுகக் கட்டுவது பாம்பு; இவற்றை முன்பே அறிந்தோமாயின், இவர்க்கு நாம் ஆட்படாதே யிருப்போம். இவற்றை அறிந்தோமாயின், இவர்க்கு நாம் ஆட்படாதொழிவேமோ!

பகலிடம் – புகலிடம் – துருத்தி
இரவிடத்துறைவர் வேள்விக் குடியே.
நிந்தைத்துதியாகப் பாடித் துதித்தது.
இறைவர் யார் ? பிறத்தல், பின்பு வளர்ந்து மூத்து இறத்தல் இல்லாதவர் இறைவர். உயிர்த்தொகுதி யார் ? பிறந்து, வளர்ந்து, மூத்து, இறக்கின்ற நாமெல்லாம் உயிர்த்தொகுதி. பிறப்பிறப்பு இல்லாத இறைவர் இவரே என்பதை நன்கு அறிந்தோம். ஆதலின் நாம் இவருக்கு ஆட்படாது ஒழிதல் எவ்வாறு ? எனக் கொள்ள வேண்டும்.
இவருக்கு ஆட்படாதார் அவ்வாறு ஒழிதற்குக் காரணம் அவரை மறந்து நிற்கும் அறியாமையே. அவ்வறியாமை நீங்கிய வழி இவரை ஆட்படுதற்கு யாதொரு இடையூறும் இல்லையாம். "பிறப்பிறப்பாதி உயிர்க்குணமின்மையின்" அரதத்தர் ஆட்படுமாறு சொல்லி நிந்தைத்து தியாகப் பாடித் துய்த்தது. ஆர்ப்பது – இறுக்கிக் கட்டுவது. இதே திருமுறையில் 74ஆவது பதிகம் திருத்துருத்தியும் திருவேள்விக்குடியும் என்று அமைந்திருப்பதை அடியார்கள் படித்து மகிழலாம்.

179. கட்டக்காட் டின்னட மாடுவ
ரியாவர்க்கும் காட்சியொண்ணார்
சுட்டவெண் ணீறணிந் தாடுவர்
பாடுவர் தூயநெய்யால்
வட்டக்குண் டத்தில் எரிவளர்த்
தோம்பி மறைபயில்வார்
அட்டக்கொண் டுண்ப தறிந்தோமேல்
நாம்இவர்க் காட்படோமே. 2

கட்டக்காடு – வறிய மயானம். காட்சியொண்ணார் – எட்டாநிலை. தூயநெய் – பசுநெய். வேள்விக்குரியது. வட்ட குண்டம் – ஓம குண்டம். குடமுழுக்கு விழாக்களில் வட்டம், சதுரம், அரைவட்டம், யோனி என்ற பல வடிவங்களில் ஓம குண்டங்களைக் காணலாம். அட்டம் கொண்டு – விரும்பி.

எங்கள் தலைவர், இடரைத் தரும் காட்டிலே நடனம் ஆடுவார்; யாராலும் காண்பதற்கு அரியவர்; சுடப்பட்ட வெள்ளிய சாம்பலைப் பூசிக் கொண்டு மகிழ்ச்சியாக ஆடல் பாடல்களைச் செய்வார்; வேதத்தை பலகாலும் பயில்கின்றவர்களாகிய அந்தணர்கள், வட்டமாகிய குழியில், தூயதாகிய நெய்யினால் எரியை வளர்த்துப் போற்றி, அதன்கண் பாகம் செய்த பொருள்களை ஏற்று உண்பார்; இவற்றையெல்லாம் அறிந்தோமேல் நாம் இவர்க்கு ஆட்படோமே!

180. பேருமோர் ஆயிரம் பேருடை
யார்பெண்ணோ டாணுமல்லர்
ஊருமதொற்றியூர் மற்றையூர்
பெற்றவா நாமறியோம்
காருங் கருங்கடல் நஞ்சமு
துண்டுகண் டங்கறுத்தார்க்
காரம்பாம் பாவ தறிந்தோமேல்
நாம்இவர்க் காட்படோமே. 3

பலபேருடையவர் – சொந்த ஊர் இல்லாதவர் – இகழ்ச்சிக் குறிப்பு. காரும் – மைநிறம்.

எங்கள் தலைவர், பெயரும் தமக்குரியனவாக ஆயிரம் உடையவர்; இவர் பெண்ணும் அல்லர்; ஆணும் அல்லர்; இவர்க்கு ஊரும் ஒற்றியூரே; அதுவன்றி வேறோர் ஊரை உடையராதலை நாம் அறிந்திலோம்; இருண்ட கரிய கடலில் தோன்றிய நஞ்சினை உணவாக உண்டு, கண்டம் கறுப்பாயினார்; இவர்க்கு ஆரமாவது, பாம்பே; இவற்றையெல்லாம் அறிந்தோமேல், நாம் இவர்க்கு ஆட்படோமே!

181. ஏனக்கொம் பும்மிள வாமையும்
பூண்டங்கோர் ஏறுமேறிக்
கானக்காட் டிற்றொண்டர் கண்டன
சொல்லியுங் காமுறவே
மானைத்தோல் ஒன்றுடுத் துப்புலித்
தோலல் பியற்குமிட்டி
யானைத்தோல் போர்ப்ப தறிந்தோமேல்
நாம்இவர்க் காட்படோமே. 4

கண்டன சொல்லி – தாம் கண்டவாறும், மனம் போனவாறும் – நாம் வழக்கில் சொல்லும் இகழ்ச்சிக் குறிப்பு. மான், புலி, யானைத்தோல் மூன்றையும் ஒரே பாடலில் சுட்டுகிறார். பியல் – பிடரி, தோள்.

எங்கள் தலைவர் பன்றியின் கொம்பையும் இளமையான ஆமையின் ஓட்டினையும் அணிந்து, ஒற்றை எருதின்மேல் ஏறுபவராய், தம்மை அடியார்கள் காட்டில் கண்ட கோலங்களையெல்லாம் பலபடியாக எடுத்துச் சொல்லிய பின்பும், விருப்பம் உண்டாக, மானினது அழகிய தோல் ஒன்றை அரையில் உடுத்து, தோளின்கண்ணும் புலித்தோலை இட்டு, உடம்பின்மேல் யானைத் தோலைப் போர்த்துக் கொள்பவர். இவற்றையெல்லாம் அறிந்தோமேல், நாம் இவர்க்கு ஆட்படோமே!

182. ஊட்டிக்கொண் டுண்பதோர் ஊணிலர்
ஊரிடு பிச்சையல்லால்
பூட்டிக்கொண் டேற்றினை ஏறுவர்
ஏறியொர் பூதந்தம்பால்
பாட்டிக்கொண் டுண்பவர் பாழிதொ
றும்பல பாம்புபற்றி
ஆட்டிக்கொண் டுண்ப தறிந்தோமேல்
நாம்இவர்க் காட்படோமே. 5

பாம்பு சுற்றி ஆட்டுக் கொண்டு உண்பது – பாம்பாட்டிப் பிழைக்கும் தொழில். பாட்டிக் கொண்டு – பாடச் செய்து கொண்டு.

எங்கள் தலைவர் நாவிற்குச் சுவைகள் பலவற்றை ஊட்டி உண்பதற்கு, ஊரவர் இடுகின்ற பிச்சையையன்றி மற்றோர் உணவையும் இலர். ஒற்றை எருதைக் கயிற்றிற் கட்டி வைத்துக் கொண்டு, அதன் மேல் ஏறிச் செல்வர். சிறிய பூதங்கள் தம்மிடத்தில் பாட்டு ஈதலைக் கேட்டு நின்று இன்பம் நுகர்பவராவர். புற்றுக்கள் தோறும் சென்று பல பாம்புகளைப் பிடித்து ஆட்டிப் பிழைப்பர். இவற்றையெல்லாம் அறிந்தோமேல், நாம் இவர்க்கு ஆட்படோமே!

183. குறவனார் தம்மகள் தம்மக
னார்மண வாட்டிகொல்லை
மறவனா ராய்அங்கோர் பன்றிப்பின்
போவது மாயங்கண்டீர்
இறைவனார் ஆதியார் சோதியா
ராய்அங்கோர் சோர்வுபடா
அறவனா ராவ தறிந்தோமேல்
நாம்இவர்க் காட்படோமே. 6

மறவன் – வேடுவன். மறவனார் – குறவனார் – ஆர் விகுதிகள் இகழ்ச்சிக் குறிப்பு.

எங்கள் தலைவர் தம் புதல்வர் முருகனுக்கு மனைவி, ஒரு குறவர் மகள்; இவரும் கொல்லும் தொழிலையுடைய வேடுவராய் முன்பு ஒரு பன்றிப்பின் சென்றார்; இவை மாயமாம். இவர், இப்பெற்றியரான இறைவரும், முன்னவரும், ஒளி வடிவினரும், அறவரும் ஆவதை அறிந்தோமேல், நாம் இவர்க்கு ஆட்படோமே!

184. பித்தரை ஒத்தொரு பெற்றியர்
நற்றவைஎன் னைப்பெற்ற
முற்றவை தம்மனை தந்தைக்குந்
தவ்வைக்குந் தம்பிரானார்
செத்தவர் தந்தலை யிற்பலி
கொள்வதே செல்வமாகி
அத்தவ மாவ தறிந்தோமேல்
நாம்இவர்க் காட்படோமே. 7

என்னைப் பெற்ற நற்றாயும், வயது முதிர்ந்த அவள் தாயும் இவ்விருவர்க்கும் அன்னை, தந்தை, தமக்கை என்பவரும் ஆகிய எல்லோர்க்கும் இறைவராய் உள்ள இவர், பித்தரைப் போன்ற ஒரு தன்மை உடையராய் இருக்கின்றார்; அன்றியும், இறந்தவர் தலையோட்டில் பிச்சை ஏற்பதே செல்வமாக, அன்னதொரு தவமுடையராதலை அறிந்தோமேல், நாம் இவர்க்கு ஆட்படோமே!

ஒருபெற்றியர் – சொல்லலாகாத பித்துப் போன்ற ஒரு வகை நிலை. தவ்வை – தாய்.
முற்றவை தம்மனை – பாட்டன், பாட்டி. நற்றவை – நல்ல அன்னை.

**185.** உம்பரான் ஊழியான் ஆழியான்
ஓங்கி மலர்உறைவான்
தம்பர மல்லவர் சிந்திப்
பவர்தடு மாற்றறுப்பார்
எம்பர மல்லவர் என்னெஞ்சத்
துள்ளும் இருப்பதாகி
அம்பர மாவத றிந்தோமேல்
நாம்இவர்க் காட்படோமே. 8

இந்திரன், உருத்திரன், மால், அயன் என்னும் இவர்கள் அளவில் உள்ளவரல்லர் என்றும், 'தம்மை நினைப்பவரது மனக்கவலையைப் போக்குபவர் எம்மளவு அல்லவர்' என்றும் சொல்லப்படுகின்ற இவர், என் மனத்திலும் இருத்தலுடையவராய் வேறு வெளியாதலை அறிந்தோமேல், நாம் இவர்க்கு ஆட்படோமே!

அம்பரம் – அருவப் பொருள். பரவெளி.

**186.** இந்திரனுக்கும் இராவண
னுக்கும் அருள்புரிந்தார்
மந்திரம் ஓதுவர் மாமறை
பாடுவர் மான்மறியர்
சிந்துரக் கண்ணனும் நான்முக
னும்முட னாய்த்தனியே
அந்தரஞ் செல்வ தறிந்தோமேல்
நாம்இவர்க் காட்படோமே. 9

எங்கள் தலைவர் தேவர் கோமானாகிய இந்திரனுக்கும், அரக்கர் கோமானாகிய இராவணனுக்கும் அருள்புரிந்தார். அந்தணர்க்குரிய மந்திரம் ஓதுதல், மறைபாடுதல் என்பனவற்றையும், வேடர்க்குரிய மான்கன்றைப் பிடித்தலையும் உடையவர். மால், அயன் என்னும் இருவரும் உடனாயிருப்ப, அவரொடு நிற்றலேயன்றி, தாம் மட்டும் தனியே உயர்ந்தும் செல்வர். இவற்றையெல்லாம் அறிந்தோமேல், நாம் இவர்க்கு ஆட்படோமே!

சிந்துரக் கண்ணன் – செங்கண்மால்
அந்தரஞ்செல்வது – தேடத்தேட அப்பால் செல்வது.

**187.** கூடலர் மன்னன் குலநாவ
லூர்கோன் நலத்தமிழைப்
பாடவல் லபர மன்னடி
யார்க்கடி மைவழுவா
நாடவல் லதொண்டன் ஆரூரன்
ஆட்படு மாறுசொல்லிப்
பாடவல் லார்பர லோகத்
திருப்பது பண்டமன்றே. 10

பகைவர்க்கு அவர் வணங்கும் அரசனும், மேன்மை பொருந்திய திருநாவலூர்க்குத் தலைவனும், நன்மையையுடைய தமிழைப் பாடவல்ல சிவனடியார்க்கு அடிமை வழுவாது செய்யுமாற்றால் அப்பெருமானை அடைய எண்ணுகின்றவனும் ஆகிய நம்பியாரூரன், தன் தலைவனுக்கு ஆட்படுதல் இவ்வாறெனச் சொல்லி இப்பதிகத்தைப் பாட வல்லவர். மேலான உலகத்தில் சென்று தங்குதல் பொருளன்று. (மிக எளிதாம்)

கூடலர் மன்னன் – பகைவரையும் ஆட்படுத்தி ஆளும் தலைவன். பண்டம் – உறுதி.
இப்பதிகம் நம்பிகள் இத்தலத்தை முதன்முறை வழிபட்ட போது பாடியது. இரண்டாம் முறை வரும் போது காந்தாரப் பண்ணில் மின்னுமா மேகங்கள் பாடித் துருத்திக் குளத்தில் நோய் நீங்கப் பெறுகிறார்.

## 19. திருநின்றியூர்

பண் : நட்டராகம் 	பதிக எண் : 19

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்மிகு மகாலட்சுமிநாதர் – அருள்தரும் உலகநாயகி | | |
| **தல இருப்பிடம்** | மயிலாடுதுறை – சீர்காழி நெடுஞ்சாலையில் மயிலாடுதுறையிலிருந்து 6 கி.மீ. தூரத்தில் உள்ளது சோழநாடு. காவிரி வடகரை. | | |
| **தல மரம்** | விளாமரம் | | |
| **தீர்த்தம்** | இலட்சுமி தீர்த்தம் | | |
| **பாடியவர்** | மூவர் | **பதிகங்கள்** | 4 |

188. அற்றவ னாரடி யார்தமக்
 காயிழை பங்கினராம்
பற்றவ னாரெம் பராபரர்
 என்று பலர்விரும்பும்
கொற்றவ னார்குறு காதவர்
 ஊர்நெடு வெஞ்சரத்தால்
செற்றவ னார்க்கிட மாவது
 நந்திரு நின்றியூரே. 1

பிற பற்றுக்களின்றித் தம் அடியையே பற்றும் அரிய அடியவர்க்குத் தாமும் அவர்க்கு அருளுதலையன்றி வேறு செயலற்றவராய் இருப்பவரும், பெண்ணொரு பாகத்தராகின்ற பற்றினை உடையவரும், 'எம் இறைவர்' என்று பலராலும் விரும்பப்படுகின்ற தலைவரும், பகைவருடைய ஊரினை, பெரிய, கொடிய அம்பினால் அழித்தவரும் ஆகிய இறைவருக்கு இடமாய் நிற்பது நமது திருநின்றியூரே.

அற்றவனார் – அடியார்களுக்குப் பற்றுகளை ஒழித்தவர்.
பற்றவனார் – அடியார்களால் பற்றக் கொண்டவர்
கொற்றவனார் – இறைவர் என்று பலர் விரும்பும் தலைவர்.
செற்றவனார் – பகைவர்களை வென்றவர்

189. வாசத்தி னார்மலர்க் கொன்றையுள்
 ளார்வடி வார்ந்தநீறு
பூசத்தி னார்புக லிந்நகர்
 போற்றும்எம் புண்ணியத்தார்
நேசத்தி னால்என்னை ஆளுங்கொண்
 டார்நெடு மாகடல்சூழ்
தேசத்தி னார்க்கிட மாவது
 நந்திரு நின்றியூரே. 2

மணம் நிறைந்த கொன்றை மாலையை அணிந்தவரும், அழகிய திருநீற்றைப் பூசுதலுடையவரும், சீகாழிப் பதியை உறைவிடமாகக் கொண்டு பாதுகாக்கின்ற புண்ணிய வடிவினரும், அருள் காரணமாக என்னை ஆளாகவும் கொண்டவரும், நீண்ட பெரிய கடல் சூழ்ந்த உலகத்தை உடையவரும் ஆகிய இறைவருக்கு இடமாய் நிற்பது, நமது திருநின்றியூரே.

நின்றியூர் – திருமகள் வழிபட்டு நிலைபேறு எய்திய தலம்.

**190.** அங்கையின் மூவிலை வேலர்
அமரர் அடிபரவச்
சங்கையை நீங்க அருளித்
தடங்கடல் நஞ்சமுண்டார்
மங்கையொர் பாகர் மகிழ்ந்த
இடம்வளம் மல்குபுனற்
செங்கயல் பாயும் வயல்பொலி
யுந்திரு நின்றியூரே. 3

அகங்கையில் மூவிலை வேலை (சூலத்தை) உடையவரும், தேவர்கள் தம் திருவடிகளைத் துதிக்க, அவர்கள் தம் மனக்கலக்கத்தை நீங்குமாறு அருள் சுரந்து, பெரிய கடலினின்றும் தோன்றிய நஞ்சினை உண்டவரும் ஆகிய இறைவர், உமாதேவியை ஒரு பாகத்தில் மகிழ்ச்சியுடன் வைத்து எழுந்தருளியிருக்கின்ற இடம், வளப்பம் நிறைந்த மிக்க நீரின் கண் செவ்விய கயல்கள் துள்ளுகின்ற வயல்கள் விளங்கும் திருநின்றியூரே.

**191.** ஆறுகந் தார்அங்கம் நான்மறை
யாள்ளங்கு மாகிஅடல்
ஏறுகந் தார்இசை ஏழுகந்
தார்முடிக் கங்கைதன்னை
வேறுகந் தார்விரி நூலுகந்
தார்பரி சாந்தமதா
நீறுகந் தார்உறை யும்மிட
மாந்திரு நின்றியூரே. 4

உகத்தல் பலவும் அவற்றின் காரியத்தைத் தோற்றுவித்தன.
பொதுவாக அருள்புரிதல் – உமையம்மையை இடப் பாகம் வைத்தல்.
சிறப்பாக அருள்புரிதல் – கங்கையை முடியில் தாங்கி பகீரதனுக்கு அருளுதல்.
பரிசாந்தம் – உயர்ந்த வாசனைச் சாந்து.

வேதத்தின் ஆறு அங்கங்களை விரும்பிச் செய்தவரும், நான்கு வேதங்களையும் உடையவரும், எவ்விடத்தும் நிறைந்து நின்று, வெல்லுதலை உடைய எருதை விரும்பி ஏறுபவரும், ஏழிசைகளையும் விரும்பிக் கேட்பவரும், கங்காதேவியைச் சிறப்பாக விரும்பித் தலையில் மறைத்து வைத்திருப்பவரும், அகன்ற முப்புரி நூலை விரும்பி அணிபவரும், பூசிக்கொள்கின்ற சாந்தமாகத் திருநீற்றை விரும்புகின்றவரும் ஆகிய இறைவர் எழுந்தருளியிருக்கின்ற இடம் திருநின்றியூரே.

**192.** வஞ்சங்கொண் டார்மனஞ் சேரகில்
லார்நறு நெய்தயிர்பால்
அஞ்சுங்கொண் டாடிய வேட்கையி
னார்அதி கைப்பதியே
தஞ்சங்கொண் டார்தமக்கென்றும்
இருக்கை சரணடைந்தார்
நெஞ்சங்கொண் டார்க்கிட மாவது
நந்திரு நின்றியூரே. 5

வஞ்சனையை உடையவரது மனத்திற் சேராதவரும், 'நறுநெய், தயிர், பால்' முதலிய ஆனஞ்சினை ஈட்டிக் கொண்டு முழுகுகின்ற பெருவிருப்புடையவரும், திருவதிகைப் பதியினையே தமக்கு என்றும் இருக்கையாகும்படி அதனைத் தஞ்சமாகக் கொண்டவரும், தம்மையே புகலிடமாக அடைந்தவரது உள்ளத்தைக் காணியாகக் கொண்டவரும் ஆகிய இறைவர்க்கு இடமாய் நிற்பது நமது திருநின்றியூரே.

| | | | |
|---|---|---|---|
| 193. | ஆர்த்தவர் ஆடர வம்மரை<br>மேற்புலி ஈருரிவை<br>போர்த்தவர் ஆனையின் தோலுடல்<br>வெம்புலால் கையகலப்<br>பார்த்தவர் இன்னுயிர் பார்படைத்<br>தான்சிரம் அஞ்சிலொன்றைச்<br>சேர்த்தவ ருக்குறை யும்மிட<br>மாந்திரு நின்றியூரே. | 6 | அரையில் புலியினது பசுந்தோலையும், ஆடுகின்ற பாம்பையும் கட்டியவரும், உடம்பில் யானையின் தோலைப் போர்த்தவரும், அவற்றால் தம்மிடத்துத் தீய புலால் நாற்றம் வீசாதவாறு செய்து கொண்டவரும், பூமியில் இனிய உயிர்களைப் படைத்தவனாகிய பிரமதேவனது தலைகள் ஐந்தில் ஒன்றைத் தம் கையில் வைத்துக் கொண்டவரும் ஆகிய இறைவருக்கு இடம் திருநின்றியூரே. |
| 194. | தலையிடை யார்பலி சென்றகந்<br>தோறுந் திரிந்த செல்வர்<br>மலையுடை யாள்ஒரு பாகம்வைத்<br>தார்கற் றுதைந்தநன்னீர்<br>அலையுடை யார்சடை எட்டுஞ்<br>சுழலு அருநடஞ்செய்<br>நிலையுடை யார்உறை யும்மிட<br>மாந்திரு நின்றியூரே. | 7 | தலை ஓட்டிற் பொருந்துகின்ற பிச்சைக்குச் சென்று இல்லங்கள் தோறும் திரிகின்ற தன்மையை உடைய செல்வரும் மலையைப் பிறந்த இடமாக உடையவளை ஒரு பாகத்தில் வைத்தவரும், மலையின்கண் நிறைந்து வீழ்கின்ற நல்ல நீரினது அலையை உடைய நிறைந்த சடைகள் எட்டும் எட்டுத் திசைகளிலும் சுழலுமாறு அரிய நடனத்தைச் செய்கின்ற நிலையினை உடையவரும் ஆகிய இறைவர் எழுந்தருளியிருக்கின்ற இடம் திருநின்றியூரே. |
| 195. | எட்டுகந் தார்திசை யேழுகந்<br>தார்எழுத் தாறுமன்பர்<br>இட்டுகந் தார்மலர்ப் பூசைஇச்<br>சிக்கும் இறைவர்முன்னாள்<br>பட்டுகும் பாரிடைக் காலனைக்<br>காய்ந்து பலியிரந்தூண்<br>சிட்டுகந் தார்க்கிட மாவது<br>நந்திரு நின்றியூரே. | 8 | திசைகள் எட்டினையும், ஏழ் எழுத்துக்களால் தோற்றுவிக்கப்படும் இசைகள் ஏழினையும், மனம் அடங்கப்பெற்ற அன்பர்கள் விரும்பியிடுதலால் நிறைந்த மலர்களையுடைய வழிபாட்டினையும், முன்னொருநாள் நிலத்தின் கண் இறந்த வீழ்ந்த கூற்றுவனை அவன் அங்ஙனம் ஆமாறு வெகுண்டமையோடு, பிச்சை யேற்று உண்ணுதலை உடைய ஒழுக்கத்தினையும் விரும்புகின்றவராகிய இறைவருக்கு இடமாய் நிற்பது, நமது திருநின்றியூரே. |

196. காலமும் ஞாயிறு மாகிநின்
றார்கழல் பேணவல்லார்
சீலமுஞ் செய்கையுங் கண்டுகப்
பார்அடி போற்றிசைப்ப
மாலொடு நான்முகன் இந்திரன்
மந்திரத் தால்வணங்க
நீலநஞ் சுண்டவ ருக்கிட
மாந்திரு நின்றியூரே. 9

காலமும், அதனைப் பகுக்கின்ற கதிரவனும் ஆகி நிற்பவரும், தமது திருவடியையே அன்போடு பற்றவல்ல அடியவர்களது நோன்பினையும், செயல்களையும் கண்டு அவர்களை விரும்புகின்றவரும், நீலநிறம் பொருந்திய நஞ்சினை உண்டவருமாகிய இறைவர்க்கு, அவரது திருவடிகளை அவ்வடியவர்கள் துதி செய்யவும் 'திருமால், பிரமன், இந்திரன்' முதலியோர் மந்திரம் சொல்லி வணங்கவும், திருநின்றியூரே இடமாய் நிற்கும்.

சோழன் ஒருவன் தினமும் திருவிளக்கிட்டு வந்தான். அவன் கொண்டு வந்த திரி ஒருநாள் நின்று விடவே, சிவலிங்கத்தினின்றும் ஒரு சோதி தோன்றி, அவன் வழிபாட்டிற்கு இடையூறு இல்லாமல் உதவியது. அதனால் திரி நின்றவூராகி இப்போது திருநின்றவூராகிவிட்டது என்பது செவிவழிச் செய்தி.

197. வாயார் மனத்தால் நினைக்கு
மவருக் கருந்தவத்தில்
தூயார் சுடுபொடி ஆடிய மேனியர்
வானில்என்றும்
மேயார் விடையுகந் தேறிய
வித்தகர் பேர்ந்தவர்க்குச்
சேயார் அடியார்க் கணியவர்
ஊர்திரு நின்றியூரே. 10

பேர்ந்தவர்க்கு – நினையாமல் அகன்றவர்க்கு.
சேயார் – தூரத்தில் நிற்பார்.

வாயார வாழ்த்தி, மனத்தால் எப்பொழுதும் மறவாது நினைப்பவர்க்கு உண்மைப் பொருளாகின்றவரும், அரிய தவக்கோலத்தை உடைய தூயவரும், வெந்த சாம்பலில் மூழ்கிய திருமேனியை உடையவரும், என்றும் பரவெளியிலே இருப்பவரும், இடபத்தை விரும்பி ஏறும் சதுரப்பாட்டினை உடையவரும், தம்மை அடையாதவருக்குச் சேய்மைக் கண்ணராகின்றவரும் ஆகிய இறைவரது ஊர் திருநின்றியூரே.

198. சேரும் புகழ்த்தொண்டர் செய்கை
யறாத்திரு நின்றியூரிற்
சீருஞ் சிவகதி யாய்இருந்
தானைத் திருநாவல்ஆ
ரூரன் உரைத்த உறுதமிழ்
பத்தும்வல் லார்வினைபோய்ப்
பாரும் விசும்புந் தொழப்பர
மன்னடி கூடுவரே. 11

திரண்ட புகழையுடைய அடியார்களது தொண்டுகள் எந்நாளும் நீங்காதிருக்கின்ற திருநின்றியூரின்கண் சிறந்த வீடுபேறாய் எழுந்தருளியிருக்கின்ற இறைவனைத் திருநாவலூரினனாகிய நம்பியாரூரன் பாடிய, பொருத்தமான இத்தமிழ்ப் பாடல்கள் பத்தினையும் பாட வல்லவர், வினை நீங்கப் பெற்று, மண்ணுலகத்தவரும், விண்ணுலகத் தவரும் வணங்கும்படி, சிவபெருமானது திருவடியை அடைவார்கள்.



திருக்கோளிலி: நெல் மலையை எடுத்துச்செல்ல ஆள் வேண்டுதல்

## 20. திருக்கோளிலி

திருத்தொண்டத் தொகையருளித் திருவாரூரில் எழுந்தருளியிருக்கும் நம்பியாரூரர் இடத்தில் அளவற்ற அன்புடையவரான குண்டையூர்க்கிழார் செந்நெல், பருப்பு முதலிய பொருள்களை முட்டாமல் கொடுத்து வந்தார். வான் மழை பொய்த்து மாநிலம் வளஞ்சுருங்கியது. அதனால் சுந்தரருக்குப் பொருள்கள் வழங்க முடியாமல் குண்டையூர்க் கிழார் வருந்தி இரவு உணவு உண்ணாமல் துயில் கொள்ள, இறையருளால் நெற்கள் குவியல் குவியல்களாக நிரம்பின. அவ்வளவு நெல்லையும் எடுக்க பல ஆட்கள் வேண்டுமென்று திருவருளை வியந்து பாடிய அற்புதமான பதிகமாகும். ஆள் பற்றாக்குறை எல்லாக் காலங்களிலும் நிலவி வந்துள்ளது. பணி செய்ய ஆட்கள் அமையாத போதெல்லாம் பதிப்பாசிரியர் இப்பதிகப் பாடல்களைப் பாடிப் பலன் பெற்றுள்ளார்.

**பண் : நட்டராகம்** **பதிக எண் : 20**

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் வண்டமர் பூங்குழலி உடனமர் அருள்மிகு கோளிலிநாதர். | | |
| **தல இருப்பிடம்** | சோழநாடு காவிரி தென்கரை. தற்போதைய பெயர் திருக்குவளை. திருவாரூரினின்றும் தென்கிழக்காய் எட்டிக்குடி செல்லும் சாலையில் 19 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | தேற்றா மரம் | | |
| **தீர்த்தம்** | பிரம தீர்த்தம் | | |
| **பாடியவர்** | மூவர் | **பதிகங்கள்** | 4 |

199. நீள நினைந்தடியேன் உனை
நித்தலுங் கைதொழுவேன்
வாளன கண்மடவா ளவள்
வாடி வருந்தாமே
கோளிலி எம்பெருமான் குண்டை
யூர்ச்சில நெல்லுப் பெற்றேன்
ஆளிலை எம்பெருமான் அவை
அட்டித் தரப்பணியே. 1

நீள – கால எல்லையின்றி – இடைவிடாமை.
அட்டுதல் – கொண்டு வருதல்.
மடவாள் – பரவை நாச்சியார்.

திருக்கோளிலியில் எழுந்தருளியிருக்கும் எம் பெருமானே! வாள்போலுங் கண்களையுடைய மடவாளாகிய என் இல்லாள் தனது வாழ்க்கையை நடத்த இயலாமை கருதி மெலிந்து வருந்தாதபடி குண்டையூரிலே சில நெல்லுப் பெற்றேன். அவைகளை அவள்பாற் சேர்ப்பிக்க எனக்கு ஆளில்லை; அடியேன், எஞ்ஞான்றும் உன்னையே நினைந்து நாள்தோறும் வணங்குந் தொழிலை உடையேன்; வேறு யாரை வேண்டுவேன்! அவைகளை அங்குச் சேர்ப்பித்து உதவ, நீ, எவர்க்கேனும் கட்டளையிட்டருள்.

200. வண்டம ருங்குழலாள் உமை
நங்கைஓர் பங்குடையாய்
விண்டவர் தம்புரமூன் றெரி
செய்தஎம் வேதியனே
தெண்டிரை நீர்வயல்சூழ் திருக்
கோளிலி எம்பெருமான்
அண்டம தாயவனே அவை
அட்டித் தரப்பணியே. 2

உமைநங்கையோர் பங்குடைமை – போக வடிவம்
புரமூன்றெரித்தமை – வேக வடிவம்
வேதியானாதல் – யோக வடிவம்

வண்டுகள் விரும்பும் கூந்தலையுடையவளாகி, 'உமை' என்னும் நங்கையை ஒருபாகத்தில் உடையவனே! பகைமை கொண்டவர்களது முப்புரத்தை எரித்த எங்கள் அந்தணனே! தெளிந்த அலைகளையுடைய நீரையுடைய வயல்கள் சூழ்ந்த திருக்கோளிலியில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானே! உலகெலாம் ஆகியவனே! அடியேன் குண்டையூரிலே சில நெல்லுப் பெற்றேன்; அவைகளை என் இல்லத்தில் சேர்ப்பிக்க எனக்கு ஆள் இல்லை; ஆதலின், அவைகளை அங்குச் சேர்ப்பித்து உதவ, நீ, எவர்க்கேனும் கட்டளை யிட்டருள்.

201. பாதிஓர் பெண்ணைவைத்தாய் பட
ருஞ்சடைக் கங்கை வைத்தாய்
மாதர்நல் லார்வருத்தம் மது
நீயும் அறிதியன்றே
கோதில் பொழில்புடைசூழ் குண்டை
யூர்ச்சில நெல்லுப்பெற்றேன்
ஆதியே அற்புதனே அவை
அட்டித் தரப்பணியே. 3

ஆட்பற்றாக்குறை தமது நிறுவனங்களில் ஏற்படும் பொழுதெல்லாம் பதிப்பாசிரியர் இப்பதிகத்தைப் பாடி ஆட்களைப் பெற்றுள்ளார்.

திருக்கோளிலியில் எழுந்தருளியிருக்கின்ற எம் பெருமானே! எல்லார்க்கும் முன்னவனே! யாவர்க்கும் மருட்கையைத் தரத்தக்க செயல்களைச் செய்ய வல்லவனே! நீ உன் திருமேனியில் பாதியிற்றானே, 'உமை' என்னும் ஒரு மாதராளை வைத்தாய்; அதுவன்றி, விரிந்த சடையின்கண், "கங்கை" என்னும் மற்றொரு மாதராளையும் வைத்தாய்; ஆதலின், நீயும் நற்பண்புடைய பெண்டிர் தம் வாழ்க்கை முட்டுற்றவிடத்து அடையும் வருத்தத்தினது தன்மையை நன்குணர்வாயன்றே? அதனால் உன்னை வேண்டுகின்றேன்; அடியேன் குற்றம் இல்லாத சோலைகள் புடைசூழ்ந்த குண்டையூரிற் சில நெல்லுப் பெற்றேன்; அவைகளை என் இல்லத்திற் சேர்ப்பிக்க எனக்கு ஆள் இல்லை; அவைகளை அங்குச் சேர்ப்பித்து உதவ, நீ எவர்க்கேனும் கட்டளையிட்டருள்.

202. சொல்லுவ தென்உனைநான் தொண்டை
வாய்உமை நங்கையைநீ
புல்கி இடத்தில்வைத்தாய்க் கொரு
பூசல்செய் தார்உளரோ
கொல்லை வளம்புறவிற் குண்டை
யூர்ச்சில நெல்லுப் பெற்றேன்
அல்லல் களைந்தடியேற் கவை
அட்டித் தரப்பணியே. 4

பூசல் – குற்றம். அல்லல் – வாட்டம்.
புல்கி இடத்தில் – இடப்பக்கத்தில் வைத்து.
"அவை அட்டித்தரப் பணியே" – பதிக மகுடம்.

திருக்கோளிலியில் எழுந்தருளியிருக்கின்ற எம் பெருமானே! உன்னிடம் நான் எடுத்துச் சொல்ல வேண்டுவது என் உளது? நீ, கொவ்வைக்கனி போலும் வாயினையுடைய, 'உமை' என்னும் நங்கையை முன்பு மணந்து, பின்பு இடப்பாகத்திலே வைத்தாய்; அது காரணமாக உன்னை ஒரு தூற்றுதல் செய்தார் எவரேனும் உளரோ? இல்லை ஆதலின், எனக்கு நீ, என் இல்வாழ்க்கைக்கு உரியதனைச் செய்தாலும் உன்னைத் தூற்றுவார் ஒருவரும் இல்லை. அடியேன், சில நெற்களை, கொல்லையின் வளங்களையுடைய முல்லை நிலம் சூழ்ந்த குண்டையூரிற் பெற்றேன்; அவைகளை என் இல்லத்தில் சேர்ப்பிக்க எனக்கு ஆள் இல்லை; அடியேனுக்கு அந்த அல்லலை நீக்கி, அவற்றை அங்குச் சேர்த்து உதவ, நீ, எவர்க்கேனும் கட்டளையிட்டருள்.

**203.** முல்லை முறுவலுமை ஒரு
பங்குடை முக்கணனே
பல்லயர் வெண்டலையிற் பலி
கொண்டுழல் பாசுபதா
கொல்லை வளம்புறவிற் றிருக்
கோளிலி எம்பெருமான்
அல்லல் களைந்தடியேற் கவை
அட்டித் தரப்பணியே. 5

பல்லயர் – பல் உதிர்ந்த

முல்லையரும்புபோலும் பற்களையுடைய உமையவளை ஒரு பாகத்தில் உடைய முக்கட் கடவுளே! சிரிப்பது போலத் தோன்றும் வெள்ளிய தலையில் பிச்சையேற்றுத் திரிகின்ற பாசுபத வேடத்தையுடையவனே! கொல்லையின் வளங்களையுடைய முல்லை நிலத்தையுடைய திருக்கோளிலியில் எழுந்தருளியிருக்கின்ற எம் பெருமானே! அடியேன், குண்டையூரிற் சில நெல்லுப் பெற்றேன்; அவைகளை என் இல்லத்திற் சேர்ப்பிக்க எனக்கு ஆள் இல்லை. ஆதலின், அடியேனுக்கு அத்துன்பத்தை நீக்கி, அவற்றை அங்குச் சேர்ப்பித்து உதவ, நீ, எவர்க்கேனும் கட்டளையிட்டருள்.

**204.** குரவம ருங்குழலாள் உமை
நங்கைஓர் பங்குடையாய்
பரவை பசிவருத்தம் மது
நீயும் அறிதியன்றே
குரவம ரும்பொழில்சூழ் குண்டை
யூர்ச்சில நெல்லுப் பெற்றேன்
அரவம் அசைத்தவனே அவை
அட்டித் தரப்பணியே. 6

பரவையார்க்குப் பசியாவது, அடியவர் முதலாயினாரை வழிபட இயலாமையேயாம்.
நயனு டையான் நல்கூர்ந்தானாதல் செயுநீர
செய்யா தமை கலாவாறு – குறள் 219
குரவு அமரும் – நறுமணங் கமழும்.

குராமலர் பொருந்தியுள்ள கூந்தலையுடைய, 'உமை' என்னும் நங்கையை ஒரு பாகத்தில் உடையவனே! பாம்பைக் கட்டியுள்ளவனே! திருக்கோளிலியில் எழுந்தருளியிருக்கின்ற எம் பெருமானே! நீ எல்லாவற்றையும் பிறர் அறிவிக்க வேண்டாது அறிபவனாகலின் பரவையது பசித்துன்பத்தையும் அறிவாயன்றே? அவள் பொருட்டு, அடியேன், குராமரம் பொருந்தியுள்ள சோலைகள் சூழ்ந்த குண்டையூரிற் சில நெல்லுப் பெற்றேன்; அவைகளை அவள்பாற் சேர்ப்பிக்க எனக்கு ஆள் இல்லை; அவற்றை அங்குச் சேர்ப்பித்து உதவ, நீ எவர்க்கேனும் கட்டளையிட்டருள்.

**205.** எம்பெரு மான்உனையே நினைந்
தேத்துவன் எப்பொழுதும்
வம்பம ருங்குழலாள் ஒரு
பாகம் அமர்ந்தவனே
செம்பொனின் மாளிகைசூழ் திருக்
கோளிலி எம்பெருமான்
அன்பது வாய்அடியேற் கவை
அட்டித் தரப்பணியே. 7

வம்பு – நறுமணம்

மணம் பொருந்திய கூந்தலையுடைய உமையவளை ஒருபாகத்தில் விரும்பி வைத்துள்ளவனே! செம்பொன்னாலியன்ற மாளிகைகள் நிறைந்த திருக்கோளிலியில் எழுந்தருளியிருக்கின்ற எம்பெருமானே! அடியேன் குண்டையூரிற் சில நெல்லுப் பெற்றேன்; அவைகளை என் இல்லத்திற் சேர்ப்பிக்க எனக்கு ஆள் இல்லை. எம் தலைவனாகிய உன்னையே எப்பொழுதும் நினைந்து துதிக்கும் தொழிலுடையேன் யான்; வேறு யாரை வேண்டுவேன்! என்னிடத்து அன்புடையாய்! அவற்றை அங்குச் சேர்த்து உதவ, நீ, எவர்க்கேனும் கட்டளையிட்டருள்.

206. அரக்கன் முடிகரங்க ளடர்த்
திட்டஎம் மாதிப்பிரான்
பரக்கும் அரவல்குலாள் பர
வையவள் வாடுகின்றாள்
குரக்கினங் கள்குதிகொள் குண்டை
யூர்ச்சில நெல்லுப் பெற்றேன்
இரக்கம் தாய்அடியேற் கவை
அட்டித் தரப்பணியே. 8

இராவணனது தலைகளையும், கைகளையும் நெரித்திட்ட எங்கள் முதற்கடவுளே! திருக்கோளிலியில் எழுந்தருளியிருக்கின்ற எம்பெருமானே! அகன்ற அல்குலையுடையாளாகிய என் இல்லாள் பரவை தன் வாழ்க்கையை நடத்த மாட்டாது மெலிகின்றாள்; அவள் பொருட்டு, அடியேன், சோலைகளில் குரங்குக் கூட்டங்கள் குதித்து விளையாடுகின்ற குண்டையூரிற் சில நெல்லுப் பெற்றேன்; அவைகளை அவள்பால் சேர்ப்பிக்க எனக்கு ஆள் இல்லை; நீ இரக்கமுடையையாய்! அடியேன் பொருட்டு அவற்றை அங்குச் சேர்த்து உதவ, எவர்க்கேனும் கட்டளையிட்டருள்.

இத்திருப்பதிகம் பாடப்பட்ட அன்றிரவே அந்நெல் மலை முழுவதும் சிவபெருமான் திருவருளால் பூதகணங்களால் திருவாரூருக்குக் கொண்டு வந்து சேர்ப்பிக்கப்பட்டது.

207. பண்டைய மால்பிரமன் பறந்
தும்மிடந் தும்மயர்ந்தும்
கண்டில ராய்அவர்கள் கழல்
காண்பரி தாயபிரான்
தெண்டிரை நீர்வயல்சூழ் திருக்
கோளிலி எம்பெருமான்
அண்டம தாயவனே யவை
அட்டித் தரப்பணியே. 9

முற்காலத்தில் உன் அளவைக்காணப் புகுந்த திருமாலும் பிரமனும் அன்னமாய் விண்ணிற் பறந்து ஓடியும், ஏனமாய் மண்ணைப் பிளந்து நுழைந்தும் தங்களால் ஆமளவும் முயன்றும் அதனைக் காணாதவர்களேயாக, இன்றும் நின் திருவடி அவர்களால் காணுதற்கு அரிதேயாய கடவுளே! தெளிந்த அலைகளையுடைய நீரையுடைய வயல்கள் சூழ்ந்த திருக்கோளிலியில் எழுந்தருளியிருக்கின்ற எம்பெருமானே! எல்லா உலகமும் ஆனவனே! அடியேன், குண்டையூரிலே சில நெல்லுப் பெற்றேன்; அவைகளை என் இல்லத்திற் சேர்ப்பிக்க எனக்கு ஆள் இல்லை; அவற்றை அங்குச் சேர்ப்பித்து உதவ, நீ எவர்க்கேனும் கட்டளையிட்டருள்.

மால் இடந்தும், பிரமன் பறந்தும் என எதிர்நிரல் நிறையாகக் கூட்டிப் பொருள் கொள்ள வேண்டும். இடந்து – தோண்டி.

208. கொல்லை வளம்புறவிற் றிருக்
கோளிலி மேயவனை
நல்லவர் தாம்பரவுந் திரு
நாவல வூரனவன்
நெல்லிட ஆட்கள்வேண்டி நினைந்
தேத்திய பத்தும்வல்லார்
அல்லல் களைந்துலகில் அண்டர்
வானுல காள்பவரே. 10

கொல்லையினது வளங்களையுடைய முல்லை நிலத்தையுடைய திருக்கோளிலியில் விரும்பியிருக்கின்ற பெருமானை, நல்லவர்கள் துதிக்கின்ற திருநாவலூரரான், தனக்கு நெல் எடுக்க ஆட்களைத் தருமாறு வேண்டி, மணம் பொருந்திப் பாடிய இப்பத்துப் பாடல்களையும் பாடவல்லவர், இம்மையில் தங்கட்கு உள்ள இடர்களை நீக்கி, அம்மையிலும் தேவர்கட்கு மேலாய மேலுலகத்தை ஆள்வார்கள்.

## 21. திருக்கச்சிமேற்றளி

தூண்டா விளக்கே! எந்தாய்! ஏறே! ஐயா! மலையே! உன்னையல்லால் இனியேத்த மாட்டேனே. உனையே நினைந்திருந்தேன்; நினைதலும் இவ்வூனுடலம் புகுந்தாய்; போயறியாய்; நினையாதிருந்தாலும் வேறா வந்து என் உள்ளம் புகவல்ல மெய்ப்பொருள்; அடியார்க்குத் தொண்டுபட்டு இனிப் பிறவாமை கேட்டொழிந்தேன்; நுன் அடைந்தேன்; எற்றாலென் குறை ? என் இடரைத் துறந்தொழிந்தேன்; நீ மாலாயின தீர்த்தருள் செய்யு மெய்ப்பொருள்; நின்னை நினைதலுமே நின்னினையப் பணித்தாய்; உன்னையல்லால் உடலில் உயிருள்ள அளவும் நாவதனால் வேறுரையேன் – என்றிவ்வாறு இறைவனை நினையும் தன்மைகளும் அவர் அருளும் தன்மைகளும் பயனும் தூக்கி உலகரை வழிப்படுத்தி உரைத்தது.

**பண் : நட்டராகம்** **பதிக எண் : 21**

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் காமாட்சியம்மை உடனமர் அருள்மிகு மேற்றளிநாதர் | | |
| **தல இருப்பிடம்** | தொண்டை நாட்டில் காஞ்சி மாநகரின் மேற்பகுதியில் இரண்டு கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | வில்வம், மா. | | |
| **தீர்த்தம்** | விட்டுணு தீர்த்தம் | | |
| **பாடியவர்** | அப்பர், நம்பியாரூரர் | **பதிகங்கள்** | 2 |

209. நொந்தா வொண்சுடரே **நுனை**
**யேநி னைந்திருந்தேன்**
வந்தாய் போயறியாய்
மனமேபு குந்துநின்ற
சிந்தாய் எந்தைபிரான் திரு
மேற்ற ளிஉறையும்
எந்தாய் உன்னையல்லால் இனி
ஏத்த மாட்டேனே. 1

அவியாத ஒளிபொருந்திய விளக்குப் போல்பவனே! என் தந்தைக்கும் பெருமானே! கச்சிதிருமேற்றளியில் எழுந்தருளியிருக்கின்ற என் தந்தையே! உன்னையே நினைந்திருந்த என் உள்ளத்திலே புகுந்துநின்ற சிந்தனைப் பொருளே! என் உள்ளத்தில் புகுந்த நீ பின் நீங்கியறியாய்; ஆதலின், இனி அடியேன் உன்னையன்றிப் பிறரைப் புகழவே மாட்டேன்.

நொந்துதல் – நுந்துதல் – தூண்டுதல். தளி – கோயில்.
மேற்குப் பக்கத்தில் இருத்தலால் மேற்றளி எனப்பட்டது.
உன்னையே மனதில் கொண்டிருந்தேன். சிவயோகநிலை.
நொந்தா ஒண்சுடர் – தூண்டாவிளக்கு

210. ஆட்டான் பட்டமையால் அடி
யார்க்குத் தொண்டுபட்டுக்
கேட்டேன் கேட்பதெல்லாம் பிற
வாமை கேட்டொழிந்தேன்
சேட்டார் மாளிகைசூழ் திரு
மேற்ற ளிஉறையும்
மாட்டே யுன்னையல்லால் மகிழ்ந்
தேத்த மாட்டேனே. 2

இறைவனுக்கு ஆட்பட்ட பின்னே அடியவரை அணுக முடியும். ஆகலின் உனக்கு ஆள்பட்டமையால் உன் அடியார்க்குத் தொண்டுபட்டேன். அடியார்க்கு அடியார் ஆனபின்னரே அடிமை நிரம்புதலாகும். அது நிரம்பப் பெற்றவர் மற்றவர்பால் கேட்பதற்கு ஒன்றுமில்லை. எனவே பிறவாமை கேட்கிறார்.

சேடு – பெருமை.

பெருமையையுடைய பல மாளிகைகள் சூழ்ந்த கச்சித் திருமேற்றளியில் எழுந்தருளியிருக்கின்ற என் செல்வமாய் உள்ளவனே! அடியேன் உனக்கு அடிமையாயினமையால், உன் அடியார்க்கு அடியனாகின்ற பேற்றைப் பெற்றேன். அதனால், உன்பால் அடியேன் வேண்டற்பாலன பலவற்றையும் வேண்டி, இறுதியாகப் பிறவாத நிலையை வேண்டியொழிந்தேன். இனி, என் மகிழ்ச்சி மீதூர்வால் உன்னைப் புகழ்தலின்றிப் பிறரைப் புகழவே மாட்டேன்.

211. மோறாந் தோரொருகால் நினை
யாதி ருந்தாலும்
வேறா வந்தென்னுள்ளம் புக
வல்ல மெய்ப்பொருளே
சேறார் தண்கழனித் திரு
மேற்ற ளியுறையும்
ஏறே யுன்னையல்லால் இனி
ஏத்த மாட்டேனே. 3

மோறாந்து – செருக்குற்று

அடியேன் ஒரொருகால் மயக்கம் உற்று உன்னை நினையாதிருப்பினும், நீதானே வந்து என் உள்ளத்தில் புகுந்து நினைப்பிக்கவல்ல உண்மைப் பொருளானவனே! சேறு நிறைந்த குளிர்ந்த கழனிகளையுடைய கச்சித் திருமேற்றளியில் எழுந்தருளியிருக்கின்ற ஆண் சிங்கம் போல்பவனே! இனி, அடியேன் உன்னையன்றிப் பிறரைப் புகழவே மாட்டேன்.

212. உற்றார் சுற்றமெனும் மது
விட்டு நுன்னடைந்தேன்
எற்றால் என்குறைவென் இட
ரைத்து றந்தொழிந்தேன்
செற்றாய் மும்மதிலுந் திரு
மேற்ற ளிஉறையும்
பற்றே நுன்னையல்லால் பணிந்
தேத்த மாட்டேனே. 4

"ஏத்த மாட்டானே" – பதிக மகுடம்

மூன்று மதில்களையும் அழித்தவனே! கச்சித் திருமேற்றளியில் எழுந்தருளியிருக்கின்ற துணையானவனே! அடியேன், என்னோடு நெருங்கிய உறவினர் பலர் உளர் என்றும், மற்றும் சுற்றத்தார் பலர் உளர் என்றும் நினைத்து, அவர்கள் தொடர்பிலே பட்டு, உய்ந்து போகமாட்டாது நிற்கின்ற அந்நிலையைத் துறந்து, உன்னையே புகலிடமாக அடைந்தேன். அதனால், இப்பொழுது, எத்தன்மையதான பொருளால், என்ன குறை அடியேனுக்கு இருக்கின்றது? ஒன்றும் இல்லை. என் துன்பங்களையெல்லாம் அடியோடு நீக்கிவிட்டேன். ஆதலின் இனி, உன்னையன்றிப் பிறரைப் பணிந்து புகழ்தலைச் செய்யவே மாட்டேன்.

213. எம்மான் எம்மனையென் றவர்
இட்டி றந்தொழிந்தார்
மெய்ம்மா லாயினதீர்த் தருள்
செய்யும் மெய்ப்பொருளே
கைம்மா ஈருரியாய் கன
மேற்ற ளிஉறையும்
பெம்மான் உன்னையல்லால் பெரி
தேத்த மாட்டேனே. 5

எம்மான் – எம் தந்தை. எம் அனை – எம் தாய்.
இட்டு – என்னை இவ்வுலகில் இட்டு.
மால் – மயக்கம்.

உடம்பு இடமாக வருகின்ற மயக்கமாயின வற்றை எல்லாம் நீக்கி, மெய்யுணர்வைத் தந்தருளுகின்ற மெய்ப்பொருளாய் உள்ளவனே! யானையை உரித்த தோலை உடையவனே! பெருமை பொருந்திய கச்சித் திருமேற்றளியில் எழுந்தருளியிருக்கின்ற பெரியோனே! என்னைத் தாங்குகின்ற, 'என் தந்தை' என்றும், 'என் தாய்' என்றும் சொல்லப்பட்டவர்கள் என்னை இங்குத் தனியே வைத்து விட்டு இறந்துவிட்டார்கள்; ஆகவே, இனி உன்னையன்றிப் பிறரை நான் பெரிய பொருளாக நினைத்துப் புகழவேமாட்டேன்.

214. நானேல் உன்னடியே நினைந்
தேன்நி னைதலுமே
ஊனேர் இவ்வுடலம் புகுந்
தாய்என் ஒண்சுடரே
தேனே இன்னமுதே திரு
மேற்ற ளிஉறையும்
கோனே உன்னையல்லாற் குளிர்ந்
தேத்த மாட்டேனே. 6

எனது ஒளி பொருந்திய விளக்குப் போன்றவனே! தேன் போன்றவனே! இனிய அமுதம் போன்றவனே! கச்சித் திருமேற்றளியில் எழுந்தருளியிருக்கின்ற தலைவனே! நானோ எனில், உன் திருவடியை அடைய நினைத்தேன்; அங்ஙனம் நினைத்த அளவிலே நீ ஊன் பொருந்திய இவ்வுடலுள்ளே வந்து புகுந்து விட்டாய்; ஆதலின், இத்தகைய பேரருளாள னாகிய உன்னையல்லது பிறரை அடியேன் உளங்குளிர்ந்து புகழவேமாட்டேன்.

215. கையார் வெஞ்சிலைநா ணதன்
மேற்ச ரங்கோத்தே
எய்தாய் மும்மதிலும் மெரி
யுண்ண எம்பெருமான்
செய்யார் பைங்கமலத் திரு
மேற்ற ளிஉறையும்
ஐயா உன்னையல்லால் அறிந்
தேத்த மாட்டேனே. 7

எம் பெருமானே! வயலின்கண் பரவியுள்ள பசிய தாமரைகளையுடைய கச்சித் திருமேற்றளியில் எழுந்தருளியிருக்கின்ற தலைவனே! நீ உன் கையின்கண் பொருந்திய கொடிய வில்லினது நாணின்மேல் அம்பைத் தொடுத்து, மூன்று மதில்களையும் தீ உண்ணும்படி எரித்தாய்; ஆதலின், உன்னையன்றிப் பிறரைத் தேவராக எண்ணிப் புகழவேமாட்டேன்.

சரங்கோத்தே – அம்பு தொடுத்து

216. விரையார் கொன்றையினாய் விம
லாஇனி உன்னையல்லால்
உரையேன் நாவதனால் உட
லில்உயிர் உள்ளளவும்
திரையார் தண்கழனித் திரு
மேற்ற ளிஉறையும்
அரையா உன்னையல்லால் அறிந்
தேத்த மாட்டேனே. 8

நறுமணம் பொருந்திய கொன்றை மாலையை உடையவனே! தூயவனே! அலைகள் நிறைந்த குளிர்ந்த கழனிகளையுடைய கச்சித் திருமேற்றளியின்கண் எழுந்தருளியிருக்கின்ற தலைவனே! அடியேன், என் உடலில் உயிர் உள்ளவரையிலும் இனி, உன்னையன்றிப் பிறரை, 'தேவர்' என்று என் நாவினாற் சொல்லவும் மாட்டேன்; உன்னையன்றிப் பிறரை உயர்ந்தவராக மதித்துப் புகழவும் மாட்டேன்; இது திண்ணம்.

217. நிலையா நின்னடியே நினைந்
தேன்நி னைதலுமே
தலைவா நின்னினையப் பணித்
தாய்ச லமொழிந்தேன்
சிலையார் மாமதில்சூழ் திரு
மேற்ற ளிஉறையும்
மலையே உன்னையல்லால் மகிழ்ந்
தேத்த மாட்டேனே. 9

மலையே – சலியாத பெருந்துணையே.
சலம் – தீயசெயல், சஞ்சலம்

சந்திரகாந்தக் கற்கள் நிறைந்த பெரிய மதில் சூழ்ந்த கச்சித் திருமேற்றளியின்கண் எழுந்தருளியிருக்கின்ற மலை போன்றவனே! தலைவனே! அடியேன், உனது திருவடியையே நிலைத்த பொருளாக உணர்ந்தேன்; அவ்வாறு உணர்ந்த அளவிலே, அவ்வாறே மாறாது என்றும் உன்னையே உணர்ந்து நிற்குமாறு எனக்கு உன் திருவருளைச் செய்தாய்; அதனால், அடியேன், என், துன்பமெல்லாம் ஒழிந்தவனாயினேன்; ஆகவே, இனி அடியேன், உன்னையன்றிப் பிறரை, மனம் மகிழ்ந்து புகழவே மாட்டேன்.

218. பாரூர் **பல்லவனூர்** மதிற்
காஞ்சி மாநகர்வாய்ச்
சீரு ரும்புறவிற் றிரு
மேற்ற ளிச்சிவனை
ஆரூ ரன்னடியான் அடித்
தொண்டன்ஆ ரூரன்சொன்ன
சீரூர் பாடல்வல்லார் சிவ
லோகஞ் சேர்வாரே. 10

பல்லவன் ஊர் – நம்பிகள் காலத்தில் காஞ்சிபுரம் பல்லவர்களது ஆட்சிக்குட்பட்டிருந்தது என்பதற்கு அகச்சான்று

நிலம் முழுதும் ஆணை செல்கின்ற பல்லவனது அரசிருக்கை ஊராகிய, மதிலை உடைய காஞ்சி மாநகரின்கண் சிறப்புப் பொருந்திய இடத்தில் விளங்கும் திருமேற்றளியின்கண் உள்ள சிவபெருமானை, திருவாரூர்ப் பெருமானுக்கு அடியவனான அணுக்கத் தொண்டனாம் நம்பியாரூரன் பாடிய, தாள அறுதி பொருந்திய இப்பாடல்களைப் பாட வல்லவர், சிவலோகத்தை அடைவார்கள்.

## 22. திருப்பழமண்ணிப்படிக்கரை

(இலுப்பைப்பட்டு)

பண் : நட்டராகம் பதிக எண் : 22

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் அமிர்தகரவல்லி உடனமர் அருள்மிகு நீலகண்டர். | | |
| **தல இருப்பிடம்** | சோழநாட்டில் காவிரியின் வடகரையில் புள்ளிருக்கு வேளூர் சென்று வாழ்கொளிப்புத்தூர் வழி மேற்கே 1 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | இலுப்பை | | |
| **தீர்த்தம்** | பிரம தீர்த்தம், மண்ணியாறு | | |
| **பாடியவர்** | நம்பியாரூரர் | **பதிகம்** | 1 |

219. முன்னவன் **எங்கள்பிரான்** முதல்
காண்பரி தாயபிரான்
சென்னியில் **எங்கள்பிரான்** திரு
நீல மிடற்றெம்பிரான்
மன்னிய **எங்கள்பிரான்** மறை
நான்குங்கல் லால்நிழற்கீழ்ப்
பன்னிய **எங்கள்பிரான்** பழ
மண்ணிப் படிக்கரையே. 1

நான்கடிகளிலும் ''எங்கள் பிரான்'' என்பதைப் பெயர்தொறும் வைத்து ஓதுகிறார்.
மன்னிய – நிலைபெற்ற. பன்னிய – சொல்லிய

எல்லார்க்கும் முன்னே உள்ளவனும், தனக்கு முன்னுள்ள பொருள் இல்லாதவனும், யாவரினும் தலையாயவனும், அழகிய நீலகண்டத்தை உடையவனும், என்றும் அழியாது நிலை பெற்றிருப்பவனும், நான்கு வேதங்களையும் கல்லால மர நிழலிலிருந்து சொல்லியவனுமாய், எங்கள் தலைவனுமாய் உள்ள இறைவன் எழுந்தருளியிருப்பது 'திருப்பழமண்ணிப் படிக்கரை' என்னும் தலமே.

220. அண்ட கபாலஞ்சென்னி அடி
மேல்அலர் இட்டுநல்ல
தொண்டங் கடிபரவித் தொழு
தேத்திநின் றாடுமிடம்
வெண்டிங்கள் வெண்மழுவன் விரை
யார்கதிர் மூவிலைய
பண்டங்கன் மேயவிடம் பழ
மண்ணிப் படிக்கரையே. 2

பரவுதல் – முன்னிலை
ஏத்துதல் – படர்க்கை
பண்டங்கன் – பண்டரங்கன் – பண்டரங்கக் கூத்தாடுபவன்.

திரண்ட தலையை அணிந்த முடியினையுடைய சிவபிரானது திருவடிகளில் நல்ல அடியார்கள் மலர்களை இட்டு அவ்வடிகளை வணங்கி, முன்னிலையாகவும் படர்க்கையாகவும் துதித்து ஆடுகின்றதும், வெண்மையான பிறையை அணிந்தவனும், வெள்ளிய மழுவை ஏந்தியவனும், பகைவர்மேல் விரைதல் பொருந்திய, ஒளியையுடைய மூவிலை வேலை (சூலத்தை) உடைய, 'பண்டரங்கம்' என்னும் கூத்தினை உடையவனும் ஆகிய அப்பெருமான் விரும்பி எழுந்தருளியிருக்கின்றதும் ஆகிய இடம் 'திருப்பழமண்ணிப் படிக்கரை' என்னும் தலமே.

| | |
|---|---|
| 221. ஆடுமின் அன்புடையீர் அடிக்<br>காட்பட்ட தூளிகொண்டு<br>சூடுமின் தொண்டருள்ளீர் உம<br>ரோடெமர் சூழவந்து<br>வாடுமிவ் வாழ்க்கைதன்னை வருந்<br>தாமல் திருந்தச்சென்று<br>பாடுமின் பத்தருள்ளீர் பழ<br>மண்ணிப் படிக்கரையே. 3<br><br>உமர் – உம்மவர். எமர் – எம்மவர் | அன்புடையவர்களே! அன்புக் கூத்தினை ஆடுங்கள்; தொண்டராய் உள்ளவர்களே! சிவபெருமானது திருவடிக்கு ஆட்பட்டவர்களது அடியில் உள்ள பொடியை எடுத்துத் தலைமேல் சூடிக் கொள்ளுங்கள்; பத்தராய் உள்ளவர்களே! உம்மவரோடு எம்மவரும் சூழ ஒன்று கூடி, மனம் மெலிதற்குக் காரணமான இல்வாழ்க்கையில் கிடந்து வருந்தாமல் நன்கு சென்று, திருப்பழ மண்ணிப் படிக்கரையைப் பாடுங்கள். |
| 222. அடுதலை யேபுரிந்தான் அவை<br>அந்தர மூவெயிலும்<br>கெடுதலை யேபுரிந்தான் கிள<br>ருஞ்சிலை நாணியிற்கோல்<br>நடுதலை யேபுரிந்தான் நரி<br>கான்றிட்ட எச்சில்வெள்ளைப்<br>படுதலை யேபுரிந்தான் பழ<br>மண்ணிப் படிக்கரையே. 4 | உலகத் தொகுதியை அழித்தலை விரும்பினவனும், வானத்தில் திரிந்த மூன்று மதில்கள் கெட்டொழிதலை விரும்பி வில்நாணில் அம்பைப் பூட்டுதலை விரும்பினவனும், நரியும் உண்ண இயலாதென்று ஒதுக்கிய தசையொழிந்த வெண்மையான, அழிந்த தலையை விரும்பியவனும் ஆகிய இறைவன் எழுந்தருளியிருக்கும் இடம், 'திருப்பழமண்ணிப் படிக்கரை' என்னும் தலமே. |
| 223. உங்கைக ளாற்கூப்பி உகந்<br>தேத்தித்தொழு மின்தொண்டீர்<br>மங்கையொர் கூறுடையான் வா<br>னோர்முத லாயபிரான்<br>அங்கையில் வெண்மழுவன் அலை<br>யார்கதிர் மூவிலைய<br>பங்கய பாதனிடம் பழ<br>மண்ணிப் படிக்கரையே. 5 | தொண்டர்களே! உமையை ஒரு கூறில் உடையவனும், தேவர்களுக்கு முதற்பொருளாய தலைவனும், அகங்கையில் வெள்ளிய மழுவை உடையவனும், கொல்லுதல் பொருந்திய ஒளியையுடைய முத்தலை வேலை (சூலத்தை) ஏந்திய, தாமரை மலர்போலும் பாதங்களை யுடையவனும் ஆகிய இறைவனது இடமாகிய திருப்பழ மண்ணிப்படிக்கரையை விரும்பித் துதித்து உங்கள் கைகளால் கூப்பித் தொழுங்கள். |

**224.** செடிபடத் தீவிளைத்தான் சிலை
யார்மதிற் செம்புனஞ்சேர்
கொடிபடு மூரிவெள்ளை எரு
தேற்றையும் ஏறக்கொண்டான்
கடியவன் காலன்றன்னைக் கறுத்
தான்கழற் செம்பவளப்
படியவன் பாசுபதன் பழ
மண்ணிப் படிக்கரையே. 6

செடிபட – பரவ. கொடிபடும் – கொடியிலே அமைந்த.
மூரி – வலிமை. கறுத்தான் – கோபித்தான்.
படி – உருவம். சிலை ஆர் மதில் – மலைபோலும் முப்புரங்கள்

கற்கள் பொருந்திய கோட்டைகளில் தீமை உண்டாகத் தீயை எழுவித்தவனும், நல்ல புனங்களில் மேய்வதாகிய, தனது கொடியிற் பொருந்திய வலிய எருதாகிய ஆனேற்றை ஏறுதற்கு ஊர்தியாகக் கொண்டவனும், பாதத்தால் கொடிய வலிய காலனை காய்ந்தவனும், செவ்விய பவளம் போலும் திருமேனியை உடையவனும், பாசுபத வேடத்தனும் ஆகிய இறைவன் எழுந்தருளியிருப்பது 'திருப்பழமண்ணிப் படிக்கரை' என்னும் தலமே.

**225.** கடுத்தவன் தேர்கொண்டோடிக் கயி
லாயநன் மாமலையை
எடுத்தவன் ஈரைந்துவாய் அரக்
கன்முடி பத்தலற
விடுத்தவன் கைநரம்பால் வேத
கீதங்கள் பாடலுறப்
படுத்தவன் பால்வெண்ணீற்றன் பழ
மண்ணிப் படிக்கரையே. 7

கடுத்த – வேகமாகச் சென்ற
பாடலுறப்படுத்தவன் – பாடும்படிச் செய்தவன்.

அரக்கனும், தேரைச் செலுத்திக் கொண்டு சென்று, அதனைத் தடுத்தலால் சினங் கொண்டவனாய்க் கயிலாயமாகிய நல்ல பெரிய மலையை எடுத்தவனும் ஆகிய இராவணனது பத்து வாய்களும் பத்துத் தலைகளில் பொருந்தியிருந்து அலறும்படி ஆக்கியவனும், பின்பு அவன் கை நரம்பாகிய வீணையால் வேதத்தொடு கூடிய இசைகளைப் பாட, அவனை நலத்திற் பொருந்தச் செய்தவனும், பால்போலும் வெள்ளிய திருநீற்றை உடையவனும் ஆகிய இறைவன் எழுந்தருளியிருப்பது திருப்பழமண்ணிப் படிக்கரை என்னும் தலமே.

**226.** திரிவன மும்மதிலும் மெரித்
தான்இமை யோர்பெருமான்
அரியவன் அட்டபுட்பம் மவை
கொண்டடி போற்றிநல்ல
கரியவன் நான்முகனும் மடி
யும்முடி காண்பரிய
பரியவன் பாசுபதன் பழ
மண்ணிப் படிக்கரையே. 8

இடம் பெயர்ந்து திரிவனவாகிய மூன்று மதில்களை எரித்தவனும், தேவர்கட்குத் தலைவனும், அடைதற்கு அன்புடைய திருமாலும் பிரமனும் அட்ட புட்பங்களால் திருவடியில் அருச்சித்தும், அடியும் முடியும் காணமாட்டாத அளவிறந்தவனும், பாசுபத வேடத்தை உடையவனும் ஆகிய இறைவன் எழுந்தருளியிருப்பது 'திருப்பழமண்ணிப் படிக்கரை' என்னும் தலமே.

**227.** வெற்றரைக் கற்றமணும் விரை
யாதுவிண் டாலமுண்ணும்
துற்றரைத் துற்றறுப்பான் துன்ன
ஆடைத் தொழிலுடையீர்
பெற்றரைப் பித்தரென்று கரு
தேன்மின் படிக்கரையுள்
'பற்றரைப் பற்றிநின்று பழி
பாவங்கள் தீர்மின்களே. 9

வெற்றரை – ஆடையற்ற இடை.
துன்ன ஆடை – தையலை உடைய ஆடை
பெற்றம் – இடபவாகனம். பெற்றர் – இடப வாகனர்.
துற்று – உணவு

மிகுந்த பற்றுக்களை அறுத்தற் பொருட்டு உடையில்லாத அரையினை உடையராதலைக் கற்ற சமணர் வேடத்திலே மனம் விரையாது நீங்கி, கீளொடு பிணைத்தலை உடைய கோவண ஆடையை அணிந்த தொண்டர்களே! நஞ்சினை உண்ணும் உணவுடையவரும், எருதாகிய ஊர்தியை உடையவருமாகிய சிவபெருமானாரை அதுபோல்வனவற்றை நோக்கிப் பித்தரென்று இகழ்ச்சியாக நினையாதீர்கள்; திருப்பழமண்ணிப் படிக்கரையுள் கோயில் கொண்டிருக்கும் அவரையே துணையாகப் பற்றி நின்று, பழி பாவங்களிலிருந்து நீங்குங்கள்.

**228.** பல்லுயிர் வாழுந்தெண்ணீர்ப் பழ
மண்ணிப் படிக்கரையை
அல்லியந் தாமரைத்தார் ஆ
ரூரன் உரைத்ததமிழ்
சொல்லுதல் கேட்டல்வல்லா ரவர்க்
குந்தமர்க் குங்கிளைக்கும்
எல்லியும் நன்பகலும் மிடர்
கூருதல் இல்லையன்றே. 10

பல உயிர்கள், வாழ்கின்ற தெளிந்த நீரையுடைய, 'திருப்பழமண்ணிப் படிக்கரை' என்னும் தலத்தை, அக இதழ்களையுடைய தாமரை மாலையை அணிந்த நம்பியாரூரன் புகழ்ந்து சொன்ன இத்தமிழ்ப் பாடலை இரவிலும், நல்ல பகலிலும் சொல்லுதலும், கேட்டலும் வல்லராகின்ற அத்தன்மையார்க்கும், அவரைச் சார்ந்து உற்றார்க்கும், அவ்வுற்றாரைப் பற்றி வரும் சுற்றத்தார்க்கும் துன்பம் மிகுதல் இல்லை.

## 23. திருக்கழிப்பாலை

பண் : நட்டராகம் பதிக எண் : 23

| மூர்த்தி | அருள்தரும் வேதநாயகி உடனமர் அருள்மிகு பால்வண்ணநாதர். | | |
|---|---|---|---|
| தல இருப்பிடம் | சோழநாட்டில் காவிரி வடகரையில், நெல்வாயில் அருகில், சிதம்பரத்திலிருந்து 4 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| தல மரம் | வில்வம் | | |
| தீர்த்தம் | கொள்ளிடம் | | |
| பாடியவர் | மூவர் | பதிகங்கள் | 8 |

**229.** செடியேன் தீவினையில் தடு
மாறக் கண்டாலும்
அடியான் ஆவஎனா தொழி
தல்த கவாமே
முடிமேல் மாமதியும் அர
வும்மு டன்துயிலும்
வடிவே தாம் உடையார் மகி
ழுங்கழிப் பாலையதே. 1

திருமுடியின் மேல், பெருமை பொருந்திய பிறையும், பாம்பும் பகையின்றி ஒருங்கு கூடித் துயில்கின்ற வடிவத்தை உடையவர், குணம் இல்லாதவனாகிய யான் தீவினையில் கிடந்து தடுமாறுவதை நேரே பார்த்தாலும், 'அந்தோ! இவன் நம் அடியவன்!' என்று இரங்காது தாம் மகிழ்ந்து எழுந்தருளியுள்ள திருக்கழிப் பாலையில், வாளா இருத்தல் தகுதியாகுமோ!

செடியேன் – குற்றமுடையவன். ஆவ – இரக்கச்சொல்.
தகவாமே – தகவன்று. இவன் என் அடியவன் என்று இரங்கித் தடுமாற்றத்தைத் தீர்க்காதொழித்தல் தகுதியாமோ ?

**230.** எங்கே னும்மிருந்துன் னடி
யேன் உனைநினைந்தால்
அங்கே வந்தென்னொடும் முட
னாகி நின்றருளி
இங்கே என்வினையை யறுத்
திட்டெ னையாளுங்
கங்கா நாயகனே கழிப்
பாலை மேயானே. 2

திருக்கழிப்பாலையில் விரும்பி எழுந்தருளி யிருக்கின்றவனே! நீயே உன் அடியவனாகிய யான் இப்பூமியிலே எங்காயினும் இருந்து உன்னை நினைத்தால், அங்கே வந்து என்னோடு கூடி நின்று, என் வினையை நீக்கி என்னை ஆண்டருள்கின்ற கங்கைக்கு நாயகன்.

இப்பூமியில் எங்காயினும் இருந்து உன்னை நினைத்தால் அங்கே வந்து எப்படிக்கூடி நிற்கின்றார் ? இப்போதெல்லாம் மகிழ்வுந்தில் பயணம் செய்யும்போது ஓரிடத்தில் வழிதெரியவில்லை என்றால் யாரிடமும் கேட்காமல் GPS (Global Positioning System) எனப்படும் அலைபேசி ஊடகத்தினுள் சென்றால் பிரயாண வரைபடமே கிடைக்கிறது.

231. ஒறுத்தாய் நின்னருளில் லடி
யேன்பி ழைத்தனகள்
பொறுத்தாய் எத்தனையுந் நா
யேனைப் பொருட் படுத்துச்
செறுத்தாய் வேலைவிடம் மறி
யாமல் உண்டுகண்டங்
கறுத்தாய் தண்கழனிக் கழிப்
பாலை மேயானே. 3

ஒறுத்தாய் – தண்டித்தாய்

குளிர்ந்த கழனிகளையுடைய திருக் கழிப்பாலையில் விரும்பி எழுந்தருளி யிருப்பவனே! உனது கருணையினாலே ஒரு பிழைக்காக முன்பு என்னை ஒறுத்தாய்; பின்பு அடியேன் செய்த பிழைகள் எத்தனையாயினும் அவை அனைத்தையும், நாய்போலும் என்னை ஒரு பொருளாக வைத்துப் பொறுத்துக் கொண்டாய்; தேவர்கள் இறவாதிருத்தற் பொருட்டுக் கடலில் தோன்றிய நஞ்சினை உண்டு கண்டத்தில் நிறுத்தினாய்; அதனால், அவ்விடம் கரிதாயினாய்; இவை உன் அருட்செயல்கள்.

232. சுரும்பார் விண்டமல ரவை
தூவித் தூங்குகண்ணீர்
அரும்பா நிற்குமனத் தடி
யாரொடும் அன்புசெய்வன்
விரும்பேன் உன்னையல்லால் ஒரு
தெய்வம் என்மனத்தால்
கரும்பா ருங்கழனிக் கழிப்
பாலை மேயானே. 4

சுரும்பார்... அடியார் – அடியார்கள் இலக்கணம். அடியாரோடும் – தொண்டரோடும் கூடுதல் – அணைந்தோர் தன்மை. விண்ட – மலரச்செய்த.

கரும்புகள் நிறைந்த கழனிகளையுடைய திருக்கழிப்பாலையில் விரும்பி எழுந்தருளி யிருப்பவனே! வண்டுகள் ஒலிக்கின்ற, அப்பொழுது மலரும் மலர்களைத் தூவி, பாய்தற்குரிய கண்ணீர் அரும்புகின்றமைக்குக் காரணமான மனத்தையுடைய அடியார்களோடு கூடி அடியேன் உனக்கு அன்பு செய்வேன். உன்னையன்றி வேறொரு தெய்வத்தை என் மனத்தாலும் விரும்பேன். இஃது என் உணர்விருந்தவாறு.

233. ஒழிப்பாய் என்வினையை உகப்
பாய்முனிந்தருளித்
தெழிப்பாய் மோதுவிப்பாய் விலை
ஆவ ணம்முடையாய்
சுழிப்பால் கண்டடங்கச் சுழி
யேந்து மாமறுகிற்
கழிப்பா லைமருவுங் கன
லேந்து கையானே. 5

முனிந்தருளித் தெளிப்பாய் – உன் கருணையினால் கோபித்து அதட்டுவாய். மோதுவிப்பாய் – அடிப்பாய்.

நீர்ச் சுழிகளை, அவை கழியிடத்தையடைந்து அடங்குமாறு தாங்கி நிற்கின்ற தெருக்களை யுடைய திருக்கழிப்பாலையில் எழுந்தருளி யிருக்கின்ற தீயேந்திய கையினையுடையவனே! நீ என்னை உனக்கு உரியவனாக்கிக் கொண்ட விலைப் பத்திரத்தை உடையையாகலின், என்னை விரும்பி என்னோடு அளவளாவினும் அளவளாவுவாய்; பின் அது காரணமாக, என் வினையை நீக்கி என்னை இன்புறச் செய்யினும் செய்வாய்; அன்றி என்னை வெகுண்டு உரத்த கடுஞ்சொற்களால் இகழினும் இகழ்வாய்; பின் அது காரணமாக, என்னைத் தண்டிக்கச் செய்யினும் செய்வாய்; உன்னை ‘இவ்வாறு செய்க’ எனக் கட்டளையிடுவார் யார்?

**234.** ஆர்த்தாய் ஆடரவை அரை
ஆர்பு லியதற்மேற்
போர்த்தாய் யானையின்தோல் உரி
வைபு லால்நாறக்
காத்தாய் **தொண்டுசெய்வார் வினை**
**கள்ள வைபோகப்**
பார்த்தாய் நுற்கிடமாம் பழி
யில்கழிப் பாலையதே. 6

அரையின்கண் பொருந்திய புலித்தோலின்மேல், ஆடுகின்ற பாம்பைக் கட்டியவனே! யானையின் உரிக்கப்பட்டதாகிய தோலைப் புலால் நாற்றம் வீசும்படி போர்த்துக் கொண்டவனே! உனக்குத் தொண்டு செய்வாரது வினைகள் நீங்கும்படி திருக்கண் நோக்கம் வைத்து அவர்களைக் காத்தருளினவனே! உனக்கு இடமாவது, புகழையுடைய திருக்கழிப்பாலையே.

---

**235.** பருத்தாள் வன்பகட்டைப் பட
பாகமுன் பற்றியதள்
உரித்தாய் யானையின்தோல் உலக
கந்தொழும் உத்தமனே
எரித்தாய் முப்புரமும் மிமை
யோர்க எிடர்கடியுங்
கருத்தா தண்கழனிக் கழிப்
பாலை மேயானே. 7

பருத்தாள் வன் பகடு – யானை. பரு – பெரிய; வன் – வலிய. படம் – போர்வை. கடியும் – போக்கும்.

உலகமெல்லாம் வணங்குகின்ற மேலானவனே! தேவர்களது துன்பத்தை நீக்கியருளுகின்ற தலைவனே! குளிர்ந்த கழனிகளையுடைய திருக்கழிப்பாலையில் விரும்பியெழுந்தருளி யிருப்பவனே! நீ முன்பு யானையின் தோலைப் போர்வையாக விரும்பி, பருத்த கால்களை யுடைய வலிய யானையைப் பிடித்து அதன் தோலை உரித்தாய்; முப்புரங்களையும் எரித்தாய்; இவை உனது வீரச் செயல்கள்.

---

**236.** படைத்தாய் ஞாலமெலாம் படர்
புன்சடை யெம்பரமா
உடைத்தாய் வேள்விதனை உமை
யாளையொர் கூறுடையாய்
அடர்த்தாய் வல்லரக்கன் தலை
பத்தொடு தோள்நெரியக்
கடற்சா ருங்கழனிக் கழிப்
பாலை மேயானே. 8

விரிந்த புல்லிய சடையினை யுடைய எங்கள் இறைவனே! உமையம்மையை ஒரு பாகத்தில் உடையவனே! கடலைச் சார்ந்த, கழனிகளையுடைய திருக்கழிப்பாலையில் விரும்பி எழுந்தருளியிருப்பவனே! நீ உலகம் எல்லாவற்றையும் படைத்தாய்; தக்கனது வேள்வியை அழித்தாய்; வலிய அரக்கனாகிய இராவணனது பத்துத் தலைகளோடு இருபது தோள்களும் நெரியும்படி நெருக்கினாய்; இவை உன் வல்லமைகள்!

"கல் நாடும் எயில் புடைசூழ் கழிப்பாலை"

என்பது தெய்வச் சேக்கிழார் வாக்கு. இத்திருக்கோயில் முன்னாளில் பெரிய கல்லாலியன்ற மதிற் கோயிலாக கொள்ளிட நதியின் கரையில் இருந்தமை அறியப்படும். அஃது ஆற்றின் வெள்ளத்தில் காணாமல் போனதால் இப்போது தனி ஆலயமாகச் சிவபுரியில் தாபிக்கப்பட்டுள்ளது.

237. பொய்யா நாவதனாற் புகழ்
வார்கள் மனத்தினுள்ளே
மெய்யே நின்றெரியும் விளக்
கேயொத்த தேவர்பிரான்
செய்யா னுங்கரிய நிறத்
தானுந் தெரிவரியான்
மையார் கண்ணியொடும் மகிழ்
வான்கழிப் பாலையதே. 9

பொய் கூறுதல் இல்லாத நாவினால் புகழ்கின்றவர்களது மனத்தில் அணையாது எரியும் விளக்கே போல விளக்கி நிற்கின்ற பெரிய தேவனும், செம்மை நிறமுடைய பிரமனும், கருமை நிறமுடைய திருமாலும் அறிதற்கரியவனும் ஆகிய சிவபிரான் திருக்கழிப்பாலையையே விரும்பி, மைபொருந்திய கண்களையுடைய உமாதேவி யோடும் எழுந்தருளியிருப்பான்.

மூவரைப் போலவே நாம் திருமுறைகள் பாடும்போதும் பலன் வேண்டுமாயின் பொய்யா நாவாக இருக்க வேண்டும்.

238. பழிசே ரில்புகழான் பர
மன்ப ரமேட்டி
கழியார் செல்வமல்குங் கழிப்
பாலை மேயானைத்
தொழுவான் நாவலர்கோன் ஆ
ரூரன் உரைத்ததமிழ்
வழுவா மாலைவல்லார் வா
னோருல காள்பவரே. 10

பழி பொருந்துதல் இல்லாத புகழையுடைய வனும், யாவர்க்கும் மேலானவனும் மேலிடத்தில் உள்ளவனும் ஆகிய கழியின்கண் பொருந்திய செல்வங்கள் பெருகுகின்ற திருக்கழிப் பாலையில் விரும்பி எழுந்தருளியிருக்கின்ற சிவபிரானை, அவனையே தொழுபவனாகிய திருநாவலூரார்க்குத் தலைவனாம் நம்பியாரூரன் பாடிய இத்தமிழ்ப் பாடல்களைத் தவறு உண்டாகாதபடி பாடவல்லவர்கள், தேவர் உலகத்தை ஆள்பவராவர்.

கழியார் செல்வம் – கடற்கழியின் வழி வந்து சாரும். முத்து, பவளம் முதலிய மணிகளும் ஏனைக் கடல்படு பண்டங்களும்.

## 24. திருமழபாடி

சுந்தரர், சோழநாட்டில் காவிரித்தென்கரையில் திருவாலம்பொழிலில் பெருமானை வணங்கித் தங்கி, இரவு துயில் கொள்ளும்போது பெருமான் கனவில் தோன்றி, "மழபாடியில் வருவதற்கு நினைக்க மறந்தாயோ?" என்று அருள, துயில் எழுந்து, காவிரி வடகரையில் திருமழபாடி அடைந்து, தொழுத பொழுது, இறைவர், வலிய வந்து அழைத்த கருணையை நினைந்துருகிப் பாடிய பதிகம்.

**பண் : நட்டராகம்** **பதிக எண் : 24**

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் பாலாம்பிகை, அழகம்மை உடனமர் அருள்மிகு வயிரத்தூண் நாதர். | | |
| **தல இருப்பிடம்** | சோழநாட்டில் காவிரி – கொள்ளிட வடகரை. திருச்சி – லால்குடி – திருமானூர் வழியில் திருச்சியிலிருந்து 50 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | பனை | | |
| **தீர்த்தம்** | இலட்சுமிதீர்த்தம், கொள்ளிடம் | | |
| **பாடியவர்** | மூவர் | **பதிகங்கள்** | 5 |

### தன் நேரில்லாப் பதிக மலர்

239. பொன்னார் மேனியனே புலித்
தோலை அரைக்கசைத்து
மின்னார் செஞ்சடைமேல் மிளிர்
கொன்றை யணிந்தவனே
மன்னே மாமணியே மழ
பாடியுள் மாணிக்கமே
அன்னே உன்னையல்லால் இனி
யாரை நினைக்கேனே. 1

பொன்போலும் திருமேனியை உடையவனே! இடையின்கண் புலித்தோலை உடுத்து, மின்னல் போலும் சடையின் கண், விளங்குகின்ற கொன்றை மாலையை அணிந்தவனே! தலைவனே! விலையுயர்ந்த இரத்தினம் போல்பவனே! திருமழபாடியுள் திகழும் மாணிக்கம் போல்பவனே! எனக்குத் தாய் போல்பவனே! இப்பொழுது உன்னையன்றி யான் வேறு யாரை நினைப்பேன்?

பதிப்பாசிரியர் உள்ளிட்ட பல்லாயிரக்கணக்கான அடியார்களின் மனனப் பாடலாகும்.

**240.** கீளார் கோவணமுந் திரு
நீறுமெய் பூசியுன்றன்
தாளே வந்தடைந்தேன் தலை
வாஎனை ஏன்றுகொள்நீ
வாளார் கண்ணிபங்கா மழ
பாடியுள் மாணிக்கமே
கேளா நின்னையல்லால் இனி
யாரை நினைக்கேனே. 2

கீளின்கண் பொருந்திய கோவணத்தையும் உடுத்து, திருநீற்றையும் திருமேனியிற் பூசினவனே! யாவர்க்கும் தலைவனே! வாள் போலும் கண்களையுடைய உமாதேவியை உடைய ஒரு பங்கினனே! திருமழபாடியில் திகழும் மாணிக்கம் போல்பவனே! அடியேன், உனது திருவடியையே புகலிடமாக வந்து அடைந்தேன், இனி உன்னையல்லாது வேறு யாரை எனக்கு உறவாக நினைப்பேன்? என்னை நீ ஏற்றுக்கொள்.

இப்பதிகத்தின் ஒப்பற்ற தன்மை அதனை இந்நாளிலும் பெரிதும் மக்கள் விரும்பிப் பயின்று வருதலால் அறியப்படும். கீள் – கோவணத்தோடு நெய்த அரை நாண் – கீளோடு கூடிய கௌபீனம்.
கேளா – கேள் ஆக – உறவினராக.

**241.** எம்மான் எம்மனையென் றனக்
கெட்டனைச் சார்வாகார்
இம்மா யப்பிறவி பிறந்
தேஇறந் தெய்த்தொழிந்தேன்
மைம்மாம் பூம்பொழில்சூழ் மழ
பாடியுள் மாணிக்கமே
அம்மான் நின்னையல்லால் இனி
யாரை நினைக்கேனே. 3

எம்மான் – என் தந்தை. எம் அ(ன்)னை – என்தாய் எள்தனை – எள்ளளவும். சார்வு – ஆதரவு. மை – மேகங்கள் தவழும்.

மேகம் தவழும் அழகிய மாஞ்சோலை சூழ்ந்த திருமழபாடியில் திகழும் மாணிக்கம் போல்பவனே! எங்கள் தலைவனே! 'என் தந்தை என் தாய்' என்று இவர்கள் எனக்கு எள்ளளவும் துணையாக மாட்டார்; அவர்களைத் துணையாக நினைத்துத்தான் இந்த நிலையில்லாத பிறவியை எடுத்துப் பின் பிறந்து இளைத்துப் போனேன்; ஆதலின், இப்பொழுது உன்னையல்லாது வேறு யாரை நினைப்பேன்?

**242.** பண்டே நின்னடியேன் அடி
யாரடி யார்கட்கெல்லாம்
தொண்டே பூண்டொழிந்தேன் தொட
ராமைத் துரிசறுத்தேன்
வண்டார் பூம்பொழில்சூழ் மழ
பாடியுள் மாணிக்கமே
அண்டா நின்னையல்லால் இனி
யாரை நினைக்கேனே. 4

பண்டே நின்னடியேன் – பூர்வீகமாகவே நான் உனக்கு அடியவன்.
துரிசு தொடராமை அறுத்தேன் – அடியார்கட்கு அடிமை பூண்டதனால் குற்றங்கள் என்னோடு தொடராமல் நீக்கிவிட்டேன்.
அண்டா – சிதாகாயத்தில் இருப்பவனே.

வண்டுகள் ஆரவாரிக்கின்ற பூஞ்சோலைகள் சூழ்ந்த திருமழபாடியில் திகழும் மாணிக்கம் போல்பவனே! வானுலகில் வாழ்பவனே! உனக்கு அடியவனாகிய யான், அப்பொழுதே உன் அடியார், அவர்க்கு அடியராயினார் ஆகிய எல்லார்க்கும் தொண்டு செய்தலை மேற்கொண்டுவிட்டேன்; உன்னோடாயினும், உன் அடியாரோடாயினும் தொடர்பு கொள்ளாத குற்றம் என்பால் இல்லாதவாறு அதனைக் களைந்தொழித்தேன்; ஆதலின் இனி, யான் உன்னையன்றி வேறு யாரை நினைப்பேன்?

243. கண்ணாய் ஏழுலகுங் கருத்
தாய அருத்தமுமாய்ப்
பண்ணார் இன்றமிழாய்ப் பர
மாய பரஞ்சுடரே
மண்ணார் பூம்பொழில்சூழ் மழ
பாடியுள் மாணிக்கமே
அண்ணா நின்னையல்லால் இனி
யாரை நினைக்கேனே. 5

ஏழுலகங்களிலும் உள்ள எல்லா உயிர்கட்கும் அறிவாகியும், அவை விரும்பப்படுகின்ற பொருள்களாகியும், பண் அமைந்த இனிய தமிழ்ப்பாடலாகியும், எல்லாப் பொருட்கும் மேலாயும் உள்ள மேலான ஒளியே! நிலம் நிறைந்த பூஞ்சோலைகள் சூழ்ந்த திருமழபாடியுள் திகழும் மாணிக்கம் போல்பவனே! தலைவனே! இப்பொழுது யான் உன்னைத் தவிர வேறு யாரை நினைப்பேன்?

"உலகு" என்றது அவற்றில் உள்ள உயிர்களையும் "கண்" என்றது அறிவையும், "கருத்து" என்றது கருதப்படுவதையும் என்க. அருத்தம் – செல்வம். கருத்தாய – விரும்பும்படியான பண்ணார். இன்றமிழ் – வீடுபேற்றுக்கு ஏதுவாகிய பண் அமைந்த இனிய தமிழ்ப் பாடல்கள். மண்ணார் – மாட்சிமை நிறைந்த.

244. நாளார் வந்தணுகி நலி
யாமுனம் நின்றனக்கே
ஆளா வந்தடைந்தேன் அடி
யேனையும் ஏன்றுகொள்நீ
**மாளா நாளருளும் மழ**
**பாடியுள் மாணிக்கமே**
ஆளாய் நின்னையல்லால் இனி
யாரை நினைக்கேனே. 6

அடியவர்கட்கு, முடிவில்லாத வாழ்நாளைக் கொடுக்கின்ற, திருமழபாடியில் திகழ்கின்ற மாணிக்கம் போல்பவனே! உனக்கு நான் ஆளாயினபின், உன்னையல்லாது வேறு யாரை நினைப்பேன்? எனக்கு இறுதிநாள் வந்து நெருங்கித் துன்புறுத்துவதற்கு முன்பே உனக்கு நான் ஆளாதற்பொருட்டு வந்து உன்னை அடைந்தேனாதலின், அடியேனையும் உனக்கு உரியவனாக நீ ஏற்றுக் கொண்டருள்.

நாளார் – எமதூதர். மாளாநாள் – முடிவில்லாத ஆயுள் – பிறப்பு இறப்பு இன்மை. ஆளா – என்னை ஆளாக உடையவனே.

245. சந்தா ருங்குழையாய் சடை
மேற்பிறை தாங்கிநல்ல
வெந்தார் வெண்பொடியாய் விடை
யேறிய வித்தகனே
மைந்தார் சோலைகள்சூழ் மழ
பாடியுள் மாணிக்கமே
எந்தாய் நின்னையல்லால் இனி
யாரை நினைக்கேனே. 7

பொருத்து வாய் உடைய குழையை அணிந்தவனே! சடையின்கண் பிறையைத் தாங்கியுள்ளவனே! வெந்து நிறைந்த நல்ல வெண்டிரு நீற்றை அணிந்தவனே! இடபத்தை ஏறும் ஊர்தியாகக் கொண்டு சதுரப்பாட்டினை உடையவனே! அழகு பொருந்திய சோலைகள் சூழ்ந்த திருமழபாடியுள் திகழும் மாணிக்கம் போல்பவனே! என் தந்தையே! நான் உன்னையல்லாது வேறு யாரை நினைப்பேன்?

மைந்து – வலிமை. சந்து ஆரும் – அழகு நிறைந்த. வித்தகன் – ஞானரூபி.

| | |
|---|---|
| **246.** வெய்ய விரிசுடரோன் மிகு<br>தேவர்கணங்க ளெல்லாம்<br>செய்ய மலர்களிட மிகு<br>செம்மையுள் நின்றவனே<br>மையார் பூம்பொழில்சூழ் மழ<br>பாடியுள் மாணிக்கமே<br>ஐயா நின்னையல்லால் இனி<br>யாரை நினைக்கேனே. 8 | வெப்பமான விரிகின்ற கதிர்களையுடைய பகலவன் முதலாக மிகுந்த தேவர் கூட்டங்கள் எல்லாம், நல்ல மலர்களை இட்டு வழிபட, அவர்கட்கு மிகவும் நேர் நின்று அருள் செய்கின்றவனே! இருள் நிறைந்த அழகிய சோலைகள் சூழ்ந்த திருமழபாடியுள் திகழ்கின்ற மாணிக்கம் போல்பவனே! என் தலைவனே! அடியேன் இப்பொழுது உன்னை யல்லாது வேறு யாரை நினைப்பேன்? |

பதிக மகுடம் – "நின்னையல்லால் யாரை நினைக்கேனே". இப்பதிகத்தைத் "தன்னேரில்லாப் பதிகமலர்" என்று சேக்கிழார் போற்றி மகிழ்கிறார்.
"அன்னே யுன்னை யல்லாலினி யாரை நினைக்கே" னெனவேத்தித்
தன்னே ரில்லாப் பதிகமலர் சாத்தித் தொழுது புறம்பணைந்து
மன்னும் பதியில் சிலநாள்கள் வைகித் தொண்டருடன் மகிழ்ந்து
பொன்னிக்கரையின் இருமருங்கும் பணிந்து மேற் போதுவார்.
மைஆர் – மேகங்கள் தவழும்.

| | |
|---|---|
| **247.** **நெறியே** நின்மலனே நெடு<br>மாலயன் போற்றிசெய்யும்<br>குறியே நீர்மையனே கொடி<br>யேரிடை யாள்தலைவா<br>மறிசேர் அங்கையனே மழ<br>பாடியுள் மாணிக்கமே<br>அறிவே நின்னையல்லால் இனி<br>யாரை நினைக்கேனே. 9 | உயிர்களுக்கு நன்னெறியாய் நிற்பவனே! மலத்தாற் பற்றப்படாதவனே! நீண்ட திருமாலும் பிரமனும் ஏத்தெடுக்கும் தியானப் பொருளே! நற்பண்புடையவனே! கொடிபோலும் இடையினையுடைய உமாதேவிக்குக் கணவனே! மான் கன்று பொருந்திய அகங்கையை யுடையவனே! திருமழபாடியுள் திகழும் மாணிக்கம் போல்பவனே! அறிவு வடிவானவனே! அடியேன். இப்பொழுது உன்னையல்லாது வேறு யாரை நினைப்பேன்? |

உயிர்களுக்கு அறம் பாவங்களை வகுத்து நடாத்துபவன் இறைவனேயாகலின் "நெறியே" என்று அருளினார்.
குறியே – குறிக்கொண்ட பொருளே; இலட்சியமே.
நீர்மையனே – மங்கள குணங்களை உடையவனே.

| | |
|---|---|
| **248.** ஏரார் முப்புரமும் மெரி<br>யச்சிலை தொட்டவனை<br>வாரார் கொங்கையுடன் மழ<br>பாடியுள் மேயவனைச்<br>சீரார் நாவலர்கோன் ஆ<br>ரூரன் உரைத்ததமிழ்<br>பாரோர் ஏத்தவல்லார் பர<br>லோகத் திருப்பாரே. 10 | அழகு பொருந்திய மூன்று புரங்களும் எரிந்தொழியுமாறு வில்லை வளைத்தவனும், கச்சால் கட்டப்பட்ட தனங்களையுடையவளாகிய உமாதேவியுடன் திருமழபாடியுள் விரும்பி வீற்றிருப்பவனும் ஆகிய சிவபெருமானை, புகழ் நிறைந்த திருநாவலூரில் உள்ளார்க்குத் தலைவனாகிய நம்பியாரூரன் பாடிய இத்தமிழ்ப் பாடல்களைப் பாட வல்லவர்களாகிய மக்கள், சிவலோகத்தில் இனிது வீற்றிருப்பார்கள். |

## 25. திருமுதுகுன்றம் (விருத்தாச்சலம்)

தம்பிரான் தோழர் திருஎதிர்கொள்பாடி, திருவேள்விக்குடி முதலான பதிகளை வணங்கித் திருவாரூரை அடைந்து திருமூலட்டானரைத் தொழுது புறம் போந்து பரவையார் மாளிகையை அடைந்து மகிழ்ச்சியுடன் இருந்து வந்தார். ஒருநாள் நம்பியாரூரர், பரவையாரை நோக்கி, 'திருமுதுகுன்றர் நமக்களித்த பொன்னை மணி முத்தாற்றில் புகும்படி இட்டோம். அதனை இத்தலத்துத் திருக்கோயிலுக்கு மேல்பாலுள்ள கமலாலயத் திருக்குளத்தில் பெருமான் அருளால் எடுத்துக்கொண்டு வருவோம்' என்று கூறிப் பரவையாரை அழைத்துச் சென்று கமலாலயத்தின் வடகீழ்ப்புறம் உள்ள கரையின் மேல்பால் பரவையாரை நிறுத்தித் திருக்குளத்தில் இறங்கித் தேடினார். இறைவர், நம்பியாரூரர் பாட்டைப் பெற விரும்பிப் பொன்னைக் குளத்தில் வருவியாதொழிந்தருளினார். அப்போழ்து அப்பொன்னைப் பெற விரும்பித் திருவாரூரில் இருந்து திருமுதுகுன்றத்துப் பெருமானைப் பாடிப் பரவியது இத்திருப்பதிகம்.

இத்திருப்பதிகம் 5 வேலிப் பரப்பளவில் தமிழ்நாட்டிலேயே அதனால் உலகத்திலேயே மிகப்பெரிய பரப்பளவு கொண்ட திருவாரூர் திருக்கோயில் கமலாலயத் திருக்குளக்கரையில் வடகீழ்ப்பக்கம் திருப்படியுள் நீரினுள் நின்றபடி நம்பிகள் திருமுதுகுன்றத்திறைவரை நோக்கிப் பாடியருளி முதுகுன்றம் மணிமுத்தாற்றில் இடப்பட்ட பொன்னைக் குளத்தில் எடுத்து "ஆற்றில் இட்டுக் குளத்தில் எடுக்கும்" பொன்மொழியை நிரூபணமாக்கினார்.

**பண் : நட்டராகம்** **பதிக எண் : 25**

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் பெரியநாயகி உடனமர் அருள்மிகு பழமலை நாதர். | | |
| **தல இருப்பிடம்** | நடுநாட்டில் விருத்தாச்சலம் நகரின் மையத்தில் நான்கு இராஜ கோபுரங்கள், 27 ஆகமக் கோயிலுடன் அமைந்து உள்ளது. | | |
| **தல மரம்** | வன்னி | | |
| **தீர்த்தம்** | மணிமுத்தாறு | | |
| **பாடியவர்** | மூவர் | **பதிகங்கள்** | 10 |

**249.** பொன்செய்த மேனியினீர் புலித்
தோலை அரைக்கசைத்தீர்
முன்செய்த மூவெயிலும் மெரித்
தீர்முது குன்றமர்ந்தீர்
மின்செய்த நுண்ணிடையாள் பர
வையிவள் தன்முகப்பே
என்செய்த வாறடிகேள் அடி
யேன்இட் டளங்கெடவே. 1

பொன்னைப்போலும் திருமேனியை உடையவரே! புலியினது தோலை அரையில் உடுத்தவரே! முன்னர் வரம் பெற்று உலகை அழிவு செய்த மூன்று மதில்களையும் எரித்தவரே! திருமுதுகுன்றத்தில் விரும்பி இருப்பவரே! அடிகளே! மின்னல் போலும் நுண்ணிய இடையையுடையவளும், 'பரவை' என்னும் பெயரினளுமாகிய இவள் முன்னே, அடியேனது துன்பங் கெடுதற்கு நீவிர் என் செய்தவாறு!

இட்டளம் – துன்பம். "இட்டளங்கெட என்செய்தவாறு" என்றது, "துன்பத்தை நீக்குகின்றீர்" என்று நினைத்து முயல்கின்ற எனக்கு நீர் துன்பத்தை ஆக்கினீர்" என்றபடி. பொன்னைப் பெறப் "பொன் செய்த" என்று பதிகத்தை ஆரம்பிக்கிறார். பொன்செய்த மேனி – பொன் போன்ற திருமேனி

**250.** **உம்பரும் வானவரும்** முட
னேநிற்க வேயெனக்குச்
செம்பொனைத் தந்தருளித் திக
மும்முது குன்றமர்ந்தீர்
வம்பம ருங்குழலாள் பர
வையிவள் வாடுகின்றாள்
எம்பெரு மான்அருளீர் அடி
யேன்இட் டளங்கெடவே. 2

எம் பெருமானிரே! நீர், முன்பு, வானத்தில் உள்ள தேவர்களும், அவர்கட்குமேல் உள்ள 'அயன், மால்' என்பவர்களும் கண்டுநிற்க எனக்குச் செம்பொன்னைக் கொடுத்து, விளங்குகின்ற திருமுதுகுன்றத்தில் எனக்குத் துணையாய் இருந்தீர்; இப்பொழுது, மணம் பொருந்திய கூந்தலையுடையவளும், 'பரவை' என்னும் பெயரினளும் ஆகிய இவள், பொருள் முட்டுப்பாட்டினால் மெலிகின்றாள்; அது பற்றிய அடியேனது துன்பங் கெடுமாறு அருள்செய்தல் வேண்டும்.

உம்பரும் வானவரும்
வானவர் – வானத்தில் உள்ள தேவர்.
உம்பர் – வானவர்க்கும் மேலோர். செம்பொன் – கரும்பொன், வெண்பொன் என்பவற்றிற்கும் மேலானது. தலைமை பற்றிக் கூறப்படுவது.

| பாடல் | பொருள் |
|---|---|
| 251. பத்தா பத்தர்களுக் கருள்<br>செய்யும் பரம்பரனே<br>முத்தா முக்கணனே முது<br>குன்றம் அமர்ந்தவனே<br>மைத்தா ருந்தடங்கண் பர<br>வையிவள் வாடாமே<br>அத்தா தந்தருளாய் அடி<br>யேன்இட் டளங்கெடவே. 3 | எப்பொருட்கும் பற்றுக்கோடானவனே! அடியார்களுக்கு அருள் பண்ணுகின்ற மேலான பொருட்கும் மேலானவனே! இயல்பாகவே பாசத்தின் நீங்கினவனே! மூன்று கண்களையுடையவனே! திருமுதுகுன்றத்தில் விரும்பி இருப்பவனே! என் அப்பனே! மை தீட்டப்பட்டு அழகு நிறைந்த பெரிய கண்களை யுடைய, 'பரவை' என்னும் பெயரினளாகிய இவள், பொருள் முட்டுப்பாட்டினால் வருந்தாதபடி, அடியேனது துன்பங்கெடுமாறு செம்பொன்னைத் தந்தருள். |
| 252. மங்கையொர் கூறமர்ந்தீர் மறை<br>நான்கும் விரித்துகந்தீர்<br>திங்கள் சடைக்கணிந்தீர் திக<br>ழும்முது குன்றமர்ந்தீர்<br>கொங்கைநல் லாள்பரவை குணங்<br>கொண்டிருந் தாள்முகப்பே<br>அங்கண னேயருளாய் அடி<br>யேன்இட் டளங்கெடவே. 4<br>அடியேன் இட்டளங்கெடவே – பதிக மகுடம் | உமையை ஒரு பாகத்தில் விரும்பி வைத்தவரே! வேதங்கள் நான்கினையும் விரித்து அருளிச் செய்து அதனை அறநூலாக விரும்பியவரே! சடையின்கண் சந்திரனை அணிந்தவரே! விளங்குகின்ற திருமுதுகுன்றத்தில் விரும்பி இருப்பவரே! கண்ணோட்டம் உடையவரே! தனங்கள் அழகியாளும், யான் சொல்லியதைச் சொல்லியவாறே கருதும் தன்மை உடையவளும், 'பரவை' என்னும் பெயரினளு மாகிய இவள் முன்னே, அடியேனது துன்பங் கெடுமாறு அருள்புரிதல் வேண்டும். |
| 253. மையா ரும்மிடற்றாய் மரு<br>வார்புர மூன்றெரித்த<br>செய்யார் மேனியனே திக<br>ழும்முது குன்றமர்ந்தாய்<br>பையா ரும்மரவே ரல்கு<br>லாளிவள் வாடுகின்றாள்<br>ஐயா தந்தருளாய் அடி<br>யேன்இட் டளங்கெடவே. 5 | மைபோலப் பொருந்திய கண்டத்தை யுடையவனே! பகைவரது மூன்று ஊர்களை எரித்த, செவ்விய அழகு நிறைந்த திருமேனி யையுடையவனே! விளங்குகின்ற திருமுதுகுன்றத்தில் விரும்பி இருப்பவனே! தலைவனே! பாம்பினிடத்துப் பொருந்தியுள்ள படம்போலும் எழுச்சியையுடைய அல்குலினை யுடைய பரவையாகிய இவள், பொருளின்றி வருந்துகின்றாள்; ஆதலின் அதுபற்றிய அடியேனது துன்பங்கெடுமாறு, செம் பொன்னைத் தந்தருள். |
| 254. நெடியான் நான்முகனும் மிர<br>வியொடும் இந்திரனும்<br>முடியால் வந்திறைஞ்ச முது<br>குன்றம் அமர்ந்தவனே<br>படியா ரும்மியலாள் பர<br>வையிவள் தன்முகப்பே<br>யடிகேள் தந்தருளீர் அடி<br>யேன்இட் டளங்கெடவே. 6<br>படி – தன்மை | திருமாலும், பிரமனும், சூரியனும், இந்திரனும் வந்து தலையால் வணங்கும்படி, திருமுதுகுன்றத்தில் விரும்பி இருப்பவனே! தலைவனே! பெண்மைப் பண்புகள் நிறைந்த இயல்பினை உடையவளும், 'பரவை' என்னும் பெயரினளுமாகிய இவள் முன்னே, அடியேனது துன்பங்கெடுமாறு செம்பொன்னைத் தந்தருள். |

| | |
|---|---|
| **255.** கொந்தண வும்பொழில்சூழ் குளிர்<br>மாமதில் மாளிகைமேல்<br>வந்தண வும்மதிசேர் சடை<br>மாமுது குன்றுடையாய்<br>பந்தண வும்விரலாள் பர<br>வையிவள் தன்முகப்பே<br>அந்தண னேயருளாய் அடி<br>யேன்இட் டளங்கெடவே. 7 | பூங்கொத்துக்கள் பொருந்திய சோலைகள் சூழ்ந்த குளிர்ந்த பெரிய மதில்கள் மேலும், மாளிகைகள் மேலும் வந்து தவழ்கின்ற சந்திரன் பொருந்திய சடையினை உடைய பெரிய திருமுது குன்றத்தையுடையவனே! அந்தணனே! பந்து பொருந்திய விரலை உடையவளும், 'பரவை' என்னும் பெயரினளும் ஆகிய இவள் முன்னே, அடியேனது துன்பங் கெடுமாறு அருள்பண்ணுவாய். |
| **256.** பரசா ருங்கரவா பதி<br>னெண்கண முஞ்சூழ<br>முரசார் வந்ததிர முது<br>குன்றம் அமர்ந்தவனே<br>விரைசே ருங்குழலாள் பர<br>வையிவள் தன்முகப்பே<br>அரசே தந்தருளாய் அடி<br>யேன்இட் டளங்கெடவே. 8 | மழுப் பொருந்திய கையை யுடையவனே! பதினெண் கணங்களும் புடை சூழவும், முரசு அணுக வந்து முழங்கவும் திருமுதுகுன்றத்தில் விரும்பி இருப்பவனே! எல்லா உலகிற்கும் அரசனே! நறுமணம் பொருந்திய கூந்தலையுடையவளும், 'பரவை' என்னும் பெயரினளும் ஆகிய இவள் முன்னே, அடியேனது துன்பங் கெடுமாறு செம்பொன்னைத் தந்தருள். |
| **257.** **ஏத்தா திருந்தறியேன்** இமை<br>யோர்தனி நாயகனே<br>மூத்தாய் உலகுக்கெல்லா முது<br>குன்றம் அமர்ந்தவனே<br>பூத்தா ருங்குழலாள் பர<br>வையிவள் தன்முகப்பே<br>கூத்தா **தந்தருளாய்** கொடி<br>யேன்இட் டளங்கெடவே. 9 | தேவர்கட்கு ஒப்பற்ற தலைவனே! எல்லா உயிர்கட்கும் மூத்தவனே! திருமுதுகுன்றத்தில் விரும்பி இருப்பவனே! கூத்துடையானே! உன்னை யான் பாடாமல் இருந்தறியேன்; ஆதலின், மலர்கள் மலர்ந்து பொருந்துகின்ற கூந்தலையுடையவளும் 'பரவை' என்னும் பெயரினளும் ஆகிய இவள் முன்னே, அடியேனது துன்பங் கெடுமாறு செம்பொன்னைத் தந்தருள். |

ஏத்தா திருந்தறியேன் தந்தருளாய் – பாடாமல் (கு) தேடியதால் தாராதொழிந்தார். பாடியபின் தாராதொழில் ஒவ்வாது. இப்பாடல் பாடிய பின் தான் பொருள் கிடைத்தது.

| | |
|---|---|
| **258.** பிறையா ருஞ்சடையெம் பெரு<br>மானரு ளாயென்று<br>முறையால் வந்தமரர் வணங்<br>கும்முது குன்றர்தம்மை<br>மறையார் தங்குரிசில் வயல்<br>நாவலா ரூரன்சொன்ன<br>இறையார் பாடல்வல்லார்க் கெளி<br>தாஞ்சிவ லோகமதே. 10 | தேவர்கள் பலரும் தம் வரிசைக்கேற்ப முறையாக வந்து வணங்கும் திருமுதுகுன்றரை, அந்தணர் தலைவனும், வயல்களையுடைய திருநாவலூரினனும் ஆகிய நம்பியாரூரன், 'பிறை பொருந்திய சடையினையுடைய எம்பெருமானே அருள்புரியாய்' என்று வேண்டிப் பாடிய, இறைவனது திருவருள் நிறைந்த இப்பாடல்களை நன்கு பாடவல்லவர்க்குச் சிவலோகம் எளிய பொருளாய்விடும். |

குரிசில் – தலைவன்.

## 26. திருக்காளத்தி

(தாம் சிவபெருமானையன்றிப் பிறிதொரு தெய்வத்தை எண்ணாமையை எடுத்தோதித் தமக்கு அருள் செய்யுமாறு வேண்டியருளியது)

பண் : நட்டராகம் பதிக எண் : 26

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் ஞானப்பூங்கோதை உடனமர் அருள்மிகு காளத்திநாதர். | | |
| **தல இருப்பிடம்** | தொண்டை நாட்டில் தற்போதைய ஆந்திரமாநிலம் சித்தூரில் ரேணிகுண்டா அருகில் சென்னையிலிருந்து 110 கி.மீ. திருப்பதியிலிருந்து 40 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | மகிழ மரம், அகண்ட வில்வம் | | |
| **தீர்த்தம்** | பொன் முகலி ஆறு | | |
| **பாடியவர்** | மூவர் | **பதிகங்கள்** | 4 |

259. செண்டா டும்விடையாய் சிவ
னேயென் செழுஞ்சுடரே
வண்டா ருங்குழலா ளுமை
பாக மகிழ்ந்தவனே
**கண்டார் காதலிக்குங் கண**
**நாதனெங் காளத்தியாய்**
அண்டா வுன்னையல்லால் அறிந்
தேத்த மாட்டேனே. 1

விரைந்து நடக்கும் இடப வாகனத்தை உடையவனே! சிவபெருமானே! செழுமையான ஒளி வடிவினனே! வண்டுகள் நிறையச் சூழும் கூந்தலையுடைய உமையம்மையை ஒரு பாகத்தில் விரும்பிக் கொண்டவனே! உன்னைக் கண்டவர் பின்பு நீங்காது பேரன்பு செய்யப்படுபவனே! பூதக் கூட்டத்திற்கு அரசனே! திருக்காளத்தியில் எழுந்தருளி யிருக்கும் எம்பெருமானே! பரவெளியில் விளங்குபவனே! அடியேன் உன்னையல்லாது பிறரைக் கடவுளராக அறிந்து போற்றுதலே இலன்; ஆதலின், அடியேனுக்கு அருள் பண்ணுதல் வேண்டும்.

கணநாதன் – காளத்தியார் திருநாமங்களில் ஒன்று.

வண்டாருங் குழலாள் – இயற்கை மணமுடைய கூந்தல் ஆதலின் சூடும் மலர்களால் அன்றி இயல்பாகவே வண்டுகள் நிறையும் என்க. "கொங்கு தேர் வாழ்க்கை என்ற இறைவர் பாட்டை நினைவு கூர்வோமாக".
கண்டார் காதலிக்கும் – "மேவினார் பிரிய மாட்டா விமலனார்"
கண்டார் – இவரது பரங்கருணைத் திறத்தை உணர்ந்த பக்குவர்.
– இவரால் முன்பே காணப்பட்டவர்.
– ஏகநாயகனைக் கண்டார். வந்தவர் குருதி கண்டார். ஊனுக்கூன் என்னும் உரைகண்டார். நின்ற செங்குருதி கண்டார். குருதி பாயக் கண்டனர். காணப்பட்ட கணநாதன்.

| | |
|---|---|
| **260.** இமையோர் நாயகனே இறை<br>வாஎன் இடர்த்துணையே<br>கமையார் கருணையினாய் கரு<br>மாமுகில் போன்மிடற்றாய்<br>உமையார் கூறுடையாய் உரு<br>வேதிருக் காளத்தியுள்<br>அமைவே யுன்னையல்லால் அறிந்<br>தேத்த மாட்டேனே. 2<br><br>இடர்த்துணை – இடர் நீக்கும் துணை.<br>– நோய் மருந்து என்பது போல. | தேவர்கட்குத் தலைவனே! கடவுளே! என் துன்பங்களை விலக்குதற்குத் துணையாய் நின்று உதவுபவனே! பொறுமை நிறைந்த அருளையுடையவனே! கரிய பெரிய மேகம் போலும் கண்டத்தை யுடையவனே உமையம்மையை ஒரு பாகத்தில் உடைய அவ்வடிவத்தை உடையவனே! திருக்காளத்தியுள் எழுந்தருளியிருப்பவனே! அடியேன்! உன்னையன்றிப் பிறரைக் கடவுளராக அறிந்து போற்றுதலே இலன்; ஆதலின், எனக்கு அருள்பண்ணுதல் வேண்டும். |
| **261.** படையார் வெண்மழுவா பக<br>லோன்பல் லுகுத்தவனே<br>விடையார் வேதியனே விளங்<br>குங்குழைக் காதுடையாய்<br>கடையார் மாளிகைசூழ் கண<br>நாதனெங் காளத்தியாய்<br>உடையாய் உன்னையல்லால் உகந்<br>தேத்த மாட்டேனே. 3 | படைக்கலமாகப் பொருந்திய வெள்ளிய மழுவை உடையவனே! சூரியனது பல்லை உதிர்த்தவனே! இடபத்தின்கண் பொருந்தும் அந்தணனே! ஒளிவிடுகின்ற குழையையணிந்த காதினை உடையவனே! அழகிய வாயில்கள் பொருந்திய மாளிகைகள் சூழ்ந்த திருக்காளத்தியில் எழுந்தருளியிருப்பவனே! பூதகண நாதனே! என்னை உடையவனே! அடியேன் உன்னையல்லது, பிறரை விரும்பிப் போற்றுதலே இலன்; ஆதலின் எனக்கு அருள் பண்ணுதல் வேண்டும். |
| **262.** மறிசேர் கையினனே மத<br>மாவுரி போர்த்தவனே<br>குறியே என்னுடைய குரு<br>வேஉன்குற் றேவல்செய்வேன்<br>நெறியே நின்றடியார் நினைக்<br>குந்திருக் காளத்தியுள்<br>அறிவே யுன்னையல்லால் அறிந்<br>தேத்த மாட்டேனே. 4<br><br>மறி – மான். குறி – குறிக்கோள். | மான் கன்று பொருந்திய கையை உடையவனே! மதம் பொருந்திய யானையின் தோலைப் போர்த்தவனே! யாவராலும் குறிக் கொள்ளப்படும் பொருளே! என்னை மாணாக்கனாக உடைய ஆசிரியனே! அடியவர்கள் நன்னெறிக் கண்ணே நின்று நினைக்கின்ற திருக்காளத்தியுள் எழுந்தருளியிருக்கின்ற அறிவுருவனே! அடியேன் உன்னையல்லாது பிறரைக் கடவுளராக அறிந்து போற்றுதலே இலன்; உனது சிறு பணிவிடைகளையே செய்வேன்; ஆதலின், எனக்கு அருள் பண்ணுதல் வேண்டும். |

263. செஞ்சே லன்னகண்ணார் திறத்
தேகிடந் துற்றலறி
நஞ்சேன் நானடியேன் நல
மொன்றறி யாமையினால்
துஞ்சேன் நானொருகாற் றொழு
தேன்றிருக் காளத்தியாய்
அஞ்சா துன்னையல்லால் அறிந்
தேத்த மாட்டேனே. 5

திருக்காளத்தியில் எழுந்தருளியிருப்பவனே! உன் அடியவனாகிய நான், நன்மை ஒன்றையே உணர்ந்து நில்லாத காரணத்தால், சிவந்த சேல் போலும் கண்களையுடைய மாதர் கூற்றிலே கிடந்து, மிகக்கதறி வருந்தினேன்; அதனிடையே ஒரொருகால், நான் மடிந்திராது உன்னை வணங்கினேன்; எவ்வாறாயினும் அச்சமின்றி உன்னை யல்லது பிறரைக் கடவுளராக அறிந்து போற்றுதலைச் செய்தலே இலன்; ஆதலின், எனக்கு அருள் பண்ணுதல் வேண்டும்.

264. பொய்யவ னாயடியேன் புக
வேநெறியொன் றறியேன்
செய்யவ னாகிவந்திங் கிட
ரானவை தீர்த்தவனே
மெய்யவ னேதிருவே விளங்
குந்திருக் காளத்திஎன்
ஐயநுன் றன்னையல் லால்அறிந்
தேத்த மாட்டேனே. 6

"உன்னையல்லால் அறிந்தேத்த மாட்டேனே" பதிக மகுடம்.

நடுவுநிலைமையை உடையவனாகி வந்து, பொய்யை உடையவனும், நாய்போலும் அடியவனும், அழிவில் இன்பத்துள் புகுதற்கு வழி ஒன்றும் அறியாதவனும் ஆகிய எனது துன்பங்களை யெல்லாம் நீக்கி ஆட்கொண்ட பெருமானே! உண்மை வடிவினனே! பேரின்பமானவனே! புகழுடையதாகிய திருக்காளத்தியில் எழுந்தருளியிருப்பவனே! என் தலைவனே! அடியேன். உன்னையன்றிப் பிறரைக் கடவுளாக அறிந்து போற்றுதலே இலன்; ஆதலின், எனக்கு அருள் பண்ணுதல் வேண்டும்.

265. கடியேன் காதன்மையாற் கழற்
போதறி யாதவென்னுள்
குடியாக் கோயில்கொண்ட குளிர்
வார்சடை யெங்குழகா
முடியால் வானவர்கள் முயங்
குந்திருக் காளத்தியாய்
அடியே னுன்னையல்லால் அறி
யேன்மற் றொருவரையே. 7

முடியால் முயங்கும் – தலையால் வணங்கும்.

வன்கண்மை உடையவனும், அன்போடு உன் திருவடித் தாமரைகளை உணர்தலைச் செய்யாதவனும் ஆகிய என் நெஞ்சம் உனக்கு உறைவிடமாகுமாறு அதனைக் கோயிலாகக் கொண்டு எழுந்தருளியிருக்கின்ற, குளிர்ந்த, நீண்ட சடையை உடைய எங்கள் அழகனே! தேவர்கள் தம் தலையினால் திருவடியைச் சேர்கின்ற திருக்காளத்திப் பெருமானே! அடியேன் உன்னையன்றி மற்றொருவரைக் கடவுளராக அறிதலே இலன்; ஆதலின், எனக்கு அருள் பண்ணுதல் வேண்டும்.

| | |
|---|---|
| **266.** நீறார் மேனியனே நிம<br>லாநினை யன்றிமற்றுக்<br>கூறேன் நாவதனாற் கொழுந்<br>தேயென் குணக்கடலே<br>பாறார் வெண்டலையிற் பலி<br>கொண்டுழல் காளத்தியாய்<br>ஏறே யுன்னையல்லால் இனி<br>ஏத்த மாட்டேனே. 8<br><br>ஏறே – ஆண் சிங்கமே.<br>பாறு ஆர் – பருந்துகள் சூழ்ந்துள்ள | திருநீறு நிறைந்த திருமேனியை உடையவனே! தூயவனே! தலையாயவனே! எனக்கு அருட்கடலாய் நிற்பவனே! பருந்து சூழும் வெள்ளிய தலையில் பிச்சையேற்றுத் திரியும், திருக்காளத்திப் பெருமானே! ஆண் சிங்கம் போல்பவனே, அடியேன் உன்னையறிந்தபின் உன்னையன்றிப் பிறர் ஒருவரைப் போற்றுதலே இலன்; என் நாவால் ஒன்று சொல்வதாயின், உன்னையன்றி மற்றொரு பொருளைச் சொல்லுதல்தானும் இலேன்; ஆதலின், எனக்கு அருள் பண்ணுதல் வேண்டும். |
| **267.** தளிர்போல் மெல்லடியாள் தனை<br>யாகத் தமர்ந்தருளி<br>**எளிவாய் வந்தெனுள்ளம் புகு**<br>**தவல்ல எம்பெருமான்**<br>களியார் வண்டறையுந் திருக்<br>காளத்தி யுள்ளிருந்த<br>ஒளியே யுன்னையல்லால் இனி<br>யொன்று முணரேனே. 9 | தளிர்போலும் மெல்லிய பாதங்களையுடைய உமாதேவியைத் திருமேனியில் விரும்பி வைத்தருளி, எளிமை உண்டாக என் உள்ளத்தில் புகவல்ல எம்பெருமானே! மலர்களில் களிப்புப் பொருந்திய வண்டுகள் ஒலிக்கின்ற திருக்காளத்தியில் எழுந்தருளி யிருக்கின்ற அறிவு வடிவனே! அடியேன் உன்னையன்றி மற்றொரு பொருளையும் உணர்தலே இலன்; ஆதலின், எனக்கு அருள் பண்ணுதல் வேண்டும். |
| **268.** காரூ ரும்பொழில்சூழ் கண<br>நாதனெங் காளத்தியுள்<br>ஆரா இன்னமுதை அணி<br>நாவலா ரூரன்சொன்ன<br>சீரூர் செந்தமிழ்கள் செப்பு<br>வார்வினை யாயினபோய்ப்<br>பேரா விண்ணுலகம் பெறு<br>வார்பிழைப் பொன்றிலரே. 10<br><br>ஆரா – தெவிட்டாத<br>பேரா – நிலைபெயராத<br>பிழைப்பு – பிழை, தவறு, குற்றம். | மேகம் நிறைந்த சோலைகள் சூழ்ந்த திருக்காளத்தியுள் எழுந்தருளியிருக்கின்ற எங்கள் சிவபெருமானாகிய தெவிட்டாத இனிய அமுதம் போல்வானை, அழகிய திருநாவலூரில் தோன்றிய நம்பியாரூரன் பாடிய புகழ் மிக்க இச்செந்தமிழ்ப் பாடல்களைச் சொல்லுகின்றவர்கள், வினையாய் உள்ளன யாவும் நீங்கப்பெற்று, சிவலோகத்தை அடைவார்கள்; குற்றம் யாதும் இலராவர். |

## 27. திருக்கற்குடி (உய்யக்கொண்டான் மலை)

பண் : நட்டராகம் | பதிக எண் : 27

| மூர்த்தி | அருள்தரும் மைவிழியம்மை உடனமர் அருள்மிகு கற்பகநாதர். | | |
| --- | --- | --- | --- |
| தல இருப்பிடம் | சோழ நாட்டில் காவிரி வடகரையில் திருச்சிராப்பள்ளி மாநகரில் நகரின் மேற்றிசையில் அருகில் அமைந்து உள்ளது. | | |
| தல மரம் | வில்வம் | | |
| தீர்த்தம் | நாற்கோண, எண்கோண தீர்த்தம், குடமுருட்டி, ஞானவாவி, பொன்னொளி ஓடை | | |
| பாடியவர் | மூவர் | பதிகங்கள் | 3 |

269. விடையாருங்கொடியாய் வெறி
யார்மலர்க் கொன்றையினாய்
படையார் வெண்மழுவா பர
மாய பரம்பரனே
கடியார் பூம்பொழில்சூழ் திருக்
கற்குடி மன்னிநின்ற
அடிகே ளெம்பெருமான் அடி
யேனையும் அஞ்சலென்னே. 1

இடபம் எழுதப்பெற்ற கொடியை உடையவனே! நறுமணம் பொருந்திய கொன்றை மாலையை அணிந்தவனே! படைக்கலமாகப் பொருந்திய கூரிய மழுவை ஏந்தியவனே! மேலார்க்கும் மேலானவனே! மணம் நிறைந்த பூஞ்சோலைகள் சூழ்ந்த திருக்கற்குடியில் நிலையாக எழுந்தருளியிருக்கும் தலைவனே! எங்கள் கடவுளே! அடியேனையும், **'அஞ்சாதி'** எனச் சொல்லி உய்யக் கொண்டருள்.

பரம் – யாவரினும் தீர மேலானவன். பரம்பரன் – மேலவர்க்கு மேலானவன்.

பதிக மகுடம் – "அடியேனையும் அஞ்சலென்னே" என்பதாகும். அஞ்சலீர் என்று அல்லற் காலத்தில் சொல்லி உய்யக் கொண்டமையால் இது உய்யக் கொண்டான் மலை என்றழைக்கப்படுகிறது.

வெறி – வாசனை

270. மறையோர் வானவருந் தொழு
தேத்தி வணங்கநின்ற
இறைவா எம்பெருமான் எனக்
கின்னமு தாயவனே
கறையார் சோலைகள்சூழ் திருக்
கற்குடி மன்னிநின்ற
அறவா அங்கணனே அடி
யேனையும் அஞ்சலென்னே. 2

அந்தணரும், அமரரும் கைகூப்பித் தொழுது அடி பணிய நிற்கும் இறைவனே! எம்பெருமானே! எனக்கு இனிய அமுதமாய் உள்ளவனே! இருள் நிறைந்த சோலைகள் சூழ்ந்த திருக்கற்குடியில் நிலையாக எழுந்தருளியிருக்கின்ற அறவடிவினனே! அழகிய கண்களையுடையவனே! அடியேனையும், **'அஞ்சாதி'** எனச் சொல்லி உய்யக் கொண்டருள்.

கறைஆர் – கருமை நிறைந்த.
அறவா – தரும வடிவினனே.

271. சிலையால் முப்புரங்கள் பொடி
யாகச் சிதைத்தவனே
**மலைமேல் மாமருந்தே** மட
மாதிடங் கொண்டவனே
கலைசேர் கையினனே திருக்
கற்குடி மன்னிநின்ற
அலைசேர் செஞ்சடையாய் அடி
யேனையும் அஞ்சலென்னே. 3

வில்லால், திரிபுரங்கள் சாம்பலாகும்படி அழித்தவனே! மலைமேல் உள்ள அரிய மருந்து போல்பவனே! இளமை பொருந்திய மாது ஒருத்தியை இடப்பாகத்திற் கொண்டவனே! மான் பொருந்திய கையை உடையவனே! திருக்கற்குடியில் நிலையாக எழுந்தருளி யிருக்கின்ற, நீர் பொருந்திய சிவந்த சடையை உடையவனே! அடியேனையும், **'அஞ்சாதி'** என்று சொல்லி உய்யக் கொண்டருள்.

இத்தலத்தில் இறைவன் மலைமேல் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ளான். மலைமேல் உள்ள மருந்து கிடைத்தற்கரியது. மடமாது – இளம் பெண். கலை – மான்.

272. செய்யார் மேனியனே திரு
நீல மிடற்றினனே
மையார் கண்ணிபங்கா மத
யானை யுரித்தவனே
கையார் சூலத்தினாய் திருக்
கற்குடி மன்னிநின்ற
ஐயா எம்பெருமான் அடி
யேனையும் அஞ்சலென்னே. 4

செம்மை நிறம் பொருந்திய திருமேனியை உடையவனே! அழகிய நீல நிறமான கண்டத்தை உடையவனே! மை பொருந்திய கண்களை உடைய மங்கையது ஒரு பாகத்தை விரும்பிக் கொண்டவனே! மதம் பொருந்திய யானையை உரித்தவனே! கையில் பொருந்திய சூலத்தை உடையவனே! திருக்கற்குடியில் நிலையாக எழுந்தருளியிருக்கின்ற தலைவனே! எங்கள் கடவுளே! அடியேனையும், **'அஞ்சாதி'** என்று சொல்லி உய்யக் கொண்டருள்.

**273.** சந்தா வெண்குழையாய் சரி
கோவண ஆடையனே
பந்தா ரும்விரலாள் ஒரு
பாக மமர்ந்தவனே
கந்தார் சோலைகள்சூழ் திருக்
கற்குடி மன்னிநின்ற
எந்தாய் எம்பெருமான் அடி
யேனையும் ஏன்றுகொள்ளே. 5

அழகு நிறைந்த வெள்ளிய குழையை அணிந்தவனே! சரிந்த கோவணமாக உடுக்கப்பட்ட ஆடையை உடையவனே! பந்தின்கண் பொருந்திய விரல்களையுடைய உமையை ஒரு பாகத்தில் விரும்பிக் கொண்டவனே! நறுமணம் நிறைந்த சோலைகள் சூழ்ந்த திருக்கற்குடியில் நிலையாக எழுந்தருளியிருக்கின்ற என் தந்தையே! எங்கள் கடவுளே! அடியேனையும் ஏன்று உய்யக் கொண்டருள்.

சந்து – பெருமை; புகழ். கந்து – மணம்.
ஏன்றுகொள்ளுதல் – ஏற்றுக் கொள்ளுதல் – வீழ்ந்து படாமல் தாங்கிக் கொள்ளுதல்.

---

**274.** அரையார் கீளொடுகோ வண
மும்மர வும்மசைத்து
விரையார் கொன்றையுடன் விளங்
கும்பிறை மேலுடையாய்
கரையா ரும்வயல்சூழ் திருக்
கற்குடி மன்னிநின்ற
அரையா எம்பெருமான் அடி
யேனையும் அஞ்சலென்னே. 6

அரை வெறுவிதாகாது நிரம்புதற்குரிய கீளையுங் கோவணத்தையும் அரையின்கண் கட்டி, நறுமணம் பொருந்திய கொன்றை மாலையோடு, ஒளி விளங்குகின்ற பிறையையும் சடையிடத்து உடையவனே! வரம்புகள் நீரால் நிறையும் வயல்கள் சூழ்ந்த திருக்கற்குடியில் நிலையாக எழுந்தருளியிருக்கின்ற அரசனே! எங்கள் இறைவனே! அடியேனையும், **‘அஞ்சாதி’** என்று சொல்லி உய்யக் கொண்டருள்

---

**275.** பாரார் விண்ணவரும் பர
விப்பணிந் தேத்தநின்ற
சீரார் மேனியனே திகழ்
நீல மிடற்றினனே
காரார் பூம்பொழில்சூழ் திருக்
கற்குடி மன்னிநின்ற
ஆரா இன்னமுதே அடி
யேனையும் அஞ்சலென்னே. 7

மண்ணுலகத்தவரும், விண்ணுலகத்தவரும் பணிந்து முன்னிலையாகப் பரவவும், படர்க்கையாகப் புகழவும் நிற்கின்ற, அழகு பொருந்திய உருவத் திருமேனியை உடையவனே! விளங்குகின்ற நீல நிறத்தையுடைய கண்டத்தையுடையவனே! மேகங்கள் தவழும் பூஞ்சோலைகள் சூழ்ந்த திருக்கற்குடியில் நிலையாக எழுந்தருளியிருக்கின்ற, தெவிட்டாத அமுதமாய் உள்ளவனே! அடியேனையும், **‘அஞ்சாதி’** என்று சொல்லி உய்யக் கொண்டருள்

ஆரா – தெவிட்டாத

276. நிலனே நீர்வளிதீ நெடு
வானக மாகிநின்ற
புலனே புண்டரிகத் தயன்
மாலவன் போற்றிசெய்யும்
கனலே கற்பகமே திருக்
கற்குடி மன்னிநின்ற
அனல்சேர் கையினனே அடி
யேனையும் அஞ்சலென்னே. 8

நிலமே, நீரே, தீயே, காற்றே, நீண்டவானமே என்னும் ஐந்துமாகி நிற்கும் பெரும்பொருளாய் உள்ளவனே! தாமரை மலரில் உள்ள பிரமன், மாயோன் இருவரும் போற்றி நின்ற நெருப்பாகிய தோற்றத்தை உடையவனே! கற்பகத்தருப் போல்பவனே! திருக்கற்குடியில் நிலையாக எழுந்தருளியிருக்கின்ற, தீயேந்திய கையை உடையவனே! அடியேனையும், **'அஞ்சாதி'** என்ற சொல்லி உய்யக் கொண்டருள்.

புலனே – அறியப்படுபவனே!
கனலே – அனல் தூணாய் நின்றவனே!

277. வருங்கா லன்னுயிரை மடி
யத்திரு மெல்விரலால்
பெரும்பா லன்றனக்காய்ப் பிரி
வித்த பெருந்தகையே
கரும்பா ரும்வயல்சூழ் திருக்
கற்குடி மன்னிநின்ற
விரும்பா எம்பெருமான் அடி
யேனையும் அஞ்சலென்னே. 9

பெருமை பொருந்திய சிறுவனுக்குச் சார்பாகி, அவன்மேல் வந்த கூற்றுவன் மடியும்படி, அவனது உயிரைத் திருவடியிலுள்ள மெல்லிய விரல்களால் பிரியும்படி செய்த பெருந்தகை யாளனே! கரும்புகள் நிறைந்த வயல்கள் சூழ்ந்த திருக்கற்குடியில் நிலையாக எழுந்தருளி யிருக்கின்ற நம்பனே! எங்கள் இறைவனே! அடியேனையும் நின் அருட்கு உரியவருள் ஒருவனாக விரும்பிக் கொள்.

காலனுக்கும் விரல்தான். இராவணனுக்கும் விரல்தான். பெரும்பாலன் – மார்க்கண்டேயன்.

278. அலையார் தண்புனல்சூழ்ந் தழ
காகி விழவமரும்
கலையார் மாதவர்சேர் திருக்
கற்குடிக் கற்பகத்தைச்
சிலையார் வாணுதலாள் நல்ல
சிங்கடி யப்பனுரை
விலையார் மாலைவல்லார் வியன்
மூவுல காள்பவரே. 10

அலை நிறைந்த தண்ணிய நீரால் சூழப்பட்டு அழகுடையதாகி விழாக்கள் நீங்காதிருக்கின்ற, கலை ஞானங்கள் நிறைந்த பெரிய தவத்தவர் சேர்கின்ற திருக்கற்குடியில் எழுந்தருளி யிருக்கின்ற கற்பகம் போல்பவனை, விற்போலும் ஒளி பொருந்திய நெற்றியையுடைய நல்ல, சிங்கடி என்பாளுக்குத் தந்தையாகிய நம்பியாரூரன் பாடிய, விலை மிகுந்த இத்தமிழ்ப் பாமாலையைப் பாட வல்லவர்கள், அகன்ற மூன்றுலகத்தையும் ஆளுதற்கு உரியவராவர்.

சிங்கடி, வனப்பகை இருவரும் கோட்புலிநாயனாரின் மக்கள். அவர்களை நம்பி ஆரூரர் தம் மக்களாக ஏற்றுக் கொண்டார்.

கலைஆர் – கலைகளில் தேர்ச்சி பெற்ற.

## 28. திருக்கடவூர் வீரட்டம்

பண் : நட்டராகம் | பதிக எண் : 28

| | |
|---|---|
| மூர்த்தி | அருள்தரும் அபிராமியம்மை உடனமர் அருள்மிகு அமிர்தகடேசுவரர். |
| தல இருப்பிடம் | சோழ நாட்டில் காவிரியின் தென்கரையில் மயிலாடுதுறையிலிருந்து தரங்கம்பாடி சாலையில் 20 கி.மீ. தொலைவில் அமைந்து உள்ளது. |
| தல மரம் | வில்வம், பிஞ்சிலம், சாதிமுல்லை |
| தீர்த்தம் | அமிர்த புஷ்கரணி, காலதீர்த்தம் |
| பாடியவர் | மூவர் — பதிகங்கள் 5 |

**279.** பொடியார் மேனியனே புரி
நூலொரு பாற்பொருந்த
வடியார் மூவிலைவேல் வள
ரங்கையின் மங்கையொடும்
கடியார் கொன்றையனே கட
வூர்தனுள் வீரட்டத்தெம்
அடிகேள் என்னமுதே எனக்
கார்துணை நீயலதே. 1

'எனக்கு உரியதாகக் கிடைத்த அமுது' என்னமுது. இத்தலத்துப் பெருமானின் பெயர் அமுதகடேசர் என வழங்குதலால் பெரும்பான்மைப் பாடல்களை அமுதே என்று ஓதினார். பொடி – திருநீறு.
வடியார் – கூர்மைபொருந்திய.

திருவெண்ணீறு நிறைந்த திருமேனியை உடையவனே! புரியாகிய நூல், ஒருபால் மாதினோடும் மற்றொருபாற் பொருந்தி விளங்க, கூர்மை பொருந்திய முத்தலை வேல் (சூலம்) நீங்காதிருக்கின்ற அகங்கையினை உடைய, நறுமணம் பொருந்திய கொன்றை மாலையை அணிந்தவனே! திருக்கடவூரினுள், 'வீரட்டம்' என்னும் கோயிலில் எழுந்தருளியிருக்கின்ற எங்கள் தலைவனே! என்னுடைய அமுதம் போல்பவனே! எனக்கு நீயல்லாது வேறு யார் துணை!

**280.** பிறையா ருஞ்சடையாய் பிர
மன்தலை யிற்பலிகொள்
மறையார் வானவனே மறை
யின்பொரு ளானவனே
கறையா ரும்மிடற்றாய் கட
வூர்தனுள் வீரட்டத்தெம்
இறைவா **என்னமுதே** எனக்
கார்துணை நீயலதே. 2

மறையை – ஆர்த்தல் (ஓதுதல்), பலியேற்குமிடத்தில் என்க. கறை – விடம்.

பிறை பொருந்திய சடையை உடையவனே! பிரமன் தலையைக் கையில் ஏந்தி அதிற் பிச்சையை ஏற்கின்ற, வேதத்தை ஓதுகின்ற தேவனே! வேதத்தின் பொருளாய் உள்ளவனே! நஞ்சு தங்கிய கண்டத்தை உடையவனே! திருக்கடவூரினுள், **'வீரட்டம்'** என்னும் கோயிலில் எழுந்தருளியிருக்கின்ற எங்கள் இறைவனே! என்னுடைய அமுதம் போல்பவனே! எனக்கு நீயல்லாது வேறு யாவர் துணை?

281. அன்றா லின்னிழற்கீழ் அறம்
நால்வர்க் கருள்புரிந்து
கொன்றாய் காலனுயிர் கொடுத்
தாய்மறை யோனுக்குமான்
கன்றா ருங்கரவா கட
வூர்த்திரு வீரட்டத்துள்
என்றா தைபெருமான் எனக்
கார்துணை நீயலதே. 3

காலனுயிர் கொன்றாய். மறையோனுக்குயிர் கொடுத்தாய் என்று பொருள் கொள்க.
கரவா – கரத்தை உடையவனே.

மான் கன்று பொருந்திய கையை உடையவனே! திருக்கடவூர்த் திருவீரட்டத்துள் எழுந்தருளி யிருக்கின்ற என் தந்தையாகிய பெருமானே! நீ, அன்று ஆல் நிழலின்கண் இருந்து நால்வர் முனிவர்கட்கு அருள்பண்ணி, காலன் உயிரைக் கொன்ற வன்செயலையும் செய்தாய்; அந்தணச் சிறுவனுக்கு முடிவில்லாத வாழ்நாளைக் கொடுத்தாய்; இன்ன தன்மையை உடைய நீயல்லாது வேறு யாவர் எனக்குத் துணை!

282. போரா ருங்கரியின் னுரி
போர்த்துப்பொன் மேனியின்மேல்
வாரா ரும்முலையாள் ஒரு
பாக மகிழ்ந்தவனே
காரா ரும்மிடற்றாய் கட
வூர்தனுள் வீரட்டானத்
தாரா **வென்னமுதே** எனக்
கார்துணை நீயலதே. 4

ஆராஅமுது – தெவிட்டாத அமிர்தமே.

போர்த்தொழில் பொருந்திய யானையின் தோலைப் பொன்போலும் மேனிமேல் போர்த்துக் கொண்டும், அம்மேனியின் ஒரு பாகத்தில் கச்சுப் பொருந்திய தனங்களையுடைய உமையை மகிழ்ந்து வைத்தும் உள்ளவனே! கருமை பொருந்திய கண்டத்தை உடையாய்! திருக்கடவூரினுள் **'வீரட்டானம்'** என்னும் கோயிலில் எழுந்தருளியிருக்கின்ற, தெவிட்டாத என்னுடைய அமுதம் போல்பவனே! எனக்கு நீயல்லாது வேறு யாவர் துணை!

283. மையார் கண்டத்தினாய் மத
மாவுரி போர்த்தவனே
பொய்யா தென்னுயிருட் புகுந்
தாய் இன்னம் போந்தறியாய்
கையார் ஆடரவா கட
வூர்தனுள் வீரட்டத்தெம்
ஐயா என்னமுதே எனக்
கார்துணை நீயலதே. 5

"என்னமுதே எனக்கார் துணை நீயலதே" என்பது பதிக மகுடம். எதிர்மறையால் கூறியது உறுதிப்பொருள் குறித்தது. இறப்பு வராமல் அதனால் பிறப்பும் வராமல் காத்தலின் உயிர்களுக்கு உற்ற துணையாவார் இவ்விறைவரே என்பது பெறப்பட்டது.
புகுதல் – நீக்கமின்றி நிறைதல்.
போந்து – வெளிப்பட்டு.

கருமை பொருந்திய கண்டத்தையுடையவனே! யானையின் தோலைப் போர்த்தவனே! கையின்கண் பொருந்தி நிற்கும், படமெடுத்து ஆடுகின்ற பாம்பை உடையவனே! திருக்கடவூரினுள், **'வீரட்டானம்'** என்னும் கோயிலில் எழுந்தருளியிருக்கின்ற எங்கள் தலைவனே! என்னுடைய அமுதம்போல்பவனே! நீ தப்பாது என் உயிரினுள் புகுந்தாய்; அங்ஙனம் புகுந்ததன்றி இதுகாறும் வெளிப் போந்தறியாய்; ஆதலின், எனக்கு நீயல்லாது வேறு யாவர் துணை!

| | |
|---|---|
| **284.** மண்ணீர் தீவெளிகால் வரு<br>பூதங்க ளாகிமற்றும்<br>பெண்ணோ டாணலியாய்ப் பிற<br>வாவுரு வானவனே<br>கண்ணா ருண்மணியே கட<br>வூர்தனுள் வீரட்டத்தெம்<br>அண்ணா **என்னமுதே** எனக்<br>கார்துணை நீயலதே. 6<br><br>அமுதே – கால சங்காரம் செய்து உயிர் தருதலின் அமுதம் போன்றவர். | நிலம், நீர், தீ, காற்று, வானம் என்று சொல்ல வருகின்ற பூதங்களாகியும், அப்பூதங்களா லாகிய பெண், ஆண், அலி என்னும் உடம்புகளோடு காணப்படும் உயிர்களாகியும், அவற்றில் வேறற நின்று, நீ உருவங் கொள்ளுமிடத்து, யாதொரு பிறப்பினும் படாத திருமேனியைக் கொண்டு நிற்பவனே! கண்ணின் உள்ளாய் பொருந்தியுள்ள மணி போல்பவனே! திருக்கடவூரினுள், **'வீரட்டானம்'** என்னும் கோயிலில் எழுந்தருளியுள்ள எங்கள் தலைவனே! என்னுடைய அமுதம்போல்பவனே! எனக்கு நீயல்லாது வேறு யாவர் துணை! |
| **285.** எரியார் புன்சடைமேல் இள<br>நாக மணிந்தவனே<br>நரியா ருஞ்சுடலை நகு<br>வெண்டலை கொண்டவனே<br>கரியா ரீருரியாய் கட<br>வூர்தனுள் வீரட்டத்தெம்<br>அரியாய் என்னமுதே எனக்<br>கார்துணை நீயலதே. 7 | தீப்போலப் பொருந்தியுள்ள புல்லிய சடையின் மேல் இளமையான பாம்பை அணிந்தவனே! நரிகள் பொருந்திய சுடலைக்கண் உள்ள சிரிக்கும் வெண்டலையைக் கையில் கொண்டவனே! யானையினிடத்துப் பொருந்தியிருந்து உரிக்கப்பட்ட தோலை உடையவனே! திருக்கடவூரினுள், **'வீரட்டானம்'** என்னும் கோயிலில் எழுந்தருளி யிருக்கின்ற, எங்கள் அரிய பொருளானவனே! என்னுடைய அமுதம் போல்பவனே! எனக்கு நீயல்லாது வேறு யார் துணை! |
| **286.** வேறா உன்னடியேன் விளங்<br>குங்குழைக் காதுடையாய்<br>தேறேன் உன்னையல்லாற் சிவ<br>னேஎன் செழுஞ்சுடரே<br>காறார் வெண்மருப்பா கட<br>வூர்த்திரு வீரட்டத்துள்<br>ஆறார் செஞ்சடையாய் எனக்<br>கார்துணை நீயலதே. 8 | ஒளி வீசுகின்ற குழையணிந்த காதினை உடையவனே! சிவனே! என்னுடைய செம்மையான விளக்கே! ஏர்க்கொழுவைப் போலக் கூர்மையானதும் வெண்மையானது மான பன்றிக் கொம்பை உடையவனே. திருக்கடவூரின்கண் உள்ள, **'வீரட்டானம்'** என்னும் கோயிலில் எழுந்தருளி யிருக்கின்ற, நீர் பொருந்திய சடையை உடையவனே! உன் அடியவனாகிய யான், உன்னையல்லது வேறு சிலர் கடவுளர் உளராக நினையேன்; ஆதலின், எனக்கு நீயல்லாது வேறு யார் துணை! |

287. அயனோ டன்றரியும் மடி
யும்முடி காண்பரிய
பயனே யெம்பரனே பர
மாய பரஞ்சுடரே
கயமா ருஞ்சடையாய் கட
வூர்த்திரு வீரட்டத்துள்
அயனே **என்னமுதே** எனக்
கார்துணை நீயலதே. 9

முன்னொரு ஞான்று, பிரமனும் திருமாலும் அடியும் முடியும் தேடிப்போய்க் காணுதல் இயலாது நின்ற பொருளாய் உள்ளவனே! எங்கள் கடவுளே! மேலான ஒளிக்கும் மேலான ஒளியாய் இருப்பவனே! மிக்க நீர் பொருந்திய சடையை உடையவனே! திருக்கடவூரின்கண் உள்ள, **திருவீரட்டானம்**, என்னும் கோயிலில் எழுந்தருளி யிருக்கின்ற பிறப்பில்லாதவனே! என்னுடைய அமுதம் போல்பவனே! எனக்கு நீயல்லாது வேறு யார் துணை!

கயம் – மடு. அது மிக்க நீரை உணர்த்திற்று.

288. காரா ரும்பொழில்சூழ் கட
வூர்த்திரு வீரட்டத்துள்
ஏராரும்மிறையைத் துணை
யாஎழில் நாவலர்கோன்
ஆரூ ரன்னடியான் அடித்
தொண்ட னுரைத்ததமிழ்
பாரோர் ஏத்தவல்லார் பர
லோகத் திருப்பாரே. 10

மேகங்கள் தவழ்கின்ற சோலைகள் சூழ்ந்த திருக்கடவூரின்கண் உள்ள, **'திருவீரட்டானம்'** என்னும் கோயிலில் விளங்குதல் பொருந்திய இறைவனையே துணையாக விதந்து, அழகிய திருநாவலூரில் தோன்றியவனும், திருவாரூர்ப் பெருமானுக்கு அடிமையும், அப்பெருமான் அடிநிழலை நீங்காதிருந்து தொண்டு செய்பவனும் ஆகிய நம்பியாரூரன் பாடிய இத் தமிழ்ப் பாடல்களை நிலவுலகில் உள்ளவர் பாட வல்லாராயின், சிவலோகத்தில் இருத்தல் திண்ணம்.

ஏர்தல் – எழுதல்; புலனாதல்.

இங்கு ஆரூரன் என்றது திருவாரூர் இறைவரை.

சுந்தரரின் பாட்டனார் பெயரும் ஆரூரர் என்று குறிக்கப்படுதலின், ஆரூர்ப்பெருமானே இவர் தம் குடிக்கு வழிபடு கடவுளாதல் கூறப்படும். அதனால் அடித்தொண்டன்.



திருக்குருகாவூர்: பொதிசோறு அளித்தல்

## 29. திருக்குருகாவூர் வெள்ளடை

சுந்தரர், திருக்கோலக்காவைத் தொழுது சீகாழியை வலங்கொண்டு திருக்குருகாவூர் செல்லும் பொழுது பசியினாலும் நீர் வேட்கையினாலும் மிகவும் வருந்தினார். அதனையுணர்ந்த பெருமான் நம்பியாரூரர் வரும் வழியில் தண்ணீரும் பொதிசோறும் கொண்டு குளிர்பந்தர் அமைத்து வேதியர் வடிவுடன் எழுந்தருளியிருந்தார். அடியவர் திருக்கூட்டத்துடன் நம்பியாரூர் வந்ததும் மறையவர், 'நீர் இப்போது பசியால் வாடுகின்றீர்; இதனை உண்ணும்' என்று கூறியளித்த பொதிசோற்றை அடியவர்களுடன் உண்டு நீரருந்தி உறங்கிப் பின் விழித்துப் பார்த்த சுந்தரர் தண்ணீர்ப்பந்தர் இல்லாததைக் கண்டு பாடியருளியது இத்திருப்பதிகம்.

குறிப்பு : இத்திருப்பதிகம், திருக்குருகாவூரில் இறைவன் தமக்குச் செய்த கருணையை அறிந்து, வியந்து அருளிச் செய்தது.

**பண் : நட்டராகம்** **பதிக எண் : 29**

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் காவியங்கண்ணி உடனமர் அருள்மிகு வெள்விடைநாதர். | | |
| **தல இருப்பிடம்** | சோழநாட்டில் காவிரி வடகரையில் சீர்காழிக்குக் கிழக்கே 5 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | வில்வம் | | |
| **தீர்த்தம்** | பிரம்ம வெள்விடைத் தீர்த்தம், பால்கிணறு, தை அமாவாசை, தீர்த்தவாரியன்று இக்கிணற்றுநீர் பால் நிறமாக மாறும். | | |
| **பாடியவர்** | திருஞானசம்பந்தர், நம்பியாரூரர் | **பதிகங்கள்** | 2 |

**289.** இத்தனை யாமாற்றை
யறிந்திலேன் எம்பெருமான்
பித்தனே யென்றுன்னை
பேசுவார் பிறரெல்லாம்
முத்தினை மணிதன்னை
மாணிக்க முளைத்தெழுந்த
வித்தனே குருகாவூர்
வெள்ளடை நீயன்றே. 1

எங்கள் பெருமானே! திருக்குருகாவூர் வெள்ளடைக் கோயிலில் எழுந்தருளி யிருப்பவனே! உனது திருவருட் செயல் இத்துணையதாயின காரணத்தை யான் அறிந்திலேன்; உன் இயல்பினை அறியாதவ ரெல்லாம் உன்னை, 'பித்தன்' என்று இகழ்ந்து பேசுவர்; அஃது அவ்வாறாக, நீ, முத்தையும் மாணிக்கத்தையும், பிற மணிகளையும் தோற்றுவித்த வித்தாய் வெளிப்பட்டவன் அன்றோ!

"இத்தனை" என்றது பொதிசோறும் தண்ணீர்ப்பந்தரும் கொண்டு மறையவன் போல வீற்றிருந்தமை முதலியன.
வித்தனே – வித்தாய் எழுந்தவனே.
"முத்து முதலியவற்றை முளைப்பிக்கும் வித்து" – இல்பொருள் உவமை. ஆற்றை – ஆற்றினை –வழியை.

**290.** ஆவியைப் போகாமே
தவிர்த்தென்னை யாட்கொண்டாய்
வாவியிற் கயல்பாயக்
குளத்திடை மடைதோறுங்
காவியுங் குவளையுங்
கமலஞ்செங் கழுநீரும்
மேவிய குருகாவூர்
வெள்ளடை நீயன்றே. 2

வாவிகளில் கயல்மீன்கள் துள்ள, குளத்திலும், நீர்மடைகளிலும், கருங்குவளையும், செங் குவளையும், தாமரையும், செங்கழுநீரும் ஆகிய பூக்கள் பொருந்தி நிற்கும் திருக்குருகாவூர் வெள்ளடைக் கோயிலில் எழுந்தருளி யிருப்பவனே! நீயன்றோ என்னை உயிரைப் போகாது நிறுத்தி ஆட்கொண்டருளினாய்!

ஆவியைப் போகாமே நிறுத்தியது – பொதிசோறும், தண்ணீரும் தந்து. வாவி – பெருங்கிணறு. இது சரித ஆதரவுக் குறிப்பு.

---

**291.** **பாடுவார் பசிதீர்ப்பாய்**
பரவுவார் பிணிகளைவாய்
ஓடுநன் கலனாக
உண்பலிக் குழல்வானே
காடுநல் லிடமாகக்
கடுவிருள் நடமாடும்
வேடனே குருகாவூர்
வெள்ளடை நீயன்றே. 3

பாடுவார் பசியைத் தீர்ப்பாராயினும், தாம் உண்ணப் பலிதிரிவார். இப்பாடல் பாடிப் பல அடியார்கள் பசி தீரப் பெற்றுள்ளார்கள்.

தலை ஓடே சிறந்த உண்கலமாயிருக்க, உண்ணுகின்ற பிச்சை ஏற்றற்குத் திரிபவனே! காடே சிறந்த அரங்காய் இருக்க, செறிந்த இருளிலே நடனமாடுகின்ற கோலத்தை உடையவனே! திருக்குருகாவூர் வெள்ளடைக் கோயிலில் எழுந்தருளியிருப்பவனே! நீ உன்னை இசைப்பாடலால் பாடுகின்றவரும், பிறவாற்றால் துதிக்கின்றவரும் ஆகிய அடியார்களது பசியைத் தீர்த்து, நோயைப் பற்றறுப் பாயன்றோ!

---

**292.** வெப்பொடு பிணியெல்லாந்
தவிர்த்தென்னை யாட்கொண்டாய்
ஒப்புடை யொளிநீலம்
ஓங்கிய மலர்ப்பொய்கை
அப்படி யழகாய
அணிநடை மடவன்னம்
மெய்ப்படு குருகாவூர்
வெள்ளடை நீயன்றே. 4

குருகாவூர் – ஊர்ப்பெயர்
வெள்ளடை – கோயிலின் பெயர்

ஒன்றோடு ஒன்று நிகரொத்த ஒளியையுடைய நீலப் பூக்கள் சிறந்து விளங்குகின்ற, மலர்களையுடைய பொய்கைகளில், மிகவும் அழகியவாய்த் தோன்றுகின்ற, அழகிய நடையையுடைய இளமையான அன்னங்கள் நிலைபெற்று வளர்கின்ற திருக்குருகாவூர் வெள்ளடைக் கோயிலில் எழுந்தருளி யிருப்பவனே! நீயன்றோ, என்னை வெப்பு நோயோடு பிற நோய்கள் எல்லாவற்றையு நீக்கி உய்யக்கொண்டாய்!

**293.** வரும்பழி வாராமே
தவிர்த்தென்னை யாட்கொண்டாய்
சுரும்புடை மலர்க்கொன்றைச்
சுண்ணவெண் ணீற்றானே
அரும்புடை மலர்ப்பொய்கை
அல்லியும் மல்லிகையும்
விரும்பிய குருகாவூர்
வெள்ளடை நீயன்றே. 5

பழி – பிறவியால் வரும் கேடு.

வண்டுகளை உடைய கொன்றை மலர் மாலையையும், பொடியாகிய வெள்ளிய திருநீற்றையும் உடையவனே! அரும்புகளை யுடைய மலர்களைக் கொண்டுள்ள பொய்கை களில் உள்ள ஆம்பல் மலர்களையும், பூங்காவில் உள்ள மல்லிகை மலர்களையும் மிகுதியாக உடைய திருக்குருகாவூர் வெள்ளடைக் கோயிலில் எழுந்தருளியிருப்பவனே! நீயன்றோ, எனக்கு வருதற்பாலதாய பழி வாராமல் தடுத்து, என்னை ஆட்கொண்டாய்!

**294. பண்ணிடைத் தமிழொப்பாய்**
பழத்தினிற் சுவையொப்பாய்
கண்ணிடை மணியொப்பாய்
கடுவிருட் சுடரொப்பாய்
மண்ணிடை யடியார்கள்
மனத்திடர் வாராமே
விண்ணிடைக் குருகாவூர்
வெள்ளடை நீயன்றே. 6

திருக்குருகாவூர் வெள்ளடைக் கோயிலில் எழுந்தருளியிருப்பவனே! பரவெளியின்கண் உள்ள நீ, இம் மண்ணுலகில் வாழும் அடியவர்களது மனத்தின்கண்யாதொரு துன்பமும் தோன்றாதவாறு, பண்ணின்கண் இனிமையைப் போன்றும், பழத்தின்கண் சுவையைப் போன்றும், கண்ணின்கண் மணியைப் போன்றும், மிக்க இருளின்கண் விளக்கைப் போன்றும் நிற்கின்றாயன்றோ!

பண் – தமிழ்மொழியின் சிறப்பியல்பாகிய பண். கண்ணிடை மணி – காணும் உபகாரம்.
கடுவிருட்சுடர் – காட்டும் உபகாரம் பாடும் இனிய தமிழ் காரணமாகச் சுவை அமுது தந்து கண் காண நின்று ஒளித்த பின் உமது தன்மை விளங்க அறிய வைத்தீர் என்பதொரு குறிப்பாகிய உள்ளுறை.
மண்ணிடை அடியார்கள் மனத்திடர் வாராமே என்றும் மண்ணிடை அடியார்கள் வாராமே என்றும் கொள்ளலாம்.

**295.** போந்தனை தரியாமே
நமன்றமர் புகுந்தென்னை
நோந்தனை செய்தாலும்
நுன்னல தறியேன்நான்
சாந்தனை வருமேலுந்
தவிர்த்தென்னை யாட்கொண்ட
வேந்தனே குருகாவூர்
வெள்ளடை நீயன்றே. 7

இறக்கும் நிலை வரும் காலத்தை நீக்கி என்னை ஆட்கொண்ட தலைவனே! திருக்குருகாவூர் வெள்ளடைக் கோயிலில் எழுந்தருளி யிருப்பவனே! எனது துன்பத்தைச் சிறிதும் பொறாயாய்ப் போந்தவன் நீயேயன்றோ! ஆதலின், இயமனுக்கு ஏவலராய் உள்ளார் வந்து எனக்கு யான் துன்புறும் செயல்களைச் செய்யினும், யான் உன்னையன்றி வேறொருவரைத் துணையாக அறிய மாட்டேன்.

போந்தனை – மறைந்து போயினை
நோந்தனை – வருந்துமளவு. சாந்தனை வருமேலும் – மேலும் மேலும் இறத்தல் பிறத்தல்.
ஊன் உயிர் வேறாகுங் காலத்தில் நான் பொறுத்துக் கொள்ள முடியாதபடி எமதூதர்கள் என்னை வருத்தினாலும், உன்னையன்றி வேறொன்றை உணர மாட்டேன்.

296. மலக்கில்நின் னடியார்கள்
மனத்திடை மால்தீர்ப்பாய்
சலச்சல மிடுக்குடை
தருமனார் தமரென்னைக்
கலக்குவான் வந்தாலுங்
கடுந்துயர் வாராமே
விலக்குவாய் குருகாவூர்
வெள்ளடை நீயன்றே. 8

அலைவில்லாத உள்ளத்தினையுடைய உன் அடியார்களது மனத்தில் உள்ள மயக்கத்தினைப் பற்றறக் களைபவனே! திருக்குருகாவூர் வெள்ளடைக் கோயிலில் எழுந்தருளியிருப்பவனே! துன்பத்தைத் தருகின்ற வெகுளியையும், மிடுக்கினையும் உடைய இயமன் தூதுவர் என்னை அச்சுறுத்த வந்தாலும், அவர்களால் வரும் மிக்க துயரத்தையும் வாராமலே விலக்குவோன் நீயேயன்றோ!

மலக்கு – துன்பம்.
சலச்சல மிடுக்கு – மிகவும் துன்பம் செய்யும் வன்மை.

297. **படுவிப்பாய் உனக்கேயாட்**
**பலரையும் பணியாமே**
தொடுவிப்பாய் துகிலொடுபொன்
தோலுடுத் துழல்வானே
கெடுவிப்பாய் அல்லாதார்க்
கேடிலாப் பொன்னடிக்கே
விடுவிப்பாய் குருகாவூர்
வெள்ளடை நீயன்றே. 9

திருக்குருகாவூர் வெள்ளடைக் கோயிலில் எழுந்தருளியிருப்பவனே! நல்லோரைப் பிறரை வணங்கித் துன்புறாதவாறு உனக்கே ஆட்படச் செய்பவனும், நீ தோலை உடுத்து எலும்பை அணியினும் அவர்கட்கு நல்லாடைகளை உடுப்பித்துப் பொன்னணிகளை அணிவிப்ப வனும், முடிவில் அவர்களை அழிவில்லாத உனது பொன்போலும் செவ்விய திருவடிக்கண்ணே புகுவிப்பவனும், நல்லோரல்லாதாரைக் கெடுவிப்பவனும் நீயேயன்றோ!

"குருகாவூர் வெள்ளடை நீயன்றே" என்பது பதிக மகுடம்.
பலரையும் நான் பணியாமல் உனக்கே தொண்டு செய்யும்படி செய்வாய். ஆடையோடு பொன்னையும் எனக்குப் பொருந்தச் செய்வாய். உனக்கு ஆட்படாதவரை அவரவர் வினைப்படி விடுவாய். கேடில்லாப் பொன்னடிக்கு என்னைச் சேர்ப்பாய்.

298. வளங்கனி பொழின்மல்கு
வயலணிந் தழகாய
விளங்கொளி குருகாவூர்
வெள்ளடை யுறைவானை
இளங்கிளை யாரூரன்
வனப்பகை யவளப்பன்
உளங்குளிர் தமிழ்மாலை
பத்தர்கட் குரையாமே. 10

வளப்பம் மிகுந்த சோலைகளையும், நிறைந்த வயல்களையும் சூழக் கொண்டு அழகியதாய் நிற்கின்ற, வீசுகின்ற ஒளியினையுடைய திருக்குருகாவூர் வெள்ளடைக் கோயிலில் எழுந்தருளியிருக்கின்ற இறைவனை, சிங்கடிக்குத் தங்கையாகிய 'வனப்பகை' என்பவளுக்குத் தந்தையாம் நம்பியாரூரன், மனம் இன்புற்றுப் பாடிய இத் தமிழ்மாலை, அவன் அடியார்கட்கு அவனைத் துதித்தற்கு உதவும் புகழ்மாலையாய் நிற்கும்.

இளங்கிளை – சிறுவன்.

## 30. திருக்கருப்பறியலூர் (தலைஞாயிறு)

பண் : நட்டராகம் பதிக எண் : 30

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் கோல்வளை நாயகி உடனமர் குற்றம் பொறுத்தநாதர் | | |
| **தல இருப்பிடம்** | சோழநாட்டில் காவிரி வடகரையில் வைத்தீசுவரன் கோவில் எனப்படும் புள்ளிருக்கு வேளூரிலிருந்து வடமேற்கே 7 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | கொகுடி முல்லை | | |
| **தீர்த்தம்** | இந்திரதீர்த்தம் | | |
| **பாடியவர்** | திருஞானசம்பந்தர், நம்பியாரூரர் | **பதிகங்கள்** | 2 |

### தியான வழிபாடு

299. சிம்மாந்து சிம்புளித்துச் சிந்தையினில் வைத்துகந்து
திறம்பா வண்ணம்
கைம்மாவி னுரிவைபோர்த் துமைவெருவக் கண்டானைக்
கருப்ப றியலூர்க்
கொய்ம்மாவின் மலர்ச்சோலைக் குயில்பாட மயிலாடுங்
கொகுடிக் கோயில்
எம்மானை மனத்தினால் நினைந்தபோ தவர்நமக்
கினிய வாறே. 1

யானைத் தோலைப் போர்த்துநின்ற காலத்தில் உமையவள் அஞ்ச அதனைக் கண்டு நின்றவனும், திருக்கருப்பறியலூரில் உள்ள, தளிர் கிள்ளுதற்குரிய மாமரங்களில் இருந்து குயில்கள் பாட, கீழே மயில்கள் ஆடுகின்ற சோலைகளையுடைய கொகுடிக் கோயிலின்கண் எழுந்தருளியுள்ள எம்பெருமானும் ஆகிய இறைவனை, நாம் உடலை நேரே நிறுத்திக் கண்களைச் சிறிது மூடியிருந்து உள்ளத்தில் அன்போடு நிலைபெயராது இருத்தி, இவ்வாறு மனத்தினால் நினைந்தபோது, அவன் நமக்கு இனிய னாகின்ற தன்மை சொல்லுதற்கரிது.

சிம்மாந்து – செம்மாந்து – பெருமிதங்கொண்டு. மிக மகிழ்ந்து.

சிப்புளித்து – கண்ணை மூடி. திறம்பாவண்ணம் – தவறாதபடி. முதலடியில் இறைவரைத் தியானிக்கும் முறையை அருளிச் செய்கிறார். கொகுடி – முல்லைக் கொடியுள் ஒருவகை. அதனால் சூழப் பெற்றது இக்கோயில். ஊரின் பெயர் கருப்பறியலூர்.

தற்காலத்தில் தலைஞாயிறு என்று வழங்கப்படுகிறது. கோயிலின் பெயர் – கொகுடிக் கோயில்.

## திருநீற்று வழிபாடு

300. நீற்றாரு மேனியராய் நினைவார்தம் உள்ளத்தே
நிறைந்து தோன்றும்
காற்றானைத் தீயானைக் கதிரானை மதியானைக்
கருப்ப றியலூர்க்
கூற்றானை கூற்றுதைத்துக் கோல்வளையா
ளவளோடுங் கொகுடிக் கோயில்
ஏற்றானை மனத்தினால் நினைந்தபோ தவர்நமக்
கினிய வாறே. 2

திருநீற்றால் நிறைந்த மேனியை உடையவராய் நினைக்கின்றவரது உள்ளத்தில் நிறைந்து தோன்றுபவனும், 'காற்று' , ஞாயிறு, திங்கள்' என்னும் பொருள்களாய் நிற்பவனும், அழித்தல் தொழிலையுடையவனும், கூற்றுவனை உதைத்தவனும், வரிசையாகப் பொருந்திய வளைகளையுடைய உமாதேவியோடும் திருக்கருப்பறியலூரில் உள்ள கொகுடிக் கோயிலைத் தனக்கு உரிய இடமாக ஏற்றுக் கொண்டவனும் ஆகிய இறைவனை நாம் மனத்தினால் நினைந்த போது, அவன் நமக்கு இனியனாகின்ற தன்மை சொல்லுதற்கரிது.

"நினைந்த போதவர் நமக்கினிய வாறே" என்பது பதிக மகுடமாகும்.

## பூமாலை வழிபாடு

301. முட்டாமே நாள்தோறும் நீர்மூழ்கிப் பூப்பறித்து
மூன்று போதும்
கட்டார்ந்த இண்டைகொண் டடிசேர்த்தும்
அந்தணர்தங்
கருப்ப றியலூர்க்
<u>கொட்டாட்டுப் பாட்டாகி நின்றானைக்</u> குழகனைக்
கொகுடிக் கோயில்
எட்டான மூர்த்தியை நினைந்தபோ தவர்நமக்
கினிய வாறே. 3

நாள்தோறும், 'காலை, நண்பகல், மாலை' என்னும் மூன்று பொழுதுகளிலும், தப்பாமல் நீரின்கண் மூழ்கிப் பூக்களைப் பறித்து, அவைகளை, கட்டுதல் பொருந்திய இண்டை மாலையாகச் செய்து கொண்டு, மனத்தைத் தனது திருவடிக்கண் சேர்த்துகின்ற அந்தணர்களது திருக்கருப்பறியலூரில் உள்ள கொகுடிக் கோயிலில், முழவம் முதலியவற்றின் கொட்டும், அவற்றிற்கேற்ற கூத்தும், பாட்டும் ஆகியவற்றை விரும்பி இருக்கின்ற அழகனும், எட்டுருவாயவனும் ஆகிய இறைவனை நாம் மனத்தினால் நினைந்தபோது, அவன் நமக்கு இனியனாகின்ற தன்மை சொல்லுதற்கரிது.

இண்டை – தலை மாலை. பூவும், இலை, தளைகளும் மாறிமாறி வைத்துக் கட்டப்படும் மாலை.

முட்டாமே – தவிராது. கொட்டு – மத்தளம் முதலியன.

## பாமாலை வழிபாடு

302. விருந்தாய சொன்மாலை கொண்டேத்தி வினைபோக
வேலி தோறும்
கருந்தாள வாழைமேற் செங்கனிகள் தேன்சொரியுங்
கருப்ப றியலூர்க்
குருந்தாய முள்ளெயிற்றுக் கோல்வளையா ளவளோடுங்
கொகுடிக் கோயில்
இருந்தானை மனத்தினால் நினைந்தபோ தவர்நமக்
கினிய வாறே. 4

கல்வியில் வல்ல அடியார்கள் புதியனவாகிய பல சொல்மாலைகளைக் கொண்டு புகழ்ந்து வினை நீங்கப் பெறுமாறு, வேலிகள் தோறும், பசிய அடியினையுடைய செவ்வாழைகளின் மேல் செவ்விய பழங்கள் சாற்றைச் சொரிந்து நிற்கின்ற திருக்கருப்பறியலூரில் உள்ள கொகுடிக் கோயிலில் இளையவாகிய கூரிய பற்களையும், வரிசையான வளைகளையும் உடையவளாகிய உமாதேவியோடும், எழுந்தருளியிருக்கின்ற பெருமானை நாம் மனத்தினால் நினைந்தபோது, அவன் நமக்கு இனியனாகின்ற தன்மை சொல்லுதற்கரிது.

விருந்து – செய்யுள் உறுப்புக்களுள் ஒரு பகுதியாகிய எண் வகை வனப்புகளுள் ஒன்று. யாப்புக்களைப் புதுப்புது வகையில் தொகுப்பது.

## நினைய இனியவன்

303. பொடியேறு திருமேனிப் பெருமானைப் பொங்கரவக்
கச்சை யானைக்
கடிநாறும் பூம்பொய்கைக் கயல்வாளை குதிகொள்ளுங்
கருப்ப றியலூர்க்
கொடியேறி வண்டினமுந் தண்டேனும் பண்செய்யுங்
கொகுடிக் கோயில்
அடியேறு கழலானை நினைந்தபோ தவர்நமக்
கினிய வாறே. 5

நீறு மிகுந்திருக்கின்ற திருமேனியையுடைய பெருமானும், சீற்றம் மிக்க பாம்பாகிய அரைக் கச்சையை உடையவனும், நறுமணம் வீசுகின்ற பூப் பொய்கைகளில் கயல் மீனும், வாளை மீனும் குதிகொள்கின்ற திருக்கருப்பறியலூரில் உள்ள, கொடிப் பூக்களில், 'வண்டு' என்றும், 'தேன்' என்றும் சொல்லப்படுகின்ற அவற்றது கூட்டங்கள் மொய்த்து இசைபாடுகின்ற கொகுடிக் கோயிலில் எழுந்தருளியிருப்பவனும், திருவடியிற் பொருந்திய கழலையுடையவனும் ஆகிய இறைவனை நாம் மனத்தினால் நினைந்தபோது, அவன் நமக்கு இனியனாகின்ற தன்மை சொல்லுதற்கரிது.

வண்டு, தேன் என்பன தேனீக்களின் வகை.
அடியேறு – திருவடியிற் பூண்ட.

## அறநெறி நிற்றல் வழிபாடு

304. **பொய்யாத வாய்மையாற்** பொடிபூசிப் போற்றிசைத்துப்
பூசை செய்து
கையினால் எரியோம்பி மறைவளர்க்கும் அந்தணர்தங்
கருப்ப றியலூர்க்
கொய்யுலா மலர்ச்சோலைக் குயில்கூவ மயிலாலுங்
கொகுடிக் கோயில்
ஐயனைஎன் மனத்தினால் நினைந்தபோ தவர்நமக்
கினிய வாறே. 6

பொய்யாத வாய்மை – மறந்தும் பொய் கூறாத.

பொய்கூறாத வாய்மையான உள்ளத்தோடு திருநீற்றை அணிந்து, 'போற்றி' எனச் சொல்லிப் பல வகை வழிபாடுகளையும் செய்து தங்கள் கையாலே தீயை எரிவித்து வேத ஒழுக்கத்தை வளர்க்கின்ற அந்தணர்களது திருக்கருப்பறியலூரில் உள்ள, கொய்தல் பொருந்திய பூஞ் சோலைகளில் குயில்கள் கூவ, அவற்றோடு மயில்கள் ஆடுகின்ற கொகுடிக் கோயிலில் எழுந்தருளியிருக்கின்ற தலைவனாகிய இறைவனை யான் என் மனத்தினால் நினைந்த போது, அவன் நமக்கு இனியனாகின்ற தன்மை சொல்லுதற்கரிது.

## நினைவார்க்கு வரும்பயன்

305. செடிகொள்நோய் உள்ளளவுந் தீவினையுந் தீர்ந்தொழியச்
சிந்தை செய்ம்மின்
கடிகொள்பூந் தடமண்டிக் கருமேதி கண்படுக்குங்
கருப்ப றியலூர்க்
கொடிகொள்பூ நுண்ணிடையாள் **கோல்வளையா ளவளோடுங்**
கொகுடிக் கோயில்
அடிகளையென் மனத்தினால் நினைந்தபோ தவர்நமக்
கினிய வாறே. 7

கோல்வளையாள் – தலத்து இறைவி.

நறுமணத்தைக் கொண்ட பூக்களையுடைய பொய்கையின் கரைகளில் கரிய எருமைகள் மிக்கு உறங்குகின்ற திருக்கருப்பறியலூரில் உள்ள கொகுடிக் கோயிலில் கொடிபோலும் அழகிய நுண்ணிய இடையினையும், வரிசையான வளைகளையும் உடைய உமையம்மையுடன் எழுந்தருளியிருக்கின்ற இறைவனை, என் மனத்தினால் நினைந்த போது அவன் நமக்கு இனியனாகின்ற தன்மை சொல்லுதற்கரிது; ஆதலின், துன்பந் தருவனவாய் உள்ள நோய்களும், தீவினைகளும் ஒருதலையாக நீங்குதற் பொருட்டு அவனை நினையுங்கள்.

## பாடியாடி வழிபடுதல்

306. பறையாத வல்வினைகள் பறைந்தொழியப் பன்னாளும்
பாடியாடிக்
கறையார்ந்த கண்டத்தன் எண்டோளன் முக்கண்ணன்
கருப்ப றியலூர்க்
குறையாத மறைநாவர் குற்றேவ லொழியாத
கொகுடிக் கோயில்
உறைவானை மனத்தினால் நினைந்தபோ தவர்நமக்
கினிய வாறே. 8

கருமை நிறம் பொருந்திய கண்டத்தையும், எட்டுத் தோள்களையும், மூன்று கண்களையும் உடையவனும், திருக்கருப்பறியலூரில் உள்ள குறைவுபடாத வேதத்தை உடைய நாவினராகிய அந்தணர்கள் தம் சிறு பணிவிடைகளை நீங்காது செய்கின்ற கொகுடிக் கோயிலில் எழுந்தருளியுள்ளவனும் ஆகிய இறைவனை, நாம், நீங்குதற்கரிய வலிய வினைகள் நீங்குமாறு பல நாளும் பாடியும், ஆடியும் மனத்தினால் நினைந்தபோது, அவன் நமக்கு இனியனாகின்ற தன்மை சொல்லுதற்கரிது.

பறையாத – நீங்காத

## தமக்கு இனியனாம் தன்மை

307. சங்கேந்து கையானுந் தாமரையின் மேலானுந்
தன்மை காணாக்
கங்கார்ந்த வார்சடைக ளுடையானை விடையானைக்
கருப்ப றியலூர்க்
கொங்கார்ந்த பொழிற்சோலை சூழ்கனிகள் பலஉதிர்க்குங்
கொகுடிக் கோயில்
எங்கோனை மனத்தினால் நினைந்தபோ தவர்நமக்
கினிய வாறே. 9

சங்கினை ஏந்துகின்ற கையினை யுடையவனாகிய திருமாலும், தாமரை மலர்மேல் இருப்பவனாகிய பிரமனும் காண இயலாத, கங்கை பொருந்திய நீண்ட சடைகளை யுடையவனும், இடபத்தை ஊர்பவனும், திருக்கருப்பறியலூரில் உள்ள,தேன் நிறைந்த பொழிலாகிய சோலைகள், சுற்றிலும் கனிகள் பலவற்றை உதிர்க்கின்ற கொகுடிக் கோயிலில் எழுந்தருளியிருக்கின்ற எங்கள் தலைவனும் ஆகிய இறைவனை நாம் மனத்தினால் நினைந்தபோது, அவன் நமக்கு இனியனாகின்ற தன்மை சொல்லுதற்கரிது.

கம் – நீர். கங்கை ஆர்ந்த – கங்கார்ந்த

308. பண்டாழின் னிசைமுரலப் பன்னாளும் பாவித்துப்
பாடி யாடிக்
கண்டார்தங் கண்குளிருங் களிக்கமுகம்
பூஞ்சோலைக்
கருப்ப றியலூர்க்
குண்டாடுஞ் சமணருஞ் சாக்கியரும் புறங்கூறுங்
கொகுடிக் கோயில்
எண்டோளெம் பெருமானை நினைந்தபோ
தவர்நமக்
கினிய வாறே. 10

கண்டவரது கண்கள் குளிர்தற்கு வழியாகிய கமுகஞ் சோலைகளையும், களிப்பைத் தருகின்ற பூஞ்சோலைகளையும் உடைய திருக்கருப்பறியலூரில் உள்ள கொகுடிக் கோயிலில் எழுந்தருளியிருக்கின்ற, கீழ்மைத் தொழில்களைப் பயில்கின்ற சமணராலும், புத்தராலும் புறங்கூறப்படுகின்ற, எட்டுத் தோள்களையுடைய எம்பெருமானை, நாம், பல நாள்களும் உள்ளத்திற் கருதி, பண் பொருந்துவதற்கு அடிநிலையாகிய இனிய சுருதியைக் கூட்டுவார் கூட்டப் பல இசைப் பாடல்களைப் பாடியும், ஆடியும் மனத்தினால் நினைந்தபோது, அவன் நமக்கு இனியனாகின்ற தன்மை சொல்லுதற்கரிது.

பண்தாழ் – இன் இசை தாழ்தல் – மிக்கு விளங்குதல்.

## <u>கற்றோர் தம் இடர் தீர்க்கும் வண்டமிழ்கள்</u>

309. கலைமலிந்த தென்புலவர் கற்றோர்தம்
மிடர்தீர்க்குங்
கருப்ப றியலூர்க்
குலைமலிந்த கோட்டெங்கு மட்டொழுகும்
பூஞ்சோலைக்
கொகுடிக் கோயில்
இலைமலிந்த மழுவானை **மனத்தினா லன்புசெய்**
**தின்ப மெய்தி**
மலைமலிந்த தோளூரன் வனப்பகையப்
பன்னுரைத்த
வண்ட மிழ்களே. 11

திருக்கருப்பறியலூரில் உள்ள, குலைகள் நிறைந்த வலிய தென்னை மரங்களையும், தேன் ஒழுகுகின்ற பூஞ்சோலைகளையும் உடைய கொகுடிக் கோயிலில் எழுந்தருளியிருக்கின்ற, இலைத்தன்மை மிகுந்த மழுப்படையை உடைய இறைவனை, ‘வனப்பகை’ என்பவளுக்குத் தந்தையாகிய, மலைபோலும் தோள்களையுடைய நம்பியாரூரன் மனத்தினால் நினைத்தலாகிய அன்புச் செயலைச் செய்து, அதனானே இன்பமுற்றுப் பாடிய வளப்பமான இத்தமிழ்ப் பாமாலையே, தன்னைக் கற்றவர்களாகிய கல்வி மிக்க தமிழ்ப் புலவர்களது துன்பத்தினைக் களையும்.

தென்கலை என்க; தமிழ். மட்டு – தேன், கள்.

<u>மனத்தினால் அன்பு செய்து இன்ப மெய்தி.</u>

இப்பதிகம் திருக்கோயிலில் கும்பிட்டு வழிபட்ட போதன்றிப் புறத்தே அப்பதியில் வைகியபோது மனதால் நினைந்து தியானத்தினுள் கண்ட அகக்காட்சி இன்பம் என்று தெய்வச் சேக்கிழார் இயம்பியதற்குச் சரித அகச்சான்று.

## 31. திருஇடையாறு

பண் : கொல்லி பதிக எண் : 31

கொல்லும் பாம்பின் இயல்பினைக் கொண்டதே கொல்லிப் பண். இது மருதயாழின் முதல் திறமாகிய நவிர் என்னும் திறத்தின் புறநிலைப் பண்ணாக 103 பண் வரிசையில் 70–ஆம் எண் பெறுகிறது. மூவரும் இதைப் பாடியுள்ளனர். சம்பந்தர் 2:24–41; அப்பர் 4:1, 22; சுந்தரர் 31–37 ஆக 27 பதிகங்கள். (சம்பந்தர்) மண்ணினல்ல வண்ணம், சந்தமார் அகிலொடு சாதிதேக்கு, மானினேர் விழி மாதராய், (அப்பர்) கூற்றாயினவாறு விலக்ககலீர் என்ற முதல் பதிகம், (சுந்தரர்) தம்மையே புகழ்ந்திச்சை பேசினும் முதலாயின இப்பண்ணில் அமைந்தவை. கொல்லிக்குரியவை 4 கட்டளைகள். இவையன்றி, அப்பர் தேவாரம் 4–ஆம் திருமுறை, பண்களை அடுத்த முதல் திருநேரிசைப் பதிகம், செஞ்சடைக்கற்றை முற்றத்திளநிலா என்ற பதிகம் கொல்லி என்றே ஏடுகளில் உள்ளது. அதைப் பின்பற்றி மற்றெல்லாத் திருநேரிசைப் பதிகங்களும் (22–79) கொல்லிக்குரியன வாகக் கொள்ளப்படுகின்றன.

இன்று கொல்லிக்குரிய இராகம் நவரோசு என்று கருதப்படுகிறது. சாஸ்திரி, தியாகைய தீட்சிதர் ஆகிய மூவர் நவரோசு இராகத்தைப் பாடவில்லை. ஆகவே கொல்லியே இராகம் (கொல்லி இராகம்) என்ற கருத்தும் உண்டு. நவசந்தியில் இது ரிஷப சந்திக்குரியது. மற்றபடி இது கம்பீரமும், மிருதுவான கருணாரசமும், சாந்தமும் பொருந்தியர் என்பர். 29–ஆவது மேளம் தீரசங்கராபரணத்தில் ஜன்னியம்.

அப்பர் சுவாமிகள் தமது திருக்குறுக்கை வீரட்டப் பதிகத்தில் திருநேரிசைப் பண்ணைக் குறிப்பிடுகிறார்.

கல்லினால் எறிந்துகஞ்சி தாமுணும் சாக்கியனார்
நெல்லினார் சோறுணாமே நீள்விசும் பாளவைத்தார்
எல்லியாங் கெரிகையேந்தி எழில்திகழ் நட்டமாடிக்
கொல்லியாம் பண்ணுகந்தார் குறுக்கை வீரட்டனாரே. (5 : 49 : 6)

பாம்பினிடத்தில் கொல்லும் விடம் மிகுந்திருக்கும். பார்ப்பதற்கு அழகாக இருக்கும். பூத்தென்று சீறும். வண்டுகளை நெருங்கிப் பிடித்து அவற்றைத் தன் வயிற்றின்கண் அகப்படுத்திக் கொள்ளும். இத்தகைய இயல்புகள் சீர்களில் அமைந்துள்ள இந்தப்பண் கொல்லி என்று பெயர் பெறுகிறது.

### கொல்லிப் பண்ணின் இலக்கணம்

கொல்லும் விளங்கனி கூர்ந்தும் விளமே
விளங்க நின்றும் மிகவும் பூத்தெனச்
சீறிக் கௌவணஞ் சென்று மாவெனும்
வண்டுள் ளாக மறைவு பெறவும்
நின்றதாற் கொல்லிப் பண்ணென்று வந்தது.

கூவிளங்கனிச்சீரும், கருவிளங்கனிச்சீரும் மிகுந்திருக்கும். கூவிளம், கருவிளம் ஆகிய சீர் விரவி வரும். பாம்பு சீறி வண்டினை உண்ண வருவது போல், பூச்சீர், மாச்சீரை நெருங்கி தன்னகப்படுத்திக் கொள்ளும் இயல்புடையது கொல்லிப் பண்ணாம்.

| மூர்த்தி | அருள்தரும் சிற்றிடை நாயகி உடனமர் அருள்மிகு இடையாற்றுநாதர். | | |
|---|---|---|---|
| தல இருப்பிடம் | நடுநாட்டில் திருவெண்ணெய்நல்லூருக்கு வடமேற்கே ஐந்து கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| தல மரம் | மருதமரம் | | |
| தீர்த்தம் | சிற்றிடைத்தீர்த்தம், பெண்ணை நதி. | | |
| பாடியவர் | நம்பியாரூரர் | பதிகம் | 1 |

310. முந்தை யூர்முது குன்றங் குரங்கணின் முட்டம்
சிந்தை யூர்நன்று சென்றடை வான்திரு வாரூர்
பந்தை யூர்பழை யாறு பழனம்பைஞ் ஞீலி
எந்தையூ ரெய்த மானிடை யாறிடை மருதே. 1

அடியார்களது உள்ளமாகிய ஊரையே விரும்பிச் சென்று அடைபவனும், எம் தந்தையும், யாவராலும் அடையப்படும் பெருமானும் ஆகிய இறைவனது ஊர்கள், பழைய ஊராகிய முதுகுன்றம், குரங்கணின்முட்டம், ஆரூர், மகளிரது பந்துக்கள் உலாவுகின்ற பழையாறு, பழனம், பைஞ்ஞீலி, இடையாறு, இடைமருது என்னும் இவைகளே.

இடையாறு – சுகர் என்னும் முனிவர் பூசித்துப் பேறு பெற்ற தலம்.

சிந்தையூர் நன்று சென்றடைவான் – அன்பர்களுடைய மனமாகிய ஊரில் மகிழ்வுடன் சென்று சேர்ந்திருப்பவன்.

311. சுற்று மூர்சுழி யல்திருச் சோபுரந் தொண்டர்
ஒற்று மூரொற்றி யூர்திரு வூற லொழியாப்
பெற்ற மேறிபெண் பாதியிடம் பெண்ணைத்
தெண்ணீர்
எற்ற மூரெய்த மானிடை யாறிடைமருதே. 2

இடபத்தை ஒழியாது ஏறுகின்றவனும், பெண்ணினைக் கொண்ட பாதி உடம்பை உடையவனும், யாவராலும் அடையப்படும் பெருமானும் ஆகிய இறைவனது ஊர்கள், 'அடியார்கள் சென்று சூழும் ஊராகிய சுழியல், சோபுரம், அவர்கள் ஆராய்கின்ற ஒற்றியூர், ஊறல், பெண்ணையாற்றின் தெளிவாகிய நீர் மோதுகின்ற இடையாறு, இடைமருது' என்னும் இவைகளே.

| | |
|---|---|
| 312. கடங்க ளூர்திருக் காரி கரைகயி லாயம்<br>விடங்க ளூர்திரு வெண்ணிஅண்ணாமலை வெய்ய<br>படங்க ளூர்கின்ற பாம்பரை யான்பரஞ் சோதி<br>இடங்கொ ளூரெய்த மானிடை யாறிடை மருதே. 3 | கொடிய, படங்களோடு ஊர்ந்து செல்கின்ற பாம்புகளை அரையில் உடையவனும், மேலான ஒளியாய் உள்ளவனும், யாவராலும் அடையப்படுபவனுமாகிய இறைவன் தனக்கு இடமாகக் கொள்ளுகின்ற ஊர்கள், 'செய்கடன்கள் நிரம்ப நிகழ்கின்ற காரிகரை, கயிலாயம், நீரும் தேனும் மிக்குப் பாய்கின்ற வெண்ணி, அண்ணாமலை, இடையாறு, இடைமருது' என்னும் இவைகளே. |
| 313. கச்சை யூர்கா வங்கழுக் குன்றங்கா ரோணம்<br>பிச்சை யூர்திரி வான்கட வூர்வட பேறூர்<br>கச்சி யூர்கச்சி சிக்கல்நெய்த் தானம் மிழலை<br>இச்சை யூரெய்த மானிடை யாறிடை மருதே. 4 | பிச்சைக்கு ஊர்தோறும் திரிபவனும், யாவராலும் அடையப்படும் பெருமானும் ஆகிய இறைவன் விரும்புதல் செய்கின்ற ஊர்கள், 'கச்சையூர், பல காக்கள், அழகிய கழுக்குன்றம், காரோணம், கடவூர், வடபேறூர், கச்சணிந்தவளாகிய காமக்கோட்டி யம்மையது ஊரெனப்படுகின்ற காஞ்சி, சிக்கல், நெய்த்தானம், வீழிமிழலை, இடையாறு, இடைமருது' என்னும் இவைகளே. |
| 314. நிறைய னூர்நின்றி யூர்கொடுங் குன்ற மமர்ந்த<br>பிறைய னூர்பெரு மூர்பெரும் பற்றப் புலியூர்<br>மறைய னூர்மறைக் காடு வலஞ்சுழி வாய்த்த<br>இறைய னூரெய்த மானிடை யாறிடை மருதே. 5 | எங்கும் நிறைந்தவனும், விரும்பிச் சூடிய பிறையை உடையவனும், வேதத்தை ஓதுபவனும், வலஞ்சுழியில் பொருந்தியுள்ள கடவுளும், யாவராலும் அடையப்படும் பெருமானும் ஆகிய இறைவனது ஊர்கள், 'நின்றியூர், கொடுங்குன்றம், பெருமூர், பெரும் பற்றப்புலியூர், மறைக்காடு, இடையாறு, இடைமருது' என்னும் இவைகளே. |

315. திங்க ளூர்திரு வாதிரை யான்பட் டினமூர்
நங்க ளூர்நறை யூர்நனி நாலிசை நாலூர்
**தங்க ளூர்தமி ழானென்று** பாவிக்க வல்ல
எங்க ளூரெய்த மானிடை யாறிடை மருதே. 6

"எய்து அம்மான் இடையாறு இடைமருதே" என்பது பதிக மகுடம். இவைகளையெல்லாம் எய்தி இருக்கும் அம்மானாகிய எமது தந்தை வீற்றிருக்கும் இடமானது திருஇடையாறு என்னும் தலத்தில் உள்ள இடைமருது என்னும் திருக்கோயிலாகும். இடைமருது என்பது திருஇடையாற்றில் இருக்கும் கோயிலுக்குப் பெயர்.

இறைவனை, 'தமிழில் விளங்குபவன்' என்று கருதவல்ல யாங்கள், எம்முள் அளவளாவுங்கால், எம்மை நீக்கி, 'எம்மினும் உயர்ந்த அடியவர்கட்கு உரிய ஊர்' என்றும், யாவரையும் உளப்படுத்து, 'நங்கள் ஊர்' என்றும், பிறரொடு சொல்லாடுங்கால், முன்னிலையாரை நீக்கி, 'எங்கள் ஊர்' என்றும் சொல்லுமாறு, யாவராலும் அடையப்படும் பெருமானாகிய இறைவனுக்கு உரியதாய் உள்ள ஊர்கள், 'திங்களூர், திருவாதிரையான்பட்டினம் என்னும் ஊர், நறையூர், மிகவும் பரவிய புகழினையுடைய நாலூர், இடையாறு, இடைமருது' என்னும் இவைகளே.

316. கருக்க நஞ்சமு துண்டகல் லாலன்கொல் லேற்றன்
தருக்க ருக்கனைச் செற்றுகந் தான்றன் முடிமேல்
எருக்க நாண்மலர் இண்டையும் மத்தமுஞ் சூடி
இருக்கு மூரெய்த மானிடை யாறிடை மருதே. 7

கருக்க – கண்டம் கருமையாகும்படி

தீக்கின்ற அந்த நஞ்சினை உண்டவனும், கல்லால மர நிழலில் இருப்பவனும், கொல்லும் இடபத்தை ஏறுபவனும், செருக்குற்ற சூரியனை ஒறுத்துப் பின் அருள்செய்தவனும், தனது முடியின்மேல் அன்று மலர்ந்த எருக்கம் பூவினாலாகிய இண்டை மாலையையும், ஊமத்தம் பூவினையும் சூடியவனும், யாவராலும் அடையப்படும் பெருமானும் ஆகிய இறைவன் வீற்றிருக்கும் ஊர்கள், 'இடையாறு, இடைமருது' என்னும் இவைகளே.

317. தேச னூர்வினை தேயநின் றான்திரு வாக்கூர்
பாச னூர்பர மேட்டி **பவித்திர பாவ**
**நாச னூர்**நனி பள்ளிநள் ளாற்றை யமர்ந்த
ஈச னூரெய்த மானிடை யாறிடை மருதே. 8

ஒளி வடிவினனும், தீவினைகள் குறைய நிற்பவனும், திருவருளாகிய தொடர்பினை உடையவனும், மேலிடத்தில் இருப்பவனும், தூயவனும், பாவத்தைப் போக்குபவனும், 'நள்ளாறு' என்னும் தலத்தை விரும்பி இருக்கின்ற முதல்வனும், யாவராலும் அடையப்படும் பெருமானும் ஆகிய இறைவனது ஊர்கள், 'ஆக்கூர், நனிபள்ளி, இடையாறு, இடைமருது' என்னும் இவைகளே.

| | | |
|---|---|---|
| 318. | பேற னூர்பிறைச் சென்னியி னான்பெரு வேளூர்<br>தேற னூர்திரு மாமகள் கோன்திரு மாலோர்<br>கூற னூர்குரங் காடு துறைதிருக் கோவல்<br>ஏற னூரெய்த மானிடை யாறிடை மருதே. 9 | எல்லா உயிர்கட்கும் பேறாகின்றவனும், பிறையையணிந்த சடையை உடையவனும், தெளியப்படுபவனும், திருமகளுக்குத் தலைவனாகிய திருமாலை ஒரு பாகத்தில் உடையவனும், இடபத்தை உடையவனும், யாவராலும் அடையப்படும் பெருமானும் ஆகிய இறைவனது ஊர்கள், 'பெருவேளூர், குரங்காடுதுறை, கோவலூர், இடையாறு, இடைமருது' என்னும் இவைகளே. |
| 319. | ஊறு வாயினன் நாடிய வன்றொண்ட னூரன்<br>தேறு வார்சிந்தை தேறு மிடஞ்செங்கண் வெள்ளே<br>றேறு வாரெய்த மானிடை யாறிடை மருதைக்<br>கூறு வார்வினை எவ்விட மெய்குளிர் வாரே. 10 | சிவந்த கண்களையுடைய வெள்ளிய விடையை ஏறுகின்றவரும், யாவராலும் அடையப்படும் பெருமானுமாய் உள்ள இறைவரது இடையாற்றையும், இடைமருதையும், வன்றொண்டனாகிய நம்பியாரூரன் சுவை ஊறும் வாயினையுடையவனாய், தெளியத் தகுவாரது உள்ளங்கள் தெளிதற்கு வாயிலாய் உள்ள தலங்களோடு நினைந்து பாடிய இப்பாடல்களைச் சொல்லுகின்றவர்கள், வினைத்துன்பம் நீங்க, உடல் குளிர்வார்கள். |

## 32. திருக்கோடிக்குழகர் (குழகர் கோயில்)

பண் : கொல்லி — பதிக எண் : 32

| | |
|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் மையார்தடங்கண்ணி உடனமர் அமிர்தகடநாதர் (கோடிக்குழகர்) |
| **தல இருப்பிடம்** | சோழ நாட்டில் காவிரி தென்கரையில் திருமறைக்காட்டிற்குத் தென்மேற்கே 14 கி.மீ. தொலைவில் கடல் அருகில் உள்ளது. |
| **தல மரம்** | குராமரம் |
| **தீர்த்தம்** | அமுதத் தீர்த்தம், கடல் |
| **பாடியவர்** | நம்பியாரூரர் — **பதிகம்** 1 |

320. கடிதாய்க்கடற் காற்றுவந் தெற்றக் கரைமேல்
குடிதான் அய லேஇருந் தாற்குற்ற மாமோ
கொடியேன்கண்கள் கண்டன கோடிக் குழகீர்
அடிகேள்உமக் கார்துணை யாஇருந் தீரே. 1

ஆர்துணையாக – வழிபாடும், தொண்டும் இயற்றுவார் யார்? கடிதாய் – வேகமாய். எற்ற – மோத.

கோடிக்குழகரே! அடிகளே! கடற்காற்றுக் கடிதாய் வந்து வீச, இக் கடற்கரையின்மேல், உமக்கு யார் துணையாய் இருக்க இருக்கின்றீர்? நீர் இங்குத் தனித்து இருத்தலையே கொடியேனது கண்கள் கண்டன; குடிதான் வேறொர் இடத்திலே இருந்தால் யாதேனும் குற்றம் உண்டாகுமோ? சொல்லீர்.

321. முன்றான்கடல் நஞ்சமுண் டவ்வத னாலோ
பின்றான்பர வைக்குப காரஞ்செய் தாயோ
குன்றாப் பொழில் சூழ்தரு கோடிக் குழகா
என்றான்றனி யேஇருந் தாய்எம்பி ரானே. 2

பரவை – கடல், பரவையார்

அடர்ந்த சோலைகள் சூழ்ந்த கோடிக்கரையில் உள்ள அழகனே! எம்பெருமானே! முன்பு கடலில் தோன்றிய நஞ்சினை உண்ட அதனால், மீட்டும் அவ்வாறு தோன்றின் அதனை உண்டற்பொருட்டோ? அல்லது கடல் தனியே இருத்தல் கருதி அதற்குத் துணை யிருத்தற்பொருட்டோ? எக்காரணத்தால் இங்கு நீ தனியே இருக்கின்றாய்? சொல்.

**322.** மத்தம்மலி சூழ்மறைக் காடதன் தென்பால்
பத்தர்பலர் பாட இருந்த பரமா
கொத்தார்பொழில் சூழ்தரு கோடிக் குழகா
எத்தால்தனி யேஇருந் தாய்எம் பிரானே. 3

எத்தால் – எதனால்? மத்தம் – மணம்

களிப்புடையவர் நிறையச் சூழ்ந்த திருமறைக் காட்டிற்குத் தென்பால், அடியார்கள் பலர் பாடித் துதிக்க எழுந்தருளியிருக்கும் பரமனே! பூங்கொத்துக்கள் பொருந்திய சோலைகள் சூழ்ந்த கோடிக்கரையின்கண் உள்ள அழகனே! எம்பெருமானே! எக்காரணத்தால் நீ இங்கு தனியே இருக்கின்றாய்? சொல்.

**323.** காடேல்மிக வாலிது காரிகை யஞ்சக்
கூடிப்பொந்தில் ஆந்தைகள் கூகை குழறல்
வேடித்தொண்டர் சாலவுந் தீயர் சழக்கர்
கோடிக்குழ காஇடங் கோயில்கொண் டாயே. 4

சழக்கு – குற்றம். பாலை நிலத்து மக்களுக்குத் தொழில் சூறை கோடலால் "தீயர்" என்றார்.
காரிகை – அழகினை உடையவள்
வேடித்தொண்டர் – வேடர்

கோடிக்கரைக்கண் உள்ள அழகனே! இங்குள்ள காடோ மிகப் பெரிது; எப்பொழுதும் உன் தேவி அச்சங்கொள்ளுமாறு மரப்பொந்தில் உள்ள ஆந்தைகளும், கூகைகளும் பல கூடிக் கூக்குரலிடுதல் இடையறாது; வேட்டைத் தொழில் செய்து இங்கு வாழ்பவர் மிகவும் கொடியவர்; வஞ்சனையுடையவர்; இவ்விடத்தில் உறைவிடத்தைக் கொண்டாயே; இஃது என்?

**324.** மையார்தடங் கண்ணிபங் காகங்கை யாளும்
மெய்யாகத் திருந்தனள் வேறிட மில்லை
கையார்வளைக் காடுகா ளோடு முடனாய்க்
கொய்யார்பொழிற் கோடியே கோயில்கொண்டாயே. 5

காடுகாள் – காடுகிழாள்; காட்டை உரிமையாக உடையவள்–பழையோள் – துர்க்கை – வனதுர்க்கை – நவதுர்க்கையின் பேதத்துள் ஒன்று.
மையார் தடங்கண்ணி – தலத்து அம்மை.

மை பொருந்திய கண்களையுடைய இறைவியின் பாகத்தை உடையவனே! 'கங்கை' என்பவளும் உனது அழிவில்லாத திருமேனியில் இருக்கின்றாளேயன்றி அவளுக்கு வேறிடம் இல்லை; இங்ஙனமாக, கையில் நிறைந்த வளைகளையுடைய, காடுகளோடும் கூடி, பூக்களைக் கொய்தல் பொருந்திய சோலைகளையுடைய கோடிக்கரையையே உறைவிடமாகக் கொண்டாய்; இஃது எவ்வாறு?

**325.** அரவேரல்கு லாளையொர் பாக மமர்ந்து
மரவங்கமழ் மாமறைக் காடதன் தென்பால்
குரவம்பொழில் சூழ்தரு கோடிக் குழகா
இரவேதுணை யாயிருந் தாய்எம்பி ரானே. 6

மரவம் – குங்கும மரம்.
குரவம் பொழில் – குராமரச் சோலை

குங்கும மரத்தின் பூக்கள் மணம் வீசுகின்ற பெருமை பொருந்திய, திருமறைக்காட்டிற்குத் தென்பால், குராமரச் சோலை சூழ்ந்த, கோடிக் கரைக்கண் உள்ள அழகனே! எம்பெருமானே! பாம்பின் படம் போலும் அல்குலையுடைய உமையை ஒரு பாகத்தில் விரும்பி வைத்து, இங்கு இராக்காலமே துணையாக இருக்கின்றாய்; இஃது என்?

| | |
|---|---|
| **326.** பறையுங்குழ லும்மொலி பாடல் இயம்ப<br>அறையுங்கழ லார்க்கநின் றாடும் அமுதே<br>குறையாப்பொழில் சூழ்தரு கோடிக் குழகா<br>இறைவாதனி யேஇருந் தாய்எம்பி ரானே. 7<br><br>பறை – துன்ப ஓசை<br>குழல் – இன்ப ஓசை | பறையும், குழலும், ஒலிக்கின்ற பாடலும் முழங்க, ஒலிக்கின்ற கழல் ஆரவாரிக்கும்படி அம்பலத்தில் தோன்றி நின்று ஆடுகின்ற அமுதம் போல்பவனே! குறைதல் இல்லாத சோலைகள் சூழ்ந்த கோடிக்கரைக்கண் உள்ள அழகனே! இறைவனே! எம் பெருமானே! நீ ஏன் இங்குத் தனியாய் இருக்கின்றாய்? |
| **327.** ஒற்றியூரென்ற ஊனத்தி னாலது தானோ<br>அற்றப்பட ஆரூர தென்றகன் றாயோ<br>முற்றாமதி சூடிய கோடிக் குழகா<br>எற்றால்தனி யேஇருந் தாய்எம்பி ரானே. 8 | முற்றாத சந்திரனைச் சூடியுள்ள கோடிக்கரைக் கண் உள்ள அழகனே! எம்பெருமானே! ஒற்றி என்ற குறையினால் ஒற்றியூரையும், ஆரூருடையது ஆர் ஊர்? என்ற காரணத்தால் ஆரூரையும் அறுதியாக நீங்கிவிட்டாயோ? எதனால் இங்குத் தனியேவந்து இருக்கின்றாய்? |
| **328.** நெடியானொடு நான்முக னும்மறி வொண்ணாப்<br>படியான்பலி கொள்ளு மிடங்குடி யில்லை<br>கொடியார்பலர் வேடர்கள் வாழுங் கரைமேல்<br>அடிகேள் அன்ப தாய்இடங் கோயில்கொண் டாயே. 9<br><br>படி – தன்மை | திருமாலும் பிரமனும் அறிய இயலாத தன்மையை உடையவனே! தலைவனே! நீ, பிறரது வழிபாட்டினை ஏற்க நினைக்குமிடத்து, அதனைச் செய்தற்கு இங்கு நற்குடி ஒன்றேனும் இல்லை; அதற்கு மாறாகக் கொடிய வேடர்கள் பலர் வாழ்கின்றனர்; இத்தன்மையதான இக் கடற்கரைமேல் விருப்பம் உடையயாய், இவ்விடத்தை உறைவிடமாகக் கொண்டாயே; இஃது என்? |
| **329.** பாரூர்மலி சூழ்மறைக் காடதன் தென்பால்<br>ஏரார்பொழில் சூழ்தரு கோடிக் குழகை<br>ஆரூரன் உரைத்தன பத்திவை வல்லார்<br>சீரூர்சிவ லோகத் திருப்பவர் தாமே. 10<br><br>அரசன் – அரசு<br>அமைச்சன் – அமைச்சு<br>குழகன் – குழகு | உலகில் உள்ள ஊர்களில் மகிழ்ச்சி பொருந்து தற்குக் காரணமான திருமறைக்காட்டின் தென்பால், அழகு நிறைந்த சோலைகள் சூழ்ந்த கோடிக்கரைக்கண் உள்ள அழகனை நம்பியாரூரன் பாடியவையாகிய இப்பத்துப் பாடல்களையும் நன்கு பாட வல்லவர், சிறப்புப் பொருந்திய சிவலோகத்தில் இருப்பவர்களே யாவர். |

## 33. பொது

(நமக்கடிகளாகிய வடிகள்)

தொண்டர்களுடன் கலந்து இறைவரது பெருமைகளை அறியார் போன்று வினவிப் பாடுதல் திருவருளில் திளைக்கும் வகைகளில் சிறந்தது. இது சீவன் முத்தர்களின் தன்மைகளுள் ஒன்றாகப் பேசப்படும். திருத்தொண்டின் சிறப்புடைய பதி திருவாரூர்.

பண் : கொல்லி

பதிக எண் : 33

330. பாறு தாங்கிய காட ரோபடு
தலைய ரோமலைப் பாவையோர்
கூறு தாங்கிய குழக ரோகுழைக்
காத ரோகுறுங் கோட்டிள
ஏறு தாங்கிய கொடிய ரோசுடு
பொடிய ரோஇலங் கும்பிறை
ஆறு தாங்கிய சடைய ரோநமக்
கடிக ளாகிய அடிகளே. 1

நமக்கு அடிகளாகிய அடிகள் – மிகப்பெரியோர். நம்மைக் காப்பதே தொழிலாகக் கொண்டவராகிய நாம் பரவும் அடிகள். தலைவராகிய கடவுள்.
குறுங்கோட்டு – சிறிய கொம்பினை உடைய

தொண்டீர்! நமக்குத் தலைவராய் உள்ள தலைவர் பருந்துகளைச் சுமக்கும் முதுகாட்டில் வாழ்பவரோ? பிரம, விட்டுணுக்களது அழிந்த தலையை ஏந்தியவரோ? மலைமகளது ஒரு பாகத்தைச் சுமக்கும் அழகரோ? குழையணிந்த காதினை உடையவரோ? சிறிய கொம்பினையுடைய இளமையான இடபத்தைக் கொண்டுள்ள கொடியை உடையவரோ? சுடப்பட்ட நீற்றை அணிந்தவரோ? விளங்குகின்ற பிறையோடு ஆற்றைச் சுமந்த சடையை உடையவரோ? சொல்லுமின்.

331. இட்டி தாகவந் துரைமி னோ**நுமக்**
**கிசையு மாநினைந் தேத்துவீர்**
கட்டி வாழ்வது நாக மோசடை
மேலும் நாறுக ரந்தையோ
பட்டி ஏறுகந் தேற ரோபடு
வெண்ட லைப்பலி கொண்டுவந்
தட்டி யாளவுங் கிற்ப ரோநமக்
கடிக ளாகிய அடிகளே. 2

இட்டிதாக – விரைவாக. இசையுமா நினைதல் – போகம் வேண்டுவோர் போக வடிவிலும், யோகம் வேண்டுவோர் யோக வடிவிலும், துன்பம் நீங்க வேண்டுவோர் வேக வடிவிலும் நினைந்து அருள் பெறுவது.

கிற்பவர் – வல்லவர்.

இறைவரை உமக்கு ஏற்றவாற்றால் நினைந்து துதிக்கின்றவர்களே! அருகில் வந்து சொல்லுமின்; நமக்குத் தலைவராகிய தலைவர், கழுத்து, கை, அரை முதலிய இடங்களில் கட்டிக் கொண்டு வாழ்வது பாம்போ? சடைமேல் அணிவதும் மணம் வீசுகின்ற கரந்தையோ? அவர், தொழுவிற் கட்டப்படும் எருதையே விரும்பி ஏறுகின்றவரோ? தம் அடியார்களை, அழிந்த வெண்டலையில் பிச்சையேற்றுக்கொண்டு வந்து இட்டும் பணிகொள்ள வல்லரோ?

332. ஒன்றி னீர்கள்வந் துரைமி னோநுமக்
கிசையு மாநினைந் தேத்துவீர்
குன்றி போல்வதோர் உருவ ரோகுறிப்
பாகி நீறுகொண் டணிவரோ
**இன்றி யேஇல ராவரோ அன்றி**
**உடைய ராய்இல ராவரோ**
அன்றி யேமிக அறவ ரோநமக்
கடிக ளாகிய அடிகளே. 3

இறைவரை உமக்கு ஏற்ற வகையில் நினைந்து துதிக்கின்றவர்களே! நீங்கள் ஒன்றுபட்டு வந்து சொல்லுங்கள். நமக்குத் தலைவராய் உள்ள தலைவர், குன்றிமணி போலும் நிறம் உடையவரோ? நீற்றையே குறிக்கோளாகக் கொண்டு அணிவரோ? **யாதொன்றும் இலராய் இரத்தல் தொழிலைச் செய்வரோ? மற்று எல்லாம் உடையராய் இருந்தும் இரத்தல் தொழிலைச் செய்வரோ?** இவையன்றி, அறத்தை மிக உடையரோ?

குன்றி – குன்றிமணி. ஒருபுறம் சிவப்பும் (சுவாமி) ஒருபுறம் கருமையும் (அம்மை) கொண்ட வடிவமாதலின் குன்றி போல்வது என்றார்.

333. தேனை யாடுமுக் கண்ண ரோமிகச்
செய்ய ரோவெள்ளை நீற்றரோ
பானெய் யாடலும் பயில்வ ரோதமைப்
பற்றி னார்கட்கு நல்லரோ
மானை மேவிய கண்ணி னாள்மலை
மங்கை நங்கையை அஞ்சவோர்
ஆனை ஈருரி போர்ப்ப ரோநமக்
கடிக ளாகிய வடிகளே. 4

தொண்டீர்! நமக்குத் தலைவராய் உள்ள தலைவர், மூன்று கண்களை உடையவரோ? மிகச் சிவந்தநிறம் உடையவரோ? வெண்மையான நீற்றை அணிந்தவரோ? பால், நெய், தேன் இவைகளை ஆடுதலையும் பலகாற் செய்வரோ? தம்மையே துணையாகப் பற்றி நிற்பவர்க்கு நல்லவரோ? மானை நிகர்த்த கண்களை உடையவளாகிய, மகளிருட் சிறந்த மலைமங்கையை அஞ்சுவித்தற்பொருட்டு ஓர் ஆனையை உரித்த தோலைப் போர்த்துக் கொண்டிருப்பரோ? சொல்லுமின்.

மானை மேவிய – மான்கண் போன்ற.
மேவிய – உவம உருபு.

334. கோணன் மாமதி சூட ரோகொடு
கொட்டி காலொர் கழலரோ
வீணை தான்அவர் கருவி யோவிடை
யேறு வேதமு தல்வரோ
நாண தாகவொர் நாகங் கொண்டரைக்
கார்ப்ப ரோநல மார்தர
ஆணை யாகநம் மடிக ளோநமக்
கடிக ளாகிய வடிகளே. 5

தொண்டீர்! நமக்குத் தலைவராய் உள்ள தலைவர், வளைந்த பெருமை பொருந்திய பிறையைத் தலையிற் சூடுதல் உடையவரோ? 'கொடுகொட்டி' என்னும் கூத்தினை ஆடுபவரோ? காலில் ஒரு கழலை அணிவரோ? அவரது இசைக்கருவி வீணைதானோ? அவர் ஏறுவது விடையோ? அவர் வேதத்திற்குத் தலைவரோ? அரை நாணாகப் பாம்பு ஒன்றைப் பிடித்து அரையில் கட்டுவரோ? நம்மேல் ஆணையாக நமக்கு நன்மை நிரம்புமாறு நம்மை ஆளுவரோ? சொல்லுமின்.

கோணல் – வளைவுடைய
கொடுகொட்டி – திரிபுரமெரித்தகாலை சிவனாடிய கூத்து.

335. வந்து சொல்லுமின் மூட னேனுக்கு
வல்ல வாநினைந் தேத்துவீர்
வந்த சாயினை யறிவ ரோதம்மை
வாழ்த்தி னார்கட்கு நல்லரோ
புந்தி யாலுரை கொள்வ ரோஅன்றிப்
பொய்யின் மெய்யுரைத் தாள்வரோ
அன்றி யே**மிக அறிவ ரோ**நமக்
கடிக ளாகிய வடிகளே. 6

அறிவு மிக உடையராதல் – எல்லாம் அறிதல், தாமே அறிதல், அறிந்தாங்கறிதல்.

இறைவரை நீர் வல்லவாற்றால் நினைந்து துதிக்கின்றவர்களே! யாதும் அறியாதேனாகிய எனக்கு நீங்கள் அருகில் வந்து சொல்லுங்கள்; நமக்குத் தலைவராய் உள்ள தலைவர் நமக்கு வருகின்ற மெலிவை அறிந்து தீர்ப்பரோ? தம்மை வாழ்த்துகின்றவர்கட்கு நலம் செய்வரோ? மனத்தொடு பொருந்தச் சொல்லுதலையே ஏற்பரோ? மற்றும் தாமும் பொய்யில்லாத மெய்யையே சொல்லி நம்மை ஆட்கொள்வரோ? அதுவன்றி அறிவை மிக உடையரோ? சொல்லுமின்.

336. மெய்யென் சொல்லுமின் நமரங் காள்நுமக்
கிசையு மாநினைந் தேத்துவீர்
கையிற் சூலம துடைய ரோகரி
காட ரோகறைக் கண்டரோ
வெய்ய பாம்பரை யார்ப்ப ரோவிடை
யேற ரோகடை தோறுஞ்சென்
றையங் கொள்ளுமவ் வடிக ளோநமக்
கடிக ளாகிய வடிகளே. 7

நமரங்காள் – நம்மவர்கள்

இறைவரே உமக்கு ஏற்குமாற்றால் நினைந்து துதிப்பீராகிய நம்மவர்களே! நீவிர் அறிந்த உண்மைகள் யாவை? அவற்றைச் சொல்லுமின்; நமக்குத் தலைவராய் உள்ள தலைவர். கையில் சூலம் உடையரோ? கரிந்த காட்டில் வாழ்வரோ? கருமைநிறம் உடைய கண்டத்தை உடையரோ? கொடிய பாம்பை அரையிற் கட்டுவரோ? விடையை ஏறுதல் உடையரோ? இல்லத்து வாயில்தோறும் சென்று பிச்சை ஏற்கின்ற, பற்றில்லாத துறவரோ?

337. நீடு வாழ்பதி யுடைய ரோஅயன்
நெடிய மாலுக்கும் நெடியரோ
பாடு வாரையும் உடைய ரோதமைப்
பற்றி னார்கட்கு நல்லரோ
காடு தான் அரங் காக வேகைகள்
எட்டி னோடில யம்பட
ஆடு வாரெனப் படுவ ரோநமக்
கடிக ளாகிய வடிகளே. 8

நமக்கடிகளாகிய அடிகளே – பதிக மகுடம்

தொண்டீர்! நமக்குத் தலைவராய் உள்ள தலைவர், எஞ்ஞான்றும் ஒருதன்மையாய் வாழ்தற்குரிய உலகத்தை உடையரோ? 'பிரமன், நெடியோனாகிய மாயோன்' என்னும் இவர்கட்கும் பெரியரோ? தம்மைப் புகழ்ந்து பாடும் புரக்கப்படுவாரையும் உடையரோ? தம்மையே துணையாக அறிந்து பற்றினவர்கட்கு நலம் செய்வரோ? 'காடே அரங்காக எட்டுக் கைகளினாலும் குறிப்புணர்த்தி, தாளத்தொடு பொருந்த ஆடுவார்' எனச் சிறப்பித்துச் சொல்லப் படுபவரோ? சொல்லுமின்.

338. நமண நந்தியுங் கரும வீரனுந்
தரும சேனனு மென்றிவர்
குமணன் மாமலைக் குன்று போல்நின்று
தங்கள் கூறையொன் றின்றியே
ஞமண ஞாஞண ஞாண ஞோணமென்
றோதி யாரையு நாணிலா
அமண ராற்பழிப் புடைய ரோநமக்
கடிக ளாகிய வடிகளே. 9

தொண்டீர்! நமக்குத் தலைவராய் உள்ள தலைவர், குமணனது பெரிய மலையிடத்துள்ள சிறிய குன்றுகள் போலத் தம்மிடத்தில் உடையொன்றும் இலராய் நின்றுகொண்டு, 'ஞமணம், ஞாஞணம், ஞாணம் ஞோணம்' என்று சில மந்திரங்களைச் சொல்லிக் கொண்டு, ஒருவரையும் நாணுதல் இல்லாத, 'நமண நந்தி, கரும வீரன், தருமசேனன்' என்ற இன்னோரன்ன பெயர்களை யுடையவர்களாகிய சமணர்களால் பழிக்கப்படுதலை உடையரோ? சொல்லுமின்.

339. படிசெய் நீர்மையிற் பத்தர் காள்பணிந்
தேத்தி னேன்பணி யீரருள்
வடியி லான்திரு நாவ லூரன்
வனப்பகை யப்பன் வன்றொண்டன்
செடிய னாகிலுந் தீய னாகிலுந்
தம்மை யேமனஞ் சிந்திக்கும்
அடிய னூரனை யாள்வ ரோநமக்
கடிக ளாகிய வடிகளே. 10

தம்வழி நின்று, தமது பாடலைப் பாடுவாரையும் ஆள்வர் என நிறைவாக அருள்கிறார்.

அடியவர்களே! அடியவர்க்கு அடியவராவர் செய்யும் செயல்களைப் படியெடுக்கும் தன்மையில், திருத்தம் இல்லாதவனும், திருநாவலூரில் தோன்றியவனும், வனப்பகைக்கு, தந்தையும் ஆகிய வன்றொண்டனேன் உங்களை வணங்கித் துதித்தேன்; கீழ்மையை உடையவனாயினும், கொடியவனாயினும், தம்மையே எப்பொழுதும் மனத்தில் நினைக்கின்ற அடியவனாகிய நம்பியாரூரனை, நமக்குத் தலைவராய் உள்ள தலைவர் கைவிடாது ஆளுதல் செய்வரோ? அவரது திருவருள் இருந்தவாற்றைப் பணித்தருளுங்கள்.



## 34. திருப்புகலூர்

(இறைவர் தமக்குச் செங்கல் செம்பொன்னாக்கித் தந்து அருளியதனைப் பாராட்டும் முகத்தால் உலகரை வழிப்படுத்தியது)

பண் : கொல்லி

பதிக எண் : 34

| **மூர்த்தி** | அருள்தரும் கருந்தார்க்குழலி உடனமர் அருள்மிகு அக்கினீசுவரர். | | |
|---|---|---|---|
| **தல இருப்பிடம்** | சோழ நாட்டில் காவிரி தென்கரையில் திருவாரூர் – சன்னாநல்லூர், நாகூர் நெடுஞ்சாலையில் திருவாரூரிலிருந்து 20 கி.மீ. தொலைவில் அமைந்து உள்ளது. | | |
| **தல மரம்** | புன்னை | | |
| **தீர்த்தம்** | அக்கினி, பாணதீர்த்தம் | | |
| **பாடியவர்** | மூவர் | **பதிகங்கள்** | 8 |

340. தம்மை யேபுகழ்ந் திச்சை பேசினுஞ்
சார்கி னுந்தொண்டர் தருகிலாப்
பொய்ம்மை யாளரைப் பாடா தேயெந்தை
புகலூர் பாடுமின் புலவீர்காள்
இம்மை யேதருஞ் சோறுங் கூறையும்
ஏத்த லாம்இடர் கெடலுமாம்
அம்மை யேசிவ லோகம் ஆள்வதற்
கியாதும் ஐயுற வில்லையே. 1

தம்மையே – பாடப்படுகின்ற அவர்களையே.

இச்சை பேசுதல் – தங்கருத்து எதுவாயினும் அவர் கருத்துப்படியே பேசுவது.

புலவர்காள்! எம் தந்தையாகிய சிவபிரான், தன்னையே பாடுவார்க்கு இம்மையிற்றானே நல்ல உண்டியும், ஆடையும், பிறவும் தந்து புரப்பான்; அதனால், புகழும் மிகும்; துன்பங் கெடுதலும் உண்டாம், இவையன்றி இவ்வுடம்பு நீங்கிய நிலையிற்றானே சிவலோகத்தை ஆளுதல் உளதாம் என்றற்கு, ஐயுறவைத் தருங்காரணம் யாதும் அறுதியாக இல்லை; ஆதலின், தமக்கு அடிமைகளாய்த் தம்மையே புகழ்ந்து, தமக்கு விருப்பமானவற்றையே சொல்லி, அதன் மேலும் தம்மையே துணையாகச் சார்ந்து நிற்பினும், அங்ஙனம் சார்ந்தவர்க்கு ஒன்றுந் தருங்குணம் இல்லாத பொய்ம்மையை ஆளுதலையுடைய மக்களைப் பாடுதலை அறவே விடுத்து, அவனது திருப்புகலூரைப் பாடுமின்கள்.

341. மிடுக்கி லாதானை வீம னேவிறல்
விசய னேவில்லுக் கிவனென்று
கொடுக்கி லாதானைப் பாரி யேயென்று
கூறி னுங்கொடுப் பாரிலை
பொடிக்கொள் மேனியெம் புண்ணி யன்புக
லூரைப் பாடுமின் புலவீர்காள்
அடுக்கு மேலம ருலகம் ஆள்வதற்
கியாதும் ஐயுற வில்லையே. 2

மிடுக்கு – ஆண்மை; விறல்.
பாரி – கடையேழு வள்ளல்களில் ஒருவர்.

புலவர்காள்! வலியும் வீரமும் இல்லாதவனை, 'இவன் மல்லுக்கு வீமனே போல்வான். வில்லுக்கு வெற்றியையுடைய அருச்சுனனே போல்வான்' என்றும், கொடுத்தற்குணம் இல்லாதவனை, 'இவன் கொடைக்குப் பாரியே போல்வான்' என்றும் இல்லது கூறிப்பாடினும், நீவிர் வேண்டுவதை நுமக்குக் கொடுப்பார் இவ் வுலகில் ஒருவரும் இல்லை; ஆதலின், நீற்றைக் கொண்ட திருமேனியையுடைய எம் புண்ணிய வடிவினனாகிய சிவபிரானது திருப்புகலூரைப் பாடுமின்; பாடினால், பல உலக அடுக்கிற்கும் மேல் உள்ள அமரரது உலகத்தை ஆளுதல் உளதாம் என்றற்கு ஐயுறற் காரணம் யாதும் அறுதியாக இல்லை.

342. காணி யேற்பெரி துடைய னேகற்று
நல்ல னேசுற்றம் நன்கிளை
பேணி யேவிருந் தோம்பு மேயென்று
பேசி னுங்கொடுப் பாரிலை
பூணி பூண்டுழப் புட்சி லம்புந்தண்
புகலூர் பாடுமின் புலவீர்காள்
ஆணி யாய்அம ருலகம் ஆள்வதற்
கியாதும் ஐயுற வில்லையே. 3

காணியேல் – விளை நிலங்களாயின்.
பூணி – எருது. ஆணி – ஆதரவு. உறுதி.
புட்சிலம்பும் – பறவைகள் ஒலி எழுப்பும்.

புலவர்காள்! நிலம் சிறிதும் இல்லாதவனை, 'காணியோ பெரிதுடையன்' என்றும், கல்வி யில்லாத பேதையை, 'கற்று நலம் பெற்றவன்' என்றும், ஒருவரோடும் அளவளாவுதல் இல்லாதவனை, 'நண்பரையும், நல்ல சுற்றத்தாரையும் பேணுதலையுடையவன்' என்றும், தானே தமியனாய் உண்டு களித்து ஈர்ங்கை விதிராதவனை, 'விருந்தினரை நன்கு புறந்தருவோன்' என்றும் பொய் சொல்லிப் பாடினும், நீவிர் வேண்டுவதை நுமக்குக் கொடுப்பார் இவ்வுலகில் ஒருவரும் இல்லை; ஆதலின், உழவர் எருதுகளைப் பூட்டி நிலத்தை உழ, வயற் பறவைகள் ஒலிக்கின்ற, தண்ணிய திருப்புகலூரைப் பாடுமின்; பாடினால், அமரர் உலகமாகிய தேர்க்கு, அச்சாணியாய் நின்று, அதனை ஆளுதல் உளதாம் என்றற்கு ஐயுறற் காரணம் யாதும் அறுதியாக இல்லை.

343. நரைகள் போந்து மெய் தளர்ந்து மூத்துடல்
நடுங்கி நிற்கும்இக் கிழவனை
வரைகள் போல்திரள் தோள னேயென்று
வாழ்த்தி னுங்கொடுப் பாரிலை
புரைவெள் ளேறுடைப் புண்ணி யன்புக
லூரைப் பாடுமின் புலவீர்காள்
அரைய னாய்அம ருலகம் ஆள்வதற்
கியாதும் ஐயுற வில்லையே. 4

நரைகள் – பல அங்கங்களிலும் நரைத்தன்மை.
அரையன் – அரசன்; தலைவன்
புரை – மேன்மை பொருந்திய

புலவர்காள்! மெய்ம்முழுதும் நரைகள் வரப்பெற்று, மூப்பெய்தி, உடல் நடுக்கங் கண்டு, கால் தளர்ந்து நிற்கின்ற இத்தன்மை யனாகிய கிழவனை, 'மலைகள் போலத் திரண்ட தோள்களையுடைய காளையே' என்று பொய்யாகப் புகழ்ந்து பாடினும், நீவிர் வேண்டுவதை நுமக்குக் கொடுப்பார் இவ்வுலகில் ஒருவரும் இல்லை; ஆதலின், உயர்ந்த வெள்ளிய இடபத்தினையுடைய புண்ணியனாகிய சிவபிரானது திருப்புகலூரைப் பாடுமின்; பாடினால், அமரர் உலகத்திற்குத் தலைவராய் அதனை ஆளுதல் உளதாம் என்றற்கு ஐயுறற் காரணம் யாதும் அறுதியாக இல்லை.

344. வஞ்ச நெஞ்சனை மாச ழக்கனைப்
பாவி யைவழக் கில்லியைப்
பஞ்ச துட்டனைச் சாது வேயென்று
பாடி னுங்கொடுப் பாரிலை
பொன்செய் செஞ்சடைப் புண்ணி யன்புக
லூரைப் பாடுமின் புலவீர்காள்
நெஞ்சில் நோயறுத் துஞ்சு போவதற்
கியாதும் ஐயுற வில்லையே. 5

சழக்கன் – கொடியவன்
உஞ்சு – உய்த்து
வழக்கில்லி – நீதியில்லாதவன்

புலவர்காள்! வஞ்சம் பொருந்திய நெஞ்சை உடையவனும், பெரும்பொய்யனும், பாவத் தொழிலை உடையவனும், நீதி இல்லாதவனும், பஞ்ச மாபாதகங்களையும் செய்பவனும் ஆகியவனை, 'சான்றோனே' என்று உயர்த்திப் பாடினும், நீவிர் வேண்டுவதை நுமக்குக் கொடுப்பார் இவ்வுலகில் ஒருவரும் இல்லை; ஆதலின், பொன் போலும் சிவந்த சடையினை யுடைய புண்ணியனாகிய சிவபிரானது திருப்புகலூரைப் பாடுமின்; பாடினால், மனத்தில் தோன்றும் துன்பங்களையெல்லாம் அறுத்தெரிந்து பிழைத்துப் போதல் உளதாம் என்றற்கு, ஐயுறற் காரணம் யாதும் அறுதியாக இல்லை.

**345.** நலமி லாதானை நல்ல னேயென்று
நரைத்த மாந்தனை யிளையனே
குலமி லாதானைக் குலவ னேயென்று
கூறி னுங்கொடுப் பாரிலை
புலமெ லாம்வெறி கமழும் பூம்புக
லூரைப் பாடுமின் புலவீர்காள்
அலம ராதம ருலக மாள்வதற்
கியாதும் ஐயுற வில்லையே. **6**

புலம் – விளைநிலம்
வெறி – மலர், தேன் முதலியவற்றின் மணம்
அலமருதல் – வருந்துதல்

புலவர்காள்! அழகில்லாதவனை, 'அழகுடையவனே' என்றும், முழுதும் நரை எய்திய கிழவனை, 'இளையவனே' என்றும், இழிகுலத்தவனை, 'உயர்குலத்தவனே' என்றும் மாறிச் சொல்லிப்பாடினும், நீவிர் வேண்டுவதை நுமக்குக் கொடுப்பவர் இவ்வுலகில் ஒருவரும் இல்லை. ஆதலின், வயல்களெல்லாம் தாமரை முதலியவற்றின் மணங்கமழ்கின்ற அழகிய திருப்புகலூரைப் பாடுமின்; பாடினால், அலைவின்றி அமரர் உலகத்தை ஆளுதல் உளதாம் என்றற்கு, ஐயுறற் காரணம் யாதும் அறுதியாக இல்லை.

**346.** நோய னைத்தடந் தோள னேயென்று
நொய்ய மாந்தனை விழுமிய
தாயன் றோபுல வோர்க்கெ லாமென்று
சாற்றி னுங்கொடுப் பாரிலை
போயு ழன்றுகண் குழியா தேயெந்தை
புகலூர் பாடுமின் புலவீர்காள்
ஆய மின்றிப்போய் அண்ட மாள்வதற்
கியாதும் ஐயுற வில்லையே. **7**

ஆயம் – வருத்தம். தடை.
நொய்யை – கீழ்மை
கண் குழிதல் – பசி, வறுமை முதலியவற்றால் கண் குழிப்படைதல்

தொழுநோயால் வருந்துகின்றவனை, 'பெரிய தோள்களை யுடைய மல்லனே' என்றும், ஒன்றும் ஈயாத சிறுமைக்குணம் உடையவனை, 'இவன் புலவர்கட்கெல்லாம் பெருமை பொருந்திய தாய்போல்பவன் அன்றோ' என்றும், நுமக்கு வரும் இளிவரல் கருதாதே பலரும் அறியக் கூறிப்பாடினும், நீவிர் வேண்டுவதை நுமக்குக் கொடுப்பார் இவ்வுலகில் ஒருவரும் இல்லை; ஆதலின், உலகரிடத்துச் சென்று அலைந்து கண்குழிய மெலியாமல், எம் தந்தையாகிய சிவபிரானது திருப்புகலூரைப் பாடுமின்; பாடினால், வருத்தமின்றிச் சென்று வானுலகை ஆளுதல் உளதாம் என்றற்கு, ஐயுறற் காரணம் யாதும் அறுதியாக இல்லை.

347. எள்வி ழுந்திடம் பார்க்கு மாகிலும்
ஈக்கும் ஈகில னாகிலும்
வள்ள லேஎங்கள் மைந்த னேயென்று
வாழ்த்தி னுங்கொடுப் பாரிலை
புள்ளெ லாஞ்சென்று சேரும் பூம்புக
லூரைப் பாடுமின் புலவீர்காள்
அள்ளற் பட்டழுந் தாது போவதற்
கியாதும் ஐயுற வில்லையே. 8

அள்ளல் – நரகம். புள் – பறவை.

புலவர்காள்! எள் விழுந்த இடத்தை, அவ்விழப்பிற்கு வருந்திக் கூர்ந்து நோக்கித் தேடுபவனாயும், ஈக்கும் ஈயாது சிந்தியவற்றைச் சேர்ப்பவனாயும் உள்ளவனை, 'அள்ளி வீசும் வள்ளலே, எங்கட்கு வலிமையாய் உள்ளவனே' என்று சொல்லி வாழ்த்துதலைச் செய்யினும், நீவிர் வேண்டுவதை நுமக்குக் கொடுப்பவர் இவ்வுலகில் இல்லை; ஆதலின், பறவைகளெல்லாம் சென்று சேர்கின்ற அழகிய புகலூரைப் பாடுமின்; பாடினால், உலகியலாகிய சேற்றிற்பட்டு அழுந்தாது பிழைத்துப் போதல் உளதாம் என்றற்கு, ஐயுறற் காரணம் யாதும் அறுதியாக இல்லை.

---

348. கற்றி லாதானைக் கற்று நல்லனே
காம தேவனை யொக்குமே
முற்றி லாதானை முற்ற னேயென்று
மொழியி னுங்கொடுப் பாரிலை
பொத்தி லாந்தைகள் பாட்ட றாப்புக
லூரைப் பாடுமின் புலவீர்காள்
அத்த னாய்அம ருலகம் ஆள்வதற்
கியாதும் ஐயுற வில்லையே. 9

முற்றிலாதான் – எதிலும் முடிவு போக முயற்சி செய்யாதவன்.

முற்றன் – பூரணமாக உடையவன்

முற்று – நற்குணங்களின் தொகுதி

பொத்தில் – பொந்துகளில்

புலவர்காள்! ஒருஞான்றும் ஒன்றனையும் கற்றறியாதவனை, 'மிகவும் கற்று வல்லனாயினானே' என்றும், அழகு சிறிதும் இல்லாதவனை, 'அழகில் காமதேவனை ஒப்பானே' என்றும், ஆண்டும் அறிவும் முதிராதவனை, அவற்றால் முதிர்ந்தவனே என்றும் புனைந்து கூறிப்பாடினும், நீவிர் வேண்டுவதை நுமக்குக் கொடுப்பார் இவ்வுலகில் ஒருவரும் இல்லை; ஆதலின், மரப்பொந்துகளில் ஆந்தைகளின் ஓசை இடையறாது ஒலிக்கின்ற திருப்புகலூரைப் பாடுமின்; பாடினால், அமரர் உலகிற்குத் தலைவராய், அதனை ஆளுதல் உளதாம் என்றற்கு, ஐயுறற் காரணம் யாதும் அறுதியாக இல்லை.

349. தைய லாருக்கொர் காம னேசால
நலவ ழகுடை ஐயனே
கையு லாவிய வேல னேயென்று
கழறி னுங்கொடுப் பாரிலை
பொய்கை வாவியின் மேதி பாய்புக
லூரைப் பாடுமின் புலவீர்காள்
ஐய னாய்அம ருலகம் ஆள்வதற்
கியாதும் ஐயுற வில்லையே. 10

புலவர்காள்! யாவராலும் அருவருக்கப்படும் தோற்றத்தவனை, 'மகளிருள்ளத்திற்குக் காமன் போலத் தோன்றுபவனே, ஆடவர் யாவரினும் மிக இனிய அழகுடைய வியத்தகு தோற்றத்தை யுடையவனே, முருகனுக்கு வேறாய மற்றொரு முருகனே' என்று உறுதியாகச் சொல்லிப் பாடினும், நீவிர் வேண்டுவதை நுமக்குக் கொடுப்பார் இவ்வுலகில் ஒருவரும் இல்லை; ஆதலின் பெரிய பொய்கைகளிலும், சிறிய குளங்களிலும் எருமைகள் வீழ்ந்து உழக்குகின்ற திருப்புகலூரைப் பாடுமின்; பாடினால், அமரருலகத்திற்குத் தலைவராய், அதனை ஆளுதல் உளதாம் என்றற்கு ஐயுறற் காரணம் யாதும் அறுதியாக இல்லை.

வேலன் – குமரன் போன்ற இளையோன்.
ஐயன் – பெருமை உடையவன். தலைவன்.

350. செறுவி னிற்செழுங் கமலம் ஓங்குதென்
புகலூர் மேவிய செல்வனை
நறவம் பூம்பொழில் நாவ லூரன்
வனப்பகை யப்பன் சடையன்றன்
சிறுவன் வன்றொண்டன் ஊரன் பாடிய
பாடல் பத்திவை வல்லவர்
அறவ னாரடி சென்று சேர்வதற்
கியாதும் ஐயுற வில்லையே. 11

வயல்களில் செந்தாமரைகள் செழிக்கின்ற அழகிய திருப்புகலூரில் விரும்பி எழுந்தருளியுள்ள செல்வனாய சிவபெருமானை, தேனையுடைய பூஞ்சோலைகளை உடைய திருநாவலூரனும், வனப்பகைக்குத் தந்தையும், சடையனார்க்கு மகனும், வன்றொண்டனும் ஆகிய நம்பியாரூரன் பாடிய பத்துப் பாடல்களாகிய இவைகளைப் பாட வல்லவர்கள், அறவடிவினனாகிய அப்பெருமானது அரிய திருவடிகளில் சென்று சேர்வர் என்றற்கு, ஐயுறற் காரணம் யாதும் அறுதியாக இல்லை.

செறு – வயல்.
நறவம் – தேன்.

## 35. திருப்புறம்பயம்

(பிறவியிறவிகளின் மயக்கத்தினை உலகர் நீங்கவடையும் சாதனங்களை உபதேசிக்கும் பதிகம்)

பண் : கொல்லி

பதிக எண் : 35

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் கரும்படு சொல்லம்மை உடனமர் அருள்மிகு சாட்சிநாத சுவாமிகள். | | |
| **தல இருப்பிடம்** | சோழ நாட்டில் காவிரி வடகரையில் கும்பகோணத்திலிருந்து மேற்கில் 9 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | வன்னி, புன்னை | | |
| **தீர்த்தம்** | பிரம்ம, சுத்த சாகர தீர்த்தங்கள் | | |
| **பாடியவர்** | மூவர் | **பதிகங்கள்** | 3 |

351. அங்கம் ஓதியோர் ஆறை மேற்றளி
நின்றும் போந்துவந் தின்னம்பர்த்
தங்கி னோமையும் இன்ன தென்றிலர்
ஈச னாரெழு நெஞ்சமே
கங்குல் ஏமங்கள் கொண்டு தேவர்கள்
ஏத்தி வானவர் தாந்தொழும்
பொங்கு மால்விடை ஏறி செல்வப்
புறம்ப யந்தொழப் போதுமே. 1

ஏமங்கள் – இன்பந்தரும் பொருள்கள்

மனமே! ஆறங்கங்களையும் ஓதியவராகிய அந்தணர்களது திருஆறைமேற்றளியினின்றும் புறப்பட்டு வந்து திருவின்னம்பரில் பலநாள் தங்கியும் நம்மை இங்குள்ள இறைவர் இனி நாம் செய்யத்தக்கது இன்னது என்று தெளிவித்தாரில்லை; ஆதலின், வானவர்கள் தம் நிலையினும் மேன்மேல் உயர்தற் பொருட்டு **இரவெல்லாங் காத்து நின்று விடியலில் ஏத்தித் தொழுகின்ற**, அழகுமிக்க பெரிய விடையை ஏறும் பெருமானது, செல்வம் நிறைந்த திருப்புறம்பயத்தை வணங்கச் செல்வோம்; புறப்படு.

352. பதியுஞ் சுற்றமும் பெற்ற மக்களும்
பண்டை யாரலர் பெண்டிரும்
நிதியில் இம்மனை வாழும் வாழ்க்கையும்
நினைப்பொ ழிமட நெஞ்சமே
மதியஞ் சேர்சடைக் கங்கை யானிடம்
மகிழும் மல்லிகை செண்பகம்
புதிய பூமலர்ந் தெல்லி நாறும்
புறம்ப யந்தொழப் போதுமே. 2

சிவன் ஒருவரே பண்டு மின்றும் என்றும் உள்ள பொருளாவார். எல்லி – இரவு. மல்லிகை, சண்பகம் முதலிய பூக்கள் மாலையில் மலர்ந்து இரவு முழுவதும் மணம் வீசும் இயல்புடையன.

அறியாமையுடைய மனமே! நாம் வாழ்கின்ற ஊரும், மணந்த மனைவியாரும், பெற்ற மக்களும், பிற சுற்றத்தாரும், தேடிய பொருளும், அப்பொருளால் மனையில் வாழும் இவ்வாழ்க்கையும் எல்லாம் பண்டு தொட்ட தொடர்பினரல்லர்; அதனால், என்றும் உடன் தொடர்ந்தும் வாரார். ஆதலின், அவர்களைப் பற்றிக் கவலுதல் ஒழி; இனி நாம், சந்திரன் சேர்ந்த சடையிடத்துக் கங்கையை அணிந்தவன் தன் இடமாக மகிழும், மல்லிகைக் கொடியும், சண்பக மரமும் புதிய பூக்களை மலர்ந்து இரவெல்லாம் மணம் வீசுகின்ற திருப்புறம்பயத்தை வணங்கச் செல்வோம்; புறப்படு.

353. புறந்தி ரைந்து நரம்பெழுந்து
நரைத்து நீஉரை யாற்றளர்ந்
**தறம்பு ரிந்துநி னைப்ப தாண்மை**
**யரிது காணிஃ** தறிதியேல்
திறம்பி யாதெழு நெஞ்ச மேசிறு
காலை நாமுறு வாணியம்
புறம்ப யத்துறை பூத நாதன்
புறம்ப யந்தொழப் போதுமே. 3

மனமே! தோல் திரைந்து, நரம்புகள் வெளித் தோன்றி, வாய் குழறும் நிலை வந்த பின்பு அறத்தைச் செய்ய நினைப்பது பயனில்லாததாம்; இதனை நீ அறிவையாயின், நாம் இளமையிலே செய்து ஊதியம் பெறுதற்குரிய வாணிகம் இதுவேயாக, புறத்திலே அச்சத்தொடு சூழும் பூதங்களுக்குத் தலைவனாகிய இறைவனது திருப்புறம்பயத்தை வணங்கச் செல்வோம்; என்னைப் பிறழ்வியாது, விரையப் புறப்படு.

354. குற்றொ ருவ்வரைக் கூறை கொண்டு
கொலைகள் சூழ்ந்த களவெலாம்
சொற்றொ ருவ்வரைச் செய்த தீமைகள்
இம்மை யேவருந் திண்ணமே
மற்றொ ருவ்வரைப் பற்றி லேன்மற
வாதெ ழுமட நெஞ்சமே
புற்ற ரவ்வுடைப் பெற்ற மேறி
புறம்ப யந்தொழப் போதுமே. 4

அறியாமையுடைய மனமே! பொருளைப் பறித்தல் வேண்டி அஃது உடைய ஒருவரைக் கருவியாற் குற்றி, அவர் உடையைப் பறித்து, மேலும் கொலைச் செயல்களைச் செய்தத் துணிந்த களவினால் ஆகிய பாவங்களும், முறையில் நிற்கும் ஒருவரை முறையின்றிப் பகைத்து, அப்பகை காரணமாக அவர்க்குத் தீங்கிழைத்த பாவங்களும் மறுமை வருங்காறும் நீட்டியாது இம்மையே வந்து வருத்தும்; இது திண்ணம்; ஆதலின், அவைபோல்வன நிகழா திருத்தற்கு உன்னையன்றிப் பிறர் ஒருவரையும் நான் துணையாகப் பற்றாது உன்னையே பற்றினேன்; புற்றில் வாழும் பாம்புகளை அணிகளாக உடைய, இடப வாகனனது திருப்புறம்பயத்தை வணங்கச் செல்வோம்; அவனை நினைந்து புறப்படு.

குத்துதல் கையாலும், குற்றுதல் கருவியாலும் நிகழ்வன. முன்னையது புண் செய்யாது. பின்னையது புண் செய்யும். சூழ்தல் எண்ணித் துணிதலைக் குறித்தது. எச்செயலுக்கும் மனமே முதலாதலின், அல்லதை ஒழித்தற்கும், நல்லதைச் செய்தற்கும் அதனையே துணையாகப் போற்றினார்.

355. கள்ளி நீசெய்த தீமை யுள்ளன
பாவ மும்பறை யும்படி
தெள்ளி தாஎழு நெஞ்ச மேசெங்கண்
சேவு டைச்சிவ லோகனூர்
துள்ளி வெள்ளிள வாளை பாய்வயல்
தோன்று தாமரைப் பூக்கள்மேல்
புள்ளி நள்ளிகள் பள்ளி கொள்ளும்
புறம்ப யந்தொழப் போதுமே. 5

மனமே! நீ வஞ்சித்துச் செய்த தீமையால் உளவாகிய பாவமும் நீங்கும்படி இடபத்தையுடைய சிவலோகனது ஊராகிய, வெள்ளிய இளமையான வாளை மீன்கள் துள்ளிப் பாய்கின்ற வயல்களில் மலர்கின்ற தாமரைப் பூக்களின் மேல், புள்ளிகளையுடைய நள்ளிகள் (நண்டுகள்) பள்ளிகொள்கின்ற திருப்புறம்பயத்தை வணங்கத் தெளிவுடை யையாய்ப் புறப்படு. பறையும்படி – நீங்கும்படி.

கள்ளி – கள்ளத்தனம். நள்ளி – நண்டு

356. படையெ லாம்பக டார ஆளிலும்
பௌவஞ் சூழ்ந்தர சாளிலும்
கடையெ லாம்பிணைத் தேரை வால்கவ
லாதெ ழுமட நெஞ்சமே
மடையெ லாங்கழு நீர்ம லர்ந்து
மருங்கெ லாங்கரும் பாடத்தேன்
புடையெ லாமணம் நாறு சோலைப்
புறம்ப யந்தொழப் போதுமே. 6

அறியாமை பொருந்திய மனமே! யானைகள் நிரம்பியிருக்க, பல படைகளையும் ஏவல் கொண்டு வெற்றியைப் பெறினும், அவ்வெற்றியாலே கடல்சூழ்ந்த நிலம் முழுவதையும் ஆளினும், முடிவில் எல்லாம், தேரையோடு ஒட்டியுள்ள வால்போல ஆகிவிடும்; ஆதலால், நீர்மடைகளில் எல்லாம் கழுநீர்ப் பூக்கள் மலர்தலாலும், பல இடங்களிலும் கரும்பை ஆலையில் இட்டுப் பிழிதலாலும், எல்லாப் பக்கங்களிலும் தேனின் மணம் வீசுகின்ற சோலைகளையுடைய திருப்புறம்பயத்தை வணங்கச் செல்வோம்; அவைகளைப் பற்றிக் கவலைகொள்ளாது புறப்படு.

தேரைவால் – தேரையுடன் தோன்றிய வால் ஒரு கால எல்லையில் அதனை விட்டு ஒழிதல் போல, படைகளும், நாடு, செல்வம் முதலியனவும் ஒரு கால எல்லையில் விட்டொழியும். உடன் வருவது யாதுமில்லை. பகடு – யானை.

357. முன்னைச் செய்வினை இம்மை யில்வந்து
மூடு மாதலின் முன்னமே
என்னை நீதியக் காதெ ழும்மட
நெஞ்ச மேஎந்தை தந்தையூர்
அன்னச் சேவலோ டூடிப் பேடைகள்
கூடிச் சேரு மணிபொழில்
புன்னைக் கன்னி களக்கரும்பு
புறம்ப யம்தொழப் போதுமே. 7

அறியாமையையுடைய மனமே! ஒருவர் முற்பிறப்பிற் செய்த வினை, இப்பிறப்பில் வந்து அவரைச் சூழ்ந்து கொள்ளும் என்பது உண்மையாதலின், அங்ஙனம் வந்து சூழ்வதற்கு முன்பே, எமக்கும் பிறர்க்கும் தந்தையாகிய சிவபெருமானது ஊராகிய, அன்னப் பேடைகள், அவற்றின் சேவல்களோடு முன்னே ஊடல் கொண்டு, பின்பு கூடலைச் செய்து வாழ்கின்ற அழகிய சோலைகளில் உள்ள இளைய புன்னை மரங்கள் கழிக்கரையில் நின்று மணம் வீசுகின்ற திருப்புறம்பயத்தை வணங்கச் செல்வோம்; என்னை நீ கலங்கச் செய்யாது புறப்படு.

**358.** மலமெ லாமறும் இம்மை யேமறு
மைக்கும் வல்வினை சார்கிலா
சலமெ லாமொழி நெஞ்ச மேஎங்கள்
சங்க ரன்வந்து தங்குமூர்
கலமெ லாங்கடல் மண்டு காவிரி
நங்கை யாடிய கங்கைநீர்
புலமெ லாமண்டிப் பொன்வி ளைக்கும்
புறம்ப யந்தொழப் போதுமே. 8

சலம் – தீயசெயல். கலம் – கப்பல்.

மனமே! இப்பிறப்பிற்றானே மலங்கள் யாவும் நீங்கும்; மறுபிறப்பிற்கு வாயிலாக வலிய வினைகள் வந்து அடைய மாட்டா; ஆதலின், நீ துன்பத்தை விட்டொழி; எங்கள் சங்கரன் வந்து தங்கியிருக்கும் ஊராகிய, காவிரிநதி என்கின்ற நங்கை முழுக ஓடுகின்ற, கடலிற் காணப்படுவது போல நாவாய்கள் மிகுந்து காணப்படுகின்ற கங்கைநதியின் நீர் போலும் நீர், வயல்களிலெல்லாம் மிகப் பாய்ந்து பொன் போலும் செந்நெற்களை விளைவிக்கின்ற திருப்புறம்பயத்தை வணங்கச் செல்வோம்.

**359.** பண்ட ரீயன செய்த தீமையும்
பாவ மும்பறை யும்படி
கண்ட ரீயன கேட்டி யேற்கவ
லாதெ மூடநெஞ்சமே
தொண்ட ரீயன பாடித் துள்ளிநின்
றாடி வானவர் தாந்தொழும்
புண்ட ரீகம லரும் பொய்கைப்
புறம்ப யந்தொழப் போதுமே. 9

"புறம்பயந் தொழப் போதுமே" என்பது பதிக மகுடம்.

அறியாமையையுடைய மனமே! முற்பிறப்பில் நீக்குதற்கு அரியனவாகச் செய்த தீய செயல்களின் பழக்கமும், அச்செயல்களால் வந்த பாவமும் விரைய நீங்கும்படி நான் கண்ட அரிய வழிகளை நீ கேட்டு நடப்பதாயின், தேவர்கள் அரிய பல தொண்டுகளைச் செய்து பாடியும், குதித்து நின்று ஆடியும் தொழுகின்ற, தாமரை மலர்கள் மலர்கின்ற பொய்கைகளை யுடைய திருப்புறம்பயத்தை வணங்கச் செல்வோம்; கவலையுறாமல் புறப்படு.

**360.** துஞ்சி யும்பிறந் துஞ்சி றந்துந்
துயக்க றாத மயக்கிவை
அஞ்சி யூரன் திருப்பு றம்பயத்
தப்ப னைத்தமிழ்ச் சீரினால்
நெஞ்சி னாலே புறம்ப யந்தொழு
துய்து மென்று நினைத்தன
வஞ்சி யாதுரை செய்ய வல்லவர்
வல்ல வானுல காள்வரே. 10

துயக்கு – கலக்கம். மயக்கம் – துன்பத்தை இன்பமென்று கருதுவது. வஞ்சித்தல் – அஞ்சாது அஞ்சினார் போலக் காட்டுதல்.

இறந்தும், பின்பு பிறந்தும், அதன்பின் வளர்ந்தும் சுழலுதல் நீங்காத மயக்கத் தொழிலாகிய இவைகளுக்கு அஞ்சி நம்பியாரூரன், 'திருப்புறம்பயத்தை வணங்கி உய்வோம்' என்று நெஞ்சினாலே நினைத்து, ஆங்கிருக்கின்ற தன் தந்தையை தமிழ்ச் சீர்களால் பாடிய இப் பாடல்களைக் கரவில்லாது பாட வல்லவர்கள், அவைகளை நீக்கவல்ல வானுலகத்தை ஆள்வார்கள்.

## 36. திருப்பைஞ்ஞீலி

தம்பிரான் தோழர் திருப்பாச்சிலாச்சிராமத்தில் பெருமானைத் தொழுது பொருள் பெற்றுச் சின்னாள் தங்கி, அருகிலுள்ள பதிகளை வணங்கிய பின்னர் காவிரியின் இரு மருங்கிலுமுள்ள தலங்களை வணங்கிக் கொண்டு திருப்பைஞ்ஞீலி சென்று திருக்கோபுரம் இறைஞ்சி வலங்கொண்டு கங்காளமூர்த்தியைத் தரிசித்து, பெருமான் பலிக்கு எழுந்தருளும் திருவடிவைக் கண்ட மகளிர் மையல் கொண்டு வினவிய கூற்றாக அமைத்துப் பாடியருளியது இத்திருப்பதிகம்.

குறிப்பு : இத்திருப்பதிகம், இறைவர் பிச்சைக்கோலம் உடையவராய்ப் பிச்சைக்குச் சென்றபொழுது, அவரது பேரழகினால் கவரப்பட்டுக் காதல் மீக்கூர்ந்த மகளிர் அவரைத் தாம் தீண்டுதற்கு அஞ்சுதலைக் குறிப்பிற் கூறியவாறாக அருளிச் செய்தது. மகளிர் அஞ்சுதற்குக் காரண மாயினவை. பிறரைத் தீங்கு செய்யும் குறிப்பினவாகாது. இறைவரது பெருமிதத்தையே குறித்தலின், அவ்வச்சமும், காதல் மிகுதிக்கே காரணமாயிற்றென உணர்க.

பண் : கொல்லி                                                                                    பதிக எண் : 36

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் நீள் நெடுங்கண்ணி உடனமர் அருள்மிகு நீலகண்டர். | | |
| **தல இருப்பிடம்** | சோழ நாட்டில் காவிரி வடகரையில் திருச்சிராப்பள்ளிக்கு வடமேற்கில் 12 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | வாழை | | |
| **தீர்த்தம்** | அப்பர் தீர்த்தம் | | |
| **பாடியவர்** | மூவர் | **பதிகங்கள்** | 3 |

361. காரு லாவிய நஞ்சை யுண்டிருள்
    கண்டர் வெண்டலை யோடுகொண்
டுரே லாந்திரிந் தென்செய் வீர்பலி
    ஓரி டத்திலே கொள்ளும் நீர்
பாரெ லாம்பணிந் தும்மை யேபர
    விப்ப ணியும்பைஞ் ஞீலியீர்
ஆர மாவது நாக மோசொலும்
    ஆர ணீய விடங்கரே. 1

ஆரண்யம் – காடு. ஆரணீயம் – வனத்தின் வரும்; வனத்தைப் பற்றிய. விடங்கர் – உளிபடாத திருமேனி உடையவர். தான்தோன்றி. ஒருவரால் ஆக்கப்படாது தாமாகச் சமைந்த இயற்கைத் திருவடிவம்.

கருமைநிறம் பொருந்திய நஞ்சினை உண்டமையால் இருண்ட கண்டத்தினை யுடையவரே! நிலவுலகமெல்லாம் உம்மையே வணங்கித் துதித்துத் தொண்டுபுரியும் பெருமையுடைய, திருப்பைஞ்ஞீலி இறைவரே! காட்டில்வாழும் அழகரே! நீர் வெண்மையான தலையோட்டினைக் கையிற்கொண்டு ஊரெலாந் திரிந்து என்ன பெறப் போகின்றீர்? இவ்வோரிடத்திற்றானே நீர் வேண்டிய அளவினதாகிய பிச்சையைப் பெற்றுக் கொள்வீர்; அது நிற்க; உமக்கு முத்து வடமாவது, பாம்புதானோ? சொல்லீர்.

362. சிலைத்து நோக்கும்வெள் ளேறு செந்தழல்
வாய பாம்பது மூசெனும்
பலிக்கு நீர்வரும் போது நுங்கையிற்
பாம்பு வேண்டா பிரானிரே
மலைத்த சந்தொடு வேங்கை கோங்கமும்
மன்னு காரகில் சண்பகம்
அலைக்கும் பைம்புனல் சூழ்பைஞ் ஞீலியில்
ஆர ணீய விடங்கரே. 2

மயல் கொண்டு அணுக வரும் பெண்கள், பாம்பு கண்டு அஞ்சிக் கூறிய கூற்றாகக் கொள்ள வேண்டும். மூசு – பாம்பின் இரைச்சல் காட்டும் ஒலிக்குறிப்புச் சொல்.

இறைவரே! மலையின்கண் பிறந்த, 'சந்தனம், வேங்கை, கோங்கு, மிக்க கரிய அகில், சண்பகம் என்னும் மரங்களை அலைத்துக் கொண்டு வரும், தண்ணிய நீர் சூழ்ந்த திருப்பைஞ்ஞீலியில் எழுந்தருளியிருக்கின்ற, காட்டில் வாழும் அழகரே! நுமது வெள் விடை முழக்கமிட்டுச் சினந்து பார்க்கின்றது; சிவந்த நெருப்புப் போலும் நஞ்சினைக் கொண்ட வாயினையுடைய பாம்பு, 'மூசு' என்னும் ஓசையுண்டாகச் சீறுகின்றது; ஆதலின், நீர் பிச்சைக்கு வரும் போது கையில் பாம்பையேனும் கொண்டுவருதல் வேண்டா.

363. தூய வர்கண்ணும் வாயும் மேனியுந்
துன்ன ஆடை சுடலையில்
பேயொ டாடலைத் தவிரும் நீரொரு
பித்த ரோஎம் பிரானிரே
பாயும் நீர்க்கிடங் கார்க மலமும்
பைந்தண் மாதவி புன்னையும்
ஆய பைம்பொழில் சூழ்பைஞ் ஞீலியில்
ஆர ணீய விடங்கரே. 3

துன்னஆடை – தைத்த ஆடை

எம்பெருமானிரே! பாயுந் தன்மையுடைய நீரைக் கொண்ட அகழியில் நிறைந்துள்ள தாமரைகளும், அதன் கரையில், மாதவியும், புன்னையும் பொருந்திய சோலைகள் சூழ்ந்த திருப்பைஞ்ஞீலியில், எழுந்தருளியுள்ள, காட்டில் வாழும் அழகரே! நீர், கண்ணும், வாயும், மேனியும் அழகியராய் இருக்கின்றீர்; ஆயினும், தைத்த கோவணத்தை உடுத்து, சுடலையில் பேயோடு ஆடுதலை ஒழிய மாட்டீர்; நீர் ஒரு பித்தரோ? அவற்றை விட்டொழியும்.

364. **செந்த மிழ்த்திறம் வல்லி ரோசெங்கண்**
அரவம் முன்கையில் ஆடவே
வந்து நிற்குமி தென்கொ லோபலி
மாற்ற மாட்டோ மிடகிலோம்
பைந்தண் மாமலர் உந்து சோலைகள்
கந்த நாறுபைஞ் ஞீலியீர்
அந்தி வானமும் மேனி யோசொலும்
ஆர ணீய விடங்கரே. 4

பசிய, தண்ணிய, சிறந்த பூக்களை உதிர்க்கின்ற சோலைகள் நறுமணம் வீசுகின்ற திருப்பைஞ்ஞீலியில் எழுந்தருளி இருப்பவரே! காட்டில் வாழும் அழகரே! நீர் மகளிர் மனத்தைக் கவர்தற்கு, 'செந்தமிழுக்கே சிறப்பாயுள்ள அகப்பொருளியலில் வல்லிரோ? நும் மேனியும் அந்தி வானம் போல்வதோ? சொல்லீர், அவை நிற்க; நீர், உமது முன்கையில் பாம்பு நின்று படம் எடுத்து ஆடும்படி வந்து நிற்பது ஏன்? இதனால், நாங்கள் கொண்டுவந்த பிச்சையை இடாது போக மாட்டேமும், இடமாட்டேமும் ஆகின்றோம்.

**365.** நீறு நுந்திரு மேனி நித்திலம்
நீல்நெ டுங்கண்ணி னாளொடும்
கூற ராய்வந்து நிற்றி ராற்கொணர்ந்
திடகி லோம்பலி நடமினோ
பாறு வெண்டலை கையி லேந்திப்பைஞ்
ஞீலி யேனென்றீ ரடிகள்நீர்
ஆறு தாங்கிய சடைய ரோசொலும்
ஆர ணீய விடங்கரே. 5

கங்கை, நங்கை என்ற இருவர் ஏற்கனவே உம்முடன் இருக்க இச்செயல் தகாது எனல்.

பாறு – பருந்துகள் மொய்க்கின்ற

தலைவரே! காட்டில் வாழும் அழகரே! நீர், அழிந்த வெண்மையான தலையோட்டினைக் கையில் ஏந்திக் கொண்டு, 'யான் இத் திருப்பைஞ்ஞீலியில் உள்ளேன்; சிறிது பிச்சை இடுமின்' என்றீர்; உமது திருமேனியில் உள்ள நீறு முத்துப்போல வெள்ளொளியை வீசுகின்றது. ஆயினும், கரிய நீண்ட கண்களையுடைய பெண் ஒருத்தியோடும் கூடிய பாதி உருவத்தையுடையிராய் வந்து நிற்கின்றீர்; அதன் மேலும் நீர், கங்கையைச் சுமந்த சடையை உடையவரோ? சொல்லீர்; இதனால், உமக்கு நாங்கள் பிச்சையைக் கொணர்ந்தும் இடேமாயினேம் நடவீர்.

---

**366.** குரவம் நாறிய குழலி னார்வளை
கொள்வ தேதொழி லாகிநீர்
இரவும் இம்மனை அறிதி ரேஇங்கே
நடந்து போகவும் வல்லிரே
பரவி நாடொறும் பாடு வார்வினை
பற்ற றுக்கும்பைஞ் ஞீலியீர்
அரவம் ஆட்டவும் வல்லி ரோசொலும்
ஆர ணீய விடங்கரே. 6

குரவம் நாறிய – நறுமணம் வீசும்.

நாள்தோறும் பாடிப் பரவுவாரது வினைகளைப் பற்றறச் செய்யும் திருப்பைஞ்ஞீலி இறைவரே! காட்டில் வாழும் அழகரே! நீர், குராமலரின் மணத்தை வீசுகின்ற கூந்தலையுடைய மகளிரது வளைகளைக் கவர்ந்துகொள்வதே தொழிலாய், இங்குள்ள இல்லங்களை இரவிலும் வந்து அறிகின்றீர்; அதனால், நள்ளிரவில் இங்கு நின்றும் நடந்து போகவும் வல்லீரோ? அதுவன்றிப் பாம்பு ஆட்டவும் வல்லீரோ? சொல்லீர்.

---

**367.** ஏடு லாமலர்க் கொன்றை சூடுதிர்
என்பெ லாமணிந் தென்செய்வீர்
காடு நும்பதி ஓடு கையது
காதல் செய்பவர் பெறுவதென்
பாடல் வண்டிசை யாலுஞ் சோலைப்பைஞ்
ஞீலி யேனென்று நிற்றிரால்
ஆடல் பாடலும் வல்லி ரோசொலும்
ஆர ணீய விடங்கரே. 7

ஏடுலாம் – இதழ்களை உடைய

காட்டில் வாழும் அழகரே! நீர், 'யான், பாடு தலையுடைய வண்டுகள் இசையை முழக்குகின்ற சோலைகளையுடைய திருப்பைஞ்ஞீலியில் உள்ளேன்; சிறிது பிச்சையிடுமின்' என்று சொல்லி வந்து நிற்கின்றீர்; நீர், இதழ்கள் பொருந்திய கொன்றை மலர் மாலையைச் சூடுகின்றீர்; அதனோடு ஒழியாது, எலும்புகளையெல்லாம் அணிந்து என்ன பெறப்போகின்றீர்? அதுவன்றி, நும் ஊரோ, காடு; நும் கையில் இருப்பதோ, ஓடு; இவ்வாறாயின் உம்மைக் காதலிப்பவர் பெறும் பொருள் யாது? இந்நிலையில் நீர், ஆடல் பாடல்களிலும் வல்லீரோ? சொல்லீர்.

| | |
|---|---|
| **368.** மத்த மாமலர்க் கொன்றை வன்னியுங்<br>கங்கை யாளொடு திங்களும்<br>மொய்த்த வெண்டலை கொக்கி றஃகொடு<br>வெள்ளெ ருக்கமுஞ் சடையதாம்<br>பத்தர் சித்தர்கள் பாடி யாடும்பைஞ்<br>ஞீலி யேனென்று நிற்றிரால்<br>அத்தி யீருரி போர்த்தி ரோசொலும்<br>ஆர ணீய விடங்கரே. 8 | காட்டில் வாழும் அழகரே! நீர், 'யான் அடியார்களும், சித்தர்களும் பத்தி மிகுதியால் திருப்பாடல்களைப் பாடிக் கொண்டு ஆடுகின்ற திருப்பைஞ்ஞீலியில் உள்ளேன்; சிறிது பிச்சை இடுமின்' என்று சொல்லிவந்து நிற்கின்றீர்; 'ஊமத்தை, கொன்றை' என்னும் இவற்றின் சிறந்த மலர்களும், வன்னியின் இலையும், கங்கையும், பிறையும், அவற்றோடு நெருங்கிய வெண்டலையும், கொக்கிறகும், வெள்ளெருக்கும் உம் சடையிலே உள்ளன; அவைகளேயன்றி, யானையை உரித்த தோலையும் மேனிமேல் போர்த்துக் கொள்வீரோ ? சொல்லீர். |
| **369.** தக்கை தண்ணுமை தாளம் வீணை<br>தகுணிச் சங்கிணை சல்லரி<br>கொக்க ரைகுட முழவி னோடிசை<br>கூடிப் பாடிநின் றாடுவீர்<br>பக்க மேகுயில் பாடுஞ் சோலைப்பைஞ்<br>ஞீலி யேனென்று நிற்றிரால்<br>அக்கும் ஆமையும் பூண்டி ரோசொலும்<br>ஆர ணீய விடங்கரே. 9 | காட்டில் வாழும் அழகரே! நீர், 'யான், எப்பக்கங்களிலும் குயில்கள் பாடுகின்ற திருப்பைஞ்ஞீலியில் உள்ளேன்; சிறிது பிச்சை இடுமின்' என்று சொல்லி வந்து நிற்கின்றீர். நீர், 'தக்கை, தண்ணுமை, தாளம், வீணை, தகுணிச்சம், கிணை, சல்லரி, சங்கு, குடமுழா' என்னும் இவற்றொடு கூடி, பல இசைகளைப் பாடிக்கொண்டு முன்வந்து நின்று ஆடுவீர்; ஆயினும், அதற்கேற்ப நல்ல அணிகளை அணியாது, எலும்பையும், ஆமையோட்டையும் அணிந்து கொண்டீரோ ? சொல்லீர். |
| **370.** கையொர் பாம்பரை யார்த்தொர் பாம்பு<br>கழுத்தொர் பாம்பவை பின்புதாழ்<br>மெய்யெ லாம்பொடிக் கொண்டு பூசுதிர்<br>வேதம் ஓதுதிர் கீதமும்<br>பைய வேவிடங் காக நின்றுபைஞ்<br>ஞீலி யேனென்றீ ரடிகள்நீர்<br>ஐயம் ஏற்குமி தென்கொ லோசொலும்<br>ஆர ணீய விடங்கரே. 10<br><br>"சொலும் ஆரணீய விடங்கரே" என்பது பதிக மகுடம் | தலைவரே! காட்டில் வாழும் அழகரே! உமக்குக் கையில் ஒரு பாம்பு; அரையில் கட்டிய ஒரு பாம்பு; கழுத்தில் ஒரு பாம்பு; அவையெல்லாம் பின்புறம் ஊர்கின்ற மேனி முழுவதும் நீற்றினால் பூசியுள்ளீர்; அதனோடு வேதம் ஓதுகின்றீர்; இவற்றோடு இசையும் உம்மிடத்தில் மெல்ல அழகியதாய்த் தோன்ற, வந்து நின்று, 'யான் திருப்பைஞ்ஞீலியில் உள்ளேன்; சிறிது பிச்சை இடுமின்' என்கின்றீர்; பிச்சை எடுக்கும் இக்கோலம் எத்தன்மையதோ ? சொல்லீர். |

371. அன்னஞ் சேர்வயல் சூழ்பைஞ் ஞீலியில்
ஆர ணீய விடங்கரை
மின்னு நுண்ணிடை மங்கை மார்பலர்
வேண்டிக் காதல் மொழிந்தசொல்
மன்னு தொல்புகழ் நாவ லூரன்வன்
றொண்டன் வாய்மொழி பாடல்பத்
துன்னி இன்னிசை பாடு வார்உமை
கேள்வன் சேவடி சேர்வரே. 11

அன்னங்கள் தங்குகின்ற வயல்கள் சூழ்ந்த திருப்பைஞ்ஞீலியில் எழுந்தருளியுள்ள, காட்டில் வாழும் அழகராகிய இறைவரை, தோன்றி மறைகின்ற நுண்ணிய இடையினையுடைய மங்கையர் பலர் காதலித்து அக்காதலை வெளிப்படுத்திய சொற்களையுடைய நிலைபெற்ற பழைய புகழினையுடைய திருநாவலூரில் தோன்றினவனாகிய வன்றொண்டனது வாய்மொழியான இப்பத்தினையும், மனத்தில் புகக்கொண்டு, இனிய இசையாற் பாடுபவர், உமாதேவிக்குக் கணவனாகிய சிவபிரானது செவ்விய திருவடியை அடைவர்.

## 37. திருவாரூர்

(தலைவனைப் பிரிந்த தலைவி பிரிவாற்றாது தலைவன் பால் தூது விடுத்தல் என்னும் அகத்துறை)

சங்கிலி நாச்சியாரை மணந்த சுந்தரர், திருவொற்றியூரை நீங்கியதால் இழந்த கண்களில் காஞ்சியில் ஒரு கண்ணைப் பெற்று, திருத்துருத்தியில் பிணி நீங்கப் பெற்று, பல தலங்களையும் வணங்கிக் கொண்டு திருவாரூர் அடைந்து, முதலில் பரவையுண்மண்டளிப் பெருமானை, "தூவாயா" என்று தொடங்கும் திருப்பதிகம் பாடித் தொழுதார். பின்னர், திருமூலட்டானரை வழிபட அர்த்தயாம வழிபாட்டிற்குச் செல்லும் பொழுது அன்பர்கள் எதிரணையக் கண்டு அயலார் வினவுவதுபோல, "கைக்கிளை" என்னும் அகப்பொருள் துறையமையப் பாடியருளியது இத்திருப்பதிகம்.

குறிப்பு : இத்திருப்பதிகம், திருவாரூர்ப் பெருமானிடத்துக் காதல் கொண்டாள் ஒருத்தி. அக்காதல் மிகுதியால் பறவைகளையும், வண்டுகளையும் நோக்கிச் சில கூறுங் கூற்றாக அருளிச்செய்தது. சுவாமிகள், திருவாரூர்ப் பெருமான் தமக்கு அருளாமையால் வருந்திய வருத்தத்தினை அடியவரிடம் தெரிவித்துக் கொள்ளுதல் குறிப்பினால் தோன்ற, இவ்வாறு பிறிதோராற்றாற் புலப்படுத்தியருளினார் என்க.

பண் : கொல்லி　　　　　　　　　　பதிக எண் : 37

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் அல்லியங்கோதை உடனமர் அருள்மிகு வன்மீகநாதர் (புற்றிடங் கொண்டீசர்) | | |
| **தல இருப்பிடம்** | சோழ நாட்டில் காவிரியின் தென்கரையில் தஞ்சையிலிருந்து 70 கி.மீ., நாகையிலிருந்து 30 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | பாதிரி | | |
| **தீர்த்தம்** | கமலாலயம் | | |
| **பாடியவர்** | மூவர் | **பதிகங்கள்** | 33 |

372. **குருகு**பா யக்கொழுங் கரும்புக ணெரிந்தசா
றருகுபா யும்வயல் அந்தண்ஆ ரூரரைப்
**பருகுமா றும்பணிந் தேத்துமா றுந்நினைந்
துருகுமா றும்**மிவை உணர்த்தவல் லீர்களே. 1

குருகு – அஃறிணைப் பொதுப்பெயர்
– பொதுவாக பறவை, நீர்ப்பறவை, நாரை, அன்னம் என்று கூறுவர்.
ஆரூரரைப் பருகுதல் – பணிந்து ஏத்துதல்
– நினைந்து உருகுதல்
பருகுமாறும் – அனுபவிக்கும் வண்ணத்தையும்.

குருகுகளே! நீங்கள் பறந்து உலாவுவதனால் செழுமையான கரும்புகள் நெரிந்து பெருகிய சாறு, அருகாகச் சென்று பாய்கின்ற வயல்களையுடைய அழகிய தண்ணிய திருவாரூர் இறைவரை, யான் உள்ளத்தால் திளைக்கின்றவாறும், திசைநோக்கி வணங்கித் துதிக்கின்றவாறும், நினைந்து நெஞ்சு உருகுகின்றவாறும் ஆகிய இவைகளை என் பொருட்டு அவர்க்குத் தெரிவிக்க வல்லீர்களோ?

373. பறக்குமெங் **கிள்ளைகாள்** பாடுமெம் பூவைகாள்
**அறக்கணென் னத்தகும் அடிகள்ஆ ரூரரை**
மறக்ககில் லாமையும் வளைகள்நில் லாமையும்
உறக்கமில் லாமையும் உணர்த்தவல் லீர்களே. 2

எம் கிள்ளைகாள் – எம் பூவைகாள் – 'எம்' என்பது தூது செல்வோரை அன்பினால் தம்மவராக்கிக் கொள்ளும் நிலை.

அறக்கண் எனத்தகும் அடிகள் ஆரூரர் – மனுநீதிச் சோழர் வரலாறு ஆரூரில் நிகழ்ந்ததை நினைவு கூரவேண்டும். அறக்கண் – அறத்துக்கு இருப்பிடம் மறக்க இல்லாமை – பிரிவாற்றாமையால் வருந்தும் தலைவி நிலை.

பறக்கும் இயல்புடைய எங்கள் கிளிகளே! பாடும் இயல்புடைய எங்கள் நாகணவாய்ப் புட்களே! அறத்திற்குக் கண் என்று சொல்லத்தக்க தலைவராகிய திருவாரூர் இறைவரை, யான் ஒரு ஞான்றும் மறக்க இயலாமையையும், அது காரணமாக எனது கைவளைகள் நில்லாது கழன்று வீழ்தலையும், கண்கள் உறங்குதல் இல்லாமையையும் என்பொருட்டு அவருக்குத் தெரிவிக்க வல்லீர்களோ?

374. சூழுமோ டிச்சுழன் றுழலும்**வெண் ணாரைகாள்**
ஆளும்அம் பொற்கழல் அடிகள்ஆ ரூரர்க்கு
வாழுமா றும்வளை கழலுமா றும்மெனக்
கூழுமா றும்மிவை உணர்த்தவல் லீர்களே. 3

வாழுமாறு – பிரிவாற்றாமையால் இறந்துபடாது உயிரொன்று தாங்கி நிறை நிலை.

எனக்கு ஊழுமாறு – ஊழினைப்பற்றி நினைந்து இரங்குதல்.

சுற்றிலும் ஓடிச் சுழன்று திரியும் வெள்ளிய நாரைகளே! அடியவர்களை ஆளுகின்ற அழகிய பொன்போலும் திருவடிகளையுடைய தலைவராகிய திருவாரூர் இறைவருக்கு, யான் இவ்வுடம்பின் நீங்காது வாழுமாறும், என்வளைகள் கழலுமாறும், மாறாத முறையும் என்னிடத்து மாறி நிகழுமாறும் ஆகிய இவைகளை என் பொருட்டுத் தெரிவிக்க வல்லீர்களோ?

375. சக்கிரவா கத்திளம் **பேடைகாள் சேவல்காள்**
அக்கிரமங் கள்செயும் அடிகள்ஆ ரூரர்க்கு
வக்கிரமில் லாமையும் வளைகள்நில் லாமையும்
உக்கிரமில் லாமையு முணர்த்தவல் லீர்களே. 4

அக்கிரமம் – தகாத – முறையற்ற செயல்கள்

வக்கிரம் – திறம்புதல் – பிறழ்தல் – கோணல்

உக்கிரம் – கோபம்.

'சக்கிரவாகம்' என்னும் இனத்து, இளைய பேடைகளே! சேவல்களே, முறையல்லாதவற்றைச் செய்கின்ற தலைவராகிய திருவாரூர் இறைவருக்கு, யான் மனம் மாறுபடாமையையும், எனது வளைகள் நில்லாது கழலுதலையும், அவர்மீது புலவி தோன்றாமையையும் என் பொருட்டுத் தெரிவிக்க வல்லீர்களோ?

**376.** இலைகொள்சோ லைத்தலை இருக்கும்**வெண் ணாரைகாள்**
அலைகொள்சூ லப்படை யடிகள்ஆ ரூரர்க்குக்
கலைகள்சோர் கின்றதுங் கனவளை கழன்றதும்
முலைகள்பீர் கொண்டதும் மொழியவல் லீர்களே. 5

பீர் – பீர்க்கம்பூ நிறமுடைய பசலை.
கலைகள் – ஆடைகள்.

இலைகளைக் கொண்ட சோலையிடத்து இருக்கின்ற வெள்ளிய நாரைகளே! அழித்தல் தொழிலைக் கொண்ட சூலப்படையையுடைய தலைவராகிய திருவாரூர் இறைவருக்கு, எனது உடை நெகிழ்கின்றதையும், உயர்ந்த வளைகள் கழன்றொழிந்ததையும், கொங்கைகள் பசலை அடைந்ததையும் என்பொருட்டுச் சொல்ல வல்லீர்களோ?

**377.** வண்டுகாள் கொண்டல்காள் வார்மணற் **குருகுகாள்**
அண்டவா ணர்தொழும் அடிகள்ஆ ரூரரைக்
கண்டவா றுங்**காமத் தீக்கனன் றெரிந்துமெய்**
**உண்டவா றும்**மிவை உணர்த்தவல் லீர்களே.6

மெய் உண்டவாறு – உடம்பைச் சுருக்கி இளைக்கச் செய்தவாறு. கொண்டல் – மேகம்.

வண்டுகளே! மேகங்களே! நுண்ணிய மணல்மேல் இருக்கின்ற குருகுகளே! வானத்தில் வாழ்வோராகிய தேவர்கள் வணங்குகின்ற தலைவராகிய திருவாரூர் இறைவரை ஒரு நாள் யான் கண்டவாறும், அன்றுமுதல் காமத் தீ, கனன்று எரிந்து என் உடம்பை உண்டுவிட்டவாறும் ஆகிய இவைகளை என்பொருட்டு அவருக்குத் தெரிவிக்க வல்லீர்களோ?

**378.** தேனலங் கொண்டதேன் வண்டுகாள் கொண்டல்காள்
ஆனலங் கொண்டவெம் மடிகள்ஆ ரூரர்க்குப்
பானலங் கொண்டவெம் பணைமுலை பயந்துபொன்
ஊனலங் கொண்டதும் உணர்த்தவல் லீர்களே. 7

ஆனலம் – புதுநலம்; ஆனைந்து; உயிரின் நலம்

தேனினது இன்பத்தை நுகர்ந்த தேன்களே! வண்டுகளே! மேகங்களே! பசுவினது பயனாகிய பால் முதலியவற்றை உவந்து கொண்ட எம் தலைவராகிய திருவாரூர் இறைவருக்கு, பாலாகிய நற்பொருளைக் கொண்ட எனது பருத்த கொங்கைகள் பசப்பெய்தி, பொன்போலும் பசலை என் மேனியினது அழகையெல்லாம் கொள்ளை கொண்டமையை என் பொருட்டுத் தெரிவிக்கவும் வல்லீர்களோ?

**379.** சுற்றுமுற் றுஞ்சுழன் றுழலும்வெண் ணாரைகாள்
அற்றமுற் றப்பகர்ந் தடிகள்ஆ ரூரர்க்குப்
பற்றுமற் றின்மையும் பாடுமற் றின்மையும்
உற்றுமற் றின்மையும் உணர்த்தவல் லீர்களே. 8

அற்றம் – துன்பம், மெலிவு.
பற்று – பாடு – உற்று – பற்றுக் கோடாகிய நிலைகள். அற்ற முற்றப் பகர்ந்து – சமயம் பார்த்துச் சொல்லி. உற்று – உறவினர்.

சுற்றியுள்ள இடம் முழுவதும் சுழன்று திரியும் வெள்ளிய நாரைகளே! யாவர்க்கும் தலைவராகிய திருவாரூர் இறைவருக்கு, எனது துன்பத்தை முடியச் சொல்லி, எனக்கு வேறு பற்றுக்கோடு இன்மையையும், யான் பலராலும் அலர் தூற்றப்படுதலையும், எனக்கு உறவாவார் வேறு இன்மையையும் என்பொருட்டுத் தெரிவிக்க வல்லீர்களோ?

380. **குரவநா றக்குயில் வண்டினம் பாடநின்**
**றரவமா டும்பொழில் அந்தண்ஆ ரூரரைப்**
**பரவி**நா டும்மதும் பாடிநா டும்மதும்
**உருகி**நா டும்மதும் உணர்த்தவல் லீர்களே. 9

பரவி – பாடி – உருகி – பிரிவாற்றாத தலைவியின் செயல்கள்.

குராமரங்கள் தமது மலர்மணத்தை வீச, குயில்களும் வண்டுக் கூட்டமும் பாட, பாம்புகள் படமெடுத்து நின்று ஆடுகின்ற சோலைகளை யுடைய அழகிய தண்ணிய திருவாரூர் இறைவரை யான் தொழுது தேடுகின்ற வகையையும், துதித்துத் தேடுகின்ற வகையையும், நெஞ்சுருகித் தேடுகின்ற வகையையும், என்பொருட்டு அவருக்குத் தெரிவிக்க வல்லீர்களோ ?

381. கூடும்அன் னப்பெடை காள்குயில் வண்டுகாள்
**ஆடும்அம் பொற்கழ லடிகள்**ஆ ரூரரைப்
**பாடு**மா றும்**பணிந் தேத்துமா** றுங்**கூடி**
**ஊடுமா றும்**மிவை உணர்த்தவல் லீர்களே. 10

தியாகேசரது அசபா நடனம். பாடுதல் – பணிந்தேத்துதல் – ஊடுதல் – பிரிந்த தலைவி மாட்டுத் தலைவனது உருவெளிப்பாடு கண்டு நிகழ்வன

நும் சேவலொடு கூடுகின்ற அன்னப் பெடைகளே! குயில்களே! வண்டுகளே! நடனம் ஆடுகின்ற அழகிய பொன்போலும் திருவடி களையுடைய திருவாரூர் இறைவரை அடையப் பெற்ற பின்பு, யான் அவரைப் பாடும் முறையையும், பணிந்து புகழும் முறையையும் அவரொடு கூடுதலும் ஊடுதலும் செய்யும் முறையையும் இவை என்று அவருக்கு என் பொருட்டுத் தெரிவிக்க வல்லீர்களோ ?

382. **நித்தமா கந்நினைந் துள்ளமேத் தித்தொழும்**
**அத்தன்அம் பொற்கழ லடிகள்ஆ ரூரரைச்**
சித்தம்வைத் தபுகழ்ச் சிங்கடி யப்பன்மெய்ப்
பத்தனூ ரன்சொன்ன பாடுமின் பத்தரே. 11

நித்தமாக – மறவாது; இடையறாது.

அடியவராய் உள்ளவர்களே! மெய்யுணர்ந்தோர் எல்லாம் உள்ளத்தால் நிலையாக நினைந்து, வாயால் துதித்து, கையால் தொழுகின்ற தந்தையாரும், அழகிய பொன்போலும் திருவடிகளையுடைய தலைவரும் ஆகிய திருவாரூர் இறைவரை, அவரையே எப்பொழுதும் சித்தத்தில் வைத்ததனால் வந்த புகழையுடையவனும், சிங்கடிக்குத் தந்தையும், உண்மையான திருத்தொண்டனும் ஆகிய நம்பியாரூரன் பாடிய இப்பாடல்களைப் பாடுமின்.

## 38. திருவதிகை வீரட்டானம்

பண் : கொல்லிக்கௌவாணம் | பதிக எண் : 38

பெருமானால் தடுத்தாட்கொள்ளப்பெற்ற சுந்தரர், திருநாவலூரிலிருந்து திருத்துறையூர் முதலான தலங்களைத் தரிசித்துக்கொண்டு தில்லைக்கூத்தப் பெருமானை வணங்கச் செல்லும் பொழுதில், திருவதிகை வீரட்டானத்திற்கு வந்து, அப்பர் பெருமான் திருத்தொண்டு புரிந்திருந்த தலம் என அதனை மிதிக்க அஞ்சி, அதன் புறத்தேயுள்ள சித்தவடமடத்தில் தங்கித் துயின்றார். அப்போது பெருமான், அந்தணர் உருக்கொண்டு வந்து, சுந்தரர் தலைமீது கால்களை வைத்துப் படுத்திருந்தார். தம்பிரான் தோழர், 'என் தலை மீது கால் வைத்துள்ளீரே' என்று கேட்க, 'திசையறியா வகைசெய்தது என்னுடைய மூப்புக்காண' என்று சொல்லக் கேட்டு, வேறு திசையில் தலை வைத்துத் துயின்றார். மீண்டும் திருத்தாளைத் தலைமீது நீட்டியதைக் கண்ட சுந்தரர், பலமுறையும் என் தலைமீது கால்களை வைக்கும் நீர் யார்?' என்று வினவியவுடன், "நம்மை அறிந்திலையோ" எனக் கூறி அந்தணர் வடிவில் வந்த பெருமான் மறைந்தருளினான். பெருமான் திருவருளையறியாது செம்மாந்திருந்தேன் என இரங்கிப் பாடியருளியது இத்திருப்பதிகம். (தி. 12 பெரிய. புரா. தடுத். புரா. 88)

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் அதிகைநாயகி உடனமர் அருள்மிகு வீரட்டேசுவரர். | | |
| **தல இருப்பிடம்** | நடுநாட்டில் கெடிலநதியின் வடகரையில் பண்ருட்டி நகரில் அமைந்துள்ளது. | | |
| **தல மரம்** | சரக்கொன்றை | | |
| **தீர்த்தம்** | கெடிலம், சூல தீர்த்தம் | | |
| **பாடியவர்** | மூவர் | **பதிகங்கள்** | 18 |

திலகவதி அம்மையாரும், திருநாவுக்கரசரும் திருத்தொண்டு புரிந்த திருத்தலம். அட்டவீரட்டத் தலங்களுள் ஒன்று. திரிபுர தகன நிகழ்வுகளை நினைவூட்டும் திருப்பதி. மிகப்பெரிய மூலவர் விமானத்தையும், எண்ணிலடங்கா உருவ பொம்மைகளையும் உடைய பதி. இலிங்கத் திருமேனி மிகப்பெரியது. கடந்த ஆண்டு நடந்த திருப்பணியிலும், குடமுழுக்கிலும் கலந்து கொள்ளும் வாய்ப்பைப் பதிப்பாசிரியருக்கு வீரட்டேசுவரர் நல்கினார்.

**383.** தம்மானை யறியாத சாதியா ருளரே
சடைமேற்கொள் பிறையானை
விடைமேற்கொள் விகிர்தன்
கைம்மாவி னுரியானைக் கரிகாட்டி லாட
லுடையானை விடையானைக் கறைகொண்ட
கண்டத்
**தம்மான்தன் அடிக்கொண்டேன் முடிமேல்வைத்
திடுமென்னும்
ஆசையால் வாழ்கின்ற அறிவிலா நாயேன்**
எம்மானை எறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோதும் இகழ்வன்போ
லியானே. 1

உலகில், தம் தலைவனை உருவறியாத இயல்புடையவரும் உளரோ! இல்லை; அங்ஙனமாக, கருமை நிறத்தைக் கொண்ட கண்டத்தையுடைய அப்பெருமான், தனது திருவடியை எடுத்து என் தலைமேல் வைத்தே விடுவான் என்னும் விருப்பத்தினாலே உயிர் வாழ்ந்து கொண்டிருக்கிற அறிவில்லாத, நாய் போலும் சிறுமையுடையேனாகிய யான், சடைமேற் சூடிக்கொண்ட பிறையை உடையவனும், விடைமேல் ஏறுகின்ற வேறுபாட்டினனும், யானையின் தோலைப் போர்ப்பவனும், கரிந்த காட்டில் ஆடுதல் உடையவனும், விடையைக் கொடியாக உடையவனும், எம் தலைவனும் ஆகிய அலையெறியும் கெடில நதியின் வடகரைக்கண் உள்ள திருவீரட்டானத்தில் எழுந்தருளி யிருக்கின்ற பெருமானை, அவன் அதனைச் செய்ய வந்த சிறிது பொழுதினும் அறியாது இகழ்வேனாயினேன் போலும்; என்னே என் மடமை இருந்தவாறு! இனியொரு காலும் அது வாயாது போலும்!

தம்மான் – தலைவன்.

விகிர்தன் – வெவ்வேறு வடிவம் கொள்பவன்.

திருவதிகை – தலத்தின் பெயர்.

வீரட்டானம் – கோயிலின் பெயர்.

இப்பாடலின் மூன்றாமடி நம்பிகள் திருவடி தீக்கையிலே வைத்திருந்த ஆசையைக் குறிக்கும்.

அறிவிலா நாயேன் – முன்னர் வழக்கு இட்டபோது அறியாதது போலவே இன்றும் இறைவர் தாமே வெளிவந்த போதும் அறியாமல் இருந்ததற்கு இரங்கிய கூற்று.

**384.** **முன்னேஎம் பெருமானை மறந்தென்கொல் மறவா
தொழிந்தென்கொல் மறவாத சிந்தையால்
வாழ்வேன்**
பொன்னேநன் மணியேவெண் முத்தேசெம் பவளக்
குன்றமே ஈசனென் றுன்னியே புகழ்வேன்
அன்னேஎன் னத்தாஎன் றமரரா லமரப்
படுவானை அதிகைமா நகருள்வாழ் பவனை
என்னேஎன் எறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோதும் இகழ்வன்போ
லியானே. 2

எம்பெருமான் என்னை ஆட்கொள்வதற்கு முன்னே அவனை யான் மறந்து இழந்ததென்! மறவாதிருந்து பெற்றதென்! ஆட்கொண்ட பின்பு மறவாத மனத்தொடு வாழ்வே னாயினேன். அன்றியும், 'பொன்னே! நல்ல மாணிக்கமே! வெண்மையான முத்தே! செம்மையான பவள மலையே! முதல்வனே!' என்று, அவனை நினைத்துப் பாடுவேன். அங்ஙனமாக, 'எங்கள் தாய்போல்பவனே! தந்தை போல்பவனே!' என்று தேவர்களால் விரும்பி வழிபடப்படுபவனும், திருவதிகை மாநகரில் வாழ்பவனும், அலையெறிகின்ற கெடில நதியின் வடகரைக்கண் உள்ள திருவீரட்டானத்தில் எழுந்தருளியிருக் கின்றவனும் ஆகிய என் இறைவனை, அவன் தனது திருவடியை என் தலைமேற் சூட்டவந்த சிறிதுபொழுதினும் யான், அறியாது இகழ்வேனாயினேன் போலும்; என்னே என் மடமை இருந்தவாறு! இனியொருகாலும் அது வாயாது போலும்!

முன்னே மறந்திருந்தாலும் நான் இப்போது பெருமானை மறவாத நிலையில் வாழ்ந்து வருகிறேன்.

அமரப்படுவான் – நினைக்கப்படுவான்.



சித்தவட மடம்: இறைவன் திருவடி சூட்டுதல்

385. விரும்பினேற் கெனதுள்ளம் விடகிலா விதியே
விண்ணவர்தம் பெருமானே மண்ணவர்நின் றேத்துங்
கரும்பேஎன் கட்டியென் றுள்ளத்தால் உள்கிக்
காதல்சேர் மாதராள் கங்கையாள் நங்கை
வரும்புனலுஞ் சடைக்கணிந்து **வளராத பிறையும்**
**வரியரவும் உடன்துயில வைத்தருளும் எந்தை**
இரும்புனல்வந் தெறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோதும் இகழ்வன்போ லியானே. 3

பதிக மகுடம் – வட வீரட்டானத்துறைவானை இறை போதும் இகழ்வன் போலியானே
விடகிலா – நீங்காத. விதியே – செல்வமே
வரும்புனல் – பெருகிவரும் நீர்
இரும்புனல் – பெருவெள்ளம்

காதல் பொருந்திய உமையவள், உடம்பில் ஒரு கூறாய் இருத்தலின், கங்கையாளாகிய நங்கை உருமாறி வந்த நீரையும் சடையில் அணிந்து, அதனோடு இளைய பிறையையும், கீற்றுக்கள் பொருந்திய பாம்பையும் ஒன்றாய் உறங்கும்படி வைத்தருளிய எம் தந்தையாகிய, மிக்க நீர் வந்து மோதுகின்ற கெடில நதியின் வடகரைக்கண் உள்ள திருவீரட்டானத்தில் எழுந்தருளியிருக்கின்ற இறைவனை, 'விண்ணுலகத்தார்க்குத் தலைவனே! மண்ணுலகத்தவர் எதிர் நின்று துதிக்கும் கரும்பே! என் கட்டியே!' என்று மனத்தால் நினைந்து விரும்பிய எனக்கு, வினை என் உள்ளத்தை விட்டு நீங்காமையால், அவன் தனது திருவடியை என் தலைமேற் சூட்ட வந்த சிறுபொழுதினும், யான் அறியாது அவனை இகழ்வேனாயினேன் போலும்; என்னே என் மடமை இருந்தவாறு! இனியொருகாலும் அது வாயாது போலும்!

386. நாற்றானத் தொருவனை நானாய பரனை
நள்ளாற்று நம்பியை வெள்ளாற்று விதியைக்
காற்றானைத் தீயானைக் கடலானை மலையின்
தலையானைக் கடுங்கலுழிக் கங்கைநீர் வெள்ள
ஆற்றானைப் பிறையானை அம்மானை எம்மான்
தம்மானை யாவர்க்கும் அறிவரிய செங்கண்
ஏற்றானை எறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோதும் இகழ்வன்போ லியானே. 4

நாலாந்தானம் – நாற்றானம். நாலாம் நிலையாகிய சிவயோகம் என்பர். நின்மலதுரிய நிலையே தசகாரியத்துள் சிவயோக நிலை.
சிவம் தெளிவாக விளங்கும் நிலை. நம்பிகள் ஞானயோக நெறியை விளக்க வந்த ஆசாரியார் என்பதை நினைவு கொள்ள வேண்டும்.
"நாதாந்தே யிருப்பர் நாற்றானத் தே யிருப்பர்" களிறு 80.
நாலாந்தானம் – நான் குதிசை, வைப்புத்தலம் என்பாருமுளர். கடுங்கலுழி – வேகமான பெருக்கை உடைய.

மும்மூர்த்திகட்கு மேலே உள்ள ஒப்பற்றவனும் என்னில் வேறறக் கலந்து நிற்கும் முதல்வனும், திருநள்ளாற்றில் உள்ள சிறந்தவனும், வெள்ளாற்றில் உள்ள அறநெறியாகியவனும், 'காற்று, தீ, கடல் என்னும் பொருள்களாய் உள்ளவனும், கயிலாயத்தின் உச்சியில் இருப்பவனும், வேகமான 'கங்கையாறு' என்னும் வெள்ளநீரைத் தாங்கியவனும், பிறையைச் சூடினவனும், பெரியோனும், என் தந்தைக்கும் தலைவனும், யாவராலும் அறிதற்கு அரிய, சிவந்த கண்களையுடைய இடபவாகனனும், அலையெறிகின்ற கெடிலநதியின் வடகரைக் கண் உள்ள திருவீரட்டானத்தில் எழுந்தருளி யிருக்கின்றவனும் ஆகிய இறைவனை, அவன் தனது திருவடியை என் தலைமேல் சூட்ட வந்த சிறுபோதினும், யான் அறியாது இகழ்வே னாயினேன் போலும்; என்னே என் மடமை இருந்தவாறு! இனியொருகாலும் அது வாயாது போலும்!

387. சேந்தர்தாய் மலைமங்கை திருநிறமும் பரிவும்
உடையானை அதிகைமா நகருள்வாழ் பவனைக்
கூந்தல்தாழ் புனல்மங்கை குயிலன்ன மொழியாள்
சடையிடையிற் கயலினங்கள் குதிகொள்ளக் குலாவி
வாய்ந்தநீர் வரஉந்தி மராமரங்கள் வணக்கி
மறிகடலை இடங்கொள்வான் மலைஆரம் வாரி
ஏந்துநீர் எறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோதும் இகழ்வன்போ லியானே. 5

இறைபோதும் இகழ்வன் போல் – சிறிதுபொழுதும் இகழ்வேனோ ? மராமரம் – அரசமரம்.

'முருகப்பிரானார், அவர்க்குத் தாயாகிய மலை மகள்' என்னும் இவர்களது அழகிய நிறத்தையும், அன்பையும் ஏற்றுடையவனும், திருவதிகை மாநகரில் வாழ்கின்றவனும், தாழ்ந்த கூந்தலையும், குயில் போலும் மொழியினையும் உடைய நீர்மகளைச் சடையிடத்திற் கொண்ட கயல் மீனினது கூட்டங்கள் குதி கொள்ளுதலால் விளக்கமுற்றுப் பொருந்திய நீர் பெருகிவர, அதனிடத்து உயர்ந்தெழுகின்ற அலைகள் மராமரங்களை முரித்துத் தள்ளிக் கொண்டு, அலை மறிகின்ற கடலை இடமாகக் கொள்ளும்படி, மலையிடத்துள்ள சந்தன மரங்களை வாரிக் கொணர்ந்து வீசுகின்ற கெடில நதியின் வடகரைக்கண் உள்ள திருவீரட்டானத்தில் எழுந்தருளியிருக் கின்றவனும் ஆகிய இறைவனை, அவன் தனது திருவடியை என் தலைமேல் சூட்டவந்த சிறிது பொழுதினும், யான், அறியாது இகழ்வே னாயினேன் போலும்; என்னே என் மடமை இருந்தவாறு! இனியொருகாலும் அது வாயாது போலும்!

388. மைம்மான மணிநீல கண்டத்தெம் பெருமான்
வல்லேனக் கொம்பணிந்த மாதவனை
வானோர்
தம்மானைத் தலைமகனைத் தண்மதியும் பாம்புந்
தடுமாறுஞ் சடையானைத் தாழ்வரைக்கை
வென்ற
வெம்மான மதகரியி னுரியானை வேத
விதியானை வெண்ணீறு சண்ணித்த மேனி
எம்மானை எறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோதும் இகழ்வன்போ
லியானே. 6

மைம்மான – மையைப் போன்ற.
சண்ணித்தல் – நிறையப்பூசுதல். மெய்யெலாம் என்ற நாவரசர் பாடலோடு ஒப்பிட்டு உவகை எய்தலாம். நாவரசர் கைத்தொண்டு செய்த தலத்தைக் காலால் மிதிக்கக் கூடாது என்று புறத்தில் தங்கிய சுந்தரர் அவருடைய தேவாரத்தை நினைந்து அதிலிருந்து அடி எடுத்துப் பாடினார் போலும்.

மேகம்போலும், பெருமையையுடைய கண்டத்தையுடைய எம்பெருமானும், வலிய பன்றியின் கொம்பை அணிந்த பெரிய தவக்கோலத்தையுடையவனும், தேவர்கள் தலைவனும், யாவர்க்குந் தலைவனும், குளிர்ந்த சந்திரனும் பாம்பும் ஒன்றையொன்று அஞ்சி உழல்கின்ற சடையையுடையவனும், தாழ்வரைக் கண் திரியும் துதிக்கையையுடைய, வெற்றி பொருந்திய, கொடிய, பெரிய மதங்கொண்ட யானையின் தோலை உடையவனும், வேதத்தில் சொல்லப்பட்ட நெறிமுறைகளாய் உள்ளவனும், வெள்ளிய நீறு பூசப்பட்ட திருமேனியை உடைய எம் தலைவனும் அலையெறிகின்ற கெடில நதியின் வடபால் உள்ள திருவீரட்டானத்தில் எழுந்தருளியுள்ளவனும் ஆகிய இறைவனை, அவன் தனது திருவடியை என் தலைமேல் சூட்டவந்த சிறுபோதினும், யான், அறியாது இகழ்வேனாயினேன் போலும்; என்னே என் மடமை இருந்தவாறு! இனியொருகாலும் அது வாயாது போலும்!

389. வெய்தாய வினைக்கடலில் தடுமாறும் உயிர்க்கு
மிகஇரங்கி அருள்புரிந்து வீடுபே றாக்கம்
பெய்தானைப் பிஞ்ஞகனை மைஞ்ஞவிலுங்
கண்டத்
தெண்டோள்எம் பெருமானைப் பெண்பாகம்
ஒருபால்
செய்தானைச் செக்கர்வா னொளியானைத் தீவாய்
அரவாடு சடையானைத் திரிபுரங்கள் வேவ
எய்தானை எறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோதும் இகழ்வன்போ
லியானே. 7

கொடிதாகிய, 'வினை' என்னுங் கடலில் வீழ்ந்து தடுமாறும் எத்துணையோ உயிர்கட்குப் பெரிதும் இரங்கித் தனது திருவருளைக் கொடுத்து வீடுபேறாகிய நலத்தை வழங்கினவனும், தலைக்கோலங்களை உடையவனும், மைபோலுங் கண்டத்தையும், எட்டுத் தோள்களையும் உடைய எம்பெருமானும், தனது திருமேனியின் ஒரு கூற்றைப் பெண் கூறாகச் செய்தவனும், செவ்வானத்தின் ஒளி போல்பவனும், தீதாகிய வாயினையுடைய பாம்பு படமெடுத்து ஆடுகின்ற சடையையுடையவனும், மூன்று ஊர்கள் வெந்தொழியுமாறு அம்பை எய்தவனும், அலையையெறியும் கெடில நதியின் வடபால் உள்ள திருவீரட்டானத்தில் எழுந்தருளியிருக் கின்றவனும் ஆகிய இறைவனை, அவன் தனது திருவடியை என் தலைமேற் சூட்டவந்த சிறு போதினும், யான் அறியாது இகழ்வேனாயினேன் போலும்; என்னே என் மடமை இருந்தவாறு! இனியொருகாலும் அது வாயாது போலும்!

**390.** பொன்னானை மயிலூர்தி முருகவேள் தாதை
பொடியாடு திருமேனி நெடுமாறன் முடிமேல்
தென்னானைக் குடபாலின் வடபாலின் குணபாற்
சேராத சிந்தையான் செக்கர்வான் அந்தி
அன்னானை அமரர்கள்தம் பெருமானைக் கருமான்
உரியானை அதிகைமா நகருள்வாழ் பவனை
என்னானை எறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோதும் இகழ்வன்போ
லியானே. 8

'அழகிய யானை முகத்தையுடைய விநாயகனும், மயிலூர்தியை உடைய முருக வேளும்' என்னும் இவர்க்குத் தந்தையும், ஞானசம்பந்தரால் திருநீற்றில் மூழ்கிய திருமேனியையும், 'மேற்கு, வடக்கு, கிழக்கு' என்னும் திசைகளில் உள்ள பிற நாடுகளின் மேற்செல்லும் மண்ணாசையற்ற மனத்தையும் உடையவனாய்ச் சிறப்பெய்திய நெடுமாறனது முடியின்மேல் நின்ற தென்னாட்டவனும், அந்திச் செவ்வானம் போலும் நிறத்தை உடையவனும், தேவர்களுக்குத் தலைவனும், யானைத் தோலைப் போர்த்தவனும் திருவதிகை மாநகரில் வாழ்பவனும், எனக்கு உரியவனும், அலையெறியும் கெடில நதியின் வடபால் உள்ள திருவீரட்டானத்தில் எழுந்தருளியிருப்பவனும் ஆகைய இறைவனை, அவன் தனது திருவடியை என் தலைமேற் சூட்ட வந்த சிறிது பொழுதினும், யான், அறியாது இகழ்வே னாயினேன் போலும்; என்னே என் மடமை இருந்தவாறு! இனியொருகாலும் அது வாயாது போலும்!

குடபாலின் – மேற்கிலும்
குணபால் – கிழக்கிலும்

**391.** திருந்தாத வாளவுணர் புரமூன்றும் வேவச்
சிலைவளைவித் தொருகணையால்
தொழில்பூண்ட சிவனைக்
கருந்தாள மதக்களிற்றி னுரியானைப் பெரிய
கண்மூன்றும் உடையானைக் கருதாத
அரக்கன்
பெருந்தோள்கள் நாலைந்தும் ஈரைந்து முடியும்
உடையானைப் பேயுருவ மூன்றுமுற
மலைமேல்
இருந்தானை எறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோதும் இகழ்வன்போ
லியானே. 9

வில்லை வளைத்து எய்த ஓர் அம்பினாலே, பகைமை கொண்ட கொடிய அசுரர்களது ஊர்கள் மூன்றும் வெந்தொழியுமாறு போர்த்தொழிலை மேற்கொண்ட சிவபெருமானும், பெரிய கால்களையுடைய மதம் பொருந்திய யானையின் தோலைப் போர்த்தவனும், பெரிய மூன்று கண்களையும் உடையவனும், தன்னை மதியாத அரக்கனாகிய, இருபது பெரிய தோள்களையும், பத்துத் தலைகளையும் உடைய இராவணனது அச்சந்தரும் உருவத்தை ஊன்றிய, கயிலாய மலையின்மேல் நீங்காது இருப்பவனும், அலையெறியும் கெடில நதியின் வடபால் உள்ள திருவீரட்டானத்தில் எழுந்தருளி யிருக்கின்றவனும் ஆகிய இறைவனை, அவன் தனது திருவடியை என் முடிமேல் சூட்டவந்த சிறிதுபொழுதினும், யான், அறியாது, இகழ்வேனாயினேன் போலும்; என்னே என் மடமை இருந்தவாறு! இனியொருகாலும் அது வாயாது போலும்!

கருந்தாள – பெரிய வலிய கரிய கால்களை உடைய.

392. என்பினையே கலனாக அணிந்தானை எங்கள்
எருதேறும் பெருமானை இசைஞானி சிறுவன்
வன்பனைய வளர்பொழில்சூழ் வயல்நாவ லூர்க்கோன்
வன்றொண்டன் ஆரூரன் மதியாது சொன்ன
அன்பனை யாவர்க்கு மறிவரிய வத்தர்
பெருமானை அதிகைமா நகருள்வாழ் பவனை
என்பொன்னை எறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோதும் இகழ்வன்போ லியானே. 10

எலும்பையே அணிகலங்களாக அணிபவனும், விடையை ஏறுகின்ற எங்கள் பெருமானும், 'இசைஞானிக்கு' மகனும், வளர்ந்த வலிய பானைகளையுடைய சோலைகள் சூழ்ந்த, வயல்கள் நிறைந்த திருநாவலூர்க்குத் தலைவனும், வன்றொண்டனுமான நம்பியாரூர னாகிய என்னால், மதியாது சில சொல்லப்பட்ட அன்புருவினனும், யாவருக்கும் அறிதற்கு அரிய தேவர் பெருமானும், திருவதிகை மாநகரில் வாழ்பவனும், எனக்குரிய பொன்போன்றவனும், அலையெறியும் கெடில நதியின் வடபால் உள்ள திரு வீரட்டானத்தில் எழுந்தருளியிருப்பவனும் ஆகிய இறைவனை, அவன் தனது திருவடியை என் தலைமேல் சூட்டவந்த சிறிது பொழுதினும், யான், அறியாது இகழ்வேனாயினேன் போலும்; என்னே என் மடமை இருந்தவாறு! இனியொரு காலும் அது வாயாது போலும்!

இசைஞானி – சுந்தரரின் தாயாரின் பெயர்.
நாவலூர் – திருநாவலூர் – சுந்தரர் அவதாரத்தலம்.
வன்றொண்டன் – இறைவன் அளித்த பெயர்
ஆரூரன் – பெற்றோர் அளித்த பெயர்.

இதனையும் ஏனைய திருப்பாடல்களோடு ஒப்பவே அருளிச் செய்தாராயினும், தம் பெயரை எடுத்தோதி, தாம் மதியாது சொன்னவற்றிற்கு இறைவன் வெகுளாது உவந்தான் என்பதனை வைத்த குறிப்பால், மதியாது சொன்னதற்கு இரங்கி அருளிச் செய்த இத் திருப்பதிகத்தைப் பாடுவாரையும் அப்பெருமான் உவந்து அருள் செய்வான் என்று அருளினாராயிற்று. "சொன்ன" என்ற பெயரெச்சம், "அன்பன்" என்ற செயப்படுபொருட்பெயர் கொண்டது. மதியாது சொல்லுஞ் சொல்லைச் சொல்விக்கவந்து, சொல்வித்து மகிழ்ந்தானாகலின் "அன்பன்" என்றார்.



திருவாரூர்: தேவாசிரிய மண்டபம் - திருத்தொண்டத்தொகை அருளல்

## 39. திருத்தொண்டத்தொகை (பொது)

நம்பியாரூரரின் திருவவதாரத்தின் சிறப்புப்பயன் இத்திருப்பதிகமேயாகும். அடியார்கள் மனனம் செய்து தினமும் நினைந்து, மகிழ்ந்து, பாடித் திருவருளை வணங்கி வாழ வேண்டும். பெரிய புராண நூலுக்கு இப்பதிகமே முதனூலாகவும், பதிகமாகவும் அமைந்துள்ளது.

63 நாயன்மார்களும், 9 தனியடியார்களும் போற்றப்பட்டுள்ளனர்.

திருவாரூரில் பரவை நாச்சியாரை மணந்து வீற்றிருக்கும் நாவலூரார் திருவாரூர்த் திருக்கோயிலுக்குச் செல்லும் பொழுது "தேவாசிரிய மண்டபத்துள்ள அடியவர்களுக்கு அடியேனாகப் பண்ணும் நாள் எந்நாள் ?" என்று பெருமான் திருவடி மலர்களைப் பரவிச் சென்றார். பெருமான் அடியவர்கள் வழித்தொண்டை உணர நல்கி அவர் தம் பெருமையையும் கூறி அவர் தம்மைப் பாடுக, என அருளியபொழுது, 'யான் எவ்வாறு பாடுவேன் என்று கேட்டு, இறைவன், "தில்லைவாழந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்' என்று அடியெடுத்துக் கொடுக்க, ஒவ்வொரு நாயனாருக்கும் தனித்தனியே "அடியேன்" என்று சொல்லிப் பாடியருளியது இத்திருப்பதிகம். நாயன்மார் வரலாறுகளனைத்தும் இதில் தொகையாக அமைந்துள்ளன. (தி. 12 பெரிய. புரா. தடுத். புரா. 199)

**குறிப்பு :** இத்திருப்பதிகம், சிவபெருமானுக்குச் செய்யும் அடிமைத் திறத்திற்கு எல்லையாய் நின்ற திருத்தொண்டர்களது தொண்டின் பெருமையைத் தொகுத்து அருளிச் செய்தது என்பதும், அங்ஙனம் அருளிச் செய்யுமிடத்து, அப்பெருமையை உணர்த்தும் முறையான் அருளாது ஒவ்வொருவர்க்கும் தனித்தனியே 'அடியேன்' எனக் கூறிப் போற்றும் வணக்கமுறையான் அருளிச் செய்யப்பட்டதென்பதும், அத்திருத்தொண்டர்கள் தாம் தொகையடியாரும், தனியடியாரும்' என இருதிறத்தர் என்பதும், அவருள் தொகையடியார் ஒன்பதின்மரும், தனியடியார் அருபத்திருவர் என்பதும், நம்பியாரூரர் இங்குத் தம்மை ஒரு தனியடியாராக ஓதாதுவிடினும், 'ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆள்' என்றும், 'எல்லா அடியவர்க்கும் அடியவர் என்றும்' அருளிச் செய்தமையால், அவரும், அடியார் ஆயினர் என்பதும் அனைவரும் அறிந்தவை.

இதன் எல்லாத் திருப்பாடல்களிலும், இறுதிக்கண் உள்ள 'ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆள்' என்றதனை முதலில் வைத்து, 'திருவாரூரில் எழுந்தருளியுள்ள இறைவனுக்கு ஆளாய் உள்ள நம்பியாரூரனாகிய யான் தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்' என்றாற்போல் இயைத்துப் பொருள் கொள்க. "ஆரூரன்" என்றது, தன்மைக்கண் படர்க்கை வந்த இடவழுவமைதி.

நாயன்மாருள் சிலருக்கு நேரே 'அடியேன்' என்றும், சிலருக்கு அவர்தம் அடியார்க்கு அடியேனாகும் முகத்தால் அடியேன்' என்றும் அருளினாராயினும், 'எல்லார்க்கும் நேரேயும், அடியார்க்கு அடியனாம் முகத்தானும் அடியேன்' என்று இருவகையாலும் அடிமையாதலைக் கூறுதல் திருவுள்ளமன்றி வேறுபாடு இன்று எனக் கொள்க.

இனி, 'ஆரூரில் அம்மானுக்கு ஆள், அடியவர்கட்கெல்லாம் அடிமை என்றதனால், இறைவனுக்கு ஆட்பட்ட பின்பே அடியவர்கட்கு ஆட்படுதல் கூடும்' என்பதும், அடியவர்கட்கு ஆட்பட்ட பின்பே அடிமை நிரம்புவதென்பதும் பெறப்படும். "ஈசனுக்கன்பில்லார் அடியவர்க்கன்பில்லார்" (சிவஞானசித்தி. சூ. 12–2) என்ற இடத்தில், "ஈசனுக்கன்பில்லார்" என்றதும் நிரம்பிய அன்பில்லாமையையே குறித்தல் அறிக. இதனானே இத்திருப்பதிகம் சிவனடியாரால் நாள் தோறும் இன்றியமையாது பொருளுணர்ந்து ஓதற்பாலதாயிற்று. இக்கருத்தே பற்றி இதனைச்

சேக்கிழார் நாயனார், "மெய்யடியார் சித்தம் நிலவும் திருத்தொண்டத்தொகை" (தி. 12. பெருமிழலை. பு 4) என்று அருளிச் செய்தார். இன்னும்,

"தீதி லாத்திருத் தொண்டத் தொகைதரப்
போது வாரவர் மேல்மனம் போக்கிப்"

(தி. 12 பெரியபுராணம், திருமலைச்சிறப்பு – 25) என்று அவர் அருளினமையின், நம்பியாரூரது திருவவதாரத்தின் சிறப்புப் பயன், இத்திருப்பதிகமே என்பதுணர்க.

## திருத்தொண்டத் தொகை திருப்பதிக அடியார்கள்

| தேவாரப் பதிகப் பாடல் எண் | பெரியபுராணச் சருக்கம் / பகுதி | இடம்பெற்ற நாயன்மார்கள் / தனியடியார்கள் | | இடம்பெற்ற தொகையடி யார்கள் | | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|
| 1. | தில்லை வாழந்தணர் சருக்கம் | 1. திருநீலகண்டத்துக் குயவனார், 2. இயற்பகையார், 3. இளையான்குடி மாறர், 4. மெய்ப்பொருள் நாயனார், 5. விறன்மிண்டர், 6. அமர் நீதியார் | 6 | 1. தில்லை வாழந்தணர் | 1 | 7 |
| 2. | இலைமலிந்த சருக்கம் | 7. எறிபத்தர், 8. ஏனாதி, 9. கண்ணப்பர், 10. குங்கிலிக்கலயர் 11. மானக்கஞ்சாரர், 12. அரிவாட்டாயர், 13. ஆனாயர். | 7 | | | 7 |
| 3. | மும்மையால் உலகாண்ட சருக்கம் | 14. மூர்த்தி, 15. முருகர், 16. உருத்திரபசுபதி 17. திருநாளைப் போவார், 18. திருக்குறிப்புத் தொண்டர் 19. சண்டேசுவரர் | 6 | | | 6 |
| 4. | திருநின்ற சருக்கம் | 20. நாவரசர் 21. குலச்சிறையார் 22. பெருமிழலைக் குறும்பர், 23. அப்பூதி, 24. நீலநக்கர், 25. நமிநந்தி, 26. காரைக்காலம்மையார் | 7 | | | 7 |
| 5. | வம்பறாவரிவண்டுச் சருக்கம் | 27. திருஞானசம்பந்தர் 28. ஏயர்கோன் கலிக்காமர், 29. திருமூலர், 30. தண்டி, 31. மூர்க்கர், 32. சோமாசிமாறர் | 6 | | | 6 |
| 6. | வார்கொண்ட வனமுலையாள் சருக்கம் | 33. சாக்கியர் 34. சிறப்புலி 35. சிறுத்தொண்டர் 36. சேரமான் பெருமாள் 37. கணநாதர் 38. கூற்றுவர் | 6 | | | 6 |
| 7. | பொய்யடிமையில்லாத புலவர் சருக்கம் | 39. புகழ்ச்சோழர் 40. நரசிங்க முனையரையர் 41. அதிபத்தர் 42. கலிக்கம்பர் 43. கலியநாயனார் 44. சத்திநாயனார் 45. ஐயடிகள் காடவர்கோன் | 7 | 2. பொய் யடிமை யில்லாத புலவர் | 1 | 8 |

| தேவாரப் பதிகப் பாடல் எண் | பெரியபுராணச் சருக்கம் / பகுதி | இடம்பெற்ற நாயன்மார்கள் / தனியடியார்கள் | | இடம்பெற்ற தொகையடி யார்கள் | | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|
| 8. | கறைக்கண்டன் சருக்கம் | 46. கணம்புல்லர் 47. காரிநாயனார் 48. நின்றசீர் நெடுமாற நாயனார் 49. வாயிலார் 50. முனையடுவார் | 5 | | | 5 |
| 9. | கடல்சூழ்ந்த சருக்கம் | 51. கழற்சிங்கர் 52. இடங்கழி நாயனார் 53. செருத்துணை 54. புகழ்த்துணை 55. கோட்புலி | 5 | | | 5 |
| 10. | தொகையடியார் பாசுரம் | | | 3. பத்தராய்ப் பணிவார்கள் 4. பரமனையே பாடுவார்கள் 5. சித்தத்தை சிவன்பாலே வைத்தார்கள் 6. திருவாரூர் பிறந்தார்கள் 7. முப்போதும் திருமேனி தீண்டுவார்கள் 8. முழுநீறு பூசிய முனிவர்கள் 9. அப்பாலும் அடிச்சார்ந்தார் | 7 | 7 |
| 11. | மன்னியசீர் சருக்கம் | 56. பூசலார் 57. மங்கையர்க்கரசியார் 58. நேசநாயனார் 59. கோச்செங்கணான் 60. திருநீலகண்டத்துப் பாணனார் 61. சடையனார் 62. இசைஞானியார் | 7 | | | 7 |
| | வெள்ளானைச் சருக்கம் | 63. சுந்தரமூர்த்தி நாயனார் - பதிக ஆசிரியர் | 1 | | | 1 |
| | | தனியடியார்கள் | 63 | தொகையடி யார்கள் | 9 | 72 |

இப்பதிகம் திருவாரூரில் அருளப்பட்டது.

தலம் பற்றிய செய்திகளை **8, 37, 51, 59, 73, 83, 95** ஆம் பதிகங்களில் காணலாம்.

பண் : கொல்லிக்கௌவாணம் பதிக எண் : 39

## தில்லை வாழந்தணர் சருக்கம்

393. தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்
திருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன்
இல்லையே என்னாத இயற்பகைக்கும் அடியேன்
இளையான்றன் குடிமாறன் அடியார்க்கும் அடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்
விரிபொழில்சூழ் குன்றையார் விறன்மிண்டற் கடியேன்
அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதிக் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 1

தில்லை வாழந்தணர், தொகையடியார்; இம்முதலடி திருவாரூர் இறைவன் எடுத்துக் கொடுத்தருளியதாதலைப் பெரிய புராணத்தால் அறிக. நாயன்மாரது பெயர்களிற் பெரும்பாலன அவர்களது தொண்டுபற்றி வந்த சிறப்புப் பெயரே என்க. வேடமே மெய்ப்பொருள் எனத் தொழுது வென்றார். குன்றையார் – செங்குன்றூர் என்னும் ஊரிலிருந்து வந்தவர். முல்லையந்தார் – வணிகர்களுக்குரிய மாலை.

தில்லை வாழந்தணர் தம் அடியார், திருநீலகண்டத்துக் குயவனார், இயற்பகையார், இளையான்குடி மாறர், மெய்ப்பொருள் நாயனார், விறன்மிண்டர், அமர்நீதியார் ஆகிய தொண்டர் பெருமக்களுக்கு தாம் அடிமை பூண்வதாக அருளி பின்னாளில் திருத்தொண்டர் புராணமாம் பெரியபுராணம் என்னும் பெருங்காப்பியம் எழுவதற்கு முதலாவதாக அமைந்த பாடல். ஆறு தனியடியார்கள் போற்றப் பெறுகின்றனர்.

தில்லை வாழ் அந்தணர் மூவாயிரவரில் கூத்தப் பெருமானும் ஒருவர் என்றும் வரலாறு உண்டு. எனவே கூத்தப்பெருமானின் அடியவர்க்கும் சுந்தரர் அடிமை ஆகிறார்.

அல்லி – மகரந்தத்தோடு கூடிய.

## இலை மலிந்த சருக்கம்

394. இலைமலிந்த வேல்நம்பி எறிபத்தற் கடியேன்
ஏனாதி நாதன்றன் அடியார்க்கும் அடியேன்
கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பற் கடியேன்
கடவூரிற் கலயன்றன் அடியார்க்கும் அடியேன்
மலைமலிந்த தோள்வள்ளல் மானக்கஞ் சாறன்
எஞ்சாத வாட்டாயன் அடியார்க்கும் அடியேன்
அலைமலிந்த புனல்மங்கை ஆனாயற் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 2

இலைமலிந்த வேல் – பரசு.

மங்கை – திருமங்கலம்

கலைமலிந்த சீர்நம்பி – நூல்களில் போற்றப்படும் மிக்க சிறப்பினையுடைய ஆண் மக்களில் சிறந்தவரான கண்ணப்பர்.

எஞ்சாத – அன்பில் குறைவுபடாத

வாள்தாயன் – அரிவாளையுடைய தாயநாயனார்.

எறிபத்தர், ஏனாதிநாதர், கண்ணப்பர், குங்கிலியக்கலையர், மானக்கஞ்சாரர், அரிவாட்டாயர், ஆனாயர் என்ற ஏழு அடியார்களை வைத்து இலைமலிந்த சருக்கத்தை இயற்றியருளினார். இறைவனுக்குத் தொண்டு செய்தலை உடைய அடியவர்களது வரலாறும் பண்பும் விரித்துக் கூறி நாமெல்லாம் உய்யும் வழியை வகுக்கப் பெரியபுராணம் எனப்படும் பெருங்காப்பிய நூல் நமக்கு வேண்டுமெனத் திருவுள்ளம் கொண்ட சிவபெருமான் அந்நூலுக்கு முதல் நூலாக, பாயிரமாக இப்பதிகத்தை சுந்தரர் மூலம் அமைத்துக் கொடுத்தார்.

## மும்மையார் உலகாண்ட சருக்கம்

395. மும்மையால் உலகாண்ட மூர்த்திக்கும் அடியேன்
முருகனுக்கும் உருத்திர பசுபதிக்கும்
அடியேன்
செம்மையே திருநாளைப் போவார்க்கும் அடியேன்
திருக்குறிப்புத் தொண்டர்தம் அடியார்க்கும்
அடியேன்
மெய்ம்மையே திருமேனி வழிபடா நிற்க
வெகுண்டெழுந்த தாதைதாள் மழுவினால்
எறிந்த
அம்மையான் அடிச்சண்டிப் பெருமானுக் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 3

மூர்த்தி, முருகர், உருத்திர பசுபதி, திருநாளைப் போவார், திருக்குறிப்புத்தொண்டர், சண்டேசுவரர் என்ற ஆறுநாயன்மார்கள் வரலாற்றைப் போற்றி மகிழ்கிறார்.

மும்மை – திருநீறு, கண்டிகை, சடைமுடி.

செம்மையே – திருந்திய மனத்தையுடைய.

## திருநின்ற சருக்கம்

396. திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட
திருநாவுக் கரையன்றன் அடியார்க்கும்
அடியேன்
பெருநம்பி குலச்சிறைதன் அடியார்க்கும் அடியேன்
பெருமிழலைக் குறும்பற்கும் பேயார்க்கும்
அடியேன்
ஒருநம்பி அப்பூதி அடியார்கும் அடியேன்
ஒலிபுனல்சூழ் சாத்தமங்கை நீலநக்கற்
கடியேன்
அருநம்பி நமிநந்தி யடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 4

திருநாவுக்கரையர், குலச்சிறையார், பெருமிழலைக் குறும்பர், அப்பூதி, நீலநக்கர், நமிநந்தியடிகள், காரைக்காலம்மையார் என்று ஏழு நாயன்மார்களைப் பாடுகிறார்.

திருநின்ற செம்மை – சிவத்தன்மை.
பேயார் – பேய் உருவம் வேண்டிப் பெற்ற காரைக்காலம்மையார்.
"பிறப்பென்னும் பேதைமைநீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்ப தறிவு" – குறள்

## வம்பறா வரிவண்டுச் சருக்கம்

**397.** வம்பறா வரிவண்டு மணநாற மலரும்
மதுமலர்நற் கொன்றையான் அடியலாற் பேணா
எம்பிரான் சம்பந்தன் அடியார்க்கும் அடியேன்
ஏயர்கோன் கலிக்காமன் அடியார்க்கும் அடியேன்
நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்
நாட்டமிகு தண்டிக்கும் மூர்க்கற்கும் அடியேன்
அம்பரான் சோமாசி மாறனுக்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. **5**

திருஞானசம்பந்தர், ஏயர்கோன் கலிக்காமர், திருமூலர், தண்டியடிகள், மூர்க்கர், சோமாசி மாற நாயனார் என்று ஆறு நாயன்மார்களைப் போற்றி மகிழ்கிறார்.

அடியலாற் பேணா எம்பிரான் – ஈசன் கழலே பேணும் சம்பந்தர். மற்ற தெய்வங்களை நினைத்துக்கூடப் பார்க்கமாட்டார். வம்புஅறா – வாசனை நீங்காத. நாட்டம் – கண் பார்வை. பிறவிக் குருடராயிருந்து திருவாரூர்க் கமலாலயக் குளத்தில் மூழ்கி எழுந்த போது சுவாமியின் திருவருளால் கண்பார்வை கிடைக்கப் பெற்றதால் நாட்டமிகு தண்டி.

## வார் கொண்ட வன முலையாள் சருக்கம்

**398.** வார்கொண்ட வனமுலையாள் உமைபங்கன் கழலே
மறவாது கல்லெறிந்த சாக்கியற்கும் அடியேன்
சீர்கொண்ட புகழ்வள்ளல் சிறப்புலிக்கும் அடியேன்
செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டற் கடியேன்
கார்கொண்ட கொடைக்கழறிற் றறிவார்க்கும் அடியேன்
கடற்காழிக் கணநாதன் அடியார்க்கும் அடியேன்
ஆர்கொண்ட வேற்கூற்றன் களந்தைக்கோன் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. **6**

சாக்கியர், சிறப்புலி, சிறுத்தொண்டர், கழறிற்றறிவார் (சேரமான் பெருமாள்), கணநாதர், கூற்றுவநாயனார் ஆகிய 6 நாயன்மார்களை இச்சருக்கத்தில் போற்றி மகிழ்கிறார்.

கார்கொண்ட கொடை – கைம்மாறு வேண்டாத மேகம் போன்ற ஈகைத்தன்மை.

## பொய்யடிமையில்லாத புலவர் சருக்கம்

399. பொய்யடிமை யில்லாத புலவர்க்கும் அடியேன்
பொழிற்கருவூர்த் துஞ்சிய புகழ்ச்சோழற் கடியேன்
மெய்யடியான் நரசிங்க முனையரையற் கடியேன்
விரிதிரைசூழ் கடல்நாகை அதிபத்தற் கடியேன்
கைதடிந்த வரிசிலையான் கலிக்கம்பன் கலியன்
கழற்சத்தி வரிஞ்சையர்கோன் அடியார்க்கும் அடியேன்
ஐயடிகள் காடவர்கோன் அடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 7

பொய்யடிமையில்லாத புலவர், புகழ்ச்சோழர், நரசிங்கமுனையரையர், அதிபத்தர், கலிக்கம்பர், கலியநாயனார், சத்திநாயனார், ஐயடிகள் காடவர்கோன் ஆகிய திருத்தொண்டர்களை இச்சருக்கத்தில் போற்றி அருளுகிறார்.

பதிக மகுடம் – ஆரூரன் ஆரூரில் அம்மானுக்காளே. ஏழு தனியடியார்களை இணைத்துப் பாடிய திருப்பதிகம்.

## கறைக்கண்டன் சருக்கம்

400. கறைக்கண்டன் கழலடியே காப்புக்கொண் டிருந்த
கணம்புல்ல நம்பிக்கும் காரிக்கும் அடியேன்
நிறைக்கொண்ட சிந்தையான் நெல்வேலி வென்ற
நின்றசீர் நெடுமாறன் அடியார்க்கும் அடியேன்
துறைக்கொண்ட செம்பவளம் இருளகற்றுஞ் சோதித்
தொன்மயிலை வாயிலான் அடியார்க்கும் அடியேன்
அறைக்கொண்ட வேல்நம்பி முனையடுவாற் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 8

கணம்புல்லநாயனார், காரிநாயனார், நின்றசீர் நெடுமாறர், வாயிலார், முனையடுவார் ஆகிய ஐந்து நாயன்மார்களைப் போற்றி மகிழ்கிறார்.

காப்புக் கொண்டிருந்த – மனத்தில் நிறுத்தி தியானித்தலையுடைய. நிறைக்கொண்ட சிந்தையான் – நிறைவினையுடைய சிந்தையை உடையவன். அறைக்கொண்ட – அறுக்குந் தன்மையுடைய. அடல்சூழ்ந்த – வெற்றி பொருந்திய.

## கடல் சூழ்ந்த சருக்கம்

401. கடல்சூழ்ந்த உலகெலாங் காக்கின்ற பெருமான்
காடவர்கோன் கழற்சிங்கன் அடியார்க்கும் அடியேன்
மடல்சூழ்ந்த தார்நம்பி இடங்கழிக்கும் தஞ்சை
மன்னவனாஞ் செருத்துணைதன் அடியார்க்கும் அடியேன்
புடைசூழ்ந்த புலியதள்மேல் அரவாட ஆடி
பொன்னடிக்கே மனம்வைத்த புகழ்த்துணைக்கும் அடியேன்
அடல்சூழ்ந்த வேல்நம்பி கோட்புலிக்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 9

கழற்சிங்கர், இடங்கழி நாயனார், செருத்துணை, புகழ்த்துணை நாயனார், கோட்புலி நாயனார் ஆகிய ஐந்து நாயன்மார்களைப் போற்றி மகிழ்கிறார்.

## தொகையடியார் பாசுரம்

402. பத்தராய்ப் பணிவார்கள் எல்லார்க்கும் அடியேன்
பரமனையே பாடுவார் அடியார்க்கும் அடியேன்
சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கும் அடியேன்
திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்
முப்போதுந் திருமேனி தீண்டுவார்க் கடியேன்
முழுநீறு பூசிய முனிவர்க்கும் அடியேன்
அப்பாலும் அடிச்சார்ந்தார் அடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 10

பத்தராய்ப் பணிவார்கள், பரமனையே பாடுவார்கள், சித்தத்தை சிவன் பாலே வைத்தார்கள், திருவாரூர்ப் பிறந்தார்கள், முப்போதும் திருமேனி தீண்டுவார்கள், முழுநீறு பூசிய முனிவர்கள், அப்பாலும் அடிச் சார்ந்தார்கள் என்று தொகை அடியார்களைப் போற்றி அருளுகிறார்.

## மன்னியசீர்ச் சருக்கம்

403. மன்னியசீர் மறைநாவன் நின்றவூர்ப் பூசல்
வரிவளையாள் மானிக்கும் நேசனுக்கும் அடியேன்
தென்னவனாய் உலகாண்ட செங்கணாற் கடியேன்
திருநீல கண்டத்துப் பாணனார்க் கடியேன்
என்னவனாம் அரனடியே அடைந்திட்ட சடையன்
இசைஞானி காதலன் திருநாவ லூர்க்கோன்
அன்னவனாம் ஆரூரன் அடிமைகேட் டுவப்பார்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 11

பூசலார், மங்கையர்க்கரசியார், நேசநாயனார், கோச்செங்கணான், திருநீலகண்டத்துப் பாணனார், சடையனார், இசைஞானியார் ஆகிய ஏழு அடியார்களுக்குத் தாம் அடிமை பூணுவதாகப் பாடுகிறார்.

பதிகம் – புராண உறுப்புக்களில் ஒன்று. புராணப் பொருளைச் சுருக்கி முகப்பில் கூறுவது. பெரியபுராணத்திற்குப் பதிகம் – திருத்தொண்டத் தொகை ஆகிய இதுவாகும்.

## 40. திருக்கானாட்டுமுள்ளூர்

பண் : கொல்லிக்கௌவாணம் | பதிக எண் : 40

| | |
|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் கானார்குழலி உடனமர் அருள்மிகு பதஞ்சலிநாதர் |
| **தல இருப்பிடம்** | கடலூர் மாவட்டத்தில் சிதம்பரம் வட்டத்தில் கொள்ளிடம் – காவிரி வடகரையில் சிதம்பரத்திலிருந்து 22 கி.மீ. தொலைவில் உள்ளது. |
| **தல மரம்** | அத்தி, வெள்ளெருக்கு. |
| **தீர்த்தம்** | சூரியபுட்கர்ணி |
| **பாடியவர்** | நம்பியாரூரர்    **பதிகம்** 1 |

404. வள்வாய மதிமிளிரும் வளர்சடையி னானை
மறையவனை வாய்மொழியை வானவர்தங் கோனைப்
புள்வாயைக் கீண்டுலகம் விழுங்கிஉமிழ்ந் தானைப்
பொன்னிறத்தின் முப்புரிநூல் நான்முகத்தி னானை
முள்வாய மடல்தழுவி முடத்தாழை ஈன்று
மொட்டலர்ந்து விரைநாறு முருகுவிரி பொழில்சூழ்
கள்வாய கருங்குவளை கண்வளருங் கழனிக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. 1

வளைந்த வாயை உடைய பிறை ஒளிரும் நீண்ட சடையை உடையவனும், 'வேதம், வாயாற் சொல்லப்படும் பிற சொற்கள், இந்திரன், திருமால், பிரமன்' என்னும் பொருள்களாய் உள்ளவனும் ஆகிய இறைவனை, அடியேன், தாழையரும்புகள், வளைந்த தாழை மரத்தினால் ஈன்றிடப்பட்டு, முட்களையுடைய வாயினை யுடைய இதழ்களைப் பொருந்தி மலர்ந்து மணம் வீசுகின்ற, தேன் மிகுந்த சோலைகள் சூழ்ந்த, மதுவொழுகும் வாயினையுடைய கருங்குவளை மலர்கள் கண்ணுறங்குவது போலக் காணப்படுகின்ற வயல்களையுடைய திருக்கானாட்டு முள்ளூரிற் கண்டு வணங்கப் பெற்றேன். இஃது என் தவப்பயன் இருந்தவாறு!

இப்பதிகத்தில் இயற்றப்பட்டுள்ள இயற்கைக் காட்சிகள் பன்முறையும் படித்து மகிழ்தற்குரியன. இப்பதிகத்தை வானாளும் திருப்பதிகம் என்று தெய்வச் சேக்கிழார் போற்றி மகிழ்கிறார்.

வானவர் தங்கோனை, உலகம் விழுங்கி உமிழ்ந்தானை (திருமால்) நான்முகத்தினானை, உலகந்தானாய், பூதங்கள் ஐந்தாய், எண்குணத்தினானை, நாளை, இன்று, நேற்றாய் தேவர்கள் சூளாமணியை, விண்ணவர் தங்கோனை அமரர்கள் தம் பெருமானை, பலவுருவந் தன்னுருவேயாய பெருமானை, மேவிய நகரத்தில் அழுந்தாமல் நமக்கு மெய்ந்நெறியைக் காட்டும் வேத முதலானை – என்றிவ்வாறு பலவும் இறைவரது முழு முதல் தன்மைகளையும், தேவர் பெருமானாம் தன்மைகளையும் குறித்து நினைவுப் பாடலில் வானவர்க்குந் தலைவராமே என்று பதிகப்பயன் அருளி மகிழ்கிறார்.

405. ஒருமேக முகிலாகி யொத்துலகந் தானாய்
ஊர்வனவும் நிற்பனவும் ஊழிகளுந் தானாய்ப்
பொருமேவு கடலாகிப் பூதங்கள் ஐந்தாய்ப்
புனைந்தவனைப் புண்ணியனைப் புரிசடையி
னானைத்
திருமேவு செல்வத்தார் தீமூன்றும் வளர்த்த
திருத்தக்க அந்தணர்கள் ஓதுநக ரெங்கும்
கருமேதி செந்தாம ரைமேயுங் கழனிக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே.
2

"கானாட்டு முள்ளூரில் கண்டுதொழுதேனே" என்பது பதிக மகுடமாகும். "கண்டு தொழுதேனே" இறைவர் எதிர்க்காட்சி கொடுப்பக்கண்ட தன்மை.

ஒரு – ஒப்பற்ற.

ஒரு மேக முகிலாகி..... புனைந்தவனை – இறைவர் எல்லாமாய் நின்ற தன்மை.

பொரு – பொருதல். அலைகள் மோதி அலைத்தல்.

திருமேவுசெல்வம் – திரு – அருட்டிரு; அருளாகிய செல்வம்.

உலகிற்கு ஒரு பெருந்துணையாய் உள்ள மேகமாகியும், தம்முள் ஒத்த உலகங்கள் பலவும் தானேயாகியும், அவற்றில் உள்ள ஊர்வனவும், நிற்பனவுமாகிய உயிர்களும், அவற்றின் தோற்ற ஒடுக்கங்கட்குக் காரணமாகிய ஊழிக் காலங்களும் தானேயாகியும், அலையால் கரையை மோதுகின்ற கடல்களாகியும், ஐந்து பூதங்களாகியும் அவற்றைப் படைத்து நிற்பவனும், அறவடிவினனும், புரிந்த சடையை உடையவனும் ஆகிய இறைவனை, அடியேன், திருமகளும் விரும்பத்தக்க செல்வத்தை உடையவர்களது மாளிகைகளும், முத்தீயையும் வளர்க்கின்ற மேலான தகுதியுடைய அந்தணர்கள் வேதத்தை ஓதி வாழ்கின்ற மாளிகைகளும் உள்ள இடங்களிலெல்லாம், கரிய எருமைகள் செந்தாமரை மலர்களை மேய்கின்ற வயல்களையுடைய திருக்கானாட்டு முள்ளூரிற் கண்டு வணங்கப் பெற்றேன்; இஃது என் தவப்பயன் இருந்தவாறு!

406. இரும்புயர்ந்த மூவிலைய சூலத்தி னானை
இறையவனை மறையவனை எண்குணத்தி
னானைச்
சுரும்புயர்ந்த கொன்றையொடு தூமதியஞ் சூடுஞ்
சடையானை விடையானைச் சோதியெனுஞ்
சுடரை
அரும்புயர்ந்த அரவிந்தத் தணிமலர்க ளேறி
அன்னங்கள் விளையாடும் அகன்றுறையி
னருகே
கரும்புயர்ந்து பெருஞ்செந்நெல் நெருங்கிவிளை
கழனிக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே.
3

சுரும்புயர்ந்த கொன்றை – தேனின் பொருட்டுக் கொன்றைப் பூக்களை வண்டுகள் மிக மொய்த்துச் சூழும்.

அரும்புயர்ந்த – தாமரை அரும்புகள் நீரினிற்படற் கொடிகளின் மேலே தண்டுநீண்டு உயரும் தன்மை.

கரும்புயர்ந்து – கரும்பு உயரவிளைதல் – நெல் நெருங்கி விளைதல். செழிப்பும், பயன்மிகுதியும் காட்டுவன.

அரவிந்தம் – தாமரை.

வலிமை மிகுந்த மூன்று இலைகளை உடைய சூலத்தை உடையவனும், இறைவனும், வேதத்தை ஓதுபவனும், எட்டுக் குணங்களை உடையவனும், வண்டுகள் மேலே சூழ்கின்ற கொன்றை மாலையோடு, வெள்ளிய சந்திரனைச் சூடிய சடையை உடையவனும், இடபத்தை ஏறுபவனும், 'சுயஞ்சோதி' எனப்படுகின்ற ஒளியானவனும் ஆகிய இறைவனை, அடியேன், அரும்புகள் மேல் அன்னப்பறவைகள், எழுந்து காணப்படுகின்ற தாமரையினது ஒப்பற்ற மலர்களின்மேல் ஏறி விளையாடுகின்ற, அகன்ற நீர்த்துறையின் அருகே கரும்புகள் வளரப்பட்டு, செந்நெற்பயிர்கள் செறிந்து விளைகின்ற வயல்களையுடைய திருக்கானாட்டுமுள்ளூரிற் கண்டு வணங்கப் பெற்றேன். இஃது என் தவப்பயன் இருந்தவாறு!

407. பூளைபுனை கொன்றையொடு புரிசடையி னானைப்
புனலாகி யனலாகிப் பூதங்கள் ஐந்தாய்
நாளைஇன்று நெருநலாய் ஆகாய மாகி
ஞாயிறாய் மதியமாய் நின்றஎம் பரனைப்
பாளைபடு பைங்கமுகின் சூழல்இளந் தெங்கின்
படுமதஞ்செய் கொழுந்தேறல் வாய்மடுத்துப் பருகிக்
காளைவண்டு பாடமயில் ஆலும்வளர் சோலைக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. 4

பூளை – சிவபெருமானுக்குச் சாத்தும் பூக்களுள் ஒன்று.

பூளைப் பூவையும், அழகிய கொன்றை மாலையையும், புரித்த சடையின்கண் உடையவனும், நீராகியும், நெருப்பாகியும், ஐம்பூதங்களாகியும், 'நாளை, இன்று, நேற்று' என்னும் நாள்களாகியும், பரவெளியாகியும், சூரியனாகியும், சந்திரனாகியும் நிற்கின்ற எங்கள் இறைவனை, அடியேன், பாளைகள் உளவாகின்ற, பசிய கமுகுகளினது செறிவினிடத்தே உள்ள இளமையான தென்னையினது, மிக்க மயக்கத்தை உண்டாக்குகின்ற கள்ளினை, இளைய ஆண் வண்டுகள் உட்கொண்டு திளைத்து இசையைப் பாட, மயில்கள் ஆடுகின்ற, உயர்ந்த சோலையையுடைய, திருக்கானாட்டுமுள்ளூரிற் கண்டு வணங்கப் பெற்றேன்; இஃது என் தவப்பயன் இருந்தவாறு!

408. செருக்குவாய்ப் பைங்கண்வெள் ளரவரையி னானைத்
தேவர்கள்சூ ளாமணியைச் செங்கண்விடை யானை
முருக்குவாய் மலரொக்குந் திருமேனி யானை
முன்னிலையாய் முழுதுலக மாயபெரு மானை
இருக்குவாய் அந்தணர்கள் எழுபிறப்புள் எங்கும்
வேள்வியிருந் திருநிதியம் வழங்குநக ரெங்கும்
கருக்குவாய்ப் பெண்ணையொடு தெங்குமலி சோலைக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. 5

சூளாமணி – தலையணி

சீறுகின்ற வாயினையும், பசிய கண்களையும் உடைய, வெள்ளிய பாம்பினை அரையிற் கட்டியவனும், தேவர்கள் முடியிற் பதிக்கும் மணிபோன்றவனும், சிவந்த கண்களையுடைய இடப ஊர்தியை உடையவனும், முருக்க மரத்தின்கண் பொருந்தியுள்ள மலர்போலும் திருமேனியை உடையவனும், எல்லாவற்றிற்கும் சான்றாய் நிற்பவனும், உலகமுழுதும் தானேயாய் நிறைந்தவனும் ஆகிய இறைவனை, அடியேன், எழுவகைப் பிறப்பினவாகிய உயிர்கள் உள்ள இடங்களில் எல்லாம் வேதத்தை ஓதுகின்ற அந்தணர்கள் வேள்வி வேட்டிருத்தலால், அவர்கட்கு மிக்க நிதிகளை வழங்குகின்ற மாளிகையின் பக்கங்களில் எல்லாம், கருக்குவாயினையுடைய பனைமரங்களும், தென்னை மரங்களும் நிறைந்த சோலைகளை யுடைய திருக்கானாட்டுமுள்ளூரிற் கண்டு வணங்கப்பெற்றேன்; இஃது என் தவப்பயன் இருந்தவாறு!

409. விடையரவக் கொடியேந்தும் விண்ணவர்தங் கோனை
வெள்ளத்து மாலவனும் வேதமுத லானும்
அடியிணையுந் திருமுடியுங் காணவரி தாய
சங்கரனைத் தத்துவனைத் தையல்மட வார்கள்
உடையவிழக் குழலவிழக் கோதைகுடைந் தாடக்
குங்குமங்க ளுந்திவரு கொள்ளிடத்தின் கரைமேல்
கடைகள்விடு வார்குவளை களைவாருங் கழனிக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. 6

எருதினை எழுதிய ஒலிக்குங் கொடியை ஏந்துகின்ற தேவர் பெருமானும், நீரில் துயில்கின்ற திருமாலும், வேதத்திற்குத் தலைவனாகிய பிரமனும் – அடி இணையையும், அழகிய முடியினையும் காண்டல் அரிதாகிய, 'சங்கரன்' என்னும் காரணப் பெயரை உடையவனும், மெய்ப்பொருளானவனும் ஆகிய இறைவனை, அடியேன், இளைய பெண்கள் தங்கள் உடை அவிழவும், மாலையை அணிந்த கூந்தல் அவிழவும் மூழ்கி விளையாடுதலால் கிடைத்த குங்குமச் சேற்றைத் தள்ளிக்கொண்டு வருகின்ற கொள்ளிட நதியின் கரைமேல் உள்ள கடையர்கள், தாங்கள் களைந்த நீண்ட குவளைக் கொடிகளைச் சேர்த்து எடுக்கின்ற திருக்கானாட்டுமுள்ளூரிற் கண்டு வணங்கப் பெற்றேன். இஃது என் தவப்பயன் இருந்தவாறு.

410. அருமணியை முத்தினை ஆனஞ்சும் ஆடும்
அமரர்கள்தம் பெருமானை அருமறையின் பொருளைத்
திருமணியைத் தீங்கரும்பின் ஊறலிருந் தேனைத்
தெரிவரிய மாமணியைத் திகழ்தருசெம் பொன்னைக்
குருமணிகள் கொழித்திழிந்து சுழித்திழியுந் திரைவாய்க்
கோல்வளையார் குடைந்தாடுங் கொள்ளிடத்தின் கரைமேல்
கருமணிகள் போல்நீலம் மலர்கின்ற கழனிக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. 7

அரிய மணியாகிய மாணிக்கம் போல்பவனும், முத்துப்போல்பவனும், ஆனைந்தினை ஆடுகின்ற தேவர் பெருமானும், அரிய வேதத்தின் பொருளாய் உள்ளவனும், அழகிய பிற மணிகள் போல்பவனும், இனிய கரும்பினின்றும் வடிதலையுடைய மிக்க சாறு போல்பவனும், அறிதற்கரிய மணியாகிய சிந்தாமணி போல்பவனும், மாற்று விளங்குகின்ற செம்பொன் போல்பவனும் ஆகிய இறைவனை, அடியேன் முன்னே, நிறம் பொருந்திய மணிகளைக் கொழித்து மலையினின்றும் பாய்ந்து, பின்பு நிலத்தில் சுழித்துக் கொண்டு ஓடுகின்ற, அலைகளுக் கிடையில், வரிசையான வளையல்களை அணிந்துள்ள மகளிர் மூழ்கி விளையாடுகின்ற கொள்ளிட நதியின் கரைமேல் உள்ள, நீலோற்பல மலர்கள் நீலமணிபோல மலர்கின்ற வயல்களையுடைய திருக்கானாட்டுமுள்ளூரிற் கண்டு வணங்கப் பெற்றேன்; இஃது என் தவப்பயன் இருந்தவாறு!

411. இழைதழுவு வெண்ணூலும் மேவுதிரு மார்பின்
ஈசன்தன் எண்டோள்கள் வீசிஎரி யாடக்
குழைதழுவு திருக்காதிற் கோளரவ மசைத்துக்
கோவணங்கொள் குழகனைக் குளிர்சடையி
னானைத்
தழைதழுவு தண்ணிறத்த செந்நெலத னயலே
தடந்தரள மென்கரும்பின் தாழ்கிடங்கின்
அருகே
கழைதழுவித் தேன்தொடுக்குங் கழனிசூழ் பழனக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு
தேனே. 8

பாம்பாகிய அணிகலமும், அதனோடு சேர்ந்த வெண்மையான முப்புரிநூலும் பொருந்திய அழகிய மார்பினையுடைய கடவுளும், தனது எட்டுத் தோள்களையும் வீசி நடனம் ஆடுதற் பொருட்டு, குழைபொருந்திய காதில் கொடிய பாம்பையும் இட்டு, உடையைக் கோவணமாக உடுத்த அழகனும், கங்கை நீராற் குளிர்ந்த சடையை உடையவனும் ஆகிய இறைவனை, அடியேன், தழைத்தலையுடைய பசுமையான நிறத்தையுடைய செந்நெற் பயிரின் பக்கத்தில், பெரிய முத்துக்களையுடைய மென்மையான கரும்பின் ஆழ்ந்த கிடங்குகளின் அருகே வண்டுகள் அக்கரும்பைப் பொருந்தித் தேன் கூட்டை அமைக்கின்ற, வயல்கள் சூழ்ந்த, பண்ணைகளையுடைய திருக்கானாட்டு முள்ளூரிற் கண்டு வணங்கப் பெற்றேன்; இஃது என் தவப் பயன் இருந்தவாறு!

412. குனியினிய கதிர்மதியஞ் சூடுசடை யானைக்
குண்டலஞ்சேர் காதவனை வண்டினங்கள்
பாடப்
பனியுதிருஞ் சடையானைப் பால்வெண்ணீற்
றானைப்
பலஉருவுந் தன்னுருவே யாயபெரு மானைத்
துனியினிய தூயமொழித் தொண்டைவாய் நல்லார்
தூநீலங் கண்வளருஞ் சூழ்கிடங்கி னருகே
கனியினிய கதலிவனந் தழுவுபொழிற் சோலைக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு
தேனே. 9

வளைந்த இனிய ஒளியையுடைய சந்திரனைச் சூடியதும், வண்டுக் கூட்டங்கள் பாட, நீர்த்துளிகள் சிந்துகின்றதுமாகிய சடையினையும், குண்டலம் பொருந்திய காதினையும் உடையவனும், பால்போலும் வெள்ளிய நீற்றை அணிந்தவனும், எல்லா உருவங்களும் தன் உருவமேயாய் நிற்கின்ற பெருமானும் ஆகிய இறைவனை, அடியேன், தூய நீலோற்பலங்கள், ஊடலிலும் இனியனவாயும் தூயனவாயும் தோன்றும் மொழிகளையும், கொவ்வைக் கனிபோலும் வாயினையும் உடைய அழகிய பெண்கள்போலக் கண்வளர்கின்ற, நிறைந்த கிடங்கின் அருகில் உள்ள, பழங்களைப் பழுத்த, இனிய வாழைத் தோட்டங்களைப் பொருந்தியுள்ள சோலைகளை யுடைய திருக்கானாட்டுமுள்ளூரிற் கண்டு வணங்கப்பெற்றேன்; இஃது என் தவப்பயன் இருந்தவாறு!

இப்பதிகத்தில் எண்ணிறந்த தமிழ் வளம் கண்டு களிக்கத்தக்கத் தமிழ்ப் புலமை விருந்தாதல் காணலாம். இது பதஞ்சலி முனிவர் பூசித்த தலமாகும்.

413. தேவியம்பொன் மலைக்கோமான் றன்பாவை யாகத்
தனதுருவம் ஒருபாகஞ் சேர்த்துவித்த பெருமான்
மேவியவெந் நரகத்தில் அழுந்தாமை நமக்கு
**மெய்ந்நெறியைத் தான்காட்டும் வேதமுத லானைத்**
தூவியவாய் நாரையொடு குருகுபாய்ந் தார்ப்பத்
துறைக்கெண்டை மிளிர்ந்துகயல் துள்ளிவிளை யாடக்
காவிவாய் வண்டுபல பண்செய்யுங் கழனிக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. 10

அழகிய பொன்மலைக்கு அரசன் மகள் தனக்கு மனைவியாய் வாய்க்க, அவளைத் தனது திருமேனியில் ஒருபாகமாய்ச் சேர்ந்திருக்கும்படி வைத்த பெருமானும், பாவிகள் விரும்பும் கொடிய நரகத்தில் வீழாதபடி நமக்கு மெய்ந்நெறியைக் காட்டுகின்ற, வேதத்தால் துணியப்பட்ட முதற்கடவுளும் ஆகிய இறைவனை, சிறகுகள் வாய்ந்த நாரைகளும், குருகுகளும் பறந்து ஒலிக்க, நீர்த்துறைகளில் கெண்டை பிறழ, பிற மீன்கள் துள்ளி விளையாட, குவளைப்பூவின்கண் வண்டுகள் பலவகையான இசைகளைப் பாடுகின்ற வயல்களையுடைய திருக்கானாட்டுமுள்ளூரிற் கண்டு வணங்கப்பெற்றேன்; இஃது என் தவப்பயன் இருந்தவாறு!

---

414. திரையினார் கடல்சூழ்ந்த தென்னிலங்கைக் கோனைச்
செற்றவனைச் செஞ்சடைமேல் வெண்மதியி னானைக்
கரையினார் புனல்தழுவு கொள்ளிடத்தின் கரைமேற்
கானாட்டு முள்ளூரிற் கண்டுகழல் தொழுது
உரையினார் மதயானை நாவலா ரூரன்
உரிமையால் உரைசெய்த ஒண்டமிழ்கள் வல்லார்
வரையினார் வகைஞால மாண்டவர்க்குந் தாம்போய்
வானவர்க்குந் தலைவராய் நிற்பரவர் தாமே. 11

கானாட்டு முள்ளூரில் கண்டு – ஊரருகில் எதிர்க்காட்சி காட்டக் கண்டு. உரையினார் மதயானை – தமிழ்ப் பெருவளமுடைய; மதயானை – கட்டு மீறி எண்ணிய வாறெல்லாம் மதம் சொரிந்துலவும் மதயானை போல எண்ணியவாறெல்லாம் தமிழ் வளம் சொரிபவர்.

புகழ்மிகுந்த, மதம் பொருந்திய யானையையுடைய திருநாவலூரில் தோன்றிய நம்பியாரூரன், அலையால் நிறைந்த கடல் சூழ்ந்த தென்னிலங்கைக்கு அரசனாகிய இராவணனைச் செருக்கடக்கியவனும், செம்மையான சடையின்மேல் வெண்மையான சந்திரனை அணிந்தவனும் ஆகிய இறைவனை, கரையின்கண் நிரம்பிய நீரைப் பொருந்திய கொள்ளிட நதியின் கரைமேல் உள்ள திருக்கானாட்டுமுள்ளூரிற் கண்டு அடிவணங்கி, வணங்கப்பெற்ற அவ்வுரிமையினால் பாடிய இவ்வொளி பொருந்திய தமிழ்ப்பாடலைப் பாட வல்லவர்கள், எல்லையாற் பொருந்திய வகைகளையுடைய நிலவுலகத்தை ஆளுகின்ற அரசர்கட்கும் தலைவராய், பின்பு சென்று வானுலகத்தார்க்கும் தலைவராய் நெடிது வாழ்வர்.

## 41. திருக்கச்சூர் ஆலக்கோயில்

தம்பிரான் தோழர் திருக்கழுக்குன்றத்திறைவரை வணங்கி, திருக்கச்சூர் சென்று ஆலக்கோயிலில் அமர்ந்தருளும் பெருமானைத் தொழுது புறத்தேவந்து, அமுதுசெயும் வேளையாகையால் பசிவருத்த மதிலின் புறத்தே தங்கினார். வன்றொண்டரின் பசி தீர்க்க விரும்பிய பெருமான், அந்தணர் வடிவுடன் திருவோட்டைக் கையில் தாங்கி வந்து 'பசியால் வருந்தியிருக்கின்றீர்; நும் பசிவேட்கை நீங்க, சோறு இரந்து கொணர்கின்றேன். அப்புறம் அகலாது இங்கே இரும்' எனக் கூறி, கடும் பகற்போதில் மனைதொறும் சென்று பலியேற்று வந்து, 'உம்மை வருத்தும் பசிதீர உண்ணும்' என்று கூறிக்கொடுத்தார். நாவலூரரும் காதல் மிகத் தொழுது வாங்கித் தொண்டர்களுடன் உண்டு உவந்திருந்தார். அந்தணர் வடிவில் வந்த பெருமானும் அருகில் நிற்பவர் போல் அவர் அறியாமல் மறைந்தருளினார். ஆளுடைய நம்பிகளும், 'பெருமானே மறையவர் வடிவில் சேவடி வருந்த எழுந்தருளினான்' என உணர்ந்து மனமுருகிக் கண்ணீர்மழை அருவிபாயப் பாடியருளியது இத்திருப்பதிகம். (தி. 12 பெரிய புரா. ஏயர்கோன். புரா. 182)

பண் : கொல்லிக்கௌவாணம் | பதிக எண் : 41

| மூர்த்தி | அருள்தரும் அஞ்சனாட்சி அம்மை உடனமர் அருள்மிகு விருந்திட்ட வரதர் | | |
|---|---|---|---|
| தல இருப்பிடம் | செங்கல்பட்டு – சிங்கப்பெருமாள் கோயிலிலிருந்து வடமேற்கே 2 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| தல மரம் | ஆல் | | |
| தீர்த்தம் | கூர்ம (ஆமை) தீர்த்தம் | | |
| பாடியவர் | நம்பியாரூரர் | பதிகம் | 1 |

கச்சூர் – ஊர்ப்பெயர்; ஆலக்கோயில் – கோயிலின் பெயர்.

415. முதுவாய் ஓரி கதற முதுகாட்
டெரிகொண் டாடல் முயல்வானே
மதுவார் கொன்றைப் புதுவீ சூடும்
மலையான் மகள்தன் மணவாளா
கதுவாய்த் தலையிற் பலிநீ கொள்ளக்
கண்டால் அடியார் கவலாரே
**அதுவே யாமா றிதுவோ** கச்சூர்
ஆலக் கோயில் அம்மானே. 1

ஓரி – குள்ளநரி. ''அதுவே யாமாறிதுவோ'' – பெருங்கருணையதுவாம் இது. அது – கருணை. இது – காட்டிச் செய்த செயல். புதுவீ – புதுமலர். கதுவாய் – பிளந்த வாய்.

பெரிய வாயை உடைய நரிகள் கூப்பிடப் புறங்காட்டில் தீயை ஏந்தி ஆடுதலைச் செய்பவனே! கொன்றையினது தேன் ஒழுகுகின்ற புதிய பூவைச் சூடுகின்ற, மலையான் மகள் மணவாளனே! திருக்கச்சூரில் உள்ள ஆலக் கோயிலில் எழுந்தருளி யிருக்கின்ற பெருமானே! நீ சென்று, முரிந்த வாயையுடைய ஓட்டில் பிச்சை ஏற்றலைக் கண்டால் உன் அடியவர் கவலை கொள்ளாரோ?

416. கச்சேர் அரவொன் றரையில் அசைத்துக்
**கழலுஞ் சிலம்புங்** கலிக்கப் பலிக்கென்
றுச்சம் போதா ஊரூர் திரியக்
கண்டால் அடியார் உருகாரே
இச்சை யறியோ எங்கள் பெருமான்
ஏழேழ் பிறப்பும் எனையாள்வாய்
அச்சம் மில்லாக் கச்சூர் வடபால்
ஆலக் கோயில் அம்மானே. 2

கழல் வலத்திருவடியிலும், சிலம்பு இடத்திருவடியிலும் உள்ளதை பாதாதிகேச வருணனையின் போது நினைவு கொள்ள வேண்டும். கச்சேர் அரவு – கச்சாகிய பாம்பு.

உச்சம் போதால் – இறைவர் வீடுதோறும் சென்று சோறு இரந்த நேரம்.

எங்கள் பெருமானே! இருவகை ஏழ் பிறப்புக்களிலும் என்னை ஆளாகக் கொண்டு ஆள்பவனே! திருக்கச்சூரின் வடபகுதிக்கண் உள்ள ஆலக்கோயிலில் எழுந்தருளி யிருக்கின்ற அச்சம் இல்லாத பெருமானே! நீ, அழகிய பாம்பு ஒன்றைக் கச்சாகக் கட்டி, கழலும் சிலம்பும் காலில் நின்று ஒலிக்க, பிச்சைக் கென்று, ஞாயிறு உச்சம் ஆகவும் ஊர்தோறும் திரிதலைக் கண்டால், உன் அடியவர் மனம் உருகமாட்டாரோ! உன் விருப்பம் இன்னது என்பதனை யாம் அறியமாட்டோம்.

417. சாலக் கோயில் உளநின் கோயில்
அவைஎன் தலைமேற் கொண்டாடி
மாலைத் தீர்ந்தேன் வினையுந் துரந்தேன்
வானோ ரறியா நெறியானே
**கோலக் கோயில் குறையாக் கோயில்**
குளிர்பூங் கச்சூர் வடபாலை
**ஆலக் கோயிற்** கல்லால் நிழற்கீழ்
அறங்க ளுரைத்த அம்மானே. 3

சால – மிகுதியாக. கோலக் கோயில்... ஆலக்கோயில் – இக்கோயிலின் அழகும் சிறப்பும் எடுத்துப் போற்றி அனுபவித்தவாறு.

துரந்தேன் – ஓட்டி விட்டேன்.

தேவரும் அறிய ஒண்ணாத நிலையை யுடையவனே! அழகுடையதும், குறைவில்லா ததும் ஆகிய, குளிர்ந்த அழகிய திருக்கச்சூர் வடபால் ஆலக்கோயிலில் எழுந்தருளி யிருக்கின்ற, கல்லால் நிழற்கீழ் நால்வர் முனிவர்க்கு அறங்களை உரைத்த பெருமானே! உனது கோயிலாகப் பல கோயில்கள் இம் மண்ணில் உள்ளன; அவற்றையெல்லாம் என் தலைமேல் வைத்துப் புகழ்ந்து, மயக்கமுந் தீர்ந்தேன்; வினையையும் ஓட்டினேன்; இங்குள்ள கோயிலைப் புகழ்ந்து, நீ இரந்து சோறிடப் பெற்றேன்.

418. விடையுங் கொடியுஞ் சடையும் உடையாய்
மின்னேர் உருவத் தொளியானே
கடையும் புடைசூழ் மணிமண் டபமுங்
கன்னி மாடங் கலந்தெங்கும்
புடையும் பொழிலும் புனலுந் தழுவிப்
பூமேல் திருமா மகள்புல்கி
அடையுங் கழனிப் பழனக் கச்சூர்
ஆலக் கோயில் அம்மானே. 4

கழனி – வயல். பழனம் – வயல் சூழ்ந்த சோலை. திருமால் அமுதம் வேண்டி ஆமையாய் இருந்து பூசித்த காரணத்தாலும், ஆலமரம் இத்தலமரமாக இருப்பதாலும் இப்பெயர் பெற்றது.

கச்சபம் – ஆமை. கச்சப ஊர் – கச்சூர் என்றும் கொள்ளலாம். கன்னி மாடம் – கன்னிப் பெண்கள் வசித்து தவம் செய்யுமிடம். புடையும் – பக்கங்களில்

இடப வாகனத்தையும், இடபக் கொடியையும், சடைமுடியையும் உடையவனே! திருமேனி யினது மின்னல்போலும் ஒளியையுடையவனே! எங்கும், அழகிய வாயில்களையும், நிறைந்த மணிமண்டபங்களையும், அழிவில்லாத மாடங்களையும் கொண்டு, சூழ உள்ள இடங்களிலும் சோலைகளையும், நீர் நிலைகளையும் பெற்று விளங்குதலால், தாமரை மேல் இருக்கும் பெருமை வாய்ந்த திருமகள் நீங்காது பற்றி உறைகின்ற, வயல்களையுடைய பண்ணை சூழ்ந்த திருக்கச்சூரில் உள்ள, ஆலக்கோயிலில் எழுந்தருளியிருக்கின்ற பெருமானே! இஃது உன்கருணை இருந்தவாறேயோ!

419. மேலை விதியே விதியின் பயனே
விரவார் புரமுன் றெரிசெய்தாய்
காலை யெழுந்து தொழுவார் தங்கள்
கவலை களைவாய் கறைக்கண்டா
மாலை மதியே மலைமேல் மருந்தே
மறவே னடியேன் வயல்சூழ்ந்த
ஆலைக் கழனிப் பழனக் கச்சூர்
ஆலக் கோயில் அம்மானே. 5

"கச்சூர் ஆலக்கோயில் அம்மானே" என்பது பதிக மகுடமாகும். இவ்வூரில் பெருமான் மலைமேற் கோயில் கொண்டிருத்தலின் "மலைமேல் மருந்தே" என்று அருளிச் செய்தார். விதி – வினையின் பயன். விதி – நியதி. விரவார் – பகைவர்.

மேம்பட்டதாகிய அறநெறியாயும், அதன் பயனாயும் உள்ளவனே! பகைவரது திரிபுரங்களை எரித்தவனே! காலையில் எழுந்து உன்னை வணங்குவாரது மனக்கவலையை அடியோடு நீக்குபவனே! நீலகண்டத்தை யுடையவனே! மாலைக் காலத்தில் தோன்றும் சந்திரன்போல்பவனே! மலைமேல் இருக்கின்ற மருந்து போல்பவனே! வயல்கள் நிறைந்த, கரும்பாலையை உடைய இடங்களைக் கொண்ட பண்ணையை உடைய திருக்கச்சூரில் உள்ள ஆலக்கோயிலில் எழுந்தருளியிருக்கின்ற பெருமானே! அடியேன் உன்னை மறவேன்.

420. பிறவாய் இறவாய் பேணாய் மூவாய்
பெற்ற மேறிப் பேய்சூழ்தல்
துறவாய் மறவாய் சுடுகா டென்றும்
இடமாக் கொண்டு நடமாடி
ஒறுவாய்த் தலையிற் பலிநீ கொள்ளக்
கண்டால் அடியார் உருகாரே
அறவே யொழியாய் கச்சூர் வடபால்
ஆலக் கோயில் அம்மானே. 6

பேணாய் – விருப்பு வெறுப்பு இல்லாமை.
மறவாய் – உயிர்களுக்கு ஆவனவற்றையே எப்போதும் செய்தலை மறவாய். ஒறு – செத்த. அற – அறுதல்.

பிறவாதவனே! இறவாதவனே! யாதொன்றையும் விரும்பாதவனே! மூப்படையாதவனே! இடபத்தை ஏறிப் பேயாற் சூழப்படுதலை விடாதவனே! மறதி இல்லாதவனே! என்றும் சுடுகாட்டையே இடமாகக்கொண்டு நடனம் ஆடுபவனே! திருக்கச்சூரில் வடபால் உள்ள ஆலக்கோயிலில் எழுந்தருளியிருக்கின்ற பெருமானே! நீ, உடைந்த வாயையுடைய ஓட்டில் பிச்சை ஏற்றலைக் கண்டால், உன் அடியவர் மனம் வருந்தமாட்டாரோ? இதனை அறவே ஒழி.

421. **பொய்யே உன்னைப் புகழ்வார் புகழ்ந்தால்**
**அதுவும் பொருளாக் கொள்வானே**
மெய்யே எங்கள் பெருமான் உன்னை
நினைவா ரவரை **நினைகண்டாய்**
மையார் தடங்கண் மடந்தை பங்கா
கங்கார் மதியஞ் சடைவைத்த
ஐயா செய்யாய் வெளியாய் கச்சூர்
ஆலக் கோயில் அம்மானே. 7

இறைவர் நினைப்பதுவே அருள் செய்தலாம்.
செய்யாய் – செம்மையுடையவன்.
வெளியாய் – ஞானவெளியில் இருப்பவன்.

மை பொருந்திய பெரிய கண்களையுடைய மங்கை பங்காளனே! கங்கையையும், ஆத்திப் பூவையும், சந்திரனையும் சடையில் வைத்துள்ள தலைவனே! செம்மைநிறம் உடையவனே! வெண்மை நிறம் உடையவனே! திருக்கச்சூரில் உள்ள ஆலக்கோயிலில் எழுந்தருளியிருக்கின்ற பெருமானே! உன்னைப் புகழ்கின்றவர்கள் பொய்யாகவே புகழ்ந்தாலும், அதனையும் மெய்யாகவே கொண்டு அருள் செய்கின்றவனே! எங்கள் பெருமானாகிய உன்னை மெய்யாகவே நினைக்கின்ற அடியவரை நீ நினை.

**422. ஊனைப் பெருக்கி உன்னை நினையா**
**தொழிந்தேன் செடியேன் உணர்வில்லேன்**
கானக் கொன்றை கமழ மலருங்
கடிநா றுடையாய் கச்சூராய்
மானைப் புரையு மடமென் னோக்கி
மடவா ளஞ்ச மறைத்திட்ட
ஆனைத் தோலாய் ஞானக் கண்ணாய்
ஆலக் கோயில் அம்மானே. 8

காட்டில் உள்ள கொன்றை மலர், மணங் கமழ மலரும் புதுமணம் வீசுதலை உடையவனே! மானை நிகர்த்த இளைய மெல்லிய பார்வையை யுடையவளாகிய உமையவள் அஞ்சும்படி போர்த்துள்ள யானைத்தோலை உடையவனே! உயிர்களுக்கு ஞானக்கண்ணாய் விளங்குபவனே! திருக்கச்சூரில் உள்ளவனே! ஆலக்கோயிலில் எழுந்தருளியிருக்கின்ற பெருமானே! கீழ்மையுடையேனும் அறிவில்லாதேனும் ஆகிய யான், உடம்பை வளர்க்கும் செயலில் நின்று, அதனைத்தந்த உன்னை நினையாது விட்டேன்.

**423. காதல் செய்து களித்துப் பிதற்றிக்**
**கடிமா மலரிட் டுனையேத்தி**
**ஆதல் செய்யும் அடியார் இருக்க**
ஐயங் கொள்ளல் அழகிதே
ஓதக் கண்டேன் உன்னை மறவேன்
உமையாள் கணவா எனையாள்வாய்
ஆதற் கழனிப் பழனக் கச்சூர்
ஆலக் கோயில் அம்மானே. 9

ஆதல் – விளைவு, மிகவும் ஆக்கமுடைய.
“கச்சூர் ஆலக்கோயில் அம்மானே” என்பது பதிக மகுடமாகும்.

உமையம்மைக்குக் கணவனே! உனது தன்மைகளைப் பெரியோர் சொல்ல அறிந்து உன்னை மறவாதேனாகிய என்னையும் அடியாருள் வைத்து ஆள்கின்றவனே! விளைதலையுடைய கழனிகளையுடைய பண்ணையையுடைய திருக்கச்சூரில் உள்ள ஆலக்கோயிலில் எழுந்தருளியிருக்கின்ற பெருமானே! உன்பால் பேரன்புகொண்டு, அதனால் இன்பம் மீதூரப்பெற்று, தம்மை யறியாது வரும் சொற்களைச் சொல்லி, மணம் பொருந்திய மலர்களைத் தூவி உன்னைப் போற்றி செய்து உயர்வடைகின்ற அடியவர்கள் உனக்கு வேண்டும் பணிகளைச் செய்ய அவாவியிருக்க, நீ சென்று பிச்சை ஏற்பது அழகிதாமோ? ஆகாதன்றோ?

424. அன்னம் மன்னும் வயல்சூழ் கச்சூர்
ஆலக் கோயில் அம்மானை
உன்ன முன்னு மனத்தா ரூரன்
ஆரூ ரன்பேர் முடிவைத்த
**மன்னு புலவன் வயல்நா வலர்கோன்**
**செஞ்சொல் நாவன் வன்றொண்டன்**
பன்னு தமிழ்நூல் மாலை வல்லா
ரவர்என் தலைமேற் பயில்வாரே. 10

அன்னம் மன்னும் – நீர் வளம் குறித்தது.
உன்ன முன்னும் – நினைக்க முற்படும்.
புலவன் செஞ்சொல் – தமிழ் நூல்

அன்னங்கள் நிலைத்து வாழும் வயல்கள் சூழ்ந்த திருக்கச்சூரில் உள்ள ஆலக்கோயிலில் எழுந்தருளியிருக்கின்ற பெருமானை, அவனது கருணையையே நினைக்கின்ற மனத்தினால், ‘ஆரூரன்’ என்று, திருவாரூர் இறைவனது பெயரைத் தலையில் வைத்துள்ள மிக்க புலமையுடையவனும், செவ்விய சொல்லால் அமைந்த பாடல்களைப் பாடவல்ல நாவன்மை யுடையவனும், வயல்களை உடைய திருநாவலூருக்குத் தலைவனும் வன்றொண்டனும் ஆகிய நம்பியாரூரன் பாடிய, தமிழ் இலக்கணம் அமைந்த இப்பாமாலையைப் பாட வல்லவர், என் தலைமேல் எப்பொழுதும் இருத்தற்கு உரியராவர்.

## 42. திருவெஞ்சமாக்கூடல்

(வெஞ்சன் என்னும் அசுரன் பூசித்த தலம்)

பண் : கொல்லிக்கௌவாணம் பதிக எண் : 42

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் விகிர்தேசுவரி உடனமர் அருள்மிகு விகிர்தேசுவரர் | | |
| **தல இருப்பிடம்** | கொங்கு நாட்டில் கரூரிலிருந்து தெற்கே அரவக்குறிச்சி அருகில் 20 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | வில்வம் | | |
| **தீர்த்தம்** | குடகனாறு | | |
| **பாடியவர்** | நம்பியாரூரர் | **பதிகம்** | 1 |

425. எறிக்குங்கதிர் வேயுதிர் முத்தம்மோ
டேலம்மில வங்கந்தக் கோலம்இஞ்சி
செறிக்கும்புன லுட்பெய்து கொண்டுமண்டித்
திளைத்தெற்றுசிற் றாறதன் கீழ்க்கரைமேல்
முறிக்குந்தழை மாமுடப் புன்னைஞாழல்
குருக்கத்திகள் மேற்குயில் கூவலறா
வெறிக்குங்கலை மாவெஞ்ச மாக்கூடல்
விகிர்தாஅடி யேனையும் வேண்டுதியே. 1

எறிக்கும் – காற்றினால் மிகவும் அசைக்கப்பட்டு மோதும். முத்துக்கள் பிறக்கும் இடங்களுள் மூங்கிலும் ஒன்று. வெறிக்கும் கலைமா – தம்மிச்சையாக ஓடித்திரியும் மான் கூட்டம் – மருட்சியுடைய கலைமான்.

மூங்கிலின்றும் உதிர்ந்த, ஒளிவீசும், முத்துக்களோடு, ‘ஏலம், இலவங்கம், தக்கோலம், இஞ்சி’ என்பவைகளை, எவ்விடங்களையும் நிரப்புகின்ற நீருள் இட்டுக் கொண்டு, கரையை நெருங்கிப் பொருந்தி மோதுகின்ற சிற்றாற்றின் கீழ்க்கரைமேல் உள்ள, ‘தளிர்த்த தழைகளையுடைய மாமரம், வளைந்த புன்னை மரம், குங்கும மரம், குருக்கத்திப் பந்தர்’ என்னும் இவைகளின்மேல் குயில்கள் இருந்து கூவுதல் ஒழியாத, அஞ்சுகின்ற கலைமானையுடைய திருவெஞ்சமாக்கூடலில் எழுந்தருளியிருக்கின்ற, வேறுபட்ட இயல்பை உடையவனே! அடியேனையும் உன் சீரடியாருள் ஒருவனாக வைத்து விரும்பியருள்.

426. குளங்கள்பல வுங்குழி யுந்நிறையக்
குடமாமணி சந்தன மும்மகிலும்
துளங்கும்புன லுட்பெய்து கொண்டுமண்டித்
திளைத்தெற்றுசிற் றாறதன் கீழ்க்கரைமேல்
வளங்கொள்மதில் மாளிகை கோபுரமும்
மணிமண்டப மும்மிவை மஞ்சுதன்னுள்
விளங்கும்மதி தோய்வெஞ்ச மாக்கூடல்
விகிர்தாஅடி யேனையும் வேண்டுதியே. 2

மணி, சந்தனம், அகில் – மலைபடு பண்டம்.

மதில் மாளிகை, கோபுரம், மணிமண்டபம் – இவை இந்நகரின் முன்னாளைய சிறப்புக்கள்.

கூடல் – குழகனாறும், சிற்றாறும் கூடுகின்றமையால் வந்த பெயர்.

பல குளங்களும், பல குழிகளும் நிறையும்படி, மேற்குத் திசையில் உள்ள சிறந்த மணிகளையும், ‘சந்தனமரம், அகில் மரம்’ என்னும் இவற்றையும், அசைகின்ற நீருள் இட்டுக் கொண்டு, கரையை நெருங்கிப் பொருந்தி மோதுகின்ற சிற்றாற்றின் கீழ்க்கரை மேல் உள்ள, வளத்தைக்கொண்ட மதிலும், மாளிகையும் கோபுரமும், மணிமண்டபமும் ஆகிய இவை, மேகத்தில் விளங்குகின்ற சந்திரனை அளாவுகின்ற திருவெஞ்சமாக் கூடலில் எழுந்தருளியிருக்கின்ற வேறுபட்ட இயல்பை உடையவனே! அடியேனையும் உன் சீரடியாருள் ஒருவனாக வைத்து விரும்பியருள்.

427. வரைமான்அனை யார்மயிற் சாயல்நல்லார்
வடிவேற்கண்நல் லார்பலர் வந்திறைஞ்சத்
திரையார்புன லுட்பெய்து கொண்டுமண்டித்
திளைத்தெற்றுசிற் றாறதன் கீழ்க்கரைமேல்
நிரையார்கமு குந்நெடுந் தாட்டெங்குங்
குறுந்தாட்பல வும்விர விக்குளிரும்
விரையார்பொழில் சூழ்வெஞ்ச மாக்கூடல்
விகிர்தாஅடி யேனையும் வேண்டுதியே. 3

''வெஞ்சமாக்கூடல் விகிர்தா அடியேனையும் வேண்டுதியே" என்பது பதிக மகுடமாகும்.

செறிக்கும் புனல் – துளங்கும் புனல் – திரையார் புனல் என்று சிற்றாற்றின் சிறப்பைக் கூறுகின்றார்.

நிரையார் – வரிசைகள் நிறைந்த.

மலையில் உள்ள மான்போல்பவரும், மயில் போலும் சாயலையுடையவரும், கூரிய வேல் போலும் கண்களையுடையவரும் ஆகிய மகளிர் பலர் வந்து வழிபட, அவர்கள் தனக்கு அளித்த பொருளை, அலை நிறைந்த நீரில் இட்டுக் கொண்டு, கரையை நெருங்கிப் பொருந்தி மோதுகின்ற சிற்றாற்றின் கீழ்க்கரைமேல் உள்ள, வரிசையாகப் பொருந்திய கமுக மரங்களும், நீண்ட அடியினையுடைய தென்னை மரங்களும், குறிய அடியினையுடைய பலா மரங்களும் ஒன்றாய்ப் பொருந்துதலால் குளிர்ச்சியை அடைகின்ற, மணம் நிறைந்த சோலைகள் சூழ்ந்த திருவெஞ்சமாக்கூடலில் எழுந்தருளியிருக்கின்ற, வேறுபட்ட இயல்பினை யுடையவனே! அடியேனையும் உன் சீரடியாருள் ஒருவனாக வைத்து விரும்பியருள்.

428. பண்ணேர்மொழி யாளையொர் பங்குடையாய்
படுகாட்டகத் தென்றுமோர் பற்றொழியாய்
தண்ணார்அகி லுந்நல சாமரையும்
அலைத்தெற்றுசிற் றாறதன் கீழ்க்கரைமேல்
மண்ணார்முழ வுங்குழ லும்மியம்ப
மடவார்நட மாடு மணியரங்கில்
விண்ணார்மதி தோய்வெஞ்ச மாக்கூடல்
விகிர்தாஅடி யேனையும் வேண்டுதியே. 4

சாமரை – சாமரையாகப் பயன்படும் கவரி மானின் வால் மயிர் குறித்தது. நலசாமரை – ஆலயங்களிலும், பெரியோரிடத்திலும் உபசாரப் பொருளாய்ப் பயன்படுதல் கூறுகிறார்.

அரங்கு – ஆடல் பயிலுமிடம்.

பண்போலும் மொழியினையுடைய உமாதேவியை ஒருபாகத்தில் உடையவனே! யாவரும் ஒடுங்குங் காட்டினிடத்தில் உள்ள ஒரு பற்றினை என்றும் நீங்காதவனே! இன்பத்தைத் தரும் அரிய அகிலையும், நல்ல கவரியையும் அலைத்துக்கொண்டுவந்து கரையை மோதுகின்ற சிற்றாற்றின் கீழ்க்கரைமேல் உள்ள, மண்பொருந்திய மத்தளமும், குழலும் ஒலிக்க, மாதர்கள் நடனம் ஆடுகின்ற அழகிய அரங்கின்மேல், வானத்தில் பொருந்திய சந்திரன் தவழ்கின்ற திருவெஞ்சமாக்கூடலில் எழுந்தருளியிருக்கின்ற வேறுபட்ட இயல்பினை யுடையவனே! அடியேனையும் உன் சீரடியாருள் ஒருவனாக வைத்து விரும்பியருள்.

429. துளைவெண்குழை யுஞ்சுருள் வெண்டோடுந்
தூங்குங்கா திற்றுளங் கும்படியாய்
களையேகம ழும்மலர்க் கொன்றையினாய்
கலந்தார்க்கருள் செய்திடுங் கற்பகமே
பிளைவெண்பிறை யாய்பிறங் குஞ்சடையாய்
பிறவாதவ னேபெறு தற்கரியாய்
வெளைமால்விடை யாய்வெஞ்ச மாக்கூடல்
விகிர்தாஅடி யேனையும் வேண்டுதியே.
5

துளைக்கப்பட்ட வெள்ளிய குழையும், சுருண்ட வெள்ளிய தோடும் நீண்ட காதினிடத்தில் அசைகின்ற வடிவத்தையுடையவனே! தேனினது மணத்தை வீசுகின்ற கொன்றை மலரைச் சூடியவனே! அடைந்தவர்க்கு அருள் செய்கின்ற கற்பகம் போல்பவனே! இளைய வெள்ளிய பிறையைச் சூடியவனே! விளங்குகின்ற சடைமுடியை உடையவனே! பிறத்தலைச் செய்யாதவனே! கிடைத்தற்கு அரியவனே! வெண்மையான பெரிய விடையை உடையவனே! திருவெஞ்சமாக்கூடலில் எழுந்தருளியிருக்கின்ற, வேறுபட்ட இயல்பை உடையவனே! அடியேனையும் உன் சீரடியாருள் ஒருவனாக வைத்து விரும்பியருள்.

துளை வெண்குழை – சங்கினைத் துளைத்து எடுத்து வடிவாக்கிய குழை. சுருள் – ஓலைச் சுருளாலாகிய; சுருள் போன்று அமைந்த.

களையே – கள்; தேன்; கள்ளையே என்பது எதுகை நோக்கி களை என நின்றது.

பிள்ளை என்பது பிளை என நின்றது.

வெள்ளை என்பதும் இவ்வாறே.

430. தொழுவார்க்கெளி யாய்துயர் தீரநின்றாய்
சுரும்பார்மலர்க் கொன்றைதுன்
றுஞ்சடையாய்
உழுவார்க்கரி யவ்விடை யேறிஒன்னார்
புரந்தீயெழ ஓடுவித் தாய்அழகார்
முழவாரொலி பாடலொ டாடலறா
முதுகாடரங் காநட மாடவல்லாய்
விழவார்மறு கின்வெஞ்ச மாக்கூடல்
விகிர்தாஅடி யேனையும் வேண்டுதியே.
6

உன்னைத் தொழுகின்றவர்க்கு எளிதில் கிடைக்கும் பொருளாய் உள்ளவனே! அவர்களது துன்பந்தீர அவர்கட்கு என்றும் துணையாய், நின்றவனே! வண்டுகள் ஒலிக்கின்ற கொன்றை மலர்பொருந்திய சடையை உடையவனே, உழவில் எவர்க்குமரிய விடையை ஏறுபவனே! பகைவரது திரிபுரத்தில் நெருப்பை மூளுமாறு ஏவியவனே! பேய்களின் ஓசையாகிய அழகுநிறைந்த மத்தளஒலியும், பாட்டும், குதிப்பும் நீங்காத புறங்காடே அரங்காக நடனமாட வல்லவனே! விழாக்கள் நிறைந்த தெருக்களையுடைய திருவெஞ்சமாக் கூடலில் எழுந்தருளி யிருக்கின்ற வேறுபட்ட இயல்பை உடையவனே! அடியேனையும் உன் சீரடியாருள் ஒருவனாக வைத்து விரும்பியருள்.

431. கடமாகளி யானை யுரித்தவனே
கரிகாடிட மாஅனல் வீசிநின்று
நடமாடவல் லாய்நரை யேறுகந்தாய்
நல்லாய்நறுங் கொன்றை நயந்தவனே
**படமாயிர மாம்பருத் துத்திப்பைங்கண்**
**பகுவாய்எயிற் றோடழ லேயுமிழும்**
**விடவார்அர வா**வெஞ்ச மாக்கூடல்
விகிர்தாஅடி யேனையும் வேண்டுதியே.
7

நரையேறு – வெள்ளை விடை.
துத்தி – உச்சிக் கொண்டை;
படத்தின் உச்சி.

மதநீரையுடைய பெரிய மயக்கங்கொண்ட யானையை உரித்தவனே! கரிந்த காடே இடமாக நெருப்பை வீசிநின்று நடனமாட வல்லவனே! வெள்ளிய இடபத்தை விரும்பியவனே! நல்லோனே, கொன்றை மலரை மகிழ்ந்து அணிந்தவனே! புள்ளிகளையுடைய **ஆயிரம் படங்கள் பொருந்திய, பருத்த, பசிய கண்களையுடைய, பிளந்த வாயில் பற்களோடு நெருப்பை உமிழ்கின்ற, நஞ்சினையுடைய அரிய பாம்பை அணிந்தவனே!** திருவெஞ்சமாக் கூடலில் எழுந்தருளியிருக்கின்ற வேறுபட்ட இயல்பையுடையவனே! அடியேனையும் உன் சீரடியாருள் ஒருவனாக வைத்து விரும்பியருள்.

432. காடும்மலை யுந்நாஅ டும்மிடறிக்
கதிர்மாமணி சந்தன மும்மகிலும்
சேடன்னுறை யும்மிடந் தான்விரும்பித்
திளைத்தெற்றுசிற் றாறதன் கீழ்க்கரைமேல்
பாடல்முழ வுங்குழ லும்மியம்பப்
பணைத்தோளியர் பாடலொ டாடலறா
வேடர்விரும் பும்வெஞ்ச மாக்கூடல்
விகிர்தாஅடி யேனையும் வேண்டுதியே.
8

காடு, மலை, நாடு – முல்லை, குறிஞ்சி, மருதம் என்று திணைகளையும் குறித்தன.
சேடன் உறையும் இடம் – பாதாள உலகம்.

ஒளியையுடைய சிறந்த மணிகளையும், சந்தனத்தையும், அகிலையும், ‘முல்லை, குறிஞ்சி, மருதம்’ என்னும் நிலங்களில் சிதறி, ‘சேடன்’ என்னும் அரவரசன் வாழ்கின்ற பாதலத்தை அடைய விரும்பி நிலத்தை அகழ்ந்து, கரையைப் பொருந்தி மோதுகின்ற சிற்றாற்றின் கீழ்க்கரைமேல் உள்ள, தம் பாடலுக்கு இயைந்த மத்தளமும், குழலும் ஒலிக்க, பருத்த தோள்களையுடைய மாதர்கள் பாடுதலோடு, ஆடுதலைச் செய்தல் ஒழியாத கூத்தர் விரும்பும் திருவெஞ்சமாக்கூடலில் எழுந்தருளியிருக்கின்ற வேறுபட்ட இயல்புடையவனே! அடியேனையும் உன் சீரடியாருள் ஒருவனாக வைத்து விரும்பியருள்.

433. கொங்கார்மலர்க் கொன்றையந் தாரவனே
கொடுகொட்டியொர் வீணை யுடையவனே
பொங்காடர வும்புன லுஞ்சடைமேற்
பொதியும்புனி தாபுனஞ் சூழ்ந்தழகார்
துங்கார்புன லுட்பெய்து கொண்டுமண்டித்
திளைத்தெற்றுசிற் றாறதன் கீழ்க்கரைமேல்
வெங்கார்வயல் சூழ்வெஞ்ச மாக்கூடல்
விகிர்தாஅடி யேனையும் வேண்டுதியே. 9

துங்கார் – பரிசுத்தமான. சிற்றாறு கோடைக்கானல் மலைத் தொடரிற் சேர்ந்த பெருமாள் மலை, வராக மலைகளினின்றும் தோன்றிப் பெருகி வரும்போது குறிஞ்சி கருப்பொருட்களாகிய மலைபடு பண்டங்களையும் கொண்டு வருவதைப் பாடி மகிழ்கிறார்.

தேன் நிறைந்த கொன்றை மலர் மாலையை அணிந்தவனே! கொடுகொட்டியையும் வீணை யொன்றையும் உடையவனே! சீற்றம் மிக்க, ஆடுகின்ற பாம்பும் தண்ணீரும் சடையில் நிறைந்துள்ள தூயவனே! காடுகளைச் சூழ்ந்து அழகுமிகுகின்ற, உயர்வு பொருந்திய நீருள், காடுபடு பொருள்கள் பலவற்றை இட்டுக் கொண்டு, கரையை நெருங்கிப் பொருந்தி மோதுகின்ற சிற்றாற்றின் கீழ்க்கரைமேல் உள்ள, விரும்பத்தக்க நீர் நிறைந்த வயல்கள் சூழ்ந்த திருவெஞ்சமாக்கூடலில் எழுந்தருளி யிருக்கின்ற வேறுபட்ட இயல்பினை யுடையவனே! அடியேனையும் உன் சீரடியாருள் ஒருவனாக வைத்து விரும்பியருள்.

434. வஞ்சிநுண்ணிடை யார்மயிற் சாயலன்னார்
வடிவேற்கண்நல் லார்பலர் வந்திறைஞ்சும்
வெஞ்சமாக்கூ டல்விகிர் தாஅடியே
னையும்வேண்டுதி யேஎன்று தான்விரும்பி
**வஞ்சியாதளிக் கும்வயல்** நாவலர்கோன்
வனப்பகை யப்பன்வன்
றொண்டன்சொன்ன
செஞ்சொற்றமிழ் மாலைகள் பத்தும்வல்லார்
சிவலோகத்தி ருப்பது திண்ணமன்றே. 10

வஞ்சிக் கொடிபோலும் நுண்ணிய இடையையுடையவரும், மயில்போலும் சாயலை யுடையவரும், கூர்மை பொருந்திய வேல்போலும் கண்களையுடையவரும் ஆகிய மகளிர் பலர் வந்து வணங்குகின்ற திருவெஞ்சமாக்கூடலில் எழுந்தருளியிருக்கின்ற, வேறுபட்ட இயல்பினை யுடையவனே! 'அடியேனையும் உன் சீரடியாருள் ஒருவனாக வைத்து விரும்பியருள்' என்று, விளைவுகளை வஞ்சியாதளிக்கின்ற வயல்களையுடைய திருநாவலூரில் உள்ளார்க்குத் தலைவனும், வனப்பகைக்குத் தந்தையும் ஆகிய வன்றொண்டன் விரும்பிப் பாடிய செவ்விய சொற்களாலாகிய இத் தமிழ்மாலைகள் பத்தினையும் பாட வல்லவர் சிவலோகத்தில் வீற்றிருத்தல் திண்ணம்.

## 43. திருமுதுகுன்றம் (விருத்தாசலம்)

பண் : கொல்லிக்கௌவாணம் பதிக எண் : 43

| | |
|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் பெரியநாயகி உடனமர் அருள்மிகு பழமலைநாதர் |
| **தல இருப்பிடம்** | நடுநாட்டில் சிதம்பரத்திலிருந்து 40 கி.மீ. தொலைவிலும், உளுந்தூர் பேட்டையிலிருந்து 30 கி.மீ. தொலைவிலும் அமைந்துள்ளது. |
| **தல மரம்** | வன்னி (மிகப்பழமையானது) |
| **தீர்த்தம்** | மணிமுத்தாறு |
| **பாடியவர்** | மூவர் — **பதிகங்கள்** 10 |

435. நஞ்சி இடைஇன்று நாளையென் றும்மை நச்சுவார்
துஞ்சியிட் டாற்பின்னைச் செய்வதென்
ணடிகேள்சொலீர்
பஞ்சி யிடப்புட்டில் கீறுமோபணி யீரருள்
முஞ்சி யிடைச்சங்கம் ஆர்க்குஞ் சீர்முது குன்றரே.
1

சிவபெருமானால் முதலில் படைக்கப்பெற்றது ஆதலின் இப்பெயர் பெற்றது. இப்பதிகம் இறைவரிடத்துத் தமக்குள்ள உரிமையால் "அடியவர்கட்கு நீர் இப்பொழுதே அருளிச் செய்ய வேண்டுமென்று வலியுறுத்தி அருளிச் செய்தது". நச்சுதல் – பலகாலும் வேண்டுதல்.

நஞ்சு – நைஞ்சு. நஞ்சியிடை – இடைநஞ்சு – இடையில் வருந்தி.

துஞ்சியிட்டால் – இறந்து போனால்.

புட்டில் – அம்புப்புட்டில். அம்பறாத்துணி.

அதனுள் இடும் அம்பு முதலியவற்றால் அதன் உட்பாகங்கள் கீறி ஊறுபடாதபடி பஞ்சு இடுதல் மரபு.

துஞ்சியிட்டால் – இறந்துபோனால்.

முஞ்சி – தர்ப்பைப்புல் புதர்.

பிரமசாரிகள் அரைஞாண் இதனால் ஆக்கப்படும்.

நீர் வளமுள்ள இடங்களில் முளைக்கும் முஞ்சிப் புல்லின் புதல்மேல் சங்கு தங்கி ஒலிக்கின்ற புகழையுடைய திருமுதுகுன்றத்தில் எழுந்தருளியிருப்பவரே! எங்கள் தலைவரே! உம்மை நெஞ்சுருகி விரும்புகின்ற அடியவர், 'நீர் அருள் செய்யும் காலம் இன்று வாய்க்கும்; நாளை வாய்க்கும்' என்று எண்ணிக் கொண்டேயிருந்து இறந்துவிட்டால், அதன்பின்பு நீர் அவர்களுக்குச் செய்வது என்ன இருக்கின்றது? பஞ்சியை அடைப்பதனால் குடுக்கை உடைந்து விடுமோ? விரைந்து அருள்புரியீர்.

436. ஏரிக் கனகக் கமல மலரன்ன சேவடி
ஊரித் தனையுந் திரிந்தக் காலவை நோங்கொலோ
வாரிக் கட்சென்று வளைக்கப் பட்டு வருந்திப்போய்
மூரிக் களிறு முழக்க றாமுது குன்றரே. 2

திரிந்தக்கால் – பலிக்குச் சென்று திரிந்தால்.
இப்பதிகத்தினுள் இறைவர் பலி தேர்ந்துழல்கின்றமை பற்றிப் பலவாறும் போற்றுகிறார்.
மூரி – வலிமை. வாரி – வெள்ளம்.

பெரிய களிற்றியானை, வெள்ளத்தினிடத்திற் சென்று அதனால் வளைத்துக் கொள்ளப்பட்டு மீளமாட்டாது வருந்திப் பின் அரிதில் மீண்டு பிளிறுதல் நீங்காத திருமுதுகுன்றத்தில் எழுந்தருளியிருப்பவரே! உமது, அழகு பொருந்திய, பொற்றாமரை மலர் போலும் செவ்விய இத்திருவடிகள், இத்தனை ஊரிலும் திரிந்தால், அவை வருந்துமோ! வருந்தாவோ!

437. தொண்டர்கள் பாடவிண் ணோர்க ளேத்த உழிதர்வீர்
பண்டகந் தோறும் பலிக்குச் செல்வதும் பான்மையே
கண்டகர் வாளிகள் வில்லி கள்புறங் காக்குஞ்சீர்
மொண்டகை வேள்வி முழக்க றாமுது குன்றரே. 3

மொண்ட கை – தளராது எடுத்துதவும் கரம்.

கைவாள் ஏந்தியவர், பெருவாள் ஏந்தியவர், வில் ஏந்தியவர் ஆகிய பலரும் புறத்து நின்று காக்கின்ற, புகழையுடைய, நெய் முதலியவற்றை முகந்து சொரிகின்ற கைகளால் வளர்க்கப்படுகின்ற வேள்விகளின் முழக்கம் நீங்காத திருமுதுகுன்றத்தில் எழுந்தருளியிருப்பவரே! நீர், அடியவர்கள் பாடவும், தேவர்கள் துதிக்கவும் தலைவராய்த் திரிவீர்; ஆதலின், பழைமையான இல்லங்கள் தோறும் பிச்சைக்குச் செல்வது தகுதியோ?

438. இளைப்பறி யீரிம்மை யேத்து வார்க்கம்மை செய்வதென்
விளைப்பறி யாதவெங் கால னையுயிர் வீட்டினீர்
அளைப்பிரி யாவர வல்கு லாளொடு கங்கைசேர்
முளைப்பிளைச் சென்னிச் சடைமு டிமுது குன்றரே. 4

அளை – புற்று

தன் செயல் விளைப்பதறியாது வந்த கொடிய இயமனை உயிர்போக்கியவரே! புற்றினின்றும் நீங்காத பாம்பின் படம் போலும் அல்குலையுடைய உமையோடு கங்கையும் பொருந்திய, இளைய பிறையையுடைய, தலைக்கண் உள்ள சடைமுடியையுடைய, திருமுதுகுன்றத்தில் எழுந்தருளியிருப்பவரே! இப்பிறப்பில் உம்மைப் போற்றுகின்றவர்களது தளர்ச்சியை நினைக்கமாட்டீர்; வரும் பிறப்பில் நீர் அவர்கட்குச் செய்வது என்ன இருக்கின்றது?

| | |
|---|---|
| **439.** ஆடி யசைந்தடி யாரும் நீரும் அகந்தொறும்<br>பாடிப் படைத்த பொருளெ லாமுமை யாளுக்கோ<br>மாட மதிலணி கோபு ரம்மணி மண்டபம்<br>மூடி முகில்தவழ் சோலை சூழ்முது குன்றரே. 5 | மாடங்கள்மேலும், மதில்மேலும், அழகிய கோபுரங்கள் மேலும், மணிமண்டபங்கள் மேலும், மேகங்கள் மூடிக்கொண்டு தவழ்கின்ற, சோலை சூழ்ந்த திருமுதுகுன்றத்தில் எழுந்தருளியிருப்பவரே! அடியாரும் நீருமாகச் சென்று இல்லந்தோறும் ஆடியும், பாடியும் வருந்திச் சேர்த்த பொருள்களெல்லாம், உம் தேவிக்கு மட்டில்தான் உரியனவோ? எம் போல்வார்க்குச் சிறிதும் உரியது இல்லையோ? |
| **440.** இழைவளர் நுண்ணிடை மங்கை யோடிடு காட்டிடைக்<br>குழைவளர் காதுகள் மோத நின்று குனிப்பதே<br>மழைவள ருந்நெடுங் கோட்டி டைமத யானைகள்<br>முழைவள ராளி முழக்க றாமுது குன்றரே. 6<br><br>கோடு – மலைச்சிகரம். முழை – குகை. | மேகங்கள் மிகுந்த நீண்ட சிகரங்களிடையே மதத்தையுடைய யானைகளும், குகைகளில் வளர்கின்ற யாளிகளும் முழங்குதல் நீங்காத திருமுதுகுன்றத்தில் எழுந்தருளியிருப்பவரே! நீர், நூல் தங்கியுள்ளதுபோலும், நுட்பமான இடையினையுடைய மங்கையோடு இடுகாட்டின்கண், குழை பொருந்திய காதுகள் பக்கங்களில் மோதும்படி முற்பட்டு நின்று நடனமாடுவதோ? |
| **441.** சென்றி லிடைச்செடி நாய்கு ரைக்கச் சேடிச்சிகள்<br>மன்றி லிடைப்பலி தேரப் போவது வாழ்க்கையே<br>குன்றி லிடைக்களி றாளி கொள்ளக் குறத்திகள்<br>முன்றி லிடைப்பிடி கன்றி டும்முது குன்றரே. 7<br><br>ஆளி – சிங்கம் | குன்றில் களிற்றியானையைச் சிங்கம் உண்டுவிட, அதன் பிடியானையையும், கன்றையும் குறத்திகள் தங்கள் குடிலின் முன் கட்டிவைத்துக் காக்கின்ற திருமுதுகுன்றத்தில் எழுந்தருளியிருப்பவரே! நீர், பல இல்லங்களிலும் சென்று, அங்குள்ள இழிந்த நாய்கள் குரைக்க, தொழுத்திகள் தெருவில் வந்து இடுகின்ற அந்தப் பிச்சையை வாங்கச் செல்வது, மேற்கொள்ளத்தக்க வாழ்க்கையோ? |
| **442.** அந்தி திரிந்தடி யாரும்நீரும் அகந்தொறும்<br>சந்திகள் தோறும் பலிக்குச் செல்வது தக்கதே<br>மந்தி கடுவனுக் குண்பழம் நாடி மலைப்புறம்<br>முந்தி அடிதொழ நின்ற சீர்முது குன்றரே. 8<br><br>மந்தி – பெண் குரங்கு.<br>கடுவன் – ஆண் குரங்கு. உமது மலைவாழும் விலங்கினமும் அன்புச் செயல்கள் செய்தலால், நீர் உமக்கு அடிமைப்பட்ட வாழ்வுடைய எனக்கு ஈந்து அளிப்பது கடன் என்பது குறிப்பு. | பெண் குரங்கிற்கும், ஆண் குரங்கிற்கும் உண்ணுதற்குரிய பழங்களை அவைகள் தேடிக் கொண்டு மலைப்புறங்களில் முற்பட்டுச் சென்ற பொழுது அவைகள் கண்டு, அன்புகொண்டு வணங்குமாறு நின்றருளுகின்ற, புகழையுடைய திருமுதுகுன்றத்து இறைவரே! நீரும் அடியாருமாக இல்லந்தோறும், அந்தியிலும், சந்தியிலும் பிச்சைக்குச் சென்று திரிவது தக்கதோ? |

443. செட்டிநின் காதலி ஊர்கள் தோறும் அறஞ்செய
அட்டுமின் சில்பலிக் கென்ற கங்கடை நிற்பதே
பட்டிவெள் ளேறுகந் தேறு வீர்பரி சென்கொலோ
முட்டி அடிதொழ நின்ற சீர்முது குன்றரே. 9

உமது தேவி ஊர்தோறும் அறங்களெல்லாம் செய்யவும் நீர் பிச்சையேற்பது தகாது; ஆதலின் "நான் பலி ஏற்பவன்; உனக்குப் பொருள் தருதல் எவ்வாறு?" என்று கூறிக் கழித்தலும் தகாது என்பது குறிப்பு. முட்டி – சார்ந்து

யாவரும் எதிர்வந்து அடிவணங்க நிற்கின்ற, புகழையுடைய திருமுதுகுன்றத்து இறைவரே! அளவறிந்து வாழ்பவளாகிய உம் மனைவி, ஊர்கள்தோறும் அறம் வளர்க்க, நீர், இல்லங்களில் வாயில்தோறும் சென்று 'இடுமின்' என்று இரந்து, சிலவாகிய பிச்சைக்கு நிற்றல் பொருந்துமோ? கட்டுள் நில்லாத வெள்ளிய எருது ஒன்றை விரும்பி ஏறுவீராகிய உமது தன்மைதான் என்னோ?

444. எத்திசை யுந்திரிந் தேற்றக் காற்பிறர் என்சொலார்
பத்தியி னால்இடு வாரி டைப்பலி கொள்மினோ
எத்திசை யுந்திரை யேற மோதிக் கரைகள்மேல்
முத்திமுத் தாறு வலஞ்செய் யும்முது குன்றரே.
10

திருமணி முத்தாறு எல்லாத் திசைகளிலும் திரைகளால் நீரினை வீசிப்புக்குவளம் செய்யினும், முதுகுன்றத்தில் சிறப்பாகக் கரைகளின்மேல் முத்தி வலஞ்செய்து வழிபடும் என்பது, உமது ஆறுதானும் இவ்வாறு செய்தால் அது போல் நீரும் செய்ய வேண்டும் என்ற குறிப்பை உள்ளடக்கியது. தமக்கு சிறப்பாக அருள்புரிய வேண்டுகிறார்.

எப்பக்கங்களிலும் அலைபுரண்டு செல்லும்படி இரு கரைகளின்மேலும் மோதுகின்ற முத்தியைத் தருகின்ற முத்தாறு வலம் சூழ்ந்து செல்கின்ற திருமுதுகுன்றத்து இறைவரே! ஒன்றையும் நீக்காது எல்லா இடங்களிலும் திரிந்து பிச்சை ஏற்றால், பிறர் என்ன சொல்ல மாட்டார்கள்? ஆகையால், அன்போடு இடுகின்றவர் இல்லத்தில் மட்டும் சென்று பிச்சை வாங்குமின்.

445. முத்திமுத் தாறு வலஞ்செ யும்முது குன்றரைப்
பித்தனொப் பான்அடித் தொண்ட னூரன்
பிதற்றிவை
தத்துவ ஞானிக ளாயி னார்தடு மாற்றிலார்
எத்தவத் தோர்களும் ஏத்து வார்க்கிட ரில்லையே.
11

முத்தியைத் தருகின்ற முத்தாறு வலமாகச் சூழ்ந்து ஓடுகின்ற திருமுதுகுன்றத்து இறைவரை, அவர் திருவடிக்குத் தொண்டனாய் உள்ள, பித்துக்கொண்டவன் போன்ற நம்பியாரூரன் பிதற்றி இப்பாடல்களை, தத்துவஞானிகளாயினும், பிறழாத உள்ளத்தை உடைய அன்பர்களாயினும், எத்தகைய தவத்தில் நிற்பவராயினும் பாடுகின்ற வர்களுக்கு, துன்பம் இல்லையாகும்.

மனக் கருத்தைப் புலப்படுத்தாது வேறு வகையால் கூறுதலின் பித்தன் – பிதற்று என்றார்.

பித்தனொப்பான் – அடிமைத் திறத்தினிற் பித்துக் கொண்டவன். தத்துவஞானிகள் – நூல்களின் வழித் தத்துவத்தை நன்குணர்ந்தவர். தடுமாற்றிலார் – ஞானத்தின் முதிர்ச்சியால் இறைவனையன்றி வேறொரு பொருளை பொருள் என்று எண்ணாதவர்.

தவத்தோர் – தத்துவ ஞானம் பெற முயல்பவர்.

## 44. பொது

**(முடிப்பது கங்கை)**

சேரர் பெருமானுடன் சுந்தரர், ஐயாற்றிறைவரைத் தொழுது பல தலங்களையும் வணங்கிக் கொண்டு கொங்கு நாட்டைக் கடந்து மலைநாடு சென்று சேரமான் பெருமானது தலைநகரமாகிய கொடுங்கோளூரை யடைந்து அவருடன் திருவஞ்சைக்களத்திறைவரை வணங்கிப் பாடியருளியது இத்திருப்பதிகம். (தி. 12 பெரிய புரா. கழறிற். புரா. 146)

**குறிப்பு :** இத்திருப்பதிகம், தொடக்கத்தாற் பெயர் பெற்றது. பொதுவாக அருளிச் செய்யப் பெற்றதாயினும், திருவஞ்சைக்களத்துப் பெருமான் திருமுன்பில் அருளிச்செய்தது என்பதனை, இதன் வரலாற்றால் உணர்க. இது, சிவபிரானது தன்மையை ஆராயும் முறையில் அருளிச் செய்தது. ஓகாரங்கள், தெரிநிலை. இனிச் சிறப்பாகக் கொண்டு, இவை எம்பெருமானது இயல்புகள் என இசையெச்சம் வருவித்துரைத்தலுமாம்.

தலவிசேடம் – திருவஞ்சைக்களம் – மலைநாட்டுள்ள ஒரு தனிப்பதி; சேர மன்னர் தலைநகராகிய கொடுங்கோளூரும் இப்பதியுள் சேர்த்துக் கொடுங் கோளூரஞ்சைக்களம் என்று வழங்கப்படும். தேவாரங்களிலும் பார்க்க. கொடுங்கோளூர் மகோதை எனவும் வழங்கும், அது சேரமன்னரது தலைநகரம். அதில் அவர்களது அரண்மனையுண்டு. அங்குத் தேவார வைப்புத் தலமாகிய சிவன்கோயிலும் உண்டு. அக்கோயிலில் சிவன் சந்நிதிக்குத் தென்கிழக்கில் சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குக் கட்டிய கோயில் உள்ளது. கொடுங்கோளூர்ப் பகவதி என்று விளக்கமாய் அறியப்படுவது. திருவஞ்சைக்களம் சேரமன்னரது வழிபாட்டுத் தலம். சேரமான் பெருமாள்நாயனார் முடிசூடுமுன் இளவரசராயிருந்தபோது அரண்மனையில் தங்காது இங்கு வந்து தங்கி இறைவருக்குச் சரியைத் திருத்தொண்டு செய்திருந்தனர். அந்த இடம் சேரமான் பறம்பு என்று வழங்கப்பட்டு, அரசாங்கத்தாரால் நினைவுத்தூண் நிறுவி எல்லை வகுத்துப் பாதுகாக்கப்பட்டு வருகிறது. அது திருக்கோயிலின் தெற்குக் கடற்கரைக்குப் போகும் குலசேகரபுரம் கற்காலையில் 1/2 நாழிகையளவில் உள்ளது. பரசுராமர் தம் தாயையும் உடன் பிறந்தார்களையும் கொன்ற பழி நீங்கப் பூசித்தபதி; ஆளுடைய நம்பிகள் இங்கு முத்தி விண்ணப்பம் செய்யக் கயிலையினின்றும் இறைவர் இந்திரன் மால் பிரமன் முனிவரர் முதலியவர்களுடன் அனுப்பிய வெள்ளையானை மீது கயிலைக்குச் சென்று, வழியிற் பாடிய திருநொடித்தான்மலைத் தேவாரத்தை "அஞ்சை யப்பர்க் கறிவிப்பதே" என்ற அவரது ஆணையின்படி வருணராசனால் அறிவிக்கப்பட்ட பதி; நம்பிகள் யானையின்மீது கயிலைக்குச் செல்வது கண்ட சேரமான் பெருமாள் நாயனார் தமது குதிரையின் செவியிற் சிவமந்திரமோதி அதன்மீ திவர்ந்து ஆகாயவழி அவருடன் கயிலைக்குச் சென்ற பெருமையுடையது. இங்கு நம்பிகளும் சேரமான் பெருமாளும் ஒரே பீடத்தில் எழுந்தருளச் செய்து வழிபடப் பெறுகின்றார்கள். இவர்கள் கயிலைக்குச் சென்ற யானை குதிரைகளின் திருவுருவங்கள் கோபுரவாய்தலிற் றீட்டப்பட்டுள்ளன. சேரமான் பெருமாள் வழிபட்டு அவருக்குத் தினமும் பூசை முடிவிற் சிலம்பொலி கேட்பித்த கூத்தப்பெருமான் இங்கு எழுந்தருளியுள்ளார். சுவாமி – அஞ்சைக்களத்தப்பர்; அம்மை – உமையம்மை; மரம் – கொன்றை; தீர்த்தம் – சிவகங்கை; பதிகம் – 2.

பண் : கொல்லிக்கௌவாணம் | பதிக எண் : 44

446. முடிப்பது கங்கையுந் திங்களுஞ்
செற்றது மூவெயில்
நொடிப்பது மாத்திரை நீறெ
ழுக்கணை நூறினார்
கடிப்பதும் ஏறுமென் றஞ்சு
வன்திருக் கைகளால்
பிடிப்பது பாம்பன்றி இல்லை
யோஎம் பிரானுக்கே. 1

முடிப்பது – கங்கையினையும், பிறையினையும் சுற்றி முடிந்தது போலச் சூடுவது.

எம் பெருமான் தலையிற் சூடுவது கங்கையையும் சந்திரனையும்; அழித்தது மூன்று மதில்களை; அவற்றைக் கை நொடிக்கும் அளவில் சாம்பலாய்த் தோன்றுமாறு அம்பினால் அழித்தார். தனது வலிய திருக்கைகளால் பிடிப்பது பாம்பு; அது கடித்தவுடன், நஞ்சு தலைக்கேறும் என்று யான் எப்பொழுதும் அஞ்சுவேன்; இவை தவிர எம்பெருமானுக்கு வேறு பொருள்கள் இல்லையோ!

447. தூறன்றி யாடரங் கில்லை
யோசுட லைப்பொடி
நீறன்றிச் சாந்தமற் றில்லை
யோஇம வான்மகள்
கூறன்றிக் கூறாவ தில்லை
யோகொல்லைச் சில்லைவெள்
ளேறன்றி யேறுவ தில்லை
யோஎம் பிரானுக்கே. 2

தூறு – சுடலைக்களரி. கொல்லை – முல்லை நிலம். சில்லை – இழிவு – குறும்புத்தனம்

எம் பெருமானுக்கு, ஆடுகின்ற அரங்கு, காடன்றி வேறு இல்லையோ! சாந்து, சுடலைப் பொடியாகிய சாம்பலன்றி வேறு இல்லையோ! தனது திருமேனியில் ஒரு கூறாய் நிற்பது மலையரையன் மகளது கூறன்றி வேறு இல்லையோ! ஏறுவது, முல்லை நிலத்தில் உள்ள முரட்டுத் தன்மையுடைய வெள்ளை எருதன்றி வேறு இல்லையோ!

448. தட்டெனுந் தட்டெனுந் தொண்டர்
காள்தடு மாற்றத்தை
ஒட்டெனும் ஒட்டெனு மாநி
லத்துயிர் கோறலைச்
சிட்டன் திரிபுரஞ் சுட்ட
தேவர்கள் தேவனை
வெட்டெனப் பேசன்மின் தொண்டர்
காள்எம் பிரானையே. 3

உயிர் கோறலை ஒழியுங்கள் என்று உபதேசித்து அருளியது.

மன அலைவையும், எல்லாப் பொருட்கும் நிலைக்களமாகிய பெரிய நிலத்தின்கண் உள்ள உயிர்களைக் கொல்லுதலையும், நன்னெறிக்குத் தடை என்று உணர்ந்த அடியவர்களே, மேலானவனும், திரிபுரத்தை எரித்த தேவதேவனும் ஆகிய எம்பெருமானை, வெறுத்துப் பேசன்மின். (அன்பு மிகுந்த நிலை)

| | |
|---|---|
| **449.** நரிதலை கவ்வநின் றோரி<br>கூப்பிட நள்ளிருள்<br>எரிதலைப் பேய்புடை சூழ<br>வாரிருட் காட்டிடைச்<br>சிரிதலைமாலை சடைக்க<br>ணிந்தஎஞ் செல்வனைப்<br>பிரிதலைப் பேசன்மின் தொண்டர்<br>காள்எம் பிரானையே. 4<br><br>நரி, ஓரி, பேய், இருட்காடு, சிரிதலை – ஈமப் பொருட்கள் | அடியவர்களே! நரிகள், இறந்தோரது தலைகளைக் கௌவி இழுக்க, கிழநரிகள் கூக்குரலிட, செறிந்த இருட்காலத்தில், நெருப்பு எரிகின்ற இடத்தில், பேய்கள் புடைசூழ்ந்திருக்க அரிய இருளையுடைய காட்டில், சிரிப்பது போலும் தலைமாலையைச் சடையின்கண் அணிந்த எம் செல்வனாகிய எம்பெருமானை, விட்டு நீங்குதற்குரிய சொற்களைப் பேசன்மின்! |
| **450.** வேயன தோளி மலைம<br>களைவி ரும்பிய<br>மாயமில் மாமலை நாட<br>னாகிய மாண்பனை<br>ஆயன சொல்லிநின் றார்கள்<br>அல்ல லறுக்கினும்<br>பேயனே பித்தனே என்ப<br>ரால்எம் பிரானையே. 5 | மூங்கில்போலும் தோள்களையுடையவளாகிய மலைமகளை விரும்புகின்ற, வஞ்சனை இல்லாத, பெரிய மலையிடத்தவனாகிய மாட்சியையுடைய எம்பெருமானை, தம்மால் இயன்றவைகளைச் சொல்லிப் புகழ்ந்து நின்றவரது துன்பங்களைக் களைதலைக் கண்டும், அவனைச் சிலர் 'அவன் பேயோடாடுபவன்; பித்துக் கொண்டவன்' என்று இகழ்வர்; எம்பெருமான், அவர் அங்ஙனம் இகழுமாறு இருத்தல் என்! |
| **451.** இறைவ னென்றெம் பெருமானை<br>வானவர் ஏத்தப்போய்த்<br>துறையொன் றித்தூ மலரிட்<br>டடியிணை போற்றுவார்<br>மறையன்றிப் பாடுவ தில்லை<br>யோமல்கு வானிளம்<br>பிறையன்றிச் சூடுவ தில்லை<br>யோஎம் பிரானுக்கே. 6 | தேவர் எம்பெருமானை இறைவன் என்று அறிந்து துதிக்கச்சென்று, நன்னெறியிற் பொருந்தி, தூய மலர்களைச் சொரிந்து அவன் அடியிணையைப் போற்றுவர்; அங்ஙனமாக, அவனுக்குப் பாடும் பாட்டு, மறைகளன்றி வேறு ஒன்றும் இல்லையோ! சூடும் கண்ணி, வானத்திற்செல்லும் இளம்பிறையன்றி, வேறு ஒன்றும் இல்லையோ! |
| **452.** தாருந்தண் கொன்றையுங் கூவி<br>ளந்தனி மத்தமும்<br>ஆரும் அளவறி யாத<br>ஆதியும் அந்தமும்<br>ஊரும்ஒன் றில்லை உலகெ<br>லாம்உகப் பார்தொழப்<br>பேரும்ஓ ராயிர மென்ப<br>ரால்எம் பிரானுக்கே. 7 | எம் பெருமானுக்கு, மாலையும், 'தண்ணிய கொன்றைப் பூ, கூவிளையிலை, மிகத் தாழ்ந்த ஊமத்தம்பூ' என்பன. அளவும், யாராலும் அறியப்படாத முதலும், முடிவும்; அன்பு செய்பவர் சென்று தொழுதற்கு ஊரும் ஒன்றாய் இல்லை; உலகம் முழுதுமாம். சொல்வதற்குப் பேரும் ஒன்றல்ல; ஓர் ஆயிரம் என்று சொல்லி யாவரும் நகைப்பர்; அவன் இவ்வாறிருத்தல் என்னோ! |

**453.** அரியொடு பூமிசை யானும்
ஆதியும் அறிகிலார்
வரிதரு பாம்பொடு வன்னி
திங்களும் மத்தமும்
புரிதரு புன்சடை வைத்த
எம்புனி தற்கினி
எரியன்றி அங்கைக்கொன் றில்லை
யோஎம் பிரானுக்கே. 8

கீற்றுக்களையுடைய பாம்போடு, 'வன்னி, ஊமத்தை, பிறை' என்பவைகளை, புரித்த புல்லிய சடையில் வைத்துள்ள எம் புனிதனாகிய எம்பெருமானை, திருமாலும், பூமேல் இருப்பவனாகிய பிரமனும் அடியும் முடியும் அறியமாட்டார். பிறர் ஆர் அறிவார்! அங்கையில் ஏந்துவதற்கு நெருப்பன்றி அவனுக்கு வேறு இல்லையோ!

வரி – பாம்புகளின் உடலிற் காணப்படும் வரிகள்

**454.** கரிய மனச்சமண் காடி
யாடு கழுக்களால்
எரிய வசவுணுந் தன்மை
யோஇம வான்மகள்
பெரிய மனந்தடு மாற
வேண்டிப்பெம் மான்மதக்
கரியின் உரியல்ல தில்லை
யோஎம் பிரானுக்கே. 9

எம் பெருமானுக்கு கரிய மனத்தையுடைய கஞ்சியைக் குடிக்கின்ற, கழுமரங்கள்போலத் தோன்றுகின்ற சமணர்களால், மனம் எரிந்து இகழப்படுதல்தான் இயல்போ! மலையரையன் மகளாகிய தன் தேவியின் பெருமை பொருந்திய மனம் கலங்க வேண்டி, அவன் மதத்தையுடைய யானையினின்றும் உரித்த தோலல்லது போர்வை வேறு இல்லையோ!

**455.** காய்சின மால்விடை மாணிக்
கத்தெங் கறைக்கண்டத்
தீசனை ஊரன் எட்டோ
டிரண்டு விரும்பிய
ஆயின சீர்ப்பகை ஞானியப்
பனடித் தொண்டன்றான்
ஏசின பேசுமின் தொண்டர்
காள்எம் பிரானையே. 10

அடியவர்களே! காய்கின்ற சினத்தையுடைய, பெரிய விடையை ஏறுகின்ற எங்கள் மாணிக்கம் போல்பவனும், கருப்புநிறத்தை யுடைய கண்டத்தையுடைய இறைவனும் ஆகிய பெருமானை, அவன் அடித்தொண்டனும், மிக்க புகழையுடைய வனப்பகைக்கு ஞானத் தந்தையும் ஆகிய நம்பியாரூரன் விரும்பிப் பாடியனவும், ஏசிப் பாடியனவும் ஆகிய இப்பத்துப் பாடல்களால், எம் பெருமானைப் பாடுமின்.

மால்விடை – திருமாலாகிய விடை

## 45. திருவாமாத்தூர்

பண் : கொல்லிக்கௌவாணம் பதிக எண் : 45

இப்பதிகம் சுவாமிகள் இறைவர்பால் தமக்குள்ள அன்பின் மிகுதியைப் புலப்படுத்து அருளிச் செய்தது. சிவயோக நிலையிற் பிரியாது இறைவருடன் கூடிநின்ற நிலை குறித்தது. திருவொற்றியூர்ச் சரித நிகழ்ச்சியுள்ளும் திருவருளே நிகழக்கண்டு நின்ற நிலையும் குறிப்பு. இப்பதிகம் மிக அருமையான சிவயோகம் பற்றிய பெரும்பொருள்களை உடையது.

| மூர்த்தி | அருள்தரும் அழகியநாயகி உடனமர் அருள்மிகு அழகுநாதர். | | |
|---|---|---|---|
| தல இருப்பிடம் | நடுநாட்டில் பம்பையாற்றின் வடகரையில் விழுப்புரம் – சூரப்பட்டு நெடுஞ்சாலையில் 9 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| தல மரம் | வன்னி | | |
| தீர்த்தம் | கம்பாநதி, ஆம்பலம் பூம்பொய்கை (பம்பையாறு) | | |
| பாடியவர் | மூவர் | பதிகங்கள் | 5 |

456. காண்டனன் காண்டனன் காரிகை
யாள்தன் கருத்தனாய்
ஆண்டனன் ஆண்டனன் ஆமாத்
தூர்எம் மடிகட்காட்
பூண்டனன் பூண்டனன் **பொய்யன்று**
**சொல்லுவன் கேண்மின்கள்**
மீண்டனன் மீண்டனன் வேதவித்
தல்லா தவர்கட்கே. 1

அடியேன், திருவாமாத்தூரில் எழுந்தருளியுள்ள எம் தலைவனை, உமையம்மைக்குக் கணவனாகக் கண்டேன்; அவனுக்கு அடிமை பூண்டேன்; அடிமையைப் பலகாலும் செய்தேன்; இவை பொய்யல்ல; இன்னும் சொல்லுவேன்; கேண்மின்; வேத நெறியைப் போற்றுவோரல்லாதவர்களை நீங்கினேன்.

கண்டனன் என்பது நீட்டலாயிற்று. கருத்தன் – தலைவன்

457. பாடுவன் பாடுவன் பார்ப்பதி
தன்னடி பற்றிநான்
தேடுவன் தேடுவன் திண்ணெனப்
பற்றிச் செறிதர
ஆடுவன் ஆடுவன் ஆமாத்
தூர்எம் மடிகளைக்
கூடுவன் கூடுவன் குற்றம
தற்றென் குறிப்பொடே. 2

யான், இவ்வுலகிற்குத் தலைவனாகிய, திருவாமாத்தூரில் எழுந்தருளியுள்ள எம் இறைவனை, அவனது திருவடியைக் கருதிப் பாடுவேன்; உறுதியாகப் பற்றி அணைத்தற்குத் தேடுவேன்; தேடிக்கண்டு, என் கருத்தின் வண்ணம் குற்றம் நீங்கிக் கூடுவேன்; கூடிய களிப்பினால் ஆடுவேன்.

பாருக்குப்பதி – பார்ப்பதி. கூடுவன் – சிவயோகநிலை. குறிப்பு – மனத்தினுள் தியான உறைப்பைப் பற்றிய குறிக்கோள்.

458. காய்ந்தவன் காய்ந்தவன் கண்ணழ
லாலன்று காமனைப்
பாய்ந்தவன் பாய்ந்தவன் பாதத்தி
னாலன்று கூற்றத்தை
ஆய்ந்தவன் ஆய்ந்தவன் ஆமாத்
தூர்எம் மடிகளார்
ஏய்ந்தவன் ஏய்ந்தவன் எம்பி
ராட்டியைப் பாகமே. 3

திருவாமாத்தூரில் எழுந்தருளியிருக்கின்ற எம் தலைவன், அன்று காமனைத் தனது நெற்றிக் கண்ணில் உள்ள நெருப்பால் எரித்தவன்; அன்று, கூற்றுவன்மேற் காலாற் பாய்ந்து அவனை அழித்தவன்; எல்லாவற்றையும் நன்குணர்ந்தவன்; எம்பெருமாட்டியை ஒரு பாகத்தில் ஆரப்பொருந்தியவன்.

ஆய்ந்தவன் – என்னால் உள்ளே ஆராய்ந்த இடத்துத் தெளியப்பட்டவன்.

459. ஓர்ந்தனன் ஓர்ந்தனன் உள்ளத்துள்
ளேநின்ற ஒண்பொருள்
சேர்ந்தனன் சேர்ந்தனன் சென்று
திருவொற்றி யூர்புக்குச்
சார்ந்தனன் சார்ந்தனன் சங்கிலி
மென்றோள் தடமுலை
ஆர்ந்தனன் ஆர்ந்தனன் ஆமாத்
தூர்ஐயன் அருளதே. 4

யான், என் உள்ளத்துள்ளே நிலை பெற்றுள்ள ஒளியுடைய பொருளை ஆராய்ந்தறிந்தேன்; அவ்வறிவின் வழியே சென்று அதனைத் தலைப்பட்டேன்; இனி, வெளியே, திருவொற்றியூரிற் புகுந்து, 'சங்கிலி' என்பாளது மெல்லிய தோளையும், பெரிய தனங்களையும் பொருந்தினேன். இவ்விருவாற்றானும், இருவகை இன்பத்தையும் நிரம்ப நுகர்ந்தேன்; இது, திருவாமாத்தூரில் எழுந்தருளி யிருக்கின்ற தலைவனது திருவருள்.

ஓர்த்தனன்... ஒண்பொருள் – சிவராஜயோகம் ஆர்தல் – நிறைவுபெற வினைப்போகம் நுகர்தல்.

460. வென்றவன் வென்றவன் வேள்வியில்
விண்ணவர் தங்களைச்
சென்றவன் சென்றவன் சில்பலிக்
கென்று தெருவிடை
நின்றவன் நின்றவன் நீதி
நிறைந்தவர் தங்கள்பால்
அன்றவன் அன்றவன் செய்யருள்
ஆமாத்தூர் ஐயனே. 5

திருவாமாத்தூரில் எழுந்தருளியிருக்கின்ற தலைவன், தக்கன் வேள்வியில் எல்லாத் தேவர்களையும் வென்றவன்; சிலவாகிய பிச்சைக்கென்று தெருவிற் சென்றவன்; நீதியிற் சிறிதும் குறையாதவரிடத்தில் நிலைபெற்று நின்றவன்; தன்னை அடைந்தார்க்கு அடைந்த அன்றே அருள்செய்தல், ஆகின்றவன்.

461. காண்டவன் காண்டவன் காண்டற்
கரிய கடவுளாய்
நீண்டவன் நீண்டவன் நாரணன்
நான்முகன் நேடவே
ஆண்டவன் ஆண்டவன் ஆமாத்
தூரையும் எனையுமாட்
பூண்டவன் பூண்டவன் மார்பிற்
புரிநூல் புரளவே. 6

திருவாமாத்தூரில் எழுந்தருளியுள்ள தலைவன், தன் அடியவர்கட்கு எளிதில் காணப்பட்டவன்; திருமாலும் பிரமனும் தேட, அவர்களால் காணுதற்கரிய கடவுளாய் நீண்டவன்; ஆமாத்தூரையும் ஆண்டவன்; என்னையும் ஆளாக வைத்து ஆண்டவன்; மார்பில் முப்புரி நூலைப் புரளப் பூண்டவன்.

ஆமாத்தூரை விரும்பி வீற்றிருத்தல் போலவே என் நெஞ்சையும் இடமாகக் கொண்டு என்னை ஆளாக ஏற்றவர். நேடல் – தேடுதல்.

| பாடல் | உரை |
| --- | --- |
| **462.** எண்ணவன் எண்ணவன் ஏழுல<br>கத்துயிர் தங்கட்குக்<br>கண்ணவன் கண்ணவன் காண்டும்என்<br>பாரவர் தங்கட்குப்<br>பெண்ணவன் பெண்ணவன் மேனியொர்<br>பாகமாம் பிஞ்ஞகன்<br>அண்ணவன் அண்ணவன் ஆமாத்<br>தூர்எம் மடிகளே. 7 | திருவாமாத்தூரில் எழுந்தருளியிருக்கின்ற எம் தலைவன், ஏழுலகத்திலும் உள்ள உயிர்கட்குக் கருத்தாய் உள்ளவன்; தன்னை, 'காண்போம்' என்று அன்பால் முயல்கின்றவர்கட்குக் கண்ணாய் உள்ளவன்; திருமேனி ஒரு பாகம் பெண்ணாகியவன்; பொருந்திய தலைக்கோலத்தை உடையவன்; அடையத் தக்கவன். |
| **463.** பொன்னவன் பொன்னவன் பொன்னைத்தந்<br>தென்னைப்போ கவிடா<br>மின்னவன் மின்னவன் வேதத்தி<br>னுட்பொரு ளாகிய<br>அன்னவன் அன்னவன் ஆமாத்தூர்<br>ஐயனை ஆர்வத்தால்<br>என்னவன் என்னவன் என்மனத்<br>தின்புற் றிருப்பனே. 8 | திருவாமாத்தூரில் எழுந்தருளியுள்ள தலைவன், அடியார்களுக்குப் பொன்போல்பவனாய் உள்ளவன்; பொன்னைக் கொடுத்து என்னைத் தன்னினின்றும் நீங்கவொட்டாது பிணித்துக் கொண்ட ஒளிவடிவினன்; வேதத்தின் உட்பொருளாய் உள்ள அத்தன்மையை உடையவன்; எனக்கு உரிமையுடையவன்; அவனை, யான் என்மனத்தில் அன்பால் நினைந்து இன்பமுற்றிருப்பேன். |
| **464.** தேடுவன் தேடுவன் செம்மலர்ப்<br>பாதங்கள் நாள்தொறும்<br>நாடுவன் நாடுவன் நாபிக்கு<br>மேலேயொர் நால்விரல்<br>மாடுவன் மாடுவன் வன்கை<br>பிடித்து மகிழ்ந்துளே<br>ஆடுவன் ஆடுவன் ஆமாத்<br>தூர்எம் மடிகளே. 9<br><br>மாடுதல் – சேரச் செய்தல். | யான், திருவாமாத்தூரில் எழுந்தருளியுள்ள எம் தலைவனது திருவடிகளை நாள்தோறும் தேடுவேன்; அவனை, உந்திக்குமேல் நால்விரல் அளவில் உள்ள இருதயத்தில் யோகத்தில் உருத்திர மூர்த்தியை நினைப்பேன்; வெளியில் சென்றால் வலிய கையால் பிடித்து, மகிழ்ந்து உள்ளே சேர்ப்பேன்; அவனுக்கு ஏற்புடையன ஆகும்படி கூத்துக்களை ஆடுவேன். |
| **465.** உற்றனன் உற்றவர் தம்மை<br>ஒழிந்துள்ளத் துள்பொருள்<br>பற்றினன் பற்றினன் பங்கயச்<br>சேவடிக் கேசெல்ல<br>அற்றனன் அற்றனன் ஆமாத்தூர்மேயான்<br>அடியார் கட்காள்<br>பெற்றனன் பெற்றனன் பெயர்த்தும்<br>பெயர்த்தும்பிற வாமைக்கே. 10 | யான், மீட்டும் மீட்டும் பிறவாமைப் பொருட்டு, உற்றாரை நீங்கி, உள்ளத்தில் உள்ள பொருளை அடைந்தேன்; திருவாமாத்தூரில் எழுந்தருளி யிருக்கின்ற இறைவனது, தாமரை மலர் போலும் செவ்விய திருவடியிடத்தே செல்ல அவற்றைத் துணையாகப் பற்றினேன்; அதனால் துன்பங்கள் நீங்கப் பெற்றேன்; அதன்பின், அவன் அடியவர்க்கு அடியனாகும் பேற்றையும் பெற்றேன். |

ஆ – பசு. பசுக்களுக்குத் தாயாக இருந்து இறைவன் அருளும் தலம். பசு – அனைத்து உயிர்த்தொகுதி

466. ஐயனை அத்தனை ஆளுடை
ஆமாத்தூர் அண்ணலை
மெய்யனை மெய்யர்க்கு மெய்ப்பொரு
ளான விமலனை
மையனை மையணி கண்டனை
வன்றொண்ட னூரன்சொல்
பொய்யொன்று மின்றிப் புலம்புவார்
பொற்கழல் சேர்வரே. 11

புலம்பல் – அன்பு மேலீட்டால் ஆனந்தக் கண்ணீர் வார வாய் குழறிப் போற்றுதல்.

யாவர்க்கும் தலைவனும், தந்தையும், என்றும் உள்ளவனும், மெய்ம்மையான உள்ளம் உடையவர்க்கு அநுபவப்பொருளாய் விளங்குகின்ற தூயவனும், திருவருள் மேகமானவனும், மைபோலும் அழகிய கண்டத்தை உடையவனும் ஆகிய திருவாமாத்தூரை ஆளுதலுடைய இறைவனை, வன்றொண்டனாகிய நம்பியாரூரன் பாடிய பாடல்களை, வஞ்சனை சிறிதும் இன்றிப் பாடுகின்றவர், அப்பெருமானது பொன்போலும் திருவடிகளை அடைவர்.

## 46. திருநாகைக்காரோணம்

**பண் : கொல்லிக்கௌவாணம்** பதிக எண் : 46

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் நீலாயதாட்சி உடனமர் அருள்மிகு காயாரோகணேசர் | | |
| **தல இருப்பிடம்** | சோழநாட்டில் காவிரி தென்கரையில் நாகப்பட்டின நகர மையத்தில் அமைந்து உள்ளது. | | |
| **தல மரம்** | மா | | |
| **தீர்த்தம்** | புண்டரீக தேவ தீர்த்தம் | | |
| **பாடியவர்** | மூவர் | **பதிகங்கள்** | 7 |

467. பத்தூர்ப் புக் கிரந்துண்டு பலபதிகம் பாடிப்
பாவையரைக் கிறிபேசிப் படிறாடித் திரிவீர்
செத்தார்தம் எலும்பணிந்து சேவேறித் திரிவீர்
செல்வத்தை மறைத்துவைத்தீர்
எனக்கொருநாள் இரங்கீர்
முத்தாரம் இலங்கிமிளிர் மணிவயிரக் கோவை
யவைபூணத் தந்தருளி மெய்க்கினிதாநாறும்
கத்தூரி கமழ்சாந்து பணித்தருள வேண்டும்
கடல்நாகைக் காரோண மேவியிருந் தீரே. 1

நாகப்பட்டினம் என்பது நாகை எனவும், காயாரோகணம் என்பது காரோணம் எனவும் மருவின.
காயாரோகணம் – கோயிலின் பெயர்.
பத்து – பல என்னும் பொருள் பற்றிய எண் குறிப்புடன் நின்றது. பத்து ஊர் – பலவூர். பதிகம் – கீதங்கள்
பத்தூர்.... திரிவீர் – பிச்சாடனக் கோலம்.
முத்தாரம் முதலியன இன்பானுவப் பொருள்கள்; இவற்றால் இன்பம் பெற நின்றவர் அல்லர் சுந்தரர். ஆனால் மணக்கோலத்துடன் மண்மேல் விளையாட இவை தேவை. கிறிபேசி – பரிகாச வார்த்தைகள் பேசி. படிறு – வஞ்சனை.

கடற்கரைக்கண் உள்ள திருநாகைக் காரோணத்தில் விரும்பி எழுந்தருளி யிருப்பவரே! நீர், பலவூர்களிற் சென்று, பல பாமாலைகளைப் பாடி இரந்து உண்பீர்; அங்ஙனம் இரங்குங்கால், பிச்சைஇட வருகின்ற, பாவைபோலும் மகளிரோடு பொய்யான சொற்களைப் பேசிக் கரவு கொண்டு திரிவீர்; இறந்தவரது எலும்புகளை மேலே பூண்டுகொண்டு, எருதின்மேல் ஏறித்திரிவீர்; இவைகளைப் போலவே, உள்ள பொருளை மறைத்துவைத்து, என்பொருட்டு ஒரு நாளும் மனம் இரங்காது, ஏதும் இல்லை என்பீர்; இவையெல்லாம் உமக்குச் சிறிதும் ஒவ்வா; இப்பொழுது யான் அணிவதற்கு முத்தாரமும், மேற்பட்டு விளங்குகின்ற மாணிக்கமாலை, வயிரமாலைகளும் ஆகிய அவைகளைத் தந்து, உடம்பிற் பூசிக் கொள்வதற்கு, இனிதாக மணம் வீசுகின்ற கத்தூரியையும், அத்தகையதான சந்தனமும் நீர், தவிராது அளித்தருளல் வேண்டும்.

468. வேம்பினொடு தீங்கரும்பு விரவியெனைத் தீற்றி
விருத்திநான் உமைவேண்டத் துருத்திபுக்கங் கிருந்தீர்
பாம்பினொடு படர்சடைக ளவைகாட்டி வெருட்டிப்
பகட்டநான் ஒட்டுவனோ பலகாலும் உழன்றேன்
சேம்பினொடு செங்கழுநீர் தண்கிடங்கிற் றிகழுந்
திருவாரூர் புக்கிருந்த தீவண்ணர் நீரே
காம்பினொடு நேத்திரங்கள் பணித்தருள வேண்டுங்
கடல் நாகைக் காரோண மேவியிருந் தீரே. 2

வேம்பினோடு – துன்பானுபவத்தையும்.
இரும்பு – இன்ப அனுபவத்தையும்
தீற்றி – தின்ன / அனுபவிக்கச் செய்து.
"அடித்தடித்து வக்காரமுன் றீற்றிய
வற்புத மறியேனே" – திருவாசகம்
சேம்பு – ஒரு செடி. கிடங்கு – குளம்
பகட்ட – வெளிவேடம்

கடற்கரைக்கண் உள்ள திருநாகைக் காரோணத்தில் விரும்பி எழுந்தருளி யிருப்பவரே! நீர், என்னை, கைப்புடைய வேம்பினையும், தித்திப்புடைய கரும்பினையும் கலந்து உண்பித்து, நான், இங்கு உம்மிடம் எனக்குப் பிழைப்பை வேண்டிக் கொண்டிருக்க, நீர் என்முன் நில்லாது, திருத்துருத்தியில் புகுந்து, அங்கே இருந்துவிட்டீர்; இப்பொழுது உம்மைக் கண்டேன்; நீர் பாம்பும், விரிந்த சடைகளுமாகிய இவைகளைக் காட்டி என்னை வெருட்டிப் பெருமை அடைந்துவிட நினைத்தால் நான் அதற்கு ஒட்டுவேனோ! ஒட்டேன்; ஏனெனில், உம்பின் நான் பலகாலும் திரிந்துவிட்டேன்; நீர்ச்சேம்பும், செங்கழுநீரும், குளிர்ந்த அகழியில் விளங்குகின்ற திருவாரூரில் குடிபுகுந்திருக்கும் தீவண்ணராகிய நீர், இப்பொழுது எனக்கு 'காம்பு' என்றும், 'நேத்திரம்' என்றும் பெயர் சொல்லப்படும் பட்டாடை வகைகளை அளித்தருளல் வேண்டும்.

469. பூண்பதோர் இளவாமை பொருவிடைஒன் றேறிப்
பொல்லாத வேடங்கொண் டெல்லாருங் காணப்
பாண்பேசிப் படுதலையிற் பலிகொள்கை தவிரீர்
பாம்பினொடு படர்சடைமேல் மதிவைத்த பண்பீர்
வீண்பேசி மடவார்கை வெள்வளைகள் கொண்டால்
வெற்பரையன் மடப்பாவை பொறுக்குமோ சொல்லீர்
காண்பினிய மணிமாட நிறைந்தநெடு வீதிக்
கடல்நாகைக் காரோண மேவியிருந் தீரே. 3

வீண் – வீண் போலக் காட்டும் வார்த்தை.
பாண் – பிச்சை புகுவோர் பாட்டுப் பாடி இரக்கும் சொல்

விரிந்த சடையின்மேல் பாம்பையும், சந்திரனையும் வைத்த பெருமையுடையவரே! காண்பதற்கு இனிய மணிமாடங்கள் நிறைந்த நீண்ட தெருக்களையுடைய, கடற்கரைக்கண் உள்ள திரு நாகைக் காரோணத்தில் விரும்பி எழுந்தருளியிருப்பவரே! நீர், அணிந்த ஓர் இளைய ஆமையின் ஓட்டோடு, சிறப்பான எருது ஒன்றை ஏறி, விரும்புதல் இல்லாத வேடத்தைப் பூண்டு எல்லாருங் காண, இசைபாடி, இறந்தோரது தலையில் பிச்சை ஏற்றலை ஒழிய மாட்டீர்; அங்ஙனம் பிச்சை ஏற்குங்கால் பிச்சையைக் கொண்டொழியாது, வீண் சொற்களைப் பேசி, பிச்சையிட, வருகின்ற மகளிரது வெள்ளிய வளைகளைக் கவர்வீராயின், மலையரையன் மகளாகிய உம் தேவி மனம் பொறுப்பாளோ? சொல்லீர்.

470. விட்டதோர் சடைதாழ வீணைவிடங் காக
வீதிவிடை யேறுவீர் வீணடிமை யுகந்தீர்
துட்டரா யினபேய்கள் சூழநட மாடிச்
சுந்தரராய்த் தூமதியஞ் சூடுவது சுவண்டே
வட்டவார் குழல்மடவார் தம்மைமயல் செய்தல்
மாதவமோ மாதிமையோ வாட்டமெலாந் தீரக்
கட்டிஎமக் கீவதுதான் எப்போது சொல்லீர்
கடல்நாகைக் காரோண மேவியிருந்
தீரே. 4

விடங்கு – செயற்கையால் அழகு செய்யப்படாத.
வீண் அடிமை – கூலிபெறாத அடிமை.

கடற்கரைக்கண் உள்ள திருநாகைக் காரோணத்தில் விரும்பி எழுந்தருளி யிருப்பவரே! நீர் வீணாக அடிமைகளை வைத்துக் கொண்டீர்; மற்றும், அவிழ்த்துவிட்ட சடைகள் கீழே விழ, வீணை அழகுடையதாய் விளங்க, தெருவில் விடையை ஏறிச் செல்வீர்; கொடியனவாகிய பேய்கள் சூழ நடனமாடுதலை மேற்கொண்டு, அழகுடையவராய், மாசற்ற பிறையைச் சூடுவது அழகோ? அன்றியும் வட்டமாக முடிக்கப்படுகின்ற நீண்ட கூந்தலையுடைய மகளிரை மயக்குவதுதான் உமக்குப் பெரிய தவமோ? அல்லது பெருமையோ? இவையெல்லாம் எவ்வாறாயினும் ஆக; எங்கள் துன்பமெல்லாம் நீங்கும்படி எங்கட்குப் பொற்கட்டியைக் கொடுப்பது எப்போது? சொல்லீர்.

471. மிண்டாடித் திரிதந்து வெறுப்பனவே செய்து
வினைக்கேடு பலபேசி வேண்டியவ திரிவீர்
தொண்டாடித் திரிவேனைத் தொழும்புதலைக்
கேற்றுஞ்
சுந்தரனே கந்தமுதல் ஆடைஆ பரணம்
பண்டாரத் தேயெனக்குப் பணித்தருள
வேண்டும்
பண்டுதான் பிரமாண மொன்றுண்டே
நும்மைக்
கண்டார்க்குங் காண்பரிதாய்க் கனலாகி நிமிர்ந்தீர்
கடல்நாகைக் காரோண மேவியிருந் தீரே. 5

மிண்டு – தகாத சொற் செயல்கள்.
பண்டாரம் – சேமவைப்பு

அழகரே! கடற்கரைக்கண் உள்ள திருநாகைக் காரோணத்தில் விரும்பி எழுந்தருளி யிருப்பவரே! நீர், உமக்குத் தொண்டு செய்து திரிகின்ற என்னை அடிமையாக ஏற்றுக் கொண்டும் அருள் பண்ணாது வன்கண்மை கொண்டு திரிந்தும், வெறுக்கப்படும் செய்கைகளையே செய்தும், காரியக்கேடு பலவற்றைச் சொல்லியும், உம் மனம் வேண்டியவாறே திரிவீர்; உம்மை நான் எவ்வாறு அகப்படக் காணுதல் கூடும்! ஏனெனில், முன்னே உம்மை அங்ஙனம் யாரேனும் கண்டார் என்பதற்கு யாதேனும் பிரமாணம் உண்டோ! 'கண்டோம்' என்பார்க்கும், அடிமுடி காணுதல் அரிதாம்படி, நெருப்பாகியே நீண்டு நின்றீரல்லிரோ? அதனால், நும் இயல்பையெல்லாம் விடுத்து, உமது கருவூலத்திலிருந்து நறுமணம், ஆடை, ஆபரணம் முதலியவற்றை எனக்கு அளித்தருளல் வேண்டும்.

472. இலவவிதழ் வாயுமையோ டெருதேறிப் பூதம்
இசைபாட இடுபிச்சைக் கெச்சுச்சம் போது
பலவகம்புக் குழிதர்வீர் பட்டோடு சாந்தம்
பணித்தருளா திருக்கின்ற பரிசென்ன படிறோ
உலவுதிரைக் கடல்நஞ்சை அன்றமரர் வேண்ட
உண்டருளிச் செய்ததுமக் கிருக்கொண்ணா திடவே
கலவமயி லியலவர்கள் நடமாடுஞ் செல்வக்
கடல்நாகைக் காரோண மேவியிருந் தீரே. 6

"கடல் நாகைக் காரோண மேவியிருந்தீரே" என்பது பதிக மகுடமாகும்.
எச்சு – அதிகம். எச்சுச் சம்போது – முதிர்ந்த நண்பகல் – வெப்பம் மிகுந்த உச்சிக் காலத்து.

தோகையையுடைய மயில்போலுஞ் சாயலையுடைய மகளிர் நடனம் புரிகின்ற, செல்வத்தையுடைய கடற்கரைகண் உள்ள திருநாகைக்காரோணத்தில் விரும்பி எழுந்தருளியிருப்பவரே! நீர், இலவம்பூப்போலும் இதழ் பொருந்திய வாயையுடைய உமையவளோடு எருதின்மேல் ஏறிக்கொண்டு, பூதங்கள் இசையைப் பாட, பலரும் இடுகின்ற பிச்சைக்கு, வேள்வியை உடைய உச்சிப் பொழுதில் பல இல்லங்களில் புகுந்து திரிவீர்; ஆயினும், நீர் அன்று தேவர்கள் வேண்ட அசைகின்ற அலைகளையுடைய கடலில் தோன்றிய நஞ்சினை உண்டு அவர்களுக்கு அருள்செய்தது, அவர்தம் முறையீட்டைக் கேட்டு உமக்கு வாளா இருக்க வொண்ணாது கருணை மேலிட்டமையாலே; அங்ஙனமாக, இப்பொழுது எனக்குப் பட்டும், சாந்தும் பணித்தருளாதிருக்கின்ற தன்மை என்ன வஞ்சமோ!

473. தூசுடைய அகலல்குல் தூமொழியாள் ஊடல்
தொலையாத காலத்தோர் சொற்பாடாய் வந்து
தேசுடைய இலங்கையர்கோன் வரையெடுக்க அடர்த்துத்
திப்பியகீ தம்பாடத் தேரொடுவாள் கொடுத்தீர்
நேசமுடை அடியவர்கள் வருந்தாமை அருந்த
நிறைமறையோர் உறைவீழி மிழலைதனில் நித்தல்
காசருளிச் செய்தீர்இன் றெனக்கருள வேண்டுங்
கடல்நாகைக் காரோண மேவியிருந் தீரே. 7

தூசு – ஆடை. திப்பிய – இனிய.

கடற்கரைக்கண் உள்ள திருநாகைக் காரோணத்தில் விரும்பி எழுந்தருளி யிருப்பவரே! நல்லாடையை உடுத்த அகன்ற அல்குலையும், தூய மொழியையும் உடைய உம் தேவி உம்பால் கொண்ட ஊடலை நீர் தொலைக்க முயன்றும் தொலையாதிருந்த காலத்தில், நீர் சொல்ல, அதைக் கேட்டு வந்தவன் போல, ஒளியையுடைய இலங்கைக்கு அரசனாகிய இராவணன் வந்து உமது மலையைப் பெயர்க்க, அவனை முன்னர் ஒறுத்து, அவன் சிறந்த இசையைப் பாட, அவனுக்குத் தேரும், வாளும் கொடுத்தீர்; அதுவன்றி, பஞ்சத்தில் அன்புடைய அடியார்கள் பசியால் வாடுதல் இன்றி நன்கு உணவருந்தி இருக்குமாறு, மறையவர் நிறைந்த திருவீழிமிழலையில் நாள்தோறும் அன்று படிக்காசு அருளினீர்; அதுபோல, இன்று எனக்கு அருளல் வேண்டும்.

474. மாற்றமேல் ஒன்றுரையீர் வாளாநீ ரிருந்தீர்
வாழ்விப்பன் எனஆண்டீர் வழியடியேன் உமக்கு
ஆற்றவேல் திருவுடையீர் நல்கூர்ந்தீ ரல்லீர்
அணியாரூர் புகப்பெய்த வருநிதிய மதனில்
தோற்றமிகு முக்கூற்றில் ஒருகூறு வேண்டுந்
தாரீரேல் ஒருபொழுதும் அடியெடுக்க லொட்டேன்
காற்றனைய கடும்பரிமா ஏறுவது வேண்டுங்
கடல்நாகைக் காரோண மேவியிருந் தீரே. 8

அருநிதியம் – தொகுத்தற்கரிய தொகையான நிதியம். முக்கூறு – இறைவன், இறைவி, அடியார் மூவருக்கும் ஒவ்வொரு கூறு.
அடியவர் கூற்றை அடியார்கள் அனைவரோடும் பகிர்ந்து கொள்ள வேண்டும்.
மாற்றம் – பேச்சு, கடு – வேகம்.
வாளா – சும்மா/பேச்சற்று/செயலற்று. வழியடியேன்– பரம்பரை பரம்பரையாய் அடிமை.

கடற்கரைக்கண் உள்ள திருநாகைக் காரோணத்தில் விரும்பி எழுந்தருளியிருப்பவரே! யான் உமக்கு வழிவழியாக அடியேன்; அதுவன்றி, நீர் வலிந்து, என்னை, வாழ்விப்பேன் என்று சொல்லி அடிமை கொண்டீர்; மிக்க செல்வம் உடையீர்; வறுமையுடையீரும் அல்லீர்; ஆயினும், மறுமொழி ஒன்றும் சொல்லாது வாய் வாளாதிருக்கின்றீர்; அழகிய திருவாரூரிலே சேரும்படி நீர் சேர்த்து வைத்துள்ள மிக்க பொருட் குவியலில், எனக்கு வேண்டுவதாய் என் உள்ளத்தில் மிக்குத் தோன்றுகின்ற முக்கூற்றில் ஒருகூறு எனக்கு அளித்தருளல் வேண்டும்; அதனோடு ஏறிப் போவதற்கு, காற்றோடு ஒத்த விரைந்த நடையினையுடைய குதிரை வேண்டும்; இவைகளை அளியாதொழியின், உம்மை ஒருபொழுதும் அப்பால் அடியெடுத்து வைக்க ஒட்டாது, உம் திருவடிகளைப் பிடித்துக் கொள்வேன்.

475. **மண்ணுலகும் விண்ணுலகும் உம்மதே ஆட்சி**
மலையரையன் பொற்பாவை சிறுவனையுந் தேறேன்
எண்ணிலிஉண் பெருவயிறன் கணபதிஒன் றறியான்
எம்பெருமான் இதுதகவோ இயம்பியருள் செய்யீர்
திண்ணெனஎன் னுடல்விருத்தி தாரீரே யாகில்
திருமேனி வருந்தவே வளைக்கின்றேன் நாளைக்
கண்ணறையன் கொடும்பாடன் என்றுரைக்க வேண்டா
கடல்நாகைக் காரோண மேவியிருந் தீரே. 9

சிறுவன் – இளைய பிள்ளையாராகிய முருகப் பெருமான்.
ஒன்றறியான் – ஒன்றும் அறியான் என்பது ஏச்சுமொழி.
ஒன்றினாலும் – அறியப்படான் என்பது குறிப்பிற் போந்த புகழ் மொழி.
தேறேன் – தேறித்தெளிய எட்டாதவன்.

கடற்கரைக்கண் உள்ள திருநாகைக் காரோணத்தில் விரும்பி எழுந்தருளியிருப்பவரே! எம்பெருமானே! மண்ணுலகிலும், விண்ணுலகிலும் ஆட்சி உம்முடையதே நடைபெறுகின்றது. ஆதலின், நான் உம்மையுந் தெளிய மாட்டேன்; உம் தேவியாகிய மலையரையன் மகளையும், சிறுவனாகிய முருகனையும் தெளியமாட்டேன்; அளவின்றி உண்கின்ற பெருவயிற்றானாகிய கணபதி, தன் உணவையன்றி வேறொன்றையும் அறியானாகலின், அவனிடம் நான் சென்று எதனை வேண்டுவேன்? உம் குடிமுழுதும் இவ்வாறிருத்தல் தக்கதோ? சொல்லியருளீர்; இப்பொழுது உறுதியாக என் உடலிற்குப் பிழைப்பைத் தாரீரேயாகில், உம் திருமேனி வருந்தும்படி கட்டிப் பிடித்துக் கொள்வேன்; பின்பு, இவன் கண்ணோட்டம் சிறிதும் இல்லாதவன், கொடுமையுடையவன் என்று என்னை வெறுத்துரைக்க வேண்டா.

476. மறியேறு கரதலத்தீர் மாதிமையே லுடையீர்
மாநிதியந் தருவனென்று வல்லீராய் ஆண்டீர்
கிறிபேசிக் கீழ்வேளூர் புக்கிருந்தீர் அடிகேள்
கிறியும்மாற் படுவேனோ திருவாணை
யுண்டேல்
பொறிவிரவு நற்புகர்கொள் பொற்சுரிகை மேலோர்
பொற்பூவும் பட்டிகையும் புரிந்தருள
வேண்டும்
கறிவிரவு நெய்சோறு முப்போதும் வேண்டுங்
கடல்நாகைக் காரோண மேவியிருந்
தீரே. 10

நாகைக் காரோணத்து இறைவரைத் தொழுது பொற்பூணும், மணிப்பூணும், நவமணிகளும், ஆடை, சாந்தம், குதிரை, சுரிகை முதலியனவும் வேண்டியருளியது.

இம்மையிலும் சுவாமி அருள்புரிவார் என்பதற்கு இப்பதிகம் எடுத்துக்காட்டாகும்.

கிறிபேசி – மாயவார்த்தை கூறி. சுரிகை – உடைவாள்.

பொறிவிரவு – புள்ளிகளோடு கூடிய.

பட்டிகை – அரைக்கச்சு

மான் கன்று பொருந்திய கையை உடையவரே! தலைவரே! கடற்கரைக்கண் உள்ள திருநாகைக் காரோணத்தில் விரும்பி எழுந்தருளியிருப்பவரே! நீர், பெருமையோ மிக உடையீர்; மிக்க பொருட்குவையைத் தருவேன் என்று சொல்லி, வழக்கில் வல்லீராய் என்னை ஆட்கொண்டீர்; ஆனால், இப்பொழுது பொருள் இல்லீர் போல வஞ்சனைகள் பேசி, திருக்கீழ்வேளூரிற் போய்த் தங்கியிருக்கின்றீர்; உமது உறுதிமொழி எனக்கு உள்ளது என்றால், நான் உம்மால் வஞ்சிக்கப்படுவேனோ! படேன், இலச்சினை பொருந்திய, நல்ல அழகினைக் கொண்ட பொன்னாலாகிய உடைவாளும், தலையில் சூடிக்கொள்ளும் பொற்றாமரைப் பூவும், பட்டுக் கச்சும் எனக்கு அளித்தருளல் வேண்டும். அன்றியும், மூன்று பொழுதிலும், கறியும், சோறும், அவை இரண்டோடும் கலக்கின்ற நெய்யும் ஆகிய இவைகளும் வேண்டும்.

477. பண்மயத்த மொழிப்பரவை சங்கிலிக்கும் எனக்கும்
பற்றாய பெருமானே மற்றாரை யுடையேன்
உண்மயத்த உமக்கடியேன் குறைதீர்க்க வேண்டும்
ஒளிமுத்தம் பூணாரம் ஒண்பட்டும் பூவும்
கண்மயத்த கத்தூரி கமழ்சாந்தும் வேண்டுங்
கடல்நாகைக் காரோண மேவியிருந் தீரென்
றண்மயத்தால் அணிநாவல் ஆரூரன் சொன்ன
அருந்தமிழ்கள் இவைவல்லார்
அமருலகாள் பவரே. 11

மயம் – வடிவம்; தன்மை.

கண்மயத்த – கண்ணுக்கு இனிதாகிய.

அன்மயத்தால் – பொருந்தும் வகையால். (சமீபத்திலிருந்து)

அழகிய திருநாவலூரில் தோன்றிய நம்பியாரூரன், திருநாகைக் காரோணத்துப் பெருமானாரை அடுத்துநின்ற தன்மையால், அவரை, 'கடற்கரைக்கண் உள்ள திருநாகைக் காரோணத்தில் விரும்பி எழுந்தருளியிருப்பவரே! இசையின் வண்ணமேயாய் உள்ள சொற்களையுடைய பரவை சங்கிலி என்னும் இருவருக்கும், எனக்கும் சார்பாய் உள்ள பெருமானே! யான் உம்மையன்றி வேறு யாரைச் சார்பாக உடையேன்? உமக்கு நெஞ்சறிந்த வண்ணமே பூண்ட அடிமையையுடையேனாகிய என்குறையை நீக்கியருளல் வேண்டும்; ஒளியையுடைய முத்துக்களால் ஆக்கி அணிகின்ற மாலையும், ஒள்ளிய பட்டாடையும், பூவும், கண் நோக்கு நிறைந்த கத்தூரியின் மணம் கமழ்கின்ற, சந்தனமும் வேண்டும்' என்று வேண்டிப் பாடிய, அரிய தமிழ்ப் பாடல்களாகிய இவைகளைப் பாட வல்லவர்கள், அமரர் உலகத்தை ஆள்வார்கள்.

## 47. பொது (ஊர்த்தொகை)

(பல சிவத்தலங்களது தொகுதியை உடைய பதிகம்)

பண் : பழம்பஞ்சுரம் பதிக எண் : 47

இது குறிஞ்சிப் பெரும்பண்ணின் மூன்றாவது திறமாகிய பஞ்சுரத்தில் புறநிலைப் பண்ணாக எண் 46 பெற்று வருகிறது. இப்பண்ணைச் சங்கராபரண இராகத்தில் பாடுவதே வழக்கு. இதன் சுவை மருட்கை, அவலம். இப்பண்ணில் மூவரும் பாடியிருக்கிறார்கள். சம்பந்தர் 3:100 – 116; அப்பர் 4:14–15; சுந்தரர் 47–53 ஆக மொத்தம் 26 பதிகங்கள். சம்பந்தர் "ஞாலம் நின்புகழே மிகவேண்டும்" என்ற பதிகம் "உற்றுமை சேர்வது மெய்யினையே" என்ற திருவியமகம், மடக்கு, அப்பர் "பாவநாசத் திருப்பதிகமான பற்றற்றோர் சேர் பழம்பதியை" என்பது, சுந்தரர் ஊர்த்தொகை "காட்டுர்க்கடலே", நமசிவாயப் பதிகமாகிய மற்றுப் பற்றெனக்கின்றி, ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதாய் என்னுடைய தோழனுமாய் என்ற பாடலுடைய பத்திமையும் அடிமையையும் என்ற பதிகம் திருவாலங்காட்டுப் பதிகம் ஆகியன இப்பண்ணில் அமைந்தவை.

இனி, சேக்கிழார் "துஞ்சவருவாரும் தொழுவிப்பாரும்" என்ற திருவாலங்காட்டுப் பதிகத்தை "துஞ்ச வருவார் என்றெடுத்துப் பஞ்சுரமாம் பழைய கரம் கிழமைகொளப் பாடினார்" என்று கூறுகிறார். அப்பதிகம் அவர்களிடத்தில் பழம்பஞ்சுரமாக இருந்திருக்க வேண்டும். எப்படியோ மாறி உமாபதி திருமுறைகண்ட புராணத்தில் பண்களைக் கூறுமிடத்துப் பண் மாறி, தக்கராகப் பண்ணாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது.

'பஞ்சுரம் பாடி வண்டி யாழ் முரலும் பரிதிந்நியமமே' என்று மூன்றாம் திருமுறையில் 3915–வது பாடலில் திருஞானசம்பந்தர் பதிவு செய்கிறார். பஞ்சுரம் என்னும் தொடும் பாலையைப் பழமையாக்கி (இல்லாமற் செய்து) பூவும், கனியும், நிழலும் மலிந்த சோலையாம் நிலையை சீர்வகையின் பண்ணிற்பாடி விளக்குவது பழம் பஞ்சுரம் என்னும் பண்ணின் பாங்காம்.

### பழம்பஞ்சுரப் பண் இலக்கணம்

பரவலாகப் பரந்து கிடந்து
வெம்மை மிக்கீயும் வெஞ்சுரமான
பஞ்சுரத்தன்மை படரும் வண்ணம்
பூவும் நிழலும் பொருந்த நின்றும்
சார்தரு தாரியிற் றாபந் தணியக்
கனியும் ஈந்து கவின்பெற நின்றும்
பஞ்சுரம் பழமைபடச் சாதாரிச்
சீர்பெற வந்த திறமும் யாழ்முகம்
அவ்வாறாக அமையவும் வந்ததிப்
பழம்பஞ்சுரச் சாதாரி யாம்பண்

### பொருள்

பஞ்சுரம் என்பது மிகவும் வெப்பந்தரும் பாலை நிலமாகும். பஞ்சு பஞ்சாய்ப் பறக்கும் பாலையின் வெஞ்சுரத் தன்மையை விளைவிப்பது பஞ்சுரம். வெம்மையின் கொடுமையைத் தணிக்கும் வண்ணம் நிழலும் பூவும் நீர்மையின் நல்கி வழியில் செல்வோர்க்கு உண்டாகும் பசியின் கொடுமை நீங்க நல்ல கனிகள் தந்து

நிற்பதோடு பழங்காலத்தில் இது கொடிய பாலையாம் பஞ்சுரமாக இருந்தது நீங்கியது. தற்போது குளிர் நிழலும், நறுநிழலும் தந்து பூச்சீரும் பொருந்தியமைதலோடு கனிச்சீரும் விரவிநின்று தாபந்தணிந்து உயிரினங்கள் வாழும் நிலையைக் காட்டுதலின் இது பழம்பஞ்சுரச் சாதாரி ஆகிறது. சாதாரியும், பழம்பஞ்சுரமும் ஒன்றுக்கொன்று தொடர்புடைய பண்கள்.

**478.** காட்டூர்க் கடலே கடம்பூர் மலையே
கானப் பேரூராய்
கோட்டூர்க் கொழுந்தே அழுந்தூ ரரசே
கொழுநற் கொல்லேறே
பாட்டூர் பலரும் பரவப் படுவாய்
பனங்காட் டூரானே
மாட்டு ரறவா மறவா துன்னைப்
பாடப் பணியாயே. 1

காட்டூர் முதலிய தலங்களில் எழுந்தருளியிருக்கின்ற கடலும், மலையும், தளிரும், கொல்லுந் தன்மையுடைய சிங்க ஏறும் போல்பவனே! பாட்டினை மிகவுணர்ந்தவர் பலராலும், அப்பாட்டுக்களால் பரவப்படுபவனே! எருதை ஊர்கின்ற அறமுதல்வனே! அடியேன் உன்னை என்றும் மறவாது பாடுமாறு திருவருள் செய்யாய்.

காட்டூரும், கொழுநலும் வைப்புத்தலங்கள்.

**479.** கொங்கிற் குறும்பிற் குரக்குத் தளியாய்
குழகா குற்றாலா
மங்குற் றிரிவாய் வானோர் தலைவா
வாய்மூர் மணவாளா
சங்கக் குழையார் செவியா அழகா
அவியா அனலேந்திக்
கங்குற் புறங்காட் டாடீ அடியார்
கவலை களையாயே. 2

கொங்கு நாட்டில் பாலை நிலத்தில் உள்ள குரக்குத்தளி முதலிய தலங்களில் எழுந்தருளியிருப்பவனே! மூப்படையாதவனே! வானத்தில் திரிபவனே! தேவர்க்குத் தலைவனே! மணவாளக் கோலம் உடையவனே! சங்கக்குழை பொருந்திய காதினையுடையவனே! அழகனே! எஞ்ஞான்றும் அவியாது எரிகின்ற நெருப்பைக் கையில் ஏந்திக்கொண்டு, இரவில், புறங்காட்டில் ஆடுகின்றவனே! உன் அடியாரது மனக்கவலையைப் போக்கியருளாய்.

குரக்குத்தளி – வைப்புத்தலம்.

**480.** நிறைக்காட் டானே நெஞ்சத் தானே
நின்றி யூரானே
மிறைக்காட் டானே புனல்சேர் சடையாய்
அனல்சேர் கையானே
மறைக்காட் டானே திருமாந் துறையாய்
மாகோ ணத்தானே
இறைக்காட் டானேஎங்கட் குன்னை
எம்மான் தம்மானே. 3

நின்றியூர் முதலிய தலங்களில் எழுந்தருளியிருப்பவனே! நெறிபிறழாமையையுடைய, சான்றானவனே! அடியவர்கள் நெஞ்சத்தில் இருப்பவனே! அவர்கட்குச் சிறிதும் துன்பத்தைக் காட்டாதவனே! நீர் பொருந்திய சடையையுடையவனே! நெருப்புப் பொருந்திய கையையுடையவனே! எம் தந்தைக்குத் தந்தையே! நீ எங்கட்கு உன்னைச் சிறிதும் புலப்படுத்தாதவனோ?

481. ஆரூர் அத்தா ஐயாற் றமுதே
அளப்பூர் அம்மானே
காரூர் பொழில்கள் புடைசூழ் புறவிற்
கருகா வூரானே
பேரூர் உறைவாய்ப்பட்டிப் பெருமான்
பிறவா நெறியானே
பாரூர் பலரும் பரவப் படுவாய்
பாசூர் அம்மானே. 4

ஆரூர் முதலிய தலங்களில் எழுந்தருளியிருக்கின்ற இறைவனே! அமுதம் போல்பவனே! பிறவாத நெறியை உடையவனே! நீயே இந்நிலவுலகில் நிறைந்துள்ள பலராலும் பரவப்படுபவன்.

அளப்பூரும், பேரூரும் வைப்புத் தலங்கள்.

482. மருகல் லுறைவாய் மாகா ளத்தாய்
மதியஞ் சடையானே
அருகற் பிணிநின் னடியார் மேல
அகல அருளாயே
கருகற் குரலாய் வெண்ணிக் கரும்பே
கானூர்க் கட்டியே
**பருகப் பணியாய்** அடியார்க் குன்னைப்
பவளப் படியானே. 5

மருகல் முதலிய தலங்களில் எழுந்தருளியிருப்பவனே! சந்திரனைச் சடையில் அணிந்தவனே! கருகிய கண்டத்தையுடையவனே! கரும்பு போல்பவனே! கட்டி போல்பவனே! பவளம் போலும் வடிவத்தையுடையவனே! உன் அடியார்மேல் வருகின்ற, மெலிதற் காரணமான நோய்கள் விலகிச் செல்லவும், உன்னை அடைந்து இன்புறவும் அவர்கட்கு அருள் செய்யாய்.

அருகற் பிணி – வருத்துகின்ற நோய். கருகற் குரலாய் – கரிய கண்டத்தை உடையவரே.
பருகப் பணியாய் – உன்னை ஆர அனுபவிக்கும்படி கட்டளை இடுவாயாக.

483. தாங்கூர் பிணிநின் னடியார் மேல
அகல அருளாயே
வேங்கூர் உறைவாய் விளமர் நகராய்
விடையார் கொடியானே
நாங்கூர் உறைவாய் தேங்கூர் நகராய்
நல்லூர் நம்பானே
பாங்கூர் பலிதேர் பரனே பரமா
பழனப் பதியானே. 6

வேங்கூர் முதலிய தலங்களில் எழுந்தருளியிருப்பவனே! இடபம் பொருந்திய கொடியையுடையவனே! நம்பனே! பக்கங்களில் உள்ள ஊர்களிற் சென்று பிச்சை தேடுகின்ற வேறுபட்ட தன்மையனே! மேலானவனே! உன் அடியார் மேல் உள்ள பொறுத்தற்கரிய நோய்கள் விலகிச் செல்ல அருள்புரியாய்.

வேங்கூர், நாங்கூர், தேங்கூர் – இவை வைப்புத்தலங்கள்.

484. தேனைக் காவல் கொண்டு விண்ட
கொன்றைச் செழுந்தாராய்
வானைக் காவல் கொண்டு நின்றார்
அறியா நெறியானே
ஆனைக் காவில் அரனே பரனே
அண்ணா மலையானே
ஊனைக் காவில் கைவிட் டுன்னை
உகப்பார் உணர்வாரே. 7

ஆனைக்கா, அண்ணாமலை என்னும் தலங்களில் எழுந்தருளியிருப்பவனே! தேனைப் பாதுகாத்தலை மேற்கொண்டு மலர்ந்த கொன்றைப் பூவினால் ஆகிய வளப்பமான மாலையை அணிந்தவனே! வானுலகத்தைக் காத்தலை மேற்கொண்டு நிற்கின்ற தேவர்களால் அறியப்படாத நிலையை உடையவனே! அழித்தல் தொழிலை உடையவனே! மேலானவனே! உடலோம்புதலை விட்டு, உன்னை விரும்பித் தொழுகின்றவர்களே, உன்னை உணர்வார்கள்.

485. துருத்திச் சுடரே நெய்த்தா னத்தாய்
சொல்லாய் கல்லாலா
பருத்தி நியமத் துறைவாய் வெயிலாய்ப்
பலவாய்க் காற்றானாய்
திருத்தித் திருத்தி வந்தென் சிந்தை
இடங்கொள் கயிலாயா
அருத்தித் துன்னை அடைந்தார் வினைகள்
அகல அருளாயே. 8

அருத்தித்து – உன்னிடம் அன்பு பூண்டு.

துருத்தி முதலிய தலங்களில் எழுந்தருளி யிருப்பவனே! ஒளிவடிவானவனே! சொல்லின் கண் உள்ளவனே! கல்லால மரநிழலில் இருப்பவனே! வெயிலாகியும், காற்றாகியும் மற்றும் பலவாகியும் நிற்பவனே! என் மனத்தை மேன்மேல் திருந்தச்செய்து, அதனை இடமாகக் கொண்டவனே! உன்னை அன்புசெய்து அடைந்தவர்களது வினைகள் நீங்க அவர்கட்கு அருள்செய்யாய்.

486. புலியூர்ச் சிற்றம் பலத்தாய் புகலூர்ப்
போதா மூதூரா
பொலிசேர் புரமூன் றெரியச் செற்ற
புரிபுன் சடையானே
வலிசேர் அரக்கன் தடக்கை ஐஞ்ஞான்
கடர்த்த மதிசூடீ
கலிசேர் புறவிற் கடவூ ராளீ
காண அருளாயே. 9

போதா – ஞான உருவானவனே

புலியூர்ச் சிற்றம்பலம் முதலிய தலங்களில் எழுந்தருளியிருப்பவனே! ஞான வடிவினனே! பழைமையான சிவலோகத்தை உடையவனே! பொலிவு பொருந்திய மூன்று ஊர்கள் எரிந்தொழியுமாறு அழித்த, புரித்த, புல்லிய சடையையுடையவனே! வலிமை பொருந்திய அரக்கனாகிய இராவணனது பெரிய இருபது கைகளையும் நெரித்த, பிறையைச் சூடினவனே! ஒலி சேர்ந்துள்ள முல்லை நிலத்தில் உள்ள கடவூரில் வீற்றிருப்பவனே! உன்னைக் கண்ணாற் காண அருளாய்.

487. கைம்மா உரிவை அம்மான் காக்கும்
பலவூர் கருத்துன்னி
மைம்மாந் தடங்கண் மதுர மன்ன
மொழியாள் மடச்சிங்கடி
தம்மான் ஊரன் சடையன் சிறுவன்
அடியன் தமிழ்மாலை
செம்மாந் திருந்து திருவாய் திறப்பார்
சிவலோ கத்தாரே. 10

கைம்மா – யானை

மை தீட்டிய, மாவடுப்போலும் பெரிய கண்களையும், இனிமை நிலைபெற்ற அழகிய சொல்லையும், இளமையையும் உடையவளாகிய சிங்கடிக்குத் தந்தையும், சடையனாருக்கு மகனும், யானைத் தோலையுடைய பெருமானுக்கு அடியனும் ஆகிய நம்பியாரூரனது இத்தமிழ்மாலையை, அப்பெருமான் எழுந்தருளியிருக்கின்ற பல தலங்களையும் நினைந்து கவலையற்றிருந்து, சிறந்த வாயாற் பாடுவோர், சிவலோகத் திருப்பவரேயாவர்.

## 48. திருப்பாண்டிக்கொடுமுடி

**(நமச்சிவாயத் திருப்பதிகம்)**

பண் : பழம்பஞ்சுரம் பதிக எண் : 48

| **மூர்த்தி** | அருள்தரும் பண்மொழியம்மை உடனமர் அருள்மிகு கொடுமுடிநாதர் | | |
|---|---|---|---|
| **தல இருப்பிடம்** | கொங்குநாட்டில் காவிரி தென்கரையில் ஈரோட்டிலிருந்து கரூர் செல்லும் பாதையில் 40 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | வன்னி | | |
| **தீர்த்தம்** | பிரம, தேவ தீர்த்தம் | | |
| **பாடியவர்** | மூவர் | **பதிகங்கள்** | 3 |

488. மற்றுப் பற்றெனக் கின்றி நின்திருப்
பாத மேமனம் பாவித்தேன்
பெற்ற லும்பிறந் தேன்இ னிப்பிற
வாத தன்மைவந் தெய்தினேன்
கற்ற வர்தொழு தேத்துஞ் சீர்க்கறை
யூரிற் பாண்டிக் கொடுமுடி
நற்ற வாஉனை நான்ம றக்கினுஞ்
சொல்லும்நா நமச்சி வாயவே. 1

எனக்குப் பற்று மற்றின்றி என்க.
மனம் பாவித்தேன் – மனதில் தியானித்திருந்தேன்.
பெற்றலும் – நினைக்கப் பெறுதலும்.

கற்றவர்கள் வணங்கித் துதிக்கின்ற புகழையுடைய கறையூரில் உள்ள, 'திருப்பாண்டிக் கொடுமுடி' என்னும் கோயிலில் எழுந்தருளியிருக்கின்ற, நல்ல தவவடிவினனே! எனக்கு வேறு துணையில்லையாகும்படி, உனது திருவடியையே துணையாக மனத்தில் துணியப் பெற்றேன்; அவ்வாறு துணியப்பெற்ற பின்பே, நான் மனிதனாய்ப் பிறந்தவனாயினேன்; அதுவன்றி, இனியொரு பிறப்பிற் சென்று பிறவாத தன்மையும் என்னை வந்து அடையப் பெற்றேன்; இனி உன்னை நான் மறந்தாலும், என் நா, உனது திருப்பெயராகிய, நமச்சிவாய என்பதனை, இடையறாது சொல்லும்.

489. இட்ட னுன்னடி ஏத்து வார்இகழ்ந்
திட்ட நாள்மறந் திட்டநாள்
கெட்ட நாள்இவை என்ற லாற்கரு
தேன்கி ளர்புனற் காவிரி
வட்ட வாசிகை கொண்ட டிதொழு
தேத்து பாண்டிக் கொடுமுடி
நட்ட வாஉனை நான்ம றக்கினுஞ்
சொல்லும்நா நமச்சி வாயவே. 2

வட்ட வாசிகை – வட்ட வடிவாய் அமைந்த திருவாசி போல அமைந்த மாலை.

இட்டன் – அன்புடையவன்.

நட்டவா – உயிர்களைக் கருணையினால் நட்புக் கொண்டவனே

மிக்கு வருகின்ற நீரையுடைய காவிரியாறு, வளைவாக மேலால் விளங்க இடப்படும் மாலையைக் கொணர்ந்து உன் திருவடியை வணங்கித் துதிக்கின்ற, 'திருப்பாண்டிக் கொடுமுடி' என்னும் கோயிலில் எழுந்தருளி யிருக்கின்ற, தோழமை கொண்டவனே! உன்னால் விரும்பப்பெற்றவனாகிய யான், உன் திருவடியைத் துதிக்கின்ற அடியவர்களால் இவன் நிலையில்லாத மனத்தையுடையவன் என்ற இகழப்பட்ட நாள்களும், அங்ஙனம் அவர்கள் இகழ்தற்கு ஏதுவாக நான் உன்னை மறந்துவிட்ட நாள்களும் ஆகிய இவைகளை, அடியேன் அழிந்த நாள் என்று கருதுவதன்றி வேறாகக் கருதமாட்டேன்; ஆதலின், நான் உன்னை மறக்கினும், என் நா, உனது திருப்பெயராகிய, நமச்சிவாய என்பதனை, இடையறாது சொல்லும்.

490. ஓவு நாள்உணர் வழியும்நாள் உயிர்
போகும் நாள்உயர் பாடைமேல்
காவு நாள்இவை என்ற லாற்கரு
தேன்கி ளர்புனற் காவிரிப்
பாவு தண்புனல் வந்தி ழிபரஞ்
சோதி பாண்டிக் கொடுமுடி
நாவ லாஉனை நான்ம றக்கினுஞ்
சொல்லும்நா நமச்சி வாயவே. 3

"உனை நான் மறக்கினுஞ் சொல்லும் நா நமச்சிவாயவே" என்பது பதிக மகுடமாகும்.

தாம் வாழும் நாளளவும் உள்ள நிகழ்ச்சி பற்றிக் கூறுகின்றாராகலின், செய்யும் என்னும் வாய்ப்பாட்டால் கூறினார்.

காவுநாள் – சுமக்கப்படும் நாட்கள்.

பாவு – பரந்த.

மேலான ஒளியாய் உள்ளவனே! மிக்கு வருகின்ற நீரையுடைய காவிரியாற்றினது பரந்த வெள்ளம் வந்து பாய்கின்ற, 'திருப்பாண்டிக் கொடுமுடி' என்னும் கோயிலில் எழுந்தருளி யிருக்கின்ற, நா வன்மையுடையவனே! அடியேன் உன்னை நினையாதொழிந்த நாள்களை, என் உணர்வு அழிந்த நாள்களும், உயிர்போன நாள்களும், உயரத்தோன்றும் பாடையின்மேல் வைத்துச் சுமக்கப்படும் நாள்களும் என்னும் இவைகளாகக் கருதுதல் அன்றி, வேறு நல்ல நாளாகக் கருதமாட்டேன்; ஆதலின், உன்னை நான் மறந்தாலும், என் நா, உனது திருப்பெயராகிய, நமச்சிவாய என்பதனை, இடையறாது சொல்லும்.

491. எல்லை யில்புகழ் எம்பிரான் எந்தை
தம்பி ரான்என்பொன் மாமணி
கல்லை யுந்தி வளம்பொ ழிந்திழி
காவி ரியதன் வாய்க்கரை
நல்ல வர்தொழு தேத்துஞ் சீர்க்கறை
யூரிற் பாண்டிக் கொடுமுடி
வல்ல வாஉனை நான்ம றக்கினுஞ்
சொல்லும்நா நமச்சி வாயவே. 4

கல்லை உந்தி – மலைப் பண்டங்களை – பெருங் கற்களைத் தள்ளிக் கொண்டு வந்து.

இழிதல் – கீழிறங்குதல்.

எல்லையில்லாத புகழையுடைய எம்பெருமானே! எந்தந்தைக்கும் தலைவனே! என் பொன் போல்பவனே! எம் மணிபோல்பவனே! மணிகளைத் தள்ளிவந்து, எவ்விடத்திலும் செல்வத்தை மிகுதியாகச் சொரிந்து பாய்கின்ற காவிரியாற்றினது கரைக்கண், நல்லவர்களால் வணங்கித் துதிக்கப்படுகின்ற, புகழையுடைய கறையூரில் உள்ள, 'திருப்பாண்டிக் கொடுமுடி' என்னும் கோயிலில் எழுந்தருளியிருக்கின்ற எல்லாம் வல்லவனே! உன்னை நான் மறந்தாலும் என் நா, உனது திருப்பெயராகிய, நமச்சிவாய என்பதனை இடையறாது சொல்லும்.

492. அஞ்சி னார்க்கர ணாதி என்றடி
யேனும் நான்மிக அஞ்சினேன்
அஞ்ச லென்றடித் தொண்ட னேற்கருள்
நல்கி னாய்க்கழி கின்றதென்
பஞ்சின் மெல்லடிப் பாவை மார்குடைந்
தாடு பாண்டிக் கொடுமுடி
நஞ்ச ணிகண்ட நான்ம றக்கினுஞ்
சொல்லும்நா நமச்சி வாயவே. 5

அருள் நல்கினாய்க்கு அழிகின்றதென்?

திருவருள் பாலித்தால் உமக்கு என்ன குறை வரப் போகிறது?

ஊட்டப்பட்ட பஞ்சினை உடைய மெல்லிய அடிகளையுடைய பாவைபோலும் மகளிர் காவிரித்துறைக்கண் மூழ்கி விளையாடுகின்ற, 'திருப்பாண்டிக் கொடுமுடி' என்னும் கோயிலில் எழுந்தருளியிருக்கின்ற, நஞ்சணிந்த கண்டத்தை யுடையவனே! நீ அச்சமுற்று வந்து அடைந்தவர்க்குப் பாதுகாப்பாவாய் என்று அறிந்து, அடியேனாகிய யானும் மிகவும் அச்சமுற்று வந்து உன்னை அடைந்தேன்; அதனையறிந்து நீ அவ்வண்ணமே 'அஞ்சேல்' என்று சொல்லி அணைத்து, அடித்தொண்டனாகிய எனக்கு உன் திருவருளை அளித்தாய்; அதனால் உனக்குக் கெடுகின்றது ஒன்றின்மையைக் கண்டேன்; இன்ன பெருமையும் முதன்மையும் உடைய உன்னை நான் மறந்தாலும், என் நா, உனது திருப்பெயராகிய நமச்சிவாய என்பதனை, இடையறாது சொல்லும்.

493\. ஏடு வான்இளந் திங்கள் சூடினை
என்பின் கொல்புலித் தோலின்மேல்
ஆடு பாம்ப தரைக்க சைத்த
அழக னேஅந்தண் காவிரிப்
பாடு தண்புனல் வந்தி ழிபரஞ்
சோதி பாண்டிக் கொடுமுடிச்
சேட னேஉனை நான்ம றக்கினுஞ்
சொல்லும்நா நமச்சி வாயவே. 6

கொல்லுகின்ற புலியினது தோலின் மேல், ஆடுகின்ற பாம்பை, அரையின்கண் கட்டியுள்ள அழகனே! அழகிய, ஆழ்ந்த காவிரியாற்றினது, ஒலிக்கின்ற குளிர்ந்த நீர் வந்து பாய்கின்ற, 'திருப்பாண்டிக்கொடுமுடி' என்னும் கோயிலில் எழுந்தருளியிருக்கின்ற மேலான ஒளியாய் உள்ளவனே! பெருமையுடையவனே! நீ, வானத்தில் தோன்றுகின்ற, பூவிதழ்போலும் இளந்திங்களை முடியிற் சூடினாய்; அதன்பின் சான்று சொல்லவேண்டுவது என்! அதனால், உன்னை நான் மறந்தாலும், என் நா, உனது திருப்பெயராகிய, நமச்சிவாய என்பதனை, இடையறாது சொல்லும்.

'சந்திரனைச் சடையில் சூடியது ஒன்றே, நீ குறைந்து வந்து அடைந்தாரை ஆழாமற் காப்பவன்' என்பதற்குப் போதிய சான்றாம் என்றபடி பொருள் கொள்ளலாம்.

புலித்தோலையும், பாம்புக் கச்சும் உனது ஆற்றலை உணர்த்தும் என்பது குறிப்பு.

சேடன் – யாவும் ஒடுங்கியபின் எஞ்சியிருப்பவன் என்றும் பொருள் கொள்ளலாம்.

பாடு – பெருமை.

ஏடுவான் – தகட்டு வடிவில் உள்ள ஆகாயத்தில் சஞ்சரிக்கும்.

494\. விரும்பி நின்மலர்ப் பாத மேநினைந்
தேன்வி னைகளும் விண்டன
நெருங்கி வண்பொழில் சூழ்ந்தெ ழில்பெற
நின்ற காவிரிக் கோட்டிடைக்
குரும்பை மென்முலைக் கோதை மார்குடைந்
தாடு பாண்டிக் கொடுமுடி
விரும்ப னேஉனை நான்ம றக்கினுஞ்
சொல்லும்நா நமச்சி வாயவே. 7

தென்னங் குரும்பைபோலும், மெல்லிய கொங்கைகளையுடைய கன்னியர் மூழ்கி விளையாடுகின்ற காவிரியாற்றினது, வளப்பமான சோலைகள் நெருங்கிச் சூழ்ந்து அழகுண்டாக நிற்கின்ற கரைக்கண் உள்ள, 'திருப்பாண்டிக் கொடுமுடி' என்னும் கோயிலில் எழுந்தருளியிருக்கின்ற, விரும்பப்படுபவனே! அடியேன், உனது மலர் போலும் திருவடிகளையே விரும்பி நினைந்தேன்; அதனால், நீங்குதற்கரிய வினைகளும் நீங்கின; இனி, உன்னை நான் மறந்தாலும், என் நா, உனது திருப்பெயராகிய, நமச்சிவாய என்பதனை, இடையறாது சொல்லும்.

கோட்டிடை – கரையில்

495. செம்பொ னேர்சடை யாய்தி ரிபுரந்
தீயெ ழச்சிலை கோலினாய்
வம்பு லாங்குழ லாளைப் பாக
மமர்ந்து காவிரிக் கோட்டிடைக்
கொம்பின் மேற்குயில் கூவ மாமயில்
ஆடு பாண்டிக் கொடுமுடி
நம்ப னேஉனை நான்ம றக்கினுஞ்
சொல்லும்நா நமச்சி வாயவே. 8

நம்பன் – விரும்பத்தக்கவன்.
கோலினாய் – வளைத்தாய்.

செம்பொன்போலும் சடையையுடையவனே! திரிபுரத்தில் தீ உண்டாகும்படி வில்லை வளைத்தவனே! மணம் வீசுகின்ற கூந்தலையுடைய இறைவியை ஒருபாகத்தில் விரும்பி வைத்து, காவிரியாற்றினது கரையின்கண் உள்ள, சோலைகளில் கிளைகளின்மேற் குயில்கள் கூவ, சிறந்த மயில்கள் ஆடுகின்ற, 'திருப்பாண்டிக்கொடுமுடி' என்னும் கோயிலில் எழுந்தருளியிருக்கின்ற நம்பனே! உன்னை நான் மறந்தாலும், என் நா, உனது திருப்பெயராகிய, நமச்சிவாய என்பதனை, இடையறாது சொல்லும்.

496. சார ணன்தந்தை எம்பி ரான்எந்தை
தம்பி ரான்எம்பொன் மாமணீயென்று
பேரெ ணாயிர கோடி தேவர்
பிதற்றி நின்று பிரிகிலார்
நார ணன்பிர மன்தொ ழுங்கறை
யூரிற் பாண்டிக் கொடுமுடிக்
கார ணாஉனை நான்ம றக்கினுஞ்
சொல்லும்நா நமச்சி வாயவே. 9

சாரணன் – பற்றுக்கோடாய் / புகலிடமாய் உள்ளவன்.
பேர் – உனது திருப்பெயர்களை.
பிதற்றி – பேரன்பினால் தம் வசமிழந்து சொல்லி.

திருமாலும், பிரமனும் வணங்குகின்ற, கறையூரில் உள்ள, 'திருப்பாண்டிக்கொடுமுடி' என்னும் கோயிலில் எழுந்தருளியிருக்கின்ற முதல்வனே! அளவற்ற தேவர், 'எமக்குப் புகலிடமானவன்; எம்தந்தை; எம் தலைவன்; எம் தந்தைக்கும் தலைவன்; எங்கள் பொன்; எங்கள் மணி' என்று சொல்லி, உன் பெயர்கள் பலவற்றையும் பிதற்றி நின்று, உன்னைப் பிரியமாட்டார்; இன்ன பெரியோனாகிய உன்னை நான் மறந்தாலும், என் நா, உனது திருப்பெயராகிய, நமச்சிவாய என்பதனை, இடையறாது சொல்லும்.

497. கோணி யபிறை சூடி யைக்கறை
யூரிற் பாண்டிக் கொடுமுடி
பேணி யபெரு மானைப் பிஞ்ஞகப்
பித்த னைப்பிறப் பில்லியைப்
பாணு லாவரி வண்ட றைகொன்றைத்
தார னைப்படப் பாம்பரை
நாண னைத்தொண்டன் ஊரன் சொல்லிவை
சொல்லு வார்க்கில்லை துன்பமே. 10

வளைந்த பிறையைச் சூடினவனும், தலைக்கோலம் உடையவனும், பேரருள் உடையவனும், பிறப்பில்லாதவனும், இசையோடு உலாவுகின்ற வரிகளையுடைய வண்டுகள் ஒலிக்கும் கொன்றைப் பூமாலையை அணிந்தவனும் படத்தையுடைய பாம்பாகிய அரைநாணை உடையவனும் ஆகிய கறையூரில் உள்ள, 'திருப்பாண்டிக்கொடுமுடி' என்னும் கோயிலை விரும்பி எழுந்தருளியிருக்கின்ற பெருமானை, அவன் தொண்டனாகிய நம்பியாரூரன் பாடிய இப்பாடல்களைப் பாடுபவர்க்குத் துன்பம் இல்லையாம்.

## 49. திருமுருகன்பூண்டி

பண் : பழம்பஞ்சுரம் | பதிக எண் : 49

| மூர்த்தி | அருள்தரும் முயங்குபூண்முலைமங்கை / ஆவுடைநாயகி உடனமர் அருள்மிகு முருகாவுடையார். | | |
|---|---|---|---|
| தல இருப்பிடம் | கொங்குநாட்டில் கோயம்புத்தூர் – அவினாசி – திருப்பூர் மார்க்கத்தில் திருப்பூரிலிருந்து 6 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| தல மரம் | குருக்கத்தி, முல்லை | | |
| தீர்த்தம் | மாதவி, அக்கினி தீர்த்தம் | | |
| பாடியவர் | நம்பியாரூரர் | பதிகம் | 1 |

கொடுங்கோளூரில் சேரமான் பெருமாளின் வழிபாட்டை ஏற்றிருந்த சுந்தரர், 'ஆரூரானை மறக்கலுமாமே' என்று திருப்பதிகம் பாடி, 'திருவாரூரைச் சென்று தொழுவேன்' என்று கூறி எழுந்தருள, சேரர் பெருமான் பிரிவாற்றாமையால் வருந்துவதை யறிந்து வருந்தாது பகையழித்து உமது பதியின் கண் இருந்து அரசாளும் என்றார். சேரர் பெருமான், 'எனக்குப் பாரோடு விசும்பாட்சி உமது பாதமலரே; ஆயினும் நீர் திருவாரூர்க்கு எழுந்தருள்வதைத் தடுக்க அஞ்சுகின்றேன்' என்று சொல்ல, சுந்தரர், 'என்னுயிருக்கு இன்னுயிராம் எழிலாரூர்ப் பெருமானை மறந்திரேன்' என்று கூறி எழுந்தருளினார். அது கண்ட சேரர் பெருமான் அமைச்சர்கள் வாயிலாக, நவமணிகளும் மணிப்பூண்களும், துகில் வருக்கம் முதலியவை களும் ஏவலாளர் தலையின்மேல் நிரம்ப ஏற்றி அனுப்பினார். வழியில் திருமுருகன்பூண்டிக்கு அருகில் சிவபெருமான், பூதங்களை வேடர் வடிவாக்கிப் பொருள்களைக் கவர்ந்து வருமாறு அனுப்ப, அவைகள் அவ்வாறே சென்று எல்லாப் பொருள்களையும் பறித்து மறைந்தபின் சுவாமிகள், இத்திருக்கோயிலை யடைந்து பாடியருளியது இத்திருப்பதிகம் (தி. 12 பெரிய. புரா. கழறிற். புரா. 170).

**குறிப்பு :** இத்திருப்பதிகம், சுந்தரர் ஆறலைப்புண்ட இடத்தில் கோயில் கொண்டிருந்த இறைவரைக் கண்டு, 'அந்தோ! இக்கொடிய இடத்தில் இறைவியோடு நீர் ஏன் இருக்கின்றீர்? அப்பாற் சென்று இருக்கலாகாதோ?' எனக் கவன்று அருளிச் செய்தது. அன்பின் மிகுதியால், இறைவரது ஆற்றல் தோன்றாதாயிற்று என்க. இது, நகைவகையான் இகழ்வதுபோலப் புகழ்ந்ததாகாமை, சேக்கிழார் திருமொழியான் அறிக.

**தலவிசேடம் :** திருமுருகன் பூண்டி – கொங்கு நாட்டுப் பதிகப் பாடல் பெற்ற பதிகளுள் இரண்டாவது பதி; முருகப்பெருமான் சூரசம்மாரத்தின் பின் பூசித்த பதிகளுள் ஒன்றாதலின் இப்பெயர் பெற்றது; பூசித்த முருகப்பெருமான் சந்நிதி தனியாகச் சிறந்து விளங்குகின்றது; அப்பூசையின் பயனாக இன்றும் இங்கு வழிபட்டுப் பிரமகத்தி, சித்தப்பிரமை முதலிய வலிய நோய்களினீங்கிச் செல்வோரை இப்போதும் எப்போதும் காணலாம். அந்நோய்களின் நீங்குதற்குதவும் பிரமதீர்த்தம் கோயிலுக்கு வெளியில் உள்ளது. இதன்

பொருட்டுச் சித்தப்பிரமை பைத்தியம் முதலிய நோயுடையோர் தம் சார்புகளுடன் வந்து தங்கி வழிபடத், தனியிடங்களும் அறைகளும் கோயில் அதிகாரிகளால் அமைக்கப்பட்டுள்ளன; (Lunatic Asylum) என்பர் நவீனர்); தூர்வாச முனிவர் தேவலோகத்திலிருந்து மாதவி மரம் (கொடி) கொணர்ந்து இங்கு வைத்தமையால் இது மாதவிவனம் (முல்லைவனம்) எனப்படும். மாதவி – முல்லை விசேடம்; "முல்லைத்தாது மணங்கமழ்" என்று இது பதிகத்துக் குறிக்கப்பட்டது. மாதவி – குருக்கத்திமரம் என்பது தலபுராணம். இந்தச் சந்நிதி தனியாயுள்ளது. தூர்வாச முனிவர் முதலியோருக்கு பிரம்மதாண்டவம் காட்டியருளிய நடராசர் சந்நிதி சிறப்பாய்த் தனியாயுள்ளது; நம்பிகள் வேடுபறி பற்றி ஆண்டுதோறும் விழாக் கொண்டாடப் பெறுகின்றது; அந்த, நிதி பறித்த இடத்திலிருந்து இறைவர் இருக்குமிடத்தைக் கூ கூ என்று கூவி நம்பிகளுக்குக் காட்டியருளிய விநாயகர் சந்நிதி கூப்பிடு விநாயகர் என விசேடமாய் வழிபடப் பெறுகிறது. இஃது இத்தலத்தினின்று வடக்கில் அவிநாசிக்குப் போகும் வழியில் 1/2 நாழிகையளவில் உள்ளது. கோயிலுக்கு எதிரில் உள்ள தனி விநாயகர் கோயிலுக்கு முன்புறம் உள்ள பாறையில் உள்ள சிறுகுழியில் 12 ஆண்டுக்கொரு முறை ஊற்றுப்பெருகும். அது மாமாங்கக்குழி என வழங்கப்படுகிறது; நம்பிகளது பொருள் பறியுண்ட திருக்கோலமும், அதனை மீளப்பெற்ற திருக்கோலமுமாக இரண்டும் சுவாமி கோயிலின் முகப்பில் தாபிக்கப்பட்டு வழிபடப் பெற்று வருகின்றன. தலபுராணம் 180 ஆண்டுகளின் முன் வாழ்ந்த செட்டிபாளையம் மகாவித்வான் வாசுதேவ முதலியார் இயற்றியுள்ளார். இவரே பவானி புராணம், அவிநாசிக் கருணாம்பிகை சதகம் முதலிய பல நூல்களை இயற்றியவர். மூலமும் உரையுமாகப் பிரபவ ஆண்டு ஆனி மாதம் (82 ஆண்டுகளின் முன்) அச்சிடப்பட்டுள்ளது.

**498.** கொடுகு வெஞ்சிலை வடுக வேடுவர்
விரவ லாமைசொல்லித்
திடுகு மொட்டெனக் குத்திக் கூறைகொண்
டாற லைக்குமிடம்
முடுகு நாறிய வடுகர் வாழ்முரு
கன்பூண்டி மாநகர்வாய்
இடுகு நுண்ணிடை மங்கை தன்னொடும்
எத்துக் கிங்கிருந் தீர்எம்பி ரானீரே. **1**

எம்பெருமானிரே! முடைநாற்றம் சேய்மையினும் விரையச் சென்று நாறுகின்ற உடம்பையுடைய வடுகர்கள் வாழ்கின்ற இம் 'முருகன்பூண்டி', வளைந்த கொடிய வில்லையுடைய வடுக வேடுவர், வருவோரைப் பொருந்தாத சொற்களைச் சொல்லி, திடுகு என்றும், 'மொட்டு' என்றும் அதட்டி அச்சுறுத்தி ஆறலைத்து அவர்தம் உடைகளைப் பறித்துக் கொள்ளும் இடம்; இம்மாநகரிடத்து இங்கு, சிறுகிய, நுண்ணிய இடையையுடைய எம்பெருமாட்டி யோடும் நீர் எதன்பொருட்டு இருக்கின்றீர்?

கொடுகு – வளைந்த.
வெம்சிலை – வெவ்விய ஊறு செய்யும் வில்.
விரவலாமை – கடுஞ்சொற்கள்.
கூறை கொண்டு ஆறலைக்குமிடம் – (வழிப்போக்கர்களுடைய) ஆடைகளைக் கொள்ளை கொண்டு வழிபறிக்குமிடம்.
இடுகு நுண்ணிடை – சுருங்கிய சிற்றிடை. திருகு மொட்டென – ஒலிக் குறிப்புச் சொற்கள்.
முருகு நாறிய – பலத்தோடு கூடிய கழுவாத உடல் நாற்றத்துடன் பூசும் எண்ணெய் நாற்றமும் சேர்ந்து.
மங்கை தன்னொடும் – வழிப்பறி (ஆறலைக்கும்) நடக்கும் வழியில் ஒருவன் பயமின்றி அணிகள் அணிந்த இளம் மனைவியுடன் நிலைத்த வாழ்வு நடத்தினால் அவன் அக்கள்வர்க்குப் பங்குடையவன் என்றே துணியப்படும் என்ற குறிப்பு. கோடிட்ட 5, 8, 9, 10 பாடற்பகுதிகளிலும் இதே குறிப்பைக் காணலாம். எத்துக்கு – எதற்கு?

499. வில்லைக் காட்டி வெருட்டி வேடுவர்
விரவ லாமைசொல்லிக்
கல்லி னாலெறிந் திட்டும் மோதியுங்
கூறை கொள்ளுமிடம்
முல்லைத் தாது மணங்க மழ்முரு
கன்பூண்டி மாநகர்வாய்
**எல்லைக் காப்பதொன் றில்லை யாகில்நீர்**
எத்துக் கிங்கிருந் தீர்எம் பிரானீரே. 2

எல்லைக் காப்பதொன்றில்லையாகில் – உமது எல்லையுள் அநீதி நடவாமற் காவல் செய்யாவிடில் (கள்வரிற் பங்குடையீர் என்பது)

எம்பெருமானிரே! முல்லை மலரின் மகரந்தம் நறுமணத்தை வீசுகின்ற இம் முருகன்பூண்டி மாநகர் வருவோரை, வேடுவர்கள், வில்லைக் காட்டி வெருட்டியும், பொருந்தாத சொற்களைச் சொல்லிக் கல்லால் எறிந்தும், கையால் அறைந்தும் அவர்களது உடைகளைப் பறித்துக் கொள்ளும் இடம்; இதன் எல்லைக்குக் காவல் ஒன்றும் இல்லாமை நீர் அறிந்ததேயானால், இதன்கண் இங்கு எதன் பொருட்டு இருக்கின்றீர்?

500. பசுக்க ளேகொன்று தின்று பாவிகள்
பாவம் ஒன்றறியார்
உசிர்க்கொ லைபல நேர்ந்து நாள்தொறும்
கூறை கொள்ளுமிடம்
முசுக்கள் போற்பல வேடர் வாழ்முரு
கன்பூண்டி மாநகர்வாய்
இசுக்க ழியப் பயிக்கங் கொண்டுநீர்
எத்துக் கிங்கிருந் தீர்எம் பிரானீரே. 3

முசு – குரங்கு. இசுக்கு அழிய – குற்றம் நீங்க.
பயிக்கம் – பிச்சை.
உயிர் எதுகை நோக்கி உசிர் ஆனது.

எம்பெருமானிரே! வேடர் பலர் குரங்குகள் போலப் பிறர் பொருளைப் பறித்து வாழ்கின்ற இம் முருகன்பூண்டி மாநகர், அப்பாவிகள், பாவம் என்பதொன்றையறியாராய், விலங்குகளையே கொன்று தின்று, நாள்தோறும் பலரது உயிர்களைக் கொல்லுதலைத் துணிந்து செய்து அவர்களது உடைகளைப் பறித்துக்கொள்ளும் இடம், இதன்கண் நீர், இழுக்கு நீங்கப் பிச்சை ஏற்று, இங்கு எதன்பொருட்டு இருக்கின்றீர்?

501. பீறற் கூறை உடுத்தொர் பத்திரங்
கட்டி வெட்டினராய்ச்
சூறைப் பங்கிய ராகி நாள்தொறுங்
கூறை கொள்ளுமிடம்
மோறை வேடுவர் கூடி வாழ்முரு
கன்பூண்டி மாநகர்வாய்
ஏறு கால்இற்ற தில்லை யாய்விடில்
எத்துக் கிங்கிருந் தீர்எம் பிரானீரே. 4

"எத்துக்கிங்கிருந்தீர் எம்பிரானீரே" என்பது பதிக மகுடமாகும்.

பீறற் கூறை – கிழிந்த ஆடை

பத்திரம் – உடை வாள்.

எம்பெருமானிரே! குற்றமுடைய வேடுவரே கூடி, ஆறலைத்த பொருளின் பங்காகிய பொருளை உடையவராய், வாழ்கின்ற இம் முருகன் பூண்டி மாநகர், அவர்கள், கிழித்த உடையை உடுத்துக் கொண்டு, அதற்குள் உடைவாளையுங் கட்டிக்கொண்டு, வருவோரை அவ்வுடைவாளால் வெட்டி, கொள்ளையடித்துப் பங்கிட்டுக் கொண்டு நாள்தோறும் அவர்களது உடைகளைப் பறித்துக் கொள்ளும் இடம்; உமது எருது கால் ஒடியாமல் நன்றாகவே இருக்கின்றதென்றால், அதன்மேல் ஏறி அப்பாற் போகாமல், இதன்கண் இங்கு எதன் பொருட்டு இருக்கின்றீர்?

502. தயங்கு தோலை உடுத்துச் சங்கர
சாம வேதமோதி
மயங்கி ஊரிடு பிச்சை கொண்டுணும்
மார்க்க மொன்றறியீர்
**முயங்கு பூண்முலை மங்கை யாளொடு**
முருகன்பூண்டி மாநகர்வாய்
இயங்க வும்மிடுக் குடைய ராய்விடில்
எத்துக் கிங்கிருந் தீர்எம் பிரானீரே. 5

தயங்கு – விளங்கும்

எம்பெருமானிரே! நீர், விளங்குகின்ற தோலை உடுத்து, இன்பத்தைச் செய்கின்ற சாம வேதத்தைப் பாடிக்கொண்டு, அப்பாட்டினால் மயங்கி ஊரில் உள்ளார் இடுகின்ற பிச்சையை ஏற்று உண்பதற்கு வழி ஒன்றும் அறியீரோ? பல இடங்களுக்குச் செல்ல வலிமையும் உடையீரென்றால், தழுவுகின்ற, அணிகளை அணிந்த தனங்களையுடைய தேவியோடும், இம் முருகன் பூண்டி மாநகரிடத்து இங்கு எதன் பொருட்டு இருக்கின்றீர்?

503. விட்டி சைப்பன கொக்க ரைகொடு
கொட்டி தத்தளகம்
கொட்டிப் பாடுமித் துந்து மியொடு
குடமுழா நீர்மகிழ்வீர்
மொட்ட லர்ந்து மணங் கமழ்முரு
கன்பூண்டி மாநகர்வாய்
இட்ட பிச்சைகொண் டுண்ப தாகில்நீர்
எத்துக் கிங்கிருந் தீர்எம் பிரானீரே. 6

எம்பெருமானிரே! நீர், கொட்டிப்பாடுதற்கு உரிய, தாள அறுதிக்கு ஏற்ப விட்டுவிட்டு ஒலிக்கின்ற கொக்கரை, கொடு கொட்டி, தத்தளகம், துந்துமி, குடமுழா என்னும் இவற்றை விரும்புவராய் உள்ளீரென்றால், மற்றும் ஊரவர் இட்ட பிச்சையை ஏற்று உண்பீரென்றால், பலவகை அரும்புகள் அலர்ந்து மணங் கமழ்கின்ற இம்முருகன்பூண்டி மாநகரிடத்து இங்கு எதன்பொருட்டு இருக்கின்றீர்?

504. வேத மோதிவெண் ணீறு பூசிவெண்
கோவணந் தற்றயலே
ஓத மேவிய ஒற்றி யூரையும்
உத்திர நீர்மகிழ்வீர்
மோதி வேடுவர் கூறை கொள்ளு
முருகன்பூண்டி மாநகர்வாய்
ஏது காரண மேது காவல்கொண்
டெத்துக் கிங்கிருந் தீர்எம் பிரானீரே. 7

தற்று – தரித்து. ஓதம் – கடல்.
இறுகக்கட்டி

எம்பெருமானிரே! நீர், வேதத்தை ஓதிக் கொண்டு, வெண்ணீற்றைப் பூசிக்கொண்டு, வெள்ளிய கோவணத்தை உடுத்து, பக்கத்தில் அலை பொருந்திய திருவொற்றியூரை உத்திர நீர் விழாவின் பொருட்டு விரும்புவீர்; அங்குப் போகாமல், வேடர்கள், வருவோரைத் தாக்கி, அவரது உடையைப் பறித்துக் கொள்ளுகின்ற இம்முருகன்பூண்டி மாநகரிடத்து, யாது காரணத்தால், எதனைக் காவலாகக் கொண்டு, எதன் பொருட்டு இங்கு இருக்கின்றீர்?

505. படவ ரவுநுண் ணேரி டைப்பணைத்
தோள்வ ரிநெடுங்கண்
**மடவ ரல்லுமை நங்கை தன்னையொர்**
பாகம் வைத்துகந்தீர்
முடவ ரல்லீர் இடரி லீர்முருகன்
பூண்டி மாநகர்வாய்
இடவ மேறியும் போவ தாகில்நீர்
எத்துக் கிங்கிருந் தீர்எம் பிரானீரே. 8

பணை – மூங்கில்

எம்பெருமானிரே! நீர், தனிமையாக இல்லாது, படத்தையுடைய பாம்பு போலும் மிக நுண்ணிய இடையினையும், பருத்த தோள்களையும், வரிகளையுடைய நீண்ட கண்களையும் உடைய இளமை பொருந்திய, உமை என்னும் நங்கையை ஒரு பாகத்தில் விரும்பி வைத்துள்ளீர்; முடவரல்லீர்; ஆகவே, பெயர்ந்து போதற்கண் இடரொன்றும் இல்லீர்; அன்றியும், நீர் விரும்பிய இடத்திற்கு இடபத்தின்மேல் ஏறியும் போவீர் என்றால், இம் முருகன்பூண்டி மாநகரிடத்து, இங்கு, எதன்பொருட்டு இருக்கின்றீர்?

506. சாந்த மாகவெண் ணீறு பூசிவெண்
பற்ற லைகலனா
வேய்ந்த **வெண்பிறைக் கண்ணி தன்னையொர்**
**பாகம் வைத்துகந்தீர்**
மோந்தை யோடு முழக்க றாமுரு
கன்பூண்டி மாநகர்வாய்
ஏந்து பூண்முலை மங்கை தன்னொடும்
எத்துக் கிங்கிருந் தீர்எம் பிரானீரே. 9

பிறைக்கண்ணி – பிறையாகிய மாலை.
முடி மாலை.

எம்பெருமானிரே! வெள்ளிய நீற்றைச் சாந்தாகப் பூசிக்கொண்டு, வெள்ளிய பற்களையுடைய தலையே கலமாக ஏந்தி, முடியிற் சூடிய வெள்ளிய பிறையாகிய கண்ணியை அம் முடியின் ஒரு பாகத்தில் விரும்பி வைத்தவரே! நீர், மொந்தை என்னும் வாச்சியத்தோடு, வேடர்கள் முழங்குதல் நீங்காத இம் முருகன் பூண்டி மாநகரிடத்து, அணிகளைத் தாங்கிய தனங்களையுடைய மங்கை ஒருத்தியோடு இங்கு எதன் பொருட்டு இருக்கின்றீர்?

507. முந்தி வானவர் தாந்தொ ழும்முரு
கன்பூண்டி மாநகர்வாய்ப்
**பந்த ணைவிரற் பாவை தன்னையொர்**
பாகம் வைத்தவனைச்
சிந்தை யிற்சிவ தொண்ட னூரன்
உரைத்தன பத்துங்கொண்
டெந்தம் மடிகளை ஏத்து வார்இட
ரொன்றுந் தாமிலரே. 10

தேவர், ஒருவர் ஒருவரின் முற்பட்டு வணங்குகின்ற, திருமுருகன்பூண்டி மாநகரிடத்து எழுந்தருளியிருக்கின்ற, பந்திற் பொருந்திய விரல்களையுடைய, பாவைபோலும் மங்கையை ஒரு பாகத்து வைத்துள்ள சிவபெருமானை, அவனுக்குத் தொண்டனாகிய நம்பியாரூரன் அன்பினாற் பாடிய இப் பத்துப் பாடல்களால் அவ்வெம்பெருமானைத் துதிப்பவர்கள், துன்பம் ஒன்றும் இல்லாதவராவர்.

## 50. திருப்புனவாயில்

பண் : பழம்பஞ்சுரம் | பதிக எண் : 50

| **மூர்த்தி** | அருள்தரும் கருணைநாயகி உடனமர் அருள்மிகு புனவாயில்நாதர். | | |
|---|---|---|---|
| **தல இருப்பிடம்** | பாண்டிய நாட்டில் அறந்தாங்கி, ஆவுடையார் கோவில் வழியாக அறந்தாங்கியிலிருந்து 45 கி.மீ. தொலைவில் அமைந்து உள்ளது. | | |
| **தல மரம்** | புன்னை, மகிழம் | | |
| **தீர்த்தம்** | லட்சுமி, பிரம்மதீர்த்தம் | | |
| **பாடியவர்** | திருஞானசம்பந்தர், நம்பியாரூரர் | **பதிகங்கள்** | 2 |

508. சித்த நீநினை யென்னொடு சூளறு வைகலும்
மத்த யானையின் ஈருரி போர்த்த மணாளன்ஊர்
பத்தர் தாம்பலர் பாடிநின் றாடும் பழம்பதி
பொத்தில் ஆந்தைகள் பாட்ட றாப்புன வாயிலே. 1

சித்தம் நீ வைகலும் நினை என்னொடு சூள் அறும் – மனமே நீ தினமும் புனவாயிலை நினைவாயாக! அப்படி நினைவாயானால் என்னோடு கூடியிருக்கும் படியான குற்றங்கள் யாவையும், என்னை விட்டு ஒழியும். சூளறும் – பந்தம் நீங்கும்.

மனமே! நீ, 'நும் நெறியாற் பயன் கிட்டாது' என்று, இப்பொழுது என்னொடு சூள் செய்தலை ஒழி; மதத்தையுடைய யானையின், உரித்த தோலைப் போர்த்த அழகனாகிய சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்ற ஊர், அடியார் பலர், திருப்பாடல்கள் பலவற்றைப் பாடி ஆடுகின்ற பழைய ஊராகிய மரப்பொந்துகளில் ஆந்தைகளின் பாட்டு ஒழியாத திருப்புனவாயிலே; அதனை நாள்தோறும் தப்பாது நினை; பின்னர் என்னொடு சொல்.

509. கருதி நீமனம் என்னொடு சூளறு வைகலும்
எருது மேற்கொளும் எம்பெரு மாற்கிட மாவது
மருத வானவர் வைகும் இடம்மற வேடுவர்
பொருது சாத்தொடு பூசல றாப்புன வாயிலே. 2

சாத்தொடு பூசலறா – ஒருவரை ஒருவர் அடித்தலோடு சண்டை நீங்காத.

மனமே! நீ, இப்பொழுது என்னொடு சூள் செய்தலை ஒழி; எருதினை ஊர்கின்ற எம்பெருமானுக்கு இடமாய் இருப்பது, இந்திரன் முதலிய தேவர் நீங்காதிருக்கின்ற இடமாகிய, வேடர்கள் வாணிகச் சாத்தோடு போர்செய்தலால், ஆரவாரம் ஒழியாத திருப்புனவாயிலே; அதனை நாள்தோறும் தப்பாது நினை; பின்னர் என்னொடு சொல்.

510. தொக்காய்மன மென்னொடு சூளறு வைகலும்
நக்கானமை ஆளுடை யான்நவி லும்மிடம்
அக்கோடர வார்த்தபி ரானடிக் கன்பராய்ப்
புக்காரவர் போற்றொழி யாப்புன வாயிலே. 3

அளவற்ற நினைவுகள் பொருந்தி ஆராய்கின்ற மனமே! நீ, இப்பொழுது என்னொடு சூள்செய்தலை ஒழி. ஆடையில்லாதிருப்பவனும், நம்மை ஆளாக உடையவனும் ஆகிய சிவபெருமானுக்கு இடமாய் இருப்பது, எலும்பையும், பாம்பையும் அணிந்த அப்பெருமானுக்கு அன்பராய், அவனையே புகலிடமாக அடைந்தவர் அவனைப் போற்றுதல் ஒழியாத திருப்புனவாயிலே; அதனை நாள்தோறும் தப்பாது நினை; பின்னர் என்னொடு சொல்.

இப்பதிகத்தின் பெரும்பாலான பாடல்களில் மனத்தையும், நினைப்பையும் நினைவூட்டுகிறார்.

தொக்காய் – கூடிய.

511. வற்கென் றிருத்திகண் டாய்மன மென்னொடு சூளறு
பொற்குன்றஞ் சேர்ந்ததொர் காக்கைபொன் னாமதுவேபுகல்
கற்குன்றுந் தூறுங் கடுவெளி யுங்கடற் கானல்வாய்ப்
புற்கென்று தோன்றிடு மெம்பெரு மான்புன வாயிலே. 4

மனமே! நீ, முருடுடையையாய் இருக்கின்றாய்; என்னொடு இப்பொழுது சூள்செய்தலை ஒழி; பொன்மலையைச் சேர்ந்த காக்கையும் பொன்னிறமாம் ஆதலின், கரையிடத்து, சிறிய கற்குன்றுகளும் புதர்களும், வெப்பம் மிக்க வெற்றிடமும் பொலிவிழந்து தோன்றுதற்குக் காரணமான எம் பெருமானது திருப்புன வாயிலாகிய அதனையே போற்று; பின்னர் என்னொடு சொல்.

தூறு – புதர். கடுவெளி – கொடுமையான பாலை நிலம்.

கடல்கானல் – கடற்கரைச் சோலை.

புற்கென்று – அந்திப் பொழுதின் தோற்றத்தோடு. வற்கென்று – வாளா.

512. நில்லாய்மன மென்னொடு சூளறு வைகலும்
நல்லான்நமை ஆளுடை யான்நவி லும்மிடம்
வில்வாய்க்கணை வேட்டுவ ராட்ட வெருண்டுபோய்ப்
புல்வாய்க்கணம் புக்கொளிக் கும்புன வாயிலே. 5

மனமே! நீ, இப்பொழுது என்னொடு சூள்செய்தலை ஒழி; நன்மையே வடிவானவனும், நம்மை ஆளாக உடையவனுமாகிய சிவபெருமான் பெரிதும் உறையும் இடம், வேடர்கள், தம் வில்லின்கண் தொடுத்த அம்பினால் வெருட்ட வெருண்டு ஓடி, மான் கூட்டம் புகுந்து ஒளிக்கின்ற திருப்புனவாயிலே; நாள்தோறும் அதன்கண் சென்று நில் பின்னர் என்னொடு சொல்.

புல்வாய்க் கணம் – மான் கூட்டம்.

513. மறவல் நீமன மென்னொடு சூளறு வைகலும்
உறவும் ஊழியும் ஆயபெம் மாற்கிட மாவது
பிறவு கள்ளியின் நீள்கவட் டேறித்தன் பேடையைப்
புறவங் கூப்பிடப் பொன்புனஞ் சூழ்புன வாயிலே. 6

கவடு – கிளை

மனமே! நீ, இப்பொழுது என்னொடு சூள்செய்தலை ஒழி; எல்லா உயிர்கட்கும் உறவும், காலமுமாய் நிற்கும் சிவபெருமானுக்கு இடமாய் இருப்பது, சேவற் புறா, தன் பெடை பிரிந்தபின்பு, அதனை, கள்ளிப் புதரின் வளர்ந்த கிளையில் ஏறிநின்று கூப்பிட, புனங்களின் பொன் நிறைந்து காணப்படுகின்ற திருப்புனவாயிலே; அதனை மறவாது நினை; பின்னர் என்னொடு சொல்.

514. ஏசற்று நீநினை என்னொடு சூளறு வைகலும்
பாசற்றவர் பாடிநின் றாடும் பழம்பதி
தேசத் தடியவர் வந்திரு போதும் வணங்கிடப்
பூசற்றுடி பூசல றாப்புன வாயிலே. 7

செற்று – துன்பமற்று.

பூசல் துடிப்பூசல் – வாத்திய முழக்கமும், உடுக்கை முழக்கமும்

மனமே! நீ, இப்பொழுது என்னொடு சூள் செய்தலை ஒழி; பாசம் நீங்கிய மெய்யுணர்வினர் புகழ்ந்து பாடி, நின்று ஆடுகின்ற பழைமையான ஊர், பல நாட்டிலும் உள்ள அடியவர் பலரும் வந்து காலையிலும், மாலையிலும் வணங்க, வேடுவர்களது போர்ப்பறை ஆரவாரத்தை ஒழியாத திருப்புனவாயிலே; அதனை, இகழ்தல் அற்று, நாள்தோறும் தப்பாது நினை; பின்னர் என்னொடு சொல்.

515. கொள்ளி வாயின கூரெயிற் றேனங் கிழிக்கவே
தெள்ளி மாமணி தீவிழிக் கும்மிடஞ் செந்தறை
கள்ளிவற் றிப்புற் றீந்துவெங் கானங் கழிக்கவே
புள்ளி மானினம் புக்கொளிக் கும்புன வாயிலே. 8

சிவலிங்கம் மிகப்பெரிய மூர்த்தி.

சுவாமிக்கு மூன்ற முழமும் ஆவுடையார்க்கு முப்பது முழமும் ஆடை வேண்டும் என்று சொல்லுவார்கள்.

கொள்ளிபோல முனை சிவந்து நீண்ட வாயினையுடையனவாகிய, கூரிய பற்களையுடைய பன்றிகள் நிலத்தைக் கிண்ட வெளிப்பட்ட சிறந்த மாணிக்க மணியோடு நெருப்புத் தோன்றுமிடத்துச் சிவந்து காட்டும் நிலத்தின்கண் உள்ள கள்ளி உலர்ந்து, புல்தீந்து, கொடிய காடு அழிகையினாலே, புள்ளிமானின் கூட்டம் புகுந்து ஒளிக்கின்ற திருப்புனவாயிலே.

516. எற்றேநினை என்னொடு சூளறு வைகலும்
**மற்றேதும் வேண்டா வல்வினை யாயின மாய்ந்தறக்**
கற்றூ றுகார்க் காட்டிடை மேய்ந்தகார்க் கோழிபோய்க்
புற்றேறிக் கூகூ எனஅழைக் கும்புன வாயிலே. **9**

எற்றே நினை – எவ்விதத்திலாவது நினை.

மனமே, நின் செய்கைதான் எத்தன்மைத்து! என்னொடு சூள்செய்தலை ஒழி; நம் வலிய வினையெனப் படுவன யாவும் அடியோடு கெட்டொழிதற்கு மற்றுச் சூழ்ச்சி யாதும் வேண்டா; கல்லைச் சூழ்ந்த புதரிலும், கரிய காட்டிடத்தும் இரையை உண்ட கரிய கானங் கோழிகள், ஈயற் புற்றுக்களின் மேல் ஏறி நின்று, ‘கூகூ’ எனக் கூப்பிடுகின்ற திருப்புனவாயிலை நாள்தோறும் தப்பாது நினை.

517. பொடியாடு மேனியன் பொன்புனஞ் சூழ்புன வாயிலை
அடியா ரடியன் னாவல வூரன் உரைத்தன
மடியாது கற்றிவை ஏத்தவல் லார்வினை மாய்ந்துபோய்க்
குடியாகிப் பாடிநின் றாடவல் லார்க்கில்லை குற்றமே. 10

இயற்றமிழ் பாவளவிற் பாடி ஏத்துதலினும், இதைத் தமிழியல்பு நிரம்பப் பாடுதலும், அதற்கேற்ப ஆடுதலும் சிறந்தது என்றருள்கிறார்.

நீற்றின்கண் மூழ்கிய திருமேனியனாகிய சிவபெருமானது, புனங்களில் பொன் நிறைந்துள்ள திருப்புனவாயிலை, அடியார்க்கு அடியானாகிய திருநாவலூரன் பாடிய இப் பாடல்களை, சோம்பியிராது கற்று, அவற்றால் அப்பெருமானை ஏத்த வல்லவர், முன்செய்த வினை எல்லாம் மாய்ந்துபோகப் பெற்று, அப்பெருமானுக்கே அடியராய் வாழ, அவற்றை இசைவழிப் பாடி நின்று ஆடவல்லவர்க்கு, செய்வன தவிர்வனவற்றிற் பிறழ்தலால் வருங்குற்றம் இல்லையாம்.

## 51. திருவாரூர்

பண் : பழம்பஞ்சுரம் பதிக எண் : 51

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் அல்லியங்கோதை உடனமர் அருள்மிகு புற்றிடங்கொண்டீசர். | | |
| **தல இருப்பிடம்** | சோழநாட்டில் காவிரியின் தென்கரையில் தஞ்சாவூரிலிருந்து 70 கி.மீ. தொலைவில் அமைந்து உள்ளது. | | |
| **தல மரம்** | பாதிரி | | |
| **தீர்த்தம்** | கமலாலயக்குளம் – 5 வேலி – 33.00 ஏக்கர் | | |
| **பாடியவர்** | மூவர் | **பதிகங்கள்** | 33 |

திருவாரூர் வீதிவிடங்கப் பெருமானது வசந்த விழாவை நினைவுகூர்ந்து புற்றிடங்கொண்டிருந்தாரை ஈங்கு நான் மறந்தேன் என்று மிக வருந்தி அவரை நினைந்து பாடியருளியது இத்திருப்பதிகம். மிக மன உருக்கம் புலப்படும் அரிய கருத்தும், இசையமைதியும் கொண்டது; முழு மனனப் பதிகமாகும்.

518. பத்திமையும் மடிமையையுங்
கைவிடுவான் பாவியேன்
பொத்தினநோ யதுஇதனைப்
பொருளறிந்தேன் போய்த்தொழுவேன்
முத்தினைமா மணிதன்னை
வயிரத்தை மூர்க்கனேன்
எத்தனைநாள் பிரிந்திருக்கேன்
என்ஆரூர் இறைவனையே. 1

பத்திமை – அகநிலை அன்புடைமை. அடிமை – புறநிலை.
கைவிடுவான் – நழுவ விடுவானாகி

பாவியும், மூடனும் ஆகிய யான், என் அன்பையும், அடிமையையும் விட்டொழியும்படி, முத்தும், சிறந்த மாணிக்கமும், வயிரமும் போன்ற எனது திருவாரூர் இறைவனைப் பிரிந்து எத்தனை நாள் இவ்விடத்திற்றானே இருப்பேன்! என்னை மூடியுள்ள நோயாகிய இவ்வுடம்பின் மெய்ம்மையை அறிந்துகொண்டேன்; ஆதலின் இங்கு இரேன்; விரையச் சென்று அவனை வணங்குவேன்.

519. ஐவணமாம் பகழியுடை
அடல்மதனன் பொடியாகச்
செவ்வணமாந் திருநயனம்
விழிசெய்த சிவமூர்த்தி
மையணவும் கண்டத்து
வளர்சடையெம் மாரமுதை
எவ்வணம்நான் பிரிந்திருக்கேன்
என்ஆரூர் இறைவனையே. 2

வண்ணம் – வகை என்ற பொருளில் வந்தது.
அணவுதல் – பொருந்துதல்

ஐந்து வகையான அம்புகளைப் பெற்ற வெற்றியையுடைய மன்மதன் சாம்பலாகுமாறு, செந்நிறமான அழகிய நெற்றிக் கண்ணைத் திறந்த சிவமூர்த்தியாகிய, கருமை பொருந்திய கண்டத்தையும், நீண்ட சடையினையும் உடைய, எங்கள் அரிய அமுதம் போன்ற எனது திருவாரூர் இறைவனைப் பிரிந்து, நான் எவ்வாறு இவ்விடத்திற்றானே இருப்பேன்! இரேன்; விரையச்சென்று அவனை வணங்குவேன்.

520. சங்கலக்குந் தடங்கடல்வாய்
விடஞ்சுடவந் தமரர்தொழ
அங்கலக்கண் தீர்த்துவிடம்
உண்டுகந்த அம்மானை
இங்கலக்கும் உடற்பிறந்த
அறிவிலியேன் செறிவின்றி
எங்குலக்கப் பிரிந்திருக்கேன்
என்ஆரூர் இறைவனையே. 3

"பிரிந்திருக்கேன் என் ஆரூர் இறைவனையே" என்பது பதிக மகுடமாகும்.
அலக்குதல் – அலையச் செய்தல்.
அலக்கண் – துன்பம். உலக்க – அழிவுபெற – முடிவுபெற.
செறிவு – சேர்தல்.

வருத்துதலைச் செய்கின்ற உடலிற்பட்டு இவ்வுலகிற் பிறந்த அறிவில்லேனாகிய யான், தேவர், சங்குகள் விளங்குகின்ற பெரிய கடலிடத்துத் தோன்றிய ஆலகாலவிடம் தம்மைச் சுடுகை யினாலே அடைக்கலமாக வந்து வணங்க, அப்பொழுதே அவரது துன்பத்தை நீக்கி, அவ்விடத்தை உண்டு, அவரை விரும்பிக் காத்த பெரியோனாகிய எனது திருவாரூர் இறைவனை அடைதல் இன்றிப் பிரிந்து, எவ்விடத்து இறத்தற் பொருட்டு இவ்விடத்திற்றானே இருப்பேன்! இரேன்; விரையச் சென்று அவனை வணங்குவேன்.

521. இங்ஙனம்வந் திடர்ப்பிறவிப்
பிறந்தயர்வேன் அயராமே
அங்ஙனம்வந் தெனையாண்ட
அருமருந்தென ஆரமுதை
வெங்கனல்மா மேனியனை
மான்மருவுங் கையானை
எங்ஙனம்நான் பிரிந்திருக்கேன்
என்ஆரூர் இறைவனையே. 4

இங்ஙனம் – இவ்வுலகத்திடை.
அங்ஙனம் – முன் அருளிய அவ்வாறு.
எங்ஙனம் – எவ்வாறு ?

இவ்வுலகில் வந்து, துன்பத்தைத் தருகின்ற பிறப்பிற் பிறந்து மயங்குவேனாகிய யான், அங்ஙனம் மயங்காதவாறு நான் பிறந்திருந்த ஊரிற்றானே வந்து என்னை அடிமையாக்கிக் கொண்ட அரிய மருந்தும், அமுதும் போல்பவனும், வெம்மையான நெருப்புப் போலும் சிறந்த திருமேனியை உடையவனும், மான் பொருந்திய கையை உடையவனும் ஆகிய எனது திருவாரூர் இறைவனைப் பிரிந்து நான் எவ்வாறு இவ்விடத்திற்றானே இருப்பேன்! இரேன்; விரையச் சென்று அவனை வணங்குவேன்.

522. செப்பரிய அயனொடுமால்
சிந்தித்துந் தெரிவரிய
அப்பெரிய திருவினையே
அறியாதே யருவினையேன்
ஒப்பரிய குணத்தானை
இணையிலியை அணைவின்றி
எப்பரிசு பிரிந்திருக்கேன்
என்ஆரூர் இறைவனையே. 5

அணைவு – சேர்தல்.
பரிசு – வகைதன்மை.

நீக்குதற்கரிய வினையையுடையேனாகிய யான், சொல்லுதற்கரிய பெருமையையுடைய, 'பிரமதேவனும், திருமாலும்' என்னும் அவர்தாமும் நினைத்தற்கும், காண்பதற்கும் அரிய அத்தன்மைத்தாய பெரிய செல்வமாய் உள்ளவனும், பிறர் ஒருவரது குணமும் நிகர்த்தல் இல்லாத அருட்குணங்களை யுடையவனும், பிறர் ஒருவரும் தனக்கு நிகரில்லாதவனும் ஆகிய எனது திருவாரூர் இறைவனை நினைத்தலும், அடைதலும் இன்றிப் பிரிந்து, எவ்வாறு இவ்விடத்திற்றானே இருப்பேன்! இரேன்; விரையச் சென்று அவனை வணங்குவேன்.

**523.** வன்னாக நாண்வரைவில்
அங்கிகணை அரிபகழி
தன்னாகம் உறவாங்கிப்
புரமெரித்த தன்மையனை
முன்னாக நினையாத
மூர்க்கனேன் ஆக்கைசுமந்
தென்னாகப் பிரிந்திருக்கேன்
என்ஆரூர் இறைவனையே. 6

வலிய பாம்பு நாணியும், மலை வில்லும், திருமால் அம்பும், அங்கியங் கடவுள் அம்பின் முனையுமாகத் தன் மார்பிற் பொருந்த வலித்து முப்புரத்தை எரித்த தன்மையை உடையவனாகிய எனது திருவாரூர் இறைவனை முன்பே நினைந்து போக முயலாத மூடனேயாகிய யான், அவனைப் பிரிந்து, என்னாவதற்கு இவ் வுடலைச் சுமந்து இவ்விடத்திற்றானே இருப்பேன்! இரேன்; விரையச் சென்று அவனை வணங்குவேன்.

நாண் – வில்லின் கயிறு.
வரைவில் – மேரு மலையே வில்லாக.
அங்கிகணை – அக்கினியே கணையின் –
கூர் – நுனி – முனையாக.
அரிபகழி – விட்டுணு அம்பாக
தன்னாகம் உறவாங்கி – தனது மார்பு பொருந்த வளைந்து. என்னாக – என்ன பயன் கருதி.

**524.** வன்சயமா யடியான்மேல்
வருங்கூற்றின் உரங்கிழிய
முன்சயமார் பாதத்தான்
முனிந்துகந்த மூர்த்திதனை
மின்செயும்வார் சடையானை
விடையானை அடைவின்றி
என்செயநான் பிரிந்திருக்கேன்
என்ஆரூர் இறைவனையே. 7

பின்னிடாத வெற்றியையுடையவனாய்த் தன் அடியவன்மேல் வந்த கூற்றுவனை அவனது மார்பு பிளக்கும்படி வெற்றி பொருந்திய தனது திருவடியால் முன்பு உதைத்து, பின்பு எழுப்பிய மூர்த்தியும், மின்னலினது ஒளியை உண்டாக்குகின்ற நீண்ட சடையையும், விடையையும் உடையவனும் ஆகிய எனது திருவாரூர் இறைவனை அடைதல் இன்றிப் பிரிந்து, நான், என் செய்வதற்கு இவ்விடத்திற்றானே இருப்பேன்! இரேன்; விரையச் சென்று அவனை வணங்குவேன்.

வன்சயமாய் – வலிய வெற்றி பொருந்த.
உரம் – மார்பு.

**525.** முன்னெறிவா னவர்கூடித்
தொழுதேத்து முழுமுதலை
அந்நெறியை யமரர்தொழும்
நாயகனை யடியார்கள்
செந்நெறியைத் தேவர்குலக்
கொழுந்தைமறந் திங்ஙனம்நான்
என்னறிவான் பிரிந்திருக்கேன்
என்ஆரூர் இறைவனையே. 8

பிற உயிர்கட்கு அவை செல்லுமாறு நிற்கும் நெறியாய் உள்ள பிரமனும், மாயோனும் கூடி வணங்கிப் போற்றுகின்ற முழுமுதற் பொருளானவனும், அப்பொருளை அடையும் நெறியாய் உள்ளவனும், ஏனைய தேவரும் வணங்கும் தலைவனும், எல்லாத் தேவருள்ளும் சிறந்த தேவனும், தன் அடியார்களுக்குச் செவ்விய நெறியாய் விளங்குபவனும் ஆகிய எனது திருவாரூர் இறைவனைப் பிரிந்து மறந்து, நான், எதனை அறிந்து அனுபவித்தற்பொருட்டு இவ்விடத் திற்றானே இருப்பேன்! இரேன்; விரையச் சென்று அவனை வணங்குவேன்.

இப்பதிகத்தை மிகநினைந்து பன்னிய சொல் அடங்கு பதிகம் என்று தெய்வச் சேக்கிழார் போற்றி மகிழ்கிறார். பன்னுதல் – ஒரே பொருளை பல திறத்தாலும் அனுபவித்துச் சொல்லுதல்.
எத்தனை நாள் பிரிந்திருக்கேன், எவ்வகை நான் பிரிந்திருக்கேன், எங்குலக்கப் பிரிந்திருக்கேன் என்று எல்லாப் பாடல்களிலும் பிரிவாற்றாமை பாடி உருகுகிறார்.

**526.** கற்றுளவான் கனியாய
கண்ணுதலைக் கருத்தார
உற்றுளனாம் ஒருவனைமுன்
இருவர்நினைந் தினிதேத்தப்
பெற்றுளனாம் பெருமையனைப்
பெரிதடியே கையகன்றிட்
டெற்றுளனாய்ப் பிரிந்திருக்கேன்
என்ஆரூர் இறைவனையே. 9

"கற்றுளவான் கனி" – கற்றதனால் ஆய பயனாகிய பொருள். கருத்தார உற்றுளனாம் – உள்ள நிறைந்து ஒளித்திருந்த முதல்வனாகிய. எற்று உளனாய் – எதனை உடையேனாகி.

மெய்ந்நூல்களைக் கற்று நினைக்குமிடத்துச் சிறந்த கனிபோல இனிக்கின்ற, கண்ணை யுடைய நெற்றியையுடையவனும், என் உள்ளத்தில் நிரம்பப் பொருந்தியுள்ளவனாகிய ஒப்பற்றவனும், முன்பு இருவராகிய மாலும் அயனும் நினைந்து நன்கு போற்றப் பெற்ற பெருமையை உடையவனும் ஆகிய எனது திருவாரூர் இறைவனை, அவன் அடியேனாகிய யான் எனது ஒழுக்கத்தைப் பெரிதும் நீங்கிப் பிரிந்து, எதன்பொருட்டு இறவாது உள்ளேனாய், இவ்விடத்திற்றானே இருப்பேன்! இரேன்; விரையச் சென்று அவனை வணங்குவேன்.

---

**527.** ஏழிசையாய் இசைப்பயனாய்
இன்னமுதாய் என்னுடைய
தோழனுமாய் யான்செய்யுந்
துரிசுகளுக் குடனாகி
மாழையொண்கண் **பரவையைத்**
**தந்தாண்டானை** மதியில்லா
ஏழையேன் பிரிந்திருக்கேன்
என்ஆரூர் இறைவனையே. 10

இறைவரது திருவருளின் ஆணை வழியே பரவையாரை மணந்த நிகழ்வுகளை நினைவு கூர்தல்.
துரிசு – குற்றம். உடனாகி – உடனே நின்று.
மாழை – மாவடு.

ஏழிசைகளைப் போன்றும், அவ்விசைகளின் பயனாகிய பண்களைப் போன்றும், இனிய அமுதத்தைப்போன்றும் இன்பத்தைத் தந்து, அதன்மேல் என்னுடைய தோழனும் ஆகி, யான் செய்யும் குற்றங்களுக்கு உடன்பட்டு, மாவடுவின் வகிர்போலும், ஒளி பொருந்திய கண்களையுடைய பரவையை எனக்கு ஈந்து என்னை அடிமைகொண்டவனாகிய எனது திருவாரூர் இறைவனை, அறிவில்லாத எளியேன் பிரிந்து இவ்விடத்திற்றானே இருப்பேனோ! இரேன்; விரையச் சென்று அவனை வணங்குவேன்.

---

**528.** வங்கமலி கடல்நஞ்சை
வானவர்கள் தாம்உய்ய
நுங்கிஅமு தவர்க்கருளி
நொய்யேனைப் பொருட்படுத்துச்
**சங்கிலியோ டெனைப்புணர்த்த**
தத்துவனைச் சழக்கனேன்
எங்குலக்கப் பிரிந்திருக்கேன்
என்ஆரூர் இறைவனையே. 11

சங்கிலியோடு அவரைப் புணர்த்த வரலாறு.
நுங்கி – விழுங்கி; விரைவாக உண்டு.
சழக்கனேன் – குற்றமுள்ளவன்.

தேவர்கள் பிழைத்தற்பொருட்டு, மரக்கலங்கள் நிறைந்த கடலில் தோன்றிய நஞ்சினைத் தான் உண்டு, அமுதத்தை அவர்கட்கு அருளினவனும், சிறியேனை ஒரு பொருளாக வைத்து என் வேண்டுகோளுக்கு இரங்கி, என்னைச் சங்கிலியோடு கூட்டுவித்த மெய்ப்பொருளாய் உள்ளவனும் ஆகிய எனது திருவாரூர் இறைவனைப் பொய்யனாகிய யான் எங்கு இறப்பதற்குப் பிரிந்து இவ்விடத்திற்றானே இருப்பேன்! இரேன்; விரையச் சென்று அவனை வணங்குவேன்.

529. பேரூரு மதகரியின்
உரியானைப் பெரியவர்தம்
சீரூருந் திருவாரூர்ச்
சிவனடியே திறம்விரும்பி
ஆரூரன் அடித்தொண்டன்
அடியன்சொல் அகலிடத்தில்
ஊரூர னிவைவல்லார்
உலகவர்க்கு மேலாரே. 12

பேர் ஊரும் மதகரி – பெரிதாக வரும் மதத்தினை யுடைய யானை.

செயற்கரிய செய்த பெரியார் தம் புகழ்மிக்கு விளங்கும் திருவாரூரில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானது திருவடியைச் சென்று சேரும் திறத்தையே விரும்பி, புகழ்மிகுந்த மத யானையின் தோலையுடைய அவனை, அவன் அடித்தொண்டனாகிய, இவ்வுலகின்கண் எங்கும் செல்கின்ற நம்பியாரூரன் சொல்லிய இப்பாடல்களைப் பாடவல்லவர், உலகர் எல்லார்க்கும் மேலானவராவர்.

## 52. திருவாலங்காடு

பண் : பழம்பஞ்சுரம் பதிக எண் : 52

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் வண்டார்குழலி உடனமர் ஊர்த்த தாண்டவர். | | |
| **தல இருப்பிடம்** | தொண்டை நாட்டில் சென்னை – திருவள்ளூர் – அரக்கோணம் செல்லும் பேருந்துப் பாதையில் திருவள்ளூரிலிருந்து 16 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | பலா, ஆல் | | |
| **தீர்த்தம்** | சென்றாடு தீர்த்தம், முத்தி தீர்த்தம் | | |
| **பாடியவர்** | மூவர் | **பதிகங்கள்** | 4 |

530. முத்தா முத்தி தரவல்ல
முகிழ்மென் முலையாள் உமைபங்கா
சித்தா சித்தித் திறங்காட்டுஞ்
சிவனே தேவர் சிங்கமே
பத்தா பத்தர் பலர்போற்றும்
பரமா பழைய னூர்மேய
அத்தா ஆலங் காடாஉன்
னடியார்க் கடியேன் ஆவேனே. 1

இத்திருப்பதிகம், திருவாரூரில் உள்ள அடியவர் திருக்கூட்டத்தை அகன்று நின்ற நிலையை நினைந்து, அதை விரைய்ச் சென்று அடைய விரும்பி திருவாலங்காட்டை மிதியாது அதன் அயலில் நின்று பாடியருளியது.

பற்றா என்பது பத்தா என மருவிற்று. முத்தா – இயல்பாகவே பாசங்களிலிருந்து நீங்கியவனே.

முத்தி – சிவானந்தப் பரயோகப் பெருவாழ்வு.

பத்தா – அடியவர்களிடத்து அன்புடையவனே.

இயல்பாகவே கட்டில்லாதவனே! கட்டுற்ற உயிர்கட்கெல்லாம் வீடளிக்கவல்ல, அரும்புகின்ற மெல்லிய தனங்களையுடையா ளாகிய உமையவளது பாகத்தையுடையவனே! சித்திகளை எல்லாம் உடையவனே! அச்சித்திகளை அடையும் வழியைக் காட்டுகின்ற சிவபெருமானே! தேவர்களாகிய விலங்குகட்குச் சிங்கம் போல்பவனே! அடியார்களுக்குப் பற்றாய் உள்ளவனே! அன்புடையார் பலரும் போற்றும் கடவுளே! பழையனூரை விரும்புகின்ற தலைவனே! திருவாலங்காட்டில் எழுந்தருளியிருப்பவனே! அடியேன் என்றும் உன் அடியார்க்கு அடியேனாகியே வாழ்வேன்.

| | | |
|---|---|---|
| 531. பொய்யே செய்து புறம்புறமே<br>திரிவேன் றன்னைப் போகாமே<br>மெய்யே வந்திங் கெனையாண்ட<br>மெய்யா மெய்யர் மெய்ப்பொருளே<br>பையா டரவம் அரைக்கசைத்த<br>பரமா பழைய னூர்மேய<br>ஐயா ஆலங் காடாஉன்<br>னடியார்க் கடியேன் ஆவேனே. | 2 | மனத்தொடு பொருந்தாத செயல்களையே செய்து, அதனால் உனக்கு மிகவும் சேய்மையிலே திரிவேனாகிய என்னை, அங்ஙனம் அகன்றொழியாதவாறு தடுத்து இவ்வுலகில் நேரே வந்து என்னை ஆட்கொண்ட மெய்ம்மையுடையவனே! மெய்ம்மையுடைய வர்க்கு மெய்ப்பொருளாய் உள்ளவனே! படம் எடுத்து ஆடுகின்ற பாம்பை அரையிற் கட்டிய கடவுளே! பழையனூரை விரும்புகின்ற தலைவனே! திருவாலங்காட்டில் எழுந்தருளியிருப்பவனே! அடியேன் என்றும் உன் அடியார்க்கு அடியேனாகியே வாழ்வேன். |
| 532. தூண்டா விளக்கின் நற்சோதீ<br>தொழுவார் தங்கள் துயர்தீர்ப்பாய்<br>பூண்டாய் எலும்பைப் புரம்மூன்றும்<br>பொடியாச் செற்ற புண்ணியனே<br>பாண்டாழ் வினைக ளவைதீர்க்கும்<br>பரமா பழைய னூர்மேய<br>ஆண்டா ஆலங் காடாஉன்<br>னடியார்க் கடியேன் ஆவேனே. | 3 | தூண்ட வேண்டாது ஒளிரும் விளக்குப் போலச் சிறந்த ஒளிவடிவினனே! வணங்குவாரது துன்பத்தை நீக்குபவனே! எலும்பையே அணியாகப் பூண்டவனே! முப்புரங்களையும் சாம்பலாகுமாறு அழித்த அறவுருவினனே! முன்பு செய்யப்பட்ட அழுந்துதற்கு இடமான வினைகளாகிய அவற்றை நீக்கியருளுகின்ற கடவுளே! பழையனூரை விரும்புகின்ற தலைவனே! திருவாலங்காட்டில் எழுந்தருளி யிருப்பவனே! அடியேன், உன் அடியார்க்கு அடியேனாகியே வாழ்வேன். |
| 533. மறிநே ரொண்கண் மடநல்லார்<br>வலையிற் பட்டு மதிமயங்கி<br>அறிவே யழிந்தேன் ஐயாநான்<br>மையார் கண்ட முடையானே<br>பறியா வினைக ளவைதீர்க்கும்<br>பரமா பழைய னூர்மேய<br>அறிவே யாலங் காடாஉன்<br>னடியார்க் கடியேன் ஆவேனே.<br><br>மறிநேர் – பெண் மானையொத்த.<br>மறியா – ஒழியாத. | 4 | தலைவனே! கருமைபொருந்திய கண்டத்தை யுடையவனே! தீர்க்க இயலாத வினைகளை யெல்லாம் தீர்த்தருளுகின்ற கடவுளே! பழையனூரை விரும்புகின்ற அறிவு வடிவானவனே! திருவாலங்காட்டில் எழுந்தருளி யிருப்பவனே! அடியேன், மான்போலும் ஒளி பொருந்திய கண்களையுடைய, இளைய, அழகிய மாதர் ஆசையாகிய வலையில் அகப்பட்டு, அறிய வேண்டுவனவற்றை அறியாது, அறிவு அடியோடே கெட்டேன்; அவ்வாறே இனியுங் கெட்டொழியாது உன் அடியார்க்கு அடியேனாகியே வாழ்வேன். |

534. வேலங் காடு தடங்கண்ணார்
வலையுட் பட்டுன் நெறிமறந்து
மாலங் காடி மறந்தொழிந்தேன்
மணியே முத்தே மரகதமே
பாலங் காடீ நெய்யாடீ
படர்புன் சடையாய் பழையனூர்
ஆலங் காடா உன்னுடைய
அடியார்க் கடியேன் ஆவேனே. 5

"ஆலங்காடா உன்னடியார்க் கடியேன் ஆவேனே" என்பது பதிக மகுடமாகும்.

மாணிக்கம் போல்பவனே! முத்துப் போல்பவனே! மரகதம் போல்பவனே! பால் முழுக்கு ஆடுபவனே! நெய் முழுக்கு ஆடுபவனே! விரிந்த புல்லிய சடையை யுடையவனே! பழையனூரைச் சார்ந்த திருவாலங்காட்டில் எழுந்தருளியிருப்பவனே! அடியேன் வேல்போலும், பெரிய கண்களை யுடைய மாதராசையாகிய வலையில் அகப்பட்டு, உன்னாற் சொல்லப்பட்ட நெறியை மறந்து, மயக்கம் மிகுந்து என்னையே மறந்தொழிந்தேன்; இனி அவ்வாறு இராது, என்றும் உன் அடியார்க்கு அடியனாகியே வாழ்வேன்.

535. எண்ணார் தங்கள் எயில்எய்த
எந்தாய் எந்தை பெருமானே
கண்ணாய் உலகங் காக்கின்ற
கருத்தா திருத்த லாகாதாய்
பண்ணார் இசைக ளவைகொண்டு
பலரும் ஏத்தும் பழையனூர்
அண்ணா ஆலங் காடாஉன்
னடியார்க் கடியேன் ஆவேனே. 6

உன்னை மதியாதவரது மதில்களை அழித்த என் தந்தையே! என் தந்தைக்கும் பெருமானே! உலகத்திற்குக் கண்ணாய் நின்று அதனைக் காக்கின்ற முதல்வனே! குற்றமில்லாதவனே! பண் பொருந்திய இசைகளைக் கொண்டு பலரும் துதிக்கின்ற பழையனூர்த் தலைவனே! திருவாலங்காட்டில் எழுந்தருளியிருப்பவனே! அடியேன், என்றும் உன் அடியார்க்கு அடியேனாகியே வாழ்வேன்.

536. வண்டார் குழலி உமைநங்கை
பங்கா கங்கை மணவாளா
விண்டார் புரங்கள் எரிசெய்த
விடையாய் வேத நெறியானே
பண்டாழ் வினைகள் பலதீர்க்கும்
பரமா பழைய னூர்மேய
அண்டா ஆலங் காடாஉன்
னடியார்க் கடியேன் ஆவேனே. 7

விண்டார் – அறத்தின் வழுவியவர்.
விள் – நீங்குதல்.

வண்டுகள் நிறைந்த கூந்தலையுடையவளாகிய உமை என்னும் நங்கைதன் பாகத்தையுடையவனே! கங்கைக்குக் கணவனே! பகைத்தவரது ஊர்களை எரித்த இடப வாகனனே! வேத நெறியை உடையவனே! முன்பு செய்யப்பட்ட அழுந்துதற்கு இடமான வினைகள் பலவற்றையும் தீர்க்கின்ற கடவுளே! பழையனூரை விரும்புகின்ற தேவனே! திருவாலங்காட்டில் எழுந்தருளியிருப்பவனே! அடியேன், என்றும் உன் அடியார்க்கு அடியே னாகியே வாழ்வேன்.

**537.** பேழ்வாய் அரவின் அணையானும்
பெரிய மலர்மேல் உறைவானும்
தாழா துன்றன் சரண்பணியத்
தழலாய் நின்ற தத்துவனே
பாழாம் வினைக ளவைதீர்க்கும்
பரமா பழைய னூர்தன்னை
ஆள்வாய் ஆலங் காடாஉன்
னடியார்க் கடியேன் ஆவேனே. 8

பேழ்வாய் அரவு – திறந்த வாயையுடைய பாம்பு.

பெரிய வாயையுடைய பாம்பாகிய படுக்கையை உடையவனாகிய திருமாலும், பெரிதாகிய தாமரை மலர்மேல் இருப்பவனாகிய பிரமனும் விரைவில் உனது முதன்மையை உணர்ந்து உன் திருவடிகளை வணங்குமாறு, தீப்பிழம்பாய் நின்ற மெய்ப்பொருளானவனே! உயிர், பயனின்றிக் கெடுதற்கு ஏதுவான வினைகளை நீக்குகின்ற கடவுளே! பழையனூரை ஆள்கின்றவனே! திருவாலங்காட்டில் எழுந்தருளியிருப்பவனே! அடியேன், என்றும் உன் அடியார்க்கு அடியேனாகியே வாழ்வேன்.

**538.** எம்மான் எந்தை மூத்தப்பன்
ஏழேழ் படிகால் எமையாண்ட
பெம்மான் ஈமப் புறங்காட்டிற்
பேயோ டாடல் புரிவானே
பன்மா மலர்க ளவைகொண்டு
பலரும் ஏத்தும் பழையனூர்
அம்மா ஆலங் காடாஉன்
னடியார்க் கடியேன் ஆவேனே. 9

என் தந்தை, என் தந்தைக்கு முன்னோனாகிய தந்தை முதலாக இருவகை ஏழ் தலைமுறை களில் எங்களை அடிமை கொண்டுள்ள பெருமானே! சுடுகாடாகிய புறங்காட்டில் பேய்களோடு ஆடல் செய்பவனே! பல சிறந்த மலர்களைக்கொண்டு பலரும் வணங்குகின்ற, பழையனூர்க்குத் தலைவனே! திருவாலங் காட்டில் எழுந்தருளியிருப்பவனே! அடியேன், என்றும் என் அடியார்க்கு அடியேனாகியே வாழ்வேன்.

**539.** பத்தர் சித்தர் பலர்ஏத்தும்
பரமன் பழைய னூர்மேய
அத்தன் ஆலங் காடன்றன்
**அடிமைத் திறமே அன்பாகிச்**
சித்தர் சித்தம் வைத்தபுகழ்ச்
சிறுவன் ஊரன் ஒண்டமிழ்கள்
பத்தும் பாடி ஆடுவார்
பரமன் னடியே பணிவாரே. 10

அடிமைத்திறமே அன்பாகி – திருத்தொண்டு செய்வதிலேயே அன்புடையவனாகி.

அடியார் பலரும், சித்தர் பலரும் துதிக்கின்ற கடவுளும், பழையனூரை விரும்பிய தலைவனும் ஆகிய திருவாலங்காட்டு இறைவனது அடிமைத் திறத்தின்கண்ணே அன்புடையவராய், சித்தர்களும் தங்கள் சித்தத்திலே மறவாது வைத்துள்ள புகழையுடைய அடியானாகிய நம்பியாரூரனது இம்மெய்யுணர்வுத் தமிழ்ப் பாடல்களாகிய பத்தினையும் பாடி ஆடுவோர், சிவபெருமானது திருவடியையே எஞ்ஞான்றும் வணங்கி வாழ்பவராவர்.

## 53. திருக்கடவூர் மயானம்

பண் : பழம்பஞ்சுரம் பதிக எண் : 53

| மூர்த்தி | அருள்தரும் மலர்க்குழல் மின்னம்மை உடனமர் பிரமபுரியீசர். | | |
|---|---|---|---|
| தல இருப்பிடம் | சோழ நாட்டில் காவிரியின் தென்கரையில் மயிலாடுதுறை – தரங்கம்பாடி சாலையில் திருக்கடவூர் வீரட்டத்திலிருந்து 2 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| தல மரம் | கொன்றை | | |
| தீர்த்தம் | காசி தீர்த்தம் | | |
| பாடியவர் | மூவர் | பதிகங்கள் | 3 |

540. மருவார் கொன்றை மதிசூடி
மாணிக் கத்தின் மலைபோல
வருவார் விடைமேல் மாதோடு
மகிழ்ந்து பூதப் படைசூழத்
திருமால் பிரமன் இந்திரற்குந்
தேவர் நாகர் தானவர்க்கும்
பெருமான் கடவூர் மயானத்துப்
பெரிய பெருமா னடிகளே. 1

பெருமானடிகள் என்பது ஆண்பால் தேவர்களுக்குச் சொல்லப்படுவதொரு பெயராதலின் மாதேவனாகிய சிவபெருமான் பெரிய பெருமானடிகள் எனப்பட்டார்.

சிவபெருமான் – தேவதேவன். மரு – மணம். வாசனை.

திருக்கடவூர் மயானத்தில் எழுந்தருளியிருக்கும் பெரிய பெருமானடிகளாகிய சிவபெருமானார், நறுமணம் நிறைந்த கொன்றை மலர் மாலையையும், பிறையையும் திருமுடியிற் சூடிக் கொண்டு, உமாதேவியோடு, பூதப்படைகள் களிப்புற்றுச் சூழ, வெள்ளி மலையின்மேல் ஒரு மாணிக்கமலை வருவது போல விடையின்மேல் வருவார்; 'திருமால், பிரமன், இந்திரன்' என்ற பெருந்தேவர்கட்கும், 'மற்றைய தேவர், நாகலோகத்தார், அசுரர்' என்பவர்கட்கும் அவரே தலைவர்.

541. விண்ணோர் தலைவர் வெண்புரிநூல்
மார்பர் வேத கீதத்தர்
கண்ணார் நுதலர் நகுதலையர்
கால காலர் கடவூரர்
எண்ணார் புரமூன் றெரிசெய்த
இறைவர் உமையோ ரொருபாகம்
பெண்ணா ணாவர் மயானத்துப்
பெரிய பெருமா னடிகளே. 2

நகுதலையர் – சிரிப்பது போல உள்ள தலையோட்டை உடையவர்.

திருக்கடவூர் மயானத்தில் எழுந்தருளியிருக்கின்ற பெரிய பெருமானடிகளாகிய சிவபெருமானார், தேவர்கட்குத் தலைவரும், வெள்ளிய முப்புரிநூலை அணிந்த மார்பினை உடையவரும், வேதத்தை உடைய இசையைப் பாடுகின்றவரும், கண் பொருந்திய நெற்றியை யுடையவரும், சிரிப்பது போலத் தோன்றும் தலைஓட்டினை ஏந்தியவரும், காலனுக்குக் காலரும் திருக்கடவூரைத் தம் ஊராகக் கொண்டவரும், தம்மை மதியாதவரது ஊர்கள் மூன்றை எரித்த இறைவரும், உமை ஒருபாகமும் தாம் ஒருபாகமுமாய்ப் பெண்ணும் ஆணுமாய் நிற்கும் உருவத்தை உடையவரும் ஆவர்.

542. காயும் புலியி னதளுடையர்
கண்டர் எண்டோட் கடவூரர்
தாயுந் தந்தை பல்லுயிர்க்குந்
தாமே யாய தலைவனார்
பாயும் விடையொன் றதுவேறிப்
பலிதேர்ந் துண்ணும் பரமேட்டி
பேய்கள் வாழும் மயானத்துப்
பெரிய பெருமா னடிகளே. 3

பேய்கள் வாழ்கின்ற திருக்கடவூர் மயானத்தில் எழுந்தருளியிருக்கின்ற பெரிய பெருமானடிகளாகிய சிவபெருமானார், சினங்கொள்கின்ற புலியின் தோலாகிய உடையை உடையவர்; நீலகண்டத்தை உடையவர்; எட்டுத் தோள்களை யுடையவர்; திருக்கடவூரைத் தம் ஊராகக் கொண்டவர்; எல்லா உயிர்கட்கும் தாமே தாயும், தந்தையும், தலைவருமானவர்; பாய்ந்து செல்லுகின்ற ஒற்றை எருதின்மேல் ஏறிப் பிச்சை கிடைக்கும் இடங்களை நாடிச் சென்று ஏற்று உண்பவர்; ஆயினும் யாவர்க்கும் மேலான இடத்தில் இருப்பவர்.

543. நறைசேர் மலர்ஐங் கணையானை
நயனத் தீயாற் பொடிசெய்த
**இறையா ராவர் எல்லார்க்கும்**
**இல்லை யென்னா தருள்செய்வார்**
பறையார் முழவம் பாட்டோடு
பயிலுந் தொண்டர் பயில்கடவூர்ப்
பிறையார் சடையார் மயானத்துப்
பெரிய பெருமா னடிகளே. 4

உலகின்பத்தை வேண்டுவார்க்கு உலகின்பமும் வீட்டின்பத்தை வேண்டுவார்க்கு வீட்டின்பமும் தருதலின், எல்லார்க்கும் இல்லை என்னாது அருள் செய்வார் என்று அருளினார். நறை – தேன். வாசனை.

ஒலிக்கின்ற மத்தளம், பிற பறை இவைகளைப் பாட்டுக்களோடு பயில்கின்ற அடியார்கள் நிறைந்த திருக்கடவூர் மயானத்தில் எழுந்தருளி யிருக்கும் பெரிய பெருமானடிகளாகிய சிவபெருமானார், தேன் பொருந்திய ஐந்துவகை மலர்களாகிய அம்புகளையுடைய மன்மதனை, கண்ணில் உண்டாகிய நெருப்பாற் சாம்பலாக்கிய இறைவராவர்; 'இல்லை' என்று சொல்லாமல் யாவர்க்கும் அவரவர் விரும்பியவற்றை ஈபவர்; பிறை பொருந்திய சடையையுடையவர்.

544. கொத்தார் கொன்றை மதிசூடிக்
கோணா கங்கள் பூணாக
மத்த யானை யுரிபோர்த்து
மருப்பு மாமைத் தலியார்
பத்தி செய்து பாரிடங்கள்
பாடி யாடப் பலிகொள்ளும்
பித்தர் கடவூர் மயானத்துப்
பெரிய பெருமா னடிகளே. 5

"மயானத்துப் பெரிய பெருமானடிகளே" என்பது பதிக மகுடமாகும்.

திருக்கடவூர் மயானத்தில் எழுந்தருளி யிருக்கின்ற பெரிய பெருமானடிகளாகிய சிவபெருமானார், கொத்தாகப் பொருந்திய சரக்கொன்றை மாலையையும், பிறையையும் திருமுடியிற்சூடி, கொல்லுந் தன்மையுடைய பாம்புகள் அணிகலங்களாய் இருக்க, மதத்தையுடைய யானைத்தோலைப் போர்த்து, பன்றியின் கொம்பையும், ஆமையின் ஓட்டையும் உடைய தாலியையுடையவராய், பூதகணங்கள் அன்பு செய்து பாடியும், ஆடியும் சூழப் பிச்சை ஏற்கின்ற பித்தர் கோலத்தவராவர்.

545. துணிவார் கீளுங் கோவணமுந்
துதைந்து சுடலைப் பொடியணிந்து
பணிமே லிட்ட பாசுபதர்
பஞ்ச வடிமார் பினர்கடவூர்த்
திணிவார் குழையார் புரமூன்றுந்
தீவாய்ப் படுத்த சேவகனார்
பிணிவார் சடையார் மயானத்துப்
பெரிய பெருமா னடிகளே. 6

திருக்கடவூர் மயானத்தில் எழுந்தருளி யிருக்கின்ற பெரிய பெருமானடிகளாகிய சிவபெருமானார், துணிபட்ட நீண்ட கீளும் கோவணமும் நெருங்கப்பட்டு, சுடலைச் சாம்பலைப் பூசி, பாம்புகளை மேலே அணிந்த பாசுபத வேடத்தையுடையவர்; பஞ்ச வடியை அணிந்த மார்பினையுடைய மாவிரத கோலத்தையுடையவர்; திண்ணிய நீண்ட குழையை அணிந்தவர்; புரங்கள் மூன்றையும் நெருப்பின் வாயிற்படுவித்த வீரத்தை யுடையவர்; கட்டிய நீண்ட சடையையுடையவர்.

பாசுபத வேடத்தர் – கபாலத்தைக் கையில் ஏந்தித் திரிவர். பஞ்சவடி – அகன்ற கயிறு. இது மயிரால் திரிக்கப்பட்டுப் பூணூல் போல் மார்பில் அணிவது.

இறந்த தேவர்களது தலைகளையும் எலும்புகளையும் சிவபெருமான் அணிகலமாக அணிதல் போல அவர்களது மயிரைக் கயிறாகத் திரித்துப் பூணூலாக அணிவன். இந்த மயிர்ப்பூணூலாகிய பஞ்சவடியை மாவிரதியர் என்னும் உட்பிரிவு சமயத்தார் அணிவர். பணி – பாம்பு.

546. காரார் கடலின் நஞ்சுண்ட
கண்டர் கடவூ ருறைவாணர்
தேரார் அரக்கன் போய்வீழ்ந்து
சிதைய விரலால் ஊன்றினார்
ஊர்தா னாவ துலகேழும்
**உடையார்க் கொற்றி யூர்ஆரூர்**
பேரா யிரவர் மயானத்துப்
பெரிய பெருமா னடிகளே. 7

திருக்கடவூர் மயானத்தில் எழுந்தருளியிருக்கின்ற பெரிய பெருமானடிகளாகிய சிவபெருமானார், கரிய, நிறைந்த கடலினின்றுந் தோன்றிய நஞ்சினையுண்ட கண்டத்தை யுடையவர்; திருக்கடவூரில் உறைகின்ற வாழ்க்கையையுடையவர்; தேர்மேற் பொருந்திய அரக்கனாகிய இராவணன், அதனை விட்டுக் கீழேபோய் வீழ்ந்து உடல் சிதையுமாறு கால் விரலால் தமது மலையை ஊன்றினவர்; ஏழுலகங்களையும் உடையவராகிய அவருக்கு ஊராவது, ஒற்றியாய் உள்ளது, அஃதொழிந்தால் யாருடைய ஊரோ! பெயர், ஆயிரம் உடையவர்.

எல்லா உலகமும் தமதாக உடைய அவருக்கு ஒற்றியூரும், ஆரூரும் ஊராவன. நம்பிகளின் பிராட்டிகள் இருவரில் சங்கிலியார் ஒற்றியூரார், பரவையார் ஆரூரார்.

**547.** வாடா முலையாள் தன்னோடும்
மகிழ்ந்து கானில் வேடுவனாய்க்
கோடார் கேழற் பின்சென்று
குறுகி விசயன் தவமழித்து
நாடா வண்ணஞ் செருச்செய்து
ஆவ நாழி நிலையருள்செய்
பீடார் சடையார் மயானத்துப்
பெரிய பெருமா னடிகளே. 8

அருச்சுனன் தம்மை அறியாதவாறு போரிட்டார். கோடுஆர்கேழல் – கொம்பினை உடைய பன்றி.

திருக்கடவூர் மயானத்தில் எழுந்தருளி யிருக்கின்ற பெரிய பெருமானடிகளாகிய சிவபெருமானார், தளராத தனங்களையுடைய மங்கையொருத்தியோடு, வேடராய், கொம்பை யுடைய பன்றியின்பின் சென்று, அருச்சுனனது தவத்தை அழித்து, அவன் தம்மை அறியாத நிலையில் நின்று போர்புரிந்து, பின்பு அவனுக்கு அம்பறாத் தூணியை நிலையாக வழங்கிய பெருமையைப் பொருந்திய, சடைமுடியை யுடையவர்.

---

**548.** வேழ முரிப்பர் மழுவாளர்
வேள்வி யழிப்பர் சிரமறுப்பர்
ஆழி யளிப்பர் அரிதனக்கு
ஆனஞ் சுகப்பர் அறமுரைப்பர்
ஏழைத் தலைவர் கடவூரில்
இறைவர் சிறுமான் மறிக்கையர்
பேழைச் சடையர் மயானத்துப்
பெரிய பெருமா னடிகளே. 9

பேழை – பெரிய

திருக்கடவூர் மயானத்தில் எழுந்தருளி யிருக்கின்ற பெரிய பெருமானடிகளாகிய சிவபெருமானார், யானையை உரிப்பர்; மழுப்படையையுடையவர்; தக்கன் வேள்வியை அழிப்பர்; அவ்விடத்துப் பலரது தலைகளை அறுப்பர்; திருமாலுக்குச் சக்கரத்தைக் கொடுப்பர்; என்றும் பசுவினிடத்து உளவாகின்ற ஐந்து பொருள்களை விரும்புவர்; நால்வர் முனிவர்கட்கு அறம் உரைப்பர்; மங்கை யொருத்திக்குத் தலைவராவர்; திருக்கடவூரில் தங்குவர்; சிறிய மான்கன்றைப் பிடித்த கையை உடையவர்; விரிந்த சடையையுடையவர்.

---

**549.** மாட மல்கு கடவூரின்
மறையோர் ஏத்து மயானத்துப்
**பீடை தீர அடியாருக்**
**கருளும் பெருமா னடிகள்சீர்**
நாடி நாவ லாரூரன்
நம்பி சொன்ன நற்றமிழ்கள்
பாடு மடியார் கேட்பார்மேற்
பாவ மான பறையுமே. 10

மாடங்கள் நிறைந்த திருக்கடவூரில், அந்தணர்கள் துதிக்கின்ற மயானத்தில் எழுந்தருளியிருக்கின்ற, அடியவர்களுக்கு, அவர்களது துன்பம் நீங்குமாறு அருள் செய்கின்ற பெருமானடிகளது புகழை, திருநாவலூரில் தோன்றிய, ஆரூரன் என்னும் பெயரையுடையவனாகிய நம்பி, ஆராய்ந்து பாடிய இந் நல்ல தமிழ்ப் பாடல்களைப் பாடுகின்ற அடியார், பாடக் கேட்கின்ற அடியார் இவர்கள்மேல் உள்ள பாவங்களெல்லாம் பறந்தொழிதல் திண்ணம்.

## 54. திருவொற்றியூர்

**பண் : தக்கேசி** **பதிக எண் : 54**

இது மருதப் பெரும்பண்ணின் முதல் திறமாகிய நவிரின் அகநிலைப் பண், 69 என்ற எண் பெற்றது. சங்கீத ரத்நாகரம் இப்பண்ணை தக்கை கைசிகம் எனக் குறிப்பிடுகிறது. ஆறு கரங்களைக் கொண்ட ஔவடம் (பண்ணியல்) என்று கொள்ளப்படும். இது தீரசங்கராபரண மேளத்தில் பிறப்பது. அச்சம், உவகை என்பன இதற்குரிய சுவைகள். சம்பந்தர் இப்பண்ணில் முதல் திருமுறையில் 63–74 ஆக 12 பதிகங்கள். சுந்தரர் 54–70 ஆக 17 பதிகங்கள். அவர் பாடியவற்றுள் இதுவே மிக அதிகம். சம்பந்தர் திரு அண்ணாமலைப் பதிகம் – பூவார் மலர்கொண்டு அடியார் தொழுவார், சுந்தரர், அந்தணாளன் உன்னடைக்கலம் புகுந்த என்ற திருப்புன்கூர்ப் பதிகம். அழுக்கு மெய்கொடுன் திருவடியடைந்தேன். சாதலும் பிறத்தலுந்தவிர்த்து, பொன்னு மெய்ப்பொருளும் தருவானை, ஒருகண் பெற்றபோது பாடிய ஆலந்தான் உகந்தமுது செய்தானை, தெருண்ட வாயிடை நூல்கொண்டு சிலந்தி, திருவும் மெய்ப்பொருளும் செல்வமும் எனக்கு ஆகிய பதிகங்கள் இப்பண்ணில் உள்ளன. இப்பண்ணுக்குரிய கட்டளைகள் இரண்டு. தக்கேசி, பகற்பண், நண்பகலுக்குரியது என்பது மரபு. இதற்கு நேரான இராகம் காம்போதி.

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் வடிவுடை நாயகி உடனமர் அருள்மிகு படம்பக்கநாதர். | | |
| **தல இருப்பிடம்** | தொண்டை நாட்டில் சென்னைப் பெருநகரில் அமைந்து உள்ளது. | | |
| **தல மரம்** | மகிழமரம் | | |
| **தீர்த்தம்** | பிரம்மதீர்த்தம் | | |
| **பாடியவர்** | மூவர் | **பதிகங்கள்** | 8 |

தம்பிரான் தோழர், பெருமான் அருளால் மகிழமரத்தடியில் சபதம் செய்து, சங்கிலியாரை மணந்து, மகிழ்வுடனிருந்து, திருவாரூர்ப் பெருமானது வசந்த விழாவைக் காண, திருவொற்றியூர் எல்லை நீங்கியதும் இரு கண்களின் ஒளி மறைந்தது. அதனால் மூர்ச்சித்து, 'சூளுறவு மறுத்ததால் இவ்வினை வந்து எய்தியது' என்று எண்ணி, 'எம்பெருமானை இத்துயர் நீங்கப் பாடுவேன்' என்று நினைந்து பாடியருளியது இத்திருப்பதிகம். (தி. 12 பெரிய. புரா. ஏயர்கோன். புரா. 276)

**இத்துயர் நீங்க எம்பெருமானைப் பாடுவேன்** – தகாதவற்றைச் செய்து அதன் பயனாகத் துன்பம் வந்தபோது இறைவரைப் பாடினால் அது நீங்கி விடுமோ ? இவ்வாறாகிய கொள்கைகள் அல்லவை செய்தொழுகுவார் மறைந்து கொள்ளவும் தீயவற்றைத் துணிந்து செய்யவும் இடந்தருகின்றன என்று அறை கூவுவோர் பலர் இந்நாளிற் காணப்படுகின்றனர். தீச்செயல்களில் உயிர்களைப் புகுத்துவது அறியாமை மயமாகிய இருள் மலத்தின் செயலாம்; அது தீச்செயல் என்று தெளிந்து தீர்வு தேடுதல் இறைவன் அறிவிக்க அறியப்படும் அறிவின் செயல்; ஆதலின் அவ்வறிவின் உதவி கொண்டே தீர்வு தேடுதல் அறிவு பெற்ற நியமமாகும். விதி கடந்து அல்லவை செய்து பிணிகளைத் தேடிக் கொண்டானொருவன் மருத்துவனை நாடி அவன் துணை கொண்டு நோயினின்றும் நீங்க முயலுதல் போல, ஈண்டு இறைவரைப் பாடுதல் தமது

தவறிய செயலால் விளைந்த துன்பம் நீங்குதற்கு மருந்தாகுமென்பது உண்மை நூற்றுணிபு; நோயினையும் அது வந்த வரலாற்றினையும் உண்மை பெற மருத்துவனிடம் முறையிட்டபோது மருத்துவன் அதன்மூலம் வந்தவாற்றிற் கேற்றபல மருந்தும் பாகமும் வகுத்துத் தீர்ப்பது போலக், கன்ம வைத்தியநாதராகிய இறைவரும் கன்ம விளைவாகிய நோயினை அனுபவித்துக் கழிப்பிக்க ஏற்ற காலம் முதலிய பாகங்களை வகுத்துத் தீர்ப்பர். அவரை எண்ணுதலும் துதித்தலும் அத்தீர்வுக்கு அவர் விதித்த பக்குவங்களும் மருந்துகளுமாகும். கன்மநோய் அனுபவித்தன்றிக் கழியாதென்பது உண்மை; மக்கள் தாங்கள் செய்த குற்றத்தை உணர்ந்து கழிவிரக்கங்கொண்டு உண்மையாகக் கசிந்து உருகி உருகி அவனை நோக்கி முறையிடுவரேல் அவன் இரங்கி அவர் தந் துயர் தீர்த்தல் ஒருதலை என்று ஈண்டு விசேட ஆராய்ச்சி செய்வாருமுண்டு. பாவமன்னிப்பு என்பது சைவசமயக் கொள்கைகளுக்கு உடன்பாடன்று; அது கிறித்துவம் முதலிய புறச்சமயிகள் கொள்கையாம்; அதுவே மக்களைத் தீய செயல்களுட் புகுத்தும் தூண்டுகோலாய் நிற்கும்; ஆனால் சைவ சமயங் கண்டவுண்மையாவது இறைவரை எண்ணித் துதித்தலால் அஃது அந்நோய்க்கு மருந்தாக நின்று அதனுள் இறைவர் விளங்கிக் கன்மபரிபாகம் நிகழ அருளிக் கன்மானுபவத்தை உடலூழாய்க் கழியவோ, அன்றி விரைந்து அனுபவித்துக் கழியவோ, அன்றி வேறு அவ்வவர் துன்பம் அறியாமற் கழியவோ, அன்றி வேறெவ்வாறோ ஊட்டுவித்து அருள் புரிவன என்பதாம். "ஆட்பா லவர்க் கருளும் வண்ணமு மாதி மாண்பும், கேட்பான் புகி லளவில்லை கிளக்க வேண்டா!, கோட்பா லனவும் வினையுங் குறுகாமை யெந்தை, தாட்பால் வணங்கித் தலைநின் றிவை கேட்க தக்கார்" என்ற திருப்பாசுரமும், "சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடனாதல்" என்றற் றொடக்கத்த திருவாக்குக்களும் ஈண்டுக் கருதத்தக்கன. "தொழுவார் வினை மாயுமே", "வினைஓயுமே" என வருவன எல்லாம் இவ்வா றறியத்தக்கன. ஈண்டும், மேல்வரும் வரலாறுகளிலும் பலபடியும் மனம்போனவாறு பிதற்றும் 'அறியா வாய்மை எண்டிசை மாக்கள்' இவற்றை யெல்லாம் உணர்ந்து உய்வார்களாயின் நலமாகும்.

திருவொற்றியூரின் எல்லை கடந்தவுடன் கண்ணிழந்த நம்பிகள் அங்கு நின்றவாறே வழித்தலைப்பட்டு மேற் சென்றனர். திருமுல்லை வாயிலை அடைந்து "அடியேன் படுதுயர் களையாய்" என வேண்டிக் கொண்டு, அந்நிலையே திருவெண்பாக்கம் சென்று முறையிட்டபோது இறைவர் அவருக்கு ஊன்று கோலருளி, "நாம் இங்கு உளோம் நீர்போகீர்" என்றருளினர். அதன்மேல் நம்பிகள் திருவாலங்காடும் திருவூறலும் வணங்கித் திருக்கச்சி யேகம்பம் சென்று பணிந்தனர்; மறைந்த இடக்கண் பெற்றனர்; அங்கு நின்றும் போந்து திரு ஆமாத்தூர், திருநெல் வாயிலரத்துறை, திருவாவடுதுறை என்ற இவற்றைப் பணிந்து திருத்துருத்தியில் வணங்கித் தம்மேனியில் உற்ற புதிய பிணியினின்றும் நீங்கினர்; பின்னர்த் திருவாரூர் சேர்ந்து வணங்கி வலக்கண்ணையும் பெற்றருளினர். இப்போதருளிய இத்தலப்பதிகங்கள் யாவும் மனத்தை மிக உருக்கும் தன்மை வாய்ந்தன. சோகச்சுவையுட் கொண்ட தமிழ் வளமுடையனவாய்ச் சிறந்து விளங்குவன. சொல்லும் பொருளும் யாப்பும் சிறந்தன. சரிதத்திற்குச் சிறந்த அகச்சான்றாகவுமுள்ளன. பெரும்பான்மை இவை தக்கேசிப் பண்ணில் அமைந்த நிலையும் காண்க. அரசுகள் பதிகங்களுட் டிருத் தாண்டகமும்; பிள்ளையார் பதிகங் களுள் மேகராகக் குறிஞ்சிப் பண்ணில் வருவனவும், நம்பிகள் பதிகங்களுள் தக்கேசிப் பதிகங்களும் எத்தகையோரையும் மனமுருக்கும் தன்மையிற் பெரிதும் சிறந்தன என்பதும் கருதுக. இவற்றை அன்பர்கள் ஊன்றிப் பயின்று பயன்பெறுவார்களாக.

550. அழுக்கு மெய்கொடுன் திருவடி யடைந்தேன்
அதுவும் நான்படற் பாலதொன் றானால்
பிழுக்கை வாரியும் பால்கொள்வர் அடிகேள்
பிழைப்ப னாகிலுந் திருவடிப் பிழையேன்
வழுக்கி வீழினும் திருப்பெய ரல்லால்
மற்று நான்அறி யேன்மறு மாற்றம்
ஒழுக்க என்கணுக் கொருமருந் துரையாய்
ஒற்றி யூரெனும் ஊருறை வானே. 1

எல்லாம் செய்வது திருவடியேயாகலின் அதனை மறந்து "யான் செய்தேன்" என்று எண்ணுவதே திருவடிக்குச் செய்யும் பிழையாதல் உணர வேண்டும். இப்பிழையைச் செய்யாது திருவடியை எஞ்ஞான்றும் மறவாது நினையும் இவ்வொன்றன் முன்னே, ஏனைக் குற்றங்கள் பலவும் பொருளல்லவாய் ஒழியும்.

மறுமாற்றம் – வேறு சொற்கள் (ஐயோ, அப்பா போன்றவை)

தலைவனே! 'ஒற்றியூர்' என்று பெயர் சொல்லப்படுகின்ற ஊரின்கண் எழுந்தருளியிருப்பவனே! அடியேன், உன் திருவடியை இடையீடின்றி யடையமாட்டாது, மாசுடைய உடம்பு கொண்டே அடைவேனாயினேன்; அந்த இழிநிலைதானும் நான் அடையத்தக்க தொன்றாகியே விடுமாயின், ஒளியிழந்த என் கண்ணுக்கு ஊற்றத்தக்கதொரு மருந்தையேனும், என் வேண்டுகோளுக்கு விடையாக நீ சொல்லியருள்; ஏனெனில், பசு முதலியவற்றி னிடத்திற் பாலை விரும்புவோர், அவை இடுகின்ற சாணத்தை எடுத்தற் றொழிலைச் செய்தாயினும் அதனைக் கொள்வர்; அது போல, நீ என் குற்றங்களை நோக்கி, இகழாது, உயிர்களிடத்து நீ விரும்புவதாகிய குணம் என்னிடத்து இருத்தலை நோக்கி என்னை ஏற்றருளுதல் வேண்டும். அக்குணமாவது; யான் எப் பிழைசெய்வேனாயினும், உன் திருவடிக்குப் பிழையைச் செய்யேன்; வழுக்கி விழும் பொழுதும் உன் திருப்பெயரைச் சொல்லுதலன்றி, வேறொன்றை அறியேன்.

551. கட்ட னேன்பிறந் தேனுனக் காளாய்க்
காதற் சங்கிலி காரண மாக
எட்டி னால்திக ழுந்திரு மூர்த்தீ
என்செய் வான்அடி யேன்எடுத்
துரைக்கேன்
பெட்ட னாகிலுந் திருவடிப் பிழையேன்
பிழைப்ப னாகிலுந் திருவடிக் கடிமை
ஒட்டி னேன்எனை நீசெய்வ தெல்லாம்
ஒற்றி யூரெனும் ஊருறை வானே. 2

கட்டனேன் – துன்பமுடையேன்
பெட்டன் – பொய்யன்

'எட்டு' என்னும் எண்ணின் வகையினால் விளங்குகின்ற சிறந்த வடிவங்களை யுடையவனே! 'ஒற்றியூர்' என்று பெயர் சொல்லப்படுகின்ற ஊரின்கண் எழுந்தருளி யிருப்பவனே! துன்பத்தைத் தரும் வினையை யுடையேனாகிய யான், அவ்வினை காரணமாக, இம்மண்ணுலகிற் பிறந்தேன்; பிறந்து உனக்கு ஆளாகி இடையே மாதரை விரும்பி மணந்தேனாயினும், உன் திருவடியை மறந்திலேன்; பிறவற்றைச் செய்யத் தவறினேனாயினும், திருவடிக்குச் செய்யும் அடிமையில் இடைவிடாது நின்றேன்; என்ன செய்தற் பொருட்டு அவற்றை நான் இப்பொழுது எடுத்துரைப்பேன்! இத்துன்பமெல்லாம் என் காதலுக்கு இடமாய் நின்ற சங்கிலி காரணமாக நீ செய்வனவேயாகும்.

552. கங்கை தங்கிய சடையுடைக் கரும்பே
கட்டி யேபலர்க் குங்களை கண்ணே
அங்கை நெல்லியின் பழத்திடை யமுதே
அத்தா என்னிடர் ஆர்க்கெடுத் துரைக்கேன்
சங்கும் இப்பியுஞ் சலஞ்சல முரல
வயிரம் முத்தொடு பொன்மணி வரன்றி
ஓங்கு மாகடல் ஓதம்வந் துலவும்
ஒற்றி யூரெனும் ஊருறை வானே. 3

களைகண் – புகலிடம். இப்பி – முத்துச்சிப்பி.
சலஞ்சலம் – ஒருவகை சங்கு. முரல – சப்திக்க.

கங்கை பொருந்தியுள்ள சடையையுடையவனே! அடியார்கட்குக் கரும்பும், கட்டியும் அகங்கை யிற்கிடைத்த நெல்லிக்கனியில் உள்ள அமுதமும்போல இனிமையைத் தருகின்றவனே! அனைவர்க்கும் பற்றுக் கோடாய் உள்ளவனே! தந்தையே! சங்குகளும், சிப்பிகளும், சலஞ்சலம் என்னும் சங்குகளும் ஒலிக்க, 'வயிரம், முத்து, பிற மணிகள், பொன்' என்பவற்றை வாரிக்கொண்டு, பெரிய கடலின் கண் உயர எழுகின்ற அலைகள் வந்து உலவுகின்ற, 'ஒற்றியூர்' என்று பெயர் சொல்லப்படுகின்ற ஊரின்கண் எழுந்தருளி யிருப்பவனே! நீயே எனக்குத் துன்பஞ் செய்வையாயின், அதனை நான் யாரிடம் நீக்குமாறு எடுத்துச் சொல்வேன்!

553. ஈன்று கொண்டதோர் சுற்றமொன் றன்றால்
யாவ ராகில்என் அன்புடை யார்கள்
தோன்ற நின்றருள் செய்தளித் திட்டாற்
சொல்லு வாரையல் லாதன சொல்லாய்
மூன்று கண்ணுடை யாய்அடி யேன்கண்
கொள்வ தேகணக் குவ்வழக் காகில்
ஊன்று கோலெனக் காவதொன் றருளாய்
ஒற்றி யூரெனும் ஊருறை வானே. 4

"ஒற்றியூரெனும் ஊருறை வானே" என்பது பதிக மகுடமாகும்.

'ஒற்றியூர்' என்று பெயர் சொல்லப்படுகின்ற ஊரின்கண் எழுந்தருளியிருப்பவனே! 'தாய் பெற்றதனால் கொள்ளப்பட்டதொரு சுற்றம்' என்பது ஒரு பொருளன்று; அன்புடையவர்கள் யாராய் இருப்பினும் என்? என்கின்ற இம்முறைமை பற்றி, நீ உன்னிடத்து அன்பு செய்பவரை, உனது இயற்கை வடிவம் அவர்கட்குப் புலனாகுமாறு வெளிநின்று ஆட்கொண்டுவிட்டால், அதன்பின் உன் பெயரையே சொல்லிக் கொண்டிருப்பவரை, நீ ஒரு ஞான்றும் கடுஞ்சொற் சொல்லுவாயல்லை; அங்ஙனமாகவும், மூன்று கண்களையுடையை யாகிய நீ, உன் அடியேனது இரண்டு கண்களைப் பறித்துக் கொள்வது, யான் செய்த குற்றங் காரணமாக நீதி நூல்களில் உள்ள முறைமையேயாகில், எனக்கு உதவியாய் நிற்பதோர், ஊன்றுகோலையேனும் அளித்தருள்.

554. வழித்த லைப்படு வான்முயல் கின்றேன்
உன்னைப் போல்என்னைப் பாவிக்க மாட்டேன்
சுழித்த லைப்பட்ட நீரது போலச்
சுழல்கின் றேன்சுழல் கின்றதென் னுள்ளம்
கழித்த லைப்பட்ட நாயது போல
ஒருவன் கோல்பற்றிக் கறகற விழுக்கை
ஒழித்து நீஅரு ளாயின செய்யாய்
ஒற்றி யூரெனும் ஊருறை வானே. 5

'ஒற்றியூர்' என்று பெயர் சொல்லப்படுகின்ற ஊரின்கண் எழுந்தருளியிருப்பவனே! யான் நன்னெறியைத் தலைப்படவே முயல்கின்றேன்; ஒருஞான்றும் என்னை உன்னைப்போல ஒன்றாலும் தாக்குண்ணாத பெருமையேனாக நினைக்கின்றிலேன்; அங்ஙனமாகவும், நீ என் கண்ணைப் பறித்துக் கொண்டதனால், வழிதெரியாது, சுழியிடத்துப்பட்ட நீர் போலச் சுழலாநின்றேன். என் உள்ளமும் ஒன்றும் அறியாது சுழல்கின்றது; இவற்றையும், கழியிற் பொருந்திய நாயைப் போல ஒருவன் தரும் கோலை விடாதுபற்றி நின்று, அவனால், 'கறகற' என்று இழுக்கப்படுதலையும் ஒழித்து, நீ உனது திருவருள்களை எனக்கு அளித்தருள்.

555. மானை நோக்கியர் கண்வலைப் பட்டு
வருந்தி யானுற்ற வல்வினைக் கஞ்சித்
தேனை ஆடிய கொன்றையி னாய்உன்
சீல முங்குண முஞ்சிந்தி யாதே
நானு மித்தனை வேண்டுவ தடியேன்
உயிரொ டுந்நர கத்தழுந் தாமை
ஊன முள்ளன தீர்த்தருள் செய்யாய்
ஒற்றி யூரெனும் ஊருறை வானே. 6

தேன் நிறைந்த கொன்றை மாலையை அணிந்தவனே, 'ஒற்றியூர்' என்று பெயர் சொல்லப்படுகின்ற ஊரின்கண் எழுந்தருளியிருப்பவனே! யான் மான்போலும் பார்வையினையுடைய மாதரது கண்ணோக்காகிய வலையில் அகப்பட்டு, உனது செயல் முறையையும், குணத்தையும் நினையாமலே செய்துவிட்ட பெரிய குற்றத்திற்கு அஞ்சியே, நானும் பிறர் போல உன்னை இத்துணை இரந்து வேண்டுவதாயிற்று; அதனால், என்றும் உன்அடியேனாகிய யான் உயிரோடே நரகத்தில் மூழ்காதபடி, எனக்கு உண்டாகிய குறையினை நீக்கி அருள் செய்யாய்.

556. மற்றுத் தேவரை நினைந்துனை மறவே
நெஞ்சி னாரொடு வாழவு மாட்டேன்
பெற்றி ருந்து பெறாதொழி கின்ற
பேதை யேன்பிழைத் திட்டதை யறியேன்
முற்று நீயெனை முனிந்திட அடியேன்
கடவ தென்னுனை நான்மற வேனேல்
உற்ற நோயுறு பிணிதவிர்த் தருளாய்
ஒற்றி யூரெனும் ஊருறை வானே. 7

'ஒற்றியூர்' என்று பெயர் சொல்லப்படுகின்ற ஊரின்கண் எழுந்தருளியிருப்பவனே! நான், பிறர் ஒருவர் தேவரை நினைந்து உன்னை மறந்தேனில்லை; அத்தன்மையான நெஞ்சை யுடையவருடன் சேர்ந்திருக்கவும் மாட்டேன்; அங்ஙனமாக, நீ என்னை முற்றும் வெகுளுமாறு, உன்னை இனிதே பெற்றிருந்தும் பெறாதொழிகின்ற பேதையேனாகிய யான் செய்த பிழைதான் இன்னதென்று அறிகின்றிலேன்; நான் உன்னை ஓர் இமைப்பொழுதும் மறவேனாயினேன். இதன்மேல், உன் அடியேனாகிய யான் செய்யக் கடவதாய் எஞ்சி நிற்பதொரு கடமை யாது? ஒன்றுமில்லையாதலின், யான் உற்ற துன்பத்தையும், மிக்க பிணியையும் நீக்கியருள்.

557. கூடி னாய்மலை மங்கையை நினையாய்
கங்கை யாயிர முகமுடை யாளைச்
சூடினாய் என்று சொல்லிய புக்கால்
தொழும்பனே னுக்குஞ் சொல்லலு மாமே
வாடி நீயிருந் தென்செய்தி மனமே
வருந்தி யானுற்ற வல்வினைக் கஞ்சி
ஊடி னால்இனி யாவதொன் றுண்டே
ஒற்றி யூரெனும் ஊருறை வானே. 8

'ஒற்றியூர்' என்று பெயர் சொல்லப்படுகின்ற ஊரின்கண் எழுந்தருளியிருப்பவனே! 'நீ முதலில் மலைமகளை ஒரு பாகமாகப் பொருந்தினாய். பின்பு ஆயிரமுகமுடைய கங்கையாளை முடியில் சூடினாய்; இதனை நினைகின்றிலையே' என்று சொல்லப் புகுந்தால், அஃது அடிமையாகிய எனக்குக் கூடுமோ! 'மனமே நீ துன்பமுற்று என்ன பெறப்போகின்றாய்?' என்று மனத்தோடே சொல்லிக் கொண்டு, யான் அடைந்த குற்றத்திற்கு அஞ்சி உன்னிடத்திலே பிணங்கினால், இனி வருவதொன்று உண்டோ?

கூடினாய்.... ஆமே – பார்வதி தேவியை முன் கூடினவராய்ப் பிறகு அவரை மறந்து கங்கையைச் சிரசின் மேல் தரித்தாய் என்று சொல்லப்புகுந்தால், அதுபோல உமது அடியவனாகிய யானும் உம்மைப் பின்பற்றித் திருவொற்றியூர்ச் சங்கிலியை மறந்து திருவாரூர்ப் பரவையை நினைந்தேன் என்று சொல்லவும் கூடும். ஆகையால் இது என்னுடைய தவறாகாது.

ஊடினால் – பிணங்கினால்.

558. மகத்திற் புக்கதோர் சனியெனக் கானாய்
மைந்த னேமணி யேமண வாளா
அகத்திற் பெண்டுகள் நானொன்று சொன்னால்
அழையல் போகுரு டாஎனத் தரியேன்
முகத்திற் கண்ணிழந் தெங்ஙனம் வாழ்கேன்
முக்க ணாமுறை யோமறை யோதீ
உகைக்குந் தண்கடல் ஓதம்வந் துலவும்
ஒற்றி யூரெனும் ஊருறை வானே. 9

மகத்தில் புக்கதோர் சனி – மக நட்சத்திரத்தில் சனி சஞ்சரிக்கும் காலம் மிகத் துன்பமான காலம் என்பது சோதிட நூல்களின் துணிபு.

வேதத்தை ஓதுபவனே! மணி முதலியவற்றைக் கரையிடத்துக் கொணர்ந்து சேர்க்கும் தண்ணிய கடல் அலைகள் வந்து உலவுகின்ற, 'ஒற்றியூர்' என்று பெயர் சொல்லப்படுகின்ற ஊரின்கண் எழுந்தருளியிருப்பவனே! எனக்கு வலிமையாய் உள்ளவனே! மணி போல்பவனே! அழகுடையவனே! நீ எனக்கு, 'மகம்' என்னும் நாண்மீன்கீழ் வந்த, 'சனி' என்னும் கோள்போல்பவனாயினை, அகத்தில் உள்ள பெண்டுகள், நான், ஆவது ஒரு காரியம் சொன்னால், 'கண்ணிலியே நீ என் அறிவாய்; கூவாதே; போ' என்று சொல்வதை நான் பொறுக்கமாட்டேன்; முகத்தில் கண்ணில்லாமல் நான் எவ்வாறு வாழ்வேன்? மூன்று கண்களை யுடையவனே! இது முறையோ!

559. ஓதம் வந்துல வுங்கரை தன்மேல்
ஒற்றி யூருறை செல்வனை நாளும்
ஞாலந் தான்பர வப்படு கின்ற
நான்ம றைஅங்க மோதிய நாவன்
சீலந் தான்பெரி தும்மிக வல்ல
சிறுவன் வன்றொண்டன் ஊரன் உரைத்த
பாடல் பத்திவை வல்லவர் தாம்போய்ப்
பரக திதிண்ணம் நண்ணுவர் தாமே. 10

கடல் அலைகள் வந்து உலவுகின்ற கரையின்மேல் உள்ள திருவொற்றியூரில் எழுந்தருளியிருக்கின்ற செல்வனை, என்றும் உலகத்தாரால் போற்றப்படுகின்ற நான்கு வேதம், வேதத்தின் ஆறு அங்கங்கள் இவற்றை ஓதிய நாவையுடையவனும், ஒழுக்கத்தில் மிகவல்ல இளமையையுடையவனும் வன்றொண்டனும் ஆகிய நம்பியாரூரன் பாடிய இப் பத்துபபாடல்களாகிய இவைகளை வல்லவர்கள், மேலான கதியைப் போய் அடைவார்கள்; இது திண்ணம்.

## 55. திருப்புன்கூர்

பண் : தக்கேசி　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　பதிக எண் : 55

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் சொக்கநாயகி உடனமர் அருள்மிகு சிவலோகநாதர். | | |
| **தல இருப்பிடம்** | சோழநாட்டில் காவிரியின் வடகரையில் வைத்தீஸ்வரன் கோயிலிலிருந்து 4 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | புங்கமரம் | | |
| **தீர்த்தம்** | இடபதீர்த்தம் | | |
| **பாடியவர்** | மூவர் | **பதிகங்கள்** | 3 |

560. அந்த ணாளனுன் னடைக்கலம் புகுத
அவனைக் காப்பது காரண மாக
வந்த காலன்றன் ஆருயி ரதனை
வவ்வி னாய்க்குன்றன் வண்மைகண் டடியேன்
எந்தை நீயெனை நமன்தமர் நலியில்
**இவன்மற் றென்னடி யானென விலக்கும்**
**சிந்தையால்** வந்துன் திருவடி யடைந்தேன்
செழும்பொ ழில்திருப் புன்கூரு ளானே. 1

வளவிய சோலைகளையுடைய திருப்புன்கூரில் எழுந்தருளியிருப்பவனே! முனிவன் ஒருவன் உன்னை அடைக்கலமாக அடைய, அவனைக் காத்தல் நிமித்தமாக, அவன் மேல் வந்த கூற்றுவனது அரிய உயிரைக் கவர்ந்த உனக்கு அடியேனாகிய யான், உனது அவ்வாற்றலை யறிந்து, என்னையும் இயமன் தூதர்கள் வந்து துன்புறுத்துவார்களாயின், என்தந்தையாகிய நீ, 'இவன் என் அடியான்; இவனைத் துன்புறுத்தாதீர்' என்று சொல்லி விலக்குவாய் என்னும் எண்ணத்தினால் வந்து உன் திருவடியை அடைந்தேன்; என்னை ஏன்று கொண்டருள்.

மார்க்கண்டேயருக்குச் செய்த திருவருள் திறத்தை புகழ்ந்து அருளியது. காலன் – காலத்தை அறுதியிட்டு அளந்து காலத்தால் வருபவன் காலன்.

காலம் – நியதியாதி தத்துவங்களின் தொழிற்பாட்டினுள் நின்று இறைவராணையின் வழி ஏனைய உயிர்களின் காலத்தை அறுதியிட்டுக் கொண்டு செல்லும் ஆற்றலுடையது. காலனது உயிராதலின் ஆருயிர் என்றார். ஆர் – நினைதல் – வலிமை நிறைதல் குறித்தது.

இவன் மற்றென் அடியானென விலக்கும் சிந்தையால் – இவன் என் அடியான்; உனது ஆணையுட்பட இயைபில்லை என்று விலக்கித் தம் உலகஞ் சார்வித்தல். கந்தபுராணத்துள் வீரவாகுத்தேவர் தமது தம்பியரைக் கொணரும்படி காலனுக்கு எழுதிவிட்ட ஆணையையும் அதன்படி அவர்களுடன் வந்து விண்ணப்பித்த வரலாறும் நினைவுகூர்வோமாக. காலன் கைப்படுதலைத் தவிர்ப்பவன் காலகாலனே. இப்பிறவியின் இறுதியில் காலன் வேதனை தவிர்ப்பதன்றி இனியும் பிறவியில் வாராது காத்தலால் மேலும் அவ்வேதனை இல்லாது செய்பவன் என்று தமக்குறுதி சொல்வது போலச் சொல்லி நம் போன்ற உலகோரை வழிப்படுத்த உபதேசிக்கிறார் என்று கொள்ளலாம். இப்பதிகத்துள் காலனைத் தவிர்த்து ஏயர்கோன் கலிக்காமருக்கு மீள உயிரருளிய குறிப்பையும் காணலாம். நலியில் – துன்பப்படுத்தினால்.

561. வையக முற்று மாமழை மறந்து
வயலில் நீரிலை மாநிலந் தருகோம்
உய்யக் கொள்கமற் றெங்களை யென்ன
ஒளிகொள் வெண்முகி லாய்ப்பரந் தெங்கும்
பெய்யு மாமழைப் பெருவெள்ளந் தவிர்த்துப்
பெயர்த்தும் பன்னிரு வேலிகொண் டருளும்
செய்கை கண்டுநின் திருவடி யடைந்தேன்
செழும்பொ ழில்திருப் புன்கூரு ளானே. 2

மழை பெய்வதற்காகப் பன்னிருவேலி நிலம் அளிக்கப் பெய்த பெருமழை வெள்ளம் தவிர்க்கப் பன்னிரு வேலி நிலம் மறுபடியும் அளிக்க – மொத்தம் 24 வேலி நிலம் ஏயர்கோன் கலிக்காமற் திருப்புன்கூர் இறைவனுக்கு அளித்த வரலாறு.

அவர் நிலத் தலைவராய் வாழ்ந்ததால் மாநிலம் தருகோம் என்றார். பூதானம் செய்துள்ளார்.

வளவிய சோலைகளையுடைய திருப்புன்கூரில் எழுந்தருளியிருப்பவனே! இவ்வூரிலுள்ளவர், உலக முழுவதும் நிரம்பிய மழையின்மையால் வயலில் நீர் இல்லையாயிற்று; மிக்க நிலங்களை உனக்குத் தருவோம்; எங்களை உய்யக் கொள்க என்று வேண்ட ஒளியைக் கொண்ட வெண்முகிலாய்ப் பரந்திருந்தவை, அந் நிலை மாறி, எங்கும் பெய்த பெருமழையால் உண்டாகிய பெரு வெள்ளத்தை நீக்கி, அதன் பொருட்டு அவர்களிடம் மீட்டும் பன்னிரு வேலி நிலத்தைப் பெற்றருளிய செயலை அறிந்து வந்து, அடியேன் உன் திருவடியை அடைந்தேன்; என்னை ஏன்றுகொண்டருள்.

562. ஏத நன்னிலம் ஈரறு வேலி
ஏயர் கோன்உற்ற இரும்பிணி தவிர்த்துக்
கோத னங்களின் பால்கறந் தாட்டக்
கோல வெண்மணற் சிவன்றன்மேற் சென்ற
தாதை தாளற எறிந்த சண்டிக்குள்
சடைமி சைமலர் அருள்செயக் கண்டு
பூத வாளிநின் பொன்னடி யடைந்தேன்
பூம்பொ ழில்திருப் புன்கூரு ளானே. 3

ஆளி – ஆளுதலையுடையவன்.

பூதகணங்கட்குத் தலைவனே! அழகிய சோலைகளையுடைய திருப்புன்கூரில் எழுந்தருளியிருப்பவனே! நீ, நல்ல நிலங்கள் பன்னிருவேலி கொடுத்த ஏயர்கோன் அடைந்த, துன்பத்தைச் செய்யும் பெரிய நோயை இப்பொழுது தீர்த்ததனையும், முன்பு பசுக்களது மடியில் நிறைந்திருந்த பாலைக் கறந்து ஆட்ட அதனைப் பொறாது அங்ஙனம் ஆட்டப்பட்ட அழகிய வெண் மணலாலாகிய பெருமான்மேற் சென்ற தந்தையது பாதங்கள் துணி பட்டு விழுமாறு வெட்டிய சண்டேசுர நாயனாருக்கு உனது முடியின்மேற் சூடியுள்ள கொன்றை மாலையை எடுத்துச் சூட்டியருளியதையும் அறிந்து வந்து, அடியேன், உனது பொன் போலும் திருவடியை அடைந்தேன்; என்னை ஏன்று கொண்டருள்.

**563.** நற்ற மிழ்வல்ல ஞானசம் பந்தன்
நாவினுக் கரையன் நாளைப்போ வானும்
கற்ற சூதன்நற் சாக்கியன் சிலந்தி
கண்ணப் பன்கணம் புல்லன்என் றிவர்கள்
குற்றஞ் செய்யினுங் குணமெனக் கருதுங்
கொள்கை கண்டுநின் குரைகழ லடைந்தேன்
பொற்றி ரள்மணிக் கமலங்கள் மலரும்
பொய்கை சூழ்திருப் புன்கூரு ளானே. 4

பொன்போலும், திரளாகிய அழகிய தாமரை மலர்கள் மலர்கின்ற பொய்கைகள் சூழ்ந்த திருப்புன்கூரில் எழுந்தருளியிருப்பவனே! 'நல்ல தமிழைப் பாட வல்ல ஞானசம்பந்தனும், நாவுக்கரையனும், நாளைப் போவானும், சூதாடுதலை நன்கு கற்ற மூர்க்கனும், நல்ல சாக்கியனும், சிலந்தியும், கண்ணப்பனும், கணம் புல்லனும்' என்ற இவர்கள் குற்றமான செயல்களைச் செய்யவும், அவைகளைக் குணமான செயலாகவே கருதிய உனது திருவுள்ளத்தின் தன்மையை அறிந்து, வந்து அடியேன், உனது ஒலிக்கின்ற கழலையணிந்த திருவடியை அடைந்தேன்; என்னை ஏன்று கொண்டருள்.

"குற்றம்" என்றது, உலகத்தார் கருத்து வகைபற்றி, அவ்வாற்றால் ஞானசம்பந்தர் செய்தது. பாண்டியன் சமணரைக் கழுவேற்றியதனை விலக்காதிருந்தது. நாவுக்கரசர் செய்தது, சமண சமயம் புக்கு முதல்வன் திருவருளை இகழ்ந்து நின்றது. நாளைப் போவார் செய்தது. தில்லை நகருள்ளும் திருக்கோயிலுள்ளும் புக முயன்றது. மூர்க்கர் செய்தது, சூதாடியது. சாக்கியர் செய்தது, இலிங்கத் திருமேனியைக் கல்லால் எறிந்தது. சிலந்தி செய்தது வாய் நூலால் இலிங்கத்தின் மேற் கூடு வேய்ந்தது. கண்ணப்பர் செய்தவை, செருப்புக் காலை இலிங்கத் திருமேனியின் முடியில் வைத்ததும், வாய்நீரை அதன்மேல் உமிழ்ந்ததும், எச்சிற் படுத்த இறைச்சியைப் படைத்ததும், கணம்புல்லர் செய்தது, திருக்கோயிலில் தம் தலைமயிரை விளக்கென்று எரித்தது. இவர் தாம் இவற்றை, மனத்துக்கண் மாசிலராய் அருள்வழியானும், அன்புவழியானும் செய்தமையை உலகர் அறிய மாட்டாராக, நீ அறிந்து அருள் செய்தனை என்று அறிந்து உன்னை வந்து அடைந்தேன் என்றவாறு. இதனானே, தாம் இறைவரைப் பரவையார் பால் தூது செல்லுமாறு இரந்தமையும் குற்றமாகாமைக் காரணமும் புலப்படுத்தவாறாயிற்று. மேலைத் திருப்பாடலில் சண்டேசுர நாயனாருக்குச் செய்த திருவருளை நினைந்தருளி, அன்ன வாகப் பிற நாயன்மார்க்குச் செய்த திருவருட்டிறங்களை, இத்திருப் பாடலில் நினைந்து அருளிச் செய்தார் என்க. "சிலந்தி" என்றதும், கோச்செங்கட்சோழ நாயனாரையே யாதல் அறிக.

564. கோல மால்வரை மத்தென நாட்டிக்
கோள ரவுசுற் றிக்கடைந் தெழுந்த
ஆல நஞ்சுகண் டவர்மிக இரிய
அமரர் கட்கருள் புரிவது கருதி
நீல மார்கடல் விடந்தனை யுண்டு
கண்டத் தேவைத்த **பித்த**நீ செய்த
சீலங் கண்டுநின் திருவடி யடைந்தேன்
செழும்பொ ழில்திருப் புன்கூரு ளானே. 5

"நின் திருவடியடைந்தேன் செழும் பொழில் திருப்புன் கூருளானே" என்பது பதிக மகுடமாகும்.
நஞ்சு கண்டவர் – திருமால், பிரமன் உள்ளிட்ட தேவர்கள்.
இரிய – நிலை குலைந்து பலபுறமும் ஓட. பித்த – பிறர் உண்டால் நஞ்சு சாதலை விளக்கும். அதுகண்டு மற்ற தேவர் தப்பி ஓட, அதனை உண்டு சாவைக் கோருபவர் போல நின்ற பித்தநிலை. சீலம் – பேரருள்.

வளவிய சோலைகளையுடைய திருப்புன்கூரில் எழுந்தருளியிருப்பவனே! தேவர்கள், அழகிய பெரிய மாலையை மத்தாக நாட்டி, கொடிய பாம்பைக் கயிறாகச் சுற்றிப் பாற்கடலைக் கடைந்து, அதில் அமுதந் தோன்றாது பெருவிடந் தோன்றியதைக் கண்டு அவர்கள் பெரிதும் ஓடிவந்து அடைய அவர்கட்கு உதவுதல் கருதி, கருமை நிறைந்த, அக் கடல் விடத்தை உண்டு, அஃது என்றும் நின்று விளங்குமாறு கண்டத்தே வைத்த பேரருளாளனே! நீ செய்த இந் நல்ல செய்கையையறிந்து வந்து, அடியேன் உன் திருவடியை அடைந்தேன்; என்னை ஏன்று கொண்டருள்.

565. இயக்கர் கின்னரர் ஞமனொடு வருணன்
இயங்கு தீவளி ஞாயிறு திங்கள்
மயக்க மில்புலி வானரம் நாகம்
வசுக்கள் வானவர் தானவ ரெல்லாம்
அயர்ப்பொன் றின்றிநின் திருவடி யதனை
யர்ச்சித் தார்பெறும் ஆரருள் கண்டு
திகைப்பொன் றின்றிநின் திருவடி யடைந்தேன்
செழும்பொ ழில்திருப் புன்கூரு ளானே. 6

அயர்ப்பு – மறத்தல்

வளவிய சோலையையுடைய திருப்புன்கூரில் எழுந்தருளியிருப்பவனே! இயக்கரும், கின்னரரும், இயமனும், வருணனும், அக்கினியும், இயங்குகின்ற வாயுவும், சூரியனும், சந்திரனும், வசுக்களும், ஏனைய தேவர்களும், அசுரர்களும் மற்றும் அறியாமை நீங்கின புலி, குரங்கு, பாம்பு முதலியனவும் உனது திருவடியை மறத்தல் சிறிதும் இன்றி வழிபட்டுப் பெற்ற அரிய திருவருளையறிந்து அடியேனும், தடுமாற்றம் சிறிதும் இன்றி உன் திருவடியை அடைந்தேன். என்னை ஏன்று கொண்டருள்.

566. போர்த்த நீள்செவி யாளர்அந் தணர்க்குப்
பொழில்கொளால் நிழற் கீழறம் புரிந்து
பார்த்த னுக்கன்று பாசுப தங்கொடுத்
தருளி னாய்பண்டு பகீரதன் வேண்ட
ஆர்த்து வந்திழி யும்புனற் கங்கை
நங்கை யாளைநின் சடைமிசைக் கரந்த
தீர்த்த னேநின்றன் திருவடி யடைந்தேன்
செழும்பொ ழில்திருப் புன்கூரு ளானே. 7

நீள்செவி – இறைவரது உபதேசம் நிரம்பக் கேட்பதற்கும் புறம் போகாது முற்றுங் கேட்பதற்கும் உதவும் பொருட்டு நீண்ட செவியை வேண்டிப் பெற்றனர்.
தீர்த்தன் – தூய்மை செய்பவன்.

தூயவனே! வளவிய சோலைகளையுடைய திருப்புன்கூரில் எழுந்தருளியிருப்பவனே! நற்பொருள்களை உள்ளடக்கிய பெரிய செவிகளையுடைய முனிவர்களுக்கு, அன்று சோலைகளைச் சூழக்கொண்ட ஆலமரத்தின் கீழிருந்து அறத்தைச் சொல்லியும், அருச்சுனனுக்கு அன்று பாசுபதத்தைக் கொடுத்தும் பகீரதன் வேண்டிக்கொள்ள அவன் பொருட்டு, ஆரவாரித்து வீழ்ந்த நீர்வடிவாகிய கங்கையாளை முன்பு உனது சடையில், அடக்கியும் அருள்செய்தாய்; அவற்றையெல்லாம் அறிந்து வந்து, அடியேன் உன் திருவடியை அடைந்தேன்; என்னை ஏன்று கொண்டருள்.

**567.** மூவெயில் செற்ற ஞான்றுய்ந்த மூவரில்
இருவர் நின்திருக் கோயிலின் வாய்தல்
காவ லாளர்என் றேவிய பின்னை
ஒருவன் நீகரி காடரங் காக
மானை நோக்கியோர் மாநடம் மகிழ
மணிமு ழாமுழக் கவருள் செய்த
தேவ தேவநின் திருவடி யடைந்தேன்
செழும்பொ ழில்திருப் புன்கூரு ளானே. 8

தேவதேவனே! வளவிய சோலைகளையுடைய திருப்புன்கூரில் எழுந்தருளியிருப்பவனே! நீ, முப்புரத்தை அழித்த காலத்தில் அழியாது பிழைத்த அசுரர் மூவரில் இருவரை உனது திருக்கோயிலின் வாயில் காவலராகும்படி பணித்தபின்பு, மற்றொருவனை, நீ, கரிந்த காடே அரங்கமாக, உமையவளை நோக்கி ஒப்பற்ற பெரிய நடனத்தை மகிழ்ந்து செய்யும் பொழுது அழகிய மத்தளத்தை முழக்கும்படி அருள்செய்ததை யறிந்து வந்து அடியேன் உன் திருவடியை அடைந்தேன்; என்னை ஏன்று கொண்டருள்.

'தாரகாக்கன், கமலாக்கன், வித்துவன்மாலி' என்னும் தலைவர் உட்படத் திரிபுரத்தில் இருந்தவர் அனைவரும் புத்தன் போதனையால் சிவநெறியைக் கைவிடவும், 'சுதன்மன், சுசீலன், சுபுத்தி' என்னும் மூவர்மட்டும் முன்போலவே சிவநெறியில் மாறாது நின்று சிவபிரானிடத்து அன்பூண்டு ஒழுகினமையால்,

சிவபெருமான் அவர்களை மட்டும் அழியாது காத்து, மேற்சொல்லியவாறு திருவருள் செய்தனன் என்க. இதனை,

"மூவார் புரங்கள் எரித்த அன்று
மூவர்க் கருள்செய்தார்" (தி. 1 ப. 69 பா. 1)

எனவும்,

"திரிபுரத்தோர் மூவர்க்குச் செம்மை செய்த
தலையானை" (தி. 6 ப. 60 பா. 9)

எனவும்,

"உய்யவல் லாரொரு மூவரைக் காவல்கொண்
டெய்யவல் லானுக்கே உந்தீபற" (தி. 8 திருவா. திருவுந்தி. 4)

எனவும் ஆசிரியர் அனைவரும் சிறந்தெடுத்தோதிப் போற்றுமாறு காண்க. இவ்வரலாறு, காஞ்சிப் புராணத்து முப்புராரிக் கோட்டப் படலத்துள் விளங்கக் கூறப்படுதல் காண்க. திரிபுரத்தலைவர், 'தாரகாக்கன், கமலாக்கன், வித்துவன்மாலி' என்போர் எனவும், திரிபுரத்தில் உய்ந்த மூவர், 'சுதன்மன், சுசீலன், சுபுத்தி' என்போர் எனவும் பிரித்தறிந்து கொள்க. சிவபிரான் திருக்கோயில்களில் துவார பாலகர்களாய் நிற்பவர் இவருள் இருவரே என்பது இத் திருப்பாடலால் இனிது விளங்குதல் காண்க. இவ்வரலாறு, 'உலகிற்குத் தீங்குகள் நேரினும், சிவபிரானைப் பற்றி நிற்பாரை அவை ஒன்றுஞ் செய்யா' என்பதனை இனிது விளக்கும்.

இது, முப்புரத்துள் வாழ்ந்த மூவர்க்குச் செய்த திருவருள் திறத்தைப் புகழ்ந்து அருளியது.

| | |
|---|---|
| **568.** அறிவி னால்மிக்க அறுவகைச் சமயத்<br>தவ்வவர்க் கங்கே ஆரருள் புரிந்து<br>எறியு மாகடல் இலங்கையர் கோனைத்<br>துலங்க மால்வரைக் கீழடர்த் திட்டுக்<br>குறிகொள் பாடலின் இன்னிசை கேட்டுக்<br>கோல வாளொடு நாளது கொடுத்த<br>செறிவு கண்டுநின் திருவடி யடைந்தேன்<br>செழும்பொ ழில்திருப் புன்கூரு ளானே. 9 | வளவிய சோலைகளையுடைய திருப்புன்கூரில் எழுந்தருளியிருப்பவனே! நூலறிவினால் மிக்க ஆறுவகைப்பட்ட சமயங்களில் உள்ள அவரவர்க்கும் அச்சமயத்திற்றானே, அரிய திருவருளைச் செய்தும், அலையெறியும் பெரிய கடலிடத்து உள்ள இலங்கையில் உள்ளார்க்கு அரசனாகிய இராவணனை, அவனுக்கு அறிவு தோன்றுமாறு பெரிய மலைக்கீழ் வைத்து நெரித்து, பின்பு அவன் பாடிய, உய்யும் கருத்தைக் கொண்ட பாடலினது இனிய இசையைக் கேட்டு, அழகிய வாளோடு, மிக்க வாழ்நாளையுங் கொடுத்தும் அருளிய உனது மிகுந்த திருவருளை அறிந்து வந்து, அடியேன் உன் திருவடியை அடைந்தேன்; என்னை ஏன்று கொண்டருள். |
| **569.** கம்ப மால்களிற் றின்னுரி யானைக்<br>காமற் காய்ந்ததோர் கண்ணுடை யானைச்<br>செம்பொ னேயொக்குந் திருவுரு வானைச்<br>செழும்பொ ழில்திருப் புன்கூரு ளானை<br>உம்ப ராளியை உமையவள் கோனை<br>ஊரன் வன்றொண்டன் உள்ளத் தாலுகந்<br>தன்பி னாற்சொன்ன அருந்தமி ழைந்தோ<br>டைந்தும் வல்லவர் அருவினை யிலரே. 10 | அசைதலையுடைய பெரிய யானையினது தோலை உடையவனும், காமனை எரித்த ஒரு கண்ணை உடையவனும், செம்பொன்னே போல்வதாகிய அழகிய மேனியை உடையவனும், தேவர்களை ஆள்பவனும், உமையவளுக்குத் தலைவனும் ஆகிய வளவிய சோலைகளையுடைய திருப்புன்கூரில் எழுந்தருளியிருக்கின்ற பெருமானை, வன்றொண்டனாகிய நம்பியாரூரன், மனத்தால் விரும்பி, அங்ஙனம் விரும்பிய அவ்வன்பானே சொல்லிய அரிய இத்தமிழ்ப் பாடல்கள் பத்தினையும் பாட வல்லவர், நீங்குதற்கரிய வினைகளை இல்லாதவராவர்; இது திண்ணம். |

## 56. திருநீடூர்

பண் : தக்கேசி　　　　　　　　　　　　　　　　　　　　　　　　பதிக எண் : 56

| மூர்த்தி | அருள்தரும் வேயுறுதோளி உடனமர் அருள்மிகு சோமநாதர். | | |
|---|---|---|---|
| தல இருப்பிடம் | சோழநாட்டில் காவிரி வடகரையில் மயிலாடுதுறையிலிருந்து 5 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| தல மரம் | மகிழம் | | |
| தீர்த்தம் | செங்கழு நீரோடை | | |
| பாடியவர் | நம்பியாரூரர் | பதிகம் | 1 |

570. ஊர்வ தோர்விடை ஒன்றுடை யானை
　　ஒண்ணு தற்றனிக் கண்ணுத லானைக்
கார தார்கறை மாமிடற் றானைக்
　　கருத லார்புரம் மூன்றெரித் தானை
நீரில் வாளைவ ரால்குதி கொள்ளும்
　　நிறைபு னற்கழ னிச்செல்வ நீடூர்ப்
பாரு ளார்பர வித்தொழ நின்ற
　　பரம னைப்பணி யாவிட லாமே.　　1

பணியா விடலாமே – வணங்காது விடலாமோ? அவசியம் வணங்க வேண்டும்.

எருது ஒன்றினை ஓர் ஊர்தியாக உடையவனும், ஒளியையுடைய நெற்றியையுடைய ஒப்பற்ற சிவபெருமானும், கருமை பொருந்திய நஞ்சினையுடைய கண்டத்தையுடையவனும், பகைவரது ஊர்கள் மூன்றை எரித்தவனும் ஆகிய, நீரில் வாழ்வனவாகிய வாளை மீனும், வரால்மீனும் குதிகொள்ளுகின்ற நிறைந்த நீரையுடைய கழனிகளையுடைய செல்வம் பொருந்திய திருநீடூரின்கண், நிலவுலகில் உள்ளார் யாவரும் துதித்து வணங்குமாறு எழுந்தருளியிருக்கின்ற இறைவனை நாம் வணங்காது விடுதலாகுமோ! ஆகாதன்றோ; அதனால், அங்குச் சென்று அவனை வணங்குவோம்.

571. துன்னு வார்சடைத் தூமதி யானைத்
　　துயக்கு றாவகை தோன்றுவிப் பானைப்
பன்னு நான்மறை பாடவல் லானைப்
　　பார்த்த னுக்கருள் செய்தபி ரானை
என்னை இன்னருள் எய்துவிப் பானை
　　ஏதி லார்தமக் கேதிலன் றன்னைப்
புன்னை மாதவி போதலர் நீடூர்ப்
　　புனித னைப்பணி யாவிட லாமே.　　2

துன்னு – நெருங்கிய. வார் – நீண்ட.
ஏதிலார் – அயலார்.

நெருங்கிய நீண்ட சடையின்கண் தூயதாகிய பிறையைச் சூடினவனும், மயக்கம் வாராதவாறு உய்யும் நெறியைக் காட்டுகின்றவனும், உயர்ந்தோர் ஓதும் நான்கு வேதங்களைச் செய்ய வல்லவனும், அருச்சுனனுக்கு அருள் புரிந்த தலைவனும், அவ்வினிய அருள் என்னை அடைய எய்துவிப்பவனும், அயலாய் நிற்பார்க்கு அயலாய் நிற்பவனும் ஆகிய, புன்னையும் குருக்கத்தியும் அரும்புகள் மலர்கின்ற திருநீடூரின்கண் எழுந்தருளியிருக்கின்ற இறைவனை நாம் வணங்காது விடுதலாகுமோ! ஆகாதன்றே; அதனால் அங்குச் சென்று அவனை வணங்குவோம்.

| | | |
|---|---|---|
| 572. | கொல்லு மூவிலை வேலுடை யானைக்<br>கொடிய காலனை யுங்குமைத் தானை<br>நல்ல வாநெறி காட்டுவிப் பானை<br>நாளு நாமுகக் கின்றபி ரானை<br>**அல்ல லில்லரு ளேபுரி வானை**<br>ஆடு நீர்வயல் சூழ்புனல் நீடூர்க்<br>கொல்லை வெள்ளெரு தேறவல் லானைக்<br>கூறி நாம்பணி யாவிட லாமே. 3 | கொல்லுதற் கருவியாகிய சூலத்தை உடையவனும், கொடிய இயமனையும் அழித்தவனும், நல்லனவாகிய நெறிகளையே காட்டுவிக்கின்றவனும், எந்நாளும் நாம் விரும்புகின்ற தலைவனும், துன்பம் இல்லாத திருவருளைச் செய்பவனும் ஆகிய, முழுகுதற்குரிய நீரையுடைய வயல்கள் சூழ்ந்த திருநீடூரின்கண் முல்லை நிலத்து எருதின் மேல் எழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானை நாம் வணங்காது விடுதலாகுமோ! ஆகாதன்றே; அதனால் அங்குச் சென்று அவனை வணங்குவோம். |
| 573. | தோடு காதிடு தூநெறி யானைத்<br>தோற்ற முந்துறப் பாயவன் றன்னைப்<br>பாடு மாமறை பாடவல் லானைப்<br>பைம்பொ ழிற்குயில் கூவிட மாடே<br>ஆடு மாமயில் அன்னமொ டாட<br>அலைபு னற்கழ னித்திரு நீடூர்<br>வேட னாயபி ரானவன் றன்னை<br>விரும்பி நாம்பணி யாவிட லாமே. 4 | தோட்டைக் காதிலே இட்ட, தூய நெறியாய் உள்ளவனும், உயிர்கட்குப் பிறப்பும் இறப்புமாய் நிற்பவனும், இசையொடு பாடுதற்குரிய சிறந்த வேதத்தைச் செய்யவல்லவனும் ஆகிய, பசிய சோலைகளில் குயில்கள் கூவ, அவ்விடத்தே, ஆடுந்தன்மையுடைய சிறந்த மயில், அன்னத்துடன் நின்று ஆட, அலைகின்ற நீரையுடைய வயல்களையுடைய திருநீடூரின்கண் எழுந்தருளியிருக்கின்ற இறைவனை, நாம் விரும்பி வணங்காது விடுதலாகுமோ! ஆகாதன்றே; அதனால், அங்குச் சென்று அவனை வணங்குவோம். |
| 574. | குற்ற மொன்றடி யாரில ரானாற்<br>கூடு மாறுத னைக்கொடுப் பானைக்<br>கற்ற கல்வியி லும்மினி யானைக்<br>காணப் பேணு மவர்க்கெளி யானை<br>முற்ற அஞ்சுந் துறந்திருப் பானை<br>மூவ ரின்முத லாயவன் றன்னைச்<br>சுற்று நீர்வயல் சூழ்திரு நீடூர்த்<br>தோன்ற லைப்பணி யாவிட லாமே. 5 | அடியவர் குற்றம் சிறிதும் இலராயினாரெனின், அவர்கள் அடையுமாறு தன்னையே கொடுப்பவனும், வருந்திக் கற்ற கல்வியினும் மேலாக இனிமையைச் செய்கின்றவனும், ஐம்புலன்களையும் முற்றத்துறந்து பற்றின்றி இருப்பவனும், காரணக் கடவுளர் மூவருள் முதல்வனாயினவனும் ஆகிய, சுற்றிலும் நீரையுடைய வயல்கள் சூழ்ந்த திருநீடூரின்கண் எழுந்தருளியிருக்கின்ற இறைவனை, நாம் வணங்காது விடுதலாகுமோ! ஆகாதன்றே; அதனால் அங்குச் சென்று அவனை வணங்குவோம். |

| | |
|---|---|
| **575.** காடி லாடிய கண்ணுத லானைக்<br>கால னைக்கடிந் திட்டபி ரானைப்<br>பாடியா டும்பரி சேபுரிந் தானைப்<br>பற்றி னோடுசுற் றம்மொழிப் பானைத்<br>தேடி மாலயன் காண்பரி யானைச்<br>சித்த முந்தெளி வார்க்கெளி யானைக்<br>கோடி தேவர்கள் கும்பிடு நீடூர்க்<br>கூத்த னைப்பணி யாவிட லாமே. 6 | காட்டில் ஆடுகின்ற, கண்ணையுடைய நெற்றியையுடையவனும், கூற்றுவனை அழித்த தலைவனும், அன்பினால் பாடி ஆடுகின்ற செயலையே விரும்புபவனும், பொருட் சார்புகளையும் உயிர்ச்சார்புகளையும் நீக்குபவனும், மாலும் அயனும் தேடிக் காணுதற்கு அரியவனும், சொல்லாலன்றி, உள்ளத்தாலும் தன்னைத் தெளிந்தவர்க்கு எளியவனும் ஆகிய, அளவற்ற தேவர்கள் தொழுகின்ற, திருநீடூரின்கண் எழுந்தருளியுள்ள இறைவனை நாம் வணங்காது விடுதலாகுமோ! ஆகாதன்றே; அதனால், அங்குச் சென்று அவனை வணங்குவோம். |
| **576.** விட்டி லங்கெரி யார்கையி னானை<br>வீடி லாத வியன்புக ழானைக்<br>கட்டு வாங்கந் தரித்தபி ரானைக்<br>காதி லார்கன கக்குழை யானை<br>விட்டி லங்குபுரி நூலுடை யானை<br>வீந்த வர்தலை யோடுகை யானைக்<br>கட்டி யின்கரும் போங்கிய நீடூர்க்<br>கண்டு நாம்பணி யாவிட லாமே. 7<br><br>"பணியா விடலாமே" என்பது பதிக மகுடமாகும்.<br>வீடிலாத – அழிவில்லாத. வியன் – அகன்ற.<br>விட்டிலங்கு – ஒளிவிட்டுப் பிரகாசிக்கும். | கவைவிட்டு விளங்குகின்ற தீப்பொருந்திய கையையுடையவனும், அழியாத, பரந்த புகழையுடையவனும், மழுவை ஏந்திய தலைவனும், காதின்கண் பொருந்திய பொற்குழையையுடையவனும், மார்பின்கண் எடுத்துவிடப்பட்டு விளங்குகின்ற முப்புரிநூலை உடையவனும், இறந்தவரது தலையோட்டைக் கையில் ஏந்தியவனும் ஆகிய இறைவனை, நாம், கட்டியைத் தரும் கரும்புகள் வளர்ந்துள்ள திருநீடூரின்கண் கண்டு வணங்காது விடுதலாகுமோ! ஆகாதன்றே; அதனால், நாம் அங்குச் சென்று அவனை வணங்குவோம். |
| **577.** மாய மாய மனங்கெடுப் பானை<br>மனத்து ளேமதி யாயிருப் பானைக்<br>காய மாயமு மாக்குவிப் பானைக்<br>காற்று மாய்க்கன லாய்க்கழிப் பானை<br>ஒயு மாறுறு நோய்புணர்ப் பானை<br>ஒல்லை வல்வினை கள்கெடுப் பானை<br>வேய்கொள் தோளுமை பாகனை நீடூர்<br>வேந்த னைப்பணி யாவிட லாமே. 8 | நிலையில்லாத பொருள்கள் மேற்செல்லுகின்ற மனத்தோடு ஒற்றித்து நின்று அதன்வழியே செல்லும் அறிவாய் இருப்பவனும், பின்னர் அம்மனத்தின் செயலைக்கெடுத்து அறிவைஒரு நெறிப்படுத்துபவனும், காற்றும் தீயும் முதலிய கருவிகளாய் நின்று உடம்பாகிய காரியத்தைப் பண்ணுவிப்பவனும், பின்னர் அதனை அழிப்பவனும் உயிர்கள் வருந்துமாறு, அவற்றை அடையப்பாலனவாகிய வினைப்பயன்களைக் கூட்டுவிக்கின்றவனும், பின்னர் விரைவில் அவ்வினைகளை அழிப்பவனும், இவை எல்லாவற்றையும் செய்தற்கு மூங்கில் போலும் தோள்களையுடைய உமையைத் துணையாகக் கொள்பவனும் ஆகிய, திருநீடூரின்கண் எழுந்தருளியுள்ள முதல்வனை, நாம் வணங்காது விடுதலாகுமோ! ஆகாதன்றே; அதனால், அங்குச் சென்று அவனை வணங்குவோம். |

| | | |
|---|---|---|
| 578. | கண்ட முங்கறுத் திட்டபி ரானைக்<br>காணப் பேணு மவர்க்கெளியானைத்<br>தொண்ட ரைப்பெரி தும்முகப் பானைத்<br>துன்ப முந்துறந் தின்பினி யானைப்<br>பண்டை வல்வினை கள்கெடுப் பானைப்<br>பாக மாமதி யானவன் றன்னைப்<br>கெண்டை வாளை கிளர்புனல் நீடூர்க்<br>கேண்மை யாற்பணி யாவிட லாமே. 9 | கண்டத்தைக் கறுப்பாகவும் செய்து கொண்ட தலைவனும், தன்னைக் காண விரும்பும் அடியார்களுக்கு எளியவனும், தனக்குத் தொண்டு பூண்டவரைப் பெரிதும் விரும்புபவனும், துன்பம் இல்லாத இன்பத்தைத் தரும் இனியவனும், பழைய வலிய வினை களையெல்லாம் அழிப்பவனும், பகுதிப்பட்ட சந்திரனுக்குக் களைகண் ஆயினவனும் ஆகிய இறைவனை, நாம், கெண்டை மீன்களும், வாளை மீன்களும் துள்ளுகின்ற நீரையுடைய திருநீடூரின்கண், கேண்மையோடு வணங்காது விடுதலாகுமோ! ஆகாதன்றே; அதனால், அங்குச் சென்று அவனை வணங்குவோம். |
| 579. | அல்ல லுள்ளன தீர்த்திடு வானை<br>அடைந்த வர்க்கமு தாயிடு வானைக்<br>கொல்லை வல்லர வம்மசைத் தானைக்<br>கோல மார்கரி யின்னுரி யானை<br>நல்ல வர்க்கணி யானவன் றன்னை<br>நானுங் காதல்செய் கின்றபி ரானை<br>எல்லி மல்லிகை யேகமழ் நீடூர்<br>ஏத்தி நாம்பணி யாவிட லாமே. 10 | 'துன்பம்' எனப்படுவனவற்றைப் போக்குகின்ற வனும், தன்னை அடைந்தவர்கட்கு அமுதம் போன்று பயன் தருபவனும், கொல்லுதலை யுடைய வலிய பாம்பைக் கட்டியிருப்பவனும், அழகு பொருந்திய யானையின் தோலை யுடையவனும், நன்னெறியில் நிற்பவர்கட்கு அணிகலமாய்த் திகழ்பவனும், அடியேனும் விரும்புகின்ற தலைவனும் ஆகிய இறைவனை, நாம், இரவில் மல்லிகை மலர்கள் மிகவும் மணம் வீசுகின்ற திருநீடூரின்கண் துதித்து வணங்காது விடுதலாகுமோ! ஆகாதன்றே; அதனால், அங்குச் சென்று அவனை வணங்குவோம். |
| 580. | 11 | |

## 57. திருவாழ்கொளிப்புத்தூர்

பண் : தக்கேசி

பதிக எண் : 57

| மூர்த்தி | அருள்தரும் வண்டமர் பூங்குழலி உடனமர் அருள்மிகு மாணிக்கவண்ணர். | | |
|---|---|---|---|
| தல இருப்பிடம் | சோழநாட்டில் காவிரி வடகரையில் மயிலாடுதுறையிலிருந்து 18 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| தல மரம் | வாகை | | |
| தீர்த்தம் | பத்மதீர்த்தம் | | |
| பாடியவர் | திருஞானசம்பந்தர், சுந்தரர் | பதிகங்கள் | 3 |

581. தலைக்க லன்தலை மேல்தரித் தானைத்
தன்னைஎன் னைநினைக் கத்தரு வானைக்
கொலைக்கையா னையுரி போர்த்துகந் தானைக்
கூற்றுதைத் தகுரை சேர்கழ லானை
அலைத்தசெங் கண்விடை ஏறவல் லானை
ஆணை யால்அடி யேன்அடி நாயேன்
மலைத்தசெந் நெல்வயல் வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்நினைக் கேனே.
1

தலையாகிய அணிகலனைத் தலையில் அணிந்தவனும், தன்னை எனக்கு நினைக்குமாறு தருபவனும், கொலைத் தொழிலையும், கையையும் உடைய யானையின் தோலைப் போர்த்து மகிழ்ந்தவனும், கூற்றுவனை உதைத்த, ஒலித்தல் பொருந்திய கழலையணிந்த திருவடியை உடையவனும், எதிர்த்தவரை வருத்தும் சிவந்த கண்களை யுடைய இடபத்தை ஊர வல்லவனும் ஆகிய, பயிர்கள் தம் தலைமேற்கொண்ட செந்நெற்களையுடைய திருவாழ்கொளி புத்தூரில் எழுந்தருளியிருக்கின்ற மாணிக்கம் போல்பவனாகிய பெருமானை மறந்து, அவன் ஆணை வழியே அவனுக்கு அடிமையானேனாகிய அடிநாய் போன்ற யான், வேறு எதனை நினைப்பேன்! ஒன்றையும் நினையேன்.

வாழ்கொளிப்புத்தூர் செல்லாமல் போனபோது நினைந்து மீண்டும் புகுகின்ற கருத்துடன் பாடியது.

தலைக்கலன் – தலைமாலை. ஆணையால் – மறந்து மேற்சென்ற என்னை நினைக்கச் செய்து மீண்டு வருமாறு பணித்த ஆணை.

582. படைக்கட் சூலம் பயிலவல் லானைப்
பாவிப் பார்மனம் பாவிக்கொண் டானைக்
கடைக்கட்பிச் சைக்கிச்சை காதலித் தானைக்
காமன்ஆ கந்தனைக் கட்டழித் தானைச்
சடைக்கட் கங்கையைத் தாழவைத் தானைத்
தண்ணீர்மண் ணிக்கரை யானைத்தக் கானை
மடைக்கண்நீ லம்மலர் வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்நினைக் கேனே. 2

படைகளுள் சூலத்தைப் பழக வல்லவனும், தன்னை நினைவாரது உள்ளத்தில் பரவி அகப்படுத்துக் கொள்பவனும், வாயில்களில் நின்று ஏற்கும் பிச்சைக்கு விரும்புதலைச் செய்பவனும், காமனது உடலை அமைப்பு அழியச் செய்தவனும், கங்கையைச் சடையில் தங்கும்படி வைத்தவனும், தண்ணிய நீரையுடைய மண்ணியாற்றின் கரையில் இருப்பவனும், எல்லாத் தகுதிகளையும் உடையவனும் ஆகிய, நீர்மடைகளில் நீலோற்பல மலர் மலர்கின்ற திருவாழ்கொளி புத்தூரில் எழுந்தருளியிருக்கின்ற மாணிக்கம் போல்பவனாகிய பெருமானை மறந்து, யான், வேறு எதனை நினைப்பேன்! ஒன்றையும் நினையேன்.

"வாழ்கொளிப்புத்தூர் மாணிக்கத்தை மறந்தென் நினைக்கேனே" என்பது பதிக மகுடமாகும்.
பாவிக் கொள்ளுதல் – முழுதும் நிரம்பித் தன்வயமாக்கிக் கொள்ளுதல்.
கடை – தலைவாயில்.

583. வெந்த நீறுமெய் பூசவல் லானை
வேத மால்விடை ஏறவல் லானை
அந்தமா திஅறி தற்கரி யானை
ஆறலைத் தசடை யானைஅம் மானைச்
சிந்தை என்தடு மாற்றறுப் பானைத்
தேவ தேவன்என் சொல்முனி யாதே
வந்தென்உள் ளம்புகும் வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்நினைக் கேனே. 3

வெந்த சாம்பலை உடம்பிற் பூச வல்லவனும், வேதமாகிய சிறந்த விடையை ஊர வல்லவனும், முடிவும் முதலும் அறிதற்கு அரியவனும், ஆற்றுநீர் மோதுகின்ற சடையை உடையவனும், பெரியோனும், எனது மனக் கலக்கத்தைக் களைபவனும், தேவர்களுக்குத் தேவனும், யான் இகழ்ந்து சொல்லிய சொல்லை வெறாமல் வந்து என் உள்ளத்திலே புகுந்து நிற்பவனும் ஆகிய திருவாழ்கொளிபுத்தூரில் எழுந்தருளியிருக்கின்ற மாணிக்கம் போல்பவனாகிய பெருமானை மறந்து, யான் வேறு எதனை நினைப்பேன்! ஒன்றையும் நினையேன்.

வெந்த நீற்றை மெய்யில் பூசுதலாவது உலகத்தின் ஆற்றலைத் தாங்குவதல் ஆகலானும், வேதத்தை ஏறுதலாவது, உயிர்கட்குச் செய்வன தவிர்வனவற்றை அறிந்து அறிவித்தல் ஆகலானும் இவை பிறரால் ஆகாமையும் அறிந்து போற்றுவோம். வேதம் சிவபெருமானுக்குக் குதிரை, சிலம்பு முதலியனவாய் அமைந்தமை போல விடையாக அமைந்தவை இவ்விடத்துப் பெறப்படுகிறது.

584. **தடங்கை யான்மலர் தூய்த்தொழு வாரைத்**
**தன்னடிக் கேசெல்லு மாறுவல் லானைப்**
படங்கொள்நா கம்மரை யார்த்துகந் தானைப்
பல்லின்வெள் ளைத்தலை ஊணுடை யானை
நடுங்கஆ னையுரி போர்த்துகந் தானை
நஞ்சம்உண் டுகண் டங்கறுத் தானை
மடந்தை பாகனை வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்நினைக்
கேனே. 4

**பெரிய கைகளால் மலர்களை எடுத்துத் தூவிக் கும்பிடுகின்றவர்கள், பிறவிடத்துச் செல்லாது, தன் திருவடியிடத்தே செல்லுமாறு செலுத்த வல்லவனும்**, படத்தை உடைய பாம்பை அரையில் விரும்பிக் கட்டியுள்ளவனும், முன்னர் விளங்கும் பற்களையுடைய வெள்ளிய தலையில் உண்ணுதல் உடையவனும், தம் தேவியும் நடுங்கும்படி யானைத் தோலை விரும்பிப் போர்த்துள்ளவனும், நஞ்சினை உண்டு கண்டம் கரியதாகியவனும், மாதொருபாகனும் ஆகிய, திருவாழ்கொளிபுத்தூரில் எழுந்தருளி யிருக்கின்ற மாணிக்கம் போல்பவனாகிய பெருமானை மறந்து யான், வேறு எதனை நினைப்பேன்! ஒன்றையும் நினையேன்.

இறைவன் உயிர்களாகிய நமக்குக் கையைக் கொடுத்தது அவரைப் பூசிப்பதற்காகும்.

585. வளைக்கைமுன் கைமலை மங்கை மணாளன்
மார னாருடல் நீறெழச் செற்றுத்
துளைத்தவங் கத்தொடு தூமலர்க் கொன்றை
தோலும்நூ லும்துதைந் தவரை மார்பன்
திளைக்குந் தெவ்வர் திரிபுர மூன்றும்
அவுணர் பெண்டிரும் மக்களும் வேவ
வளைத்த வில்லியை வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்நினைக்
கேனே. 5

வளையை அணிந்த முன்கையையுடைய மலைமகளுக்கு மணாளனும், மன்மதனது அரிய உடம்பு சாம்பலாய் ஒழியுமாறு அழித்தவனும், துளைசெய்யப்பட்ட எலும்பும், தூய கொன்றை மலரும், தோலும், நூலும் நெருங்கிய, கீற்றுக்களையுடைய மார்பை யுடையவனும், வானத்தில் திரிகின்ற மூன்று அரண்களும், அதன்கண் வாழ்ந்து இன்பம் நுகர்கின்ற பகைவர் மூவரும், அவரைச் சார்ந்த அசுரரும், அவர்தம் பெண்டிரும், பிள்ளைகளும் வெந்தொழியுமாறு வளைத்த வில்லை யுடையவனும் ஆகிய, திருவாழ்கொளிபுத்தூரில் எழுந்தருளியுள்ள மாணிக்கம் போல்பவனாகிய பெருமானை மறந்து, யான், வேறு எதனை நினைப்பேன்! ஒன்றையும் நினையேன்.

கோத்து அணிதற்பொருட்டு எலும்பு துளையிடப் படுவதாயிற்று. தோல் பூணூலில் முடியப்படுகிறது.

586. திருவின் நாயக னாகிய மாலுக்
கருள்கள் செய்திடும் தேவர் பிரானை
உருவி னானைஒன் றாஅறி வொண்ணா
மூர்த்தி யைவிச யற்கருள் செய்வான்
செருவில் லேந்திஓர் கேழற்பின் சென்று
செங்கண் வேடனாய் என்னொடும் வந்து
மருவி னான்றனை வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்நினைக்
கேனே. 6

திருமாலுக்கு இராம, கிருட்டிணப் பிறப்புக்கள் உட்பட எல்லாப் பிறப்புக்களிலும் பல்வேறு நலங்களை அருள் செய்தமையின் "அருள்கள் செய்திடும் தேவர்பிரான்" என்றார்.

திருமகளுக்குக் கணவனாகிய திருமாலுக்குப் பல பொழுதுகளிற் பல திருவருள்களைச் செய்த, தேவர் தலைவனும், உருவம் உடையவனும், அவ்வுருவம் ஒன்றாக அறியப்படாது, அளவற்றவனாய் அறியப்படுங் கடவுளும், அருச்சுனனுக்கு அருள்செய்தற் பொருட்டு, போருக்குரிய வில் ஒன்றை ஏந்திக் கொண்டு, ஒரு பன்றியின்பின்னே, சிவந்த கண்களையுடைய வேடனாய்ச் சென்றவனும், என்னிடத்திலும் வந்து பொருந்தியுள்ளவனும் ஆகிய திருவாழ்கொளி புத்தூரில் எழுந்தருளியுள்ள மாணிக்கம் போல்பவனாகிய பெருமானை மறந்து, யான், வேறு எதனை நினைப்பேன்! ஒன்றையும் நினையேன்.

587. எந்தை யைஎந்தை தந்தை பிரானை
ஏதமா யவ்விடர் தீர்க்க வல்லானை
முந்தை யாகிய மூவரின் மிக்க
மூர்த்தி யைமுதல் காண்பரி யானைக்
கந்தின்மிக் ககரி யின்மருப் போடு
கார கில்கவ ரிம்மயிர் மண்ணி
வந்து வந்திழி வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்நினைக்
கேனே. 7

என் தந்தையும், என் தந்தை தந்தைக்கும் தலைவனும், துன்பத்திற்கு வழியாகிய இடையூறுகளைப் போக்க வல்லவனும், யாவர்க்கும் முன்னோராகிய மும்மூர்த்திகளினும் மேலான மூர்த்தியும், தோற்றம் அறியப்படாதவனும் ஆகிய, மண்ணியாறு வழியாக, தறியிடத்தில் நின்று சினம் மிகுகின்ற யானையின் தந்தங்களும், கரிய அகிற் கட்டைகளும், கவரிமானின் மயிர்களும் வந்து வந்து வீழ்கின்ற திருவாழ்கொளிபுத்தூரில் எழுந்தருளியிருக்கின்ற மாணிக்கம் போல்பவனாகிய பெருமானை மறந்து, யான், வேறு எதனை நினைப்பேன்! ஒன்றையும் நினையேன்.

588. தேனை யாடிய கொன்றையி னானைத்
தேவர் கைதொழுந் தேவர் பிரானை
ஊன மாயின தீர்க்கவல் லானை
ஒற்றை ஏற்றனை நெற்றிக்கண் ணானைக்
கான வானையின் கொம்பினைப் பீழ்ந்த
கள்ளப் பிள்ளைக்குங் காண்பரி தாய
வான நாடனை வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்நினைக்
கேனே. 8

தேனில் மூழ்கிய கொன்றைமலர் மாலையை உடையவனும், தேவர்கள் வணங்கும் தலையாய தேவனும், குறையாயவற்றை எல்லாம் போக்க வல்லவனும், ஒற்றை எருதை உடையவனும், நெற்றிக் கண்ணை உடையவனும், காட்டில் வாழும் யானையின் கொம்பை ஒடித்த கள்ளத்தன்மையுடைய சிறுவனுக்கும் காண அரிதான பொருளாய் உள்ளவனும், வானுலகத்தில் வாழ்பவனும் ஆகிய திருவாழ்கொளிபுத்தூரில் எழுந்தருளியிருக்கின்ற மாணிக்கம் போல்பவனாகிய பெருமானை மறந்து யான், வேறு எதனை நினைப்பேன்! ஒன்றையும் நினையேன்.

**589.** காளை யாகி வரையெடுத் தான்றன்
கைக ளிற்றவன் மொய்தலை யெல்லாம்
மூளை போத ஒருவிரல் வைத்த
மூர்த்தி யைமுதல் காண்பரி யானைப்
பாளை தெங்கின் பழம்விழ மண்டிச்
செங்கண் மேதிகள் சேடெறிந் தெங்கும்
வாளை பாய்வயல் வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்நினைக்
கேனே. 9

காளை போன்று கயிலாயத்தைப் பெயர்த்தவனாகிய இராவணனது கைகள் முரிந்து, நெருங்கிய தலைகளினின்றும் மூளை வெளிப்படுமாறு தனது கால்விரல் ஒன்றை ஊன்றிய கடவுளும், தோற்றம் அறியப்படாதவனும் ஆகிய, பாளையையுடைய தென்னை மரத்தினது நெற்றுக்கள் விழ, சிவந்த கண்களையுடைய எருமைகள், நெருங்கிச் சேறுசெய்ய, எங்கும் வாளை மீன்கள் துள்ளுகின்ற வயல்களையுடைய திருவாழ் கொளிபுத்தூரில் எழுந்தருளியிருக்கின்ற மாணிக்கம் போல்பவனாகிய பெருமானை மறந்து, யான், வேறு எதனை நினைப்பேன்! ஒன்றையும் நினையேன்.

**590.** திருந்த நான்மறை பாடவல் லானைத்
தேவர்க் குந்தெரி தற்கரி யானைப்
பொருந்த மால்விடை ஏறவல் லானைப்
பூதிப் பைபுலித் தோலுடை யானை
இருந்துண் தேரரும் நின்றுணுஞ் சமணும்
ஏச நின்றவன் ஆருயிர்க் கெல்லாம்
மருந்த னான்றனை வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்நினைக்
கேனே. 10

நான்கு வேதங்களையும் செவ்வனே பாட வல்லவனும், தேவர்க்கும் அறிதற்கு அரியவனும், பெரிய விடையினை ஏற்புடைத் தாமாறு ஏற வல்லவனும், திருநீற்றுப் பையும், புலித் தோலுமாகிய இவற்றையுடையவனும், இருந்து உண்கின்ற சாக்கியரும், நின்று உண்கின்ற சமணரும் இகழ நிற்பவனும், அரிய உயிர்கட்கெல்லாம் அமுதம் போல்பவனும் ஆகிய, திருவாழ்கொளிபுத்தூரில் எழுந்தருளியிருக்கின்ற மாணிக்கம் போல்பவனாகிய பெருமானை மறந்து, யான், வேறு எதனை நினைப்பேன்! ஒன்றையும் நினையேன்.

**591.** மெய்யனை மெய்யில் நின்றுணர் வானை
மெய்யி லாதவர் தங்களுக் கெல்லாம்
பொய்ய னைப்புரம் மூன்றெரித் தானைப்
புனித னைப்புலித் தோலுடை யானைச்
செய்ய னைவெளி யதிரு நீற்றில்
திகழு மேனியன் மான்மறி யேந்தும்
மைகொள் கண்டனை வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்நினைக்
கேனே. 11

என்றும் ஓர் அழிவில்லாதவனும், மெய்ம்மையில் நின்று உணரப்படுபவனும், அம் மெய்ம்மையை இல்லாதவர்க்கெல்லாம் உணரப்படாதவனும், முப்புரங்களை எரித்தவனும், குற்றமில்லாதவனும், புலித்தோலாகிய உடையை உடையவனும், சிவந்த நிறம் உடையதாய், வெள்ளிய திருநீற்றினால் விளங்குகின்ற திருமேனியை உடையவனும், மான்கன்றை ஏந்துகின்ற, கருமை நிறத்தைக் கொண்ட கண்டத்தையுடையவனும் ஆகிய, திருவாழ் கொளிபுத்தூரில் எழுந்தருளியிருக்கின்ற மாணிக்கம் போல்பவனாகிய பெருமானை மறந்து, யான், வேறு எதனை நினைப்பேன்! ஒன்றையும் நினையேன்.

மெய்ம்மையாவது – அவனை உணர்தலே கருத்தாதல். அக்கருத்தினை விலக்குதல் மலசக்திகளாகும். அச்சக்திக்குள் அகப்படாதிருக்கத் துணைபுரிவன வழிபாடாகும். முப்புரம் எரித்தல் அம்மல சத்திகளை அழிப்பவன் ஆதலும், புனிதனாதல் அச்சத்திகளினால் அணுகப்படாதவன் ஆதலையும் விளக்கும் குறிப்பு மொழிகள்.

592. வளங்கி ளர்பொழில் வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்நினைக்
கேன்என்
றுளங்கு ளிர்தமிழ் ஊரன்வன் றொண்டன்
சடையன் காதலன் வனப்பகை யப்பன்
நலங்கி ளர்வயல் நாவலர் வேந்தன்
நங்கை சிங்கடி தந்தைப யந்த
பலங்கி ளர்தமிழ் பாடவல் லார்மேற்
பறையு மாஞ்செய்த பாவங்கள் தானே.
12

பயந்த – பாடிய

வன்றொண்டனும், சடையனார் மகனும், வனப்பகை, சிங்கடி என்னும் நங்கையர்க்குத் தந்தையும், விளைவு மிகுகின்ற வயல்களை யுடைய திருநாவலூரில் உள்ளார்க்குத் தலைவனும், இறைவனை உளங்குளிர்ந்து பாடும் தமிழையுடையவனும் ஆகிய நம்பியாரூரன், வளமை மிக்க சோலைகளை யுடைய திருவாழ்கொளிபுத்தூரில் எழுந்தருளி யிருக்கின்ற மாணிக்கம் போல்பவனாகிய பெருமானை மறந்து வேறு எதனை நினைப்பேன் என்று சொல்லிப் பாடிய, பயன் மிகுந்த இத்தமிழ்ப் பாடல்களைப் பாட வல்லவர் களிடத்தினின்றும், அவர்கள் செய்த பாவங்கள் திண்ணமாகப் பறந்து நீங்கும்.

## 58. திருக்கழுமலம்

சுவாமிகள் தில்லையில் கூத்தப் பெருமான் திருக்கூத்தில் திளைத்துப் பரவித் திருவாரூர் செல்லும் பொழுது, உமையம்மை தந்தருளிய திருமுலைப்பால் அமுதுண்டு வளர்ந்தவராகிய திருஞானசம்பந்தர் பிறந்தருளும் பெரும் பேறு பெற்ற திருக்கழுமலம் அணைந்து, 'ஆளுடைய பிள்ளையார் திருஅவதாரம் செய்த தலத்துள்ளும் மிதியேன்' என்று எல்லையில் நின்று வணங்கி, வலமாக வரும்பொழுது, பெருமான் காட்சி கொடுக்கக் கண்டு, "கழுமல வளநகர்க் கண்டுகொண்டேன்" என்று பாடியருளியது இத்திருப்பதிகம். (தி.12 தடுத்தாட். புரா. 113) சீர்காழியின் பன்னிரு திருப்பெயர்களுள் கழுமலமும் ஒன்று.

பண் : தக்கேசி | பதிக எண் : 58

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் திருமலைநாயகி உடனமர் அருள்மிகு பிரமபுரியீசர். | | |
| **தல இருப்பிடம்** | சோழநாட்டில் காவிரி வடகரையில் மயிலாடுதுறைக்கும் சிதம்பரத்துக்கும் இடையில் சிதம்பரத்திலிருந்து 19 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | பாரிசாதம் | | |
| **தீர்த்தம்** | பிரமதீர்த்தம் | | |
| **பாடியவர்** | மூவர் | **பதிகங்கள்** | 71 |

593. சாதலும் பிறத்தலுந் தவிர்த்தெனை வகுத்துத்
தன்னருள் தந்தஎம் தலைவனை மலையின்
மாதினை மதித்தங்கொர் பால்கொண்ட மணியை
வருபுனல் சடையிடை வைத்தஎம் மானை
ஏதிலென் மனத்துக்கோர் இரும்புண்ட நீரை
எண்வகை ஒருவனை எங்கள்பி ரானைக்
காதில்வெண் குழையனைக் கடல்கொள மிதந்த
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே.
1

கண்களால் கண்டு மனத்திலே தரிக்க வைத்துக் கொண்டேன்.

இவ்வுடம்பின் கால எல்லையில் இதன்கண் நின்று சாதலும், பின்பு வேறோர் உடம்பிற் பிறத்தலும் என்னும் இரண்டனையும் விலக்கி, இவ்வொரு பிறப்பிலே என்னைப் படைத்து, அவ்வாற்றானே இதன்கண் வந்து தனது திருவருளை எனக்கு அளித்தருளியவனும், மலைமங்கையை நன்கு மதித்துத் தன் திருமேனியின் ஒருகூற்றில் வைத்த மாணிக்கம் போல்பவனும், வானினின்றும் வந்த வெள்ளத்தைச் சடையிடையில் வைத்தருளின வனும், அயலதாகிய என் நெஞ்சிற்கு, அயலாகாது, **காய்ந்த இரும்பு கவர்ந்த நீர்போல,** உள்ளே கலந்து நிற்பவனும், எட்டுவகைப் பொருளாய் நிற்கும் ஒருவனும், காதில் வெள்ளிய குழையை அணிந்தவனும் ஆகிய எங்கள் தலைவனை அடியேன், அவன் கயிலையில் வீற்றிருந்த வாறே, ஊழிக் காலத்தில் உலகத்தைக் கடல் கொள்ளவும் தான் கொள்ளப்படாது மிதந்து நின்ற, 'திருக்கழுமலமம்' என்னும் இவ்வள நகரிடத்திற் கண்டு கொண்டேன்; அதனால் இனி ஒரு குறையும் இலனாயினேன்.

594. மற்றொரு துணைஇனி மறுமைக்குங் காணேன்
வருந்தலுற் றேன்மற வாவரம் பெற்றேன்
சுற்றிய சுற்றமுந் துணையென்று கருதேன்
துணையென்று நான்தொழப் பட்டஒண் சுடரை
முத்தியும் ஞானமும் வானவ ரறியா
முறைமுறை பலபல நெறிகளுங் காட்டிக்
கற்பனை கற்பித்த கடவுளை யடியேன்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. 2

கற்பனை – பலபல நெறிகளினின்றும் முறையாய்க் கற்றுக் கொள்ளும் படிப்பினை.
முறை முறை – படிப்படியாக.

சூழ்ந்துள்ள சுற்றத்தாரையும் துணையென்று நினையாது, 'இவனே துணை' என்று தெளிந்து, நாள்தோறும் என்னால் வணங்கப்படுகின்ற, ஒளியையுடைய விளக்குப் போல்பவனும், வீடாவதும், ஞானமாவதும், அவற்றை அடைவிப்பனவாய் அமைந்த, தேவராலும் அறியப்படாத அளவற்ற நெறிகளாவனவும் இவை என்பதனைப் படிமுறையானே அறிவித்து, மெய்ப்பொருளை எனக்கு உணர்த்தியருளிய கடவுளும் ஆகிய பெருமானை, அவன் கயிலையில் வீற்றிருந்தவாறே, 'திருக்கழுமலம்' என்னும் இவ்வளநகரிற் கண்டு கொண்டேன்; அதனால் முன்பு அவனை மறந்து வருந்திய யான், இனி ஒருபோதும் அவனை மறவாதிருக்கும் திருவருளைப் பெற்றேன்; ஆகவே, இம்மைக்கேயன்றி மறுமைக்கும் இனி மற்றொரு துணையை நாடேன்.

595. திருத்தினை நகருறை சேந்தனப் பன்னென்
செய்வினை யறுத்திடுஞ் செம்பொனை அம்பொன்
ஒருத்தனை யல்லதிங் காரையு முணரேன்
உணர்வுபெற் றேன்உய்யுங் காரணந் தன்னால்
விருத்தனைப் பாலனைக் கனவிடை விரவி
விழித்தெங்குங் காணமாட் டாதுவிட் டிருந்தேன்
கருத்தனை நிருத்தஞ்செய் காலனை வேலைக்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. 3

யாவருக்கும் முன்னே உள்ளமையின் விருத்தன். பின்னே உண்மையின் பாலன். சித்தவட மடத்தில் உறங்குங் காலத்து வந்து சென்னி மேல் திருவடி நீட்டினமையைக் கனவாக அருளினார். அதன்பின் இறைவர் நம்பியாரூரருக்கு விழிப்பின் கண் வந்து காட்சி வழங்கினமை இவ்விடத்தில்தான்.

திருத்தினை நகரின்கண் எழுந்தருளி யிருக்கின்ற, முருகக்கடவுட்குத் தந்தையும், என்னுடைய முன்னை வினைகளையெல்லாம் விலக்குகின்ற, செம்பொன்போலும் சிறப்புடையவனும், அழகிய பொன்போலும் திருமேனியையுடைய ஒப்பற்றவனும் ஆகிய எங்கள் சிவபெருமானையல்லாது வேறு யாரையும் யான் இவ்வுலகில் இறைவராக உணரேன்; யான் உய்யும் காரணங் கூடினமையால் இத்தகைய உணர்வைப் பெற்றேன்; ஆயினும், விருத்தனும், பாலனும் ஆகிய அவனை, யான் கனவில் என் அருகே கண்டு, நனவில் எங்குங் காணமாட்டாது பிரிந்திருந்தேன்; இதுபோழ்து, யாவர்க்கும் தலைவனும் நடனம் புரிகின்ற திருவடிகளை யுடையவனும் ஆகிய அவனை, அவன் கயிலையில் வீற்றிருந்தவாறே, கடலை அடுத்துள்ள, 'திருக்கழுமலம்' என்னும் இவ் வளநகரிடத்துக் கண்டுகொண்டேன்; அதனால், இனி அப்பிரிவு இலனாயினேன்.

**596.** மழைக்கரும் பும்மலர்க் கொன்றையி னானை
வளைக்கலுற் றேன்மற வாமனம் பெற்றேன்
பிழைத்தொரு கால்இனிப் போய்ப்பிற வாமைப்
பெருமைபெற் றேன்பெற்ற தார்பெறு கிற்பார்
குழைக்கருங் கண்டனைக் கண்டுகொள் வானே
பாடுகின் றேன்சென்று கூடவும் வல்லேன்
கழைக்கரும் புங்கத லிப்பல சோலைக்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. **4**

மழையினால் அரும்புகின்ற கொன்றையினது மலரைச் சூடினவனாகிய எங்கள் பெருமானை என்றும் மறவாது நினைக்கின்ற மனத்தைப் பெற்றேனாதலின், யான் அவனைப் புறம் போக வொட்டாது என்னிடத்தே பிணித்துக் கொள்ளுதலைப் பொருந்தினேன்; இனி ஒருபோதும் இந்நிலையினின்றும் தவறி உலகிற் போய்ப் பிறவாத பெருமையைப் பெற்று விட்டேன்; யான் பெற்ற இப்பேற்றினை வேறு யார் பெற வல்லார்; இவ்வாறாதலின், அவனை இனியொருகால் இவ்விடத்து யான் நேர்படக் காணாதேயும், இவ்வுடம்பு நீங்கியபின் அவனை அடையவும் வல்லேன்; என்றாலும், அவனைக் காணாது என் நெஞ்சம் அமையாமையின், காதிற் குழையையுடைய நீலகண்டனாகிய அவனை மீளக்காணுதல் வேண்டியே பாடி நிற்கின்றேன்; இந்நிலையில் அவனை, இதுபோழ்து, அவன் கயிலையில் வீற்றிருந்தவாறே, கழைக் கரும்பும், வாழையும் பல சோலையுடன் நிறைந்துள்ள, 'திருக்கழுமலம்' என்னும் இவ்வள நகரிடத்துக் கண்டு கொண்டேன்; இனியொரு குறையும் இலனாயினேன்.

---

**597.** குண்டலங் குழைதிகழ் காதனே யென்றுங்
கொடுமழு வாட்படைக் குழகனே யென்றும்
வண்டலம் பும்மலர்க் கொன்றைய னென்றும்
வாய்வெரு வித்தொழு தேன்விதி யாலே
பண்டைநம் பலமன முங்களைந் தொன்றாய்ப்
பசுபதி பதிவின விப்பல நாளுங்
கண்டலங் கழிக்கரை யோதம்வந் துலவுங்
கழுமல வளநகர்க் கண்டுகொண்
டேனே. **5**

யான், உறக்கத்தில், 'குண்டலமும், குழையும் விளங்குகின்ற காதினை உடையவனே' என்றும், 'கொடிய மழுவாகிய ஒளியையுடைய படையை உடையவனே' என்றும், 'வண்டுகள் ஒலிக்கின்ற கொன்றை மலரைச் சூடியவனே' என்றும் வாய் பிதற்றி, விழித்த பின், பழக்கமாய் நமக்கு உள்ள பலவாறான மனத்தை ஒழித்து ஒருநெறிப்பட்ட மனத்தையுடையேனாய், அவனது தலங்களை வினாவி அறிந்து, 'அத்தலத்திற் கிடைப்பான்' என்று எண்ணிப் பல நாளும் சென்று முறைப்படியே வணங்கினேன். அவ்வாற்றால் வருமிடத்து, தாழைகளையுடைய கழிக்கரை யிடத்துக் கடல் அலைகள் வந்து உலவுகின்ற, 'திருக்கழுமலம்' என்னும் இவ் வளநகரிடத்தே அவனை, அவன் கயிலையில் வீற்றிருந்தவாறே கண்டுகொண்டேன்; இனி, அக்குறையிலே னாயினேன்.

குண்டலம் ஆசிரியக் கோலத்தையும், குழை மணவாளக் கோலத்தையும் காட்டும்.

598. வரும்பெரு வல்வினை யென்றிருந் தெண்ணி
வருந்தலுற் றேன்மற வாமனம் பெற்றேன்
விரும்பிஎன் மனத்திடை மெய்குளிர்ப் பெய்தி
வேண்டிநின் றேதொழு தேன்விதி யாலே
அரும்பினை அலரினை அமுதினைத் தேனை
ஐயனை அறவன்என் பிறவிவேர் அறுக்குங்
கரும்பினைப் பெருஞ்செந்நெல் நெருங்கிய கழனிக்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே.
6

'அளவற்ற வலிய வினைகள்வந்து வருத்துமே; என் செய்வது' என்று எண்ணியிருந்து வருந்தினேன்; அங்ஙனம் வருந்தாதபடி எம்பெருமானை மறவாத மனம் வாய்க்கப் பெற்றனே். அதனால், என் மனத்தால் அவனை விரும்பி, மெய்சிலிர்த்து, என்னை இகழாதொழியுமாறு அவனை இரந்து நின்று, முறைப்படியே வணங்கினேன்; அதனால், அரும்பும், பூவும், அமுதும், தேனும், கரும்பும் போல இன்பம் தருபவனும், யாவர்க்கும் தலைவனும், அறவடிவினனும், எனது பிறவியை வேரோடு அறுப்பவனும் ஆகிய அவனை, அவன் கயிலையில் வீற்றிருந்தவாறே, மிக்க செந்நெல் நிறைந்த வயல்களையுடைய, 'திருக்கழுமலம்' என்னும் இவ்வளநகரிடத்துக் கண்டு கொண்டேன்.

"கழுமல வளநகர்க் கண்டு கொண்டேனே" பதிக மகுடமாகும்.

599. அயலவர் பரவவும் அடியவர் தொழவும்
அன்பர்கள் சாயலுள் அடையலுற் றிருந்தேன்
முயல்பவர் பின்சென்று முயல்வலை யானை
படுமென மொழிந்தவர் வழிமுழு தெண்ணிப்
புயலினைத் திருவினைப் பொன்னின தொளியை
மின்னின துருவினை என்னிடைப்
பொருளைக்
கயலினஞ் சேலொடு வயல்விளை யாடுங்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே.
7

மேகமும், செல்வமும் போல்பவனும், பொன்னொளியும் மின்னொளியும் போலும் திருமேனியையுடையவனும், என்னிடத்துக் கிடைத்த பொருள் போல்பவனும் ஆகிய எங்கள் பெருமானை யான் அடைய நினைந்து, அதன் பொருட்டுச் சேய்மையில் உள்ளார் அவனைத் துதிக்கவும், அண்மையில் உள்ளார் அவனை வணங்கவும், அவற்றுள் ஒன்றையும் செய்யாது, அவனைத் தங்கள் வன்மையால் அடைய முயல்பவர்கள் பின்னே சென்று, 'முயல் அகப்படும் வலையில் யானை அகப்படும்' என்று சொல்லிய அவர்களது சொல்லைக் கேட்டு, அவ்வழியையே முற்றிலும் கடைப்பிடித்து, அவனிடத்து அன்புடையாரது தோற்றத்தை மேற்கொண்டிருந்தேன்; ஆயினும், எனது முன்னைத் தவத்தால், அவனை அவன் கயிலையில் வீற்றிருந்தவாறே, கயல் மீன்களும், சேல்மீன்களும் வயலின்கண் விளையாடுகின்ற, 'திருக்கழுமலம்' என்னும் இவ்வளநகரிடத்துக் கண்டு கொண்டேன்; அதனால் எண்ணம் கைகூடப்பெற்றேன்.

இறைவன் வெளிப்பட்டு அருளுதல் அவன் கருணையிருந்தால் மட்டும் நிகழும். நாம் செய்கின்ற வேள்வி யாகங்களாலோ, ஆராய்ச்சிகளாலோ காணலாம் என நினைத்தால், அது நடவாது.

| | | |
|---|---|---|
| 600. | நினைதரு பாவங்கள் நாசங்க ளாக<br>நினைந்துமுன் தொழுதெழப் பட்டஒண்<br>சுடரை<br>மனைதரு மலைமகள் கணவனை வானோர்<br>மாமணி மாணிக்கத் தைம்மறைப்<br>பொருளைப்<br>புனைதரு புகழினை எங்கள் தொளியை<br>இருவரும் ஒருவனென் றுணர்வரி யவனைக்<br>கனைதரு கருங்கட லோதம்வந் துலவுங்<br>கழுமல வளநகர்க் கண்டுகொண்<br>டேனே. 8 | நினைத்து உணரப்படும் கருத்துப் பொருள்களாகிய பாவங்கள் அழிதல் உளவாகும்படி, யான், மனத்தால் நினைந்தும், கையால் தொழுதும் எழப்பட்ட, ஒளி பொருந்திய ஞாயிறு போல்பவனும், தனக்கு மனைவியைத் தர விரும்பிய மலைக்கு மகளாகிய உமைக்குக் கணவனும், தேவர்களது தலைமணியாகிய மாணிக்கம் போல்பவனும், வேதத்தின் பொருளாய் உள்ளவனும், அழகியவாகச் சொல்லப்படுகின்ற புகழை உடையவனும், எங்கள் விளக்குப் போல்பவனும், மாலும் அயனும், 'இன்னன்' என்று அறிதற்கு அரியவனும் ஆகிய இறைவனை, அடியேன், அவன் கயிலையில் வீற்றிருந்தவாறே, ஒலிக்கின்ற கரிய கடலினது அலைகள் வந்து உலவுகின்ற, 'திருக்கழுமலம்' என்னும் இவ் வளநகரிடத்துக் கண்டுகொண்டேன். |
| 601. | மறையிடைத் துணிந்தவர் மனையிடை யிருப்ப<br>வஞ்சனை செய்தவர் பொய்கையுள் மாயத்<br>துறையுறக் குளித்துள தாகவைத் துய்த்த<br>துன்மை யெனுந்தக வின்மையை யோரேன்<br>பிறையுடைச் சடையனை எங்கள்பி ரானைப்<br>பேரரு ளாளனைக் காரிருள் போன்ற<br>அறையணி மிடறுடை யடிகளை அடியேன்<br>கழுமல வளநகர்க் கண்டுகொண்<br>டேனே. 9 | வேள்வி முதலிய கருமங்களையே மெய்யென்று துணிந்தவர்கள் பற்றுவிடமாட்டாது மனை வாழ்க்கையிலே கட்டுண்டு கிடத்தலும், முற்றத் துறந்தவர்போலக் காட்டினோரது பொய்யாகிய தவங்கள் ஏனையோரது முயற்சிகளோடொப்பக் கடிதில் அழிந்து போதலும் கண்கூடாய் இருக்க, அவற்றை மேற்கொண்டவர்கள், தாம் சேற்றில் அழுந்தியிருத்தலை அறியாது, நல்ல நீர்த் துறையிலே நன்கு மூழ்கியிருப்பதாகக் கருதிப் பிறரையும் தம் வழியிலே செல்லக் காட்டிய தீநெறியாகிய பொருந்தா நெறியை, யான் பொருட்படுத்தாது வந்து, பிறையையுடைய சடையை உடையவனும், எங்கள் தலைவனும், கருணையை மிக உடையவனும் ஆகிய சிவபெருமானை அடியேன், அவன் கயிலையில் வீற்றிருந்தவாறே, 'திருக்கழுமலம்' என்னும் இவ்வளநகரிடத்துக் கண்டுகொண்டேன். |

602. **செழுமலர்க் கொன்றையுங் கூவிள மலரும்**
விரவிய சடைமுடி யடிகளை நினைந்திட்
டழுமலர்க் கண்ணிணை அடியவர்க் கல்லால்
அறிவரி தவன்றிரு வடியிணை யிரண்டுங்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டூரன்
சடையன்றன் காதலன் பாடிய பத்துந்
தொழுமல ரெடுத்தகை அடியவர் தம்மைத்
துன்பமும் இடும்பையுஞ் சூழகி லாவே.

10

செழுமையான கொன்றையினது மலரும், வில்வ இலையாகிய மலரும் கலந்துள்ள சடைமுடியையுடைய தலைவனை நினைந்து, அன்பினால் அழுகின்ற மலர்போலும் கண்ணினையுடைய அடியார்க்கல்லது அறிதற்கரிய இணையாகிய அவன் திருவடிகள் இரண்டினையும், 'திருக்கழுமலம்' என்னும் இவ் வளநகரிடத்துக் கண்டுகொண்டு, சடையனார்க்கு மகனாகிய நம்பியாரூரன் பாடிய இப் பத்துப் பாடல்களாலும் தொழுகின்ற, மலரைத் தாங்கிய கைகளையுடைய அடியார்களை, துன்பமும், இடும்பையும் அணுக மாட்டா.

கூவிளம் – வில்வம். கூவிளை ஆகுபெயராய் அதன் இலையைக் குறித்தது. அவ்விலையை, மலர்கள் பலவற்றினும் சிறந்ததாகச் சிவபிரான் விரும்புதலின், அதனையே மலர் என்று அருளினார்.

துன்பம் இன்பத்திற்கு எதிராய நுகர்ச்சி. இடும்பை அதற்குக் காரணமாவன பலவற்றுள் ஒன்றாய இடையூறு. இடையூறு இல்லை என்றதனால், எடுத்த செயல் முற்றி இன்புறுவர் என்று கொள்ளலாம்.



திருவாரூர்: பரவையார் மாளிகை - இறைவன் தூதாக எழுந்தருளியது

## 59. திருவாரூர்

கேரள மாநிலம் கொடுங்கோளூரில், சேரமான் பெருமானது வழிபாட்டை ஏற்றிருந்த சுந்தரர் ஆரூர்ப் பெருமானை நினைந்து "ஆரூரானை மறக்கலுமாமே" என்று பாடியருளியது. இத்திருப்பதிகம் இறைவரது தன்மைகள் பலவற்றையும் நினைந்து, அவர் தமக்குத் திருவாரூரில் எளிவந்து அருளுபவராய் அருளப் பட்டதாயினும், ஆரூரைப் பற்றிப் பாடப்பட்டதால் தலமுறையில் திருவாரூர்ப் பதிகங்களுள் சேர்க்கப்பட்டது. நம்பிகளின் பத்திமை என்ற பதிகமும் ஒற்றியூரில் அருளப்பட்டாலும் ஆரூரைப் பற்றியதால் திருவாரூர்ப் பதிகங்களில் சேர்க்கப்பட்டது.

பண் : தக்கேசி — பதிக எண் : 59

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் அல்லியங்கோதை உடனமர் அருள்மிகு புற்றிடங்கொண்டீசர் | | |
| **தல இருப்பிடம்** | சோழநாட்டில் காவியின் தென்கரையில் தஞ்சாவூரிலிருந்து 70 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | பாதிரி | | |
| **தீர்த்தம்** | கமலாலயத்திருக்குளம் 33 ஏக்கர் – 5 வேலி | | |
| **பாடியவர்** | மூவர் | **பதிகங்கள்** | 33 |

603. பொன்னும் மெய்ப்பொரு ளும்தரு வானைப்
போக மும்திரு வும்புணர்ப் பானைப்
பின்னை என்பிழை யைப்பொறுப் பானைப்
பிழையெ லாந்தவி ரப்பணிப் பானை
இன்ன தன்மையன் என்றறி வொண்ணா
எம்மா **னைஎளி வந்தபி ரானை**
அன்னம்வை கும்வ யற்பழ னத்தணி
ஆரூ ரானை மறக்கலு மாமே. 1

எனக்குப் பொன்னையும், மெய்யுணர்வையும் வழங்குபவனும், அவை வாயிலாக உலகின்பத்தையும், வீட்டின் பத்தையும் சேர்ப்பிக்கின்றவனும், அதன்பின் யான் அவ்வின்பங்களை நுகரும்பொழுது செய்கின்ற பிழைகளைப் பொறுத்துக் கொள்பவனும், பின்னர்ப் பிழைகளே வாராதவாறு அருள் செய்பவனும், இன்ன தன்மையை உடையவன் என்று வரையறுத்து உணர ஒண்ணாத எங்கள் தலைவனும், எனக்கு எளிவந்த பெருமானும் ஆகிய, அன்னங்கள் தங்கியுள்ள வயல்களை யுடைய பண்ணைகளையுடைய அழகிய திருவாரூர் இறைவனை யான் மறத்தலும் இயலுமோ!

பிழை – இறைவனை மறந்து, முன்னிலைப் பொருள்களை நினைந்து விருப்பும், வெறுப்பும் கொள்ளுதல் – சிற்றின்ப வேட்கை.
"இன்னதன்மையன்...." – பரத்துவம்.

604. கட்ட மும்பிணி யுங்களை வானைக்
காலற் சீறிய காலுடை யானை
விட்ட வேட்கைவெந் நோய்களை வானை
விரவி னால்விடு தற்கரி யானைப்
பட்ட வார்த்தை படநின்ற வார்த்தை
வாரா மேதவி ரப்பணிப் பானை
அட்ட மூர்த்தியை மட்டவிழ் சோலை
ஆரூ ரானை மறக்கலு மாமே. 2

கட்டம் – துன்பம்

மனத்துன்பத்தையும் உடல்நோயையும் ஒழிக்கின்றவனும், கூற்றுவனை அழித்த காலை உடையவனும், துறக்கப்பட்ட ஆசை மீள வந்து எழுதலாகிய கொடிய துன்பத்தைப் போக்குபவனும், கூடினால் பின்பு பிரிதற்கு இயலாதவனும், வந்த பழிச்சொல்லும், வரக்கடவ பழிச்சொல்லும் வாராது ஒழியும்படி அருள் செய்பவனும், அட்ட மூர்த்தங்களை யுடையவனும் ஆகிய மலர்கள் தேனோடு மலர்கின்ற சோலைகளையுடைய திருவாரூர் இறைவனை யான் மறத்தலும் இயலுமோ!

605. கார்க்குன் றமழை யாய்ப்பொழி வானைக்
கலைக்கெ லாம்பொரு ளாய்உடன் கூடிப்
பார்க்கின் றஉயிர்க் குப்பரிந் தானைப்
பகலுங் கங்குலு மாகிநின் றானை
ஓர்க்கின் றசெவி யைச்சுவை தன்னை
யுணரும் நாவினைக் காண்கின்ற கண்ணை
ஆர்க்கின் றகட லைமலை தன்னை
ஆரூ ரானை மறக்கலு மாமே. 3

ஓர்த்தல் – நினைதல்; ஆராய்தல்.

மேகங்களையுடைய மலைமேல் மழையாய் நின்று பொழிபவனும், நூல்களுக்கெல்லாம் பொருளாய் அவற்றுட் பொருந்தி நின்று, காணப்படுகின்ற உயிர்களுக்கு இரங்கு கின்றவனும், பகலாகியும் இரவாகியும் இருப்பவனும், ஓசையைக் கேட்கின்ற செவியாகியும், சுவையை உணர்கின்ற நாவாகியும், உருவத்தைக் காண்கின்ற கண்ணாகியும், ஒலிக்கின்ற கடலாகியும், மலையாகியும் உள்ள திருவாரூர் இறைவனை யான் மறத்தலும் இயலுமோ!

606. செத்த போதினில் முன்னின்று நம்மைச்
சிலர்கள் கூடிச் சிரிப்பதன் முன்னம்
வைத்த சிந்தையுண் டேமன முண்டே
மதியுண் டேவிதி யின்பய னுண்டே
முத்தன் எங்கள்பி ரானென்று வானோர்
தொழநின் றதிமில் ஏறுடை யானை
அத்தன் எந்தைபி ரான்எம்பி ரானை
ஆரூ ரானை மறக்கலு மாமே. 4

மனம், புத்தி, சித்தம், அகங்காரமென்னும் நான்கு அந்தக் கரணங்களுள் இரண்டை இப்பாடலில் குறிப்பிடுகிறார்.

நாம் செத்தபொழுது சிலர் வந்து கூடி நம்மை இகழ்வதற்கு முன்னே, நமக்கு இறைவன் கொடுத்த கருத்து உளதன்றோ! நெஞ்சு உளதன்றோ! அறிவு உளதன்றோ! நாம் செய்த புண்ணியத்தின் பயன் உளதன்றோ! அவற்றால் தேவர்கள், 'இயல்பாகவே பாசம் இல்லாதவன்' என்றும், 'எங்கள் தேவன்' என்றும், வணங்க நிற்கின்ற, முதுகில் திமிலையுடைய எருதையுடையவனும், யாவர்க்கும் தந்தையும், என் தந்தைக்குத் தலைவனும், எமக்குத் தலைவனும் ஆகிய திருவாரூர் இறைவனை நாம் நினையாது மறத்தலும் இயலுமோ!

**607. செறிவுண் டேல்மனத் தால்தெளி வுண்டேல்**
**தேற்றத் தால்வருஞ் சிக்கன வுண்டேல்**
மறிவுண் டேல்மறு மைப்பிறப் புண்டேல்
வாணாள் மேற்செல்லும் வஞ்சனை யுண்டேல்
பொறிவண் டியாழ்செய்யும் பொன்மலர்க் கொன்றை
பொன்போ லுஞ்சடை மேற்புனைந் தானை
அறிவுண் டேஉட லத்துயி ருண்டே
ஆரூ ரானை மறக்கலு மாமே. 5

நன்மையைத் தரும் கல்வியும், அதன் பயனாகிய உள்ளத்தெளிவும், அதன் பயனாகிய இறைவன் பற்றும் நமக்கு உள்ளன என்றால், அவற்றோடே இறப்பும், மறுபிறப்பும், வாழ்நாளை இடைமுரியச் செய்கின்ற தீங்குகளும் உள்ளன என்றால், இவற்றையெல்லாம் அறிகின்ற அறிவும், அவ்வறிவின்வழியே ஒழுகுதற்கு உயிர் உடம்பில் நிற்றலும் உள்ளனவாதலின், புள்ளிகளையுடைய வண்டுகள் யாழின் இசைபோல ஒலிக்கின்ற, பொன்போலும் கொன்றை மலர்க் கண்ணியை, பொன்போலும் சடைமேற் சூடிய திருவாரூர் இறைவனை நாம் மறத்தலும் இயலுமோ!

செறிவு – நிறைவு. அது பொருள்களை நிரம்ப உணரும் கல்வியைக் குறித்தது.
சிக்கன – இறுகப் பற்றுதல். பேரறங்களைச் செய்வார்க்கு முதற்கண் விதித்த வாழ்நாள் மிகுதலும் பெரும் பாவங்களைச் செய்தார்க்கு அது குறைதலும் உளவாதல் பற்றி, "வாணாள் மேற்செல்லும் வஞ்சனையுண்டேல்" என்று அருளினார். இதனை "கொல்லாமை மேற்கொண்டொழுகுவான் வாழ்நாள் மேற்செல்லாது யிருண்ணுங் கூற்று" என்ற குறளாலும் அறியலாம். சிக்கனவு – முடிந்த முடிபின் உணர்வு; உறுதி. மறிவு – மறித்தல். செறிவு – அடக்கம்.

**608.** பொள்ளல் இவ்வுட லைப்பொரு ளென்று
பொருளுஞ் சுற்றமும் போகமு மாகி
மெள்ள நின்றவர் செய்வன வெல்லாம்
வாரா மேதவிர்க் கும்விதி யானை
வள்ளல் எந்தமக் கேதுணை யென்று
நாணா ளும்அம ரர்தொழு தேத்தும்
அள்ள லங்கழ னிப்பழ னத்தணி
ஆரூ ரானை மறக்கலு மாமே. 6

எங்கும் ஓட்டைகளாய் உள்ள இவ்வுடம்பை உறுதி என்று கொண்டு, செல்வமும், படைகளும், இன்பமுமாய் நிற்கின்றவர்கள் செய்கின்ற மயக்கங்களையெல்லாம் நம்மிடத்து வாராதவாறு விலக்குகின்ற, நன்னெறியாய் உள்ளவனாகிய, தேவர்கள் நாள்தோறும், 'வள்ளல்' என்றும், 'எங்களுக்குத் துணை' என்றும் சொல்லித் துதிக்கின்ற, சேற்றையுடைய கழனிகளையுடைய பண்ணையிடத்தாகிய அழகிய திருவாரூர் இறைவனை யான் மறத்தலும் இயலுமோ!

**609.** கரியா னைஉரி கொண்டகை யானைக்
 கண்ணின் மேல்ஒரு கண்ணுடை யானை
வரியா னைவருத் தம்களை வானை
 மறையா னைக்குறை மாமதி சூடற்
குரியா னைஉல கத்துயிர்க் கெல்லாம்
 ஒளியா னைஉகந் துள்கிநண் ணாதார்க்
கரியா னைஅடி யேற்கெளி யானை
 ஆரூ ரானை மறக்கலு மாமே. 7

பிறையைச் சூடியது, சார்ந்தாரைக் காக்கும் தன்மையைக் குறித்தது. அத்தன்மை அவனுக்கே உரிய பெருந்தன்மை. எனவே 'குறைமாமதி சூடற்குரியானை' என்றருளுகிறார்.

கையையுடையதாகிய யானையினது தோலை உரித்த கையை உடையவனும், இரண்டு கண்களுக்கு மேலாக மற்றொரு கண்ணையுடையவனும், அழகையுடையவனும், அடைந்தாரது வருத்தங்களைப் போக்குபவனும், வேதத்தை உடையவனும், சிறந்த பிறையைச் சூடுதற்கு உரியவனும், உலகத்தில் உள்ள உயிர்கட்கெல்லாம் விளக்காய் உள்ளவனும், தன்னை விரும்பி நினைந்து அடையாதவர்கட்கு அரியவனும், அடியேற்கு எளியவனும் ஆகிய திருவாரூர் இறைவனை யான் மறத்தலும் இயலுமோ!

**610.** வாளா நின்று தொழும்அடி யார்கள்
 வானா ளப்பெறும் வார்த்தையைக் கேட்டும்
நாணா ளும்மல ரிட்டுவ ணங்கார்
 நம்மையாள் கின்ற தன்மையை ஓரார்
கேளா நான்கிடந் தேஉழைக் கின்றேன்
 கிளைக்கெ லாந்துணை யாமெனக் கருதி
ஆளா வான்பலர் முன்பழைக் கின்றேன்
 ஆரூ ரானை மறக்கலு மாமே. 8

யாதும் வருந்தாமலே நின்று வணங்குகின்ற அவன் அடியார்கள், வானுலகத்தை ஆளுதலாகிய பெருஞ்செல்வத்தைப் பெற்றுவிடுகின்ற செய்தியைக் கேட்டபின்பும், சிலர், அவனை நாள்தோறும் மலர் தூவி வணங்குகின்றிலர். அங்ஙனம் வணங்குகின்ற நம்மை அவன் இம்மையிலேயே நன்கு புரத்தலையும் அறிகின்றாரிலர். ஆயினும், யான், எனக்கேயன்றி என் கிளைகளுக்கும் அவன் துணையாவான் என்று கருதி, அவனையே உறவாகக் கொண்டு, அவனுக்குப் பணிபுரிந்து நிற்கின்றேன்; அன்றியும், பலரையும் அவனுக்கு ஆளாகுமாறு முன் நின்று அழைக்கின்றேன்; ஆதலின், யான் திருவாரூர் இறைவனாகிய அவனை மறத்தலும் இயலுமோ!

**611.** விடக்கை யேபெருக் கிப்பல நாளும்
 வேட்கை யாற்பட்ட வேதனை தன்னைக்
கடக்கிலேன்நெறி காணவு மாட்டேன்
 கண்கு ழிந்திரப் பார்கையில் ஒன்றும்
இடக்கி லேன்பர வைத்திரைக் கங்கைச்
 சடையா னைஉமை யாளையோர் பாகத்
தடக்கி னானைஅந் தாமரைப் பொய்கை
 ஆரூ ரானை மறக்கலு மாமே. 9

எல்லா நாள்களிலும் ஊனைப் பெருக்கவே முயன்று, அது காரணமாக எழுந்த ஆசையால் உளதாகிய துன்பத்தைக் கடக்கமாட்டாமலும், கடந்து நன்னெறியை உணரமாட்டாமலும், பசியால் கண்குழிந்து வந்து இரப்பவர் கையில் ஒன்றையும் இடமாட்டாமலும் உள்ள யான், பரத்தலையுடைய அலைகளைக் கொண்ட கங்கையாகிய நீரையுடைய சடையையுடையவனும், உமையாளைத் தனது திருமேனியின் ஒரு பாகத்தில் அடக்கினவனும்

ஆகிய, அழகிய தாமரைப் பொய்கைகளை யுடைய திருவாரூர் இறைவனை யான் மறத்தலும் இயலுமோ!

"ஆருரானை மறக்கலுமாமே" என்பது பதிக மகுடமாகும்.
"பிறவாமை வேண்டும். மீண்டும் பிறப்புண்டேல் உனை என்றும் மறவாமை வேண்டும்" என்ற காரைக்காலம்மையார் வாக்கின்படி பாடி மகிழ்கிறார்.
பொய்கை – மானிடர் ஆக்காத நீர் நிலை. தாமரைப் பொய்கை – கமலாலயக் குளம்.
எனவே கமலாலயம் படைப்புக் காலத்திலேயே இறைவனால் தோற்றுவிக்கப்பட்ட தீர்த்தம்.

612. ஒட்டி ஆட்கொண்டு போயொளித் திட்ட
உச்சிப் போதனை நச்சர வார்த்த
பட்டி யைப்பக லையிருள் தன்னைப்
பாவிப் பார்மனத் தூறும்அத் தேனைக்
கட்டி யைக்கரும் பின்தெளி தன்னைக்
காத லாற்கடற் சூர்தடிந் திட்ட
செட்டி அப்பனைப் பட்டனைச் செல்வ
ஆரூ ரானை மறக்கலு மாமே. 10

என்னை, வழக்கிட்டு ஆட்கொண்டு அதன்பின் கோயிலுள் சென்று மறைந்த, நண்பகற்போது போலும் ஒளியுடையவனும், நஞ்சையுடைய பாம்பைக் கட்டியுள்ள உடையை உடையவனும், பகலாயும் இரவாயும் உள்ளவனும், தன்னை நினைப்பவரது உள்ளமாகிய தாமரையில் ஊறுகின்ற தேனாய் உள்ளவனும், கரும்பின் சாறும் அதன்கட்டியும் போல்பவனும், தேவர் மீது வைத்த அன்பினால், கடலில் மாமரமாய் நின்ற சூரனை அழித்த முருகனுக்குத் தந்தையும், வேதத்தில் வல்லவனும் ஆகிய, செல்வத்தை யுடைய திருவாரூர் இறைவனை, யான் மறத்தலும் இயலுமோ!

பட்டர் – வேதத்தில் வல்லவர்; ஆசாரியர்
பட்டி – யாவருக்கும் பொதுமகன்
செட்டி – முருகன் பெயர்

613. ஓரூர் என்றுல கங்களுக் கெல்லாம்
உரைக்க லாம்பொரு ளாய்உடன் கூடிக்
காரூ ருங்கமழ் கொன்றைநன் மாலை
முடியன் காரிகை காரண மாக
ஆரூ ரைம்மறத் தற்கரி யானை
அம்மான் றன்திருப் பேர்கொண்ட தொண்டன்
ஆரூ ரன்னடி நாயுரை வல்லார்
அமர லோகத் திருப்பவர் தாமே. 11

'பரவை' என்பவள் முன்னிலையாக, எல்லா உலகங்கட்கும் தலைமையுடைய ஓர் ஊர் என்று சொல்லத்தக்க ஊராய், தான் அவளுடன் கூடி வாழ்ந்து, மறத்தற்கியலாததாய் அமைந்துவிட்ட திருவாரூர் இறைவனை, கார்காலத்தில் பூக்கின்ற, மணங்கமழுங் கொன்றைமாலையை அணிந்த முடியையுடையவனாகிய அப்பெருமானது திருப்பெயரைக் கொண்ட, அவன் அடிக்கீழ்க் கிடக்கும் நாய்போலும் தொண்டனாகிய நம்பியாரூரன் பாடிய இப்பதிகத்தைப் பாடவல்லவர், அமரலோகத்தில் வாழ்பவராதல் திண்ணம்.

காரிகை – பரவையார்.

## 60. திருவிடைமருதூர்

பண் : தக்கேசி

பதிக எண் : 60

| மூர்த்தி | அருள்தரும் நன்முலைநாயகி உடனமர் அருள்மிகு மகாலிங்கேசுவரர். | | |
|---|---|---|---|
| தல இருப்பிடம் | சோழநாட்டில் காவிரியின் தென்கரையில் கும்பகோணம் மயிலாடுதுறை நெடுஞ்சாலையில் கும்பகோணத்திலிருந்து 10 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| தல மரம் | மருதமரம் | | |
| தீர்த்தம் | கல்யாணதீர்த்தம், காவிரி | | |
| பாடியவர் | மூவர் | பதிகங்கள் | 12 |

614. கழுதை குங்குமந் தான்சுமந் தெய்த்தால்
கைப்பர் பாழ்புக மற்றது போலப்
பழுது நானுழன் றுள்தடு மாறிப்
படுசு ழித்தலைப் பட்டனன் எந்தாய்
அழுது நீயிருந் தென்செய்தி மனனே
அங்க ணாஅர னேயென மாட்டா
இழுதை யேனுக்கொர் உய்வகை யருளாய்
இடைம ருதுறை எந்தைபி ரானே. 1

என் அப்பனே! திருவிடைமருதூரில் எழுந்தருளியிருக்கின்ற எம் குலதேவனே! கழுதையானது குங்குமப் பொதியைச் சுமந்து மெய்வருந்தினால், அதனால் சிறப்பொன்றும் இல்லாமை கருதி, அனைவரும் நகைப்பர்; அது போல, அடியேன் உன் தொண்டினை மேற்கொண்டு அதன் மெய்ப்பயனைப் பெறாமல் மனந் தடுமாறி, வெள்ளத்தில் உண்டாகின்ற சுழியிடை அகப்பட்டவன் போல, இவ்வுலக வாழ்க்கையில் அலமருவேனாயினேன்; 'மனமே, நீ நம் இறைவனுக்கு மெய்த்தொண்டு செய்யாது கவலைப்பட்டிருந்து என்ன பெறப் போகின்றாய்?' என்று நெஞ்சிற்கு அறிவுறுத்தவும், 'அங்கணனே, அரனே' என்று உன்னை அன்பினால் துதிக்கவும் மாட்டாத அறிவில்லேனாகிய எனக்கு, நீ, மனம் இரங்கி, உய்யும் நெறி யொன்றை வழங்கியருளாய்.

நான்கு திருவாயில்களிலும் நான்கு இராஜ கோபுரங்கள் அமையப் பெற்ற மிகப் பெரிய தலங்களில் ஒன்று. மிகப் பெரிய நந்தியும், திருமதில்கள் பெற்ற மிகப்பெரிய பிரகாரங்களும் அமையப் பெற்ற தலம்.

தைப்பூச நிகழ்வும், வரகுணபாண்டியனுக்கு பிரம்மகத்தி என்ற கோள்தாக்க நீக்க நிகழ்வும் நடந்த இடம்.

"கழுதை குங்குமந்தான் சுமந்து" – பயனற்ற சொல் என்பது குறித்து வழங்கும் பழமொழி.

எய்த்தால் – வருந்தினாலும். கைப்பர் – இகழ்வர். வருந்திச் சுமந்த பொருள் உயர்ந்ததாய் இருந்தாலும் அதனால் அக்கழுதைக்கு ஒரு பயனுமில்லை. பழுது பட்டனன் – வீணே உடல் சுமந்து தடுமாறி அலைகின்றேன். உடலால் பெறும் பயனை அடைந்தேனில்லை.

இழுதையேன் – அறிவில்லாதவன்.

615. நரைப்பு மூப்பொடு பிணிவரும் இன்னே
நன்றி யில்வினை யேதுணிந் தெய்த்தேன்
அரைத்த மஞ்சள தாவதை யறிந்தேன்
அஞ்சி னேன்நம னாரவர் தம்மை
உரைப்பன் நானுன சேவடி சேர
உணரும் வாழ்க்கையை ஒன்றறி யாத
இரைப்ப னேனுக்கொர் உய்வகை யருளாய்
இடைம ருதுறை யெந்தைபி ரானே. 2

திருவிடைமருதூரில் எழுந்தருளியிருக்கின்ற எம் குலதேவனே! நரையும் மூப்பும் பிணியும் இப்பொழுதே வரும்; அவற்றால் இவ்வுடம்பு, அரைக்கப்பட்ட மஞ்சள் போல அழகிழந் தொழிவதாம்; இவற்றை அறிந்தேனாயினும், நன்மை இல்லாத செயல்களையே பற்றாகத் துணிந்து செய்து இளைத்தேன். அதனால், கூற்றுவனுக்கு அஞ்சுதல் உடையனாயினேன்; ஆகவே, இதுபோழ்து நான் உன் திருவடிகளை அடைய உன்னை வேண்டுவேனாயினேன்; அறிவது அறிந்து வாழும் வாழ்க்கையைச் சிறிதும் அறியாத, ஆரவாரச் சொற்களை யுடையேனாகிய எனக்கு, நீ, உய்யும் நெறி யொன்றை வழங்கியருளாய்.

"உய்வகை அருளாய் இடைமருதுறை எந்தை பிரானே" என்பது பதிக மகுடமாகும். இன்னே வரும் – விரைய வரும். அரைத்து வைக்கப்பட்ட மஞ்சள் அப்பொழுது அழகிதாயிருந்து சிறிது நேரத்திற்குப் பின் வெளுத்துப் போவதை "வெயில் மஞ்சள் போல்" என்று எடுத்துக் கூறுதல் வழக்கு. உடனே பயன்படுத்தாவிடில் வீணாகிவிடும். இரைப்பனன் – வீணன்.

616. புன்னு னைப்பணி வெங்கதிர் கண்டாற்
போலும் வாழ்க்கை பொருளிலை நாளும்
என்னெ னக்கினி இற்றைக்கு நாளை
என்றி ருந்திட ருற்றனன் எந்தாய்
முன்ன மேஉன சேவடி சேரா
மூர்க்க னாகிக் கழிந்தன காலம்
இன்னம் என்றனக் குய்வகை யருளாய்
இடைம ருதுறை யெந்தைபி ரானே. 3

என் தந்தையே! திருவிடைமருதூரில் எழுந்தருளியிருக்கின்ற எம் குலதேவனே! புல்லின் நுனியில் உள்ள பனித்துளி வெவ்வியதாகிய கிரணங்களையுடைய பகலவனை எதிர்ப்பட்டாற் போல்வதாகிய இம்மானுட வாழ்க்கை ஒரு பொருளாதல் இல்லை. ஏனெனில், 'இன்றைக்கு இன்பம் உளதாகும்; நாளைக்கு இன்பம் உளதாகும்' என்று நாள்தோறும் நினைந்து ஏமாறினேன்; இனிமேற்றான், எனக்கு என்ன உண்டாக இருக்கின்றது! ஆதலால், முன்பே உன்னுடைய செவ்விய திருவடியைச் சேர விரும்பாது, கொண்டது விடாத மூர்க்கனான நிலையிலே காலமெல்லாம் போய்விட்டன; இப்பொழுதே எனக்கு நீ, உய்யும் நெறியொன்றை வழங்கியருளாய்.

617. முந்திச் செய்வினை இம்மைக்கண் நலிய
மூர்க்க னாகிக் கழிந்தன காலம்
சிந்தித் தேமனம் வைக்கவு மாட்டேன்
சிறுச்சிறி தேஇரப் பார்கட்கொன் றீயேன்
அந்தி வெண்பிறை சூடும்எம் மானே
ஆரூர் மேவிய அமரர்கள் தலைவா
எந்தை நீஎனக் குய்வகை யருளாய்
இடைம ருதுறை யெந்தைபி ரானே. 4

மாலைக்காலத்தில் தோன்றுகின்ற பிறையைச் சூடியவனே! திருவாரூரில் இருக்கும் தேவர் தலைவனே! என் தந்தையே! திருவிடை மருதூரில் எழுந்தருளியிருக்கின்ற எம் குலதேவனே! முற்பிறப்பிற் செய்த வினைகள் இப்பிறப்பில் வந்து துன்புறுத்தலினால், அவற்றின் வயப்பட்டு மூர்க்கனாகி நிற்றலிலே காலமெல்லாம் போயின; நன்மை தீமைகளைச் சிந்தித்து, உலகப்பற்றை அகற்றி உன்னை மனத்தில் இருத்தவும் மாட்டாதேனாயினேன்; உலகியலிலும், இரப்பவர்கட்கு அவர் விரும்பியதொன்றை ஒரு சிறிது ஈதலும் செய்திலேன்; எனக்கு, நீ, உய்யும் நெறியை வழங்கியருளாய்.

618. அழிப்பர் ஐவர் புரவுடை யார்கள்
ஐவ ரும்புர வாசற ஆண்டு
கழித்துக் காற்பெய்து போயின பின்னைக்
கடைமு றைஉனக் கேபொறை யானேன்
விழித்துக் கண்டனன் மெய்ப்பொருள் தன்னை
வேண்டேன் மானுட வாழ்க்கைஈ தாகில்
இழித்தெ னென்றனக் குய்வகை யருளாய்
இடைம ருதுறை எந்தைபி ரானே. 5

புரவு – புரத்தல். அடிமை கொண்டு ஆளுதல்.
ஆறே – அவர்தம் விருப்பத்தில் குறைவில்லாத படி.
உனக்கே பொறையானேன் – பிறரால் அன்றி உன்னால் அளிக்கத்தக்கவள் ஆயினேன்.
கடைமுறை – முன்பே அடைக்கலம் ஆகாமற் போனேன்.

திருவிடைமருதூரில் எழுந்தருளியிருக்கின்ற எம் குலதேவனே! நன்மைகளையெல்லாம் அழிப்பவராகிய ஓர் ஐவர் என்னை ஆளுதலுடையவர்; அவ் வைவரும் என்னை ஆளுதலை நன்றாகச் செய்து, 'இனி இவனாற் பயனில்லை' என்று கழித்து, என்னைத் தங்கள் காற்கீழ்ப் போட்டுப் போய்விட்ட பின்பு முடிவில் உனக்கே நான் சுமையாயினேன்; அதன் பின்பே நான் விழிப்படைந்து, உண்மையை உணர்ந்தேன்; மானுட வாழ்க்கைதான் இத்தன்மையதே யென்றால், இனி இதனை யான் விரும்பேன்; இதனை மிக்க இழிவுடையதாக உணர்ந்துவிட்டேன்; எனக்கு, நீ, உய்யும் நெறியொன்றை வழங்கியருளாய்.

| | | |
|---|---|---|
| 619. | குற்றந் தன்னொடு குணம்பல பெருக்கிக்<br>கோல நுண்ணிடை யாரொடு மயங்கிக்<br>கற்றி லேன்கலை கள்பல ஞானங்<br>கடிய வாயின கொடுமைகள் செய்தேன்<br>பற்ற லாவதோர் பற்றுமற் றில்லேன்<br>பாவி யேன்பல பாவங்கள் செய்தேன்<br>எற்று ளேன்எனக் குய்வகை யருளாய்<br>இடைம ருதுறை யெந்தைபி ரானே. 6 | திருவிடைமருதூரில் எழுந்தருளியிருக்கின்ற எம் குலதேவனே! யான், அழகிய, நுண்ணிய இடையினையுடைய மகளிரோடு கூடி மயங்கி நின்று, தீவினையும் நல்வினையுமாகிய இரு வினைகளை மிகுதியாகச் செய்தும், மெய்ந் நூல்கள் பலவற்றில் புகுந்து ஞானத்தை யுணராதும் மிகவும் கொடுமையான செயல்களைச் செய்தேன்; அதனால், பற்றத் தக்கதொரு பற்றுக்கோடு இலனாயினேன்; இவ்வாறு பலவாகிய பாவங்களைச் செய்து பாவியாகிய யான், எதன் பொருட்டு உயிர் வாழ்கின்றேன்! எனக்கு, நீ, உய்யும் நெறியொன்றை வழங்கியருளாய். |
| 620. | கொடுக்க கிற்றிலேன் ஒண்பொருள் தன்னைக்<br>குற்றஞ் செற்ற மிவைமுத லாக<br>விடுக்க கிற்றிலேன் வேட்கையுஞ் சினமும்<br>வேண்டில் ஐம்புலன் என்வச மல்ல<br>நடுக்க முற்றதோர் மூப்புவந் தெய்த<br>நமன்த மர்நர கத்திடல் அஞ்சி<br>இடுக்க ணுற்றனன் உய்வகை யருளாய்<br>இடைம ருதுறை யெந்தைபி ரானே. 7 | திருவிடைமருதூரில் எழுந்தருளியிருக்கின்ற எம் குலதேவனே! ஈகை வழியாகப் புகழைத் தரத்தக்க பொருளை, உலோபமும், பகைமையும் காரணமாகப் பிறருக்கு யான் கொடுக்க மாட்டேன்; ஆசையும், கோபமும் ஆகிய இவைகளை ஒழிக்க மாட்டேன்; ஐம்புலன்கள் மேற் செல்கின்ற ஆசைகளை விட நினைத்தால், யான் அவற்றின் வயத்தேனல்லது, அவை என் வயத்தன அல்ல; அதனால், உடல் நடுங்குதல் பொருந்தியதாகிய, ‘மூப்பு’ என்பதொன்று வந்து அடைய, அப்போது இயமனது ஏவலர் என்னைக் கொண்டு சென்று நரகத்தில் இடுதலை நினைத்து அஞ்சித் துன்புறுவேனாயினேன். எனக்கு, நீ உய்யும் நெறியொன்றை வழங்கியருளாய். |
| 621. | ஐவ கைஅரை யர்அவர் ஆகி<br>ஆட்சி கொண்டொரு கால்அவர் நீங்கார்<br>அவ்வ கைஅவர் வேண்டுவ தானால்<br>அவர வர்வழி யொழுகிநான் வந்து<br>செய்வ கையறி யேன்சிவ லோகா<br>தீவ ணாசிவ னேஎரி யாடீ<br>எவ்வ கைஎனக் குய்வகை யருளாய்<br>இடைம ருதுறை யெந்தைபி ரானே. 8 | சிவலோகத்திற்குத் தலைவனே! நெருப்புப் போலும் நிறம் உடையவனே! சிவபெருமானே! தீயோடு நின்று ஆடுபவனே! திருவிடைமருதூரில் எழுந்தருளியிருக்கின்ற எம் குலதேவனே! ஐவர் வேறுபட்ட தன்மையை யுடைய அரசராய் என்னை ஆட்சி கொண்டு ஒருகாலும் விட்டு நீங்காதிருக்கின்றனர். அவ்வாறு, அவர், தாம் தாம் வேறு வேறுவகையில் என்னை ஆள விரும்பினால், யான் அவர் வழியே அவர் வேண்டு மாற்றிலெல்லாம் சென்று நடந்து, செய்வது இன்னது என்று அறிகின்றிலேன்; எனக்கு உய்யும் நெறியாவது எந்நெறி? அதனை வழங்கியருளாய். |

622. ஏழை மானுட வின்பினை நோக்கி
இளைய வர்வலைப் பட்டிருந் தின்னம்
வாழை தான்பழுக் குந்நமக் கென்று
வஞ்ச வல்வினை யுள்வலைப் பட்டுக்
கூழை மாந்தர்தஞ் செல்கதிப் பக்கம்
போத மும்பொரு ளொன்றறி யாத
ஏழை யேனுக்கோர் உய்வகை யருளாய்
இடைம ருதுறை யெந்தைபி ரானே. 9

வாழை, ஒரு குலைக்குமேல் மறு குலை ஈனாது கெடுதல் இளமை, விரையக் கெடுதற்கு உவமை.
கூழை மாந்தர் – அறிவில்லாத மக்கள்.

திருவிடைமருதூரில் எழுந்தருளியிருக்கின்ற எம் குலதேவனே! அறிவில்லாத, மானுட இன்பத்தைக் கருதி, முன்னர்ப் பழத்தைத் தந்த வாழை, இனியும் நமக்கு அவ்வாறே தரும் என்று கருதுவாரைப் போல, இளமையுடையராய் இன்பம் தந்த மகளிர் என்றும் இவ்வாறே இருந்து இன்பம் தருவர் என்று கருதும் மயக்கமாகிய வலையுள் அகப்பட்டு, அதனானே, வஞ்சனையையுடைய வலிய வினையென்னும் வலையிலும் அகப்பட்டு, அறிவு முதிராத பொது மக்கள் செல்லும் வழியிடத்து நின்று, அறிவின் இயல்பையும், அதற்குப் புலனாய் நிற்கும் பொருளின் இயல்பையும் சிறிதும் அறியாத எளியேனுக்கு, உய்யும் நெறியொன்றை வழங்கியருளாய்.

623. அரைக்குஞ் சந்தனத் தோடகில் உந்தி
ஐவ னஞ்சுமந் தார்ந்திரு பாலும்
இரைக்குங் காவிரித் தென்கரை தன்மேல்
இடைம ருதுறை எந்தைபி ரானை
உரைக்கும் ஊரன் ஒளிதிகழ் மாலை
உள்ளத் தால்உகந் தேத்தவல் லார்கள்
நரைப்பு மூப்பொடு நடலையு மின்றி
நாதன் சேவடி நண்ணுவர் தாமே. 10

நடலை – துன்பம்.
"சாதலின் இன்னாத தில்லை" – குறள். 230

அரைக்கப்படுகின்ற சந்தனக் கட்டையையும், அகிற் கட்டையையும் இருமருங்கும் தள்ளிக் கொண்டு, மலைநெல்லைக் தாளோடு மேல் இட்டுக் கொண்டு, நிறைந்து ஒலிக்கின்ற காவிரியாற்றின் தென்கரைமேல் உள்ள திருவிடைமருதூரில் எழுந்தருளியிருக்கின்ற எம் குலதேவனாகிய பெருமானைப் பாடிய, நம்பியாரூரனாகிய எனது உணர்வு மிக்க இப்பாடல்களை, மனத்தால் விரும்பிப் பாட வல்லவர்கள், நரைத்தலும், மூத்தலும், இறத்தலும் இன்றி அவ்விறைவனது செவ்விய திருவடிகளை அடைவர்; இது திண்ணம்.

## 61. திருக்கச்சி ஏகம்பம்

சுவாமிகள், திருவொற்றியூரில் சங்கிலியார் பொருட்டுச் செய்த சூளுறவைப் பிழைத்துத் திருவாரூருக்குச் செல்லப் புறப்பட்டுத் திருவொற்றியூர் எல்லையைக் கடந்தபொழுது மறைந்த கண்களைத் தரவேண்டிப் பல தலங்களிலும் வணங்கிப் பாடி, திருவெண்பாக்கத்தில் ஊன்றுகோலைப் பெற்றுத் திருவாலங்காடு திருவூறல்களைத் தொழுது காஞ்சிபுரத்தை அடைந்து, காமக்கோட்டத்தில் அறம்புரக்கும் அம்மையை வணங்கித் திருவேகம்பத்தை அடைந்து, 'கச்சிஏகம்பனே, கடையானேன் பிழை பொறுத்துக் கண்ணளித் தருளாய்' என்று வேண்டிப் பெருமான், இடக்கண் கொடுக்கப் பெற்று மகிழ்ந்து பாடியருளியது இத்திருப்பதிகம். (தி. 12 பெரிய. புரா. ஏயர்கோன். 288)

**குறிப்பு :** இத்திருப்பதிகம், தமக்குக் கண் அளித்த இறைவரது திருவருளை வியந்து அருளிச் செய்தது.

**பண் : தக்கேசி** **பதிக எண் : 61**

| **மூர்த்தி** | அருள்தரும் காமாட்சியம்மை உடனர் அருள்மிகு ஏகாம்பரேசுவர். | | |
|---|---|---|---|
| **தல இருப்பிடம்** | தொண்டை நாட்டில் காஞ்சி மாநகரில் அமைந்து உள்ளது. | | |
| **தல மரம்** | மா | | |
| **தீர்த்தம்** | சிவகெங்கை, கம்பாநதி | | |
| **பாடியவர்** | மூவர் | **பதிகங்கள்** | 12 |

624. ஆலந் தானுகந் தமுதுசெய் தானை
ஆதி யைஅம ரர்தொழு தேத்தும்
சீலந் தான்பெரி தும்முடை யானைச்
சிந்திப் பாரவர் சிந்தையு ளானை
ஏல வார்குழ லாள்உமை நங்கை
என்றும் ஏத்தி வழிபடப் பெற்ற
கால காலனைக் கம்பன்எம் மானைக்
காணக் கண்அடி யேன்பெற்ற வாறே. 1

நஞ்சினைத் தான் விரும்பி உண்டு, அமுதத்தைத் தேவர்களுக்கு உரியதாக்கியவனும், யாவர்க்கும் முதல்வனும், தேவர்கள் வணங்கித் துதிக்கின்ற பெருமையை மிக உடையவனும், தன்னை நினைப்பாரது நினைவில் விளங்குபவனும், மயிர்ச்சாந்து அணிந்த நீண்ட கூந்தலையுடையவளாகிய, 'உமை' என்னும் நங்கை, தான் எந்நாளும் துதித்து வழிபடுதலைப் பெற்றமைக்கு முதல்வனும், காலகாலனும் ஆகிய, திருவேகம்பத்தில் உள்ள எம் பெருமானைக் காணுதற்கு அடியேன், கண் பெற்றவாறு வியப்பு!

கண்நோய் உள்ளவர்கள் பாடி நிவாரணம் பெறுகிறார்கள்.

"விண்ணாள்வார் அமுதுண்ண மிக்க பெருவிடம் உண்ட கண்ணாளா" சேக்கிழார்.

ஆலம் – விடம். சீலம் – இயல்பு. நற்குணம்.

625. உற்ற வர்க்குத வும்பெரு மானை
ஊர்வ தொன்றுடை யான்உம்பர் கோனைப்
பற்றி னார்க்கென்றும் பற்றவன் றன்னைப்
பாவிப் பார்மனம் பாவிக்கொண் டானை
அற்ற மில்புக ழாள் உமை நங்கை
ஆத ரித்து வழிபடப் பெற்ற
கற்றை வார்சடைக் கம்பன்எம் மானைக்
காணக் கண்அடி யேன்பெற்ற வாறே. 2

தன்னைப் புகலிடமாக அடைந்தவர்க்கு நலம் செய்கின்ற பெருமானும், ஊர்தி எருதாகிய ஒன்றை உடையவனும், தேவர்கட்குத் தலைவனும், தன்னை விடாது பற்றினவர்க்கு, பெரிய பற்றுக்கோடாய் நிற்பவனும், தன்னை நினைப்பவரது மனத்தில் பரவி நின்று, அதனைத் தன் இடமாகக் கொண்டவனும் ஆகிய, அழிவில்லாத புகழையுடையவளாகிய, 'உமை' என்னும் நங்கை விரும்பி வழிபடப் பெற்ற, கற்றையான நீண்ட சடையையுடைய, திருவேகம்பத்தில் உள்ள எம் பெருமானைக் காணுதற்கு, அடியேன், கண் பெற்றவாறு, வியப்பு!

குறுகி, விழுந்து, எழுந்து, களித்து இப்பதிகத்தைப் பாடியதாகத் தெய்வச் சேக்கிழார் அருளிச் செய்துள்ளார்.
– பெ. பு. 3442

626. திரியும் முப்புரந் தீப்பிழம் பாகச்
செங்கண் மால்விடை மேல்திகழ் வானைக்
கரியின் ஈருரி போர்த்துகந் தானைக்
காம னைக்கன லாவிழித் தானை
வரிகொள் வெள்வளை யாள்உமை நங்கை
மருவி ஏத்தி வழிபடப் பெற்ற
பெரிய கம்பனை எங்கள்பி ரானைக்
காணக் கண்அடி யேன்பெற்ற வாறே. 3

வானத்தில் திரிகின்ற முப்புரங்கள் தீப்பிழம்பாய் எரிந்தொழியுமாறு செய்து, அக்காலை, சிவந்த கண்களையுடைய திருமாலாகிய விடையின் மேல் விளங்கியவனும், யானையின் உரித்த தோலை விரும்பிப் போர்த்தவனும், மன்மதனைத் தீயாய் எரியும்படி நெற்றிக் கண்ணைத் திறந்தவனும், வரிகளைக் கொண்ட வெள்ளிய வளைகளை அணிந்தவ ளாகிய, 'உமை' என்னும் நங்கை அணுகி நின்று, துதித்து வழிபடப் பெற்ற பெரியோனும் ஆகிய திருவேகம்பத்தில் உள்ள பெருமானைக் காணுதற்கு அடியேன் கண் பெற்றவாறு, வியப்பு!

"எம்மானை / எங்கள் பிரானைக் காணக் கண் அடியேன் பெற்றவாறே" என்பது பதிக மகுடம்.
உமைநங்கை ஏத்தி / ஆதரித்து வழிபடப்பெற்ற என்ற கருத்தை எல்லாப் பாடல்களிலும் பதிவு செய்கிறார். திரிபுரம் எரித்த நாளில் சிவபிரானைத் திருமால் இடபமாய்ச் சுமைந்தமையை "தடமதில்கள் அவை மூன்றுந் தழலெரித்த அந்நாளில் இடபமதாய்த் தாங்கினான் திருமால்காண் சாழலோ" என்ற திருவாசகத்தால் உணரலாம்.

627. குண்ட லந்திகழ் காதுடை யானைக்
கூற்று தைத்த கொடுந்தொழி லானை
வண்டலம் பும்மலர்க் கொன்றையி னானை
வாள ராமதி சேர்சடை யானைக்
கெண்டை யந்தடங் கண்உமை நங்கை
கெழுமி ஏத்தி வழிபடப் பெற்ற
கண்ட நஞ்சுடைக் கம்பன்எம் மானைக்
காணக் கண்அடி யேன்பெற்ற வாறே. 4

குண்டலம் விளங்குகின்ற காதினையுடைய வனும், கூற்றுவனை உதைத்துக் கொன்ற கொடுமையான தொழிலை உடையவனும், வண்டுகள் ஒலிக்கின்ற கொன்றை மலர் மாலையை அணிந்தவனும், கொலைத் தொழிலையுடைய பாம்பு பிறையைச் சேர்ந்து வாழும் சடையை உடையவனும் ஆகிய கெண்டை மீன் போலும் பெரிய கண்களை யுடைய, 'உமை' என்னும் நங்கை அணுகி நின்று, துதித்து வழிபடப் பெற்ற, கண்டத்தில் நஞ்சினையுடைய, திருவேகம்பத்தில் உள்ள எம்பெருமானைக் காணுதற்கு, அடியேன், கண் பெற்றவாறு, வியப்பு!

சிவபெருமான் எதை மிகவும் விரும்புகிறார்?

"எண்ணில் ஆகமம் இயம்பிய இறைவர் தாம் விரும்பும் உண்மையாவது பூசனை என்று உரைத்தருள" – பெரிய புராணம்.

அத்தகைய பூசனையை நாமும் செய்து உய்ய வேண்டுமென அம்மை செய்து காட்டிய இடம் தான் கச்சி ஏகம்பம்.

அருள்வழியே கண் பெற்றமையானும் பதிகப்பாட்டு தோறும் இதைப் போற்றுதலைக் காணலாம்.

என்றும் ஏத்தி வழிபடப் பெற்ற – பூமாலையாலும், பாமாலையாலும் நாம் ஒவ்வொருவரும் நித்தலும் பூசை செய்ய வேண்டும்.

"மாறிலாத இப்பூசனை என்றும் மன்ன" – பெ. புராணம் 1146.

அலம்புதல் – ஒலி கொடுத்தல்.

628. வெல்லும் வெண்மழு ஒன்றுடை யானை
வேலைநஞ் சுண்ட வித்தகன் றன்னை
அல்லல் தீர்த்தருள் செய்யவல் லானை
அரும றையவை அங்கம்வல் லானை
எல்லை யில்புக ழாள்உமை நங்கை
என்றும் ஏத்தி வழிபடப் பெற்ற
நல்ல கம்பனை எங்கள்பி ரானைக்
காணக் கண்அடி யேன்பெற்ற வாறே. 5

யாவரையும் வெல்லும் தன்மையுடைய, வெள்ளிய மழு ஒன்றை உடையவனும், கடலில் தோன்றிய நஞ்சினை உண்ட சதுரப் பாடுடையவனும், அடியார்களுக்குத் துன்பங்களைப் போக்கி அருள்செய்ய வல்லவனும், அரிய வேதங்களையும், அவற்றின் அங்கங்களையும் செய்ய வல்லவனும் ஆகிய, அளவற்ற புகழையுடையவளாகிய, 'உமை' என்னும் நங்கை, எந்நாளும், துதித்து வழிபடப்பெற்ற, நன்மையையுடைய, திருவேகம்பத்தில் உள்ள எங்கள் பெருமானைக் காணுதற்கு, அடியேன், கண் பெற்றவாறு, வியப்பு!

| | |
|---|---|
| பெரியகம்பர் | – அம்மை பூசித்த திருவேகம்பநாதர். |
| வெள்ளக் கம்பர் | – பிரமனால் பூசிக்கப்பட்டவர். |
| கள்ளக்கம்பர் | – திருமாலால் பூசிக்கப்பட்டவர். |
| நல்ல கம்பர் | – உருத்திரனால் பூசிக்கப்பட்டவர். |

| | | |
|---|---|---|
| 629. | திங்கள் தங்கிய சடையுடை யானைத்<br>தேவ தேவனைச் செழுங்கடல் வளரும்<br>சங்க வெண்குழைக் காதுடை யானைச்<br>சாம வேதம் பெரிதுகப் பானை<br>மங்கை நங்கை மலைமகள் கண்டு<br>மருவி ஏத்தி வழிபடப் பெற்ற<br>கங்கை யாளனைக் கம்பன்எம் மானைக்<br>காணக் கண்அடி யேன்பெற்ற வாறே. 6 | பிறை தங்கியுள்ள சடையையுடையவனும், தேவர்க்குத் தேவனும், வளவிய கடலில் வளர்கின்ற சங்கினால் இயன்ற, வெள்ளிய குழையையணிந்த காதினையுடையவனும், சாம வேதத்தை மிக விரும்புபவனும் ஆகிய, என்றும் மங்கைப் பருவம் உடைய நங்கையாகிய மலைமகள் தவத்தாற் கண்டு அணுகி, துதித்து வழிபடப்பெற்ற, கங்கையை யணிந்த, திருவேகம்பத்தில் உள்ள எம்பெருமானைக் காணுதற்கு, அடியேன், கண் பெற்றவாறு, வியப்பு! |
| 630. | விண்ண வர்தொழு தேத்தநின் றானை<br>வேதந் தான்விரித் தோதவல் லானை<br>நண்ணி னார்க்கென்றும் நல்லவன் றன்னை<br>நாளும் நாமுகக் கின்றபி ரானை<br>எண்ணில் தொல்புக ழாள்உமை நங்கை<br>என்றும் ஏத்தி வழிபடப் பெற்ற<br>கண்ணு மூன்றுடைக் கம்பன்எம் மானைக்<br>காணக் கண்அடி யேன்பெற்ற வாறே. 7 | தேவர்கள் தொழுது துதிக்க இருப்பவனும், வேதங்களை விரித்துச் செய்ய வல்லவனும், தன்னை அடைந்தவர்கட்கு எந்நாளும் நலத்தையே செய்பவனும், நாள்தோறும் நாம் விரும்புகின்ற தலைவனும் ஆகிய எண்ணில்லாத பழையவான புகழையுடைய வளாகிய, 'உமை' என்னும் நங்கை, எந்நாளும் துதித்து வழிபடப்பெற்ற, கண்களும் மூன்று உடைய, திருவேகம்பத்தில் உள்ள எம் பெருமானைக் காணுதற்கு, அடியேன், கண் பெற்றவாறு, வியப்பு! |
| 631. | சிந்தித் தென்றும் நினைந்தெழு வார்கள்<br>சிந்தை யில்திக ழுஞ்சிவன் றன்னைப்<br>பந்தித் தவினைப் பற்றறுப் பானைப்<br>பாலொ டானஞ்சும் ஆட்டுகந் தானை<br>அந்த மில்புக ழாள்உமை நங்கை<br>ஆதரித்து வழிபடப் பெற்ற<br>கந்த வார்சடைக் கம்பன்எம் மானைக்<br>காணக் கண்அடி யேன்பெற்ற வாறே. 8 | நாள்தோறும் தன்னையே சிந்தித்து, துயிலெழுங் காலத்துத் தன்னையே நினைத்து எழுவார்களது உள்ளத்தில் விளங்குகின்ற மங்கலப் பொருளானவனும், உயிர்களைப் பிணித்துள்ள வினைத் தொடக்கை அறுப்பவனும், பால் முதலிய ஆனஞ்சும் ஆடுதலை விரும்பியவனும் ஆகிய, முடிவில்லாத புகழையுடையவளாகிய, 'உமை' என்னும் நங்கை விரும்பி வழிபடப்பெற்ற, கொன்றை முதலிய பூக்களின் மணத்தையுடைய, நீண்ட சடையையுடைய, திருவேகம்பத்தில் உள்ள எம் பெருமானைக் காணுதற்கு, அடியேன், கண் பெற்றவாறு, வியப்பு! |

632. வரங்கள் பெற்றுழல் வாளரக் கர்தம்
வாலி யபுர மூன்றெரித் தானை
நிரம்பி யதக்கன் றன்பெரு வேள்வி
நிரந்த ரஞ்செய்த நிர்க்கண் டகனைப்
பரந்த தொல்புக ழாள்உமை நங்கை
பரவி ஏத்தி வழிபடப் பெற்ற
கரங்கள் எட்டுடைக் கம்பன்எம் மானைக்
காணக் கண்அடி யேன்பெற்ற வாறே. 9

நிரந்தரம் – மாறாத அழிவு.

தவத்தின் பயனாகிய வரங்களைப் பெற்றமையால், வானத்தில் உலாவும் ஆற்றலைப் பெற்ற கொடிய அசுரர்களது வலிய அரண்கள் மூன்றினை எரித்தவனும், தேவர் எல்லாரும் நிரம்பிய தக்கனது பெருவேள்வியை அழித்த வன்கண்மையுடையவனும் ஆகிய, பரவிய, பழைய புகழையுடையவளாகிய, 'உமை' என்னும் நங்கை, முன்னிலையாகவும், படர்க்கையாகவும் துதித்து வழிபடப் பெற்ற, எட்டுக் கைகளையுடைய, திருவேகம்பத்தில் உள்ள எம்பெருமானைக் காணுதற்கு, அடியேன், கண் பெற்றவாறு, வியப்பு!

633. எள்கல் இன்றி இமையவர் கோனை
ஈச னைவழி பாடுசெய் வாள்போல்
உள்ளத் துள்கி உகந்துமை நங்கை
வழிபடச் சென்று நின்றவா கண்டு
வெள்ளங் காட்டி வெருட்டிட வஞ்சி
வெருவிஓ டித்தழு வவெளிப் பட்ட
கள்ளக் கம்பனை எங்கள்பி ரானைக்
காணக் கண்அடி யேன்பெற்ற வாறே. 10

"எண்ணில் ஆகமம் இயம்பிய ஈசர் தாம் விரும்பும் உண்மையாவது பூசனை" என்று சுவாமி சொல்ல அம்பாள் நமக்காகப் பூசனை செய்து காட்டிய இடம் கச்சிஏகம்பம். பெரியபுராணத்தில் திருக்குறிப்புத் தொண்டநாயனார் வரலாற்றிலும், காஞ்சிப்புராணத்தில் தழுவக் குழைந்த படலத்திலும் இவ்வரலாறு விரிவாகப் பேசப்படுகிறது.

தேவர் பெருமானாகிய சிவபெருமானை, அவனது ஒரு கூறாகிய உமாதேவி தானே, தான் வழிபடவேண்டுவது இல்லை என்று இகழ்தல் செய்யாது வழிபட விரும்பி, ஏனை வழிபாடு செய்வாருள் ஒருத்தி போலவே நின்று, முன்னர் உள்ளத்துள்ளே நினைந்து செய்யும் வழிபாட்டினை முடித்து, பின்பு, புறத்தே வழிபடச் சென்று, அவ்வழிபாட்டில் தலைப்பட்டு நின்ற முறைமையைக் கண்டு, தான் அவ்விடத்துக் கம்பையாற்றின்கண் பெரு வெள்ளத்தைத் தோற்றுவித்து வெருட்ட, வஞ்சிக்கொடி போல்பவளாகிய அவள் அஞ்சி ஓடித் தன்னைத் தழுவிக்கொள்ள, அதன்பின் அவள்முன் வெளிப்பட்டு நின்ற கள்வனாகிய, திருவேகம்பத்தில் உள்ள எங்கள் பெருமானைக் காணுதற்கு, அடியேன், கண் பெற்றவாறு, வியப்பு!

634. பெற்றம் ஏறுகந் தேறவல் லானைப்
பெரிய எம்பெரு மான்என்றெப் போதும்
கற்ற வர்பர வப்படு வானைக்
காணக் கண்அடி யேன்பெற்ற தென்று
கொற்ற வன்கம்பன் கூத்தன்எம் மானைக்
குளிர்பொ ழில்திரு நாவல்ஆ ரூரன்
நற்ற மிழிவை ஈரைந்தும் வல்லார்
நன்னெ றிஉல கெய்துவர் தாமே. 11

குளிர்ந்த சோலைகளையுடைய திருநாவலூர னாகிய நம்பியாரூரன், ஆனேற்றை விரும்பி ஏற வல்லவனும், மெய்ந்நூல்களைக் கற்றவர்கள், 'இவன் எம் பெரிய பெருமான்' என்று எப்போதும் மறவாது துதிக்கப்படுபவனும், யாவர்க்கும் தலைவனும், கூத்தாடுதலை உடையவனும் ஆகிய, 'திருவேகம்பத்தில் உள்ள எம்பெருமானைக் காணுதற்கு அடியேன், கண்பெற்றவாறு வியப்பு!' என்று சொல்லிப் பாடிய நல்ல தமிழ்ப் பாடலாகிய இவை பத்தினையும் பாட வல்லவர். நன்னெறியாற் பெறும் உலகத்தைத் திண்ணமாக அடைவர்.

## 62. திருக்கோலக்கா

சுவாமிகள், திருப்புன்கூர் அணைந்திறைஞ்சித் திருக்கோலக்கா செல்லும்பொழுதில், பெருமான் எதிர் வந்து காட்சி கொடுத்தருளக்கண்டு வணங்கித் திருஞானசம்பந்தருக்குப் பொற்றாளம் அளித்ததைச் சிறப்பித்துப் பாடியருளியது இத்திருப்பதிகம். (தி. 12. பெரிய. புரா. ஏயர்கோன். புரா. 154)

குறிப்பு : இத்திருப்பதிகம், இறைவர் தாமே எதிர்வந்து கொடுத்தருளிய காட்சியைக் கண்ட களிப்பின் கண் அப்பேற்றினது அருமையை அருளிச்செய்தது.

பண் : தக்கேசி | பதிக எண் : 62

| **மூர்த்தி** | அருள்தரும் ஓசை கொடுத்த நாயகி உடனமர் அருள்மிகு சப்தபுரிநாதர். | | |
|---|---|---|---|
| **தல இருப்பிடம்** | சோழநாட்டில் காவிரி வடகரையில் சீர்காழியிலிருந்து 2 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | கொன்றை | | |
| **தீர்த்தம்** | ஆனந்தத் தீர்த்தம் | | |
| **பாடியவர்** | திருஞானசம்பந்தர், நம்பியாரூரர் | **பதிகங்கள்** | 2 |

**635.** புற்றில் வாளர வார்த்தபி ரானைப்
பூத நாதனைப் பாதமே தொழுவார்
பற்று வான்துணை எனக்கெளி வந்த
பாவ நாசனை மேவரி யானை
முற்ற லார்திரி புரம்ஒரு மூன்றும்
பொன்ற வென்றிமால் வரைஅரி அம்பாக்
கொற்ற வில்அங்கை ஏந்திய கோனைக்
கோலக் காவினிற் கண்டுகொண்
டேனே. 1

புற்றில் வாழும் கொடிய பாம்பைக் கட்டியுள்ள பெருமானும், பூத கணங்கட்கு முதல்வனும், தம் திருவடியையே வணங்குவோர் விடாது பற்றுகின்ற சிறந்த துணைவனும், எனக்கு எளியவனாய் எதிர் வந்தவனும், அடியவரது பாவங்களைப் போக்கும் தொழிலை உடையவனும், யாவராலும் அடைதற்கு அரியவனும், செருக்கு மிக்கவர்களது மூன்று ஊர்கள் அழியுமாறு, திருமால் அம்பாகி நிற்க, வெற்றியைத் தரும் பெரிய மலையாகிய வில்லை அங்கையில் ஏந்திய தலைவனும் ஆகிய இறைவனை, அடியேன், திருக்கோலக்காவில் வெளிப்படக் கண்டு கொண்டேன்.

பூதநாதன் – உயிர்கட்கெல்லாம் முதல்வன்.
வணங்குகின்றவர், மேலும் விடாது பற்றி நிற்றல் அவனது இன்ப நுகர்வினாலாம்.
முற்றல் – முதிர்தல். மேவரியான் – ஆன்ம முயற்சி – போதங்களால் சென்று பொருந்த அரியவர்.

**636.** அங்கம் ஆறும்மா மறைஒரு நான்கும்
ஆய நம்பனை வேய்புரை தோளி
தங்கு மாதிரு வுருவுடை யானைத்
தழல்ம திசடை மேற்புனைந் தானை
வெங்கண் ஆனையின் ஈருரி யானை
விண்ணு ளாரொடு மண்ணுளார் பரசுங்
கொங்கு லாம்பொழிற் குரவெறி கமழுங்
கோலக் காவினிற் கண்டுகொண்
டேனே. 2

தழலுதல் – ஒளிர்தல்

துணை நூல்களாகிய ஆறும், முதல் நூல்களாகிய வேதம் நான்கும் ஆகி நிற்கின்ற நம்பனும், மூங்கில்போலும் தோள்களையுடைய உமாதேவி பொருந்தியுள்ள, சிறந்த திருமேனியையுடையவனும், ஒளிர்கின்ற பிறையைச் சடையின்மேற் சூடியவனும், சினத்தால் எரிகின்ற கண்களையுடைய யானையினது உரித்த தோலையுடையவனும் ஆகிய இறைவனை, அடியேன், விண்ணில் உள்ளவர்களும், மண்ணில் உள்ளவர்களும் துதிக்கின்ற, தேன் பொருந்திய சோலையின்கண் குரா மலர்கள் மணங் கமழ்கின்ற திருக்கோலக்காவினில் வெளிப்படக் கண்டுகொண்டேன்.

**637.** பாட்ட கத்திசை யாகிநின் றானைப்
பத்தர் சித்தம் பரிவினி யானை
நாட்டகத் தேவர் செய்கையு ளானை
நட்டம் ஆடியை **நம்பெரு மானைக்**
காட்ட கத்துறு புலியுரி யானைக்
கண்ணொர் மூன்றுடை அண்ணலை
அடியேன்
கோட்ட கப்புன லார்செழுங் கழனிக்
கோலக் காவினிற் கண்டுகொண்
டேனே. 3

கோட்டகம் – கரைகளிடையே. கோடு – கரை.

பாட்டின்கண் இசைபோன்று எல்லாப் பொருளிலும் வேறறக் கலந்து நிற்பவனும், அடியார்களது உள்ளம் அன்பு செய்தற்கு இன்பமாகிய பயனாய் உள்ளவனும், மண்ணில் வாழும் தேவராகிய அந்தணர்களது வழிபாட்டின்கண் விளங்குகின்றவனும், நடனம் ஆடுபவனும், நமக்குத் தலைவனும், காட்டின் கண் வாழ்கின்ற புலியினது தோலை உடையவனும், கண்கள் மூன்று உடைய பெருமையுடையவனும் ஆகிய இறைவனை, அடியேன், வரம்பகத்து நீர் நிறைந்த செழுமையான வயல்களையுடைய திருக்கோலக்காவில் வெளிப்படக் கண்டு கொண்டேன்.

**638.** ஆத்த மென்றெனை ஆள்உகந் தானை
அமரர் நாதனைக் குமரனைப் பயந்த
வார்த்த யங்கிய முலைமட மானை
வைத்து வான்மிசைக் கங்கையைக் கரந்த
தீர்த்த னைச்சிவ னைச்செழுந் தேனைத்
தில்லை அம்பலத் துள்நிறைந் தாடுங்
கூத்த னைக்குரு மாமணி தன்னைக்
கோலக் காவினிற் கண்டுகொண்
டேனே. 4

"கோலக் காவினிற் கண்டு கொண்டேன்" என்பது பதிக மகுடம் ஆகும். ஆத்தம் – அன்பு உரிமை.

என்னை ஆளாகக் கொள்ளுதலே தனக்கு வாய்மையாவது என்று கருதி என்னை அவ்வாறே விரும்பி ஆண்டருளினவனும், தேவர்கட்குத் தலைவனும், முருகனைப் பெற்ற கச்சின்கண் விளங்குகின்ற தனங்களையுடைய இளைய மான்போலும் தேவியை இடப்பாகத்து வைத்து, வானுலத்தில் உள்ள கங்கையைச் சடையின்கண் மறைத்த தூயவனும், மங்கலம் உடையவனும், செழுமையான தேன்போல இனிப்பவனும், தில்லையம்பலத்துள் நிறைந்து நின்று ஆடுகின்ற கூத்தினையுடையவனும், ஒளியையுடைய மாணிக்கம் போல்பவனும் ஆகிய இறைவனை, அடியேன் திருக்கோலக்காவில் வெளிப்படக் கண்டு கொண்டேன்.

| | |
|---|---|
| **639.** அன்று வந்தெனை அகலிடத் தவர்முன்<br>ஆள தாகஎன் றாவணங் காட்டி<br>நின்று வெண்ணெய்நல் லூர்மிசை ஒளித்த<br>நித்தி லத்திரள் தொத்தினை முத்திக்<br>கொன்றி னான்றனை உம்பர்பி ரானை<br>உயரும் வல்லர ணங்கெடச் சீறுங்<br>குன்ற வில்லியை மெல்லிய லுடனே<br>கோலக் காவினிற் கண்டுகொண்<br>டேனே. 5 | அன்று அந்தணனாய்த் திருநாவலூரில் வந்து, அகன்ற இப்பூமியில் உள்ளார் பலர் முன்பும், 'நீ எனக்குச் செய்யும் அடிமையைச் செய்க' என்று சொல்லி ஓலை காட்டி வழக்குப் பேசி நின்று, பின்பு, திருவெண்ணெய்நல்லூரில் சென்று மறைந்த, முத்தினது திரட்சியமைந்த கொத்துப் போல்பவனும், முத்தியளித்தற்குப் பொருந்தியவனும், தேவர்கட்குத் தலைவனும், உயர்ந்த வலிய மதில்கள் அழியுமாறு சினந்த, மலைவில்லை உடையவனும் ஆகிய இறைவனை, இறைவியுடனே, அடியேன் திருக்கோலக்காவில் வெளிப்படக் கண்டு கொண்டேன். |
| **640.** காற்றுத் தீப்புன லாகிநின் றானைக்<br>கடவு ளைக்கொடு மால்விடை யானை<br>நீற்றுத் தீயுரு வாய்நிமிர்ந் தானை<br>நிரம்பு பல்கலை யின்பொரு ளாலே<br>போற்றித் தன்கழல் தொழுமவன் உயிரைப்<br>போக்கு வான்உயிர் நீக்கிடத் தாளாற்<br>கூற்றைத் தீங்குசெய் குரைகழ லானைக்<br>கோலக் காவினிற் கண்டுகொண்<br>டேனே. 6 | காற்றும், தீயும், நீரும் ஆகி நிற்பவனும், எல்லாப் பொருள்களையும் கடந்தவனும், கொடிய பெரிய இடப ஊர்தியையுடையவனும், நீற்றைத் தரும் நெருப்புருவாய் ஓங்கி நிற்பவனும், நிறைந்த பல நூல்களினது பொருள் வழியே துதித்துத் தன் திருவடியை வணங்குகின்ற அவனது உயிரைப் போக்குவோனது உயிர் நீங்கும்படி தனது திருவடியால் கூற்றுவனுக்கு அழிவைச் செய்த, ஒலிக்கின்ற கழலையணிந்தவனும் ஆகிய இறைவனை, அடியேன் திருக்கோலக்காவில் வெளிப்படக் கண்டுகொண்டேன். |
| **641.** அன்ற யன்சிரம் அரிந்ததிற் பலிகொண்<br>டமர ருக்கருள் வெளிப்படுத் தானைத்<br>துன்று பைங்கழ லிற்சிலம் பார்த்த<br>சோதி யைச்சுடர் போல்ஒளி யானை<br>மின்ற யங்கிய இடைமட மங்கை<br>மேவும் ஈசனை வாசமா முடிமேற்<br>கொன்றை அஞ்சடைக் குழகனை அழகார்<br>கோலக் காவினிற் கண்டுகொண்<br>டேனே. 7 | அன்று பிரமனது தலையை அரிந்து அதன்கண் பிச்சை ஏற்றுத் தேவர்கட்குத் தனது திருவருள் நிலையை வெளிப்படுத்தியவனும், நெருங்கிய பசிய கழலையணிதற்கு உரிய திருவடியில் சிலம்பையணிந்த ஒளிவடிவினனும், விளக்குப் போலும் விளக்கம் உடையவனும், மின்னலினது தன்மை விளங்கிய இடையினையுடைய இளமங்கை விரும்பும் கடவுளும், மணங்கமழுமாறு தலையின்மேல் கொன்றை மாலையணிந்த அழகிய சடையை உடைய அழகனும் ஆகிய இறைவனை, அடியேன், அழகு நிறைந்த திருக்கோலக்காவில் வெளிப்படக் கண்டுகொண்டேன். |

642. நாளும் இன்னிசை யால்தமிழ் பரப்பும்
ஞான சம்பந்த னுக்குல கவர்முன்
தாளம் ஈந்தவன் பாடலுக் கிரங்கும்
தன்மை யாளனை என்மனக் கருத்தை
ஆளும் பூதங்கள் பாடநின் றாடும்
அங்க ணன்றனை எண்கணம் இறைஞ்சும்
கோளி லிப்பெருங் கோயிலு ளானைக்
கோலக் காவினிற் கண்டுகொண் டேனே. 8

திருக்கோலக்கா திருஞானசம்பந்தருக்குத் திருத்தாளம் அளித்த தலம். திருக்கோளிலி நாயனாருக்கு நெல்லிட ஆட்கள் அளித்த தலம்.

எந்நாளும் இனிய இசையால் தமிழ்ப்பாடலை எங்கணும் பரவச்செய்த திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகளுக்கு, அவர் தம் கைகளால் ஒற்றறுத்துப் பாடுதலுக்கு இரங்கி, பலரும் காணத் தாளம் ஈந்த கருணையாளனும், என் உள்ளத்துள் கொள்ளப்படும் பொருளாய் உள்ளவனும், தன்னால் ஆளப்படும் பூதங்கள் பாடல்களைப் பாட, அவற்றிற்கு ஏற்ப நின்று ஆடுகின்ற அருள் பொருந்திய கண்களை யுடையவனும், பதினெண் கணங்களாலும் வணங்கப்படுபவனும், திருக்கோளிலியில் உள்ள பெருங்கோயிலில் எழுந்தருளியிருப்பவனும் ஆகிய இறைவனை அடியேன், திருக்கோலக் காவில் வெளிப்படக் கண்டுகொண்டேன்.

643. அரக்கன் ஆற்றலை அழித்தவன் பாட்டுக்
கன்றி ரங்கிய வென்றியி னானைப்
பரக்கும் பாரளித் துண்டுகந் தவர்கள்
பரவி யும்பணி தற்கரி யானைச்
சிரக்கண் வாய்செவி மூக்குயர் காயம்
ஆகித் தீவினை தீர்த்தஎம் மானைக்
குரக்கி னங்குதி கொண்டுகள் வயல்சூழ்
கோலக் காவினிற் கண்டுகொண்
டேனே. 9

அன்று இராவணனது வலிமையை முதலில் அழித்து, பின்பு அவன் பாடிய இசைக்கு இரங்கி அருள்புரிந்த வெற்றியையுடையவனும், விரிந்த உலகத்தைப் படைத்தும், உண்டும் களித்தவர்கள் துதித்துப் பணிதற்கும் அரியனாய் உள்ளவனும், தலையில் அமைந்த, 'கண், வாய், காது, மூக்கு' என்பவற்றோடு, நீண்ட உடம்புமாய் நின்று, தீமையைத் தரும் வினையை ஒழித்த எம்பெருமானும் ஆகிய இறைவனை, அடியேன், சோலைகளில் குரங்குக் கூட்டம் துதித்துத் திரிகின்ற, வயல் சூழ்ந்த, திருக்கோலக்காவில் வெளிப்படக் கண்டுகொண்டேன்.

644. கோட ரம்பயில் சடையுடைக் கரும்பைக்
கோலக் காவுள்எம் மானைமெய்ம் மானப்
பாட ரங்குடி அடியவர் விரும்பப்
பயிலும் நாவலா ரூரன்வன் றொண்டன்
நாடி ரங்கிமுன் அறியுமந் நெறியால்
நவின்ற பத்திவை விளம்பிய மாந்தர்
காட ரங்கென நடம்நவின் றான்பாற்
கதியும் எய்துவர் பதியவர்க் கதுவே. 10

கோடரம் – மரக்கிளை. இங்கு ஆலம் விழுது.

ஆலம் விழுது போலும் சடைகளையுடையவனும், கரும்பு போல இனிப்பவனும் ஆகிய, திருக்கோலக்காவில் எழுந்தருளியுள்ள எம் இறைவனை, உண்மையமைந்த பெரிய பாடல்களைப் பாடும் வழிவழி அடியவர் பலரும் விரும்புமாறு, அத்திருத் தொண்டிலே பழகும், திருநாவலூரில் தோன்றிய, வன்றொண்ட னாகிய நம்பியாரூரன், உலகில் உள்ளவர் தாமும் மனம் உருகி அவனை முற்பட உணருமாற்றால் பாடிய பத்துப் பாடல்களாகிய இவைகளைப் பாடிய மாந்தர், காடே அரங்கமாக நடனம் செய்பவனாகிய சிவபிரானிடத்து உயர்கதியையும் பெறுவர்; என்றும் நீடு வாழும் இடமும் அவர்க்கு அக்கதியேயாம்.

## 63. பொது (நம்பி திருப்பதிகம்)

சுவாமிகள், திருக்கூடலையாற்றூர் தொழுது திருமுதுகுன்றமடைந்து திருக்கோயில் வலம் கொண்டு இறைஞ்சி, "நஞ்சியிடை" என்னுந் திருப்பதிகம் பாடிப் பெருமானிடம் பொன் வேண்டும் குறிப்பினராய் பாடியருளியது இத்திருப்பதிகம். இப்பதிகம் பாடிப் பன்னிரண்டாயிரம் பொன் பெற்றார் சுந்தரர். (தி. 12 பெரிய. புரா. ஏயர்கோன். புரா. 106–107).

குறிப்பு : இத்திருப்பதிகம், இறைவரைப் பலவாற்றால் ஏத்தி, 'நீரே எங்கட்கு எப்பிறப்பிலும் துணை' என்று குறையிரந்து அருளியது. இதன்கண் இறைவரை, 'நம்பி' என்னும் சிறந்த பெயரால் பலகாற் சுவாமிகள் கூறி, மகிழ்தல் அறிந்து இன்புறத்தக்கது.

**பண் : தக்கேசி** **பதிக எண் : 63**

645. மெய்யைமுற் றப்பொடிப் பூசியொர் நம்பி
வேதம்நான் கும்விரித் தோதியொர் நம்பி
கையில்ஓர் வெண்மழு வேந்தியொர் நம்பி
கண்ணும் மூன்றுடை யானொரு நம்பி
செய்யநம் பிசிறு செஞ்சடை நம்பி
திரிபுரந் தீயெழச் செற்றதோர் வில்லால்
எய்தநம் பியென்னை ஆளுடை நம்பி
எழுபிறப் பும்எங்கள் நம்பிகண் டாயே. 1

திருமேனி முழுதும் திருநீற்றைப் பூசியுள்ள ஒப்பற்ற நம்பியே! வேதங்கள் நான்கையும் விரித்துப் பாடிய ஒப்பற்ற நம்பியே! கையில் ஒரு வெள்ளிய மழுவை ஏந்திய ஒப்பற்ற நம்பியே! கண்கள் மூன்றை உடையவனாகிய நம்பியே! செம்மை நிறம் உடைய நம்பியே! புல்லிய, சிவந்த சடையை யுடைய நம்பியே! முப்புரங்களை, நெருப்பு எழுமாறு, வளைக்கப்பட்டதொரு வில்லால் எய்த நம்பியே! என்னை ஆளாக உடைய நம்பியே! நீயே எங்கட்கு எப்பிறப்பிலும் தலைவன்.

நம்பி என்பது ஆடவருட் சிறந்தவனுக்கு உரிய பெயர். தலைவன் என்ற பொருளிலும் வரும்.

646. திங்கள்நம் பிமுடி மேல்அடி யார்பாற்
சிறந்தநம் பிபிறந் தவுயிர்க் கெல்லாம்
அங்கண்நம் பிஅருள் மால்விசும் பாளும்
அமரர்நம் பிகும ரன்முதல் தேவர்
தங்கள்நம் பிதவத் துக்கொரு நம்பி
தாதை என்றுன் சரண்பணிந் தேத்தும்
எங்கள்நம் பியென்னை ஆளுடை நம்பி
எழுபிறப் பும்எங்கள் நம்பிகண் டாயே. 2

திருமுடியில் பிறையை அணிந்த நம்பியே! அடியாரிடத்து இனிது விளங்கி நிற்கும் நம்பியே! பிறப்பினை எடுத்த உயிர்களுக் கெல்லாம் அவ்விடத்து மறைந்து நின்று அருள் செய்யும் நம்பியே! மயக்கத்தைத் தரும் வானுலகத்தை ஆள்கின்ற, தேவர்கட்குத் தலைவனாகிய நம்பியே! முருகன் முதலிய முத்தர்கட்குத் தலைவனாகிய நம்பியே! வழிபடப்படுதற்கு ஒப்பற்ற நம்பியே, 'நீயே உலகிற்குத் தந்தை' என்று தெளிந்து உன் திருவடிகளைப் பணிந்து துதிக்கின்ற எங்களுக்குச் சிறந்து நிற்கின்ற நம்பியே! என்னை ஆளாக உடைய நம்பியே! நீயே எங்கட்கு எப்பிறப்பிலும் தலைவன்.

"எழு பிறப்பும் எங்கள் நம்பி கண்டாயே" என்பது பதிக மகுடமாகும்.

647. வருந்தஅன் றும்மத யானை யுரித்த
வழக்குநம் பிமுழக் குங்கடல் நஞ்சம்
அருந்துநம் பிஅம ரர்க்கமு தீந்த
அருளின்நம் பிபொரு ளாலரு நட்டம்
புரிந்தநம் பிபுரி நூலுடை நம்பி
பொழுதும் விண்ணும்முழு தும்பல வாகி
இருந்தநம் பிஎன்னை ஆளுடை நம்பி
எழுபிறப் பும்எங்கள் நம்பிகண் டாயே. 3

அன்று, மதத்தையுடைய யானையை அது வருந்துமாறு உரித்த நீதியை உடைய நம்பியே! ஓசையைச் செய்கின்ற கடலில் உண்டாகிய நஞ்சினை உண்ட நம்பியே! அதன்கண் தோன்றிய அமுதத்தைத் தேவர்களுக்கு ஈந்த அருளுடைய நம்பியே! அவ்வருளாகிய பொருள் காரணமாக அரிய நடனத்தைச் செய்கின்ற நம்பியே! முப்புரி நூலையுடைய நம்பியே! காலமும் வானமும் முதலிய எல்லாப் பொருள்களுமாய்ப் பலவாகி நிற்கின்ற நம்பியே! என்னை ஆளாக உடைய நம்பியே! நீயே எங்கட்கு எப்பிறப்பிலும் தலைவன்.

648. ஊறுநம் பிஅமு தாஉயிர்க் கெல்லாம்
உரியநம் பிதெரி யம்மறை அங்கம்
கூறுநம் பிமுனி வர்க்கருங் கூற்றைக்
குமைத்தநம் பிகுமை யாப்புலன் ஐந்தும்
சீறுநம் பிதிரு வெள்ளடை நம்பி
செங்கண்வெள் ளைச்செழுங் கோட்டெரு தென்றும்
ஏறுநம் பிஎன்னை ஆளுடை நம்பி
எழுபிறப் பும்எங்கள் நம்பிகண் டாயே. 4

குமைத்தல் – அடக்குதல்

உள்ளத்தில், அமுதம்போல ஊற்றெழுகின்ற நம்பியே! எல்லா உயிர்கட்கும் புகலிடமாகிய நம்பியே! முனிவர்கட்கு, வேதத்தையும், அதன் அங்கத்தையும் அறியக் கூறிய நம்பியே! அழித்தற்கரிய கூற்றுவனை அழித்த நம்பியே! அடக்குதற்கு அரிய ஐம்புல ஆசைகளையும் கடிந்தொதுக்கிய நம்பியே! திருவெள்ளடைக் கோயிலில் வாழும் நம்பியே! சிவந்த கண்களையும், செழுமையான கொம்புகளையும் உடைய, வெண்மையான எருதையே எந்நாளும் ஏறுகின்ற நம்பியே! என்னை ஆளாக உடைய நம்பியே! நீயே எங்கட்கு எப்பிறப்பிலும் தலைவன்.

649. குற்றநம் பிகுறு காரெயில் மூன்றைக்
குலைத்தநம் பிசிலை யாவரை கையில்
பற்றுநம் பிபர மானந்த வெள்ளம்
பணிக்கும்நம் பியெனப் பாடுத லல்லால்
மற்றுநம் பிஉனக் கென்செய வல்லேன்
மதியிலி யேன்படு வெந்துய ரெல்லாம்
எற்றுநம் பிஎன்னை ஆளுடை நம்பி
எழுபிறப் பும்எங்கள் நம்பிகண் டாயே. 5

குறுதல் – அழித்தல். குற்று – அழித்து.
இலைத்தல் – வளைத்தல்

அறிவிலேனாகிய யான் படுகின்ற கொடிய துன்பங்களை எல்லாம் ஓட்டுகின்ற நம்பியே! என்னை ஆளாக உடைய நம்பியே! உன்னை, 'மலையே வில்லாக வளைத்த நம்பியே! பின்பு அதனைக் கையிற்பிடித்து நின்ற நம்பியே! பின்பு அதனால் பகைவரது மதில்கள் மூன்றை அழித்த நம்பியே! அடியார்களுக்குப் பேரின்ப வெள்ளத்தை அளித்தருளுகின்ற நம்பியே! எனப் பாடுவதையன்றி ஒப்பற்ற பெரிய நம்பியாகிய உனக்கு யான் வேறு என் செய்ய வல்லேன்! நீயே எங்கட்கு எப்பிறப்பிலும் தலைவன்'.

650. அரித்தநம் பிஅடி கைதொழு வார்நோய்
ஆண்டநம் பிமுன்னை ஈண்டுல கங்கள்
தெரித்தநம் பிஒரு சேவுடை நம்பி
சில்பலிக் கென்றகந் தோறுமெய் வேடம்
தரித்தநம் பிசம யங்களின் நம்பி
தக்கன்றன் வேள்விபுக் கன்றிமை யோரை
இரித்தநம் பிஎன்னை ஆளுடை நம்பி
எழுபிறப் புமெங்கள் நம்பிகண் டாயே. 6

தெரித்தல் – தோற்றுவித்தல்.

உனது திருவடியைக் கைகளால் தொழுகின்றவரது துன்பங்களை அரித்தொழிக்கின்ற நம்பியே! நெருங்கிய உலகங்கள் பலவற்றையும் முன்பு ஆக்கிய நம்பியே! பின்பு அவைகளைக் காக்கின்ற நம்பியே! ஒற்றை எருதையுடைய நம்பியே! இல்லந்தோறும் சென்று ஏற்கும் சில பிச்சைக்கென்று, திருமேனியில் அதற்குரிய வேடத்தைப் பூண்ட நம்பியே! சமயங்கள் பலவற்றிற்கும் தலைவனாகிய நம்பியே! அன்று தக்கன் வேள்விச்சாலையிற் புகுந்து, ஆங்கிருந்த தேவரை எல்லாம் அஞ்சியோடச் செய்த நம்பியே! என்னை ஆளாக உடைய நம்பியே! நீயே எங்கட்கு எப்பிறப்பிலும் தலைவன்.

651. பின்னைநம் பும்புயத் தான்நெடு மாலும்
பிரமனும் என்றிவர் நாடியுங் காணா
உன்னைநம் பிஒரு வர்க்கெய்த லாமே
உலகுநம் பிஉரை செய்யும தல்லால்
முன்னைநம் பிபின்னும் வார்சடை நம்பி
முழுதிவை இத்தனை யுந்தொகுத் தாண்ட
தென்னைநம் பிஎம் பிரானாய நம்பி
எழுபிறப் புமெங்கள் நம்பிகண் டாயே. 7

'நப்பின்னை' என்பவள் விரும்புகின்ற தோள்களையுடையவனாகிய நீண்ட உருவத்தையுடைய திருமாலும், பிரமனும் என்று சொல்லப்பட்ட இவர்கள் தேடியும் காண மாட்டாத நம்பியே! உலகிற்கு ஒருவனாய நம்பியே! உன்னை வாழ்த்துதலாகிய அதுவன்றி, அணுகுதல் ஒருவர்க்கு இயல்வதோ! எல்லாப் பொருட்கும் முன்னே உள்ள நம்பியே! பின்னிய நீண்ட சடையையுடைய நம்பியே! உன் இயல்பெல்லாம் இவை போல்வனவே; ஆயினும், இத்தனையையும் தோன்றாவாறு அடக்கி, பெருநம்பியாகிய நீ எளிவந்து என்னை ஆண்டது என்னையோ? எமக்குப் பெருமானாகிய நம்பியே! நீயே எங்கட்கு எப்பிறப்பிலும் தலைவன்.

652. சொல்லைநம் பிபொரு ளாய்நின்ற நம்பி
தோற்றம் ஈறுமுத லாகிய நம்பி
வல்லைநம் பிஅடி யார்க்கருள் செய்ய
வருந்திநம் பிஉனக் காட்செய கில்லார்
அல்லல்நம் பிபடு கின்றதென் னாடி
அணங்கொரு பாகம்வைத் தென்கணம்
போற்ற
இல்லநம் பிஇடு பிச்சைகொள் நம்பி
எழுபிறப் புமெங்கள் நம்பிகண் டாயே. 8

சொற்களாய் நிற்கும் நம்பியே! அச்சொற்களின் பொருள்களாய் நிற்கும் நம்பியே! எப்பொருளின் தோற்றத்திற்கும், ஒடுக்கத்திற்கும் முதல்வனாகிய நம்பியே! அடியார்க்கு அருள் செய்ய வல்லையாகிய நம்பியே! உனக்கு ஆட்செய்ய மாட்டாதார், உலகில் வருத்தத்தை அடைந்து அல்லல் படுதற்குக் காரணம் என் நம்பி! நம்பீ! பதினெண் கணங்களும் போற்ற, உமையை ஒரு பாகத்தில் வைத்திருந்தும், இல்லங்களை நாடிச்சென்று அங்கு உள்ளவர் இடுகின்ற பிச்சையை ஏற்கின்ற நம்பி! நம்பீ! நீயே எங்கட்கு எப்பிறப்பிலும் தலைவன்.

| | |
|---|---|
| **653.** காண்டுநம் பிகழற் சேவடி என்றுங்<br>கலந்துனைக் காதலித் தாட் செய்கிற் பாரை<br>ஆண்டுநம் பிஅவர் முன்கதி சேர<br>அருளும்நம் பிகுரு மாப்பிறை பாம்பைத்<br>தீண்டுநம் பிசென்னி யிற்கன்னி தங்கத்<br>திருத்துநம் பிபொய்ச் சமண்பொரு ளாகி<br>ஈண்டுநம் பிஇமை யோர்தொழு நம்பி<br>எமுபிறப் பும்எங்கள் நம்பிகண் டாயே. 9 | நம்பியாகிய உனது கழல் அணிந்த திருவடியைக் காண்போம் என்னும் உறுதியோடும் மனம்பற்றி உன்னை விரும்பி உனக்கு ஆட்செய்கின்றவரை, நீ ஆட்கொண்டு அவர் விரைந்து உயர்கதி அடையுமாறு அருள்செய்கின்ற நம்பி! நம்பீ! ஒளியையுடைய சிறந்த பிறை பாம்பைப் பொருந்துகின்ற முடியில், 'கங்கை' என்னும் நங்கை தங்கும்படி இனிது வைத்துள்ள நம்பி! நம்பீ! சமணர்க்குப் பொய்ப் பொருளாய் மறைந்து நின்று, எங்கட்கு மெய்ப்பொருளாய் வெளிநிற்கின்ற நம்பியே! தேவர்கள் வணங்குகின்ற நம்பியே! நீயே எங்கட்கு எப்பிறப்பிலும் தலைவன். |
| **654.** கரக்கும்நம் பிகசி யாதவர் தம்மைக்<br>கசிந்தவர்க் கிம்மையோ டம்மையி லின்பம்<br>..........................................................................<br>பெருக்குநம் பிபெரு கத்தருத்தா 10 | உன்னிடத்து மனம் உருகாதவருக்கு உன்னை மறைத்துக் கொள்கின்ற நம்பியே! அன்பு செய்பவர்க்கு இப்பிறப்பிலும், வரும் பிறப்பிலும் இன்பத்தை மிகத் தருகின்ற நம்பியே.........! |

## 64. திருத்தினைநகர்

பண் : தக்கேசி

பதிக எண் : 64

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் இளங்கொம்பன்னாள் உடனமர் அருள்மிகு சிவக்கொழுந்தீசர். | | |
| **தல இருப்பிடம்** | நடுநாட்டில் கடலூர் – சிதம்பரம் மார்க்கத்தில் கடலூரிலிருந்து 18 கி.மீ. தொலைவில் தீர்த்தனகிரி என்ற பெயரில் உள்ளது. | | |
| **தல மரம்** | கொன்றை | | |
| **தீர்த்தம்** | ஜாம்பவ தடாகம் | | |
| **பாடியவர்** | நம்பியாரூரர் | **பதிகம்** | 1 |

655. நீறு தாங்கிய திருநுத லானை
நெற்றிக் கண்ணனை நிரைவளை மடந்தை
கூறு தாங்கிய கொள்கையி னானைக்
குற்ற மில்லியைக் கற்றையஞ் சடைமேல்
ஆறு தாங்கிய அழகனை அமரர்க்
கரிய சோதியை வரிவரால் உகளும்
சேறு தாங்கிய திருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. 1

சிவக்கொழுந்து – தலத்துச் சுவாமி பெயர்.
எங்கும் பரந்து நிறைந்த சிவம் இங்கு முளைத் தெழுந்ததால் சிவக்கொழுந்தென்பர்.

மனமே! நீ, திருநீற்றை அணிந்துள்ள அழகிய நெற்றியையுடையவனும், அந்நெற்றியில் ஒரு கண்ணை உடையவனும், வரிசைப்பட்ட வளைகளை யணிந்த உமையவளைத் தனது ஒரு கூற்றில் வைத்த செய்கையை உடையவனும், குற்றம் சிறிதும் இல்லாதவனும், கற்றையாகிய அழகிய சடையின்கண் நீரைக் கட்டியுள்ள அழகனும், தேவர்களுக்கு அரிய ஒளியாய் உள்ளவனும் ஆகிய, வரியையுடைய வரால் மீன்கள் துள்ளுகின்ற, சேற்றையுடைய திருத்தினைநகரில் எழுந்தருளியிருக்கின்ற, நன்மையின் மேலெல்லையாயுள்ள பெருமானை அணுகச் சென்று அடைவாயாக.

656. பிணிகொளாக்கை பிறப்பிறப் பென்னு
மிதனைநீக்கி ஈசன் திருவடி யிணைக்காள்
துணிய வேண்டிடிற் சொல்லுவன் கேள்நீ
அஞ்சல் நெஞ்சமே வஞ்சர்வாழ் மதில்மூன்
றணிகொள் வெஞ்சிலை யால்உகச் சீறும்
ஐயன் வையகம் பரவிநின் றேத்தும்
திணியும் வார்பொழில் திருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை
மனனே. 2

மனமே! நீ, நோயுடைய உடம்புகளிற் பிறத்தலும், பின்பு அவற்றினின்று இறத்தலும் ஆகிய இவ்வல்லலை ஒழித்து இறைவன் திருவடி யிணைக்கு ஆளாதலைத் துணிந்து நிற்க விரும்பினால், அதற்கு வழிசொல்லுவேன்; கேள்; வஞ்சனையை இயல்பாக உடைய அசுரர்கள் வாழ்ந்த மூன்று ஊர்களை, அழகிய, கொடிய வில்லால் அழியுமாறு வெகுண்ட தலைவனாகிய, செறிந்த, நீண்ட சோலைகளையுடைய திருத்தினை நகரில் எழுந்தருளியிருக்கின்ற, உலகமெல்லாம், முன்னிலையாகவும், படர்க்கையாகவும் நின்று துதிக்கின்ற, நன்மையின் மேலெல்லையாய் உள்ள பெருமானை, அணுகச் சென்று அடைவாயாக; மனமே, அஞ்சாதி.

657. வடிகொள் கண்ணிணை மடந்தையர் தம்பால்
மயல துற்றுவஞ் சனைக்கிட மாகி
முடியு மாகரு தேல்எரு தேறும்
மூர்த்தி யைமுத லாயபி ரானை
அடிகள் என்றடி யார்தொழு தேத்தும்
அப்பன் **ஒப்பிலா முலை**உமை கோனைச்
செடிகொள் கான்மலி திருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை
மனனே. 3

மனமே! நீ, மாவடுப்போலும் கண்ணிணைகளையுடைய மாதர்பாற் செல்கின்ற மையலைப் பொருந்தி, அம்மையல் காரணமாகத் தோன்றுகின்ற பல, வஞ்சனைகளுக்கும் இடமாய்க் கெட்டொழிய நினையாதி; மற்று, எருதில் ஏறுகின்ற மூர்த்தியும், எப்பொருட்கும் முதலாகிய பெருமானும், அடியார்கள், 'எம் அடிகள்' என்று வணங்கித் துதிக்கும் அப்பனும், இணையில்லாத பெருமையையுடைய தனங்களையுடைய உமைக்குத் தலைவனும் ஆகிய, புதல்வனைக்கொண்ட காடுகள் நிறைந்த திருத்தினைநகரில் எழுந்தருளியிருக்கின்ற நன்மையின் மேலெல்லையாய் உள்ள பெருமானை அணுகச் சென்று அடைவாயாக.

658. பாவ மேபுரிந் தகலிடந் தன்னிற்
பலப கர்ந்தல மந்துயிர் வாழ்க்கைக்
காவ வென்றுழந் தயர்ந்துவீ ழாதே
அண்ணல் தன்றிறம் **அறிவினாற் கருதி**
மாவின் ஈருரி உடைபுனைந் தானை
மணியை மைந்தனை வானவர்க் கமுதைத்
தேவ தேவனைத் திருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் **சென்றடை மனனே.**
4

மனமே! நீ, அகன்ற நிலப்பரப்பின்கண் தீவினைகளையே செய்தும், பொய்கள் பலவற்றையே பேசியும் திரிந்து, உயிர்வாழ்வதற்கு இவையே ஏற்புடையன என்று கருதித் துன்பமுற்று மெலிந்து அழியாதி; மற்று, உலகிற்கு முதல்வனாய் உள்ளவனது இயல்புகளை, நல்லாசிரியர்பாற் பெற்ற அறிவினால் சிந்தித்து, புலியினது உரித்த தோலை உடுத்தவனும், மாணிக்கம் போல்பவனும், யாவர்க்கும் வலிய சார்பாய் உள்ளவனும், தேவர்களுக்கு அமுதம் போல்பவனும், அவர்கள் அனைவர்க்கும் இறைவனும் ஆகிய திருத்தினைநகரில் எழுந்தருளியிருக்கின்ற, நன்மையின் மேலெல்லையாய் உள்ள பெருமானை அணுகச் சென்று அடைவாயாக.

"திருத்தினை நகருட் சிவக் கொழுந்தினைச் சென்றடை மனனே" என்பது பதிக மகுடமாகும்.

| அறிவினால் | என்றது | கேட்டலையும் |
|---|---|---|
| கருதி | என்றது | சிந்தித்தலையும் |
| சென்று | என்றது | தெளிதலையும் |
| அடை | என்றது | அழுந்துதலையும் |

உணர்த்தி நின்றது.

| | |
|---|---|
| 659. ஒன்ற லாவுயிர் வாழ்க்கையை நினைந்திட்<br>டுடல் தளர்ந்தரு **மாநிதி யியற்றி**<br>**என்றும் வாழலாம் எமக்கெனப் பேசும்**<br>**இதுவும் பொய்யென வேநினை உளமே**<br>குன்று லாவிய புயமுடை யானைக்<br>கூத்த னைக்குலா விக்குவ லயத்தோர்<br>சென்றெ லாம்பயில் திருத்தினை நகருட்<br>சிவக்கொ ழுந்தினைச் சென்றடை<br>மனனே. 5 | உளமே! ஒரு பொருளல்லாத உயிர் வாழ்க்கையைப் பெரிய பொருளாக நினைந்து, அந் நினைவின் வழியே, 'மெய் வருந்த, அரிய பெரிய பொருட்குவையை ஈட்டி என்றும் இனிது வாழ்தல் எமக்கு இயலும்' என்று உலகத்தார் பேசுகின்ற இச் செருக்குரைதானும் பொய் என்பதனை நினை; மனமே! மலைபோலும் தோள்களை உடையவனும், பல கூத்துக்களை வல்லவனும் ஆகிய உலகில் உள்ளவர் எல்லாம் சென்று பலகாலும் மகிழ்ந்து தங்குகின்ற திருத்தினை நகரில் எழுந்தருளியிருக்கின்ற, நன்மையின் மேலெல்லையாய் உள்ள பெருமானை, அணுகச் சென்று அடைவாயாக. |
| 660. வேந்த ராய்உல காண்டறம் புரிந்து<br>வீற்றி ருந்தஇவ் வுடலிது தன்னைத்<br>தேய்ந்தி றந்துவெந் துயருழந் திடும்இப்<br>பொக்க வாழ்வினை விட்டிடு நெஞ்சே<br>பாந்த ளங்கையில் ஆட்டுகந் தானைப்<br>பரம னைக்கடற் சூர்தடிந் திட்ட<br>சேந்தர் தாதையைத் திருத்தினை நகருட்<br>சிவக்கொ ழுந்தினைச் சென்றடை<br>மனனே. 6 | மக்கள், அரசராய் நின்று உலகத்தை ஆண்டு, செங்கோல் செலுத்திப் பெருமிதத்துடன் அமர்ந்திருந்ததற்கு இடமாய் நின்ற மனித உடம்பாகிய இதனை, இதனொடு கொண்ட தொடர்பு நாள்தோறும் தேயப்பெற்று, பின்பு விட்டு நீங்கி, கொடிய துன்பத்தை நுகர்கின்ற இந்நிலையில்லாத வாழ்வினை, மனமே! சிறிதும் விரும்பாது விடு; மற்று, மனமே! பாம்பை அகங்கையிற் கொண்டு ஆட்டுதலை விரும்பியவனும், யாவர்க்கும் மேலானவனும், கடலில் மாமரமாய் நின்ற சூரனை அழித்த முருகப் பெருமானார்க்கு தந்தையும் ஆகிய, திருத்தினை நகரில் எழுந்தருளியிருக்கின்ற, நன்மையின் மேலெல்லையாய் உள்ள பெருமானை, அணுகச் சென்று அடைவாயாக. |

661. **தன்னில் ஆசறு சித்தமும் இன்றித்**
**தவம்மு யன்றவ** மாயின பேசிப்
பின்ன லார்சடை கட்டிஎன் பணிந்தாற்
பெரிதும் நீந்துவ தரிதது நிற்க
முன்னெ லாம்முழு முதலென்று வானோர்
மூர்த்தி யாகிய முதலவன் றன்னைச்
செந்நெ லார்வயல் திருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை
மனனே. 7

மனமே! தன்னிடத்துக் குற்றமின்றி நிற்கும் மனத்தை யுடையராகாது, தவத்தொழிலைச் செய்து, பயனில்லாத சொற்களைப் பேசி, பின்னுதல் பொருந்திய சடைகளைச் சேர்த்துக் கட்டிக் கொள்ளுதலுடன் எலும்பினை அணிந்து கொள்ளுதலாகிய வேடத்தைப் பூண்டு கொண்டாலே, மக்கள், பிறவியாகிய கடலை முற்றக் கடந்து விடுதல் இயலாது; ஆதலின், அந்நிலை நின்னின் வேறாய் நிற்க. நீ, தேவர்கட்குத் தேவனாய் உள்ள பெருந்தேவனாகிய, செந்நெற் பயிர்கள் நிறைந்த வயல்களையுடைய திருத்தினை எழுந்தருளி யிருக்கின்ற, நன்மையின் மேலெல்லையாய் உள்ள பெருமானை, அணுகச் சென்று, இவனே, தொன்மையாய முழுமுதற் கடவுள் என்று துணிந்து அடைவாயாக.

தவத்துக்கு அடிப்படை மாசிலா மனம்.
"மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன்" – குறள்.

662. பரிந்த சுற்றமும் மற்றுவன் றுணையும்
பலருங் கண்டழு தெழஉயிர் உடலைப்
பிரிந்து போம்இது நிச்சயம் அறிந்தாற்
பேதை வாழ்வெனும் பிணக்கினைத்
தவிர்ந்து
கருந்தடங் கண்ணி பங்கனை உயிரைக்
கால காலனைக் கடவுளை விரும்பிச்
செருந்தி பொன்மலர் திருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை
மனனே. 8

மனமே! அன்புள்ள சுற்றத்தாரும், மற்றும் துணையாயுள்ளாரும் ஆகிய பலருங் கண்டு, உடல்மேல் விழுந்து அழுது எழும்படி, உயிர் உடலைப் பிரிந்து அப்பாற் போய்விடும்; இது நிச்சயம். இதனை நீ அறிந்துளை என்றால், அறியாமையையுடைய வாழ்வாகிய இம் மாறுபட்ட நெறியை நீங்கி, கரிய பெரிய கண்களையுடையவளாகிய உமையது பாகத்தை உடையவனும், உயிர்களில் நிறைந்திருப்பவனும், காலனுக்குக் காலனும், எல்லாப் பொருளையும் கடந்துள்ளவனும் ஆகிய, செருந்தி மரங்கள் பொன்போலும் மலர்களை மலர்கின்ற திருத்தினை நகரில் எழுந்தருளி யிருக்கின்ற, நன்மையின் மேலெல்லையாகிய பெருமானை, விரும்பி, அணுகச் சென்று அடைவாயாக.

| | |
|---|---|
| **663.** நமையெ லாம்பலர் இகழ்ந்துரைப் பதன்முன்<br>நன்மை யொன்றிலாத் தேரர்புன் சமணாம்<br>சமய மாகிய தவத்தினார் அவத்தத்<br>தன்மை விட்டொழி நன்மையை வேண்டில்<br>உமையொர் கூறனை ஏறுகந் தானை<br>உம்ப ராதியை எம்பெரு மானைச்<br>சிமய மார்பொழில் திருத்தினை நகருட்<br>சிவக்கொ ழுந்தினைச் சென்றடை<br>மனனே. 9 | மனமே! நீ நன்மையை அடைய விரும்பினால், நன்மை சிறிதும் இல்லாத புத்தமும் சமணமும் ஆகிய சமயங்களைப் பொருந்திய தவத்தினரது பயனில்லாத செயல்களை விட்டொழி; நம்மைப் பலர் இகழ்ந்து பேசுதற்கு முன்பே, உமையை ஒரு பாகத்தில் உடையவனும், எருதை விரும்பி ஏறுபவனும், தேவர்கட்கு முதல்வனும், எங்கட்குத் தலைவனும் ஆகிய, மலைச்சிகரம் போலப் பொருந்திய சோலைகளையுடைய திருத்தினை நகரில் எழுந்தருளியிருக்கின்ற, நன்மையின் மேலெல்லையாகிய பெருமானை, அணுகச் சென்று அடைவாயாக. |
| **664.** நீடு பொக்கையிற் பிறவியைப் பழித்து<br>நீங்க லாமென்று மனத்தினைத் தெருட்டிச்<br>சேடு லாம்பொழில் திருத்தினை நகருட்<br>சிவக்கொ ழுந்தினைத் திருவடி யிணைதான்<br>நாட லாம்புகழ் நாவலூ ராளி<br>நம்பி வன்றொண்ட னூரன் உரைத்த<br>பாட லாந்தமிழ் பத்திவை வல்லார்<br>முத்தி யாவது பரகதிப் பயனே. 10 | எல்லையில்லாத, நிலையற்ற பிறவியை வெறுத்து, அதனினின்றும் நாம் நீங்குதலே பொருந்துவது என்று சொல்லி மனத்தைத் தெளிவித்து, திரட்சி பொருந்திய சோலை களையுடைய திருத்தினை நகரில் எழுந்தருளி யிருக்கின்ற, நன்மையின் மேலெல்லையாயுள்ள பெருமானது திருவடியிணையே நினைத்தற்கு ஆகும், புகழையுடைய திருநாவலூர்க்குத் தலைவனும், வன்றொண்டனும் ஆகிய நம்பியாரூரன் பாடிய தமிழ்ப் பாடல்களாகிய இவை பத்தினையும் பாடவல்லவர் அடையும் இன்ப நிலையாவது, மிக மேலான நிலையாகிய முடிந்த பயனேயாம். |

## 65. திருநின்றியூர்

சுந்தரர், திருச்செம்பொன்பள்ளி முதலான பதிகளை வணங்கிக் கொண்டு செல்லும்பொழுது, திருநின்றியூர் இறைவரைத் தொழுது திருநாவுக்கரசர் பாடிய ஏழ் எழுநூறு (4900) திருப்பதிகங்களையும் சிறப்பித்துப் பாடியருளியது இத்திருப்பதிகம். (தி. 12 பெரிய. புரா. ஏயர்கோன். புரா. 150)

குறிப்பு : இத்திருப்பதிகம், "அந்தணாளன் உன் அடைக்கலம் புகுத" எனத் தொடங்கும் திருப்பதிகத்தோடு (தி. 7 ப. 55) ஒத்தது.

பண் : தக்கேசி　　　　பதிக எண் : 65

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் உலகநாயகி உடனமர் அருள்மிகு மகாலட்சுமிநாதர். | | |
| **தல இருப்பிடம்** | சோழநாட்டில் காவிரி வடகரையில் மயிலாடுதுறை – சிதம்பரம் நெடுஞ்சாலையில் மயிலாடுதுறையிலிருந்து 6 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | விளாமரம் | | |
| **தீர்த்தம்** | இலட்சுமிதீர்த்தம் | | |
| **பாடியவர்** | மூவர் | **பதிகங்கள்** | 4 |

### சிலந்திக்கு அருளிய செயல்

665. திருவும் வண்மையுந் திண்டிற லரசுஞ்
　　　**சிலந்தியார் செய்த செய்பணி கண்டு**
மருவு கோச்செங்க ணான்றனக் களித்த
　　　வார்த்தை கேட்டுநுன் மலரடி யடைந்தேன்
பெருகு பொன்னிவந் துந்துபன் மணியைப்
　　　பிள்ளைப் பல்கணம் பண்ணையுள் நண்ணித்
தெருவுந் தெற்றியும் முற்றமும் பற்றித்
　　　திரட்டுந் தென்றிரு நின்றியூ ரானே.　　1

சிவத்தொண்டு செய்யும் உணர்வு பெற்று இருந்தமையின் "சிலந்தியார்" என உயர்திணையாக அருளிச் செய்தார். சிலந்தியார் செய்த பணி கண்டு கோச்செங்கணான் தனக்குத் திருவும் வண்மையும் அரசும் அளித்த என்று கூட்டிப் படித்துப் பாடலை இன்புற வேண்டும். சிலந்தியாராக நின்றபோது செய்த பணி.

அதுவே கோச்செங்கணானபோது அளித்தது என்று உரைக்கிறார். மருவு – உயிர்மருவு – சிலந்தியாயிருந்த உயிரே கோச்செங்கணானுள் பொருந்திய.

பெருகி வருகின்ற காவிரியாற்றின் நீர், கொணர்ந்து தள்ளிய பல மணிகளை, சிறு மகாரது பல குழுக்கள், விளையாட்டிற் சென்று எடுத்து, தெருக்களிலும், திண்ணைகளிலும், முற்றங்களிலும், குவிக்கின்ற, அழகிய திருநின்றியூரில் உள்ள இறைவனே! நீ, சிலந்தி செய்த செய்கைத் தொண்டினைக் கண்டு, அதன் மறுபிறப்பாய் வந்த கோச்செங்கட் சோழ நாயனார்க்குச் செல்வத்தையும், கொடைத் தன்மையையும், திண்ணிய ஆற்றலை உடைய அரசாட்சியையும் அளித்த செய்தியைக் கேட்டு, அடியேன் உனது மலர் போலும் திருவடியைப் புகலிடமாக அடைந்தேன்; என்னை ஏன்று கொண்டருள்.

666. அணிகொ ளாடையம் பூணணி மாலை
யமுது செய்தமு தம்பெறு சண்டி
இணைகொள் **ஏழெழு நூறிரும் பனுவல்**
ஈன்ற வன்திரு நாவினுக் கரையன்
கணைகொள் கண்ணப்பன் என்றிவர் பெற்ற
காதல் இன்னருள் ஆதரித் தடைந்தேன்
**திணைகொள் செந்தமிழ் பைங்கிளி தெரியுஞ்**
செல்வத் தென்றிரு நின்றியூ ரானே. 2

திணை வரையறையைக் கொண்ட செவ்விய தமிழைப் பசிய கிளிகள் ஆராய்ந்து சொல்லுகின்ற, செல்வத்தையுடைய, அழகிய திருநின்றியூரில் உள்ள இறைவனே! உன்பால், பாலைக் கொணர்ந்து ஆட்டி, அழகினைக் கொண்ட ஆடை, அழகிய அணிகலம், சூடுகின்ற மாலை, திருவமுது என்னும் இவற்றைப் பெற்ற சண்டேசுர நாயனாரும், தனக்குத்தானே நிகராய் உள்ள பதிகங்கள் **நாலாயிரத்துத் தொள்ளாயிரத்தை** அருளிச் செய்தவராகிய திருநாவுக்கரசரும், அம்பைக் கையிலே கொண்ட கண்ணப்ப நாயனாரும் பெற்ற, அன்பின் பயனாகிய இனிய திருவருளை விரும்பி, அடியேன் உனது திருவடியை அடைந்தேன்; என்னை ஏன்று கொண்டருள்.

பனுவல் என்பது பாடலையும் குறிக்கும்; பதிகத்தையும் குறிக்கும்; எனினும் நம்பியாண்டார் நம்பிகள்அதனைப் பதிகம் என்றே விளக்குதலை

"பதிகம் ஏழேழு நூறுபகரு மாகவி யோகி" என்று 11 ஆம் திருமுறை – திருநாவுக்கரசர் திருஏகாதசமாலை நூல் விளக்கத்தால் காணலாம்.

"நின்றியூர் மேயாரை நேயத்தாற் புக்கிறைஞ்சி
ஒன்றிய அன்புள்ளுருகப் பாடுவார் உடைய அரசு
என்றும் உலகிடர் நீங்கப் பாடிய ஏழெழுநூறும்
அன்றுசிறப் பித்தஞ்சொல் இத்திருப்பதிகம் அருள் செய்தார்"

என்பது தெய்வச் சேக்கிழார் வாக்கு. எனவே இவ்விடத்துப் பதிகம் எனவே கொள்ளலாம்.

"நாம் – உண்ட கலமும் உடுப்பனவும் சூடுவனவும் உனக்காக"

– பெ. புராணம் – சண்டேசுவரர் புராணம்.

அமுதம் – வீடுபேறு.

திணை கொள் செந்தமிழ் – தமிழின் பெருஞ்சிறப்பை விளக்குகிறார்.

செந்தமிழுக்கே சிறப்பாயுரிய அகம், புறம் என்ற பாகுபாடு. உயர்திணை, அஃறிணை என்ற சொல் வரையறைகள்.

இச்சிறப்பு ஏனைய மொழிகளுக்கு இல்லை. மக்கள் பயில்வது கேட்டுக் கிளிகளும் பயிலும் மொழி.

"பாரிசையும் பன்னாளும் பயின்றோதும் ஓசை கேட்டு வேரிமலிபொழிற் கிள்ளை வேதங்களை பொருட்சொல்லும் மிழலை" – ஞானசம்பந்தர் தேவாரம்.

## பரசுராமனுக்குச் செய்த திருவருள்

**667.** மொய்த்த சீர்முந்நூற் றறுபது வேலி
மூன்று நூறுவே தியரொடு நுனக்கு
ஒத்த பொன்மணிக் கலசங்க ளேந்தி
ஓங்கு நின்றியூ ரென்றுனக் களிப்பப்
பத்தி செய்தவப் பரசுரா மற்குப்
பாதங் காட்டிய நீதிகண் டடைந்தேன்
சித்தர் வானவர் தானவர் வணங்குஞ்
செல்வத் தென்றிரு நின்றியூ ரானே. **3**

சித்தர், தேவர், அசுரர் ஆகியோர் வணங்குகின்ற, செல்வத்தையுடைய, அழகிய திருநின்றியூரில் உள்ள இறைவனே! உன்னிடத்து அன்பு செய்த பரசுராமன் உனக்கு மிக்க புகழையுடைய முந்நூறு வேதியரோடு, முந்நூற்றறுபது வேலிப் பரப்புள்ள நிலத்தை, என்றும் விளங்கும் 'திருநின்றியூர்' என்று பெயரிட்டு, ஏற்புடைய, பொன்னாலாகிய அழகிய கலசங்களைக் கொண்டு நீர் வார்த்து அளிக்க, அவனுக்கு உன் திருவடியை அளித்த முறைமையை அறிந்து, அடியேன், உனது திருவடியை அடைந்தேன்; என்னை ஏன்று கொண்டருள்.

## பசுவிற்குச் செய்த திருவருள்

**668.** இரவி நீள்சுடர் எழுவதன் முன்னம்
எழுந்து தன்முலைக் கலசங்க ளேந்திச்
சுரபி பால்சொரிந் தாட்டிநின் பாதந்
தொடர்ந்த வார்த்தை திடம்படக் கேட்டுப்
**பரவி யுள்கிவன் பாசத்தை யறுத்துப்**
**பரம வந்துநுன் பாதத்தை யடைந்தேன்**
நிரவி நித்திலம் அத்தகு செம்பொன்
அளிக்குந் தென்றிரு நின்றியூ ரானே. **4**

மேலானவனே! நெற்பயிர்கள் முத்துக்களைப் பரப்பி, அம்முத்துக்களோடு ஒத்து மதிப்புடைய செம்பொன் போலும் நெற்களை அளிக்கின்ற திருநின்றியூரில் உள்ள இறைவனே! உன்னை, பசு ஒன்று, சூரியனது நீண்ட ஒளி தோன்றுவதற்கு முன்பே எழுந்து, தன் மடியாகிய கலசத்தை ஏந்திப் பால் சொரிந்து வழிபட்டு நின் திருவடியை அடைந்த செய்தியை உறுதிப்படக் கேட்டு, அடியேன், உனது திருவடியை நினைத்துத் துதித்து, பற்றுக்களை எல்லாம் விடுத்து வந்து அடைந்தேன்; என்னை ஏன்று கொண்டருள்.

பசுவின் பால்மடி, ஈசான முகத்துக்காகவும், நான்கு முலைக்காம்புகளை தத்புருடம், வாமதேவம், அகோரம், சத்யோஜாதம் என்பதற்காகவும் கொண்டு அம்முகங்களுக்கு பாலாபிடேகம் செய்த அப்பசு என்ன புண்ணியம் செய்திருக்க வேண்டுமென்றும் நினைத்தும் நாமும் அவ்வகை அரிய பூசைகளைச் செய்து அவரை அடைய முயல்வோமாக. ஆவூர், ஆனிலை போன்ற தலங்களிலும் இதே நிகழ்வுகள்.

பர உள்கி வன்பாசத்தை அறுத்து – பரவுதலாலும், உள்குதலாலும் பாசநீக்கம்

வந்து நுன் பாதத்தை அடைந்தேன் – சிவப்பேறும் உணர்த்தப்பட்டன.

## இந்திரனுக்கும் அகத்தியருக்கும் செய்த திருவருள்

**669.** வந்தொர் இந்திரன் வழிபட மகிழ்ந்து
வான நாடுநீ யாள்கென அருளிச்
சந்தி மூன்றிலுந் தாபர நிறுத்திச்
சகளி செய்திறைஞ் சகத்தியன் றனக்குச்
சிந்து மாமணி யணிதிருப் பொதியிற்
சேர்வு நல்கிய செல்வங்கண் டடைந்தேன்
செந்தண் மாமலர்த் திருமகள் மருவுஞ்
செல்வத் தென்றிரு நின்றியூ ரானே. 5

செவ்விய தண்ணிய சிறந்த தாமரை மலரின் கண் இருக்கும் திருமகள் வாழும், செல்வத்தை யுடைய, அழகிய திருநின்றியூரில் உள்ள இறைவனே! இந்திரன் ஒருவன், உன்னிடத்து வந்து உன்னை வழிபட, அதற்கு மகிழ்ந்து, அவனுக்கு, 'நீ, விண்ணுலகை ஆள்க' என்று சொல்லி வழங்கிய தலைமையையும், 'காலை, நண்பகல், மாலை' என்னும் மூன்று சந்திகளிலும், இலிங்க உருவத்தை நிறுவி, கலையுருவத்தை அமைத்து வழிபட்ட அகத்திய முனிவருக்கு, அருவிகள் மணிகளைச் சிதறுகின்ற, அழகிய திருப்பொதியில் மலையில் வீற்றிருக்க அருளிய பெருமையையும் அறிந்து, அடியேன், உனது திருவடியை அடைந்தேன்; என்னை ஏன்று கொண்டருள்.

இந்திரராய் வருவோர் எண்ணிறிந்தவராதலின், "ஓர் இந்திரன்" என்று அருளினார். "அருளி" என்ற எச்சம் எண்ணின்கண் வந்ததாகலின், அதற்கு இவ்வாறுரைக்கப்பட்டது. 'சகளம்' என்பது, 'கலையொடு கூடியது' எனப் பொருள் தருவது. அதனொடு இகர விகுதி புணர்ந்து "சகளி என அருளவே, 'கலைகளை உடைய திருமேனி' என்பது பொருளாயிற்று. "தாபரம் நிறுத்திச் சகளிசெய்து". எனவே, "இலிங்கத் திருமேனியில் கலையுருவத்தைப் பாவனையால் அமைத்து" என்றவாறாயிற்று. சிவ வழிபாட்டிற் கொள்ளப்படும் மந்திரங்கள் பலவற்றுள்ளும், 'பஞ்சப்பிரம மந்திரங்கள்' எனப்படும் ஐந்தும், 'சடங்க மந்திரங்கள்' எனப்படும் ஆறும் ஆகப் பதினொரு மந்திரங்கள் இன்றியமையாதனவாகும். இப்பதினொன்றனையும், 'சங்கிதா மந்திரங்கள்' என்ப. 'மந்திரங்கள்' எனச் சிறந்தெடுத்துச் சொல்லப் படுவன, இப்பதினொன்றுமே என்பதனை,

"பந்தமுறு மந்திரங்கள் பதினொன்று மாதலினால்
அந்தமுறை நான்கினோடு முறைபதினொன் றாக்கினார்"

திருமுறைகண்ட புராணம் (பா. 28) கூறுவதும் அறிக.

ஈசானம், தத்புருடம், வாமதேவம், அகோரம், சத்யோஜாதம் – பஞ்சப்பிரம மந்திரங்கள்.

சிகை, சிரசு, இருதயம், அத்திரம், நேத்திரம், கலசம் – சடங்க மந்திரங்கள்

சங்கிதா மந்திரங்கள் = பஞ்சப்பிரம மந்திரங்கள் + சடங்க மந்திரங்கள்

மேற்கண்டவற்றோடு பீஜ எழுத்துக்களையும், கோடி மந்திரங்களையும் இணைத்து "ஓம் ஹோம் ஈசான மூர்த்தாய நம" என்பது போன்ற போற்றிப் பனுவல்களை வடமொழி நூல்களில் காணலாம்.

## நால்வருக்குச் செய்த திருவருள்

670. காது பொத்தரைக் கின்னரர் உழுவை
கடிக்கும் பன்னகம் பிடிப்பருஞ் சீயம்
கோதில் மாதவர் குழுவுடன் கேட்பக்
கோல **ஆல்நிழற் கீழறம் பகர**
**வேதஞ் செய்தவர் எய்திய இன்பம்**
**யானுங் கேட்டுநின் இணையடி யடைந்தேன்**
நீதி வேதியர் நிறைபுக ழுலகில்
நிலவு தென்றிரு நின்றியூ ரானே. 6

நீதியையுடைய அந்தணர்கள் நிறைந்திருத்தலால் உளதாகிய புகழ், உலக முழுதும் விளங்குகின்ற, அழகிய திருநின்றியூரில் உள்ள இறைவனே! கேள்வியால் துளைக்கப்பட்ட செவியினையுடைய நால்வர் முனிவர்கள், 'கின்னரர், புலி, கடிக்கும் இயல்புடைய பாம்பு, பற்றுதற்கு அரிய சிங்கம், குற்றம் அற்ற பெரிய தவத்தவர் குழாம்' என்ற இவருடன் இருந்து கேட்ப, நீ, அழகிய ஆல் நிழலில் இருந்து, அறத்தின் உண்மைகளை எல்லாம் சொல்ல, அவற்றைக் கேட்டுப் பின்பு வேதங்களை இயற்றி அவர்கள் அடைந்த இன்பத்தினைக் கேட்டறிந்து, அடியேனும், உனது திருவடியிணையை அடைந்தேன்; என்னை ஏன்று கொண்டருள்.

நீள்செவி – உபதேசம் கேட்கும் பொருட்டு நீண்ட செவியை நாம் கேட்டுப் பெற்றுப் பொத்திக் கொண்டு கேட்டுப் பழக வேண்டும்.

காது பொத்தரைக் கின்னரர் – இறைவரது உபதேச மொழிகள் சிறிதும் புறஞ்செல்லாது முழுதும் செவிப்புலனுக்குள் நுழையும்படி காதுகளைப் பொத்தியபடி இசைகேட்டு அனுபவித்த கின்னரர்; பசுக்கள் முதலியன சத்தம் கேட்கும் போது செவிகளை ஒரு முகமாகக் குவித்துக் கொள்ளும் இயல்பைப் பார்த்து மகிழலாம்.

உழுவை – புலி. பன்னகம் – பாம்பு. சீயம் – சிங்கம். மாதவர் – முனிவர்.

மாதவரும், புலி முதலிய கொடிய விலங்குகளும் ஒன்றாக இருந்தமை இறைவனின் திருமுன்பின் பெருமையை உணர்த்தியது. இடத்தது நன்மையால் கொடியனவும் அக்கொடுமை நீங்கின என்பது பெறப்பட்டது.

அறம் முதலிய நான்கினையும் நால்வர் முனிவர்கட்கு இறைவன் நுண்ணியவாய்ச் செவியறிவுறுத்த அவற்றைக் கேட்ட நால்வரும், நான்கு வேதங்களில் அவற்றை உலகிற்கு இனிது விளங்க விரித்துரைத்தனர் என்பது கூறப்பட்டது. இதுவே திருமுறைகளில் வேதத்தைப் பற்றிக் கூறும் "வரலாறு". வேதஞ்செய்தவர் எய்திய இன்பம் "யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்ற திருமந்திரப் பாடலால் உணரலாம்.

## யானைக்குச் செய்த திருவருள்

671. கோடு நான்குடைக் குஞ்சரஞ் குலுங்க
நலங்கொள் பாதம்நின் றேத்திய பொழுதே
பீடு விண்மிசைப் பெருமையும் பெற்ற
பெற்றி கேட்டுநின் பொற்கழ லடைந்தேன்
பேடை மஞ்ஞையும் பிணைகளின் கன்றும்
பிள்ளைக் கிள்ளையும் எனப்பிறை நுதலார்
நீடு மாடங்கள் மாளிகை தோறு
நிலவு தென்றிரு நின்றியூ ரானே. 7

கோடு நான்குடைக் குஞ்சரம் – நான்கு கொம்புகளை யுடைய ஐராவதம் என்னும் இந்திரனின் யானை.
மஞ்ஞை – மயில்.

பெண் மயில்கள் போலவும், இளைய பெண் மான்கள் போலவும், இளைய கிளிகள் போலவும், பிறைபோலும் நெற்றியையுடைய மகளிர், உயர்ந்த மாடங்களையுடைய மாளிகைதோறும் விளங்குகின்ற, அழகிய திருநின்றியூரில் உள்ள இறைவனே! நான்கு கொம்புகளையுடைய யானை, உன்முன் நின்று, தனது உடல், அன்பினால் நடுங்கத் துதித்தபொழுதே, முன்னை வடிவத்தையும், விண்ணுலகத்தை அடையும் பெருமையையும் பெற்ற தன்மையைக் கேட்டு அடியேன், உனது பொன்போலும் திருவடியை அடைந்தேன்; என்னை ஏன்று கொண்டருள்.

...................................................... 8, 9, 10

## 66. திருவாவடுதுறை

பண் : தக்கேசி | பதிக எண் : 66

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் ஒப்பிலாமுலையம்மை உடனமர் அருள்மிகு மாசிலாமணிநாதர். | | |
| **தல இருப்பிடம்** | சோழநாட்டில் காவிரி தென்கரையில் கும்பகோணம் மயிலாடுதுறை நெடுஞ்சாலையில் கும்பகோணத்திலிருந்து 15 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | படர் அரசு | | |
| **தீர்த்தம்** | கோமுக்தி, பத்ம, கைவல்ய தீர்த்தம் | | |
| **பாடியவர்** | மூவர் | **பதிகங்கள்** | 8 |

### மார்க்கண்டேயருக்கு அருளியது

672. மறைய வன்ஒரு மாணிவந் தடைய
வார மாய்அவன் ஆருயிர் நிறுத்தக்
கறைகொள் வேலுடைக் காலனைக் காலாற்
கடந்த காரணங் கண்டுகண் டடியேன்
இறைவன் எம்பெரு மான்என் றெப்போதும்
ஏத்தி ஏத்திநின் றஞ்சலி செய்துன்
அறைகொள் சேவடிக் கன்பொடும் அடைந்தேன்
ஆவ டுதுறை ஆதிஎம் மானே. 1

திருவாவடுதுறையில் எழுந்தருளியுள்ள, எங்கள் முதற்கடவுளே! உன்னை, அந்தணனாகிய பிரமசாரி ஒருவன் அன்புடன் வந்து அடைய, அவனது அரிய உயிரைப் போகாது நிறுத்த வேண்டி, உதிரத்தைக் கொண்ட சூலத்தை யுடைய இயமனைக் காலால் உதைத்துக் கொன்ற காரணத்தை உணர்ந்து உணர்ந்து, அடியேன், 'யாவர்க்கும் முதல்வன்; எமக்குப் பெருமான்' என்று எப்பொழுதும் துதித்துத் துதித்து, அஞ்சலி கூப்பி நின்று, கழலும் சிலம்பும் ஒலித்தலைக் கொண்ட உனது செவ்விய திருவடியிடத்துக் கொண்ட அன்போடும் வந்து அடைந்தேன்; என்னை ஏற்றுக் கொண்டருள்.

"காரணம்" என்ற திருவருளை.
மறையவன் – மார்க்கண்டேயர்.
மாணி – பிரமசாரி. வாரம் – அன்பு.

## சிலந்திக்கு அருளியது

673. தெருண்ட வாயிடை நூல்கொண்டு சிலந்தி
சித்திரப் பந்தர் சிக்கென இயற்றச்
சுருண்ட செஞ்சடை யாய்அது தன்னைச்
சோழ னாக்கிய **தொடர்ச்சி**கண் டடியேன்
புரண்டு வீழ்ந்துநின் பொன்மலர்ப் பாதம்
போற்றி போற்றியென் றன்போடு புலம்பி
**அரண்டென் மேல்வினைக் கஞ்சிவந் தடைந்தேன்**
ஆவ டுதுறை ஆதிஎம் மானே. 2

திருவாவடுதுறையில் எழுந்தருளியுள்ள, எங்கள் முதற்கடவுளே! தெளிவுபெற்ற சிலந்தி ஒன்று, தனது வாயினின்றும் உண்டாகும் நூலால் அழகிய பந்தரை உறுதிப்பட ஆக்க, அச் சிலந்தியை, சுருண்ட, சிவந்த சடையை உடையையாகிய நீ, சோழனாய்ப் பிறக்கச் செய்த திருவருளை அறிந்து, அடியேன், எனது எதிர்வினைக்கு அஞ்சித் துணுக்குற்று, உனது அழகிய மலர்போலும் திருவடியில் விழுந்து புரண்டு, 'போற்றி! போற்றி!' என்று துதித்து, அன்பினால் அழுது, உன்னை வந்து அடைந்தேன்; என்னை ஏன்று கொண்டருள்.

தொடர்ச்சி – அருளாகிய தொடர்பு.

மேல்வினை – இனிச்செய்யும் வினை. ஆகாமியம்.

இது பழவினையாகிய சஞ்சிதம் தொலையப் பெற்றாரையும் வந்து பற்றும் வன்மையுடையதாகலின் அதற்கு அஞ்சிய அச்சத்தினையும், அதுபற்றி இரந்து நின்ற நிலையையும் பாடினார்.

## திருமாலுக்கு அருளியது

674. திகழும் மாலவன் ஆயிர மலரால்
ஏத்து வான்ஒரு நீள்மலர் குறையப்
புகழி னால்அவன் கண்ணிடந் திடலும்
புரிந்து சக்கரங் கொடுத்தல்கண் டடியேன்
திகழு நின்திருப் பாதங்கள் பரவித்
தேவ தேவநின் திறம்பல பிதற்றி
அகழும் வல்வினைக் கஞ்சிவந் தடைந்தேன்
ஆவ டுதுறை ஆதிஎம் மானே. 3

தேவர்கட்குத் தேவனே! திருவாவடுதுறையில் எழுந்தருளியுள்ள, எங்கள் முதற்கடவுளே! மிக்க புகழுடையவனாகிய திருமால் நாள்தோறும் ஆயிரந் தாமரைப் பூக்களால் உன்னை அருச்சிக்கின்றவன். ஒருநாள் ஒரு சிறந்த பூக்குறைய, அவன் அதற்கு மெலியாது, புகழத்தக்க உறுதிப்பாட்டுடன், தனது கண்களில் ஒன்றைப் பெயர்த்து உனக்குச் சாத்த, அதனைக் கண்டு மகிழ்ந்து அவனுக்கு நீ சிறந்த சக்கரப்படையை அளித்தமையை உணர்ந்து, அடியேன், என் நிலைமையைப் பெயர்த்து, நிலையில்லாது உழலச் செய்கின்ற வலிய வினைக்கு அஞ்சி, ஒளிவீசுகின்ற உனது திருவடிகளைத் துதித்து, உனது பெருமைகள் பலவற்றையும் பலகாற் பேசி, உன்னை வந்து அடைந்தேன்; என்னை ஏன்று கொண்டருள்.

"அடைந்தேன் ஆவடுதுறை ஆதி எம்மானே"
என்பது பதிக மகுடமாகும்.

## அருச்சுனனுக்கு அருளியது

675. வீரத் தால்ஒரு வேடுவ னாகி
விசைத்தொர் கேழலைத் துரந்துசென்
றணைந்து
போரைத் தான்விச யன்றனக் கன்பாய்ப்
புரிந்து வான்படை கொடுத்தல்கண் டடியேன்
வாரத் தால்உன நாமங்கள் பரவி
வழிபட் டுன்திற மேநினைந் துருகி
ஆர்வத் தோடும்வந் தடியிணை அடைந்தேன்
ஆவ டுதுறை ஆதிஎம் மானே. 4

கேழல் – பன்றி. வான்படை – பாசுபதம் எனப்படும் போர்க்கருவி.

திருவாவடுதுறையில் எழுந்தருளியுள்ள, எங்கள் முதற்கடவுளே! நீ, ஒரு வேடுவனாய் உருக்கொண்டு, ஒரு பன்றியை, வீரத்துடன் விரைந்து துரத்திச் சென்று, உன்னை நோக்கித் தவம் செய்து கொண்டிருந்த அருச்சுனனை அடைந்து, அவன்மேல் வைத்த விருப்பத்தால் அவனோடு போர் புரிந்து, பின்பு அவனுக்கு, சிறந்த படையாகிய பாசுபதக் கணையை அளித்தமையை அறிந்து, அடியேன் உனது தன்மைகளை நினைந்து உருகி, உனது திருப்பெயர்களை அன்போடு சொல்லி உன்னை வழிபட்டு, ஆர்வத்தோடு வந்து உன் திருவடியிணையை அடைந்தேன்; என்னை ஏன்று கொண்டருள்.

## முப்புரம் எரித்த ஞான்று மூவர்க்கு அருளியது

676. ஒக்க முப்புரம் ஓங்கெரி தூவ
உன்னை உன்னிய மூவர்நின் சரணம்
புக்கு மற்றவர் பொன்னுல காளப்
புகழி னால்அருள் ஈந்தமை யறிந்து
மிக்க நின்கழ லேதொழு தரற்றி
வேதி யாஆதி மூர்த்திநின் அரையில்
அக்க ணிந்தஎம் மானுனை யடைந்தேன்
ஆவ டுதுறை ஆதிஎம் மானே. 5

.................................................... 6, 7, 8, 9, 10

வேதம் ஓதுபவனே! உலகிற்கு முதலாய மூர்த்தியே! உன் அரையில் எலும்பை அணிந்த பெருமானே! திருவாவடுதுறையில் எழுந்தருளியுள்ள, எங்கள் முதற்கடவுளே! நீ, மூன்று ஊர்களில் ஓங்கி எரிகின்ற நெருப்பை ஒருசேர எழுப்பியபொழுது, அங்கு உன்னையே நினைத்திருந்த மூவராகிய அவர் மட்டில் உய்ந்து, உன் திருவடியை அடைந்து, மேல் உலகத்தை ஆளும் வண்ணம், அவர்கட்கு, புகழத்தக்க வகையில் திருவருள் ஈந்தமையை அறிந்து, அடியேன், மேலான உனது திருவடியையே தொழுது முறையிட்டு, உன்னை அடைந்தேன்; என்னை ஏன்று கொண்டருள்.

## 67. திருவலிவலம்

பண் : தக்கேசி | பதிக எண் : 67

| மூர்த்தி | அருள்தரும் மாழையங்கண்ணி உடனமர் அருள்மிகு மனத்துணைநாதர் | | |
|---|---|---|---|
| தல இருப்பிடம் | சோழநாட்டில் காவிரி தென்கரையில் திருவாரூர் – திருத்துறைப்பூண்டி சாலையில் திருவாரூரிலிருந்து 20 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| தல மரம் | புன்னை | | |
| தீர்த்தம் | சங்கர தீர்த்தம், வெள்ளாறு | | |
| பாடியவர் | மூவர் | பதிகங்கள் | 4 |

677. ஊனங் கத்துயிர்ப் பாய்உல கெல்லாம்
ஓங்கா ரத்துரு வாகிநின் றானை
வானங் கைத்தவர்க் கும்அளப் பரிய
வள்ள லைஅடி யார்கள்தம் உள்ளத்
தேனங் கைத்தமு தாகியுள் ளூறுந்
தேச னைத்திளைத் தற்கினி யானை
மானங் கைத்தலத் தேந்தவல் லானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. 1

கைத்தல் இரண்டனுள் முன்னது வெறுப்பினையும், பின்னது கைப்புச் சுவையினையும் குறித்தன.

புலால் வடிவாகிய உடம்பில் இருந்து உயிர்ப்பனவாகிய உயிர்களாய் நின்று அவைகட்கு உணர்வை உண்டாக்கி நிற்பவனும், விண்ணுலக இன்பத்தையும் வெறுத்துத் தவம் செய்வார்கட்கும் அளத்தற்கரிய வள்ளலாய் உள்ளவனும், தன் அடியவர்களது உள்ளத்தினுள்ளே, தேனும் கைப்ப, அமுதம் ஊற்றெழுவதுபோல எழுகின்ற ஒளி வடிவினனும், அழுந்துந்தோறும் இனிமை பயக்கின்றவனும், மானை அகங்கையிடத்து ஏந்த வல்லவனும் ஆகிய பெருமானை, அடியேன், 'திருவலிவலம்' என்னும் இத்தலத்தில் வந்து அடைந்தமையாற் கண்டேன்; இல்லாவிடில் எங்ஙனம் காண்பேன்!

**678.** பல்லடி யார்பணிக் குப்பரி வானைப்
பாடிஆ டும்பத்தர்க் கன்புடை யானைச்
செல்லடி யேநெருங் கித்திறம் பாது
சேர்ந்தவர்க் கேசித்தி முத்திசெய் வானை
நல்லடி யார்மனத் தெய்ப்பினில் வைப்பை
நான்உறு குறைஅறிந் தருள்புரி வானை
வல்லடி யார்மனத் திச்சையு ளானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. 2

பல்லடியார் – விதிமார்க்கம், பத்திமார்க்கம் என இரு திறத்திலும் பல்வேறு வகைப்பட நிற்பவர். பாடி ஆடுபவர் – இசைக்கூத்துக்களால் வழிபடுபவர். திறம்பாது சென்று சேர்ந்தவர் – வாசனா மலத்தின் தாக்குதலுக்குத் தோலாது; இறைவனது திருவடியைப் பற்றி நின்றவர். சித்தி – அடியார்கள் வாயிலாக இறைவர் தாம் நிகழ்த்தும் அற்புதங்கள்.

நல்லடியார் – திருவும், மெய்ப்பொருளும் எல்லாம் இறைவனே என்று இருப்பவர். சுந்தரர் போன்றவர். வல்லடியார் – ஞானநூல்தனை ஓதல், ஓதுவித்தல் முதலிய ஞானபூசை செய்பவர்.

பலதிறப்பட்ட அடியவரது தொண்டுகட்கும் இரங்குபவனும், இசையோடு பாடி, அதனோடு ஆடலையும் செய்கின்ற சீரடியார்களைத் தன் தமர்களாகக் கொண்டு தொடர்புடையவனா கின்றவனும், தன்னை நோக்கிச் செல்லுகின்ற வழியிலே மாறுபடாது சென்று அணுகித் தன்னைப் பெற்றவர்கட்கே சித்தியையும், முத்தியையும் தருபவனும், நல்ல அடியார்களது மனத்தில், எய்ப்பிற்கு என்று வைத்துள்ள நிதியின் நினைவுபோல நின்று அமைதியைத் தருபவனும், நான் அடைந்தனவும் அடையற் பாலனவுமாகிய குறைகளைத் தானே அறிந்து, அவற்றைக் களைந்தும், வாராது தடுக்கும் அருள்புரிபவனும், கற்றுவல்ல அடியார்களது உள்ளத்தில் தங்குவதற்கு விருப்பம் உடையவனும் ஆகிய பெருமானை, அடியேன், 'திருவலிவலம்' என்னும் இத்தலத்தில் வந்து அடைந்ததனாற் கண்டேன்; இல்லாவிடில் எங்ஙனங் காண்பேன்!

**679.** ஆழிய னாய்அகன் றேஉயர்ந் தானை
**ஆதிஅந் தம்பணி வார்க்கணி யானைக்**
கூழைய ராகிப்பொய் யேகுடி யோம்பிக்
குழைந்து மெய்யடி யார்குழுப் பெய்யும்
வாழியர்க் கேவழு வாநெறி காட்டி
மறுபிறப் பென்னை மாசறுத் தானை
மாழையொண் கண்உமை யைமகிழ்ந் தானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. 3

ஆதி அந்தம் பணிவார்க்கு அணியான் – இதனானே சிவபூசை வழங்குவோர், "நீவிர்சாங்காறும் இவ்வழி பாட்டினை விடாது செய்தல் வேண்டும்" என்ற விதிப்பதும், பெறுவோறும் "சாங்காறும் யான் இதை விடாது செய்வேன்; நாள்தோறும் வழிபாட்டு முடிந்தபின்தான் உண்பேன்"என்று கூறி தீக்கைப் பெறுவதும் வழக்கம்.

அங்ஙனம் வாழ்வோர்க்கு அவரருள் நிச்சயமாகக் கிட்டும்.

அடிமைத்திறத்தில் திறம்பாது நின்றவர் சுந்தரர்.

கூழையர் – பின்னணியில் நிற்பவர். பொய்யே குடி ஓம்பி – உலகவாழ்க்கையில், ஆசையின்றி பற்றாது வாழ்ந்து.

குழைந்து.... வாழியர் – அன்புடன் மெய்யடியார்கட்குக் குற்றேவல் புரிபவர்.

ஆழ்ந்தவனாகியும், அகன்றவனாகியும், உயர்ந்தவனாகியும், உள்ளவனும், பிறந்தது முதற் சாங்காறும் வழிபடுவார்க்கு அணியனா கின்றவனும், பணிவுடையவராய், குடியை, உள்ளத்தில் பற்றின்றிப் புரந்து, மனம் உருகி நின்று, தம்மை மெய்யடியார் கூட்டத்துள் வைத்தெண்ணும் வாழ்க்கையையுடையவர்க்கு அடிமை செய்தலில் தவறாத நெறியை உணர்த்துமாற்றால், என்னை மறுபிறப்பெடுத்த லாகிய குற்றத்தை அறுத்துத் தூயனாக்கிய வனும், மாவடுப்போலும் கண்களையுடைய உமாதேவியை விரும்பி ஒரு பாகத்தில் வைத்தவனும் ஆகிய பெருமானை, அடியேன், திருவலிவலம் என்னும் இத்தலத்தில் வந்து அடைந்ததனாற் கண்டேன்; இல்லாவிடில் எங்ஙனங் காண்பேன்!

680. நாத்தான் தன்திற மேதிறம் பாது
நண்ணிஅண் ணித்தமு தம்பொதிந் தூறும்
ஆத்தா னைஅடி யேன்றனக் கென்றும்
அளவிறந் தபஃ றேவர்கள் போற்றும்
சோத்தா னைச்சுடர் மூன்றிலும் ஒன்றித்
துருவி மால்பிர மன்னறி யாத
மாத்தா னைமாத் தெனக்குவைத் தானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. 4

சோத்தம் – துதி. ஆத்தான் – ஆம்தன் – ஆத்தன் – அத்தன் – தலைவன். மாத்தான் – உயர்வுடையவன். மாத்து – மகத். மாத்து – பெருமை.

அடியேற்கு, எனது நா, தனது புகழைச் சொல்லுதலில் என்றும் மாறுபடாதவாறு என்னிடத்துப் பொருந்தி, உள்ளே அமுதம் நிறைந்தாற்போல இனித்து ஊற்றெழுகின்ற துணைவனாய் உள்ளவனும், எண்ணில்லாத பல தேவர்களும் துதித்து வணங்குகின்ற வணக்கத்திற்கு உரியவனும், 'ஞாயிறு, திங்கள், தீ' என்னும் முச்சுடர்களிலும் வேறற நிற்பவனும், திருமாலும் பிரமனும் தேடி அறியப்படாத பெருமையை உடையவனும், எனக்குப் பெருமையை அளித்தவனும் ஆகிய பெருமானை, அடியேன், 'திருவலிவலம்' என்னும் இத் தலத்தில் வந்து அடைந்ததனாற் கண்டேன்; இல்லாவிடில் எங்ஙனங் காண்பேன்!

681. நல்லிசை ஞானசம் பந்தனும் நாவினுக்
கரையனும் பாடிய நற்றமிழ் மாலை
சொல்லிய வேசொல்லி ஏத்துகப் பானைத்
தொண்ட னேன்அறி யாமை யறிந்து
கல்லி யல்மனத் தைக்கசி வித்துக்
கழலடி காட்டிஎன் களைகளை அறுக்கும்
வல்லியல் வானவர் வணங்கநின் றானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே.
5

இசையால் அன்பு தோன்றுதலும், ஞானத்தால் அது நிலை பெறுதலும் உளவாதலை அறியலாம். இசையும், ஞானமும் ஒருங்கியைந்த சொன்மாலைகளை இறைவன் பெரிதும் விரும்புகின்றான். கல்லி – தோண்டி, அகழ்ந்து. பல பாடல்களில் இறைவர் தம்மைக் குற்றம் அறுத்துக் குணஞ் செய்தமையை வகுத்தோதுகின்றார்.

சிறந்த இசைத்தமிழைப் பாடிய திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகளும், திருநாவுக்கரசு சுவாமிகளும் அருளிச் செய்த, தமிழ்ச் சொல்லால் அமைந்த மெய்யுணர்வு மாலையாகிய, முன்பு அவர்களால் சொல்லப்பட்டனவற்றையே பின்னும் பிறர் சொல்லிப் போற்றுதலை விரும்புபவனும், அடியேனது அறியாமையை அறிந்து, கல்லின் இயல்பைக் கொண்ட எனது மனத்தை உருகப் பண்ணி, கழல் அணிந்த தனது திருவடியைப் பெறுவித்து, எனது குற்றங்களை எல்லாம் அறுத்த வன்மையையுடைய, தேவர் பலரும் வணங்க நிற்கின்ற பெருமானை, அடியேன், 'திருவலிவலம்' என்னும் இத்தலத்தில் வந்து அடைந்ததனாற் கண்டேன்; இல்லாவிடில், எங்ஙனங் காண்பேன்!

682. பாடுமா பாடிப் பணியுமா றறியேன்
பனுவுமா பனுவிப் பரவுமா றறியேன்
தேடுமா தேடித் **திருந்துமா றறியேன்**
செல்லுமா செல்லச் செலுத்துமா றறியேன்
கூடுமா றெங்ஙன மோஎன்று கூறக்
**குறித்துக் காட்டிக் கொணர்ந்தெனை ஆண்டு**
வாடிநீ வாளா வருந்தல்என் பானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. 6

குறித்துக் காட்டிக் கொணர்ந்தெனை ஆண்டு –
1. திருவெண்ணெய் நல்லூரில் தடுத்தாட் கொண்டது.
2. திருத்துறையூரில் தவநெறி தந்தது.
3. திருவதிகையில் திருவடி சூட்டியது
4. ஆரூரில் திருத்தொண்டத்தொகை பாட அருளி அடியாரோடு கூட்டியது.
5. பல தலங்களில் காட்சி கிடைக்க அருளியது.
முதலிய வரலாறுகளைக் குறிக்க.

யான், முன் உள்ள பாடல்களை, அவைகளைப் பாடும் நெறியாற் பாடி, இறைவனை வழிபடு மாற்றை அறிந்திலேன்; புதிய பாடல்களை, யாக்கும் நெறியால் யாத்துத் துதிக்கு மாற்றினையும் அறிந்திலேன்; மனத்தில் உள்ள குற்றங்களை ஆராயும் நெறியால் ஆராய்ந்து கண்டு அதனைத் திருத்தும் வகையை அறிந்திலேன்; அதனால், அதனை நன்னெறியிற் செல்லுமாறு செலுத்தும் வழியை அறிந்திலேன்; இவற்றால் 'இவன் நன்னிலையைப் பெறுதல் எவ்வாறோ!' என்று நல்லோர்கள் இரங்கிக் கூற இருக்கின்ற காலத்து, என்னையே சிறப்பாக யாவர்க்கும் காட்டி, 'இவன் எனக்கு அடிமை' என்று சொல்லி வெளிக்கொணர்ந்து, தனக்கு ஆளாகக் கொண்டு, 'இனி, நீ, பயனின்றி வாடி வருந்தலை' என்று தேற்றிய பெருமானை, அடியேன், 'திருவலிவலம்' என்னும் இத்தலத்தில் வந்து அடைந்ததனாற் கண்டேன்; இல்லாவிடில், எங்ஙனங் காண்பேன்!

683. பந்தித்தவ் வல்வினைப் பற்றறப் பிறவிப்
படுக டற்பரப் புத்தவிர்ப் பானைச்
சந்தித் ததிற லாற்பணி பூட்டித்
தவத்தை ஈட்டிய தன்னடி யார்க்குச்
சிந்தித் தற்கெளி தாய்த்திருப் பாதஞ்
சிவலோ கந்திறந் தேற்றவல் லானை
வந்திப் பார்தம் மனத்தினுள் ளானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. 7

சந்தித்தல் – திருவடி ஞானங்கூட்டுதல்.
திறலார் – வலிமை பொருந்திய.

பிணித்துள்ள வினைத்தொடர்பு அறுதலால், பிறவியாகிய கடலினது பரப்புச் சுருங்குமாறு செய்பவனும், தன்னை உணர்ந்த உணர்வின் வலிமையால், தம் செயல்களைத் தன்னிடத்தே சேர்த்து, அதனால், செய்யும் செயலெல்லாம் தவமேயாகக் குவித்த தன் அடியவர்கட்குத் தனது திருவடிகள், நினைத்தற்கு எளியவாய்க் கிடைத்தலானே, தனது சிவலோகத்தின் வாயிலைத் திறந்து, அதன்கண் அவர்களைப் புகச்செய்ய வல்லவனும், தன்னையே வணங்குகின்றவர்களது மனத்தில் விளங்குபவனும் ஆகிய பெருமானை, அடியேன், 'திருவலிவலம்' என்னும் இத்தலத்தில் வந்து அடைந்ததனாற் கண்டேன்; இல்லாவிடில், எங்ஙனங் காண்பேன்!

684\. எவ்வெவர் தேவர்இ ருடிகள் மன்னர்
எண்ணிறந் தார்கள்மற் றெங்கும்நின் றேத்த
அவ்வவர் வேண்டிய தேயருள் செய்து
அடைந்தவர்க் கேஇட மாகிநின் றானை
இவ்வியல் கருணைஎங் கற்பகக் கடலை
**எம்பெரு மான்அரு ளாய்என்ற பின்னை**
வவ்விஎன் ஆவிம னங்கலந் தானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. 8

"வலிவலந்தனில் வந்து கண்டேனே" என்பது பதிக மகுடமாகும்.

''எம்பெருமான் அருளாய்'' என்று வேண்டியது திருக்கயிலையில்.

''மையல் மானுடமாய் மயங்கும் வழி ஐயனே தடுத்தாண்டருள் செய்" என்ற பெரியபுராணப் பாடலால் அறியலாம்.

தேவர்கள், இருடிகள், அரசர்கள் முதலாக எண்ணிறந்தவர்களாகிய எவரெவரும், எவ்விடத்திலும் இருந்து வழிபட, அவ்வெல்லா இடங்களிலும் நின்று அவர்களது வழிபாட்டினை ஏற்று, அவரவர் விரும்பியதை அவர்கட்கு அளித்து, இவ்வாற்றால், தன்னை அடைந்தவர்க்குப் புகலிடமாய் நிற்பவனும், இவ்வாறு உள்ள இவை இவையாகிய அருளைத் தருகின்ற எங்கள் கற்பகத் தருவும் கடலும் போல்பவனும், யான், 'எம் பெருமானே, எனக்கு அருள்செய்' என்று வேண்டிக்கொண்ட பின்பு, என் உயிரைத் தன்னுடையதாகக் கொண்டு, என் உள்ளத்திலே எஞ்ஞான்றும் நீங்காது இருப்பவனும் ஆகிய பெருமானை, அடியேன், 'திருவலிவலம்' என்னும் இத்தலத்தில் வந்து அடைந்ததனாற் கண்டேன்; இல்லாவிடில், எங்ஙனங் காண்பேன்!

---

685\. திரியும் முப்புரஞ் செற்றதுங் குற்றத்
திறல்அ ரக்கனைச் செறுத்ததும் மற்றைப்
பெரிய நஞ்சமு துண்டதும் முற்றும்
பின்னையாய் முன்ன மேமுளைத் தானை
அரிய நான்மறை அந்தணர் ஓவா
தடிப ணிந்தறி தற்கரி யானை
வரையின் பாவைம ணாளன்எம் மானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. 9

வானத்தில் திரிகின்ற முப்புரங்களை அழித்ததும், குற்றம் செய்த, வலிமையுடைய அரக்கனாகிய இராவணனை ஒறுத்ததும், ஏனை, பெரிய ஆலகால விடத்தை அமுதமாக உண்டதும் முடிதற்குக் காரணனான பின்னோனாய், எப்பொருட்கும் முன்னே தோன்றினவனும், அரிய நான்கு வேதங்களை ஓதுகின்ற அந்தணர்கள், மனம் மாறுபடாது நின்று அடிபணிந்தும், அவர்களால் அறிதற்கு அரியவனும், மலைமகட்குக் கணவனும் ஆகிய எம் பெருமானை, அடியேன், 'திருவலிவலம்' என்னும் இத்தலத்தில் அடைந்ததனாற் கண்டேன்; இல்லாவிடில், எங்ஙனங் காண்பேன்!

**686.** ஏன்ற அந்தணன் தலையினை அறுத்து
நிறைக்க மால்உதி ரத்தினை ஏற்றுத்
தோன்று தோள்மிசைக் களேபரந் தன்னைச்
சுமந்த மால்விர தத்தகங் காளன்
சான்று காட்டுதற் கரியவன் எளியவன்
றன்னைத் தன்னி லாமனத் தார்க்கு
மான்று சென்றணை யாதவன் றன்னை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. **10**

தன்னொடு மாறுபடுதலை ஏற்ற பிரமனது தலைகளில் ஒன்றை அறுத்து, அதனை நிரப்ப, மாயோனது உதிரத்தை ஏற்றவனும், யாவருக்கும் காணப்படுகின்ற தோளின்மேல் எலும்புக் கூட்டினைச் சுமக்கின்ற பெரிய விரதத்தையுடைய கங்காள வேடத்தை யுடையவனும், தன்னைக் காண்பதற்குரிய வழியைக் காட்டுவதற்கு அரியவனும், தன்னிடத்திற் பொருந்திய மனத்தையுடையவர் கட்கு எளியவனும், அறியாமை வழிச் சென்று அணுக இயலாதவனும் ஆகிய பெருமானை, அடியேன், 'திருவலிவலம்' என்னும் இத்தலத்தில் வந்து அடைந்ததனாற் கண்டேன்; இல்லாவிடில் எங்ஙனங் காண்பேன்!

**687.** கலிவ லங்கெட ஆரழல் ஓம்புங்
கற்ற நான்மறை முற்றனல் ஓம்பும்
வலிவ லந்தனில் வந்துகண் டடியேன்
மன்னு நாவல்ஆ ரூரன்வன் றொண்டன்
ஒலிகொள் இன்னிசைச் செந்தமிழ் பத்தும்
உள்ளத் தால்உகந் தேத்தவல் லார்போய்
மெலிவில் வானுல கத்தவர் ஏத்த
விரும்பி விண்ணுல கெய்துவர் தாமே. **11**

வறுமையின் வலிமை கெடும்படி அரிய வேள்வித் தீயை வளர்த்தற்கு ஏதுவான, பெரியோர் பலரும் போற்றிக் கற்ற நான்கு வேதங்களின் முடிந்த பொருளாகிய தீப்போலும் உருவினவாகிய சிவபெருமானை, அவனை எஞ்ஞான்றும் தன்னிடத்து நீங்காது கொண்டு நிற்கும், 'திருவலிவலம்' என்னும் தலத்தில் வந்து கண்டு, அவன் அடியவனும் நிலை பெற்ற திருநாவலூரில் தோன்றியவனும், 'வன்றொண்டன்' எனப் பெயர் பெற்றவனும் ஆகிய நம்பியாரூரன் பாடிய, இனிய இசையை யுடைய, செவ்விய தமிழால் ஆகிய பத்துப் பாடல்களையும், மனத்தால் விரும்பிப் பாட வல்லவர்கள், தேவர்கள் விரும்பிப் போற்ற, துன்பம் இல்லாத வானுலகத்தைப் போய் அடைவர்; இது திண்ணம்.

## 68. திருநள்ளாறு

பண் : தக்கேசி | பதிக எண் : 68

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் போகமார்த்த பூண் முலையாள் உடனமர் அருள்மிகு தர்ப்பாரண்யேசுவரர். | | |
| **தல இருப்பிடம்** | சோழநாட்டில் தற்போதைய புதுவை மாநிலத்தில் காவிரி தென்கரையில் கும்பகோணம் – காரைக்கால் சாலையில் காரைக்காலிலிருந்து 5 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | தர்ப்பை | | |
| **தீர்த்தம்** | நளதீர்த்தம் | | |
| **பாடியவர்** | மூவர் | **பதிகங்கள்** | 7 |

688. செம்பொன் மேனிவெண் ணீறணி வானைக்
கரிய கண்டனை மாலயன் காணாச்
சம்பு வைத்தழல் அங்கையி னானைச்
சாம வேதனைத் தன்னொப்பி லானைக்
கும்ப மாகரி யின்னுரி யானைக்
கோவின் மேல்வருங் கோவினை எங்கள்
நம்ப னைநள் ளாறனை அமுதை
நாயி னேன்மறந் தென்நினைக் கேனே. 1

செம்பொன் போலும் திருமேனியில் வெள்ளிய திருநீற்றை அணிபவனும், கரிய கண்டத்தை உடையவனும், திருமாலும் பிரமனும் காணாத சம்புவும், நெருப்பை அகங்கையில் ஏந்தியவனும், சாமவேதத்தை விரும்புபவனும், தனக்கு ஒப்பாவதொரு பொருள் இல்லாதவனும், குடம்போலும் தலையை உடைய பெரிய யானையின் தோலை உடையவனும், எருதின்மேல் ஏறிவரும் தலைவனும், எங்கள் அருந்துணைவனும், திருநள்ளாற்றில் எழுந்தருளியுள்ளவனும் ஆகிய அமுதம் போல்பவனை மறந்து, நாய்போலும் அடியேன், வேறு எதனை நினைப்பேன்! ஒன்றையும் நினையேன்.

சம்பு – இன்பத்தை ஆக்குபவன்.

689. விரைசெய் மாமலர்க் கொன்றையி னானை
வேத கீதனை மிகச்சிறந் துருகிப்
பரசு வார்வினைப் பற்றறுப் பானைப்
பாலொ டானஞ்சும் ஆடவல் லானைக்
குரைக டல்வரை ஏழுல குடைய
கோனை ஞானக் கொழுந்தினைக்
கொல்லை
நரைவிடை யுடைநள் ளாறனை அமுதை
நாயி னேன்மறந் தென்நினைக் கேனே.
2

பரசுவார் – துதிப்பவர்.

மணத்தைத் தருகின்ற கொன்றைமலர் மாலையை அணிந்தவனும், வேதத்தின் இசையை விரும்புபவனும், அன்பு மிகச் சிறந்து, மனம் உருகித் துதிப்பவர்களது வினைத் தொடர்பை அறுப்பவனும், பால் முதலிய ஆனைந்தினை ஆடவல்லவனும், ஒலிக்கின்ற கடலும், மலையும், உலகும் ஆகியவற்றை ஏழேழாக உடைய தலைவனும், ஞானத்திற்கு எல்லையாய் உள்ளவனும், முல்லை நிலத்திற்குரிய வெள்ளிய இடபத்தை உடையவனும், திருநள்ளாற்றில் எழுந்தருளி யிருப்பவனும் ஆகிய அமுதம்போல்பவனை மறந்து, நாய் போலும் அடியேன், வேறு எதனை நினைப்பேன்! ஒன்றையும் நினையேன்.

690. பூவில்வா சத்தைப் பொன்னினை மணியைப்
புவியைக் காற்றினைப் புனல்அனல்
வெளியைச்
சேவின் மேல்வருஞ் செல்வனைச் சிவனைத்
தேவ தேவனைத் தித்திக்குந் தேனைக்
காவியங் கண்ணி பங்கனைக் கங்கைச்
சடைய னைக்கா மரத்திசை பாட
நாவில் ஊறுநாள் ளாறனை அமுதை
நாயி னேன்மறந் தென்நினைக் கேனே.
3

பூவில் வாசம் என எடுத்தோதியது.

ஏனைய நறுமணங்களில் சிறந்ததால் பற்றி. பூவில் மணம் போல எங்கும் அத்துவிதமாய்ப் பரந்து கலந்து இருப்பவன்.

பூவில் உள்ள மணமும், பொன்னும், மணியும் ஆகிய இவைபோல்பவனும், 'மண், நீர், தீ, காற்று, வானம்' என்னும் ஐம்பெரும் பூதங்களாய் நிற்பவனும், எருதின்மேல் வரும் செல்வத்தை உடையவனும், நன்மையே வடிவானவனும், தேவர்கட்கெல்லாம் தேவனும், தித்திக்கும் தேன் போல இனிப்பவனும், குவளைப் பூப்போலும் கண்களையுடையவளாகிய மங்கைதன் பங்காளனும், கங்கையைத் தாங்கிய சடையை உடையவனும், 'சீகாமரம்' என்னும் இசையாற் பாடுமிடத்து, நாவில் இனிமை மிகுகின்றவனும், திருநள்ளாற்றில் எழுந்தருளியிருப்பவனும் ஆகிய அமுதம் போல்பவனை மறந்து, நாய்போலும் அடியேன் வேறு எதனை நினைப்பேன்! ஒன்றையும் நினையேன்.

691. தஞ்ச மென்றுதன் தாளது வடைந்த
பாலன்மேல் வந்த காலனை உருள
நெஞ்சில் ஓர்உதை கொண்டபி ரானை
நினைப்ப வர்மனம் நீங்ககில் லானை
விஞ்சை வானவர் தானவர் கூடிக்
கடைந்த வேலையுள் மிக்கெழுந் தெரியும்
நஞ்சம் உண்டநள் ளாறனை அமுதை
நாயி னேன்மறந் தென்நினைக் கேனே. 4

'அடைக்கலம்' என்று சொல்லித் தனது திருவடியை அடைந்த சிறுவன்மேல் சினந்து வந்த இயமனை, வீழ்ந்து உருளும்படி அவனது மார்பில் ஓர் உதை உதைத்தலை மேற்கொண்ட தலைவனும், தன்னை நினைப்பவரது மனத்தை விட்டு நீங்குதல் இல்லாதவனும், அறிவு மிக்க தேவர்களும், அசுரர்களும் கூடிக் கடைந்த கடலுள் மிகுதியாய்த் தோன்றி வெம்மையுற்று நின்ற நஞ்சினை உண்டவனும், திருநள்ளாற்றில் எழுந்தருளியிருப்பவனும் ஆகிய அமுதம் போல்பவனை மறந்து, நாய்போலும் அடியேன், வேறு எதனை நினைப்பேன்! ஒன்றையும் நினையேன்.

விஞ்சை – வித்தை – அறிவு.

692. மங்கை பங்கனை மாசிலா மணியை
வான நாடனை ஏனமோ டன்னம்
எங்கும் நாடியுங் காண்பரி யானை
ஏழை யேற்கெளி வந்தபி ரானை
அங்கம் நான்மறை யான்நிறை கின்ற
அந்த ணாளர் அடியது போற்றும்
நங்கள் கோனைநள் ளாறனை அமுதை
நாயி னேன்மறந் தென்நினைக்
கேனே. 5

மங்கை ஒருத்தியது பங்கை உடையவனும், இயல்பாகவே மாசில்லாது விளங்கும் மணி போல்பவனும், வானமாகிய நாட்டை உடையவனும், பன்றியும் அன்னமும் எவ்விடத்துத் தேடியும் காணுதல் அரியவனும், எளியேனுக்கு எளியனாய் எதிர்வந்த தலைவனும், ஆறு அங்கங்களையுடைய நான்கு வேதங்களோடு நிறைந்து நிற்கின்ற அந்தணர்கள் தனது திருவடியைப் போற்றுகின்ற நம் தலைவனும், திருநள்ளாற்றில் எழுந்தருளியிருப்பவனும் ஆகிய அமுதம் போல்பவனை மறந்து, நாய் போலும் அடியேன், வேறு எதனை நினைப்பேன்! ஒன்றையும் நினையேன்.

''நள்ளாறனை அமுதை நாயினேன் மறந்தென் நினைக்கேனே'' என்பது பதிக மகுடமாகும்.

693. கற்ப கத்தினைக் கனகமால் வரையைக்
காம கோபனைக் கண்ணுத லானைச்
சொற்ப தப்பொருள் இருள்அறுத் தருளுந்
தூய சோதியை வெண்ணெய்நல் லூரில்
அற்பு தப்பழ ஆவணங் காட்டி
அடிய னாஎன்னை ஆளது கொண்ட
நற்ப தத்தைநள் ளாறனை அமுதை
நாயி னேன்மறந் தென்நினைக் கேனே. 6

காமகோபன் – காமனைச் சினந்து எரித்தவன்.

கற்பகத் தருவும், பெரிய பொன்மலையும் போல்பவனும், காமனைக் காய்ந்தவனும், கண் பொருந்திய நெற்றியை உடையவனும், சொல் நிலையில் நிற்கும் பொருள் உணர்வாகிய அறியாமையைக் களைந்து, பொருள்கள், நேரே விளங்குமாறு விளக்குகின்ற தூய ஒளியாய் நிற்பவனும், என்னை அடியவனாக, திருவெண்ணெய் நல்லூரில், யாவரும் வியக்கத்தக்க, பழமையதாகத் தீட்டப்பட்டதோர் ஓலையைக் காட்டி அடிமை கொண்ட நன்னிலையாய் உள்ளவனும், திருநள்ளாற்றில் எழுந்தருளியிருப்பவனும் ஆகிய அமுதம் போல்பவனை மறந்து, நாய் போலும் அடியேன், வேறு எதனை நினைப்பேன்! ஒன்றையும் நினையேன்.

694. மறவ னைஅன்று பன்றிப்பின் சென்ற
மாயனை நால்வர்க் காலின்கீழ் உரைத்த
அறவ னைஅம ரர்க்கரி யானை
அமரர் சேனைக்கு நாயக னான
குறவர் மங்கைதன் கேள்வனைப் பெற்ற
கோனை நான்செய்த குற்றங்கள் பொறுக்கும்
நறைவி ரியும்நள் ளாறனை அமுதை
நாயி னேன்மறந் தென்நினைக் கேனே. 7

மறவன் – வேடன். அறவன் – அறமுரைத்தவன்.

அன்று ஒரு பன்றியின்பின் அதனைத் துரத்திச் சென்ற வேடனும், அன்னதொரு மாயம் வல்லவனும், நால்வர் முனிவர்க்கு ஆல்நிழலில் இருந்து சொல்லிய அறத்தை உடையவனும், தேவர்கட்கு அரியனாய் நிற்பவனும், தேவர் சேனைக்குத் தலைவனாகிய, குறவர் மகளாகிய வள்ளிதன் கணவனைப் பெற்ற தலைவனும், நான் செய்த குற்றங்களைப் பொறுப்பவனும், பூக்களின் மணம் பரக்கின்ற திருநள்ளாற்றில் எழுந்தருளியிருப்பவனும் ஆகிய அமுதம் போல்பவனை மறந்து, நாய்போலும் அடியேன், வேறு எதனை நினைப்பேன்! ஒன்றையும் நினையேன்.

695. மாதி னுக்குடம் பிடங்கொடுத் தானை
மணியி னைப்பணி வார்வினை கெடுக்கும்
வேதனை வேத வேள்வியர் வணங்கும்
விமல னைஅடி யேற்கெளி வந்த
தூதனைத் தன்னைத் தோழமை யருளித்
தொண்ட னேன்செய்த துரிசுகள்
பொறுக்கும்
நாத னைநள் ளாறனை அமுதை
நாயி னேன்மறந் தென்நினைக் கேனே. 8

வேதன் – வேதங்களைச் சொன்னவன்.
வேதங்களால் சொல்லப்பட்டவன்.
வேதிப்பவன்
வேதித்தல் – வினை கெடுத்து உயிரைத் தன்மயமாக்குதல்.
துரிசுகள் – குற்றங்கள்

மாதராள் ஒருத்திக்குத் தனது உடம்பின் இடப் பக்கத்தைக் கொடுத்தவனும், மாணிக்கம் போல்பவனும், தன்னைப் பணிகின்றவர்களது வினையை அழிக்கின்ற, வேத முதல்வனாய் உள்ளவனும், வேதத்தின் வழி வேட்கின்ற வேள்வியை உடையவர்கள் வணங்குகின்ற தூயவனும், அடியேனுக்கு எளிமையாய்க் கிடைத்த தூதனும், தன்னை எனக்குத் தோழமை முறையினனாக அளித்து, அடியேன் செய்த குற்றங்களைப் பொறுக்கும் தலைவனும், திருநள்ளாற்றில் எழுந்தருளியிருப்பவனும் ஆகிய அமுதம் போல்பவனை மறந்து, நாய் போலும் அடியேன் வேறு எதனை நினைப்பேன்! ஒன்றையும் நினையேன்.

696. இலங்கை வேந்தன் எழில்திகழ் கயிலை
எடுப்ப ஆங்கிம வான்மகள் அஞ்சத்
துலங்கு நீள்முடி ஒருபதுந் தோள்கள்
இருப துந்நெரித் தின்னிசை கேட்டு
வலங்கை வாளொடு நாமமுங் கொடுத்த
வள்ளலைப் பிள்ளை மாமதி சடைமேல்
நலங்கொள் சோதிநள் ளாறனை அமுதை
நாயி னேன்மறந் தென்நினைக்
கேனே. 9

இலங்கைக்கு அரசன் அழகு விளங்குகின்ற கயிலாய மலையைப் பெயர்க்க, அது போழ்து மலையரையன் மகளாகிய உமை அஞ்சுதலும், அவனது விளங்குகின்ற பெரிய முடியணிந்த தலைகள் ஒருபதையும், தோள்கள் இருபதையும் நெரித்து, பின்னர் அவன் செருக்கொழிந்து பாடிய இனிய இசையைக் கேட்டு, வலக்கையிற் பிடிக்கும் வாளினையும் 'இராவணன்' என்ற பெயரையும், அவனுக்கு அளித்த வள்ளலும், குழவிப் பருவத்தையுடைய சிறந்த சந்திரன், சடைமேல் தங்கி நன்மையுடன் வாழ்கின்ற ஒளியுருவினனும் திருநள்ளாற்றில் எழுந்தருளி யிருப்பவனும் ஆகிய அமுதம் போல்பவனை மறந்து, நாய்போலும் அடியேன், வேறு எதனை நினைப்பேன்! ஒன்றையும் நினையேன்.

697. செறிந்த சோலைகள் சூழ்ந்தநள் ளாற்றெஞ்
சிவனை நாவலூர்ச் சிங்கடி தந்தை
மறந்து நான்மற்று நினைப்பதே தென்று
வனப்பகை அப்பன் ஊரன்வன் றொண்டன்
சிறந்த மாலைகள் அஞ்சினோ டஞ்சுஞ்
சிந்தைஉள் ளுருகிச் செப்ப வல்லார்க்
கிறந்து போக்கில்லை வரவில்லை யாகி
இன்ப வெள்ளத்துள் இருப்பவர்கள்
இனிதே. 10

நெருங்கிய சோலைகள் சூழ்ந்த திருநள்ளாற்றில் எழுந்தருளியிருக்கின்ற எங்கள் சிவபெருமானை, திருநாவலூரில் தோன்றியவனும், 'சிங்கடி' என்பவளுக்கும் 'வனப்பகை' என்பவளுக்கும் தந்தையும், வன்றொண்டனும் ஆகிய நம்பியாரூரன், 'இப் பெருமானை மறந்து நான் நினைப்பது வேறு யாது' என்று சொல்லி, அன்பு மிகுந்து பாடிய பாடல்களாகிய இப்பத்தினையும் மனம் உள்ளுருகிப் பாட வல்லவர்க்கு, இறந்து போதலும், பிறந்து வருதலும் இல்லையாக, பேரின்ப வெள்ளத்துள் இனிதே இருப்பார்கள்.

## 69. வடதிருமுல்லைவாயில்

வட திருமுல்லைவாயில் – தொண்டை நாட்டின் 22வது பதி; சோழ நாட்டில் சீகாழிக்கருகு கடற்கரையில் உள்ள காவிரி வடகரை 7வது பதியாகிய (தென்) திருமுல்லை வாயிலினின்று பிரித்தறியும்படி வடதிருமுல்லை வாயில் எனப்படும்; இங்கு முல்லைக்கொடியே தலமரமாதலின் முல்லைவாயில் எனப்பட்டது; முல்லையின் அடியில் அதுவாயிலாக இறைவர் வெளிப்பட்ட இடம் என்பது பொருள். சண்பகவனம் எனவும் பெயர் பெறுமென்பது 'செண்பகச் சோலை சூழ' (2) என்ற பதிகத்தாற் காண்க, இங்கு வேட்டையின் பொருட்டு யானையின் மேல் வந்த தொண்டைமான் என்ற அரசனது யானையினது காலில் முல்லைக்கொடி சுற்றியதனால் அது மேற்செல்லமாட்டாது தடைபடச் செய்தருளியபோது, அரசன் முல்லைக் கொடியை வாளினால் வீசியபோது, அது இறைவர் திருமேனியிற்பட்டு இறைவர் வெளிப்பட்டருள, அது கண்ட அரசன் கவன்றுவருந்த, அவனுக்கருள் கொடுத்தருளினார் என்பது தலவரலாறு. இது பதிகம் 10வது திருப்பாட்டிற் போற்றப்பட்டது; வாளினால் வீசியதாற் சிதைவுண்ட வடு இன்றும் சிவலிங்கத் திருமேனியிற் காண உள்ளது. முருகப்பெருமான் பூசித்த பதி, திருமால் வழிபட்ட வரலாற்றினை முன்னர், "அங்கண் முல்லையின் றெய்வமென் றருந்தமி முரைக்கும், செங்கண்மால் தொழும்" (1095) என்று ஆசிரியர் அருளினர்; சோழன், காமதேனு, வசிட்டர் முதலியோரும் வழிபட்டுப் பேறுபெற்ற குறிப்புக்களும் காணப்படுவன; சுவாமி சந்நிதானத்தில் மிகப்பெரிய இரண்டு எருக்குத் தூண்கள் உள்ளமை காணப்படும்.

**குறிப்பு :** தொண்டைமானுக்கு அருளிப் படைத்துணையாக நந்திதேவரை இறைவர் அனுப்பியருளினர் என்றும், கிழக்கு நோக்கி எழுந்தருளியிருக்கும் நந்தி அந்த வரலாறு குறிப்பதென்றும் கூறுவர். சுவாமி தீண்டாத் திருமேனி, சந்தனக் காப்பிடுதல் வழிபாட்டு முறை.

சுந்தரர் பெருமான் அருளால், சூளுறவு செய்து சங்கிலியாரை மணந்து திருவொற்றியூரின் எல்லையைக் கடந்ததால் கண்ணிழந்து செல்லும்பொழுது துயர் நீங்க, "அழுக்கு மெய்கொடு" என்ற திருப்பதிகம் பாடி, வழிப்போவார் வழிகாட்ட, வடதிருமுல்லைவாயில் சென்று இறைஞ்சிப் பாடியருளியது இத்திருப்பதிகம். (தி. 12 பெரிய. புரா. ஏயர்கோன் புரா. 277)

**பண் : தக்கேசி** **பதிக எண் : 69**

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் கொடியிடையாள் உடனமர் அருள்மிகு மாசிலாமாணி ஈசர்/ பாசுபதேசுவரர். | | |
| **தல இருப்பிடம்** | தொண்டை நாட்டில் – தற்போது சென்னையிலிருந்து 26 கி.மீ. ஆவடி சென்று கோயிலை அடையலாம். | | |
| **தல மரம்** | முல்லை | | |
| **தீர்த்தம்** | பாலாறு, கல்யாண தீர்த்தம் | | |
| **பாடியவர்** | நம்பியாரூரர் | **பதிகம்** | 1 |

698. திருவும்மெய்ப் பொருளுஞ் செல்வமும் எனக்குன்
சீருடைக் கழல்கள்என் றெண்ணி
ஒருவரை மதியா துறாமைகள் செய்தும்
ஊடியும் உறைப்பனாய்த் திரிவேன்
முருகமர் சோலை சூழ்திரு முல்லை
வாயிலாய் வாயினால் உன்னைப்
பரவிடும் அடியேன் படுதுயர் களையாய்
பாசுப தாபரஞ் சுடரே. 1

ஊடுதல் – பிணங்குதல்

தேன் பொருந்திய சோலைகள் சூழ்ந்த திருமுல்லை வாயிலில் எழுந்தருளியிருப்பவனே! உயிர்களைக் காப்பவனே! மேலான ஒளியாய் உள்ளவனே! வீட்டின்பமும், அதனைத் தருகின்ற மெய்ப்பொருளும், இம்மையிற் பெறும் செல்வமும் எல்லாம் எனக்கு உனது புகழை யுடைய திருவடிகளே என்று மனத்தால் நினைத்து, பிறர் ஒருவரையும் துணையாக நினையாது, அவர்களைப் பற்றாமைக்கு ஏதுவாகிய செயல்களையே செய்தும், அவர்கள் என்னைப் பற்றவரின், பிணங்கியும் உன்னிடத்து உறைத்த பற்றுடையேனாய்த் திரிவேன்; வாயினாலும் உன்னையே பாடிப் பரவுகின்ற அடியேனாகிய யான் படுகின்ற துன்பத்தை, நீ நீக்கியருளாய்.

699. கூடிய இலயஞ் சதிபிழை யாமைக்
கொடியிடை உமையவள் காண
ஆடிய அழகா அருமறைப் பொருளே
அங்கணா எங்குற்றாய் என்று
தேடிய வானோர் சேர்திரு முல்லை
வாயிலாய் **திருப்புகழ்** விருப்பால்
பாடிய அடியேன் படுதுயர் களையாய்
பாசுப தாபரஞ் சுடரே. 2

இலயம் – சதி – கூத்தின் அங்கங்களாகிய பாகுபாடு.

உன் தேவியாகிய கொடிபோலும் இடையினை யுடைய உமையவள் கண்டு மகிழுமாறு, பல திறங்களும் கூடிய கூத்தினை, தாளவொற்றுப் பிழையாதவாறு ஆடுகின்ற அழகனே! அரிய வேதத்தின் முடிந்த பொருளாய் உள்ளவனே! கருணையாகிய அழகினையுடைய கண்களை யுடையவனே! இறைவனே! நீ எங்குள்ளாய்? என்று தேடிய தேவர்கள், நீ இருக்கும் இடம் அறிந்து வந்து சேர்கின்ற திருமுல்லை வாயிலில் எழுந்தருளியிருப்பவனே! உயிர்களைக் காப்பவனே! மேலான ஒளியாய் உள்ளவனே! உனது திருப்புகழைப் பலவிடங்களிலும் சென்று விருப்பத்தோடே பாடிய அடியேன், மேலும் அங்ஙனமே பாடுதற்கு, யான் படுகின்ற துன்பத்தை நீ நீக்கியருளாய்.

700. விண்பணிந் தேத்தும் வேதியா மாதர்
வெருவிட வேழம்அன் றுரித்தாய்
செண்பகச் சோலை சூழ்திரு முல்லை
வாயிலாய் தேவர்தம் அரசே
தண்பொழில் ஒற்றி மாநக ருடையாய்
சங்கிலிக் காஎன்கண் கொண்ட
பண்பநின் அடியேன் படுதுயர் களையாய்
பாசுப தாபரஞ் சுடரே. 3

விண்ணுலகம் வணங்கித் துதிக்கின்ற அந்தணனே! மனையாள் கண்டு நடுக்கங் கொள்ளுமாறு அன்று யானையை உரித்து, அதன் தோளைப் போர்த்துக் கொண்டவனே! சண்பக மரங்களின் சோலை சூழ்ந்துள்ள திருமுல்லைவாயிலில் எழுந்தருளியிருப்பவனே! தேவர்களுக்குத் தலைவனே! தண்ணிய சோலைகளையுடைய திருவொற்றி மாநகரை உடையவனே, சங்கிலியின் பொருட்டு என் கண்ணைப் பறித்துக் கொண்ட செப்பமுடையவனே, உயிர்களைக் காப்பவனே, மேலான ஒளியாய் உள்ளவனே, உன் அடியேன் படுகின்ற துன்பத்தை நீக்கியருளாய்.

---

701. பொன்னலங் கழனிப் புதுவிரை மருவிப்
பொறிவரி வண்டிசை பாட
அந்நலங் கமலத் தவிசின்மேல் உறங்கும்
அலவன்வந் துலவிட அள்ளற்
செந்நெலங் கழனி சூழ்திரு முல்லை
வாயிலாய் திருப்புகழ் விருப்பால்
**பன்னலந் தமிழாற் பாடுவேற் கருளாய்**
பாசுப தாபரஞ் சுடரே. 4

பொன்போலும் நெல்லைத் தருகின்ற நல்ல அழகிய வயல்களில், புள்ளிகளையும், கீற்றுக்களையும் உடைய வண்டுகள் புதிய நறுமணத்தை நுகர்ந்து இசையைப் பாட, அந்த நல்ல அழகிய தாமரை மலராகிய படுக்கையின்மேல் கிடந்து உறங்குகின்ற நண்டு, அந்த இசை நின்றபொழுது விழித்தெழுந்து வந்து உலாவுகின்ற அத்தன்மையதான சேற்றையுடைய செந்நெல்லையுடைய அழகிய வயல்கள் சூழ்ந்த திருமுல்லை வாயிலில் எழுந்தருளியிருப்பவனே! உயிர்களைக் காப்பவனே! மேலான ஒளியாய் உள்ளவனே! உனது திருப்புகழை விருப்பத்தோடு, பல நலங்களையும் உடைய தமிழால் பாடுவேனாகிய எனக்கு அருள் செய்யாய்.

702. சந்தன வேருங் காரகிற் குறடுந்
தண்மயிற் பீலியுங் கரியின்
தந்தமுந் தரளக் குவைகளும் பவளக்
கொடிகளுஞ் சுமந்துகொண் டுந்தி
வந்திழி பாலி வடகரை முல்லை
வாயிலாய் மாசிலா மணியே
பந்தனை கெடுத்தேன் படுதுயர் களையாய்
பாசுப தாபரஞ் சுடரே. 5

சந்தன மரத்தின் வேரையும், கரிய அகிலினது கட்டையினையும், மென்மையான மயில் இறகினையும், யானையின் தந்தத்தையும், முத்துக் குவியல்களையும், பவளக் கொடிகளையும், மேல் இட்டுக் கொண்டும், பக்கங்களில் தள்ளியும் வந்து பாய்கின்ற பாலியாற்றின் வடகரைக்கண் உள்ள திருமுல்லைவாயிலில் எழுந்தருளியிருப்பவனே! மாசில்லாத மணி போல்பவனே! உயிர்களைக் காப்பவனே! மேலான ஒளியாய் உள்ளவனே! எனது பாவத்தைத் தொலைத்து யான் படுகின்ற துன்பத்தை நீக்கியருளாய்.

703. மற்றுநான் பெற்ற தார்பெற வல்லார்
வள்ளலே கள்ளமே பேசிக்
**குற்றமே செயினுங் குணமெனக் கொள்ளுங்**
கொள்கையான் மிகைபல செய்தேன்
செற்றுமீ தோடுந் திரிபுரம் எரித்த
திருமுல்லை வாயிலாய் அடியேன்
பற்றிலேன் உற்ற படுதுயர் களையாய்
பாசுப தாபரஞ் சுடரே. 6

மாற்றாது வழங்கும் வள்ளலே! வானத்தில் ஓடுகின்ற முப்புரங்களைப் பகைத்து எரித்தவனே! திருமுல்லை வாயிலில் எழுந்தருளியிருப்பவனே! உயிர்களைக் காப்பவனே, மேலான ஒளியாய் உள்ளவனே! யான் பொய்யையே பேசி, குற்றங்களையே செய்தாலும் அவைகளை நீ குணங்களாகவே கொள்ளும் அளவிற்கு உனது பேரருளைப் பெற்றேனாகலின், யான் பெற்ற பேறு, மற்று யார் பெற வல்லார்! அத்திருவருட் சார்பை நினைந்தே யான் குற்றங்கள் பலவற்றைச் செய்தேன்; அது தவறுடைத்தே ஆயினும், அது நோக்கி என்னை நீ கைவிடுவையாயின், அடியேன் வேறொரு துணை இல்லேன்; ஆதலின், அடியேனை அடைந்த துன்பத்தை நீ நீக்கியருளாய்.

செய்த குற்றங்கள் – ‘பித்தன்’ எனப் பலர்முன் இகழ்ந்தது. பொன் வேண்டிய போது ஏச்சுரைகளாகப் பாடியது.

தவநெறி வேண்டியபின் பரவையாரை விரும்பியது.

உனக்கு ஆளல்லேன் என்றது.

| | |
|---|---|
| **704.** மணிகெழு செவ்வாய் வெண்ணகைக் கரிய<br>வார்குழல் மாமயிற் சாயல்<br>அணிகெழு கொங்கை அங்கயற் கண்ணார்<br>அருநடம் ஆடல்அ றாத<br>திணிபொழில் தழுவு திருமுல்லை வாயிற்<br>செல்வனே எல்லியும் பகலும்<br>பணியது செய்வேன் படுதுயர் களையாய்<br>பாசுப தாபரஞ் சுடரே. 7 | அழகு பொருந்திய சிவந்த வாயினையும், வெள்ளிய பற்களையும், கரிய நீண்ட கூந்தலையும், சிறந்த மயில் போலும் சாயலையும், அணிகலங்கள் பொருந்திய கொங்கைகளையும், அழகிய கயல்போலும் கண்களையுமுடைய ஆடல் மகளிர் அரிய நடனங்களை ஆடுதல் நீங்காததும், செறிந்த சோலைகள் சூழ்ந்ததும் ஆகிய திருமுல்லை வாயிலில் எழுந்தருளியிருக்கும் செல்வனே! உயிர்களைக் காப்பவனே! மேலான ஒளியாய் உள்ளவனே! இரவும் பகலும் உனக்குத் தொண்டு செய்வேனாகிய யான் படுகின்ற துன்பத்தை நீக்கியருளாய். |
| **705.** நம்பனே அன்று வெண்ணெய்நல் லூரில்<br>நாயினேன் றன்னைஆட் கொண்ட<br>சம்புவே உம்ப ரார்தொழு தேத்துந்<br>தடங்கடல் நஞ்சுண்ட கண்டா<br>செம்பொன்மா ளிகைசூழ் திருமுல்லை வாயில்<br>தேடியான் திரிதர்வேன் கண்ட<br>பைம்பொனே அடியேன் படுதுயர் களையாய்<br>பாசுப தாபரஞ் சுடரே. 8 | யாவராலும் விரும்பத் தக்கவனே! அன்று திருவெண்ணெய்நல்லூரில் வந்து, நாய் போன்றவனாகிய என்னை ஆட்கொண்ட சம்புவே! வானுலகத்தவர் வணங்கித் துதிக்கின்ற, பெரிய கடலில் உண்டான நஞ்சினை உண்ட கண்டத்தையுடையவனே! உன்னைத் தேடித் திரிவேனாகிய யான், செம்பொன்னால் இயன்ற மாளிகைகள் நிறைந்த திருமுல்லைவாயிலில் கண்ட, பசிய பொன் போல்பவனே! உயிர்களைக் காப்பவனே! மேலான ஒளியாய் உள்ளவனே! அடியேன் படுகின்ற துன்பத்தை நீக்கியருளாய். |
| **706.** மட்டுலா மலர்கொண் டடியினை வணங்கும்<br>மாணிதன் மேல்மதி யாதே<br>கட்டுவான் வந்த காலனை மாளக்<br>காலினால் ஆருயிர் செகுத்த<br>சிட்டனே செல்வத் திருமுல்லை வாயிற்<br>செல்வனே செழுமறை பகர்ந்த<br>பட்டனே அடியேன் படுதுயர் களையாய்<br>பாசுப தாபரஞ் சுடரே. 9 | தேன் பொருந்திய மலர்களைக் கொண்டு உனது திருவடியிணையை வழிபடுகின்ற மாணவன்மேல், அவன் பெருமையை எண்ணாமலே அவனைக் கட்டிப் போதற்கு வந்த இயமனை, அவன் இறக்கும்படி அவனது அரிய உயிரைக் காலால் அழித்த மேலோனே! செல்வத்தையுடைய திருமுல்லை வாயிலில் எழுந்தருளியிருக்கின்ற செல்வனே! சொல்வளமும், பொருள்வளமும் உடைய வேதங்களைச் சொன்ன ஆசிரியனே! உயிர்களைக் காப்பவனே! மேலான ஒளியாய் உள்ளவனே! அடியேன் படுகின்ற துன்பத்தை நீக்கியருளாய். |

| | | |
|---|---|---|
| 707. | சொல்லரும் புகழான் தொண்டைமான் களிற்றைச்<br>சூழ்கொடி முல்லையாற் கட்டிட்<br>டெல்லையில் இன்பம் அவன்பெற வெளிப்பட்<br>டருளிய இறைவனே என்றும்<br>நல்லவர் பரவுந் திருமுல்லை வாயில்<br>நாதனே நரைவிடை ஏறீ<br>பல்கலைப் பொருளே படுதுயர் களையாய்<br>பாசுப தாபரஞ் சுடரே. 10 | சொல்லுதற்கரிய புகழையுடையவனாகிய, தொண்டைமான் என்னும் அரசன், எல்லையில்லாத இன்பமாகிய பேரின்பத்தைப் பெறுமாறு அவனது யானையை, படர்ந்துகிடந்த முல்லைக் கொடியால் தடுத்து, பின்னர் அவனுக்கு வெளிப்பட்டருளிய இறைவனே! எந்நாளும் நல்லவர்கள் போற்றுகின்ற திருமுல்லை வாயிலில் எழுந்தருளியிருக்கின்ற தலைவனே! வெள்ளை விடையை ஏறுபவனே, பல கலைகளின் பொருளாயும் உள்ளவனே! உயிர்களைக் காப்பவனே, மேலான ஒளியாய் உள்ளவனே! அடியேன் படுகின்ற துன்பத்தை நீக்கியருளாய். |
| 708. | விரைதரு மலர்மேல் அயனொடு மாலும்<br>வெருவிட நீண்டஎம் மானைத்<br>திரைதரு புனல்சூழ் **திருமுல்லை வாயிற்**<br>செல்வனை நாவல்ஆ ரூரன்<br>உரைதரு மாலைஓர் அஞ்சினோ டஞ்சும்<br>உள்குளிர்ந் தேத்தவல் லார்கள்<br>நரைதிரை மூப்பும் நடலையும் இன்றி<br>நண்ணுவர் விண்ணவர்க் கரசே. 11 | நறுமணத்தைத் தருகின்ற தாமரை மலர்மேல் இருக்கின்ற பிரமனும், திருமாலும் அச்சங் கொள்ளும்படி, அவர்கள் முன் தீப்பிழம்பாய் நீண்டு நின்றவனாகிய, அலைகளை வீசுகின்ற கடல்நீர் சூழ்ந்த திருமுல்லைவாயிலில் எழுந்தருளியிருக்கின்ற பெருமானை, திருநாவலூரில் தோன்றிய நம்பியாரூரன் பாடிய பாடல்களாகிய பத்தினையும், மனம் குளிர்ந்து பாட வல்லவர்கள், நரையும் திரையும் மூப்பும் சாக்காடும் இன்றி, தேவர்களுக்கு அரசராகும் நிலையை அடைவர். |

## 70. திருவாவடுதுறை

பண் : தக்கேசி

பதிக எண் : 70

| மூர்த்தி | அருள்தரும் ஒப்பிலாமுலையம்மை – உடனமர் அருள்மிகு மாசிலாமணிநாதர் | | |
|---|---|---|---|
| தல இருப்பிடம் | சோழ நாட்டில் காவிரி தென்கரையில் கும்பகோணம் – மயிலாடுதுறை நெடுஞ்சாலையில் கும்பகோணத்திலிருந்து 15 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| தல மரம் | படர்அரசு | | |
| தீர்த்தம் | கோமுக்தி, பத்ம, கைவல்ய தீர்த்தம் | | |
| பாடியவர் | மூவர் | பதிகங்கள் | 8 |

இத்திருப்பதிகம் முழுவதும், "இங்கெனக்கு ஆர் உறவு" என்று பாடியிருத்தல் கருதத்தக்கது.

709. கங்கை வார்சடை யாய்கண நாதா
கால காலனே காமனுக் கனலே
பொங்கு மாகடல் விடமிடற் றானே
பூத நாதனே புண்ணியா புனிதா
செங்கண் மால்விடை யாய்தெளி தேனே
தீர்த்த னேதிரு வாவடு துறையுள்
அங்க ணாஎனை அஞ்சல்என் றருளாய்
ஆர்எ னக்குற வமரர்கள் ஏறே. 1

கங்கையைத் தாங்கிய நீண்ட சடையை உடையவனே! பூத கணங்கட்குத் தலைவனே! காலனுக்குக் காலனே! காமன் உடலுக்கு நெருப்பாகியவனே! அலைமிகுகின்ற பெரிய கடலில் தோன்றிய நஞ்சினை உடைய கண்டத்தை உடையவனே! உயிர்கட்கு முதல்வனே! அறவடிவினனே! தூயோனே! சிவந்த கண்களையுடைய திருமாலாகிய இடபத்தையுடையவனே! தெளிந்த தேன் போல்பவனே! கடவுளே! தேவர்களாகிய விலங்குகட்கு ஆண் சிங்கமாய் உள்ளவனே! திருவாவடுதுறையில் எழுந்தருளியிருக்கின்ற கருணையாளனே! அடியேனுக்கு உறவாவார், உன்னையன்றி வேறு யாவர் உளர்! என்னை, 'அஞ்சேல்' என்று சொல்லித் தேற்றி எனக்கு அருள் செய்யாய்.

710. மண்ணின் மேல்மயங் கிக்கிடப் பேனை
வலிய வந்தெனை ஆண்டுகொண் டானே
கண்ணி லேன்உடம் பில்லடு நோயாற்
கருத்த ழிந்துனக் கேபொறை யானேன்
தெண்ணி லாஎறிக் குஞ்சடை யானே
தேவ னேதிரு வாவடு துறையுள்
அண்ண லேஎனை அஞ்சல்என் றருளாய்
ஆர்எ னக்குற வமரர்கள் ஏறே. 2

நிலவுலகின்கண் மானுட வாழ்க்கையில் மயங்கிக் கிடக்கக் கடவேனாகிய என்முன் நீயே வலிய வந்து என்னை ஆண்டு கொண்டவனே! தெளிவாகிய நிலவொளியை வீசுகின்ற சடையை உடையவனே! இறைவனே! திருவாவடுதுறையில் எழுந்தருளியிருக்கின்ற அண்ணலே! தேவர்களாகிய விலங்குகட்கு ஆண் சிங்கமாய் உள்ளவனே! யான் கண் இல்லேனாயினேன்; அதன்மேலும், உடம்பில் வந்து பற்றி வருத்துகின்ற நோயினால் மனம் வருந்தினமையால், உனக்குத்தான் சுமையாய் விட்டேன்; எனக்கு உறவாவார் உன்னையன்றி வேறு யாவர் உளர்! ஆதலின், என்னை 'அஞ்சேல்' என்று சொல்லித் தேற்றி, எனக்கு அருள்செய்யாய்.

711. ஒப்பி லாமுலை யாள்ஒரு பாகா
உத்தமா மத்தம் ஆர்தரு சடையாய்
முப்பு ரங்களைத் தீவளைத் தங்கே
மூவ ருக்கருள் செய்ய வல்லானே
செப்ப ஆல்நிழற் கீழ்இருந் தருளுஞ்
செல்வ னேதிரு வாவடு துறையுள்
அப்ப னேஎனை அஞ்சல்என் றருளாய்
ஆர்எ னக்குற வமரர்கள் ஏறே. 3

நிகரற்ற தனங்களையுடைய உமையவளை ஒரு பாகத்தில் உடையவனே! மேலானவனே! ஊமத்தம் பூப் பொருந்திய சடையை உடையவனே! முப்புரங்களைத் தீவளையச் செய்து, அப்பொழுதே அவற்றில் இருந்தவர்களுள் மூவருக்கு மட்டில் அருள் செய்ய வல்லவனே! அறத்தைச் சொல்லுதற்கு ஆல் நிழலில் அமர்ந்தருளிய செல்வனே! திருவாவடுதுறையில் எழுந்தருளியிருக்கின்ற என் அப்பனே! தேவர்களாகிய விலங்குகளுக்கு ஆண் சிங்கமாய் உள்ளவனே! எனக்கு உறவாவார் உன்னையன்றி வேறு யாருளர்! என்னை 'அஞ்சேல்' என்று சொல்லித் தேற்றி, எனக்கு அருள் செய்யாய்.

712. கொதியி னால்வரு காளிதன் கோபங்
குறைய ஆடிய கூத்துடை யானே
மதியி லேன்உடம் பில்லடு நோயான்
மயங்கி னேன்மணி யேமண வாளா
விதியி னால்இமை யோர்தொழு தேத்தும்
விகிர்த னேதிரு வாவடு துறையுள்
அதிப னேஎனை அஞ்சல்என் றருளாய்
ஆர்எ னக்குற வமரர்கள் ஏறே. 4

விகிர்தன் – உலகியல்பில் வேறுபட்டவன். கடவுட் பொருள்.

சீற்றத்தொடு வந்த காளியினது கோபம் தணியும்படி அவளோடு எதிர்நின்று ஆடிய நடனத்தை யுடையவனே! மாணிக்கம் போல்பவனே! மணவாளக் கோலத்தினனே! தேவர்கள், முறைப்படி வணங்கித் துதிக்கின்ற இறைவனே! திருவாவடுதுறையில் எழுந்தருளி யிருக்கின்ற தலைவனே! தேவர்களாய விலங்குகட்கு ஆண்சிங்கமாய் உள்ளவனே! அறிவில்லேனாகிய யான் உடம்பில் வந்து வருத்துகின்ற பிணியினால், செய்வது அறியாது மனம் கலங்குகின்றேன்! எனக்கு உறவாவார், உன்னையன்றி வேறு யாவர் உளர்! என்னை, 'அஞ்சேல்' என்று சொல்லித் தேற்றி, எனக்கு அருள் செய்யாய்.

713. வந்த வாள்அரக் கன்வலி தொலைத்து
வாழும் நாள்கொடுத் தாய்வழி முதலே
வெந்த வெண்பொடிப் பூசவல் லானே
வேட னாய்விச யற்கருள் புரிந்த
இந்து சேகர னேஇமை யோர்சீர்
ஈச னேதிரு வாவடு துறையுள்
அந்த ணாஎனை அஞ்சல்என் றருளாய்
ஆர்எ னக்குற வமரர்கள் ஏறே. 5

இராவணனை முன்பு ஒறுத்ததோடு ஒழியாது, பின்பு, அவனுக்கு அருள் செய்ததுபோல இன்று அடியேனை ஒறுத்தொழியாது அருள்பண்ணுதல் வேண்டும் என்றபடி.

உலகமாகிய வழிக்கு முதலானவனே! வெந்ததனால் ஆகிய வெள்ளிய திருநீற்றைப் பூச வல்லவனே! அருச்சுனனுக்கு வேட உருவத்தில் சென்று அருள்செய்த சந்திரசேகரனே! தேவர்களுக்குப் புகழுடைய தலைவனே! திருவாவடுதுறையில் எழுந்தருளியிருக்கின்ற அந்தணனே! தேவர்களாகிய விலங்குகட்கு ஆண் சிங்கமாய் உள்ளவனே! எனக்கு உறவாவார், உன்னையன்றி வேறு யாவர் உளர்! அன்று நீ இருக்கும் இடத்தில் செருக்குக் கொண்டு வந்த கொடிய அரக்கனாகிய இராவணனது வலிமையை அழித்து, பின்பு அவனுக்கு வாழ்நாள் கொடுத்து விடுத்தாய்; இன்று, என்னை, 'அஞ்சேல்' என்று சொல்லித் தேற்றி, எனக்கு அருள் செய்யாய்.

| | | | |
|---|---|---|---|
| 714. | குறைவி லாநிறை வேகுணக் குன்றே<br>கூத்த னேகுழைக் காதுடை யானே<br>உறவி லேன்உனை யன்றிமற் றடியேன்<br>ஒருபி ழைபொறுத் தால்இழி வுண்டே<br>சிறைவண் டார்பொழில் சூழ்திரு வாரூர்ச்<br>செம்பொ னேதிரு வாவடு துறையுள்<br>அறவ னேஎனை அஞ்சல்என் றருளாய்<br>ஆர்எ னக்குற வமரர்கள் ஏறே. | 6 | 'குறை' எனப்படுவது ஒன்றேனும் இல்லாத நிறைவுடையவனே! இறைமைக் குணங்கள் எல்லாவற்றானும் இயன்றதொரு மலை எனத் தக்கவனே! கூத்துடையவனே! குழையணிந்த காதினை யுடையவனே! சிறையையுடைய வண்டுகள் ஒலிக்கின்ற சோலை சூழ்ந்த திருவாரூரில் உள்ள, செம்பொன் போல்பவனே! திருவாவடுதுறையில் எழுந்தருளியிருக்கின்ற அறவடிவினனே! தேவர்களாகிய விலங்குகட்கு ஆண்சிங்கமாய் உள்ளவனே! அடியேனும் உன்னையன்றி உறவினர் ஒருவரையும் உடையேன் அல்லேன்; எனக்கு உறவாவார் உன்னையன்றி வேறு யாவர் உளர்! ஆதலின், யான் செய்த ஒரு குற்றத்தை நீ பொறுத்துக் கொண்டால், உனக்கு வருவதொரு தாழ்வுண்டோ! என்னை, 'அஞ்சேல்' என்று சொல்லித் தேற்றி, எனக்கு அருள் செய்யாய். |
| 715. | வெய்ய மாகரி ஈருரி யானே<br>வேங்கை யாடையி னாய்விதி முதலே<br>மெய்ய னேஅட லாழியன் றரிதான்<br>வேண்ட நீகொடுத் தருள்புரி விகிர்தா<br>செய்ய மேனிய னேதிக ழொளியே<br>செங்க ணாதிரு வாவடு துறையுள்<br>ஐய னேஎனை அஞ்சல்என் றருளாய்<br>ஆர்எ னக்குற வமரர்கள் ஏறே. | 7 | கொடிய, பெரிய யானையினது உரித்த தோலை யுடையவனே! புலித்தோல் ஆடையை உடுத்தவனே! விதிவிலக்குக்களுக்குத் தலைவனே! மெய்ப்பொருளானவனே! அன்று திருமால் வேண்டிக்கொள்ள, வலிமையையுடைய சக்கரத்தை அவனுக்கு அளித்தருளிய இறைவனே! சிவந்த திருமேனியை யுடையவனே! ஒளிகள் எல்லாவற்றினும் மேம்பட்டு விளங்குகின்ற ஒளியாய் உள்ளவனே! நெருப்புக்கண்ணை உடையவனே! திருவாவடுதுறையில் எழுந்தருளியிருக்கின்ற தலைவனே! தேவர்களாகிய விலங்குகட்கு ஆண் சிங்கமாய் உள்ளவனே! எனக்கு உறவாவார் உன்னையன்றி வேறு யாவர் உளர்! என்னை, 'அஞ்சேல்' என்று சொல்லித் தேற்றி, எனக்கு அருள் செய்யாய். |

716. கோதி லாஅமு தே**அருள் பெருகு**
**கோல மே**இமை யோர்தொழு கோவே
பாதி மாதொரு கூறுடை யானே
பசுப தீபர மாபர மேட்டி
தீதி லாமலை யேதிரு வருள்சேர்
சேவ காதிரு வாவடு துறையுள்
ஆதி யேஎனை அஞ்சல்என் றருளாய்
ஆர்எ னக்குற வமரர்கள் ஏறே. 8

கோது – சுவையற்றதாய்க் கழிக்கப்படும் பொருள். இறைவனது திருவேடங்கள் அவனது பேரருளைப் பொழிவனவாகலின் ''அருள்பெருகு கோலமே'' என்றருளினார்.
பரமேட்டி – அப்பாற்பட்டவன். மேலானவன்.
சேவகம் – வீரம்.

கோதில்லாத அமுதம் போல்பவனே! அருள் வெள்ளம் பெருகுகின்ற தோற்றத்தை உடையவனே! தேவர்கள் வணங்குகின்ற தலைவனே! உடம்பின் ஒரு பாதியில் மங்கை ஒருத்தியது ஒரு பங்கினை உடையவனே! உயிர்கட்குத் தலைவனே! மேலானவனே! மேலிடத்தில் இருப்பவனே! நன்மையால் இயன்ற மலைபோல்பவனே! சிறப்புடைய அருள் பொருந்திய வீரனே! திருவாவடுதுறையில் எழுந்தருளியிருக்கின்ற முதற்பொருளானவனே! தேவர்களாகிய விலங்குகட்கு ஆண் சிங்கமாய் உள்ளவனே! எனக்கு உறவாவார், உன்னையன்றி வேறு யாவர் உளர்! என்னை, 'அஞ்சேல்' என்று சொல்லித் தேற்றி, எனக்கு அருள் செய்யாய்.

717. வான நாடனே வழித்துணை மருந்தே
மாசி லாமணி யேமறைப் பொருளே
ஏன மாஎயி றாமையும் எலும்பும்
ஈடு தாங்கிய மார்புடை யானே
தேனெய் பால்தயிர் ஆட்டுகந் தானே
தேவ னேதிரு வாவடு துறையுள்
ஆனை யேஎனை அஞ்சல்என் றருளாய்
ஆர்எ னக்குற வமரர்கள் ஏறே. 9

"எனை அஞ்சல் என்றருளாய் ஆர் எனக்குற வமரர்கள் ஏறே" என்பது பதிக மகுடமாகும்.
வழித்துணை – பிறவிப் பயணத்தில் தனித்துணையாய் உடன் வருபவர்.
மருந்து – உடன் வந்து பிறவிநோய் தீர்ப்பவர்.

ஆகாயமாகிய நாட்டை உடையவனே! செல்லும் வழிக்குத் துணையாகிய அமுதம் போல்பவனே! குற்றமில்லாத மாணிக்கம் போல்பவனே! வேதத்தின் பொருளாய் உள்ளவனே! பன்றியின் பெரிய கொம்பினையும், ஆமை ஓட்டையும், எலும்பையும், இடப்பட்ட அணைகளாகத் தாங்கிய மார்பையுடையவனே! தேன், நெய், பால், தயிர் இவைகளால் மூழ்குவித்தலை விரும்புகின்றவனே! இறைவனே! திருவாவடு துறையில் எழுந்தருளியிருக்கின்ற என் யானை போல்பவனே! தேவர்களாகிய விலங்குகட்கு ஆண் சிங்கமாய் உள்ளவனே! எனக்கு உறவாவார் உன்னையன்றி வேறு யாவர் உளர்! என்னை, 'அஞ்சேல்' என்று சொல்லித் தேற்றி, எனக்கு அருள் செய்யாய்.

718. வெண்ட லைப்பிறை கொன்றையும் அரவும்
வேரி மத்தமும் விரவிமுன் முடித்த
இண்டை மாமலர்ச் செஞ்சடை யானை
ஈச னைத்திரு வாவடு துறையுள்
அண்ட வாணனைச் சிங்கடி யப்பன்
அணுக்க வன்றொண்டன் ஆர்வத்தால் உரைத்த
**தண்ட மிழ்மலர் பத்தும்வல் லார்கள்**
**சாத லும்பிறப் பும்மறுப் பாரே.** 10

வெண்டலை – தாருகாவனத்து முனிவர்கள் விடுத்தது. அதனைச் சிவபெருமான் தம் தலையில் அணிந்து கொண்டார்.
அணுக்கன் – அகம்படித் தொண்டு செய்பவர் – தோழன்.

வெண்டலையோடு பொருந்தும் பிறையையும் கொன்றைமலர் மாலையையும், பாம்பினையும், தேனையுடைய ஊமத்த மலரையும், ஒருங்கு விரவிச் சூடிக்கொண்ட சிறந்த இண்டை மாலையையுடைய, சிவந்த சடைமுடியை யுடையவனும், முதற் கடவுளும், திருவாவடு துறையில் எழுந்தருளியிருக்கின்ற சிவலோக வாணனும் ஆகிய இறைவனை, அவனுக்கு அணுக்கனாய் நிற்கின்ற வன்றொண்டனாகிய, சிங்கடிக்குத் தந்தை, மிக்க அன்போடும் பாடிய இத்தண்ணிய தமிழ்மாலைகளாகிய பாடல்கள் பத்தினையும் பாட வல்லவர்கள், இறத்தலையும் பிறத்தலையும் ஒழித்து, எஞ்ஞான்றும் ஒரு தன்மையராய் வாழ்வார்கள்.

## 71. திருமறைக்காடு

**பண் : காந்தாரம்** **பதிக எண் : 71**

குறிஞ்சிப் பெரும்பண்ணின் இரண்டாவது திறமாகிய காந்தாரத்தின் அகநிலைப் பண்ணாக 41 என்ற எண் பெற்றது. ஏழிசை வரிசையில் மூன்றாவது இசை (சுரம்) காந்தாரம். இப்பெயரையே ஞானசம்பந்தர், "காந்தாரம் இசையமைத்துக் காரிகையார் இசைபாட" என்று திருவையாற்றுத் தேவாரத்தில் பாடுகிறார். இதற்குச் சுவை பெருமிதமும் மருட்கையும், இப்பண்ணை மூவரும் பாடியிருக்கிறார்கள். 'சம்பந்தர் 2.54–82, அப்பர் 4, 2–7, சுந்தரர் 71–75.

இவையன்றித் திருவிசைப்பாவில் திருமாளிகைத்தேவர் கோயில்–4, கருவூர்த்தேவர் திரைலோக்கிய சுந்தரம் ஆகிய இரண்டும் காந்தாரப்பண். இப்பண்ணுக்குரிய யாப்பு விகற்பம் மூன்று. சம்பந்தர் – மந்திரமாவது நீறு பன்னிரு திருப்பெயர் கூறும் பிரமனூர், வேணுபுரம், புகலி. அப்பர் – சுண்ணவெண் சந்தனச் சாந்தும், மாதர்ப் பிறைக்கண்ணி யானை, கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானை ஆகிய சிறப்பான சில பாடல்கள் இப்பண்ணிலுள்ளவை. அப்பர் பாடிய பண்ணுடைய பதிகங்களே 21. அவற்றுள் 7 காந்தாரத்துக்கு என்பது தனிச்சிறப்பு.

சாரங்கதேவர் கூறும் குறிப்பினால் காந்தாரம் தேவகாந்தாரி இராகத்துக்கு இணையாகக் கருதக்கூடும். இப்போது பாடப்பெறுவது நவரோசு.

### காந்தாரப் பண்ணின் இலக்கணம்

கோத்து நிற்கும் கோவை யாப்பில்
யாழ்சீர் அந்தாதி, யாப்பு யாழில்
பண்ணியில் தன்னில் நண்ணிக் காவிந்
தாரு மாகச் சமைவ காந்தாரம்

### பொருள்

இணையும்படி கோத்து நிற்கும் கோவை யாப்பிலும், யாழினை உணர்த்தும் சீரிலும், அந்தம் முதலாகத் தொடங்கும் நிலையிலும், யாப்பாக அமையும் சீரிலும், பண்ணின் இயல்பிலும் நெருங்கி ஒன்றும் பலவுமாக அமைவது காந்தாரப் பண்ணாகும்.

| மூர்த்தி | அருள்தரும் யாழைப்பழித்த மொழியாள் உடனமர் அருள்மிகு வேதாரண்யேசுவரர் | | |
|---|---|---|---|
| தல இருப்பிடம் | சோழநாடு காவிரி தென்கரை நாகப்பட்டினத்திலிருந்து 63 கி.மீ. தொலைவில் அமைந்து உள்ளது. | | |
| தல மரம் | வன்னி, புன்னை | | |
| தீர்த்தம் | மணிகர்ணிகை, வேதாமிர்தகூபம். | | |
| பாடியவர் | மூவர் | பதிகங்கள் | 10 |

719. யாழைப்பழித் தன்னமொழி
மங்கைஒரு பங்கன்
பேழைச்சடை முடிமேற்பிறை
வைத்தான்இடம் பேணில்
தாழைப்பொழி லூடேசென்று
பூழைத்தலை நுழைந்து
வாழைக்கனி கூழைக்குரங்
குண்ணும்மறைக் காடே. 1

யாழின் இசையைப் பழித்த அத்தன்மையை யுடைய சொற்களை உடைய மங்கையை ஒரு பாகத்தில் உடையவனும், பேழை போலும் சடைமுடியில் பிறையைச் சூடினவனும் ஆகிய இறைவனது இடத்தை அறிந்து வழிபட வேண்டின், அது, எளிய குரங்குகள் தாழம் புதரூடே புகுந்து, சிறிய புழைகளில் நுழைந்து, வாழைப்பழத்தைப் பறித்து உண்கின்ற திருமறைக்காடேயாகும்.

பேழை – பெருமை. பூழை – சிறுவாயில்.
கூழை – உயரமில்லாத.

720. சிகரத்திடை இளவெண்பிறை
வைத்தான்இடந் தெரியில்
முகரத்திடை முத்தின்னொளி
பவளத்திர ளோதத்
தகரத்திடை தாழைத்திரள்
ஞாழற்றிரள் நீழல்
மகரத்தொடு சுறவங்கொணர்ந்
தெற்றும்மறைக் காடே. 2

தலையில் இளமையான பிறையைச் சூடின இறைவனது இடத்தை அறிய வேண்டின், சங்கினிடத்தில் தோன்றிய முத்துக்களி னிடையே மறைகின்ற பவளக்கூட்டத்தை உடைய அலைகள், தகர மரங்களின் அடியிலும், தாழைமரம், குங்குமமரம் இவைகளின் நிழலிலும் மகர மீனையும், சுறா மீனையும் கொணர்ந்து எறிகின்ற திருமறைக்காடேயாகும்.

முகரம் – ஒலி. அஃது ஆகுபெயராய்ச் சங்கைக் குறித்தது. தகரம் – மணம். சிகரம் – முடி.
மகரம் – சுறவம் / பெருமீன்.

721. அங்கங்களும் மறைநான்குடன்
விரித்தான்இடம் அறிந்தோம்
தெங்கங்களும் நெடும்பெண்ணையும்
பழம்வீழ்மணற் படப்பைச்
சங்கங்களும் இலங்கிப்பியும்
வலம்புரிகளும் இடறி
வங்கங்களும் உயர்கூம்பொடு
வணங்கும்மறைக் காடே. 3

வேதங்கள் நான்கினோடு, அவற்றின் அங்கங்களையும் விரித்தவனாகிய இறைவனது இடத்தை யாம் அறிந்தோம்; அஃது எதுவெனின், தென்னை மரங்களும், நீண்ட பனை மரங்களும் தம்தம் பழங்கள் விழநிற்கின்ற மணலையுடைய தோட்டத்தில், சங்குகளும், விளங்குகின்ற இப்பிகளும், வலம்புரிச் சங்குகளும் அலைகளால் எறியப்பட, மரக்கலங்களும் உயர்ந்த பாய்மரங்களாகிய கூப்பிய கைகளுடன் வந்து வணங்குகின்ற திருமறைக்காடேயாகும்.

படப்பை – நகர்ப்புறமுள்ள இடம்.
வங்கம் – பாய்க்கப்பல்

722. நரைவிரவிய மயிர்தன்னொடு
பஞ்சவ்வடி மார்பன்
உரைவிரவிய உத்தமன்னிடம்
உணரல்லுறு மனமே
குரைவிரவிய குலைசேகரக்
கொண்டற்றலை விண்ட
வரைபுரைவன திரைபொருதிழிந்
தெற்றும்மறைக் காடே. 4

தேவர்களின் நரைபொருந்திய தலைமயிரால் இயன்ற பஞ்சவடியை அணிந்த மார்பை உடையவனும், அதனால், புகழ் பொருந்திய மேலானவனும் ஆகிய சிவபெருமானது இடம் யாது என்று உணரப் புக்க மனமே, அது, ஒலி பொருந்திய கரைக்கண் உள்ள மாமரத்தினது, மேகங்கள் தவழ்கின்ற தலையில், உடைந்த மலை போல்வனவாகிய அலைகள்மோதி மீள்கின்ற திருமறைக் காடேயாகும்.

பஞ்சவடி – மயிரினால் இயன்ற பூணூல். தேவர்களது நிலையாமைத் தன்மையையும், தனது நிலைத்த தன்மையையும் உணர்த்துதற் பொருட்டே சிவபெருமான் தேவர்களது தலைகளையும், எலும்புகளையும் மாலையாக அணிதலும், அவர்களது தலைமயிரை பஞ்சவடியாகப் பூணுதலும் செய்கிறான். குரை – ஓசை. சேகரம் – உச்சி. கடல் – அலை ஊருக்குள் வராமல் தடுக்க இடும் செய்கரையின் உச்சியின் மேல் மேகங்கள் தவழ்கின்றன என்ற தமிழ்நயத்தைக் காணலாம்.

723. சங்கைப்பட நினையாதொழு
நெஞ்சேதொழு தேத்தக்
கங்கைச்சடை முடியுடையவற்
கிடமாவது பரவை
அங்கைக்கடல் அருமாமணி
உந்திக்கரைக் கேற்ற
வங்கத்தொடு சுறவங்கொணர்ந்
தெற்றும்மறைக் காடே. 5

மனமே, 'கங்கையைத் தாங்கிய சடைமுடியை யுடையவனாகிய சிவபெருமானுக்கு இடமாவது, கடலினது கைகள் ஆகிய அலைகள் அக்கடலின்கண் உள்ள அரிய, சிறந்த மணிகளைத் தள்ளிக்கொண்டு, கரைக்கு ஏற்புடைய மரக்கலத்தோடு சுறா மீனையும் கொணர்ந்து சேர்க்கின்ற திருமறைக் காடேயாகும்' அது பற்றி ஐயமாக நினையாது, அங்குச் சென்று அவனை வணங்கித் துதித்தற்கு ஒருப்படு.

724. அடல்விடை யினன்மழுவா
ளினன்நல்ஆர் அணிகொன்றைப்
படருஞ்சடை முடியுடையவற்
கிடமாவது பரவைக்
கடலிடையிடை கழியருகினிற்
கடிநாறுதண் கைதை
மடலிடையிடை வெண்குருகெழு
மணிநீர்மறைக் காடே. 6

வெற்றியை உடைய இடப ஊர்தியையுடைய வனும், மழுப்படையை உடையவனும், நல்ல ஆத்திமாலையையும் அழகிய கொன்றை மாலையையும் அணிந்த விரிந்த சடைமுடியை யுடைய சிவபெருமானுக்கு இடமாவது, பரந்து கிடத்தலையுடைய கடலின் இடைஇடையும், கழியின் அருகிலும் மணம் வீசுகின்ற தண்ணிய தாழை மடல்களின் இடைஇடையும் வெள்ளிய குருகுகள் மேலெழுந்து பறக்கின்ற, நீலமணிபோலும் கடல் நீரையுடைய திருமறைக் காடேயாகும்.

பரவைக்கடல் – இருபெயரொட்டு
வெண்குருகு – கடற்பறவை வகை. கடி – மணம்.

**725.** முளைவளர் மதியுடையவன்
முன்செய்தவல் வினைகள்
களைகளைந்தெனை யாளல்லுறு
கண்டன்னிடஞ் செந்நெல்
வளைவிளைவயற் கயல்பாய்தரு
குணவார்மணற் கடல்வாய்
வளைவளையொடுசலஞ் சலங்கொணர்ந்
தெற்றும்மறைக் காடே. 7

புதுவதாகத் தோன்றிய, வளர்தற்குரிய, இளமையான பிறையை உடையவனும், யான் முன்னே செய்த வலிய வினைகளை, களை களைந்தாற்போலக் களைந்தெறிந்து என்னை ஆளுதல் பொருந்திய தலைவனுமாகிய சிவபெருமானது இடமாவது, செந்நெற் கதிர்கள் வளைந்து தோன்றுகின்ற, மிக விளையும் வயல்களிடத்துக் கயல் மீன்கள் பாய்வதும், ஒழுகிய மணலையுடைய கீழ்க் கடற்கரைக்கண் அக்கடல், வளைந்த சங்குகளோடு, சலஞ்சலத்தையும் கொணர்ந்து எறிவதும் ஆகிய திருமறைக்காடேயாகும்.

வளை – சங்கு, வளைவளை – வளைவுடன் உட்சுழிந்த பெருஞ்சங்குகள். சலஞ்சலம் – சங்குகளுள் சிறந்தவகை.

**726.** நலம்பெரியன சுரும்பார்ந்தன
நங்கோனிட மறிந்தோம்
கலம்பெரியன சாருங்கடற்
கரைபொருதிழி கங்கைச்
சலம்புரிசடை முடியுடையவற்
கிடமாவது பரவை
வலம்புரியொடு சலஞ்சலங்கொணர்ந்
தெற்றும்மறைக் காடே. 8

கங்கை நீரோடு திரிந்த சடைமுடியை உடையவனாகிய சிவபெருமானுக்கு இடமாய் நிற்பது, நற்பொருள்கள் மிக்கனவும், வண்டுகள் நிறைந்தனவும், பெரியனவுமாகிய மரக்கலங்கள் பொருந்திய கடலினது கரையைமோதி மீள்கின்ற அலைகள், வலம்புரிச் சங்குகளையும், சலஞ்சலச் சங்குகளையும் கொணர்ந்து வீசுகின்ற திருமறைக்காடேயாகும். இதனை அறிந்தோமாகலின், நாம் நம் பெருமானது இடத்தை அறிந்தோமாயினோம்.

கலம் பெரியன சாரும் கடற்கரை – வாணிப மரக்கலங்கள் வந்து போகும் பெரிய துறைமுகப் பட்டினமாய் முன்னாளில் மறைக்காடு விளங்கிற்று. அதனை மீள அவ்வாறாக்குதல் சேது சமுத்திரத் திட்டத்தின் மூலம் நடைபெறுமோ என்பது தெரியவில்லை.
வலம்புரி – சங்குகளின் உயர்ந்த வகை.

**727.** குண்டாடியுஞ் சமணாடியுங்
குற்றுடுக்கையர் தாமும்
கண்டார்கண்ட காரணம்மவை
கருதாதுகை தொழுமின்
எண்டோளினன் முக்கண்ணினன்
ஏழிசையினன் அறுகால்
வண்டாடுதண் பொழில்சூழ்ந்தெழு
மணிநீர்மறைக் காடே. 9

உலகீர்! சிறிய உடையை உடைய சிலர் தாமும், மூர்க்கத் தன்மை பேசியும், சமண சமயக் கொள்கைகளை உரைத்தும் சில பொருள்களை, தம் குறையறிவாற் கண்டார்; எனினும், அவைகளைப் பொருளாக நினையாது, எட்டுத் தோள்களை உடையவனும், மூன்று கண்களை யுடையவனும், ஏழிசைகளையுடையவனும் ஆகிய சிவபெருமானது, ஆறு கால்களை யுடைய வண்டுகள் சூழ்கின்ற குளிர்ந்த சோலைகள் சூழ்ந்த, ஓங்கும் நீலமணிபோலும் கடல் நீரையுடைய திருமறைக்காட்டைக் கைகூப்பித் தொழுமின்கள்.

728. பாரூர்பல புடைசூழ்வள
வயல்நாவலர் வேந்தன்
வாரூர்வன முலையாள்உமை
பங்கன்மறைக் காட்டை
ஆரூரன தமிழ்மாலைகள்
பாடும்மடித் தொண்டர்
நீரூர்தரு நிலனோடுயர்
புகழாகுவர் தாமே. 10

கச்சின்மேல் எழுகின்ற அழகிய தனங்களை யுடையவளாகிய உமாதேவி பங்கினனாகிய சிவபெருமானது திருமறைக்காட்டை, நிலத்தில் உள்ள ஊர்கள் பல சூழ்ந்துள்ளனவாகத் தலைமை பெற்று விளங்கும், வளவிய வயல்கள் சூழ்ந்த திருநாவலூரார்க்குத் தலைவனாகிய நம்பியாரூரனது தமிழ்ப்பாடல்களால் பாடுகின்ற, அப்பெருமானது திருவடித் தொண்டர்கள், நீர் சூழ்ந்த நிலத்தொடு உயர்ந்து விளங்கும் புகழ் மிகப்பெறுவார்கள்.

## 72. திருவலம்புரம்

பண் : காந்தாரம் பதிக எண் : 72

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் வடுவகிர்க்கண்ணி உடனமர் அருள்மிகு வலம்புரநாதர். | | |
| **தல இருப்பிடம்** | சோழநாடு காவிரி தென்கரை (தற்போது மேலப்பெரும்பள்ளம்) மயிலாடுதுறை – பூம்புகார் – அங்கிருந்து 8 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | பனை | | |
| **தீர்த்தம்** | பிரமதீர்த்தம் | | |
| **பாடியவர்** | மூவர் | **பதிகங்கள்** | 4 |

729. எனக்கினித் தினைத்தனைப் புகலிட மறிந்தேன்
பனைக்கனி பழம்படும் பரவையின் கரைமேல்
எனக்கினி யவன்தமர்க் கினியவன் எழுமையும்
மனக்கினி யவன்றன திடம்வலம் புரமே. 1

தினைத்தனையது – சிறியது.

எனக்கு இனியவனும், தனக்கு என்னைப் போலும் அன்பராய் உள்ளார்க்கு இனியவனும், எழு பிறப்பிலும் எங்கள் மனத்துக்கு இனியனாகின்றவனும் ஆகிய இறைவனது இடம், பனை மரத்தின்கண் பழுத்த பழங்கள் வீழ்கின்ற கடலினது கரைக்கண் உள்ள, 'திருவலம்புரம்' என்னும் தலமே. இதனை அறிந்தேனாகலின், எனக்கும் சிறிது புகலிடம் இங்கு உளதாதலை இப்பொழுது யான் அறிந்தேனாயினேன்.

| | | |
|---|---|---|
| 730. | புரமவை எரிதர வளைந்தவில் லினனவன்<br>மரவுரி புலியதள் அரைமிசை மருவினன்<br>அரவுரி நிரந்தயல் இரந்துண விரும்பிநின்<br>றிரவெரி யாடிதன் இடம்வலம் புரமே. 2 | திரிபுரங்கள் எரியுமாறு வளைந்த வில்லை உடையவனும், புதியவனும், மரவுரியையும் புலித் தோலையும் அரையிற் பொருந்தியவனும், பாம்பின் தோல் பொருந்தப்பட்டவனும் இரந்து உண்ண விரும்புபவனும், இரவின்கண் தீயில் நின்று ஆடுபவனும் ஆகிய இறைவனது இடம், 'திருவலம்புரம்' என்னும் தலமே. |
| 731. | நீறணி மேனியன் நெருப்புமிழ் அரவினன்<br>கூறணி கொடுமழு வேந்தியொர் கையினன்<br>ஆறணி அவிர்சடை அழல்வளர் மழலைவெள்<br>ஏறணி அடிகள்தம் இடம்வலம் புரமே. 3 | நீறணிந்த மேனியை யுடையவனும், சினங் காரணமாகக் கண்களால் நெருப்பை உமிழ்கின்ற பாம்பை அணிந்தவனும், பிளத்தலைப் பொருந்திய கொடிய மழுவை ஏந்திய ஒரு கையை உடையவனும், நீரை அணிந்த, ஒளிவிடும் சடையாகிய நெருப்பு வளரப் பெற்றவனும் ஆகிய, இளமையான வெள்ளிய இடபக் கொடியை உயர்த்துள்ள இறைவனது இடம், 'திருவலம்புரம்' என்னும் தலமே. |
| 732. | கொங்கணை சுரும்புண நெருங்கிய குளிரிளந்<br>தெங்கொடு பனைபழும் படும்இடந் தேவர்கள்<br>தங்கிடும் இடந்தடங் கடற்றிரை புடைதர<br>எங்கள தடிகள்நல் லிடம்வலம் புரமே. 4 | மலர்களில் உள்ள தேனை ஆங்கு வந்த வண்டுகள் உண்ண, நெருங்கிய, குளிர்ந்த, இளைய தென்னை மரங்களும், பனை மரங்களும், பழம் விளைகின்ற இடமும், பெரிய கடலினது அலைகள் கரையை மோத, தேவர்கள் தங்கியிருக்கும் இடமும், எங்கள் இறைவனது நல்ல இடமும், 'திருவலம்புரம்' என்னும் தலமே. |
| 733. | கொடுமழு விரகினன் கொலைமலி சிலையினன்<br>நெடுமதில் சிறுமையின் நிரவவல் லவனிடம்<br>படுமணி முத்தமும் பவளமும் மிகச்சுமந்<br>திடுமணல் அடைகரை இடம்வலம் புரமே. 5 | கொடிய மழுவை எடுக்க வல்லவனும், கொலை பொருந்திய வில்லையுடையவனும், மூன்று பெரிய மதில்களை ஓர் இமைப்பொழுதில் பொடியாக்க வல்லவனும் ஆகிய இறைவனது இடம், கடலில் உண்டாகின்ற மாணிக்கங் களையும், முத்துக்களையும், பவளங்களையும் மிகுதியாகத் தாங்கி நிற்கின்ற மணல் பொருந்திய கடற்கரையாகிய இடமும், 'திருவலம்புரம்' எனப்படுவதும் ஆகிய தலமே. |

| | |
|---|---|
| **734.** கருங்கடக் களிற்றுரிக் கடவுள திடங்கயல்<br>நெருங்கிய நெடும்பெணை அடும்பொடு விரவிய<br>மருங்கொடு வலம்புரி சலஞ்சலம் மணம்புணர்ந்<br>திருங்கடல் அடைகரை இடம்வலம் புரமே. **6** | கரிய மதநீரையுடைய யானைத் தோலையுடைய இறைவனது இடம், நெருங்கிய, நீண்ட பனைமரங்கள், கயல் மீன்களோடும், அடும்பங் கொடிகளோடும் கலந்து நிற்கின்ற இடத்தின்கண், வலம்புரிச் சங்குகளும், சலஞ்சலச் சங்குகளும் தம் தம் பெண் சங்குகளோடு மணஞ்செய்து கொள்ளுதலைப் பொருந்தி, பெரிய கடலினின்றும் வருகின்ற கடற்கரையாகிய இடமும், 'திருவலம்புரம்' எனப்படுவதும் ஆகிய தலமே. |
| **735.** நரிபுரி காடரங் காநட மாடுவர்<br>வரிபுரி பாடநின் றாடும்எம் மானிடம்<br>புரிசுரி வரிகுழல் அரிவைஒர் பான்மகிழ்ந்<br>தெரிஎரி யாடிதன் இடம்வலம் புரமே. **7** | நரிகள் விரும்புகின்ற காடே அரங்கமாக நடனம் ஆடுபவனும், யாழ் இசையைப் பாட நின்று ஆடுகின்ற எம்பெருமானும், பின்னிய, சுரிந்த, கட்டிய கூந்தலையுடைய மங்கையை ஒரு பாகத்தில் மகிழ்ந்து வைத்து, எரிகின்ற நெருப்பில் ஆடுபவனும் ஆகிய இறைவனது இடம், 'திருவலம்புரம்' என்னும் தலமே. |
| **736.** பாறணி முடைதலை கலனென மருவிய<br>நீறணி நிமிர்சடை முடியினன் நிலவிய<br>மாறணி வருதிரை வயலணி பொழிலது<br>ஏறுடை யடிகள்தம் இடம்வலம் புரமே. **8** | பருந்தைக்கொண்ட முடைநாற்றம் பொருந்திய தலையை உண்கலமாகப் பொருந்தியவனும், நீற்றை அணிந்தவனும், நீண்ட சடைமுடியை உடையவனும், இடபத்தை உடைய தலைவனும் ஆகிய இறைவனது இடம், விளங்குகின்ற, மாறிமாறியும் கூட்டமாயும் வருகின்ற அலைகளையுடைய கடலையும், வயல்களையும் அழகிய சோலைகளையும் உடையதாகிய, 'திருவலம்புரம்' என்னும் தலமே. |
| **737.** சடசட விடுபெணை பழம்படும் இடவகை<br>படவட கத்தொடு பலிகலந் துலவிய<br>கடைகடை பலிதிரி கபாலிதன் இடமது<br>இடிகரை மணலடை இடம்வலம் புரமே. **9** | தோல் ஆடையை உடுத்துக் கொண்டும், சாம்பலைப் பூசிக்கொண்டும் உலாவு கின்றவனும், இல்லங்களின் வாயில் தோறும் பிச்சைக்குத் திரிகின்ற தலை ஓட்டினை உடையவனும் ஆகிய இறைவனது இடம், 'சடசட' என்னும் ஓசையை வெளிப்படுத்துகின்ற பனைமரங்கள் பழம் பழுக்கின்ற இடங்களின் வகை பலவும் மிகுமாறு, இடிகின்ற கரையை மணல்கள் அடைக்கின்ற இடமும், 'திருவலம்புரம்' எனப்படுவதும் ஆகிய தலமே. |

738. குண்டிகைப் படப்பினில் விடக்கினை யொழித்தவர்
கண்டவர் கண்டடி வீழ்ந்தவர் கனைகழல்
தண்டுடைத் தண்டிதன் இனமுடை அரவுடன்
எண்டிசைக் கொருசுடர் இடம்வலம் புரமே. 10

கரகத்தையுடைய உறியை உடைய சமணர்களது பொய்ம்மையை நன்குணர்ந்தவர்களும், உணர்ந்து தனது திருவடியில் வீழ்ந்து வணங்கியவர்களும் ஒலிக்கின்ற கழலை அணிந்த, தண்டேந்தி நிற்கும் தண்டி முதலிய சிவகணத்தவர்களும் செய்கின்ற, 'அரகர' என்னும் ஓசையுடன், எட்டுத் திசைகட்கும், ஒரு விளக்கம் போல்பவனாகிய இறைவன் எழுந்தருளியிருக்கும் இடம், 'திருவலம்புரம்' என்னும் தலமே.

739. வருங்கல மும்பல பேணுதல் கருங்கடல்
இருங்குலப் பிறப்பர்த மிடம்வலம் புரத்தினை
அருங்குலத் தருந்தமிழ் ஊரன்வன்
றொண்டன்சொல்
பெருங்குலத் தவரொடு பிதற்றுதல் பெருமையே.
11

குலம் – கூட்டம். தவர் – தவத்தையுடையவர்.

கரிய கடலின்கண் வருகின்ற மரக்கலங்கள் பலவற்றையும் பேணுதலுடைய உயர்குடிப் பிறப்பினரது இடமும், 'திருவலம்புரம்' எனப்படுவதுமாகிய தலத்தினை அரிய குலத்தில் தோன்றிய, அரிய தமிழ்ப் பாடலில் வல்ல, வன்றொண்டனாகிய நம்பியாரூரனது சொல்லால் பெரிய குழாமாகிய அடியவரோடும் கூடிநின்று துதித்தல், பெருமையைத் தருவதாம்.

## 73. திருவாரூர்

சுவாமிகள், தில்லையில் கூத்தப்பெருமானை வணங்கியபின் "ஆரூரில் நம்பால் வருக" என்று இறைவன் அருளியது கேட்டுப் பல தலங்களையும் வணங்கிக் கொண்டு திருவாரூர் சென்று அங்கு, ஆரூர்ப்பெருமான் ஆணையின்படி அன்பர்கள் எதிர்கொண்டழைத்துச் செல்லும்பொழுது அவர்களை நோக்கிப் பாடியருளியது இத்திருப்பதிகம். (தி. 12 பெரிய. புரா. தடுத். புரா. 123).

குறிப்பு : இத்திருப்பதிகம், இறைவர் தம்மை ஆண்டு கொண்டருளும்படி வேண்டுமாறு, அடியவரை வேண்டி அருளிச் செய்தது.

**பண் : காந்தாரம்** **பதிக எண் : 73**

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் அல்லியங்கோதை உடனமர் அருள்மிகு புற்றிடங்கொண்டீசர் (வன்மீகநாதர்) | | |
| **தல இருப்பிடம்** | சோழநாட்டில் காவிரியின் தென்கரையில் தஞ்சாவூரிலிருந்து 70 கி.மீ தொலைவில் திருவாரூர் நகர் மையத்தில் அமைந்து உள்ளது. | | |
| **தல மரம்** | பாதிரி | | |
| **தீர்த்தம்** | கமலாலய தீர்த்தம், 5 வேலி பரப்பளவு, 33 ஏக்கர். | | |
| **பாடியவர்** | மூவர் | **பதிகங்கள்** | 33 |

740. கரையுங் கடலும் மலையுங்
காலையும் மாலையும் எல்லாம்
உரையில் விரவி வருவான்
ஒருவன் உருத்திர லோகன்
வரையின் மடமகள் கேள்வன்
வானவர் தானவர்க் கெல்லாம்
அரையன் இருப்பதும் ஆரூர் அவர்
எம்மையும் ஆள்வரோ கேளீர். 1

தொண்டீர்! நிலம், கடல், மலை முதலாய எவ்விடத்திலும், காலை, மாலை முதலிய எப்பொழுதிலும் எம் சொல்லிற் பொருந்தி வருபவனும், ஒப்பற்றவனும், உருத்திர லோகத்தை உடையவனும், மலையின் இளமையான மகளுக்குக் கணவனும், தேவர், அசுரர் முதலிய யாவர்க்கும் தலைவனும் ஆகிய பெருமான் என்றும் எழுந்தருளியிருக்கின்ற இடமும், இத் திருவாரூரே யன்றோ! ஆதலின், அவர் எம்மையும் ஆண்டு கொள்வாரோ? அவரது திருவுள்ளத்தைக் கேட்டறிமின்.

தடுத்தாட் கொள்ளப்பட வேண்டும். அடியார்க்கு அடியாராய் விளங்க வேண்டும் என்ற இரு கொள்கைகளை உடையவர் சுந்தரர். முதல் வேண்டுதல் திருவெண்ணெய்நல்லூரில் நடந்தது. இரண்டாவது வேண்டுகோள் திருக்கூட்டம் இருக்கும் திருவாரூரில் நிகழ வேண்டுமென்ற அவாவில் ஆள்வரோ? கேளிர் என்று வினவுகிறார்.

கரை – மருதநிலத்தையும், முல்லை நிலத்தையும், கல் – நெய்தல் நிலத்தையும், மலை – குறிஞ்சி நிலத்தையும், காலையும் மாலையும் காலவரைகளையும் குறிக்கும்.

எல்லாம் – மேற்கண்டவாறு எல்லா இடங்களிலும், எல்லா வகையாலும் எல்லாக் காலத்தும் பேச்செல்லாம் அவன் புகழேயாம்.

741. தனியன்என் றெள்கி யறியேன்
தன்னைப் பெரிதும் உகப்பன்
முனிபவர் தம்மை முனிவன்
முகம்பல பேசி மொழியேன்
கனிகள் பலவுடைச் சோலைக்
காய்க்குலை ஈன்ற கமுகின்
இனியன் இருப்பதும் ஆரூர் அவர்
எம்மையும் ஆள்வரோ கேளீர். 2

தொண்டீர்! இனிய பொருள்கள் எல்லாவற்றினும் இனியவனாகிய நம் பெருமானை, யான், 'தாயும், தந்தையும், பிற சுற்றத்தவரும் இல்லாத தனியன்' என்று இகழ்ந்தறியேன்; அதற்கு மாறாக அவனையே பெரிதும் விரும்புவேன்; அவனை வெறுப்பவரை வெறுப்பேன்; மனத்தோடன்றி முகத்தான் மட்டும் இனிய பல சொற்களைச் சொல்லேன்; அவன் என்றும் எழுந்தருளியிருக்கின்ற இடமும், கனிகள் பலவற்றையுடைய சோலையின்கண் காயையுடைய குலைகளை ஈன்ற கமுக மரங்களையுடைய திருவாரூரே யன்றோ! ஆதலின், அவர் எம்மையும் ஆண்டு கொள்வாரோ? அவரது திருவுள்ளத்தைக் கேட்டறிமின்.

கேளீர் – நீங்கள் பழ அடியீர்கள். திருவாரூரிலே பிறக்கும் பெருமைத் தவமுடையீர்கள். எனது தகுதியின்மையை நோக்கி இகழாது, உங்கள் உரிமையாலே உங்களது விண்ணப்பத்திற்கு இணங்கி என்னை ஆள்வரோ? அதைப் பழகிய நீங்கள் அவரிடம் கேட்டுச் சொல்லுங்கள் என்கிறார்.

ஆரூரைத் தரிசிக்க வந்த திருஞானசம்பந்தரும் தம்மை எதிர்கொண்ட அடியார்களை நோக்கி உங்கள் இறைவனாகிய "திருவாரூரோன் வருந்தும் போதெனை வாடல் எனுங்கொலோ?" என்று வினவி திருப்பதிகம் பாடி அருளினார். அப்பர் சுவாமிகளும் இவ்வாறே அடியவர்களை வினவி "நமக்குண்டு கொலோ...." ஆரூர் அவிர்சடையான்... தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே என்று பாடியருளினார். அடிமைத்திறத்தின் சிறப்புப் பொருந்திய தலம் திருவாரூர் என்பது இங்கே திருத்தொண்டத்தொகை பாடியருளப் பெற்றமையாலும், தேவர்கள் வணங்கி நிற்கும் தேவாசிரியன் விளங்குகின்றமையாலும் காணப்பெறும். இத்தலத்தே வாழ்வாராம் அடியார்களது சிறப்பாவது இறைவனால் முன்னமே ஆட்கொள்ளப் பெற்று இனியுமோர் பிறப்பில்லாத பக்குவான்மாக்களே இங்கு பிறக்கும் பேறு பெறுகின்றார் என்பதாம். இங்கு பிறப்பிற் செலுத்துகின்றமையால் இறைவன் அவர்களை முத்தியிற் செலுத்துகின்றான் என்பதாம். இதனாலேதான் திருவாரூர் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன் எனப் பாடப்படுகின்றனர். "ஆரூர் பிறக்க முத்தி" என்பது பழமொழி.

742. சொல்லிற் குலாவன்றிச் சொல்லேன்
தொடர்ந்தவர்க் குந்துணை யல்லேன்
கல்லில் வலிய மனத்தேன்
**கற்ற பெரும்புல வாணர்**
**அல்லல் பெரிதும் அறுப்பான்**
அருமறை ஆறங்கம் ஓதும்
எல்லை இருப்பதும் ஆரூர் அவர்
எம்மையும் ஆள்வரோ கேளீர். 3

தொண்டீர்! யான் யாதேனும் ஒன்று சொல்வதாயின், எனது பெருமையன்றி வேறொன்றைச் சொல்லேன், அயலவர்க்கே யன்றி, உறவினர்க்கும் உதவுவேனல்லேன்; அத்துணைக் கல்லினும் வலிய மனத்தை யுடையேன். கல்வியை நிரம்பக் கற்ற பெரிய புலமை வாழ்க்கை உடையவர்களது துன்பத்தைப் பெரிதும் நீக்குகின்றவனும், அரிய வேதங்களும், ஆறு அங்கங்களும் சொல்லும் முடிந்த பொருளானவனும் ஆகிய பெருமான் என்றும் எழுந்தருளியிருக்கின்ற இடமும் இத் திருவாரூரேயன்றோ! ஆதலின், அவர் எம்மையும் ஆண்டு கொள்வாரோ? அவரது திருவுள்ளத்தைக் கேட்டறிமின்.

"அவர் இருப்பதும் ஆரூர் அவர் எம்மையும் ஆள்வரோ கேளீர்" என்பது பதிக மகுடம்.
குலா – பெருமகிழ்ச்சியினையும் அதன் மையப் பாட்டையும், காட்டுவதோர் சொல். "குலாத்தில்லை ஆண்டான்'', ''குலாப்பத்து'' என்று நினைவிற் கொள்ளலாம். எல்லை – மறைகளால் எல்லாப் பொருள்களுக்கும் எல்லையாக – முடிந்த இடமாகக் கூறும் பொருள்.

743. நெறியும் அறிவுஞ் செறிவும்
நீதியும் நான்மிக பொல்லேன்
மிறையுந் தறியும் உகப்பன்
வேண்டிற்றுச் செய்து திரிவேன்
பிறையும் அரவும் புனலும்
பிறங்கிய செஞ்சடை வைத்த
இறைவன் இருப்பதும் ஆரூர் அவர்
எம்மையும் ஆள்வரோ கேளீர். 4

நெறி, அறிவு, செறிவு, நீதி – நம் பால் அமைய வேண்டுவனவாகிய நல்லன. பொல்லேன் – இவைகள் என்பால் அமையாது தீநெறியில் நின்றேன்.
"சீலமின்றி நோன்பின்றிச் செறிவேயின்றி அறிவின்றி" திருவாசகம்.
மிறை – குற்றம். தறி – வெட்டெனப் பேசல்.

தொண்டீர்! யான், ஒழுகும் நெறியிலும், பொருள்களை அறிகின்ற அறிவிலும், பிறரோடு இணங்குகின்ற இணக்கத்திலும், சொல்லுகின்ற நீதியிலும்; மிக்க பொல்லாங்குடையேன்; பிறரை வருத்து தலையும், பிரித்தலையும் விரும்புவேன்; மற்றும் மனம் வேண்டியதனைச் செய்து திரிவேன்; பிறையையும், பாம்பையும், நீரையும் தனது விளக்கமான சிவந்த சடைமேல் வைத்துள்ள இறைவன் என்றும் எழுந்தருளியிருக்கின்ற இடமும் இத்திருவாரூரே யன்றோ! ஆதலின், அவர் எம்மையும் ஆண்டு கொள்வாரோ? அவரது திருவுள்ளத்தைக் கேட்டறிமின்.

744. நீதியில் ஒன்றும் வழுவேன்
நிர்க்கண் டகஞ்செய்து வாழ்வேன்
வேதியர் தம்மை வெகுளேன்
வெகுண்டவர்க் குந்துணை யாகேன்
சோதியிற் சோதிஎம் மானை
சுண்ணவெண் ணீறணிந் திட்ட
ஆதி இருப்பதும் ஆரூர் அவர்
எம்மையும் ஆள்வரோ கேளீர். 5

தொண்டீர்! யான், நீதியினின்றும் சிறிதும் வழுவேன்; அவ்வாறு வழுவுதலை முற்றிலும் களைந்து வாழ்வேன்; அந்தணர்களை வெறுக்க மாட்டேன்; வெறுக்கின்றவர்களுக்கும் துணை செய்பவனாக மாட்டேன். ஒளிக்குள் ஒளியாய் உள்ளவனும், எங்கட்கு யானை போல்பவனும், பொடியாகிய வெள்ளிய நீற்றை அணிந்த முதல்வனும் ஆகிய இறைவன் என்றும் எழுந்தருளியிருக்கின்ற இடமும் இத் திருவாரூரே யன்றோ! ஆதலின், அவர் எம்மையும் ஆண்டுகொள்வாரோ? அவரது திருவுள்ளத்தைக் கேட்டறிமின்.

நிர்க்கண்டகம் – ஒருபாற் கோடாமை. அரையன் – இனியன் – எல்லை – இறைவன் –ஆதி – அருத்தன் – எந்தை – அண்டன் – அமரன் – ஈசன் இருப்பதுவும் இத்திருவாரூர். அவர் எம்மையும் ஆள்வரோ! அவருடன் பழகிய நீங்கள் கேட்டுச் சொல்லுங்கள் என்பதாம் பொருள்.

745. அருத்தம் பெரிதும் உகப்பன்
அலவலை யேன்அலந் தார்கள்
ஒருத்தர்க் குதவியேன் அல்லேன்
உற்றவர்க் குந்துணை யல்லேன்
பொருத்தமேல் ஒன்றும் இலாதேன்
புற்றெடுத் திட்டிடங் கொண்ட
அருத்தன் இருப்பதும் ஆரூர் அவர்
எம்மையும் ஆள்வரோ கேளீர். 6

தொண்டீர்! யான், பொருளையே பெரிதும் விரும்புவேன்; அதன் பொருட்டு எங்கும் திரிதலையுடையேன்; துன்புற்றவர் ஒருவர்க் கேனும் உதவியுடையேனல்லேன்; உறவாயி னார்க்கும் துணைவனல்லேன்; இன்ன பலவாற்றால், பொருந்துவதாய பண்பு எனிலோ, ஒன்றேனும் இல்லாதேனாயினேன். புற்றைப் படைத்து, அதனை இடமாகக் கொண்ட மெய்ப்பொருளாயுள்ளவன், என்றும் எழுந்தருளியிருக்கின்ற இடமும் இத் திருவாரூரே யன்றோ! ஆதலின், அவர் எம்மையும் ஆண்டுகொள்வாரோ? அவரது திருவுள்ளத்தைக் கேட்டறிமின்.

"பிறந்தவர் பிறவாப் பெரும்பதியகத்தும்" என்றார் கல்லாடனார். திருவாரூர் அடியார் பெருமக்கள் முன்னமே இறைவனால் ஆட்கொள்ளப்பெற்ற முத்தான்மாக்களாதலின் மூன்று ஆசாரியப் பெருமக்களும் அடியவர்களை வினவிப் பதிகம் பாடிப் பின்னரே தலத்துட் சென்று ஆண்டானைப் பாடியருளினார் எனக் கொள்ளலாம். அருத்தம் – பொருள். அருத்தன் – கடவுள்.

746. சந்தம் பலஅறுக் கில்லேன்
சார்ந்தவர் தம்மடிச் சாரேன்
முந்திப் பொருவிடை யேறி
மூவுல குந்திரி வானே
கந்தங் கமழ்கொன்றை மாலைக்
கண்ணியன் விண்ணவர் ஏத்தும்
எந்தை இருப்பதும் ஆரூர் அவர்
எம்மையும் ஆள்வரோ கேளீர். 7

தொண்டீர்! யான், வண்ணங்கள் பலவற்றை அமைத்துப் பாடுதல் மாட்டேன்; இறைவனை அடைந்த அடியாரது திருவடிகளை அடைய மாட்டேன்; மணங்கமழ்கின்ற கொன்றை மலரால் ஆகிய மாலையையும், கண்ணியையும் அணிந்தவனும், தேவர்களால் துதிக்கப்படு பவனுமாகிய எம் தந்தை, போர் செய்கின்ற விடையை ஏறி மூவுலகிலும் முற்பட்டுத் திரிபவனேயாயினும், அவன் என்றும் எழுந்தருளியிருக்கின்ற இடமும் இத் திருவாரூரே யன்றோ! ஆதலின், அவர் எம்மையும் ஆண்டு கொள்வாரோ? அவரது, திருவுள்ளத்தைக் கேட்டறிமின்.

சந்தம் – ஆசை.

747. நெண்டிக்கொண் டேயுங்க லாய்ப்பேன்
நிச்சய மேஇது திண்ணம்
மிண்டர்க்கு மிண்டலாற் பேசேன்
மெய்ப்பொரு ளன்றி யுணரேன்
பண்டங் கிலங்கையர் கோனைப்
பருவரைக் கீழடர்த் திட்ட
அண்டன் இருப்பதும் ஆரூர் அவர்
எம்மையும் ஆள்வரோ கேளீர். 8

தொண்டீர்! யான், மெய்ப்பொருளையன்றிப் பொய்ப்பொருளைப் பொருளாக நினையேன்; அதனால், அம்மெய்ப்பொருளை உணர மாட்டாத முருடர்க்கு முருடான சொற்களையன்றிச் சொல்லமாட்டேன்; வலியச் சென்றும் அவர்களோடு வாதிடுவேன்; இஃது எனது துணிபும், தளர்வில்லாத குணமும் ஆகும். முன்பு, இலங்கையர் தலைவனாகிய இராவணனைப் பருத்த கயிலாய மலையின் கீழ் இட்டு நெரித்த கடவுள் என்றும் எழுந்தருளியிருக்கின்ற இடமும் இத் திருவாரூரே யன்றோ! ஆதலின், அவர் எம்மையும் ஆண்டுகொள்வாரோ? அவரது திருவுள்ளத்தைக் கேட்டறிமின்.

நெண்டுதல் – கிளர்தல். மிண்டு – வன்சொல்.
நெண்டிக் கொண்டேயுங்கலாய்ப்பேன் – நெளித்துக் கொண்டேயும் களிப்பேன்.

748. நமர்பிறர் என்ப தறியேன்
நான்கண்ட தேகண்டு வாழ்வேன்
தமரம் பெரிதும் உகப்பேன்
தக்கவா றொன்றுமி லாதேன்
குமரன் திருமால் பிரமன்
கூடிய தேவர் வணங்கும்
அமரன் இருப்பதும் ஆரூர் அவர்
எம்மையும் ஆள்வரோ கேளீர். 9

தொண்டீர்! யான், இவன் நம்மவர் என்பதும், அயலவர் என்பதும் அறியமாட்டேன்; நான் உண்மை என்று கண்டதையே கண்டு பிறர் சொல்வனவற்றை இகழ்ந்து நிற்பேன்; ஆரவாரத்தைப் பெரிதும் விரும்புவேன்; தக்க நெறி ஒன்றேனும் இல்லாதேன். முருகனும், திருமாலும், பிரமனும் ஒருங்கு கூடிய தேவர் பலரும் வணங்கும் தேவன் என்றும் எழுந்தருளி யிருக்கின்ற இடமும் இத் திருவாரூரே யன்றோ! ஆதலின், அவர் எம்மையும் ஆண்டு கொள்வாரோ? அவரது திருவுள்ளத்தைக் கேட்டறிமின்.

தமரம் – ஆரவாரம். அமரன் – அழிவில்லாதவன்.
நமர் – உயிர்க்கு உறுதியாவார்.
பிறர் – அதற்குத் தடையாய் நிற்பார்.

749. ஆசை பலஅறுக் கில்லேன்
ஆரையும் அன்றி யுரைப்பேன்
பேசிற் சழக்கலாற் பேசேன்
பிழைப்புடை யேன்மனந் தன்னால்
ஓசை பெரிதும் உகப்பேன்
ஒலிகடல் நஞ்சமு துண்ட
ஈசன் இருப்பதும் ஆரூர்அவர்
எம்மையும் ஆள்வரோ கேளீர். 10

அன்றி – பகைத்து.
சுழக்கு – பொய்.

தொண்டீர்! எனக்கு உள்ள அவாவோ பல; அவற்றுள் ஒன்றையும் நீக்கமாட்டேன்; அவ்வவா வினால் யாவரிடத்தும் வெகுளி தோன்றதலின், எவரிடத்தும் பகைத்தே பேசுவேன்; ஒன்று சொல்லின், பொய்யல்லது சொல்லேன்; எனினும் புகழை மிக விரும்புவேன்; இவற்றால் மனத்தாலும் குற்றம் புரிதலுடையேன். ஒலிக்கின்ற கடலில் தோன்றிய நஞ்சினை அமுதமாக உண்ட பெருமான் என்றும் எழுந்தருளியிருக்கின்ற இடமும் இத் திருவாரூரே யன்றோ! ஆதலின், அவர் எம்மையும் ஆண்டுகொள்வாரோ? அவரது திருவுள்ளத்தைக் கேட்டறிமின்.

750. எந்தை இருப்பதும் ஆரூர் அவர்
எம்மையும் ஆள்வரோ என்று
சிந்தை செயுந்திறம் வல்லான்
திருமரு வுந்திரள் தோளன்
மந்த முழவம் இயம்பும்
வளவயல் நாவல்ஆ ரூரன்
சந்தம் இசையொடும் வல்லார்
தாம்புகழ் எய்துவர் தாமே. 11

மந்தமுழவம் – மெல்லோசையோடு கூடிய மத்தளம்.

வெற்றித் திருப் பொருந்திய திரண்ட தோள்களையுடையவனும், மெல்லென ஒலிக்கும் மத்தளம் முழங்குவதும், வளவிய வயல்களை யுடையதும் ஆகிய திருநாவலூரில் தோன்றியவனும் ஆகிய நம்பியாரூரன், 'எம் தந்தையாகிய இறைவன் என்றும் எழுந்தருளியிருக்கும் இடமும் இத் திருவாரூரே யன்றோ! ஆதலின், அவர் எம்மையும் ஆண்டு கொள்வாரோ' என்று அடியார்களோடு ஆராயும் திறம் வல்லவனாய்ப் பாடிய இந்த இசைப் பாடல்களை, அவ்விசையொடும் பாட வல்லவர் புகழ் பெறுவர்.

## 74. திருத்துருத்தியும் திருவேள்விக்குடியும்

(எதிர்எதிராகக் காவிரியின் இருகரையில் உள்ள தலங்கள்,
காவிரி தென்கரை துருத்தி எனப்படும் குத்தாலம்)

சுவாமிகள், திருவாவடுதுறையை வணங்கித் திருத்துருத்தியை அடைந்து, "அடியேன் உற்றபிணி வருத்தம் எனை ஒழித்தருள வேண்டும்" என்று வணங்குவாராய்ப் பணிய, "இப்பிணி நீங்க இவ்வட குளத்துக்குளி" என்று பெருமான் கூற, அங்ஙனமே அத்தீர்த்தத்தில் மூழ்கி எழுந்து பிணி நீங்கி ஒளிசேர் திருமேனியராகி மிக்க பேரன்பினால் திருக்கோயிலையடைந்து பாடியருளியது இத்திருப்பதிகம். (தி. 12 ஏயர்கோன். புரா. 300)

குறிப்பு : இத்திருப்பதிகம், தம் உடம்பிற் பிணியைப் போக்கி அருளிய இறைவரது திருவருளின் மிகுதியை நினைந்து களித்து அருளிச் செய்தது.

**பண் : காந்தாரம்** **பதிக எண் : 74**

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | துருத்தி – அருள்தரும் மிருது முகிலாம்பிகை உடனமர் அருள்மிகு உத்தர வேதீசுவரர்.<br>வேள்விக்குடி – அருள்தரும் பரிமளசுகந்தநாயகி உடனமர் அருள்மிகு கல்யாணசுந்தரர் | | |
| **தல இருப்பிடம்** | சோழநாட்டில் காவிரியின் தென்கரையில் துருத்தி, வடகரையில் வேள்விக்குடி மயிலாடுதுறையில் இருந்து 12 கி.மீ. தொலைவில் உள்ளன. | | |
| **தல மரம்** | துருத்தி – ஆத்தி, வேள்விக்குடி – வில்வம் | | |
| **தீர்த்தம்** | துருத்தி – காவிரி, பத்ம, சுந்தர தீர்த்தம்<br>வேள்விக்குடி – மங்கள தீர்த்தம் | | |
| **பாடியவர்** | துருத்தி – மூவர்<br>வேள்விக்குடி – அப்பர், சுந்தரர் | **பதிகங்கள்** | 3<br>2 |

கண்டவர் ளதிசயிப்பக் கரையேறி யுடைபுனைந்து
மண்டுபெருங் காதலினாற் கோயிலினை வந்தடைந்து
தொண்டரெதிர் "மின்னுமா மேக"மெனுஞ் சொற்பதிகம்
எண்டிசையு மறிந்துய்ய வேழிசையா லெடுத்திசைத்தார்.

**பொருள் :** கண்டவர்கள் அதிசயிப்ப – கண்டவர்கள் அதிசயமடையும்படி; கரை ஏறி.... அடைந்து – வடகுளத்தின் கரையினை ஏறி ஈரம்மாற்றி வேறுஆடைபுனைந்து கொண்டு, மிகுந்த பெரிய காதலினாலே திருக்கோயிலினை வந்து சேர்ந்து; தொண்டர் எதிர் – தொண்டர்களுக்கெதிரில்; மின்னுமா மேகம் எனும் சொற் பதிகம். மின்னுமா மேகம் என்று தொடங்கும் சொல் நிறைந்த திருப்பதிகத்தினை; எண் திசையும்... எடுத்திசைத்தார் – எட்டுத் திக்குகளில் உள்ளவர்களும் அறிந்து உய்யும்பொருட்டு ஏழிசைகளும் பொருந்த எடுத்துப் பாடியருளினார்.

**விளக்கவுரை :** கண்டவர்கள் அதிசயிப்ப, மூழ்குமுன் இருந்த நம்பிகளது திருமேனியிற் சார்ந்த பிணிப்பட்ட நிலையினையும், மூழ்கி எழுந்தவுடனே அது நீங்கி மணியொளி சேர் திருமேனியாயின நிலையினையும் நேரிற் கண்ட மக்கள் அந்தோ ஈது ஓர் அதிசயம் கண்டேம் என்று அதிசயம் கொள்ள; "அதிசயங் கண்டாமே" (திருவா).

உடைபுனைந்து – திருமாளிகையினை; வந்து – வடகுளத் தீர்த்தக் கரையினின்றும் கோயிலுக்கு வந்து.

தொண்டர் எதிர் – இப்பதிகம் கோயிலுனுள் இறைவர் திருமுன்பன்றிக் கோயிலில் அங்குக் கூடியிருந்த திருத்தொண்டர்களெதிரே பாடியருளப்பட்டது; "என்னுடம் படும்பிணி யிடர்கெடுத் தானை... நான் மறக்குமாறு என்னை ?" என்று பதிகத்துள் இறைவரைப் படர்க்கை யிடத்து வைத்துக் கூறும் வகையால் இப்பதிகம் தொண்டர்களின்முன் பாடியருளப் பட்ட தென்பது போதரும்; தொண்டர்களைத் தவிர ஏனை உலகர்களை முன்னிலைப்படுத்திப் பேசும் நிலை எந்தம் பெருமக்களிடம் நிகழா தென்பது; உலகரை வழிப்படுத்தி ஆணையிடும் நிலை வேறு.

**எண்டிசையும் அறிந்துய்ய** – "நான் பெற்ற இன்பம் பெறுகவிவ் வையகம்" (திருமா்) என்றபடி இவ்வருட் பெருமையினை அறிந்து உலக முய்யச் செய்தல் பதிகக்குறிப்பாகும். தம்பால் இறைவர் செய்த பேரருளை வியந்து போற்றும் வகையும் ஒரு குறிப்பாம்.

**மின்னுமா மேகம்** – பதிகத் தொடக்கமாகிய முதற் குறிப்பு.

751. மின்னுமா மேகங்கள் பொழிந்திழிந் தருவி
வெடிபடக்கரையொடுந் திரைகொணர்ந்
தெற்றும்
அன்னமாங் காவிரி அகன்கரை யுறைவார்
அடியிணை தொழுதெழும் அன்பராம்
அடியார்
சொன்னவா றறிவார் துருத்தியார் வேள்விக்
குடியுளார் அடிகளைச் செடியனேன் நாயேன்
என்னைநான் மறக்குமா றெம்பெரு மானை
யென்னுடம் படும்பிணி இடர்கெடுத்
தானை. 1

மின்னலை உண்டாக்குகின்ற கரிய மேகங்கள் மழையைப் பொழிந்தபின், அருவிகளாய் ஓசையுண்டாகப் பாய்ந்து அலைகளைக் கொணர்ந்து கரையோடு மோதுவிக்கின்ற, அன்னப் பறவைகள் பொருந்திய காவிரி யாற்றினது, அகன்ற கரையின்கண் பலவிடத்தும் எழுந்தருளியிருப்பவரும், திருத் துருத்தியிலும், திருவேள்விக்குடியிலும், வீற்றிருப்பவராகிய தலைவரும், தமது அடியிணையைத் தொழுது துயிலெழுகின்ற அன்பையுடையவராகிய அடியவர்கள் வேண்டிக் கொண்ட வகைகளை எல்லாம் நன்கு உணர்ந்து அவைகளை முடித்தருளுகின்றவரும், என் உடம்பை வருத்திய பிணியாகிய துன்பத்தைப் போக்கியவரும் ஆகிய எம் பெருமானாரை, குற்றமுடையேனும், நாய்போலும் கடையேனும் ஆகிய யான் மறக்குமாறு யாது!

துருத்தி ஆற்றிடைக் குறையாகலின், இத்திருப்பதிகம் முழுவதும் காவிரியாற்றைப் பெரிதும் அணிந்தோதி அருளினார் என்று கொள்ளலாம்.

இத்திருப்பதிகத்தில் உள்ள திருப்பாடல்கள் இரண்டனுருபால் முடிந்தமையின்,

"அகப்பாட்டு வண்ணம்
முடியாத்தன்மையின் முடிந்ததன் பேற்றே" என்ற தொல்காப்பிய இலக்கணப்படி அகப்பாட்டு வண்ணமாம்.

அடியார் சொன்னவாறு அறிவார் – அடியார்கள் முன்னின்று முறையிடுமவற்றை அறிந்து அருள்புரிபவர். தலத்து இறைவர் பெயரும் சொன்னவாறு அறிவார் என்பதாம்.

இடர்கெடுத்தானை நாயேன் மறக்குமாறு என்னை ? என்று கூட்டிப் படிக்க வேண்டும்.

என்னை – எவ்வாறு ? எங்ஙனம் ?, பிணியிடர் – பிணியாகிய இடர், பிணியால் வரும் இடர்.

752. கூடுமா றுள்ளன கூடியுங் கோத்துங்
கொய்புன ஏனலோ டைவனஞ் சிதறி
மாடுமா கோங்கமே மருதமே பொருது
மலையெனக் குலைகளை மறிக்குமா றுந்தி
ஓடுமா காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளார் அடிகளைச் செடியனேன் நாயேன்
பாடுமா றறிகிலேன் எம்பெரு மானைப்
பழவினை யுள்ளன பற்றறுத் தானை. 2

கூடத் தக்கனவாய் உள்ள ஆறுகளோடு கூடியும், அவை வேறு காணப்படாதவாறு கோத்தும், கொய்யும் பருவத்தை அடைந்த கொல்லைத் தினைக் கதிர்களையும், மலைநெற் கதிர்களையும் சிதறியும், இரு பக்கங்களிலும் கோங்கு, மருது முதலிய மரங்களை முரித்தும், கரைகளை மலை தகர்ந்தாற்போலத் தகருமாறு இடித்தும் ஓடுகின்ற பெரிய காவிரியாற்றினது கரைக்கண் உள்ள திருத்துருத்தியிலும், திருவேள்விக்குடியிலும் உள்ளவராகிய தலைவரும், எனது பழவினைகளாய் உள்ளவற்றை அடியோடு தொலைத்தவரும் ஆகிய எம்பெருமானை, குற்றமுடையேனும், நாய்போலும் கடையேனும் ஆகிய யான், பாடும் வகையை அறிகின்றிலேன்!

கூடுமாறுள்ளன – அங்கங்கு வந்து கூடும் கிளை நதிகளும், வாய்க்கால்களும், வெள்ளத்தால் வந்து சேரும் மற்றைப் பண்டங்களும் என்பது குறிப்பு. மறித்தல் – அழித்தல். ஏனை – தினை. ஐவனம் – மலையரிசி. குறிஞ்சிக் கருப்பொருள்கள்.
மாடு – பக்கம். கோங்கம் – மருதம் – பெருமரங்கள். பொருது – அலைத்துப் பறித்து. குலை – செய்கரை. செடியனேன் – தீயவன். கூடுதல் – அளவாய் நிற்றல். கோத்தல் – மிகப் பெருகுதல். பாடுமாறு அறியாமை – பாட்டினுள் அடங்காமை. இதனை விரிப்பின் அகலும், தொகுப்பின் எஞ்சும் என்பது போலக் கொள்ள வேண்டும்.

753. கொல்லுமால் யானையின் கொம்பொடு வம்பார்
கொழுங்கனிச் செழும்பயன் கொண்டுகூட்
டெய்திப்
புல்கியுந் தாழ்ந்தும்போந் துதவஞ் செய்யும்
போகரும் யோகரும் புலரிவாய் மூழ்கச்
செல்லுமா காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளார் அடிகளைச் செடியனேன் நாயேன்
சொல்லுமா றறிகிலேன் எம்பெரு மானைத்
தொடர்ந்தடுங் கடும்பிணித் தொடர்வறுத்
தானை. 3

கொல்லுகின்ற பெரிய யானையின் தந்தங்களையும், மணம் பொருந்திய கொழுமையான கனிகளாகிய வளவிய பயனையும் வாரிக்கொண்டு, அவற்றின் தொகுதியைப் பொருந்தி வந்து வலம் செய்தும், வணங்கியும் தவம் புரிகின்ற உலகியலாளரும், வீட்டுநெறியாளரும் விடியற்காலையில் வந்து மூழ்குமாறு ஓடுகின்ற பெரிய காவிரி யாற்றினது கரைக்கண் உள்ள திருத் துருத்தியிலும், திருவேள்விக்குடியிலும் வீற்றிருப்பவராகிய தலைவரும், என்னைத் தொடர்ந்து வருத்திய மிக்க பிணியினது தொடர்பை அறுத்தவரும் ஆகிய எம்பெருமானாரை, குற்றமுடையேனும், நாய் போலுங் கடையேனும் ஆகிய யான் புகழுமாற்றை அறிகின்றிலேன்!

வம்பு – நறுமணம்; பழுத்த பழம், நறுமணம் உடைய தாதலை நாம் அறிவோம்.
புல்குதல் – பொருந்துதல் – சூழ்தல்.
புலரி – வைகறை; விடியல்.

754. பொறியுமா சந்தனத் துண்டமோ டகிலும்
பொழிந்திழிந் தருவிகள் புன்புலங் கவரக்
கறியுமா மிளகொடு கதலியும் உந்திக்
கடலுற விளைப்பதே கருதித்தன் கைபோய்
எறியுமா காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளார் அடிகளைச் செடியனேன் நாயேன்
அறியுமா றறிகிலேன் எம்பெரு மானை
அருவினை யுள்ளன ஆசறுத் தானை. 4

அருவிகள், பொரிந்த சந்தனக் கட்டைகளையும், அகிற் கட்டைகளையும் நிரம்பக் கொணர்ந்து குவித்துப் புன்செய் நிலத்தை மூடிக் கொள்ள, பின்பு, கரிக்கப்படும் சிறந்த மிளகுகளையும், வாழைகளையும் தள்ளிக்கொண்டு சென்று கடலில் பொருந்தச் சேர்ப்பதையே கருதிக் கொண்டு, தம் இருமருங்கிலும் சென்று அலை வீசுகின்ற காவிரியாற்றினது கரையின்கண் உள்ள திருத்துருத்தியிலும், திருவேள்விக் குடியிலும் வீற்றிருப்பவராகிய தலைவரும், எனது அரிய வினைகளாய் உள்ள குற்றங்களைப் போக்கினவரும் ஆகிய எம் பெருமானாரை, குற்றமுடையேனும், நாய்போலும் கடையேனுமாகிய யான் அறியும் வகையை அறிகிலேன்!

755. பொழிந்திழி மும்மதக் களிற்றின மருப்பும்
பொன்மலர் வேங்கையின் நன்மலர் உந்தி
இழிந்திழிந் தருவிகள் கடும்புனல் ஈண்டி
எண்டிசை யோர்களும் ஆடவந் திங்கே
சுழிந்திழி காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளார் அடிகளைச் செடியனேன் நாயேன்
ஒழிந்திலேன் பிதற்றுமா றெம்பெரு மானை
உற்றநோய் இற்றையே உறவொழித்
தானை. 5

பொழியப்பட்டுப் பாய்கின்ற மும்மதங்களை யுடைய யானையது தந்தங்களையும், பொன்னைப் போல மலர்கின்ற, வேங்கை மரத்தினது நல்ல மலர்களையும் தள்ளிக் கொண்டு அருவிகள் பலவும் வீழ்தலால் மிக்க நீர் நிரம்பி, எட்டுத் திக்கில் உள்ளவர்களும் வந்து முழுகுமாறு, இவ்விடத்தில் சுழித்துக் கொண்டு பாய்கின்ற காவிரியாற்றினது கரைக்கண் உள்ள திருத்துருத்தியிலும், திரு வேள்விக்குடியிலும் வீற்றிருப்பவராகிய தலைவரும், என்னைப் பற்றிய நோயை இன்றே முற்றும் நீக்கியவரும் ஆகிய எம்பெருமானாரை, குற்றமுடையேனும், நாய்போலும் கடையேனும் ஆகிய யான் பிதற்றுதலை ஒழிந்திலேன்.

இழிந்தழிந்தருவி – பல படியும் பல அருவிகள் வந்து கூடும் குறிப்பு.

சுழிந்திழி – வெள்ளத்தின் வேகத்தினால் நீர்ச்சுழிகளுடன் வழிகின்ற.

பிதற்றுதல் – பலவாறும் போற்றுதல்.

இற்றையே – இன்றைக்கே.

756. புகழுமா சந்தனத் துண்டமோ டகிலும்
பொன்மணி வரன்றியும் நன்மலர் உந்தி
அகழுமா அருங்கரை வளம்படப் பெருகி
ஆடுவார் பாவந்தீர்த் தஞ்சனம் அலம்பித்
திகழுமா காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளார் அடிகளைச் செடியனேன் நாயேன்
இகழுமா றறிகிலேன் எம்பெரு மானை
இழித்தநோய் இம்மையே ஒழிக்கவல்
லானை. 6

வரன்றி – மணலுடன் வாரிக்கொண்டு.

அஞ்சனம் – கரிய அழுக்குகள்; ஆணவ மலத்திற்கும் அஞ்சனம் என்ற பெயருண்டு.

அலம்பி – வலியுண்டாகக் கழுவித் தூய்மையாக்கி.

புகழப்படுகின்ற சிறந்த சந்தனக் கட்டைகளையும், அகிற் கட்டைகளையும், பொன்னும் மணியுமாகிய இவைகளையும் வாரிக் கொண்டும், நல்ல மலர்களைத் தள்ளிக் கொண்டும், தன்னால் அகழப்படுகின்ற, பெரிய, அரிய கரைகள் செல்வம்படுமாறு பெருகி, முழுகுகின்றவர்களது பாவத்தைப் போக்கி, கண்ணில் தீட்டிய மைகளைக் கழுவி நிற்கின்ற காவிரியாற்றினது கரைக்கண் உள்ள திருத்துருத்தியிலும், திருவேள்விக்குடியிலும் வீற்றிருப்பவராகிய தலைவரும், என்னை இழிவடையச் செய்த நோயை இப்பிறப்பில் தானே ஒழிக்க வல்லவரும் ஆகிய எம் பெருமானாரை, குற்றம் உடையேனும், நாய் போலும் கடையேனும் ஆகிய யான், இகழுமாற்றை நினையமாட்டேன்!

757. வரையின்மாங் கனியொடு வாழையின் கனியும்
வருடியும் வணக்கியும் மராமரம் பொருதும்
கரையுமா கருங்கடல் காண்பதே கருத்தாய்க்
காம்பீலி சுமந்தொளிர் நித்திலங் கைபோய்
விரையுமா காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளார் அடிகளைச் செடியனேன் நாயேன்
உரையுமா றறிகிலேன் எம்பெரு மானை
**உலகறி பழவினை** அறவொழித்
தானை. 7

காம்பீலி – மூங்கில்; கவரி மயிர்.

உலகறி பழவினை – கயிலையில் மாதர் மேல் மனம் போக்கியது.

அது திருவெண்ணெய்நல்லூரில் அனைவரும் அறிய வெளிப்படுத்தப்பட்டதாகலின் உலகறிந்த தாயிற்று. இந்நோய் வினைப்பயன் என்று உலகம் புற அடையாளத்தாற் கண்டு கூறும்படி தோற்றமுடைய வினை விளைவு.

அளவில்லாத மாம்பழங்களையும், வாழைப் பழங்களையும் வீழ்த்தியும், கிளைகளோடு சாய்த்தும், மராமரத்தை முரித்தும், கரைகள் அரிக்கப்படுகின்ற கரிய கடலைக் காண்பதையே கருத்தாகக் கொண்டு, மூங்கில்களையும் மயில் தோகைகளையும் சுமந்து, ஒளி விளங்குகின்ற முத்துக்கள் இரு பக்கங்களும் தெறிக்க விரைய ஓடுகின்ற பெரிய காவிரியாற்றினது கரைக்கண் உள்ள திருத்துருத்தியிலும், திருவேள்விக்குடியிலும் வீற்றிருப்பவராகிய தலைவரும், எனது, உலகறிந்த பழவினைகளை முற்றிலும் நீக்கினவரும் ஆகிய எம் பெருமானாரை, குற்றமுடையேனும், நாய்போலும் கடையேனும் ஆகிய யான் துதிக்குமாற்றை அறிகின்றிலேன்!

758. ஊருமா தேசமே மனமுகந் துள்ளிப்
புள்ளினம் பலபடிந் தொண்கரை உகளக்
காருமா கருங்கடல் காண்பதே கருத்தாய்க்
கவரிமா மயிர்சுமந் தொண்பளிங் கிடறித்
தேருமா காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளார் அடிகளைச் செடியனேன் நாயேன்
ஆருமா றறிகிலேன் எம்பெரு மானை
அம்மைநோய் இம்மையே ஆசறுத்
தானை. 8

உகள – பாய; துள்ள.
தேர்தல் – தெளிதல்.
ஆருமாறு – நிறைய நுகரம் வகை.

அணியவான ஊர்களில் உள்ளவர்களும், பெரிதாகிய நாடு முழுதும் உள்ளவர்களும், மனம் விரும்பி நினைக்குமாறு, பறவைக் கூட்டங்கள் பல மூழ்கி எழுந்து, அழகிய கரைக்கண் உள்ள திருத்துருத்தியிலும், திருவேள்விக் குடியிலும் திரிய, நிர் நிறைந்த, பெரிய, கரிய கடலைக் காண்பதையே கருத்தாகக் கொண்டு கவரி மானினது சிறந்த மயிரைச் சுமந்து, ஒளியையுடைய பளிங்குக் கற்களை உடைத்து, நானிலங்களில் உள்ள, பொருள்களையும் கண்டு செல்கின்ற பெரிய காவிரியாற்றினது கரைக்கண் உள்ள திருத் துருத்தியிலும், திருவேள்விக்குடியிலும் வீற்றிருப்பவராகிய தலைவரும், எனக்கு வரும் பிறப்பில் வரக்கடவதாகிய துன்பமாகிய குற்றத்தை இப்பிறப்பிற்றானே களைந்தொழித்த வரும் ஆகிய எம்பெருமானாரை, குற்றமுடையேனும், நாய் போலும் கடையேனும் ஆகிய யான், துய்க்குமாற்றை அறிகின்றிலேன்!

759. புலங்களை வளம்படப் போக்கறப் பெருகிப்
பொன்களே சுமந்தெங்கும் பூசல்செய் தார்ப்ப
இலங்குமா முத்தினோ டினமணி இடறி
இருகரைப் பெருமரம் பீழ்ந்துகொண்
டெற்றிக்
கலங்குமா காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளார் அடிகளைச் செடியனேன் நாயேன்
விலங்குமா றறிகிலேன் எம்பெரு மானை
மேலைநோய் இம்மையே வீடுவித்
தானை. 9

பீழ்ந்து – வேருடன் பறித்து.
விலங்குமாறு – நினையாது ஒழிந்து.

வயல்கள் வளம்படவும், அதனால் எல்லாக் குற்றங்களும் நீங்கவும், நீர்பெருகி பொற்கட்டிகளைச் சுமந்துகொண்டு, ஒளி விளங்குகின்ற சிறந்த முத்துக்களையும், மற்றும் பலவகை மணிகளையும் எறிந்து, இருகரை களிலும் உள்ள பெரிய மரங்களை முரித்து ஈர்த்துக் கரையைத் தாக்கி, எவ்விடத்தில் உள்ளவர்களும் ஆரவாரம் செய்து ஒலிக்க, கலங்கி ஓடுகின்ற காவிரியாற்றினது கரைக்கண் உள்ள திருத்துருத்தியிலும், திருவேள்விக்குடியிலும் வீற்றிருப்பவராகிய தலைவரும், எனக்கு வரும் பிறப்பில் வரக் கடவதாகிய துன்பமாகிய குற்றத்தை இப்பிறப்பிற்றானே நீக்கியவரும் ஆகிய எம் பெருமானாரை, குற்றமுடையேனும், நாய் போலும் கடையேனும் ஆகிய யான் நீங்குமாற்றை எண்ணேன்!

760. மங்கையோர் கூறுகந் தேறுகந் தேறி
மாறலார் திரிபுரம் நீறெழச் செற்ற
அங்கையான் கழலடி யன்றிமற் றறியான்
**அடியவர்க் கடியவன் தொழுவன் ஆரூரன்**
கங்கையார் காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளார் அடிகளைச் சேர்த்திய பாடல்
தங்கையால் தொழுதும் நாவின்மேற் கொள்வார்
தவநெறி சென்றமர் உலகம்ஆள்
பவரே. 10

மாறலார் – பகைவர். தொழுவன் – அடித்தொண்டன்.

மங்கை ஒருத்தியை ஒருபாகத்தில் விரும்பி வைத்தும், இடபத்தை விரும்பி ஊர்ந்தும் நிற்கின்ற, பகைத்தலையுடையவரது முப்புரங்களை நீறுபட அழித்த அகங்கையை உடையவனது கழலணிந்த திருவடிகளையன்றி வேறொன்றை அறியாதவனாகியும், அவன் அடியார்க்கு அடியவனாகியும் அவனுக்கு அடியவனாகிய நம்பியாரூரன், கங்கை போலப் பொருந்திய காவிரி யாற்றினது கரைக்கண் உள்ள திருத்துருத்தியிலும், திருவேள்விக் குடியிலும் வீற்றிருக்கின்ற தலைவருக்குச் சேர்ப்பித்த இப்பாடல்களைத், தங்கள் கையால் தொழுது, தங்கள் நாவிற் கொள்பவர்கள், தவநெறிக் கண் சென்று, பின்னர்ச் சிவலோகத்தை ஆள்பவராதல் திண்ணம்.

## 75. திருவானைக்கா

சுவாமிகள், திருமழபாடியீசரைத் தொழுது, பொன்னிக் கரையின் இருமருங்கும் உள்ள தலங்களைச் சென்று வணங்குங்கால், திருவானைக்காவை யணைந்து பெருமானைத் தொழுது பாடியருளியது இத்திருப்பதிகம். (தி. 12 ஏயர்கோன். புரா. 75) இத்திருப்பதிகத்தில், மணியாரம் பொன்னியில் வழுவிப் போயதற்கு வருந்திய உரையூர்ச் சோழனது வருத்தம் நீங்க, அம்மணியாரத்தைத் திருமஞ்சனக்குடத்துள் புகச் செய்து பெருமான் அணிந்துகொண்ட திறத்தை வியந்து அருளிச் செய்தது அறியத்தக்கது.

குறிப்பு : இத்திருப்பதிகம், இறைவரிடத்தெழுந்த அன்பின் மிகுதியால், 'அவர்க்குத் தொண்டுபடுவார், எமக்கும் தலைவராவார்' என்று அடியவர் பலருங் கேட்க அருளிச் செய்தது. ஒருவருக்கு இறைவரிடத்து உள்ள அன்பின் அளவு, அவர் அடியவரிடத்து உண்டாகும் அன்பின் அளவானே அறியப்படும்' என்பதனை, "ஈசனுக்கன்பில்லார் அடியவர்க்கன்பில்லார்" (சிவஞான சித்தி. சூ. 12–2) என எதிர்மறை முகத்தான் உணர்த்தப்பட்ட உண்மைக்கு அனுபவம், இத்திருப்பதிகத்துள் வெளியாதல் அறிக. இதனானே இத்திருப்பதிகத்தை, "நிறையுங் காதலுடன் எடுத்த திருப்பதிகம்" என்று அருளினார் சேக்கிழார். (தி. 12 ஏயர்கோன். புரா. 75)

பண் : காந்தாரம் பதிக எண் : 75

| மூர்த்தி | அருள்தரும் அகிலாண்டநாயகி உடனமர் அருள்மிகு ஐம்புகேசுவரர். | | |
|---|---|---|---|
| தல இருப்பிடம் | திருச்சி – திருவரங்கம் பாதையில் காவிரிக்கும் கொள்ளிடத்துக்கும் இடையில் அமைந்து உள்ளது. | | |
| தல மரம் | வெண்நாவல் | | |
| தீர்த்தம் | இந்திர, பிரமபுட்கரிணி தீர்த்தங்கள் | | |
| பாடியவர் | மூவர் | பதிகங்கள் | 7 |

761. மறைக ளாயின நான்கும்
மற்றுள பொருள்களும் எல்லாத்
துறையும் தோத்திரத் திறையும்
தொன்மையும் நன்மையும் ஆய
அறையும் பூம்புனல் ஆனைக்
காவுடை ஆதியை நாளும்
இறைவன் என்றடி சேர்வார்
எம்மையும் ஆளுடை யாரே. 1

இறையும், தொன்மையும், நன்மையும் ஆகிய ஆதி என்று கூட்டிப் படிக்க வேண்டும். தோத்திரத்து இறை – தோத்திரங்களுக்கெல்லாம் நுதலிய பொருளாகிய முதல்வன்.

வேதங்கள் நான்கும் மற்றைய பொருள்களும், பல சமயங்களும், அவற்றில் புகழ்ந்து சொல்லப்படும் கடவுள்களும், இவை அனைத்திற்கும் முன்னேயுள்ள முதற்பொருளும், வீடுபேறும் என்கின்ற இவை எல்லாமாய் நிற்கின்ற, ஒலிக்கும் அழகிய நீரையுடைய திருவானைக்காவைத் தனதாக உடைய முதல்வனை, 'இவனே முதல்வன்' என்று அறிந்து, நாள்தோறும் அடிபணிகின்றவர், எம்மையும் அடிமைகொண்டு ஆளுதலுடையவ ராவர்.

762. வங்கம் மேவிய வேலை
நஞ்செழ வஞ்சர்கள் கூடித்
தங்கள் மேல்அட ராமை
உண்ணென உண்டிருள் கண்டன்
அங்கம் ஓதிய ஆனைக்
காவுடை ஆதியை நாளும்
எங்கள் ஈசன்என் பார்கள்
எம்மையும் ஆளுடை யாரே. 2

வங்கம் – கப்பல். வஞ்சகர்கள் – தேவர்கள் – தாங்கள் இறவாமை பொருட்டு இறைவனுக்கு நஞ்சூட்டத் துணிந்தமை பற்றித் தேவரை வஞ்சர்கள் என்றார். அடராமை – வருந்தாதபடி.

மரக்கலம் பொருந்திய கடலின்கண் நஞ்சு தோன்ற, தங்கள்மேல் வந்து தாக்காது தடுத்துக் கொள்ளுதற் பொருட்டுச் சூழ்ச்சி செய்த தேவர்கள் ஒருங்கு கூடிச்சென்று 'இந் நஞ்சினை உண்டருளாய்' என்று வேண்டிக் கொள்ள அவ்வேண்டுகோளை மறவாது ஏற்று உண்டு, அதனால், கறுத்த கண்டத்தை உடையவனாகியவனும், வேதத்திற்கு உரிய துணை நூல்களைச் செய்தவனும் ஆகிய, திருவானைக்காவைத் தனதாக உடைய முதல்வனை, 'இவனே எங்களுக்குத் தலைவன்' என்று நாள்தோறும் அன்பு செய்கின்றவர். எம்மையும் அடிமை கொண்டு ஆளுதலுடையவ ராவர்.

763. நீல வண்டறை கொன்றை
நேரிழை மங்கை ஓர்திங்கள்
சால வாள்அர வங்கள்
தங்கிய செஞ்சடை எந்தை
ஆல நீழலுள் ஆனைக்
காவுடை ஆதியை நாளும்
ஏலு மாறுவல் லார்கள்
எம்மையும் ஆளுடை யாரே. 3

"எம்மையும் ஆளுடையாரே" என்பது பதிக மகுடம். நேரிழை – கங்கை. ஏலுமாறு – பொருந்திய வகையால்.

நீல நிறத்தையுடைய வண்டுகள் ஒலிக்கின்ற கொன்றை மலரும், நுண்தொழில் அமைந்த அணிகளை அணிந்த மங்கை ஒருத்தியும், பிறை ஒன்றும், பல கொடிய பாம்புகளும் தங்கியிருக்கின்ற சிவந்த சடையையுடைய எம் தந்தையும், ஆல் நிழலில் இருப்பவனும் ஆகிய, திருவானைக்காவைத் தனதாக உடைய முதல்வனை, நாள்தோறும் அவன் தம்மொடு பொருந்தும் செயலினைச் செய்ய வல்லவர், எம்மையும் அடிமை கொண்டு ஆளுதலுடையவ ராவர்.

764. தந்தை தாய்உல குக்கோர்
தத்துவன் மெய்த்தவத் தோர்க்குப்
பந்த மாயின பெருமான்
பரிசுடை யவர்திரு வடிகள்
அந்தண் பூம்புனல் ஆனைக்
காவுடை ஆதியை நாளும்
எந்தை என்றடி சேர்வார்
எம்மையும் ஆளுடை யாரே. 4

பந்தம் – தொடர்பு. தன்னின் நீங்காது பிணிப்பவன்.

உலகம் எல்லாவற்றிற்கும் தந்தையாய், ஒப்பற்ற மெய்ப்பொருளாய் உள்ளவனும், உண்மையான தவத்தைச் செய்வோர்க்கு உறவான பெருமானும், அன்புடையவர்க்குச் சிறந்த தலைவனும் ஆகிய, அழகிய, குளிர்ந்த பூக்களையுடைய, நீரையுடைய திருவானைக்காவைத் தனதாக உடைய முதல்வனை, 'இவனே எம் தந்தை' என்று அறிந்து, நாள்தோறும் அடிபணிகின்றவர், எம்மையும் அடிமைகொண்டு ஆளுதலுடையவ ராவர்.

765. கணைசெந் தீஅர வம்நாண்
கல்வளை யுஞ்சிலை யாகத்
துணைசெ யும்மதில் மூன்றுஞ்
சுட்டவ னேயுல குய்ய
அணையும் பூம்புனல் ஆனைக்
காவுடை ஆதியை நாளும்
இணைகொள் சேவடி சேர்வார்
எம்மையும் ஆளுடை யாரே. 5

பொருந்திய உலகம் உய்தற்பொருட்டு, சிவந்த நெருப்பு அம்பாகியும், பாம்பு நாணியாகியும், மலை வளைகின்ற வில்லாகியும் நிற்க, ஒன்றற்கொன்று துணை செய்கின்ற மதில்கள் மூன்றையும் எரித்தவனாகிய, எங்கும் சென்று சேர்கின்ற அழகிய நீரையுடைய திருவானைக்காவைத் தனதாக உடைய முதல்வனை, நாள்தோறும் அவனது இரண்டு செவ்விய திருவடிக்கண் பணிகின்றவர், எம்மையும் அடிமைகொண்டு ஆளுதலுடையவராவர்.

766. விண்ணின் மாமதி சூடி
விலையிலி கலனணி விமலன்
பண்ணின் நேர்மொழி மங்கை
பங்கினன் பசுவுகந் தேறி
அண்ண லாகிய ஆனைக்
காவுடை ஆதியை நாளும்
எண்ணு மாறுவல் லார்கள்
எம்மையும் ஆளுடை யாரே. 6

விலையிலி – விலை அளவுபடாத.
கலன் – எலும்பு, பாம்பு, தலை இவற்றையே அணிகலனாகக் கொண்டது.

விண்ணில் உள்ள சிறந்த பிறையைக் கண்ணியாகச் சூடி, விலைப்படும் தன்மை இல்லாத அணிகலங்களை அணிகின்ற தூயவனும், பண்ணினை ஒத்த சொல்லை உடைய மங்கையது பங்கை உடையவனும், ஆனேற்றை விரும்பி ஏறுபவனும், யாவர்க்கும் தலைவனும் ஆகிய, திருவானைக்காவைத் தனதாக உடைய முதல்வனை, நாள்தோறும் நினையுமாற்றினை வல்லவர், எம்மையும் அடிமை கொண்டு ஆளுதலுடையராவர்.

767. தார மாகிய பொன்னித்
தண்டுறை ஆடி விழுத்து
நீரில் நின்றடி போற்றி
நின்மலா கொள்ளென ஆங்கே
ஆரங் கொண்டஎம் ஆனைக்
காவுடை ஆதியை நாளும்
ஈரம் உள்ளவர் நாளும்
எம்மையும் ஆளுடை யாரே. 7

தாரம் – தாரகம் – தாங்குவது.

சோழன் ஒருவன், பல பண்டங்களும் உளவாதற்கு ஏதுவாகிய காவிரியின் குளிர்ந்த துறையில் மூழ்கித் தனது முத்து வடத்தை வீழ்த்தி, வீழ்த்திய வருத்தத்தால் கரைஏறாது நீரிற்றானே நின்று, தனது திருவடியைத் துதித்து, 'இறைவனே, எனது முத்து மாலையை ஏற்றுக்கொள்' என்று வேண்ட, அங்ஙனமே அவ்வாரத்தைத் திருமஞ்சனக் குடத்துட் புகச்செய்து ஏற்றுக்கொண்ட திருவானைக் காவைத் தனதாக உடைய முதல்வனுக்கு நாள்தோறும் அன்பு உடையவராய் இருப்பவர், நாள்தோறும் எம்மையும் அடிமை கொண்டு ஆளுதலுடையவராவர்.

768. உரவம் உள்ளதொர் உழையின்
உரிபுலி யதள்உடை யானை
விரைகொள் கொன்றையி னானை
விரிசடை மேற்பிறை யானை
அரவம் வீக்கிய ஆனைக்
காவுடை ஆதியை நாளும்
**இரவும் எல்லையும் ஏத்து**
**வார்எம்மை ஆளுடை யாரே.** 8

வலிமையுள்ள மானினது தோல், புலியினது தோல் இவைகளையுடையவனும், நறுமணத்தைக் கொண்ட கொன்றைமலர் மாலையை அணிந்தவனும், விரிந்த சடையின் மேல் பிறையை உடையவனும், பாம்பை உடம்பிற் பல இடங்களிலும் கட்டியுள்ளவனும் ஆகிய, திருவானைக்காவைத் தனதாக உடைய முதல்வனை, நாள்தோறும், இரவிலும், பகலிலும் துதிப்பவர் எம்மையும் அடிமை கொண்டு ஆளுதலுடையவராவர்.

769. வலங்கொள் வாரவர் தங்கள்
வல்வினை தீர்க்கு மருந்து
கலங்கக் காலனைக் காலாற்
காமனைக் கண்சிவப் பானை
அலங்கல் நீர்பொரும் ஆனைக்
காவுடை ஆதியை நாளும்
இலங்கு சேவடி சேர்வார்
எம்மையும் ஆளுடை யாரே. 9

காலனைக் காலால் கலங்கச் செய்வானை என்றும் காமனைக் கலங்கக் கண் சிவப்பானை என்றும் உரைக்க வேண்டும். கலங்க என்பதை ஈரிடத்தும் கூட்ட வேண்டும். காலனும், காமனும் உயிர் போய்ப் பின் உயிர்ப்பிக்கப் பெற்றனர்.

அலங்கல் – அழகு. பொரும் – அலைத்து வரும்.

தன்னை வலம் செய்கின்றவர்களது வலிய வினையாகிய நோயைத் தீர்க்கின்ற மருந்தாய் உள்ளவனும், கூற்றுவனைக் காலாலும், காமனைக் கண்ணாலும் அவர்கள் கலங்கி அழியுமாறு வெகுண்டவனும் ஆகிய, அசைகின்ற நீர் கரையை மோதுகின்ற திருவானைக்காவைத் தனதாக உடைய முதல்வனை, நாள்தோறும் அவனது விளங்குகின்ற, செவ்விய திருவடியில் பணிகின்றவர், எம்மையும் அடிமைகொண்டு ஆளுதலுடையவராவர்.

770. ஆழி யாற்கருள் ஆனைக்
காவுடை ஆதிபொன் னடியின்
நீழ லேசர ணாக
நின்றருள் கூர நினைந்து
வாழ வல்லவன் றொண்டன்
வண்டமிழ் மாலைவல் லார்போய்
ஏழு மாபிறப் பற்று
எம்மையும் ஆளுடை யாரே. 10

சக்கரத்தை ஏந்தியவனாகிய திருமாலுக்கு அருள்புரிந்த, திருவானைக்காவைத் தனதாக உடைய முதல்வனது பொன் போலும் திருவடி நிழலையே நினைந்து வாழவல்ல வன்றொண்டனாகிய நம்பியாரூரனது வளவிய இத்தமிழ்ப் பாடல்களைப் பாட வல்லவர், எழுவகைப்பட்ட அளவில்லாத பிறப்புக்களும் நீங்கப் பெற்று, மேலே சென்று, எம்மையும் அடிமைகொண்டு ஆளுதலுடையவராவர்.

## 76. திருவாஞ்சியம்

பண் : பியந்தைக் காந்தாரம் பதிக எண் : 76

இது மருதப் பெரும்பண்ணின் நான்காவது திறமாகிய செய்திறத்தினை அகநிலைப் பண். 81 என்னும் எண்ணுக்குரியது. இதற்குரிய சுவை மருட்கை சமநிலை என்று சொல்லப்படும். இது காலைப் பண்களில் ஒன்று. இதற்கு இராகம், ஹெஜ்ஜுஜ்ஜி என்றும் இச்சிச்சி என்றும் சொல்லப்படும். ஆனால் நவரோசில் பாடப்படுகிறது. இதில் பதிகம் 2 : 83 – 96, அப்பர் ஒரே பதிகம், 8 சுந்தரர் ஒரே பதிகம், 76 ஆக 16 பதிகங்கள். சம்பந்தருடைய கோளறு திருப்பதிகம் – வேயுறு தோளிபங்கன், எந்தை யீசன் எம்பெருமான், அப்பர் சிவனெனும் ஓசையல்லது அறையோ உலகில் ஆகியவை பண் சிறப்புடைய பதிகங்கள். பியந்தை என்று சொல்லப்படுவதும் பியந்தைக் காந்தாரமும் ஒன்றென்றே கருதப்படுகிறது.

### இப்பண்ணின் (இலக்கணம்)

கோவை கொள்ள கோத்தும் யாத்தும்
தரவு கொண்டும் தண்பூ நறும்பூ
ஏய்ந்ததாக வாய்ந்த இயற்கை
தருநற் காவும் தாரும் தோன்றலாற்
பூயேய்ந் துள்ள பியைந்தை என்றிக்
காந்தா ரப்பெயர் காட்டப் பெற்றது.

### பொருள்

சீர்கள் கோவை கொள்ளுமாறு அவற்றைக் கோத்தும், யாப்பாகிய சீரால் யாப்புறுத்தியும், ஆசிரியத் தரவு கொள்ளுமாறு அமைத்தும், தண்பூச்சீரும், நறும்பூச்சீரும் இயையும் வண்ணம் அமைந்த இயல்பியல் காவும், தாரும் தோன்றும் படி பூயேய்ந்துள்ள பியந்தை என்று காந்தாரப் பண்ணானது காட்டப் பெற்றது.

| **மூர்த்தி** | அருள்தரும் வாழவந்த நாயகி உடனமர் அருள்மிகு வாஞ்சியநாதர் | | |
|---|---|---|---|
| **தல இருப்பிடம்** | சோழநாட்டில் காவிரியின் தென்கரையில் திருவாரூர் – மயிலாடுதுறை நெடுஞ்சாலையில் சன்னா நல்லூரிலிருந்து 3 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | சந்தனம் | | |
| **தீர்த்தம்** | குப்தகங்கை | | |
| **பாடியவர்** | மூவர் | **பதிகங்கள்** | 3 |

771. பொருவ னார்புரி நூலர்
புணர்முலை உமையவ ளோடு
மருவ னார்மரு வார்பால்
வருவதும் இல்லைநம் மடிகள்
திருவ னார்பணிந் தேத்துந்
திகழ்திரு வாஞ்சியத் துறையும்
ஒருவனார் அடி யாரை
ஊழ்வினை நலியஒட் டாரே. 1

நம் இறைவர், தீயவரோடு மாறுபடுபவர்; முப்புரி நூலை அணிபவர்; நெருங்கிய தனங்களை யுடைய உமையோடு கூடியிருத்தலை உடையவர்; தம்மை அடையாதவரிடத்தில் வருவதும் இல்லை; திருமகளை உடைய திருமால் வணங்கித் துதிக்கின்ற, புகழால் விளங்குகின்ற திருவாஞ்சியத்தில் எழுந்தருளி யிருக்கும், ஒப்பற்றவராகிய அவர், தம் அடியவரை ஊழ்வினை வந்து நலிய ஒட்டாது ஒரு தலையாகக் காப்பர்.

772. தொறுவில் ஆன்இள ஏறு
துண்ணென இடிகுரல் வெருவிச்
செறுவில் வாளைகள் ஓடச்
செங்கயல் பங்கயத் தொதுங்கக்
கறுவி லாமனத் தார்கள்
காண்தகு வாஞ்சியத் தடிகள்
மறுவி லாதவெண் ணீறு
பூசுதல் மன்னும்ஒன் றுடைத்தே. 2

பசுக் கூட்டத்துள், இளைய ஆனேறு, கேட்டவர் மனம் துண்ணென்று வெருவுமாறு ஒலிக்கின்ற குரலுக்கு அஞ்சி, வயல்களில் உள்ள வாளை மீன்கள் ஓடவும், செவ்வரிகளையுடைய கயல் மீன்கள் தாமரைப் பூக்களில் ஒளியவும், பகை யில்லாத மனத்தை உடைய சான்றோர் அவற்றைக்கண்டு இரங்குதல் பொருந்திய திருவாஞ்சியத்தில் எழுந்தருளியிருக்கும் இறைவர், குற்றமற்ற வெள்ளிய நீற்றைப் பூசுதல், சிறந்ததொரு கருத்தை உடையது.

773. தூர்த்தர் மூவெயில் எய்து
சுடுநுனைப் பகழிய தொன்றால்
பார்த்த னார்திரள் தோள்மேற்
பல்நுனைப் பகழிகள் பாய்ச்சித்
தீர்த்த மாமலர்ப் பொய்கைத்
திகழ்திரு வாஞ்சியத் தடிகள்
சாத்து மாமணிக் கச்சங்
கொருதலை பலதலை யுடைத்தே. 3

தீர்த்தமாகிய, சிறந்த, பூக்களையுடைய பொய்கைகளையுடைய, புகழால் விளங்குகின்ற திருவாஞ்சியத்தில் எழுந்தருளியிருக்கும் இறைவர், நெறி பிறழ்ந்தவரது மூன்று மதில்களை, சுடுகின்ற முனையையுடைய ஓர் அம்பினால் அழித்து, ஒருவனாகிய அருச்சுனனது திரண்ட தோள்மீது பல கூரிய அம்புகளை அழுத்தி, தாம் கட்டுகின்ற பெரிய மாணிக்கத்தை உடைய கச்சு, ஒரு பக்கத்திலே பல தலைகளையுடையதாய் இருக்கின்றது; இது வியப்பு!

புத்தன் போதனையால் சிவநெறியை இகழ்ந்து ஒதுக்கியவர்களாதலின் திரிபுரத்தவரைத் தூர்த்தர் என்று அருளினார். பொருந்தாத செயல்களை நயம்படக் கூறுகிறார்.

| | | | |
|---|---|---|---|
| 774. | சள்ளை வெள்ளையங் குருகு<br>தானது வாமெனக் கருதி<br>வள்ளை வெண்மலர் அஞ்சி<br>மறுகிஹர் வாளையின் வாயில்<br>துள்ளு தெள்ளுநீர்ப் பொய்கைத்<br>துறைமல்கு வாஞ்சியத் தடிகள்<br>வெள்ளை நுண்பொடிப் பூசும்<br>விகிர்தம்ஒன் றொழிகிலர் தாமே. | 4 | 'சள்ளை' என்னும் மீன், வள்ளைக் கொடியின் வெண்மையான மலரை, வெண்மையான குருகு என்று கருதி அஞ்சிச் சுழன்று, பின், வாளை மீனின் வாயிலே சென்று துள்ளுகின்ற, தெளி வாகிய நீரையுடைய பொய்கைத் துறைகள் நிறைந்த திருவாஞ்சியத்தில் எழுந்தருளி யிருக்கும் இறைவர், வெள்ளிய, நுண்ணிய சாம்பலைப் பூசுகின்ற வேறுபாடொன்றனை எஞ்ஞான்றும் ஒழியாதே உடையர். |
| 775. | மைகொள் கண்டர்எண் தோளர்<br>மலைமக ளுடனுறை வாழ்க்கைக்<br>கொய்த கூவிள மாலை<br>குலவிய சடைமுடிக் குழகர்<br>கைதை நெய்தலங் கழனி<br>கமழ்புகழ் வாஞ்சியத் தடிகள்<br>பைதல் வெண்பிறை யோடு<br>பாம்புடன் வைப்பது பரிசே. | 5 | கருமை நிறத்தைக் கொண்ட கண்டத்தையும், எட்டுத் தோள்களையும், மலைமகளோடு உடன் உறைகின்ற வாழ்க்கையையும் பறிக்கப்பட்ட கூவிளை இலையால் ஆகிய மாலை விளங்குகின்ற சடைமுடியையும் உடைய அழகராகிய, நெய்தற் பூக்களையுடைய அழகிய கழனிகளில், தாழம்பூக்கள் மணம் வீசுகின்ற, புகழையுடைய திருவாஞ்சியத்தில் எழுந்தருளி யிருக்கும் இறைவர்க்கு, இளைய வெண் பிறையோடு பாம்பைச் சேர்த்து அணிவது தான் இயல்பு. |
| 776. | கரந்தை கூவிள மாலை<br>கடிமலர்க் கொன்றையுஞ் சூடிப்<br>பரந்த பாரிடஞ் சூழ<br>வருவர்நம் பரமர்தம் பரிசால்<br>திருந்து மாடங்கள் நீடு<br>திகழ்தரு வாஞ்சியத் துறையும்<br>மருந்த னார்அடி யாரை<br>வல்வினை நலியஒட் டாரே. | 6 | தம் இயல்பு காரணமாக, கரந்தைப் பூவினாலும், கூவிள இலையாலும், மணம் பொருந்திய கொன்றை மலராலும் ஆகிய மாலைகளைச் சூடிக்கொண்டு, மிக்க பூதகணங்கள் புடைசூழ வருபவரும், நம் இறைவரும் ஆகிய, திருத்தமான மாடங்கள் உயர்ந்து தோன்றுகின்ற, புகழால் விளங்குகின்ற திருவாஞ்சியத்தில் எழுந்தருளி இருக்கும் அமுதம் போல்பவர், தம் அடியாரை, வலிய வினைகள் வந்து துன்புறுத்த ஒட்டாது காப்பவரேயாவர். |
| 777. | அருவி பாய்தரு கழனி<br>அலர்தரு குவளையங் கண்ணார்<br>குருவி யாய்கிளி சேர்ப்பக்<br>குருகினம் இரிதரு கிடங்கில்<br>பருவ ரால்குதி கொள்ளும்<br>பைம்பொழில் வாஞ்சியத் துறையும்<br>இருவ ரால்அறி யொண்ணா<br>இறைவன தறைகழல் சரணே. | 7 | மலர்ந்த குவளைப் பூப்போலும் கண்களையுடைய மகளிர், நீர்த்திரள் பாய்கின்ற கழனிகளில் கதிர்களை ஆராய்கின்ற குருவிகளையும், கிளிகளையும் அங்கு நின்றும் நீங்கிச் சென்று சேரப் பண்ணுகையால், குருகுகளின் கூட்டம் அஞ்சி நீங்குகின்ற கால்வாய்களில் பருத்த வரால் மீன்கள் துள்ளுகின்ற, பசிய சோலைகள் சூழ்ந்த திருவாஞ்சியத்தில் எழுந்தருளி யிருக்கும், 'மால், அயன்' என்பார்க்கு அறிய ஒண்ணாத இறைவரது, ஒலிக்கின்ற கழலணிந்த திருவடிகளே நமக்குப் புகலிடம். |

| | | |
|---|---|---|
| 778. | களங்க ளார்தரு கழனி<br>அளிதரக் களிதரு வண்டு<br>உளங்க ளார்கலிப் பாடல்<br>உம்பரில் ஒலித்திடுங் காட்சி<br>குளங்க ளால்நிழற் கீழ்நற்<br>குயில்பயில் வாஞ்சியத் தடிகள்<br>விளங்கு தாமரைப் பாதம்<br>நினைப்பவர் வினைநலி விலரே. 8 | ஏர்க்களம் நிறைதற்கு ஏதுவாகிய வயல்கள் அன்பைத் தர, அதனால் மகிழ்வுற்ற வண்டுகள், கேட்போர் உள்ளம் இன்பம் நிறைதற்குரிய ஆரவாரமான இசை, மேற்சென்று ஒலிக்கின்ற கேள்வியை, குளக்கரைகளில் உள்ள ஆல மரத்தின் கீழ்க்கிளையில் இருந்து நல்ல குயில்கள் பழகுகின்ற திருவாஞ்சியத்தில் எழுந்தருளியிருக்கும் இறைவரது, ஒளி வீசுகின்ற, தாமரை மலர்போலும் திருவடிகளை நினைப்பவர் வினையால் துன்புறுத்தப்படுதல் இலராவர். |
| 779. | வாழை யின்கனி தானும்<br>மதுவிம்மு வருக்கையின் சுளையும்<br>கூழை வானரந் தம்மிற்<br>கூறிது சிறிதெனக் குழறித்<br>தாழை வாழையந் தண்டாற்<br>செருச்செய்து தருக்குவாஞ் சியத்துள்<br>ஏழை பாகனை யல்லால்<br>இறையெனக் கருதுதல் இலமே. 9 | வாழைப் பழங்களையும், சாறு மிக்கொழுகு கின்ற பலாப் பழத்தின் சுளைகளையும், 'எனக்கு வைத்த இப் பங்கு சிறிது' என்று இகழ்ந்து, அறிவு குறைந்த குரங்குகள் தமக்குள் கலாய்த்து, தாழை மட்டையும், வாழை மட்டையு மாகிய கோல்களால் போர்செய்து செருக்குக் கொள்கின்ற திருவாஞ்சியத்தில் எழுந்தருளி யிருக்கும் மங்கை பங்காளனை யல்லது வேறொருவரை, யாம், 'கடவுள்' என்று நினைத்தல் இலம். |
| 780. | செந்நெ லங்கலங் கழனித்<br>திகழ்திரு வாஞ்சியத் துறையு<br>மின்ன லங்கலஞ் சடையெம்<br>மிறைவன தறைகழல் பரவும்<br>பொன்ன லங்கல்நன் மாடப்<br>பொழிலணி நாவல்ஆ ரூரன்<br>பன்ன லங்கனன் மாலை<br>பாடுமின் பத்தரு ளீரே. 10 | செந்நெற்களையுடைய அழகிய மரக்கலம் போலும் கழனிகளையுடைய புகழால் விளங்குகின்ற திருவாஞ்சியத்தில் எழுந்தருளி யிருக்கும், இனிய மாலைகளையணிந்த சடையையுடைய எம் இறைவனது, ஒலிக்கின்ற கழலையணிந்த திருவடிகளைத் துதித்த, பொன்னரி மாலைகள் தூக்கப்பட்ட நல்ல மாடங்களையுடைய, சோலைகளையுடைய திருநாவலூரில் தோன்றிய நம்பியாரூரனது, பல அழகுகளையுடைய, கற்கத் தகுந்த நல்ல பாமாலையை, அடியராய் உள்ளவர்களே! பாடுமின்கள். |

## 77. திருவையாறு

**பண் : காந்தார பஞ்சமம்** **பதிக எண் : 77**

சுவாமிகள், சேரமான் பெருமாள் நாயனாருடன் மலைநாட்டுக்குச் செல்லும் பொழுது, திருக்கண்டியூர் வணங்கி வெளியே வரும் பொழுது திருவையாறு எதிர்தோன்ற, சேரமான் பெருமாள் நாயனார் அங்குச் சென்று இறைவரைப் பணிய வேண்டுமென்று கூறுதலும் ஓடம் முதலியவை செல்லாதபடி காவிரியில் பெருவெள்ளம் சென்றதைக் கண்டு பாடியருளியது. இத்திருப்பதிகம் ஒவ்வொரு பாடல் இறுதியிலும், "ஐயாறுடைய அடிகேளோ" என்று அழைத்துப் பாடியிருத்தல் காணலாம். (தி. 12 கழறிற். புரா. 134)

| **மூர்த்தி** | அருள்தரும் அறம் வளர்த்த நாயகி உடனமர் அருள்மிகு ஐயாறப்பர் | | |
|---|---|---|---|
| **தல இருப்பிடம்** | சோழநாட்டில் காவிரியின் வடகரையில் தஞ்சாவூரிலிருந்து 10 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | வில்வம் | | |
| **தீர்த்தம்** | காவிரி, சூரியபுட்கரிணி | | |
| **பாடியவர்** | மூவர் | **பதிகங்கள்** | 18 |

781. பரவும் பரிசொன் றறியேன்நான்
பண்டே உம்மைப் பயிலாதேன்
இரவும் பகலும் நினைந்தாலும்
எய்த நினைய மாட்டேன்நான்
கரவில் அருவி கமுகுண்ணத்
தெங்கங் குலைக்கீழ்க் கருப்பாலை
அரவந் திரைக்கா விரிக்கோட்டத்
தையா றுடைய அடிகேளோ!

இரவும் பகலும் நினைதல் – இடையறாத சிவ யோக நிலை. பரவும் பரிசு – உன்னைத் துதிக்கும் வகை. பண்டே உம்மைப் பயிலாதேன் – முன்காலம் தொட்டே உம்மோடு பழகி உம்முடைய தன்மையைத் தெரிந்து கொள்ளாதவன்.

எய்த நினையமாட்டேன் – நான் இருவகைப் பற்றுகளையும் விட்டு உன்னோடு கலக்க நினைக்க மாட்டேன்.

பொய்யாது வருகின்ற காவிரி நீர்ப்பெருக்குக் கமுகங் குலையை விழுங்க, தென்னை மரங்களின் குலைக்கீழ் உள்ள கரும்பாலைகளின் ஓசையோடே கூடி ஒலிக்கின்ற அலைகளை யுடைய காவிரியாற்றங் கரைக்கண் உள்ள திருவையாற்றை உமதாக உடைய அடிகேள்! யான் உம்மைத் துதிக்கும் முறையை இயற்கையில் சிறிதும் அறியாதேன் ஆகலின், முன்னமே உம்பால் வந்து வழிபடாதொழிந்தேன்; இரவும் பகலும் உம்மையே நினைவேன்; என்றாலும், அழுந்த நினையமாட்டேன்; அடிகேள் ஓலம்!



திருவையாறு : காவிரி ஆறு வழி விலகல்

782. எங்கே போவே னாயிடினும்
அங்கே வந்தென் மனத்தீராய்ச்
சங்கை யொன்று மின்றியே
**தலைநாள் கடைநா ளொக்கவே**
கங்கை சடைமேற் கரந்தானே
கலைமான் மறியுங் கனல்மழுவும்
தங்குந் திரைக்கா விரிக்கோட்டத்
தையா றுடைய அடிகேளோ! 2

அடியேன் எங்கே செல்வேனாயினும், முதல் நாளும் இறுதி நாளும் ஒரு பெற்றியவாக, சிறிதும் ஐயம் இன்றி, அங்கே வந்து என் மனத்தில் இருப்பீராய், சடைமேற் கங்கையும், கையில் மானின் ஆண் கன்றும், சுடுகின்ற மழுவுமாய்த் தங்குகின்ற, அலைகளையுடைய, காவிரியாற்றங்கரைக் கண் உள்ள திருவையாற்றை உமதாக உடைய அடிகேள் ஓலம்!

சுந்தரரை சுவாமிகள் பலவாறு பலமுறை பாடுவித்தலை "மழபாடி வர மறந்தனையோ" – தி. 12. ஏயர்கோன் புராணம் 72.

"கூடலையாற்றூர் ஏறச்சென்றது இவ்வழிதான்" – தி. 12. ஏயர்கோன் 102.

"ஆரூரில் வருக நம்பால்" – தி. 12. தடுத். புராணம் – 108

"நம்மைச் சொற்றமிழில் பாடுக" – தி. 12. தடுத். புராணம் – 70.

"இன்னும் பல்லாறு உலகினில் நம் புகழ்பாடு" தி. 12, தடுத். புராணம் – 76 என்ற நிகழ்வுகள் மூலம் படித்து மகிழலாம். யாருக்கும் இவ்வளவு வாய்ப்புகள் இம்மாதிரி கிடைத்ததில்லை.

தலைநாள் – தொடக்கம். கடைநாள் – இறுதிநாள். சங்கை – அச்சம்.

783. மருவிப் பிரிய மாட்டேன் நான்
வழிநின் றொழிந்தேன் ஒழிகிலேன்
பருவி விச்சி மலைச்சாரற்
பட்டை கொண்டு பகடாடிக்
குருவி யோப்பிக் கிளிகடிவார்
குழல்மேல் மாலை கொண்டோட்டம்
தரவந் திரைக்கா விரிக்கோட்டத்
தையா றுடைய அடிகேளோ! 3

மருவி – உம்மோடு கூடி.

வழிநின்று ஒழிந்தேன் – ஒழிகிலேன் – திருவருள் வழி நின்று ஒழுகலானேன். அதனின்று விலகமாட்டேன்.

நீர், பரந்து பெருகி தினை விதைக்கப்பட்ட மலைச்சாரலில் பல பிரிவுகளாய்க் காணப்பட்டு, யானைகளைப் புரட்டி, புனங்களில் குருவிகளையும் கிளிகளையும் ஓட்டித் தினையைக் காக்கும் மகளிரது கூந்தல்மேல் அணிந்த மாலைகளை ஈர்த்துக் கொண்டு ஓடுதலைச் செய்தலால் அழகிய அலைகளை உடைத்தாய் நிற்கும், காவிரிக் கரைக்கண் உள்ள திருவையாற்றை உமதாக உடைய அடிகேள்! யான், சிலர்போல, உறுவது சீர் தூக்கி, உற்றவழிக் கூடி, உறாதவழிப் பிரியமாட்டேன்; என்றும் உம் வழியிலே நின்றுவிட்டேன்; இனி ஒருகாலும் இந்நிலையினின்றும் நீங்கேன்; ஓலம்!

784. பழகா நின்று பணிசெய்வார்
பெற்ற பயனொன் றறிகிலேன்
இகழா துமக்காட் பட்டோர்க்கு
வேக படமொன் றரைச்சாத்திக்
குழகா வாழைக் குலைதெங்கு
கொணர்ந்து கரைமேல் எறியவே
அழகார் திரைக்கா விரிக்கோட்டத்
தையா றுடைய அடிகேளோ! 4

"உமக்குப் பணி செய்வோர் பயன் கருதாதே செய்வர் யானும் அவ்வாறே செய்கின்றேன்" என்றபடி.

குழகு – அழகு. வேகபடம் – சீறும் பாம்பு.

வாழைக் குலைகளையும், தென்னங் குலைகளையும் அழகாகக் கொணர்ந்து கரைமேல் எறிதலால் அழகு நிறைந்துள்ள அலைகளையுடைய, காவிரி யாற்றங்கரைக் கண் உள்ள திருவையாற்றை உமதாக உடைய அடிகேள்! உமக்கு அடிமைப்பட்டவர் முன்னே, நீர் ஒற்றை ஆடையையே அரையில் பொருந்த உடுத்து நிற்றலால், உம்மை அணுகிநின்று உமக்குப் பணி செய்பவர், அதனால்பெற்ற பயன் ஒன்றையும் யான் அறிகின்றிலேன்; ஓலம்!

785. பிழைத்த பிழையொன் றறியேன்நான்
பிழையைத் தீரப் பணியாயே
மழைக்கண் நல்லார் குடைந்தாட
மலையும் நிலனுங் கொள்ளாமைக்
கழைக்கொள் பிரசங் கலந்தெங்குங்
கழனி மண்டிக் கையேறி
அழைக்குந் திரைக்கா விரிக்கோட்டத்
தையா றுடைய அடிகேளோ! 5

கழைக்கொள் பிரசம் – கருப்பஞ்சாறு என்றும் கொள்ளலாம்.

மேகம் போலும் கரிய கண்களையுடைய அழகியராகிய மகளிர் நீரில் மூழ்கி விளையாட, மலையும் நிலமும் இடம் கொள்ளாதபடி பெருகி, மூங்கிலிடத்துப் பொருந்திய தேன் பொருந்தப் பெற்று, வயல்களில் எல்லாம் நிறைந்து, வரம்புகளின் மேல் ஏறி ஒலிக்கின்ற அலைகளையுடைய, காவிரியாற்றங் கரைக்கண் உள்ள திருவையாற்றை உமதாகிய உடைய அடிகேள்! அடியேன் உமக்குச் செய்த குற்றம் ஒன்று உளதாக அறிந்திலேன்; யான் அறியாதவாறு நிகழ்ந்த பிழை உளதாயின், அது நீங்க அருள்செய்; ஓலம்!

786. கார்க்கொள் கொன்ற சடைமேலொன்
றுடையாய் விடையாய் கையினான்
மூர்க்கர் புரமூன் றெரிசெய்தாய்
முன்நீ பின்நீ முதல்வன்நீ
வார்கொள் அருவி பலவாரி
மணியும் முத்தும் பொன்னுங்கொண்
டார்க்குந் திரைக்கா விரிக்கோட்ட
தையா றுடைய அடிகேளோ! 6

கார்க்கொள் – கார்காலத்துப் பூக்கும்.
முன்நீ – பழமைக்குப் பழமை
பின்நீ – புதுமைக்குப் புதுமை

கார்காலத்தைக்கொண்ட கொன்றைமலரின் மாலையொன்றைச் சடைமேல் உடையவனே! விடையை ஏறுபவனே! அறிவில்லாதவரது ஊர்கள் மூன்றைச் சிரிப்பினால் எரித்தவனே! ஒழுகுதலைக் கொண்ட பல அருவிகள் வாரிக் கொண்டு வந்த மாணிக்கங்களையும் முத்துக்களையும் கைக்கொண்டு ஆரவாரிக்கின்ற அலைகளையுடைய, காவிரி யாற்றங்கரைக்கண் உள்ள திருவையாற்றை நினதாக உடைய அடிகேள்! எல்லாவற்றுக்கும் முன்னுள்ளவனும் நீயே; பின்னுள்ளவனும் நீயே; எப்பொருட்கும் முதல்வனும் நீயே; ஓலம்!

787. மலைக்கண் மடவாள் ஒருபாலாய்ப்
பற்றி உலகம் பலிதேர்வாய்
சிலைக்கொள் கணையால் எயில்எய்த
செங்கண் விடையாய் தீர்த்தன்நீ
மலைக்கொள் அருவி பலவாரி
மணியும் முத்தும் பொன்னுங்கொண்
டலைக்குந் திரைக்கா விரிக்கோட்டத்
தையா றுடைய அடிகேளோ! 7

தீர்த்தன் – பரிசுத்தன்

மலையிடத்துத் தோன்றிய மங்கையை ஒரு பாகத்திற் கொண்டு, உலக முழுவதும் பிச்சைக்குத் திரிபவனே! வில்லிடத்துக் கொண்ட அம்பினால் முப்புரத்தை அழித்த, சிவந்த கண்களையுடைய இடபத்தை யுடையவனே! மலையிடத்துப் பெருகிய பல அருவிகள் வாரிக்கொண்டு வந்த மாணிக்கங்களையும் முத்துக்களையும் கைக் கொண்டு இருபக்கங்களையும் அரிக்கின்ற அலைகளை உடைய, காவிரியாற்றங் கரைக்கண் உள்ள திருவையாற்றை நினதாக உடைய அடிகேள்! இறைவனாவான் நீயே; ஓலம்!

788. போழும் மதியும் புனக்கொன்றை
புனல்சேர் சென்னிப் புண்ணியா
சூழும் அரவச் சுடர்ச்சோதீ
உன்னைத் தொழுவார் துயர்போக
வாழும் அவர்கள் அங்கங்கே
வைத்த சிந்தை உய்த்தாட்ட
ஆழுந் திரைக்கா விரிக்கோட்டத்
தையா றுடைய அடிகேளோ! 8

சிவபிரானது அடியவர்கள் அவனது அருள் வடிவாகக் கொண்டு முழுகித் துன்பம் நீங்குமாறும், மற்றும் ஆங்காங்கு வாழ்கின்றவர்கள் தீர்த்த நீரின் மேல் வைத்த விருப்பத்தினால் முழுகி மகிழுமாறும் காவிரியின் கண் நீர் பெருகி ஓடுகிறது என்கிறார்.

பகுக்கப்பட்ட சந்திரனும், புனங்களில் உள்ள கொன்றை மலரும், நீரும் பொருந்திய முடியையுடைய புண்ணிய வடிவினனே! சுற்றி ஊர்கின்ற பாம்பை அணிந்த, சுடர்களையுடைய ஒளி வடிவினனே! உன்னை வணங்குகின்ற வர்களது துன்பம் நீங்குமாறும், ஆங்காங்கு வாழ்கின்றவர்கள் விருப்பத்தினால் வைத்த உள்ளங்கள் அவர்களைச் செலுத்தி மூழ்குவிக்குமாறும், மறித்து வீசுகின்ற அலைகளையுடைய, காவிரியாற்றங்கரைக்கண் உள்ள திருவையாற்றை நினதாக உடைய அடிகேள்! ஓலம்!

**789.** கதிர்க்கொள் பசியே யொத்தேநான்
கண்டே னும்மைக் காணாதேன்
எதிர்த்து நீந்த மாட்டேன்நான்
எம்மான் றம்மான் தம்மானே
விதிர்த்து மேகம் மழைபொழிய
வெள்ளம் பரந்து நுரைசிதறி
அதிர்க்குந் திரைக்கா விரிக்கோட்டத்
தையா றுடைய அடிகேளோ! 9

என் தந்தை தந்தைக்கும் பெருமானே! மேகங்கள் துளிகளைச் சிதறி மழையைப் பொழிதலால் வெள்ளம் நுரையைச் சிதறிப் பரந்து வருகையினாலே முழங்குகின்ற அலைகளையுடைய, காவிரியாற்றங்கரைக்கண் உள்ள திருவையாற்றை நுமதாக உடைய அடிகேள்! நான் உம்மை, பசியுடையவன் நெற்கதிரைக் கண்டாற் போலக் கண்டேன்; அவன் உணவைக் கண்டாற்போலக் காணே னாயினேன்; நீரின் வேகத்தை எதிர்த்து நீந்தி அக்கரையை அடைய நான் வல்லேனல்லேன்; ஓலம்!

**790.** கூசி அடியார் இருந்தாலுங்
**குணமொன் றில்லீர் குறிப்பில்லீர்**
தேச வேந்தன் திருமாலும்
மலர்மேல் அயனுங் காண்கிலார்
தேசம் எங்கும் தெளிந்தாடத்
தெண்ணீர் அருவி கொணர்ந்தெங்கும்
வாசந் திரைக்கா விரிக்கோட்டத்
தையா றுடைய அடிகேளோ! 10

நாடெங்கும் உள்ளவர்கள் ஐயமின்றி வந்து மூழ்குமாறு, தெளிந்த நீராகிய அருவியைக் கொணர்ந்து எங்கும் தங்குகின்ற அலைகளை யுடைய காவிரியாற்றங் கரைக்கண் உள்ள திருவையாற்றை நுமதாக உடைய அடிகேள்! அடியார் தாம் தம் குறையைச் சொல்ல வெள்கி யிருந்தாலும் நீரும் அவர்தம் குறையை அறிந்து தீர்க்கும் குணம் சிறிதும் இல்லீர்; அவ்வாறு தீர்த்தல் வேண்டும் என்னும் எண்ணமும் இல்லீர்; உம்மை, உலகிற்குத் தலைவனாகிய திருமாலும், தாமரை மலர்மேல் உள்ள பிரமனும் என்னும் இவர்தாமும் காண்கிலர்; பிறர் எங்ஙனங் காண்பார்! ஓலம்!

இவ்வளவு பாடல்கள் பாடிய பின்னும், இறைவர் அருள் கிட்டாமையால் இத்திருப்பாடலில் நம்பியாரூரர் இவ்வாறு நெருங்கி வேண்டினார்.

கூசி – உம்மிடம் வேண்டியிட மனம் கூறி.

**791.** கூடி அடியார் இருந்தாலும்
**குணமொன் றில்லீர் குறிப்பில்லீர்**
ஊடி இருந்தும் உணர்கிலேன்
உம்மைத் தொண்டன் ஊரனேன்
தேடி எங்குங் காண்கிலேன்
திருவா ரூரே சிந்திப்பன்
ஆடுந் திரைக்கா விரிக்கோட்டத்
தையா றுடைய அடிகேளோ! 11

அசைகின்ற அலைகளையுடைய, காவிரி யாற்றங்கரைக்கண் உள்ள திருவையாற்றை உமதாக உடைய அடிகேள்! அடியார் உம்மை விட்டு நீங்காது கூடியே இருந்தாலும் நீர், அவர்க்கு அருள்பண்ணும் குணம் சிறிதும் இல்லீர், அருள் பண்ணுதல் வேண்டும் என்னும் எண்ணமும் இல்லீர்; அது நிற்க, நீர் என்பால் பிணக்குக் கொண்டிருந்தும், யான் அதனை உணர்ந்திலேன்; உம் அடியேனும், 'நம்பியாரூரன்' என்னும் பெயரினேனும் ஆகிய யான் உம்மை இங்குப் பலவிடத்துந் தேடியும் காண்கின்றிலேன்; அதனால், உம்மை யான் நேர்படக்கண்ட திருவாரூரையே நினைப்பே னாயினேன்; ஓலம்!

ஊடுதல் – அருள் தாழ்த்தலின் பொருட்டுப் பிணங்குதல். குறிப்பில்லீர் – குறிப்பறிந்து அருள மாட்டீர்.

குணமொன்றில்லீர் குறிப்பில்லீர் என்று நிறைவான இரு திருப்பாடல்களிலும் குறிப்பிடுகிறார்.

நிறைவுப் பாடலையும் வழக்கம் போல திருக்கடைக்காப்பாக அருளவில்லை. இப்பாடல் பாடிய பின்னும் அருளுவதும், அருளாதொழிவதும் தங்கள் திருவுள்ளமே என விண்ணப்பிக்கிறார். இப்பாடலுக்குப் பின் இறைவன் ஆற்றுநீரை விலக்குமாறு செய்கிறார். அதனால் இப்பதிகத்துக்கு உடனடிப் பயன் கிடைக்கிறது.

## 78. திருக்கேதாரம்

பண் : நட்டபாடை பதிக எண் : 78

இது குறிஞ்சிப் பெரும் பண்ணில் முதல் திறனாகிய நைவளம் என்ற பண்ணில் முதல் பிரிவு அகநிலையாக 37 என்ற எண் கொண்டது. நைவளம் ஏன் எப்படி நட்டபாடையாயிற்று என்பதைச் சுவாமி விபுலானந்தர் நன்கு விளக்கிக் காட்டியிருக்கிறார். அரிகாம்போதி மேளத்தில் பிறந்தது. நைவளம் என்ற அழகான பெயர் பிற்கால இலக்கியங்களிலும் நிரம்ப ஆட்சி பெற்றிருக்கிறது. கம்பரும் நைவளம் மொழியுடையவள் என்று சீதை சுயம்வர மண்டபத்தை நோக்கி வரும்போது குறிப்பிடுகிறார். இது பிற்பகலில் பாடத்தகுந்த பண் என்று சொல்லப்பட்டுள்ளது. இதன் சுவை உவகையும் மருட்கையும் என்று சொல்லப்படும். நைவளம் நட்டபாடையானதற்கு விபுலானந்தர் போன்றோர் ஒரு பொருத்தம் கற்பிப்பார்கள். இப்பண் காலையில் கோயில் பூசையில் பாடப்பட்டு வந்தது. அக்காலத்தில் நட்டுவனார் இசைத்தார்கள். தளிப்பெண்டுகள் பாடியாடினார்கள். அதனால் இது நாட்டிய பாஷை என்று பெயர் பெற்றிருத்தல் கூடும். நாட்டிய பாஷை என்பதே நட்டபாடையாயிற்று. இதெல்லாம் நடந்தது ஒருகால் சிலப்பதிகார காலத்துக்கு நெடுநாள் முன்னமே நிகழ்ந்திருக்கும். நட்டபாடைப் பண் நாட்டைக் குறிஞ்சி என்பதுதான் என்பது முதிய ஓதுவார்கள் கருத்து ஆயினும் சிலர் இதை நாட்டையாகலாம் என்று சொல்லி நாட்டையிலும் பாடுகிறார்கள். ஆயினும் பொன்னோதுவார் போன்ற பண்டைய ஓதுவார்கள் கையில் தாளமேந்தி இதை நாட்டைக் (நட்டக்) குறிஞ்சியில் தான் பாடினார்கள். நட்டபாடைக்கு 8 கட்டளைகள் புராணத்தில் சொல்லப்பட்டுள்ளது. இனி, அப்பர் இப்பண்ணில் பாடவில்லை. இந்தப் பண்ணில் சம்பந்தர் 1.1.22, சுந்தரர் 78–82, ஆக 27 பதிகங்கள், சம்பந்தர் உமாதேவியார் ஊட்டிய ஞானப்பால் உண்டு முதன்முதல் பாடிய பாடல் தோடுடைய செவியன் விடையேறி என்பது நட்டபாடைப் பண். காரைக்காலம்மையாரும் முதல் பதிகம் நட்டபாடைப் பண்ணில் பாடியிருக்கிறார். காலத்தால் சம்பந்தர் இவருக்கு இருநூறு ஆண்டுகள் பிற்பட்டவர். அம்மை பாடிய பண்ணே இவருடைய முதல் பதிகத்தில் அமைந்தது பொருத்தமானது.

இதுவன்றி, அங்கமும் வேதமும் ஓதுநாவர், வண்டார் குழலரிவையொடு, உண்ணாமுலை உமையாளொடும் உடனாகிய ஒருவன், மையாடிய கண்டன் மலைமகள் பாகமதுடையான், சில திருவிராகப் பாடல்கள் சம்பந்தருடையவை. சுந்தரர், வாழ்வாவது மாயம், நத்தார்புடை ஞானன் என்ற திருக்கேதீச்சரப் பதிகம் என்ற பதிகங்கள் நட்டபாடை. இப்பாடல்கள் அனைத்திலும் சுந்தரர் இசையைக் குறிப்பிடுவது மிக்க சிறப்பாயுள்ளது. "பண்ணின் தமிழ் இசை பாடலின் பழவேய் முழவு அதிர, கிண்ணென்றிசை முரலும், நாவின்மிசை யரையன்னொடு தமிழ் ஞானசம்பந்தன், அரிய சிறைவண்டு யாழ்செயும் மாதோட்டம், சிறையார் பொழில் வண்டியாழ்செயும் கேதீச்சரத்தான், தொழுமின் இன்னிசை பாடியே, பொழிலின் தேன் ஆதரித்து இசை வண்டினம் மிழற்றும்" என்றெல்லாம் இசைபாடி மகிழ்கிறார்கள்.

நைவளமே நட்டபாடை என்று சொல்வது ஒரு வழக்கமாக இருக்கிறது. நைவளம் என்பது குறிஞ்சியாகிய பெரும்பண்ணின் திறன்கள் எட்டில் முதல் திறன். இதன் நால்வகைப் பிரிவுகளில் முதல் பிரிவே நட்டபாடை என்ற பண். இதுவே நைவளம் என்பது உபகார மாத்திரையே. நைவளம் என்ற பெயர் தமிழ் நூல்களில் அடிக்கடிப் பயில்கின்ற ஓர் இசைப்பெயர். நைவளம் என்ற சொல்லுக்கு கேட்டார், சொன்னார் அனைவரையும் நைவிக்கும்படியான பண் என்று பொருள் கூறுவார்கள். இதை நட்டபாஷை என்று சொல்லி, இது ஒரு பண், லய குண யோகத்தால் நைவளம் என்று பேரிடுகிறது என்று வியாக்கியானக்காரார் (பெரியவாச்சான் பிள்ளை) எழுதுகிறார்.

| மூர்த்தி | அருள்தரும் கௌரியம்மை உடனமர் அருள்மிகு கேதாரநாதர். | | |
|---|---|---|---|
| தல இருப்பிடம் | வடநாட்டில் ஹரித்வாரிலிருந்து 250 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| தல மரம் | மந்தாகினி | | |
| தீர்த்தம் | பெண்ணையாறு, தண்டதீர்த்தம் | | |
| பாடியவர் | திருஞானசம்பந்தர், நம்பியாரூரர் | பதிகங்கள் | 2 |

792. வாழ்வாவது மாயம்மிது
மண்ணாவது திண்ணம்
பாழ்போவது பிறவிக்கடல்
பசிநோய்செய்த பறிதான்
தாழாதறஞ் செய்ம்மின்தடங்
கண்ணான்மல ரோனும்
கீழ்மேலுற நின்றான்திருக்
கேதாரமெ னீரே. 1

எனீரே – நேரில் சென்று வழிபடுதல் அரிதாயினும் வாயினால் போற்றுங்கள். கருணையினால் உலகவரை வழிப்படுத்தியது; தாமும் திருக்காளத்தியில் இருந்த படியே பாடிய திருக்குறிப்புமாம்.

உலகீர்! பசிநோயை உண்டாக்குகின்ற உடம்பு நிலைத்திருத்தல் என்பது பொய்; இது மண்ணாய் மறைந்தொழிவதே மெய்; ஆதலின், இல்லாது ஒழிய வேண்டுவது பிறவியாகிய கடலே; அதன் பொருட்டு, நீவிர் நீட்டியாது விரைந்து அறத்தைச் செய்ம்மின்கள்; பெரிய கண்களையுடையவனாகிய திருமாலும், மலரில் இருப்பவனாகிய பிரமனும் நிலத்தின் கீழும், வானின்மேலும் சென்று தேடுமாறு நின்றவனாகிய இறைவன் எழுந்தருளி யிருக்கின்ற **'திருக்கேதாரம்'** என்று சொல்லுமின்கள்.

793. பறியேசுமந் துழல்வீர்பறி
நரிகீறுவ தறியீர்
குறிகூவிய கூற்றங்கொளு
நாளால் அறம் உளவே
அறிவானிலும் அறிவான்நல
நறுநீரொடு சோறு
கிறிபேசிநின் றிடுவார்தொழு
கேதாரமெ னீரே. 2

பறி – பை; அது பை போல்வதாகிய உடம்பைக் குறித்தது. கிறி – மகிழ்வுரைகள்.

வேறொன்றும் செய்யாது உடம்பைச் சுமந்தே திரிகின்றவர்களே! இவ்வுடம்பு நரிகளால் கிழித்து உண்ணப்படுவதாதலை அறிகின்றிலீர்; குறித்த நாளில் உம்மை அழைத்தற்குக் கூற்றுவன் நினைக்கின்ற நாளில் உமக்கு அறங்கள் உளவாகுமோ? ஆகாவாகலின், இப்பொழுதே, அறிய வேண்டுவனவற்றை அறியும் வானுலகத்தவரின் மேலான அறிவுடன், நல்ல நறுமணத்தையுடைய நீரையும், சோற்றையும் விருந்தினருக்கு, இன்சொற் பேசி இடுகின்றவர்கள் வணங்குகின்ற, **'திருக்கேதாரம்'** என்று சொல்லுமின்கள்.



794. கொம்பைப்பிடித் தொருக்காலர்க
ளிருக்கான்மலர் தூவி
நம்பன்நமை யாள்வான்என்று
நடுநாளையும் பகலும்
கம்பக்களிற் றினமாய்நின்று
சுனைநீர்களைத் தூவிச்
செம்பொற்பொடி சிந்துந்திருக்
கேதாரமெ னீரே. 3

கால் – காற்று; உயிர்ப்பு. யோகிகள் இரவும் பகலும் மந்திரத்தோடு மலர் தூவி வழிபட நாம் வாளா பொழுது போக்குகிறோம்.

உலகீர்! யோகதண்டத்தை ஊன்றி, ஒருவழிப் படுத்துகின்ற உயிர்ப்பினை உடைய யோகிகள், 'இவனே நம்மை ஆள்பவன்' என்று, நள்ளிரவிலும், பகலிலும் மந்திர ஒலியோடு மலர்களைத் தூவி விரும்பப்படுகின்ற இறைவனது, அசைதலையுடைய ஆண் யானையின் கூட்டம் தொடர்ந்துவந்து நின்று, பல சுனைகளின் நீரை இறைத்து, செம்பொன்னினது பொடியை உதிர்க்கின்ற **'திருக்கேதாரம்'** என்று சொல்லுமின்கள்.

795. உழக்கேயுண்டு படைத்தீட்டிவைத்
திழப்பார்களுஞ் சிலர்கள்
வழக்கேயெனிற் பிழைக்கேமென்பர்
மதிமாந்திய மாந்தர்
சழக்கேபறி நினைப்பாரொடு
தவமாவது செயன்மின்
கிழக்கேசல மிடுவார்தொழு
கேதாரமெ னீரே. 4

உழக்கேயுண்டு – ஒரு உழக்கு அரிசி அளவு உண்டு; உணவின் அளவு குறித்தது. "உண்பது நாழி", நாழி யரிசிக்கே நாம்". உணவு குறைத்துண்டு வாழப் பழகிக் கொள்ளுதல் நலம். படைத்தல் – தேடுதல். வைத்தல் – சேமித்து வைத்தல். சழக்கு – இரப்பவர்க்கு இல்லை என்று சொல்லிக் கரத்தல்.

கிழக்கே சலமிடுதல் – கிழக்கு நோக்கி நின்று உரிய மந்திரங்களுடன் சூரியனுக்கு அர்க்கிய நீர் கொடுத்தல் – மறைவழி ஒழுகுவோர் செய்வது.

அறிவை அழித்துக்கொண்ட மாந்தர்களே! பொருளைத்தேடி, உழக்கரிசியை அட்டு உண்ணுதல் ஒன்றைச் செய்து விட்டு, எஞ்சியவற்றைத் தொகுத்துவைத்துப் பின் இழந்து போவாரும் சிலர் இவ்வுலகில் உளர்; அவர்கள், 'அறம்' என்றாலோ, 'அஃது எமக்கு வேண்டா; யாம் உண்டு உயிர் வாழ்வோம்' என்று போவர். வஞ்சனையால் தம் வயிற்றை மட்டுமே நிரப்பிக்கொள்கின்ற அவர்களோடு கூடி அவர்களது நோன்பாகிய அச்செயலை நீவிர் செய்யன்மின்; விடியற்காலையில் பகலவன் வருகையை எதிர்நோக்கி நின்று, மந்திர நீரை இறைத்துக் காலைச் சந்தியை முடிக்கின்றவர்கள் வணங்குகின்ற, **'திருக்கேதாரம்'** என்று சொல்லுமின்கள்.

**796.** வாளோடிய தடங்கண்ணியர்
வலையில்லழுந் தாதே
நாளோடிய நமனார்தமர்
நணுகாமுனம் நணுகி
ஆளாயுய்ம்மின் அடிகட்கிட
மதுவேயெனில் இதுவே
கீளோடர வசைத்தானிடங்
கேதாரமெ னீரே. 5

நாளோடிய – ஆயுள் நாள் கண்டு உயிர்கொள்ள விரைந்து வருகின்ற.
நமனார்தமர் – இயமன் தூதர்
அதுவே எனில் இதுவே – அது எனச் சேய்மையில் உள்ளது சொல்லும் போது இதுவே என மைக்கண் வருவதாகும்.

உலகீர்! நாட்கள் ஓடிவிட்டன. ஆதலின், இயமன் தூதுவர் வருதற்கு முன்பு, வாள்போல இருபக்கமும் ஓடுகின்ற, அகன்ற கண்களை யுடைய மகளிரது ஆசையாகிய வலையிற் சிக்காமல், இப்பொழுதே இறைவனை அடைந்து அவனுக்கு ஆளாகிப் பிழைமின்கள்; அங்ஙனம் பிழைத்தற்கு அவனுக்கு இடமாவதுதான் யாது எனில், இங்குச் சொல்லப்பட்டு வரும் திருக்கேதாரமே. அரையில் கீளுடன் பாம்பைக் கட்டியுள்ள அவனது இடம்; ஆதலின், இதனைத் துதிமின்கள்.

**797.** தளிசாலைகள் **தவமாவது**
**தம்மைப்பெறி லன்றே**
குளியீருளங் குருக்கேத்திரங்
கோதாவிரி குமரி
தெளியீர்உளஞ் சீபர்ப்பதம்
தெற்குவடக் காகத்
கிளிவாழைஒண் கனிகீறியுண்
கேதாரமெ னீரே. 6

“கேதார மெனீரே” என்பது பதிக மகுடமாகும்.

உலகீர்! தேவகோட்டங்கள் தவச்சாலைகளாய் நின்று பயன் தருவது, மக்கள் அவ்விடங்களை அடைந்தாலன்றோ? இதனை மனத்துட் கொண்மின்கள்; கொண்டு, தெற்கென்னும் திசை கிடைக்க, ‘கோதாவரி, குமரி’ என்னும் தீர்த்தங்களிலும், வடக்கென்னும் திசை கிடைக்க, அழகிய குருக்கத்திரத்தில் உள்ள தீர்த்தங்களிலும் சென்று முழுகுமின்கள்; அவ்வாறே தெற்கில் சீபர்ப்பதத்தையும், வடக்கில் கிளிகள், பழத்தைக் கீறி உண்ணுகின்ற திருக்கேதாரத்தையும் சென்று வணங்கித் துதிமின்கள்.

**798.** பண்ணின்தமிழ் இசைபாடலின்
பழவேய்முழ வதிரக்
கண்ணின்னொளி கனகச்சுனை
வயிரம்மவை சொரிய
மண்ணின்றன மதவேழங்கள்
மணிவாரிக்கொண் டெறியக்
கிண்ணென்றிசை முரலுந்திருக்
கேதாரமெ னீரே. 7

உலகீர்! பண்ணாகிய, தமிழ்ப்பாடலினது இசையைப் பாடுமிடத்து, அதற்கியையப் பழைதாகிய வேய்ங்குழலும், மத்தளமும் ஒலித்தலினாலும், கண்ணுக்கு இனிதாகிய ஒளியையுடைய பொன் வண்ணமான சுனைகள் வயிரங்களை அலைகளால் எடுத்து வீசுதலினால், நிலத்தில் நிற்கின்ற மத யானைகள், மாணிக்கங்களை வாரி இறைத்தலினாலும், ‘கிண்’ என்கின்ற ஓசை இடையறாது ஒலிக்கின்ற, ‘திருக்கேதாரம்’ என்று சொல்லுமின்கள்.

| | |
|---|---|
| 799. முளைக்கைப்பிடி முகமன்சொலி<br>முதுவேய்களை இறுத்துத்<br>துளைக்கைக்களிற் றினமாய்நின்று<br>சுனைநீர்களைத் தூவி<br>வளைக்கைப்பொழி மழைகூர்தர<br>மயில்மான்பிணை நிலத்தைக்<br>கிளைக்கமணி சிந்துந்திருக்<br>கேதாரமெ னீரே. 8 | உலகீர்! சிறிய கையை உடைய பெண் யானைகள், துளையையுடைய கையையுடைய ஆண் யானைகட்கு உறவாய் நின்று, முகமன் கூறி, பெரிய மூங்கில்களை ஒடித்துக் கொடுத்து, சுனைகளின் நீரைத் தெளித்தலால், அவற்றின் வளையையுடைய கையினின்றும் பொழிகின்ற மழை மிகுதியாக, மயிலும், பெண்மானும் நிலத்தைக் கிண்டுதலால் மாணிக்கங்கள் தெறிக்கின்ற, 'திருக்கேதாரம்' என்று சொல்லுமின்கள். |
| 800. பொதியேசுமந் துழல்வீர்பொதி<br>அவமாவதும் அறியீர்<br>மதிமாந்திய வழியேசென்று<br>குழிவீழ்வதும் வினையால்<br>கதிசூழ்கடல் இலங்கைக்கிறை<br>மலங்கவ்வரை யடர்த்துக்<br>கெதிபேறுசெய் திருந்தானிடங்<br>கேதாரமெ னீரே. 9<br><br>அவம் – வீண்; அவமாவது – இறப்பது. | உலகீர்! நீவிர், இறைச்சிப் பொதியாகிய உடம்பைச் சுமந்து திரிதல் ஒன்றையே செய்வீர்; அப்பொதிதான் பயனற்று ஒழிவதை அறிய மாட்டீர்; அறிவை இழந்த வழியிலே சென்று நீவிர் குழியில் வீழ்வதும், நும் வினைப்பயனேயாம். இதனை விடுத்து, முழுதும் கடலாற் சூழப்பட்ட இலங்கைக்கு அரசனாகிய இராவணன் மெலிவடையும்படி அவனை மலையால் முன்பு நெருக்கிப் பின்பு நன்னிலையைப் பெறச்செய்து தான் அம்மலைமேல் இனிதிருந்தவனாகிய சிவபெருமானது இடம் திருக்கேதாரமே; அதனைத் துதிமின்கள். |
| 801. **நாவின்மிசை யரையன்னொடு<br>தமிழ்ஞானசம் பந்தன்**<br>யாவர்சிவ னடியார்களுக்<br>கடியானடித் தொண்டன்<br>தேவன்திருக் கேதாரத்தை<br>ஊரன்னுரை செய்த<br>பாவின்றமிழ் வல்லார்பர<br>லோகத்திருப் பாரே. 10<br><br>இப்பாட்டில் தேவாரம் பாடி அருளிய மூவர் முதலிகள் பெயரும் வருதல் இதன் சிறப்பு. | தமிழ்ப்பாடலைப் பாடிய திருநாவுக்கரசரும், திருஞானசம்பந்தரும், மற்றும் எவராயினும், சிவனடியார்களுக்கு அடியனாகி, அவர்கட்கு அடித்தொண்டு செய்பவனாகிய நம்பியாரூரன், இறைவனது திருக்கேதாரத்தைப் பாடிய, இனிய தமிழ்ப் பாடலைப் பாட வல்லவர்கள், எல்லா வற்றிற்கும் மேலுள்ள உலகமாகிய சிவலோகத்தில் இருப்பவராவர். |

## 79. திருப்பருப்பதம்

பண் : நட்டபாடை

பதிக எண் : 79

| மூர்த்தி | அருள்தரும் பருப்பதநாயகி உடனமர் அருள்மிகு பருப்பதநாதர். | | |
|---|---|---|---|
| தல இருப்பிடம் | தற்போதைய ஸ்ரீ சைலம். ஆந்திர மாநிலத்தில் கர்னூல் மாவட்டத்தில் திருப்பதியிலிருந்து 500 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| தல மரம் | மருதம், திரிபலா | | |
| தீர்த்தம் | பாலாழி | | |
| பாடியவர் | மூவர் | பதிகங்கள் | 3 |

802. மானும்மரை இனமும்மயி
லினமுங்கலந் தெங்கும்
தாமேமிக மேய்ந்துதடஞ்
சுனைநீர்களைப் பருகிப்
பூமாமர முரிஞ்சிப்பொழி
லூடேசென்று புக்குத்
தேமாம்பொழில் நீழற்றுயில்
சீபர்ப்பத மலையே. 1

மான்களின் கூட்டமும், மரைகளின் கூட்டமும், மயில்களின் கூட்டமும் எங்கும் பொருந்தித் தம் விருப்பப்படியே தமக்குரிய உணவுகளைத் தேடி உண்டு, பெரிய சுனைகளில் உள்ள நீரைக் குடித்து, பூத்த பெரிய மரங்களில் உராய்ந்து அவற்றின் செறிவூடே சென்று, தேமாமரச் சோலையின் நிழலில் உறங்குகின்ற, 'திருப்பருப்பதம்' என்னும் மலையே, எங்கள் சிவபிரானது மலை.

இயற்கை வளங்கள் பலவற்றாலும் நிறைந்து மனிதர்கள் செல்லுவதற்கு அரிதாய் விளங்கிய பதி திருப்பருப்பத மலையாகும். இப்பதிகத்துள் இங்கு வாழும் மான், மயில், யானை, கிளி, ஏனம் முதலிய பிராணிகளின் செயல்கள் பற்றியே பதியின் வளம் போற்றப்பட்டிருத்தல், ஓராண்டில் பெரும்பாகமும் இங்கு மனித சஞ்சாரமின்றி இப்பிராணிகளே வாழ்தற்கிடமாவது இது என்ற குறிப்புத் தருவதாகும்.

803. மலைச்சாரலும் பொழிற்சாரலும்
புறமேவரும் இனங்கள்
மலைப்பாற்கொணர்ந் திடித்தூட்டிட
மலங்கித்தம களிற்றை
அழைத்தோடியும் பிளிறீயவை
அலமந்துவந் தெய்த்துத்
திகைத்தோடித்தம் பிடிதேடிடுஞ்
சீபர்ப்பத மலையே. 2

குறவர்கள் தங்கள் மலைப்பக்கங்கட்கும் சோலைப் பக்கங்கட்கும் அப்பாற்பட்ட இடங்களினின்றும் வருகின்ற யானைகளைப் பற்றித் தங்கள் மலையிடத்துக் கொணர்ந்து பிணித்து வைத்து அவைகளைத் துன்புறுத்தி உணவை உண்பிக்க, அதனைக் கண்ட பெண் யானைகள் தமது ஆண் யானைகளும் அவர்களால் பற்றப்படுங்கொல் என் மனங் கலங்கி அவைகளை அழைத்து ஓடவும், அதனையறியாமல் அவ்வாண் யானைகள் தம் பெண்யானைகள் அவர்கள் கையகப்பட்டன கொல் என மருண்டு பிளிறுதலைச் செய்து, பல இடங்களில் திரிந்து அவைகளைக் காணாது இளைத்துவந்து, மீளவும் செய்வதறியாது திகைத்து அவைகளைத் தேடி ஓடுகின்ற, 'திருப்பருப்பதம்' என்னும் மலையே, எங்கள் சிவபிரானது மலை.

---

804. மன்னிப்புனங் காவல்மட
மொழியாள்புனங் காக்கக்
கன்னிக்கிளி வந்துகவைக்
கோலிக்கதிர் கொய்ய
என்னைக்கிளி மதியாதென
எடுத்துக்கவ ணொலிப்பத்
தென்னற்கிளி திரிந்தேறிய
சீபர்ப்பத மலையே. 3

புனம் – தினைப்புனம். குறிஞ்சிக் கரு.

தினைப் புனத்தின் காவலையுடைய இளமைச் சொற்களையுடைய குறமகள் அங்குத் தங்கி அப்புனத்தைக் காத்திருக்குங்கால், இளம் பெண் போலும் கிளி வந்து, கிளைத்த தாளின் கண் உள்ள கதிர்களைக் கவர, அதனைக் கண்டு அவள், 'இக்கிளி என்னை மதியாது போலும்' என்று சினந்து, கவணை எடுத்து அதனாற் கல்லை, ஓசையுண்டாக வீச, அவ்வழகிய நல்ல கிளி, தன் எண்ணம் மாறி வெளியேறுகின்ற, 'திருப்பருப்பதம்' என்னும் மலையே எங்கள் சிவபிரானது மலை.

---

805. மய்யார்தடங் கண்ணாள்மட
மொழியாள்புனங் காக்கச்
செவ்வேதிரிந் தாயோவெனப்
போகாவிட விளிந்து
கய்பாவிய கவணான்மணி
எறியஇரிந் தோடிச்
செவ்வாயன கிளிபாடிடுஞ்
சீபர்ப்பத மலையே. 4

மை பொருந்திய பெரிய கண்களை யுடையவளும், இளமையான சொற்களை யுடையவளும் ஆகிய குறமகள் தினைப் புனத்தைக் காத்தற் பொருட்டுப் பலவிடத்தும் நன்றாகத் திரிந்து, 'ஆயோ' என்று சொல்லி ஓட்டவும், போகாது விடுதலினாலே வருந்தி, கையிற் பொருந்திய கவணால் மணியாகிய கல்லை வீச, சிவந்த வாயினையுடைய கிளி அஞ்சி ஓடி ஒலிக்கின்ற, 'திருப்பருப்பதம்' என்னும் மலையே, எங்கள் சிவபிரானது மலை.

விளிதல் – இறத்தல்; அது பெருந்துன்பம் எய்துதலைக் குறித்தது. குறமகள் பாடலுக்கு எதிராகக் கிளி பாடுகிறது.

| | |
|---|---|
| 806. ஆனைக்குலம் இரிந்தோடித்தன்<br>பிடிசூழலில் திரியத்<br>தானப்பிடி செவிதாழ்த்திட<br>அதற்குமிக இரங்கி<br>மானக்குற அடல்வேடர்கள்<br>இலையாற்கலை கோலித்<br>தேனைப்பிழிந் தினிதூட்டிடுஞ்<br>சீபர்ப்பத மலையே. 5<br><br>யானை, ஏனம் – குறிஞ்சிக்குரிய விலங்குகள் | ஆண் யானைகளின் கூட்டம், தனது பெண் யானைகளின் கூட்டம், சாரலிற் பல இடங்களிலும் சென்று திரிதலினால் அதனைக் காணாது, தேடி ஓட, சென்ற இடங்களில் அப்பெண் யானைகளின் கூட்டமும் ஆண் யானைகளின் கூட்டத்தைக் காணாது, அதன் குரலோசையைக் கேட்டற் பொருட்டுச் செவி தாழ்த்து நிற்க, அந்நிலைக்கு மிக இரங்கி, வீரத்தை உடைய குறவர்களாகிய, வெற்றி பொருந்திய வேடர்கள், இலைகளால் கல்லை செய்து அமைத்து, அவைகளில் தேனைப் பிழிந்து வார்த்து, அப்பெண்யானைக் கூட்டத்திற்கு இனிதாக ஊட்டுகின்ற, 'திருப்பருப்பதம்' என்னும் மலையே, எங்கள் சிவபிரானது மலை. |
| 807. மாற்றுக்களி றடைந்தாய் என்று<br>மதவேழங்கை யெடுத்து<br>மூற்றித்தழ லுமிழ்ந்தும்மதம்<br>பொழிந்தும்முகஞ் சுழியத்<br>தூற்றத்தரிக் கில்லேனென்று<br>சொல்லிஅய லறியத்<br>தேற்றிச்சென்று பிடிசூளறுஞ்<br>சீபர்ப்பத மலையே. 6 | மதத்தை உடைய ஆண்யானை ஒன்று தன் பெண் யானையை, 'நீ மற்றோர் ஆண் யானையைச் சார்ந்தது என் ?' என்று சொல்லிக் கையை உயர எடுத்துச் சினம் மிகுந்து, கண்களினின்றும் நெருப்புப் பொறியைச் சிதறி, மதநீரைப் பொழிந்து முகத்தைச் சுளிக்க, அதனைக் கண்ட பெண்யானை, 'நீர் இவ்வாறு அடாப் பழி சொல்லித் தூற்றின் உயிர் தரிக்கலாற்றேன்' என்று, அயலறியத் தனது தவறின்மையைச் சூளறுத்துக் காட்டி, அவ்வாண்யானையைத் தெளியப்பண்ணி அதனை அடைகின்ற, 'திருப்பருப்பதம்' என்னும் மலையே, எங்கள் சிவபெருமானது மலை. |
| 808. அப்போதுவந் துண்டீர்களுக்<br>கழையாதுமுன் னிருந்தேன்<br>எப்போதும்வந் துண்டால்எமை<br>எமர்கள்சுழி யாரோ<br>இப்போதுமக் கிதுவேதொழில்<br>என்றோடிஅக் கிளியைச்<br>செப்பேந்திள முலையாள்எறி<br>சீபர்ப்பத மலையே. 7 | தினைப்புனத்தைக் காக்கின்ற, கிண்ணம் போலும், உயர்ந்து தோன்றும், இளமையான தனங்களையுடைய குறமகள், தினையை உண்ண வந்த கிளிகளைப் பார்த்து, 'முன்னே வந்து தினையை உண்ட உங்களுக்கு இரங்கி, உங்களை அதட்டாது அப்போது வாளா இருந்தேன்; ஆயினும், நீவிர் இடையறாது வந்து தினையை உண்டால் எங்களை, எங்கள் உறவினர் வெகுள மாட்டார்களோ ? ஆதலின் இப்போது உமக்குச் செய்யத்தக்க செயல் இதுதான்' என்று சொல்லி, அவைகளைக் கவணால் எறிகின்ற, 'திருப்பருப்பதம்' என்னும் மலையே, எங்கள் சிவபெருமானது மலை. |

809. திரியும்புரம் நீறாக்கிய
செல்வன்றன கழலை
அரியதிரு மாலோடயன்
றானும்மவ ரறியார்
கரியின்னின மோடும்பிடி
தேனுண்டவை களித்துத்
திரிதந்தவை திகழ்வாற்பொலி
சீபர்ப்பத மலையே. 8

இறைவனை அரியும், அயனும் அறியாராயினும் ஈண்டு கரியின் இனமும் பிடியுடன் களித்துக்கண்டு மகிழும் என்பதாகும்.

களிற்றியானைகளின் கூட்டத்தோடும் பிடியானைகளின் கூட்டம் தேனை உண்டு, பின், அவ்விரு கூட்டங்களும் களித்துத் திரிதருகின்ற அழகு விளங்குதலால் பொலிவெய்திய திருப்பருப்பதமலையில், வானத்தில் திரிகின்ற முப்புரங்களை நீறாகச் செய்த செல்வனாகிய சிவபெருமானது திருவடிகளை, ஏனையோர்க்கு அரிய திருமாலும், பிரமனும் ஆகிய அவர்தாமும் காண மாட்டார்.

810. ஏனத்திரள் கிளைக்களரி
போலமணி சிதற
ஏனல்லவை மலைச்சாரலிற்
றிரியுங்கர டீயும்
மானும்மரை இனமும்மயில்
மற்றும்பல வெல்லாம்
தேனுண்பொழில் சோலைமிகு
சீபர்ப்பத மலையே. 9

மலைச்சாரலில் பன்றியின் கூட்டம் நிலத்தை உழ, அவ்விடத்தினின்றும் நெருப்புப் போல மாணிக்கங்கள் வெளிப்பட, அவற்றைக் கண்டு, தினைக்கூட்டத்தையுடைய மலைச் சாரலை விடுத்து ஓடிய கரடியும், மானும், மரைக் கூட்டமும், மயிலும் மற்றும் பலவும் ஆகிய எல்லாம் பின்பு தேனை உண்டு களிக்கின்ற பூஞ்சோலைகளும், பிற சோலைகளும் மிகுந்திருக்கின்ற, 'திருப்பருப்பதம்' என்னும் மலையே, எங்கள் சிவபிரானது மலை.

811. நல்லாரவர் பலர்வாழ்தரு
வயல்நாவல வூரன்
செல்லலுற வரியசிவன்
சீபர்ப்பத மலையை
அல்லலவை தீரச்சொன
தமிழ்மாலைகள் வல்லார்
ஒல்லைசெல வுயர்வானகம்
ஆண்டங்கிருப் பாரே. 10

செல்லலுற அரிய – மக்கள் சார்தற்கு அரிய நிலையைக் குறித்தது.

துன்பம் உறுதல் இல்லாத சிவபெருமானது திருப்பருப்பத மலையை, நல்லவர் பலர் வாழ்வதும், வயல்களையுடையதுமான திருநாவலூரில் தோன்றிய நம்பியாரூரன், யாவரது துன்பமும் தீருமாறு பாடிய இத்தமிழ்ப் பாமாலைகளைப் பாட வல்லவர்கள், சிறிது காலம் செல்லும் அளவிலே உயர்ந்த விண்ணுலகத்தை ஆண்டு அங்கு இருப்பர்.

## 80. திருக்கேதீச்சரம்

பண் : நட்டபாடை                                                    பதிக எண் : 80

| மூர்த்தி | அருள்தரும் கௌரியம்பிகை உடனமர் அருள்மிகு கேதீச்சுவரர் | | |
|---|---|---|---|
| தல இருப்பிடம் | இலங்கையில், பாலாவிக்கரையில் தலைமன்னாருக்கு அருகில் மாதோட்ட நகரில் உள்ளது. | | |
| தல மரம் | வன்னி | | |
| தீர்த்தம் | பாலாவி, கௌரி | | |
| பாடியவர் | திருஞானசம்பந்தர், சுந்தரர் | பதிகங்கள் | 2 |

812. நத்தார்படை ஞானன்பசு
 வேறிந்நனை கவுள்வாய்
மத்தம்மத யானையுரி
 போர்த்தமண வாளன்
பத்தாகிய தொண்டர்தொழு
 பாலாவியின் கரைமேல்
செத்தாரெலும் பணிவான்திருக்
 கேதீச்சரத் தானே. 1

பத்தாகிய தொண்டர் – தொண்டர்களுக்குரிய "பத்துடையீர் ஈசன் பழவடியீர்" – திருவாசகம்

விரும்புதல் பொருந்திய பூதப் படைகளை யுடைய ஞான உருவினனும், இடபத்தை ஏறு கின்றவனும், நனைய ஒழுகுகின்ற இடங்களில் மயக்கத்தைத் தரும் மதத்தையுடைய யானையினது தோலைப் போர்த்த மணவாளக் கோலத்தினனும் ஆகிய, திருக்கேதீச்சரத்தில் எழுந்தருளிய பெருமான், அன்பர்களாகிய அடியவர்கள் வணங்குகின்ற பாலாவியாற்றின் கரைமேல், இறந்தவர்களது எலும்பை அணிபவனாகக் காணப்படுகின்றான்.

813. சுடுவார்பொடி நீறுந்நல
 துண்டப்பிறை கீளும்
கடமார்களி யானையுரி
 யணிந்தகறைக் கண்டன்
படவேரிடை மடவாளொடு
 பாலாவியின் கரைமேல்
திடமாஉறை கின்றான்திருக்
 கேதீச்சரத் தானே. 2

பாலாவி – அங்கு ஓடும் ஆறு

சுடப்பட்ட நுண்ணிய பொடியாகிய நீற்றையும், நல்ல பிளவாகிய பிறையையும், கீளினையும், மதம் நிறைந்த மயக்கத்தையுடைய, யானையினது தோலையும் அணிந்த கறுத்த கண்டத்தை உடையவனாகிய, திருக்கேதீச்சரத்தில் எழுந்தருளியுள்ள பெருமான், பாலாவியாற்றின் கரைமேல், பாம்பு போலும் இடையினையுடைய மங்கை ஒருத்தியோடு நிலையாக வாழ்பவனாய்க் காணப்படுகின்றான்.

814. அங்கம்மொழி யன்னாரவர்
அமரர்தொழு தேத்த
வங்கம்மலி கின்றகடல்
மாதோட்டநன் னகரில்
பங்கஞ்செய்த பிறைசூடினன்
பாலாவியின் கரைமேல்
செங்கண்ணர வசைத்தான்திருக்
கேதீச்சரத் தானே. 3

பங்கம் – குறை – பிழை செய்து அதனால் வரும் குறை நோயினைக் கொண்ட.

பிளவு செய்த பிறையைச் சூடினவனாகிய, திருக்கேதீச்சரத்தில் எழுந்தருளியிருக்கின்ற பெருமான், வேதத்தின் அங்கங்களைச் சொல்லுகின்ற அத்தன்மையையுடைய அந்தணர்களும், தேவர்களும் வணங்கித் துதிக்க, மரக்கலம் நிறைந்த கடல் சூழ்ந்த, 'மாதோட்டம்' என்னும் நல்ல நகரத்தில் பாலாவி ஆற்றின் கரைமேல், சினத்தாற் சிவந்த கண்ணையுடைய பாம்பைக் கட்டியுள்ளவனாய்க் காணப்படுகின்றான்.

815. கரியகறைக் கண்டன்நல
கண்மேல்ஒரு கண்ணான்
வரியசிறை வண்டியாழ்செயும்
மாதோட்டநன் னகருள்
பரியதிரை யெறியாவரு
பாலாவியின் கரைமேல்
தெரியும்மறை வல்லான்திருக்
கேதீச்சரத் தானே. 4

மாதோட்டம் – ஊர்ப்பெயர்
கேதீச்சரம் – கோயிலின் பெயர்
வரிய – வரிகளையுடைய

கருமையாகிய, நஞ்சினையுடைய கண்டத்தை யுடையவனும் சூரிய சந்திரர்களாகிய நல்ல இரு கண்கள்மேலும் மற்றொரு கண்ணை யுடையவனும் ஆகிய, திருக்கேதீச்சரத்தில் எழுந்தருளியிருக்கின்ற பெருமான், கீற்றுக்களையுடைய சிறகுகளையுடைய வண்டுகள் யாழின் இசையை உண்டாக்குகின்ற, 'மாதோட்டம்' என்னும் நல்ல நகரத்தில், பருத்த அலைகளை வீசிக்கொண்டு வருகின்ற பாலாவி யாற்றின் கரைமேல், ஆராயத்தக்க வேதங்களை வல்லவனாய்க் காணப்படுகின்றான்.

816. அங்கத்துறு நோய்கள்ளடி
யார்மேலொழித் தருளி
வங்கம்மலி கின்றகடல்
மாதோட்டநன் னகரில்
பங்கஞ்செய்த மடவாளொடு
பாலாவியின் கரைமேல்
தெங்கம்பொழில் சூழ்ந்ததிருக்
கேதீச்சரத் தானே. 5

உயிரின்கண் உறும் நோயை ஒழித்தலையன்றி, உடற்கண் உறும் நோயை ஒழித்தலை விதந்தோதி யருளினார்.

தன் அடியார்கள் மேலனவாய், அவர்களது உடம்பிற் பொருந்துகின்ற நோய்களை முற்றக் களைந்தருள்பவனாகிய சிவபெருமான், மரக்கலங்கள் நிறைந்த கடல் சூழ்ந்த, 'மாதோட்டம்' என்னும் நல்ல நகரத்தில், தனது திருமேனியின் ஒரு கூற்றை அழகு செய்கின்ற மங்கை ஒருத்தியுடன், பாலாவியாற்றின் கரைமேல், தென்னஞ் சோலை சூழ்ந்த திருக்கேதீச்சரத்தில் எழுந்தருளியிருப்பவ னாய்க் காணப்படுகின்றான்.

817. வெய்யவினை யாயவ்வடி
யார்மேலொழித் தருளி
வையம்மலி கின்றகடல்
மாதோட்டநன் னகரில்
பையேரிடை மடவாளொடு
பாலாவியின் கரைமேல்
செய்யசடை முடியான்திருக்
கேதீச்சரத் தானே. 6

திருக்கேதீச்சரத்தில் எழுந்தருளியிருக்கின்ற பெருமான், தன் அடியவர்மேல் உள்ள கொடிய வினைகளாய் உள்ளனவற்றை முற்ற ஒழித்து நின்று, நிலவுலகத்தில் உள்ளார் உணர்ந்து மகிழ நிற்கின்ற, கடல் சூழ்ந்த, 'மாதோட்டம்' என்னும் நகரத்தில், பாம்பு போலும் இடையினை, உடையவளாகிய ஒருத்தியோடு, பாலாவி யாற்றின் கரைமேல், சிவந்த சடைமுடியை உடையவனாய்க் காணப்படுகின்றான்.

818. ஊனத்துறு நோய்கள் எடி
யார்மேலொழிந் தருளி
வானத்துறு மலியுங்கடல்
மாதோட்டநன் னகரில்
பானத்துறு மொழியாளொடு
பாலாவியின் கரைமேல்
ஏனத்தெயி றணிந்தான்திருக்
கேதீச்சரத் தானே. 7

வானத்து என்றதனை "வால்நத்து" எனப் பிரித்து ''வெள்ளிய சங்குகள் பொருந்திய'' என்றும் கொள்ளலாம்.

திருக்கேதீச்சரத்தில் எழுந்தருளியிருக்கின்ற பெருமான், தன் அடியார்கள் மேலனவாய், உடம்பிற் பொருந்தும் நோய்களை முற்ற ஒழித்து நின்று, அலைகளால் வானத்தைப் பொருத்துகின்ற, நீர் நிறைந்த கடல் சூழ்ந்த, 'மாதோட்டம்' என்னும் நல்ல நகரத்தில், பாலும் விரும்பத்தக்க மொழியையுடையவளாகிய ஒருத்தியோடு, பாலாவியாற்றின் கரைமேல், பன்றியின் கொம்பை அணிந்தவனாய்க் காணப்படுகின்றான்.

819. அட்டன்னழ காகவ்வரை
தன்மேலர வார்த்து
மட்டுண்டுவண் டாலும்பொழில்
மாதோட்டநன் னகரில்
பட்டவ்வரி நுதலாளொடு
பாலாவியின் கரைமேல்
சிட்டன்நமை யாள்வான்திருக்
கேதீச்சரத் தானே. 8

அட்ட மூர்த்தமாய் நிற்பவனாகிய, திருக்கேதீச்சரத்தில் எழுந்தருளியிருக்கின்ற பெருமான், தனது அரையில் பாம்பினை அழகாகக் கட்டிக்கொண்டு, வண்டுகள் தேனை உண்டு ஆரவாரிக்கின்ற சோலை களையுடைய 'மாதோட்டம்' என்னும் நல்ல நகரத்தில், பட்டத்தையணிந்த அழகிய நெற்றியை உடைய ஒருத்தியோடு, பாலாவி யாற்றின் கரைமேல், மேலானவனாயும், நம்மை ஆளுபவனாயும் காணப்படுகின்றான்.

820. மூவரென இருவரென
முக்கண்ணுடை மூர்த்தி
மாவின்கனி தூங்கும்பொழில்
மாதோட்டநன் னகரில்
பாவம்வினை யறுப்பார்பயில்
பாலாவியின் கரைமேல்
தேவன்எனை ஆள்வான்திருக்
கேதீச்சரத் தானே. 9

மூன்று கண்களையுடைய மூர்த்தியாகிய, திருக்கேதீச்சரத்தில் எழுந்தருளியிருக்கின்ற பெருமான், மாமரங்களின் கனிகள் தாழத் தூங்குகின்ற சோலைகளையுடைய, 'மாதோட்டம்' என்னும் நல்ல நகரத்தில் பாவத்தையும், இருவினைகளையும் அறுக்க விரும்புவோர் பலகாலும் வந்து மூழ்குகின்ற பாலாவியாற்றின் கரைமேல், மூவராகியும், இருவராகியும், முதற்கடவுளாகியும் நின்று, என்னை ஆள்பவனாய்க் காணப்படுகின்றான்.

மூவர் – அயன், மால், உருத்திரன்.
இருவர் – அயன், மால். அவரவர் கருத்துப் பற்றி இறைவன் பல்வேறு நிலையினனாய் நின்று ஆட்கொள்ளுதலை, "நானாவித உருவாய் நமை ஆள்வான்" என்ற திருஞானசம்பந்தர் பாடலால் அறியலாம். (1–9–5)

821. கரையார்கடல் சூழ்ந்தகழி
மாதோட்டநன் னகருள்
சிறையார்பொழில் வண்டியாழ்செயுங்
கேதீச்சரத் தானை
மறையார்புகழ் ஊரன்னடித்
தொண்டன்னுரை செய்த
குறையாத்தமிழ் பத்துஞ்சொலக்
கூடாகொடு வினையே. 10

கறுப்பு நிறம் பொருந்திய கடல்சூழ்ந்த, கழியை யுடைய மாதோட்டம் என்னும் நல்ல நகரத்தின் கண் உள்ள, சிறகுகள் பொருந்திய வண்டுகள் யாழிசைபோலும் இசையை உண்டாக்குகின்ற சோலைகளையுடைய திருக்கேதீச்சரத்தில் எழுந்தருளியிருக்கின்ற பெருமானை, அவனது அடிக்குத் தொண்டனாகி, வேதத்தைச் சொல்லுகின்ற, புகழையுடைய நம்பியாரூரன் பாடிய, குறைதல் இல்லாத இத்தமிழ்ப் பாடல்கள் பத்தினையும் பாட, கொடியனவாகிய வினைகள் வந்து பொருந்தமாட்டா.

மறை – வேதம்; திருப்பதிகம்.
ஆர்க்கும் – ஓதுதல்; அருளிச் செய்தல்.

## 81. திருக்கழுக்குன்றம்

பண் : நட்டபாடை

பதிக எண் : 81

| மூர்த்தி | அருள்தரும் பெண்ணினல்லாள் உடனமர் அருள்மிகு வேதகிரீசுவரர் | | |
|---|---|---|---|
| தல இருப்பிடம் | தொண்டை நாட்டில் செங்கல்பட்டிலிருந்து 10 கி.மீ. தொலைவில் அமைந்து உள்ளது. | | |
| தல மரம் | வாழை | | |
| தீர்த்தம் | சங்கு தீர்த்தம் | | |
| பாடியவர் | மூவர் | பதிகங்கள் | 3 |

822. கொன்று செய்த கொடுமை யாற்பல சொல்லவே
நின்ற பாவ வினைகள் தாம்பல நீங்கவே
சென்று சென்று தொழுமின் தேவர் பிரானிடம்
கன்றி னோடு பிடிசூழ் தண்கழுக் குன்றமே. 1

புண்ணியமும், பாவமும் என வினைகள் இரண்டாகலின் "பாவ வினைகள்" என்றருளினார்.

உலகீர்! தேவர்களுக்குத் தலைவனாகிய சிவபெருமானது இடம், பிடியானைகள் தங்கள் கன்றுகளோடு சூழ்ந்திருக்கும் தண்ணிய **திருக்கழுக்குன்றமே**; அதனை, பிற உயிர்களை வருத்து மாற்றாற் செய்த கொடுஞ் செயல்களால், பலரும் பல இகழுரைகளைச் சொல்லுமாறு இழிவெய்த நின்ற பாவமாகிய வினைகள் பலவும் நீங்குதற்பொருட்டுப் பலகாலும் சென்று வணங்குமின்கள்.

823. இறங்கிச் சென்று தொழுமின் இன்னிசை பாடியே
பிறங்கு கொன்றைச் சடையன் எங்கள் பிரானிடம்
நிறங்கள் செய்த மணிகள் நித்திலங் கொண்டிழி
கறங்கு வெள்ளை அருவித் தண்கழுக் குன்றமே. 2

நித்திலம் – முத்து.

உலகீர்! விளங்குகின்ற, கொன்றை மாலையை அணிந்த சடையையுடைய எங்கள் பெருமானது இடம், பல நிறங்களைக் காட்டுகின்ற மணிகளோடு, முத்தினையும் தள்ளிக் கொண்டு பாய்கின்ற, ஒலிக்கும் வெண்மையான அருவிகளையுடைய குளிர்ந்த **திருக்கழுக்குன்றமே;** அதனை, தலைவணங்கிச் சென்று இனிய இசைகளைப் பாடி வழிபடுமின்கள்.

824. நீள நின்று தொழுமின் நித்தலும் நீதியால்
ஆளும் நம்ம வினைகள் அல்கி அழிந்திடத்
தோளும் எட்டு முடைய மாமணிச் சோதியான்
காள கண்டன் உறையுந் தண்கழுக் குன்றமே. 3

அல்கி – வலி குன்றி.

உலகீர்! நம்மை ஆளுகின்ற நம் வினைகள் குறைந்து, முழுதும் ஒழிதற்பொருட்டு, தோள்கள் எட்டினையும் உடைய, சிறந்த மாணிக்கம்போலும் ஒளியையுடையவனாகிய, நஞ்சணிந்த கண்டத்தை உடையவன் எழுந்தருளியிருக்கின்ற, குளிர்ந்த **திருக்கழுக் குன்றத்தை,** நாள்தோறும், முறைப்படி, நெடிது நின்று வழிபடுமின்கள்.

825. வெளிறு தீரத் தொழுமின் வெண்பொடி யாடியை
முளிறி லங்கு மழுவா ளன்முந்தி உறைவிடம்
பிளிறு தீரப் பெருங்கைப் பெய்மதம் மூன்றுடைக்
களிறி னோடு பிடிசூழ் தண்கழுக் குன்றமே. 4

வெளிறு – அறியாமை; முளிறு – ஒளி, கூர்மை.
பிளிறு – யானையின் முழக்கம்.

உலகீர்! வெம்மை பொருந்திய மழுப்படையை உடைய சிவபெருமான் முற்பட்டு எழுந்தருளியிருக்கின்ற இடம், பிளிறுகின்ற, மனவலியையும், பெரிய தும்பிக்கையையும், பொழிகின்ற மதங்கள் மூன்றையும் உடைய களிற்றி யானைகளோடு, பிடி யானைகள் சூழ்ந்துள்ள, குளிர்ந்த **திருக்கழுக்குன்றமே;** ஆதலின், உங்கள் அறியாமை நீங்குதற் பொருட்டு, அங்குச்சென்று, திருநீற்றில் மூழ்குகின்றவனாகிய அப்பெருமானை வழிபடுமின்கள்.

826. புலைகள் தீரத் தொழுமின் புன்சடைப் புண்ணியன்
இலைகொள் சூலப் படையன் எந்தை பிரானிடம்
முலைகள் உண்டு தழுவுக் குட்டி யொடுமுசுக்
கலைகள் பாயும் புறவில் தண்கழுக் குன்றமே. 5

புலைகள் – கொலை முதலான குற்றங்கள்.

உலகீர்! புல்லிய சடையை உடைய அற வடிவினனும், இலை வடிவத்தைக்கொண்ட சூலப் படையை உடைய எம் தந்தையும், எங்கள் தலைவனும் ஆகிய இறைவனது இடம், பாலை உண்டு தழுவுதலை உடைய குட்டியோடு பெண் முசுவும், அதனோடு ஆண் முசுவும் மரக்கிளைகளில் தாவுகின்ற காட்டினையுடைய, குளிர்ந்த **திருக்கழுக்குன்றமே;** அதனை உங்கள் கீழ்மைகள் எல்லாம் நீங்கும் பொருட்டுச் சென்று வழிபடுமின்கள்.

827. மடமு டைய அடியார் தம்மனத் தேயுற
விடமு டைய மிடறன் விண்ணவர் மேலவன்
படமு டைய அரவன் றான்பயி லும்மிடம்
கடமு டைய புறவிற் றண்கழுக் குன்றமே. 6

மடம் – ஏழைமை. ஏனையவற்றை உணராமை குறித்தது. கடம் – காடு.

நஞ்சினை உடைய கண்டத்தையுடையவனும், தேவர்கட்கு மேலானவனும், படமுடைய பாம்பையுடையவனும் ஆகிய சிவபெருமான், தன்னையன்றி வேறொன்றையும் அறியாத அடியவரது மனத்தில் பொருந்தும் வண்ணம் நீங்காது எழுந்தருளியிருக்கின்ற இடம், காட்டையுடைய, முல்லை நிலத்தோடு கூடிய குளிர்ந்த **திருக்கழுக்குன்றமே.**

828. ஊன மில்லா அடியார் தம்மனத் தேஉற
ஞான மூர்த்தி நட்ட மாடிநவி லும்மிடம்
தேனும் வண்டும் மதுவுண் டின்னிசை பாடவே
கான மஞ்ஞை உறையுந் தண்கழுக் குன்றமே. 7

ஊனம் – பிறவி பற்றிய அறியாமை

ஞான வடிவினனும், நடனம் ஆடுபவனும் ஆகிய சிவபெருமான், குறைபாடு இல்லாத தன் அடியார்களது மனத்திற் பொருந்தும் வண்ணம், நீங்காது எழுந்தருளியிருக்கின்ற இடம், தேனும், வண்டும் தேனை உண்டு இனிய இசையைப் பாட, காட்டில் மயில்கள் அதனைக் கேட்டு இன்புற்றிருக்கின்ற **திருக்கழுக்குன்றமே.**

829. அந்தம் இல்லா அடியார் தம்மனத் தேஉற
வந்து நாளும் வணங்கி மாலொடு நான்முகன்
சிந்தை செய்த மலர்கள் நித்தலுஞ் சேரவே
சந்தம் நாறும் புறவிற் றண்கழுக் குன்றமே. 8

அளவற்ற அடியார்களது மனத்திற் பொருந்தும் வண்ணமும், திருமாலும் நான்முகனும் நாள்தோறும் வந்து வணங்கி வழிபட்ட, மலர்கள் நாள்தோறும் குவிந்து கிடக்கும் வண்ணமும், நடனமாடுகின்ற சிவபெருமான் எழுந்தருளி யிருக்கின்ற இடம், சந்தன மரம் மணம் வீசுகின்ற, முல்லை நிலத்தோடு கூடிய, குளிர்ந்த **திருக்கழுக்குன்றமே.**

830. பிழைகள் தீரத் தொழுமின் பின்சடைப் பிஞ்ஞகன்
குழைகொள் காதன் சூழகன் றானுறை யும்மிடம்
மழைகள் சாலக் கலித்து நீடுயர் வேயவை
கழைகொள் முத்தஞ் சொரியுந் தண்கழுக்
குன்றமே. 9

பிழைகள் – வினைப்பன்மைகளும், மலமும், மலவாதனையும்.

உலகீர்! பின்னிய சடையின்கண் தலைக் கோலங்களையுடையவனும், குழை என்னும் அணியை அணிந்த காதினை உடையவனும் ஆகிய சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்ற இடம், மேகங்கள் மிக முழங்க, மிக உயர்ந்த வேயும், கழையுமாகிய மூங்கில்கள் முத்துக்களைச் சொரிகின்ற, குளிர்ந்த **திருக்கழுக்குன்றமே;** அதனை, உங்கள் குற்றங்களெல்லாம் நீங்குதற் பொருட்டு வழிபடுமின்கள்.

831. பல்லின் வெள்ளைத் தலையன் றான்பயி லும்மிடம்
கல்லின் வெள்ளை அருவித் தண்கழுக் குன்றினை
மல்லின் மல்கு திரள்தோள் ஊரன் வனப்பினால்
சொல்லல் சொல்லித் தொழுவா ரைத்தொழு
மின்களே. 10

மல் – வலிமை. வனப்பு – அழகு; இசைப் பாகுபாடு

உலகீர்! பற்களையுடைய வெண்மையான தலையை உடையவன் நீங்காது எழுந்தருளி யிருக்கின்ற இடம், பாறைகளின்மேல் வீழ்கின்ற வெண்மையான அருவிகளையுடைய, குளிர்ந்த **திருக்கழுக்குன்றமே;** அதனை, வலிமை மிக்க, திரண்ட தோள்களையுடையவனாகிய நம்பி யாரூரனது வனப்புடைய பாடல்களால் துதித்து வழிபடுவோரை வழிபடுமின்கள்.

## 82. திருச்சுழியல்

பண் : நட்டபாடை | பதிக எண் : 82

| மூர்த்தி | அருள்தரும் துணைமாலை நாயகி உடனமர் அருள்மிகு திருமேனிநாதர். | | |
|---|---|---|---|
| தல இருப்பிடம் | பாண்டி நாட்டில் மானாமதுரை – பார்த்திபனூர் – பரமக்குடி சாலையில் பார்த்திபனூரிலிருந்து 6 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| தல மரம் | அரசு, புன்னை | | |
| தீர்த்தம் | கௌவைக்கடல், பூமி, சூல தீர்த்தங்கள் | | |
| பாடியவர் | நம்பியாரூரர் | பதிகம் | 1 |

இத்திருப்பதிகம், இறைவரை வழிபடுவார் எய்தும் பயன்களை வகுத்தருளியது.

832. ஊனாய்உயிர் புகலாய்அக
லிடமாய்முகில் பொழியும்
வானாய்வரு மதியாய்விதி
வருவானிடம் பொழிலின்
தேனாதரித் திசைவண்டினம்
மிழற்றுந்திருச் சுழியல்
நானாவிதம் நினைவார்தமை
நலியார்நமன் தமரே. 1

உடம்புகளாகியும், அவைகளில் புகுதலை யுடைய உயிர்களாகியும், அகன்ற நிலமாகியும், மேகங்கள் நின்று மழையைப் பொழியும் வானமாகியும், வினைப்பயன் வருதற்கு வழியாகிய உள்ளமாகியும் நிற்பவனாகிய இறைவனது இடம், சோலைகளில் தேனை விரும்பி வண்டுக் கூட்டம் இசைபாடுகின்ற திருச்சுழியலாகும். அதனைப் பல்லாற்றானும் நினைபவர்களை, கூற்றுவன் ஏவலர்கள் துன்புறுத்தமாட்டார்கள்.

"புகல் உயிராய்" எனவும், "விதி வரு மதியாய்" எனவும் மாற்றி உரைக்க வேண்டும். மதி – இங்கு புத்தி தத்துவம். புண்ணிய பாவங்கட்குப் பற்றுக் கோடாவது புத்தித் தத்துவமே. ஊன் – உடல். உயிர்புகல் – அதனுள் உயிர் வைத்தல். அகலிடம் – அவ்வுயிருக்கு புவனம். நானாவிதம் – பலவகை.

833. தண்டேர்மழுப் படையான்மழ
விடையான்எழு கடல்நஞ்
சுண்டேபுரம் எரியச்சிலை
வளைத்தான்இமை யவர்க்காத்
திண்டேர்மிசை நின்றான்அவன்
உறையுந்திருச் சுழியல்
தொண்டேசெய வல்லாரவர்
நல்லார்துயர் இலரே. 2

தண்டுபோல மழுப்படையை ஏந்தியவனும், இளமையான இடபத்தையுடையவனும், தேவர்கள் பொருட்டு, கடலில் எழுந்த நஞ்சினையுண்டு, திரிபுரங்கள் எரியும்படி வில்லை வளைத்துத் திண்ணிய தேரின்மேல் நின்றவனும் ஆகிய சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்ற திருச்சுழியலிற் சென்று அவனுக்குத் தொண்டு செய்ய வல்லவர்கள், இன்பம் உடையவரும், துன்பம் இல்லாதவரும் ஆவர்.

திண்டேர் – பூமியாகிய தேர். திண்மை – நிலத்தின் தன்மை.

834. கவ்வைக்கடல் கதறிக்கொணர்
முத்தங்கரைக் கேற்றக்
கொவ்வைத்துவர் வாயார்குடைந்
தாடுந்திருச் சுழியல்
தெய்வத்தினை **வழிபாடுசெய்**
**தெழுவார்அடி தொழுவார்**
அவ்வத்திசைக் கரசாகுவர்
அலராள் பிரியாளே. 3

அடியாரது பெருமையையும் உணர்த்துகிறார்.
கவ்வை – பேரோசை. அலராள் – திருமகள்.

ஓசையையுடைய கடல், முழக்கம்செய்து, தான் கொணர்ந்த முத்துக்களைக் கரையின்கண் சேர்க்க, அங்கு, கொவ்வைக் கனிபோலும் சிவந்த வாயையுடைய மகளிர் மூழ்கி விளையாடுகின்ற **திருச்சுழியலில் எழுந்தருளியிருக்கின்ற கடவுளை வழிபட்டு மீள்கின்றவரது திருவடிகளை வணங்குவோர், தாம் தாம் வாழ்கின்ற நாட்டிற்கு அரசராய் விளங்குவர்;** அவ்வரசிற்குரியவளாகிய திருமகள் அவர்களை விட்டு நீங்காள்.

835. மலையான்மகள் மடமாதிட
மாகத்தவண் மற்றுக்
கொலையானையின் உரிபோர்த்தஎம்
பெருமான்திருச் சுழியல்
அலையார்சடை யுடையான்அடி
**தொழுவார்பழு துள்ளம்**
**நிலையார்**திகழ் புகழால்நெடு
வானத்துயர் வாரே. 4

மலையரையனுக்கு மகளாகிய இளைய மாது தனது திருமேனியின்கண் இடப்பகுதியினளாக, கொலைத் தொழிலையுடைய யானையின் தோலைப் போர்த்துள்ள எம் பெருமானாகிய, திருச்சுழியலில் எழுந்தருளியிருக்கின்ற, நீர் பொருந்திய சடையை உடையவனது திருவடியைத் தொழுபவர்கள், மனத்தில் குற்றம் பொருந்தாதவராவர்; இவ்வுலகில் விளங்குகின்ற புகழை நாட்டிய மகிழ்வோடு நீண்ட வானுலகத்திற்கும் மேற்செல்வார்கள்.

836. உற்றான்நமக் குயரும்மதிச்
சடையான்புலன் ஐந்தும்
செற்றார்திரு மேனிப்பெரு
மான்ஊர்திருச் சுழியல்
பெற்றான்இனி துறையத்திறம்
பாமைத்திரு நாமம்
கற்றாரவர் கதியுட் செல்வர்
ஏத்தும்மது கடனே. 5

திறம்பாமை – பிழையாதபடி.
திருநாமம் – திருவைந்தெழுத்து.

நமக்கு உறவாயுள்ளவனும், மேன்மை தங்கிய சந்திரனை யணிந்த சடையை யுடையவனும், ஐம்புலன்களையும் வென்று பொருந்திய திருமேனியையுடைய பெருமானும் ஆகிய இறைவனது ஊர் திருச்சுழியலே. அதன்கண் நீங்காது இனிது எழுந்தருளியிருக்கப் பெற்ற அவனது திருநாமத்தைப் பயின்றவர், உயர் கதியிற் செல்வர்; ஆதலின் உலகீர், அவனது திருப்பெயரைப் போற்றுமின்; அதுவே உங்கட்குக் கடமையாவது.

**837.** மலந்தாங்கிய பாசப்பிறப்
பறுப்பீர்துறைக் கங்கைச்
சலந்தாங்கிய முடியான்அமர்ந்
திடமாந்திருச் சுழியல்
நிலந்தாங்கிய **மலராற்கொழும்**
**புகையால்நினைந் தேத்தும்**
தலந்தாங்கிய புகழான்மிகு
**தவமாம்**சது ராமே. 6

மாசினை உடைய பாசத்தால் வருகின்ற பிறப்பினை அறுக்க விரும்புகின்றவர்களே! துறைகளை உடையதாதற்கு உரிய கங்கை யாகிய நீரினைத் தாங்கியுள்ள முடியையுடைய சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்ற இடமாகிய திருச்சுழியலை, நிலம் சுமந்து நிற்கின்ற மலர்களாலும், செழுமையான நறும் புகைகளாலும் வழிபட்டு, நினைந்து துதிமின்கள்; உமக்கு இவ்வுலகம் சுமக்கத்தக்க புகழோடு கூடிய மிக்க தவம் உளதாகும் திறல் உளதாகும்.

மலந்தாங்கிய பாசம் – ஆணவம். மாசாவது அறிவை மூடுதல். அதனால் அது இருள் என்னும் பெயரைப் பெற்றது. அது காரணமாக வினையும், வினை காரணமாக உடம்பும் வருதலின் "மலந்தாங்கிய பாசப் பிறப்பு" என்று அருளினார். மலரால் புகையால் நினைந்து ஏத்துதல் – தவம்.
சதுர் – மேம்பாடு – அறிவு.
மலர், புகை – மெய்யால் செய்யப்படுவது.
நினைதல் – மனத்தால் செய்யப்படுவது.
ஏத்துதல் – வாயால் செய்யப்படுவது. எனவே முக்கரண வழிபாடே தவம்.

**838.** சைவத்தசெவ் வுருவன்திரு
நீற்றன்னுரு மேற்றன்
கைவைத்தொரு சிலையால்அரண்
மூன்றும்மெரி செய்தான்
தெய்வத்தவர் தொழுதேத்திய
குழகன்திருச் சுழியல்
மெய்வைத்தடி நினைவார்வினை
தீர்தல்லெளி தன்றே. 7

குழகன் – இளையோன்

சிவாகமங்களிற் சொல்லப்பட்ட வேடத்தை யுடைய சிவந்த திருமேனியையுடையவனாய்த் திருநீற்றை யணிபவனும், இடிபோலும் குரலை யுடைய இடபத்தை யுடையவனும், கையின்கண் வைத்த ஒரு வில்லாலே மூன்று கோட்டை களையும் எரித்தவனும், தெய்வத் தன்மையை யுடைய தவத்தோர் வணங்கித் துதிக்கின்ற அழகனும் ஆகிய இறைவனது திருச்சுழியலை உள்ளத்துள் வைத்து, அவனது திருவடியை நினைபவரது வினைகள் நீங்குதல் எளிது.

**839.** பூவேந்திய பீடத்தவன்
றானும்மடல் அரியும்
கோவேந்திய வினயத்தொடு
குறுகப்புக லறியார்
சேவேந்திய கொடியானவன்
உறையுந்திருச் சுழியல்
மாவேந்திய கரத்தான்எம
சிரத்தான்றன தடியே. 8

கோவேந்திய வினயம் – தம்மாற்றலே பெரிதென்ற எண்ணம்.

எருதினை, ஏந்துகின்ற கொடியாகப் பெற்ற சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்ற திருச்சுழியலில், மானை ஏந்திய கையை யுடையவனும், எங்கள் தலைகளின்மேல் உள்ளவனும் ஆகிய அவனது திருவடிகளை, தலைமை அமைந்த வணக்கத்தோடு அணுகச் சென்று அடைதலை, மலராகிய, உயர்ந்த இருக்கையில் உள்ளவனாகிய பிரமனும், வலிமையுடைய திருமாலும் ஆகிய இவர்தாமும் அறியமாட்டார்.

840. கொண்டாடுதல் புரியாவரு
தக்கன்பெரு வேள்வி
செண்டாடுதல் புரிந்தான்திருச்
சுழியற்பெரு மானைக்
குண்டாடிய சமணாதர்கள்
குடைச்சாக்கியர் அறியா
மிண்டாடிய அதுசெய்தது
வானால்வரு விதியே. 9

தன்னையே மதித்துக் கொள்ளுதலைச் செய்து நின்ற தக்கனது பெருவேள்வியை, பந்தாடுதல் போலத் தகர்த்து வீசி விளையாடினவனாகிய திருச்சுழியலில் எழுந்தருளியிருக்கின்ற இறைவனை, மூர்க்கத்தன்மை பேசுகின்ற சமணராகிய அறிவிலிகளும், குடையை உடையவராகிய புத்தர்களும் அறியாமல், வலிமை பொருந்திய வாதுசெய்து, அதன் வண்ணமே யாவார்களாயின், அஃது அவர் வினைப்பயனேயாகும்.

செண்டாடுதல் – சிதறச் செய்து பந்து போல ஆடுதல்.
மிண்டு – குற்றம்.

841. நீருர்தரு நிமலன்திரு
மலையார்க்கயல் அருகே
தேரூர்தரும் அரக்கன்சிரம்
நெரித்தான்திருச் சுழியல்
பேரூரென வுறைவானடிப்
பெயர்நாவலர் கோமான்
ஆரூரன தமிழ்மாலைபத்
தறிவார்துய ரிலரே. 10

அருவிகள் பாய்கின்ற இறைவனது திருமலையில் எதிரொலி உண்டாக, அதன் அருகில் தனது ஊர்தியைச் செலுத்திய இராவணனது தலையை நெரித்தவனும், திருச்சுழியலைத் தனது பெரிய ஊராகக் கொண்டு எழுந்தருளியிருப்பவனும் ஆகிய இறைவனது திருவடிப் பெயரைப் புனைந்தவனும், திருநாவலூரார்க்குத் தலைவனும் ஆகிய நம்பியாரூரனது இத் தமிழ்ப் பாடல்கள் பத்தினையும் உணர்கின்றவர், துன்பம் யாதும் இலராவர்.

சுழி – நீர் சுழித்துச் சேரும் மடு.
– விழும் பொருளை அழுத்தும் தன்மையில் நீர்சுழித்துச் சேரும் மடு.
– சுழியில் அகப்பட்டால் தப்பிப் பிழைத்தலரிது.

கருச்சுழி – கருப்பம் என்னும் சுழி. இச்சுழியில் அகப்பட்டவர்கள் தாம் நாம் எல்லாம். எப்படித் தப்பிப் பிழைப்பது ? சிவபெருமான் ஒருவரால் தான் பிழைக்க வைக்க முடியும். அவர் எப்போது அதைச் செய்விப்பார் ? அவரே கதி என்று பல யுகங்கள் தவமிருந்தால் அவர் செய்வார் ? தவமென்பது மன, மெய், மொழிகளால் அவருக்குப் பணி விடை செய்வதாகும்.

"திருச்சுழிய லிடங்கொண்ட செம்பொன்மலைச் சிலையாரைக்
கருச்சுழியில் வீழாமைக் காப்பாரைக் கடல் விடத்தின்
இருட்சுழியு மிடற்றாரை யிறைஞ்சியெதி ரிதழிமலர்ப்
பருச்சுழியத் துட "னூனாயுயி" ரெனும்பா மலர் புனைந்தார்"

– பெரியபுராணம் 3858.

## 83. திருவாரூர்

**பண் : நட்டபாடை** **பதிக எண் : 83**

சுவாமிகள், திருக்கச்சியில் இடக்கண் பெற்று, ஏகம்பத்திறைவர் திருக்காட்சி கொடுத்தருளக் கண்டு, திருப்பதிகம் பாடிச் சிலநாள் தங்கியிருந்து, பின் திருவாரூருக்குச் செல்ல விரும்பிக் காஞ்சித் திருநகரைக் கடந்து, 'எந்தைபிரான் திருவாரூர் என்று கொல் எய்துவது' என்று பாடிச் சென்றருளியது இத்திருப்பதிகம் (தி. 12 ஏயர்கோன். புரா. 291).

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் அல்லியங்கோதை உடனமர் அருள்மிகு புற்றிடங்கொண்டீசர் – வன்மீகநாதர். | | |
| **தல இருப்பிடம்** | சோழ நாட்டில் காவிரி தென்கரையில் தஞ்சை மாநகரிலிருந்து 70 கி.மீ. நாகைக்காரோணத்திலிருந்து 30 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | பாதிரி | | |
| **தீர்த்தம்** | கமலாலயம் | | |
| **பாடியவர்** | மூவர் | **பதிகங்கள்** | 34 |

842. அந்தியும் நண்பகலும் அஞ்சுப தம்சொல்லி
முந்தி எழும்பழைய வல்வினை மூடாமுன்
சிந்தை பராமரியாத் தென்திரு வாரூர்ப்புக்
கெந்தை பிரானாரை என்றுகொல் எய்துவதே. 1

முற்பட்டு வருகின்ற பழையனவாகிய வலிய வினைவந்து சூழும் முன்னே, என் தந்தைக்கும் தலைவராய் உள்ள இறைவரை, அடியேன், இரவும் பகலும் திருவைந்தெழுத்தை ஓதும் முறையில் சித்தத்தால் சிந்தித்துக் கொண்டு, அழகிய திருவாரூரினுட் சென்று தலைக்கூடப் பெறுவது எந்நாளோ!

பதம் – சொல்; அஃது ஆகுபெயராய் எழுத்தை உணர்த்திற்று. அஞ்சுபதம் – திருவைந்தெழுத்து. ஒவ்வொரு எழுத்தும் ஒவ்வொரு பொருளைக் குறிக்கும் என்பது மரபு.
பராமரியா – ஆலோசித்து; ஆராய்ந்து.
"அந்தியு நண்பகலும்" என எடுத்து – இது பதிகத் தொடக்கமாகிய முதற் குறிப்பு.
"எந்தை பிரான் றிருவாரூர் என்று கொலெய்துவது" என்று – இது பதிகக் கருத்தும் உட்குறிப்புமாம்.
"தென்றிருவாரூர் புக்கு எந்தை பிரானாரை என்று கொலெய்துவதே" என்று வரும் பதிக மகுடம் காண்க; எந்தை பிரானாரை – என்னுயிர்க்கின்னமுதை – இடுபலி கொள்ளியை – ஏழுலகாளியை – என் மணியை – எம்மிறையை – என்று பதிகத்துட் பலவாற்றாலும் பன்னி ஆரூரில் இறைவரை எய்துவதென்று கொல் ? என்றருளியிருப்பினும் பிரானது திருவாரூரினை எய்துவதென்பதே கருத்தாகக் காண்க என்று ஆசிரியர் காட்டியவாறு. என்னை ? "தென் திருவாரூர் புக்கு" என்றும், "எல்லை மிதித்து" என்றும், "என்றன் மனங்குளிர", "எண்ணிய கண்குளிர" என்றும் வருவனவற்றாலும், இடப்பெயர்ச்சியால் ஆரூர் என்ற ஊரினை நீங்கி நின்ற அளவே யன்றி, ஆரூரப் பிரானாரை ஒருபோதும் மறந்து நீங்கினா ரல்லராகலானும், (மிக நினைந்து (3427) – ஒரு நாள் மிக நினைந்த சிந்தையராய் (3428) "ஆரூரானை மறக்கலுமாமே"(பதிகம்) தென் திருவாரூர் என்னும் ஊரினைச் சென்று எய்துவ தென்றுகொல் என்பதே பதிகக் கருத்தாம். இதுபற்றியே "பதிகம் திருவாரூர் மேற் பரவி" (3444) என்றும், "திருவாரூர் என்று கொல் எய்துவது என்று" என்றும் அருளினார்.

| | |
|---|---|
| 843. நின்ற வினைக்கொடுமை நீங்க இருபொழுதும்<br>துன்று மலரிட்டுச் சூழும் வலஞ்செய்து<br>தென்றன் மணங்கமழுந் தென்திரு வாரூர்புக்<br>கென்றன் மனங்குளிர என்றுகொல் எய்துவதே. 2 | செய்யப்பட்டு நிற்கின்ற வினைகளது கொடுமைகளெல்லாம் நீங்குமாறு, காலை மாலை இருபொழுதினும், நெருங்கிய மலர்களைத் தூவி, சுற்றிலும் வலமாக வந்து எனது மனம் குளிர்தற்கு, தென்றற் காற்று நறுமணங் கமழ வருகின்ற அழகிய திருவாரூ ரினுட் சென்று எந்தை பிரானாரை, அடியேன் தலைக்கூடப் பெறுவது எந்நாளோ! |
| 844. முன்னை முதற்பிறவி மூதறி யாமையினால்<br>பின்னை நினைந்தனவும் பேதுற வும்மொழியச்<br>செந்நெல் வயற்கழனித் தென்திரு வாரூர்புக்<br>கென்னுயிர்க் கின்னமுதை என்றுகொ<br>லெய்துவதே. 3<br><br>மூதறியாமை – முதுமை – தொன்மை; அறிவில்லாமை.<br>பேதுறவு – மயக்கம். | தொன்று தொட்டு வருகின்ற பிறவிகளில், பெரிய அறியாமை காரணமாக, வருங்காலத்திற் பெற நினைத்த நினைவுகளும், அவற்றால் விளைகின்ற துன்பங்களும் ஒழியுமாறு, செந்நெற்களை விளைவிக்கின்ற, நல்ல வயல்களாகிய கழனிகளையுடைய, அழகிய திருவாரூரினுட் சென்று, எனது உயிருக்கு இனிய அமுதம் போல்பவனை, யான் தலைக்கூடப் பெறுவது எந்நாளோ! |
| 845. நல்ல நினைப்பொழிய நாள்களில் ஆருயிரைக்<br>கொல்ல நினைப்பனவும் குற்றமும் அற்றொழியச்<br>செல்வ வயற்கழனித் தென்திரு வாரூர்புக்<br>கெல்லை மிதித்தடியேன் என்றுகொல்<br>எய்துவதே. 4 | நல்ல எண்ணம் நீங்குதலால், அரிய உயிர்களை அவை உடம்போடு கூடி வாழும் நாட்களிலே கொல்லுதற்கு எண்ணுகின்ற எண்ணங்களும், மற்றும் பல குற்றங்களும் அடியோடு அகன்றொழியுமாறு, உயர்ந்த நெல் விளைகின்ற வயல்களையுடைய அழகிய திருவாரூரின் எல்லையை மிதித்து, அந்நகரினுட் சென்று, எனது உயிர்க்கு இனிய அமுதம் போல்பவனாகிய இறைவனை, அடியேன் தலைக்கூடப் பெறுவது எந்நாளோ! |
| 846. கடுவரி மாக்கடலுட் காய்ந்தவன் தாதையைமுன்<br>சுடுபொடி மெய்க்கணிந்த சோதியை வன்றலைவாய்<br>அடுபுலி ஆடையனை ஆதியை ஆரூர்புக்<br>கிடுபலி கொள்ளியைநான் என்றுகொல்<br>எய்துவதே. 5<br><br>கடுவரிமா – கொடிய நீண்ட மாமரம்.<br>கொள்ளி – கொள்பவன். | நஞ்சு போலும் நிறத்தையுடைய மாமரத்தைக் கடலின் நடுவண் அழித்தவனாகிய முருகனுக்குத் தந்தையும், எல்லாவற்றினும் முன்னதாக, சுடப்பட்ட சாம்பலை உடம்பின்கண் பூசிய ஒளிவடிவினனும், கொல்லும் தன்மை வாய்ந்த புலியினது தோலாகிய உடையை உடுத்தவனும், உலகிற்கு முதல்வனும், வலிய தலைஓட்டின்கண், மகளிர் இடுகின்ற பிச்சையை ஏற்பவனும் ஆகிய எம் பெருமானை, திருவாரூரினுட் சென்று, அடியேன் தலைக்கூடப் பெறுவது எந்நாளோ! |

847. சூழொளி நீர்நிலந்தீத் தாழ்வளி ஆகாசம்
வாழுயர் வெங்கதிரோன் வண்டமிழ் வல்லவர்கள்
ஏழிசை ஏழ்நரம்பின் ஓசையை ஆரூர்ப்புக்
கேழுல காளியைநான் என்றுகொல் எய்துவதே. 6

பல உயிர்களும் வாழ்கின்ற நிலமும், தாழ வீழும் நீரும், ஒளியையுடைய தீயும், யாண்டும் இயங்கும் காற்றும், உயர்ந்துள்ள ஆகாயமும், வெவ்விய கதிர்களை யுடையோனாகிய பகலவனும், வளவிய தமிழில் வல்லவர்கள் வகுத்த ஏழிசையாகிய ஏழுநரம்பின் ஓசையும் என்னும் இவை எல்லாமாய் நிற்பவனும், ஏழுலக மாகிய இவைகளைத் தன் வழிப்படுத்து ஆள்பவனும் ஆகிய எம்பெருமானை திருவாரூரினுட் சென்று, அடியேன் தலைக்கூடப் பெறுவது எந்நாளோ!

848. கொம்பன நுண்ணிடையாள் கூறனை **நீறணிந்த**
வம்பனை எவ்வுயிர்க்கும் வைப்பினை ஒப்பமரர்
செம்பொனை நன்மணியைத் தென்திரு வாரூர்ப்புக்
கென்பொனை என்மணியை என்றுகொல்
எய்துவதே. 7

இளங்கொம்பு போலும் நுண்ணிய இடையினை யுடைய உமையது கூற்றினையுடையவனும், திருநீறாகிய நறுமணப் பூச்சினை அணிந்தவனும், எல்லா உயிர்கட்கும் சேமநிதி போல்பவனும் தன்னோடு ஒப்புமையுடைய தேவர்கட்குச் செம்பொன்னும், நவமணியும் போல்பவனும், எனக்கு உரிய பொன்னும் மணியுமாய் இருப்பவனும் ஆகிய எம் பெருமானை, அழகிய திருவாரூரினுட் சென்று, அடியேன் தலைக்கூடப் பெறுவது எந்நாளோ!

வம்பனை – வம்பு – மணம்; புதுமையுமாம். இறைவருக்குத் திருநீறு நறுமணப் பூச்சாக அருளிச் செய்யப்படுகிறது. விலையிலி சாந்தமென்று வெறிநீறு பூசி – 4–8–9. சாந்தமே திருநீறு.
தவளச் – சாம்பலம் பொடி சாந்தெனத் தைவந்து – 11–11–10.

849. ஆறணி நீள்முடிமேல் ஆடர வஞ்சூடிப்
பாறணி வெண்டலையிற் பிச்சைகொள் நச்சரவன்
சேறணி தண்கழனித் தென்திரு வாரூர்ப்புக்
கேறணி எம்மிறையை என்றுகொல் எய்துவதே.
8

"எம்மிறையை என்றுகொல் எய்துவதே" என்பது பதிக மகுடமாகும்.
பாறு – பருந்து. பாறணி வெண்டலை – கழுகுகள் வாழும் காட்டில் கிடக்கும் வெண்தலை;
கபாலம் – மண்டையோடு.

கங்கையைத் தாங்கிய நீண்ட சடையின் மேல், படமெடுத்து ஆடுகின்ற பாம்பைச் சூடுகின்றவனும் பருந்து சூழும் வெள்ளிய தலை ஓட்டில் பிச்சை ஏற்பவனும், நஞ்சினை யுடைய பாம்பை அணிபவனும் ஆகிய இடபக் கொடியைக் கொண்ட எம் பெருமானை, சேற்றைக் கொண்ட குளிர்ந்த கழனிகளை யுடைய அழகிய திருவாரூரினுட் சென்று, அடியேன் தலைக்கூடப் பெறுவது எந்நாளோ!

850. மண்ணினை உண்டுமிழ்ந்த மாயனும் மாமலர்மேல்
அண்ணலும் நண்ணரிய ஆதியை மாதினொடும்
திண்ணிய மாமதில்சூழ் தென்திரு வாரூர்புக்
கெண்ணிய கண்குளிர என்றுகொல் எய்துவதே. 9

'நீர்' என்னும் பூதத்திற்குத் தலைவன் மாயோனாகிய திருமால். 'நிலம்' எனும் பூதம் நீரில் ஒடுங்கி நீரில் தோன்றுவது என்பது பற்றியும் மாயோன், 'மண்ணினை உண்டு உமிழ்ந்தவன்' எனக் கூறப்படுவன் என்க.

மண்ணுலகத்தை உண்டு உமிழ்ந்த திருமாலும், சிறந்த தாமரை மலர்மேல் இருக்கும் தலைவனாகிய பிரமனும் அணுகுதற்கரிய இறைவனை, இறைவியோடும் மறவாது நினைக்குமாறும், கண்டு கண் குளிருமாறும், திண்ணிய, பெரிய மதில் சூழ்ந்த, அழகிய திருவாரூரினுட் சென்று, அடியேன் தலைக்கூடப் பெறுவது எந்நாளோ!

851. மின்னெடுஞ் செஞ்சடையான் மேவிய ஆரூரை
நன்னெடுங் காதன்மையால் நாவலர் கோன்ஊரன்
பன்னெடுஞ் சொன்மலர்கொண் டிட்டனபத்
தும்வல்லார்
பொன்னுடை விண்ணுலகம் நண்ணுவர்
புண்ணியரே. 10

இறைவன் வாழ்த்தாகிய பெருமொழியை, "நெடுஞ் சொல்" என்று அருளினார்.

மின்னல் போலும், நீண்ட சிவந்த சடையை யுடைய இறைவன் விரும்பி எழுந்தருளி யிருக்கின்ற திருவாரூரை, திருநாவலூரில் உள்ளார்க்குத் தலைவனாகிய நம்பியாரூரன், நல்ல, நெடிய பேரன்பினால், பல, சிறந்த சொற்களாகிய மலர்களால் அணிசெய்து சாத்திய பாமாலைகள் பத்தினையும் அங்ஙனமே சாத்த வல்லவர்கள் புண்ணியம் உடையவர்களாய், பொன்னை முதற் கருவியாக உடைய விண்ணுலகத்தை அடைவார்கள்.

## 84. திருக்கானப்பேர்

**(காளையார் கோயில்)**

பண் : புறநீர்மை — பதிக எண் : 84

இது பாலையாழ் என்ற பெரும்பண்ணின் இரண்டாவது திறமான நோதிறத்தின் அகநிலைப்பண் 21 என்ற எண்ணுக்குரியது. இப்பண் காலைப்பண், அதிகாலை, பள்ளியுணர்த்தும் பண் இக்காலம் பூபாளம் என்று சொல்லப்படும். பழைய ஏட்டில் ஸ்ரீகண்டி என்று சொல்லப்பட்டுள்ளது. இதன் சுவை உவகையும் மருட்கையும் இதற்கு ஒரே கட்டளைதான் சொல்லப்பட்டுள்ளது. அப்பர் சுவாமிகள் பதிகம் இப்பண்ணில் இல்லை. மற்ற இருவர் பதிகங்களில் உள்ளது. சம்பந்தர் 3:118–123, சுந்தரர் 83–85 ஆக 9 பதிகங்கள். சம்பந்தர் திரு ஆலவாய்க் கோயிலில் சென்று மங்கையர்க்கரசியாரையும் குலச்சிறையாரையும் சிறப்பித்துப் பாடிய "மங்கையர்க்கரசி வளவர் கோன்பாவை" என்ற பதிகம் மிக்க பிரசித்தி பெற்றது. சுந்தரரின் "அந்தியும் நண்பகலும் அஞ்சுபதம் சொல்லி" நன்கு தெரிந்த பதிகம். அப்படியே "தொண்டாடித் தொழலும்".

இவையன்றி வேறு சில சிறப்புக்களும் இப்பண்ணுக்கு உரியன. திருவிசைப்பாவாகிய ஒன்பதாந் திருமுறையில் இப்பண்ணுக்கு மூன்று பதிகங்கள் உள்ளன. கருவூர்த்தேவர் பாடிய கோயில் திருக்களந்தை. ஆதித்தேசுரம் வேணாட்டடிகள் பாடிய கோயில்.

மற்றொன்று இதன் பெயர் பற்றியது. இதன் பெயர் நோதிறம் என்றே 21–ஆம் பண்ணுக்குச் சொல்லப்பட்டுள்ளது. இது மிகவும் பழமையான பண். சாலாபாணிபோல இதன் பெயரையும் ஏட்டில் படித்தவர்கள் நேர்திறம் என்று படித்திருக்கிறார்கள்.

இப்பண்ணின் பெயர் ஐந்து நூல்களில் வருகிறது. அவை காலமுறைப்படி பின்வருவன 1. சங்க நூலாகிய கலித்தொகை. 2. சங்கநூலாகிய பரிபாடல் 3. முதல் பெருங்காப்பியமாகிய சிலப்பதிகாரம் 4.அடியார்க்குநல்லார் சிலப்பதிகாரத்துக்கு உரை எழுதுவதற்கு ஆதாரமான இலக்கண நூல்களுள் ஒன்றாய் மிகவும் சமீபகாலத்தில் (1973–இல்) அச்சாகி வெளிவந்த பஞ்சமரபு என்ற இசை இலக்கண நூல் 5. யாப்பருங்கல விருத்தியுரையில் காணப்படும் பெயர்.

**புறநீர்மைப் பண்ணின் இலக்கணம்**

பூச்சீர் இரண்டோர், புறமாய் நிற்க
தொகையொரு புறமாய்த் தோன்றும் பூவொடு
யாத்துக் கோவை கொண்ட தனாலது புற
நீர்மைப் பண்ணென நிகழ்த்தப் பெற்றது

**பொருள்**

இரண்டு பூச்சீர்கள் ஓர் புறத்தே நிற்க, இவை இரண்டையும் தன்னகத்துக் கொண்டு தோன்றும் பூச்சீர் ஒன்றினொடு பொருந்தி மாச்சீரினால் கோவை கொள்ளப்படுதலின் இது புறநீர்மைப் பண் என்றாகிறது. பூச்சீர் மூன்றும் யாழாகிறது. இவற்றைக் கோவையாகக் கோக்கும் மாச்சீர் யாப்பாகிறது. இதுவே புறநீர்மைப் பண்ணின் இலக்கணமாகிறது.

மூலதாரத்தில் தோன்றுகின்ற ஆவளி என்னும் வாசி (பிராணவாயு) இடகலை, பிங்கலை என்னும் பெயர் பெற்று உட்புறம் செல்லுதல், வெளியே வருதல் என்ற நிலைகளிலிருந்து யோகத்தால் மேம்பட்டு மூக்கின் மேலிடமாகிய சிரத்திற்குச் செல்லும் சுழிமுனை என்னும் நாடியில் ஒன்றி உயர்ந்த தன்மை (அமுதம் ஊறுதல்) அடைதலால் ஆவளி என்னும் பூவின் நிலை முந்நீர்மைத்தாகிறது.

இங்ஙனம் உயிரின் புறத்தே தோன்றி நிகழ்தலின் புறநீர்மை என்றும் பெயர் பெறுகிறது. இத்தகைய தன்மை அடைவைப் பண்ணில் பாடியுள்ளமையால் இது புறநீர்மைப் பண் என்று கொள்ளப் பெறுகிறது.

<table>
<tr><td>மூர்த்தி</td><td colspan="3">அருள்தரும் சொர்ணவல்லி உடனமர் அருள்மிகு காளையப்பர்</td></tr>
<tr><td>தல இருப்பிடம்</td><td colspan="3">பாண்டி நாட்டில் மதுரை – தொண்டிப் பாதையில் மதுரையிலிருந்து 65 கி.மீ. தொலைவில் உள்ளது.</td></tr>
<tr><td>தல மரம்</td><td colspan="3">வில்வம்</td></tr>
<tr><td>தீர்த்தம்</td><td colspan="3">யானைமடு, சிவகெங்கை, காளி.</td></tr>
<tr><td>பாடியவர்</td><td>திருஞானசம்பந்தர், நம்பியாரூரர்</td><td>பதிகங்கள்</td><td>2</td></tr>
</table>

852. தொண்டர் அடித்தொழலும் சோதி இளம்பிறையும்
சூதன மென்முலையாள் பாகமும் ஆகிவரும்
புண்டரிகப் பரிசாம் மேனியும் வானவர்கள்
பூச லிடக்கடல்நஞ் சுண்ட கருத்தமரும்
கொண்ட லெனத்திகழுங் கண்டமு மெண்டோளுங்
கோல நறுஞ்சடைமேல் வண்ணமுங்
கண்குளிரக்
கண்டு தொழப்பெறுவ தென்றுகொ லோஅடியேன்
கார்வயல் சூழ்கானப் பேருறை
காளையையே. 1

அடித்தொழல் – அடியின் கண் தொழுதல்.
– தொழுதலை உடைய அடி.
கார் – நீர்
புண்டரிகப் பரிசு – தாமரை மலர் போன்ற நிறம்
பூசல் – பேரொலி. கொண்டல் – மேகம்.

அடியேன், மிக்க நீரையுடைய வயல்கள் சூழ்ந்த, 'திருக்கானப்பேர்' என்னும் தலத்தில் எழுந்தருளியிருக்கின்ற காளை வடிவத்தின னாகிய பெருமானை, அவனது, அடியவர்கள் வணங்குகின்ற திருவடியையும், ஒளியை யுடைய இளைய பிறைச்சூட்டினையும், சூதாடு கருவிபோலும், மெல்லிய தனங்களையுடைய உமையவளது கூறாய் விளங்கும் இடப்பாகத்தையும், ஒளிவிடுகின்ற செந்தாமரை மலர்போலும் திருமேனியையும், தேவர்கள் ஓலமிட, அதற்கு இரங்கிக் கடலில் தோன்றிய நஞ்சினை உண்ட நினைவுக்குறி நீங்காதிருக்கின்ற, மேகம்போல விளங்குகின்ற கண்டத்தையும், எட்டுத்தோள்களையும், அழகிய நல்ல சடையின்மேல் உள் அணிகளையும் கண்குளிரக் கண்டு வணங்கப் பெறுவது எந்நாளோ!

853. கூத லிடுஞ்சடையும் கோளர வும்விரவுங்
கொக்கிற குங்குளிர்மா மத்தமும்
ஒத்துனதாள்
ஓத லுணர்ந்தடியார் உன்பெரு மைக்குநினைந்
துள்ளுரு காவிரசும் மோசையைப் பாடலும்நீ
ஆத லுணர்ந்தவரோ டன்பு பெருத்தடியேன்
அங்கையின் மாமலர்கொண் டென்கண
தல்லல்கெடக்
காத லுறத்தொழுவ தென்றுகொ லோஅடியேன்
கார்வயல் சூழ்கானப் பேருறை
காளையையே. 2

"நீஆதல்" என்றது ஆன்மாச் சிவமாம் நிலையை. இனிய இசையைப் பாடி அடியவர் சிவமாந் தன்மை பெறுகின்றார் என்க. தொழுந்தோறும் அன்பு பெருகி உயிர் இன்புறும். கூதல் – குளிர்ச்சி.

மிக்க நீரையுடைய வயல்கள் சூழ்ந்த 'திருக்கானப்பேர்' என்னும் தலத்தில் எழுந்தருளியிருக்கின்ற காளை வடிவுடைய தலைவனை அடியேன், என்பால் உள்ள துன்பங்களெல்லாம் கெடுமாறு, அடியவர் உனது பெருமைகளை நினைந்து மனம் உருகி, செறிந்த இசையைப் பாடுதலும், அவர் நீயேயாகும் பேற்றைப் பெறுதலை உணர்ந்து, அவரோடு அன்பு மிகுந்து, உனது திருவடியை மனம் பொருந்திப் பாடுமாற்றைக் கற்று, உனது குளிர்மிகுந்த சடைமுடியையும், அதன்கண் பொருந்திய கொடிய பாம்பையும், கொக்கிறகையும், குளிர்ந்த ஊமத்த மலரையும், அன்பு மேலும் மேலும் பெருகுமாறு, அகங்கையிற் சிறந்த மலர்களைக் கொண்டு வணங்கப் பெறுவது எந்நாளோ!

**854.** நானுடை மாடெனவே நன்மை தரும்பரனை
நற்பத மென்றுணர்வார் சொற்பத மார்சிவனைத்
தேனிடை இன்னமுதை மற்றத னிற்றெளிவைத்
தேவர்கள் நாயகனைப் பூவுயர் சென்னியனை
வானிடை மாமதியை மாசறு சோதியனை
மாருத மும்மனலும் மண்டல மும்மாய
கானிடை மாநடனென் றெய்துவ தென்றுகொலோ
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. 3

நான் உடைமையாகப் பெற்றுள்ள செல்வம் போல எனக்கு நன்மையைத் தருகின்ற மேலானவனும், தன்னையே வீடு பேறாக உணர்பவரது சொல்நிலையில் நிறைந்து நிற்கும் மங்கல குணத்தினனும், தேனிடத்தும், அதன் தெளிவிடத்தும் உள்ள சுவை போல்பவனும், தேவர்களுக்குத் தலைவனும், பூக்கள் உயர்ந்து தோன்றுகின்ற முடியை உடையவனும், வானத்தில் உள்ள சிறந்த சந்திரனும், குற்றம் அற்ற ஒளியையுடைய கதிரவனும், காற்றும், தீயும், நிலமும் ஆகி நிற்பவனும் ஆகிய மிக்க நீரையுடைய வயல்கள் சூழ்ந்த 'திருக்கானப்பேர்' என்னும் தலத்தில் எழுந்தருளியிருக்கின்ற, காளை வடிவத்தினனாகிய பெருமானை, காட்டில் சிறந்த நடனம் ஆடுபவன் என்ற சொல்லித் துதித்துத் தலைக்கூடப் பெறுவது எந்நாளோ!

சொல் நிலையில் நிறைந்திருத்தல், அவர்களது – உணர்விற்கு அகப்பட்டு விளங்கிச் சொல்லாற் சொல்ல நிற்றலாம்.
உணராதார்க்கு உணர வராமையை "அது பழச்சுவை என அமுதென அறிதற் கரிதென எளிதென அமரரும் அறியார்" என்றும் உணர்ந்தவருக்கு உணர வருதலை "இது அவன் திருவுரு இவன் அவன் எனவே எங்களை ஆண்டு கொண்டு" என்ற திருவாசகப் பாடல்களால் அறியலாம்.
நற்பதம் – வீட்டுலகம்.
நான் உடை மாடு – என்னுடைய செல்வம்.

**855.** செற்றவர் முப்புரமன் றட்ட சிலைத்தொழிலார்
சேவக முந்நினைவார் பாவக முந்நெறியும்
குற்றமில் தன்னடியார் கூறு மிசைப்பரிசும்
கோசிக மும்மரையிற் கோவண மும்மதளும்
மற்றிகழ் திண்புயமும் மார்பிடை நீறுதுதை
மாமலை மங்கையுமை சேர்சுவ டும்புகழக்
கற்றன வும்பரவிக் கைதொழ லென்று கொலோ
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. 4

மிக்க நீரையுடைய வயல்கள் சூழ்ந்த 'திருக்கானப்பேர்' என்னும் தலத்தில் எழுந்தருளியிருக்கின்ற காளை வடிவினனாகிய பெருமானை, அவனது, பகைத்தவரது முப்புரங்களை அன்று அழித்த, வில்தொழில் பொருந்திய வீரத்தையும் தன்னை நினைவாரது நினைவின் வண்ணம் நிற்கும் நிலையையும், அவர்களை நடத்துகின்ற முறையையும், குற்றமில்லாத அவனது அடியார்கள் சொல்லுகின்ற புகழின் வகைகளையும், அரையில் உடுக்கின்ற கோவணமும், பட்டும், தோலும் ஆகிய உடைகளையும், வலிமை விளங்குகின்ற திண்ணிய தோள்களையும், நீறு செறிந்த மார்பின்கண் பெருமையையுடைய மலைமகள் தழுவியதனால் உண்டாகிய வடுவினையும், அடியேன், புகழ்ந்து பாடக்கற்றன பலவற்றாலும் துதித்துக் கைகூப்பி வணங்குதல் எந்நாளோ!

பாவகம் – நினைவு; அது, நினைக்கப்படுகின்ற உருவத்தைக் குறித்தது; பாவனை.
சேவகம் – வீரம்
கோசிகம் – கௌசிகம் – பண்.
– அரையில் வீக்கிய பட்டாடை.

856. கொல்லை விடைக்குழகுங் கோல நறுஞ்சடையிற்
கொத்தல ரும்மிதழித் தொத்தும் அதனருகே
முல்லை படைத்தநகை மெல்லிய லாளொருபால்
மோக மிகுத்திலகுங் கூறுசெ யெப்பரிசும்
**தில்லை நகர்ப்பொதுவுற் றாடிய சீர்நடமுந்**
திண்மழு வுங்கைமிசைக் கூரெரி யும்மடியார்
கல்ல வடப்பரிசுங் காணுவ தென்றுகொலோ
கார்வயல் சூழ்கானப் பேருறை
காளையையே. 5

நடனம் எவ்விடத்தும் செய்யப்படினும், அதற்குச் சிறப்பிடம் தில்லையாதல் பற்றி தில்லை நகர்ப் பொது வுற்றாடிய சீர்நடம் என்றருளினார்.

தொத்து – பூங்கொத்து.

மிக்க நீரையுடைய வயல்கள் சூழ்ந்த 'திருக்கானப்பேர்' என்னும் தலத்தில் எழுந்தருளியிருக்கின்ற பெருமானது, முல்லை நிலத்திற்கு உரிய விடையினது அழகையும், அழகிய நல்ல சடையின்கண் கொத்தாய் உள்ள பூக்களையும், மார்பில் கொன்றை மலரின் மாலையையும், அதன் அருகே ஒரு பாகத்தில், முல்லை அரும்பின் தன்மையைக் கொண்ட நகையினையும், மெல்லிய இயல்பினையும் உடையவளாகிய உமாதேவி, காதலை மிகுதியாகக் கொண்டு விளங்குகின்ற அப்பகுதி தருகின்ற எல்லாத் தன்மைகளையும், தில்லை நகரில் உள்ள சபையிற் பொருந்தி நின்று ஆடுகின்ற புகழையுடைய நடனத்தையும், கையில் உள்ள வலிய மழு, மிக்க தீ என்னும் இவற்றையும், அடியவர் சாத்தும் மணிவடத்தின் அழகையும் காண்பது எந்நாளோ!

857. பண்ணுத லைப்பயனார் பாடலும் நீடுதலும்
பங்கய மாதனையார் பத்தியு முத்தியளித்
தெண்ணுத லைப்பெருமான் என்றெழு வாரவர்தம்
மேசற வும்மிறையாம் எந்தையை யும்விரவி
நண்ணுத லைப்படுமா றெங்ஙன மென்றயலே
நையுறு மென்னைமதித் துய்யும்வ
ணம்மருளுங்
கண்ணுத லைக்கனியைக் காண்பது
மென்றுகொலோ
கார்வயல் சூழ்கானப் பேருறை
காளையையே. 6

தாமரை மலரில் உள்ள திருமகளைப் போலும் மகளிரது, யாழை முறைப்படியமைத்தலைப் பயன்படச் செய்கின்ற பாடலின் சிறப்பையும், அதன்கண்ணே அவர்கள் நெடிது நிற்றலையும், அதற்கு ஏதுவாகிய அவர்களது பத்தியையும், தான் ஒருவனே வீடுபேற்றை அளித்தலால், அதனை விரும்புவோர் யாவராலும் உள்ளத்து இருத்தப்படுகின்ற முதற்கடவுள் என்று தன்னை நினைந்து துயிலெழுகின்ற மெய்யுணர்வுடையோர், அதன் பொருட்டு அவன் முன் வாடிநிற்கும் வாட்டத்தினையும், யாவர்க்கும் இறைவனாகிய என் தந்தையையும் ஒருங்கு காணுதலைப் பொருந்துமாறு எவ்வாறு என்று, சேய்மையில் நின்று வருந்துகின்ற என்னையும் பொருளாக நினைந்து உய்தி பெறும்படி அருள்செய்யும் கண்ணுதற் கடவுளும், கனிபோல இனிப்பவனும் ஆகிய, மிக்க நீரையுடைய, 'திருக்கானப்பேர்' என்னும் தலத்தில் எழுந்தருளியிருக்கின்ற, காளை வடிவினனாகிய பெருமானை அடியேன் காணப்பெறுவதும் எந்நாளோ!

858. மாவை யுரித்ததள்கொண் டங்க மணிந்தவனை
வஞ்சர் மனத்திறையும் நெஞ்சணு காதவனை
**மூவ ருருத்தனதாம் மூல முதற்கருவை**
மூசிடு மால்விடையின் பாகனை ஆகமுறப்
பாவக மின்றிமெய்யே பற்ற மவர்க்கமுதைப்
பால்நறு நெய்தயிர்ஐந் தாடு பரம்பரனைக்
காவல் எனக்கிறையென் றெய்துவ
தென்றுகொலோ
கார்வயல் சூழ்கானப் பேருறை
காளையையே. 7

மூவ ருருத்தனதாம் மூல முதற்கரு. சிவபிரான், மூவர் உருவமும் தன்னுருவ மேலாக நிற்றல், அவர்களைத் தன் உருவிலிருந்து தோற்றுவித்தலாம் என்க. வலப்புறத்தில் அயனையும், இடப்புறத்தில் அரியையும், இருதயத்தில் அரனையும் தோற்றுவிப்பவன் என்று சிவாகமங்கள் கூறுகின்றன. கரு – காரணம். ஆடைக்கு நூல் போல இடைநிலை முதற்காரணனாகாது, ஆடைக்குப் பஞ்சு போல முதல் நிலை முதல் காரணன் என்றதற்கு மூல முதற்கரு என்று அருளிச் செய்தார். இதனாலே பரமசிவன் மூவருள் ஒருவனான குணிருத்ரனாகாது அவர் மூவரின் மேலான மகாருத்திரன் என்று சிவனடியார்கள் கொள்ள வேண்டும்.

யானையை உரித்து அத்தோலைப் போர்வையாகக் கொண்டு, எலும்பை மாலையாக அணிந்தவனும், வஞ்சனை யுடையவரது மனத்தின்கண் தனது நெஞ்சினாலும் சிறிதும் அணுகாதவனும், மும்மூர்த்திகளது உருவமும் தன் உருவமே யாகின்ற முதல்முதற் காரணனும், 'மூசு' என்னும் ஒலியுண்டாக உயிர்க்கின்ற பெரிய இடபத்தை நடத்துகின்றவனும், போலியாகவன்றி உண்மையாகவே தன்னை மனத்துட் பொருந்தப் பற்றுகின்ற அவர்கட்கு அமுதம் போல்பவனும், பால், நறுநெய், தயிர் முதலிய ஐந்திலும் மூழ்குகின்றவனும், மேலோர்க் கெல்லாம் மேலானவனும் ஆகிய மிக்க நீரையுடைய வயல்கள் சூழ்ந்த, 'திருக்கானப்பேர்' என்னும் தலத்தில் எழுந்தருளியிருக்கின்ற, காளை வடிவினனாகிய பெருமானை, அடியேன், எனக்குக் காவலனாகிய தலைவனாகக் கிடைக்கப்பெறுவது எந்நாளோ!

859. தொண்டர் தமக்கெளிய சோதியை வேதியனைத்
தூய மறைப்பொருளாம் நீதியை வார்கடல்நஞ்
சுண்ட தனுக்கிறவா தென்று மிருந்தவனை
ஊழி படைத்தவனோ டொள்ளரி யும்முணரா
அண்டனை அண்டர்தமக் காகம நூல்மொழியும்
ஆதியை மேதகுசீ ரோதியை வானவர்தம்
கண்டனை யன்பொடுசென் றெய்துவ
தென்றுகொலோ
கார்வயல் சூழ்கானப் பேருறை
காளையையே. 8

அண்டர் – சிவபிரானிடம் நேர்நின்றும், வழி நிலையில் நின்றும் சிவாகமங்களைக் கேட்ட சீவர்களையும், உருத்திரர்களையும், பிற தேவர் முதலானவர்களையும் குறிக்கும்.
கண்டம் – கூறு; பகுதி.

அடியார்களுக்கு எளிய ஒளியுருவினனும், வேதத்தை ஓதுபவனும், அத்தூய வேதத்தின் பொருளாய் உள்ள நீதி வடிவினனும், நீண்ட கடலில் எழுந்த நஞ்சினை உண்டு, அதனால் இறவாது எக்காலத்தும் இருப்பவனும், பல கற்பங்களில் உலகத்தைப் படைப்பவனாகிய பிரமனும், அழகிய திருமாலும் அறிய வொண்ணாத தேவனும், தேவர்களுக்கு ஞான நூலைச் சொல்லிய முதல்வனும், தேவர்களது கூற்றில் உள்ளவனும், தனது மேலான தகுதியையுடைய புகழைப் பலரானும் சொல்லப் படுபவனும் ஆகிய, மிக்க நீரையுடைய வயல்கள் சூழ்ந்த, 'திருக்கானப்பேர்' என்னும் தலத்தில் எழுந்தருளியிருக்கின்ற, காளை வடிவின னாகிய பெருமானை, அடியேன், அன்போடு சென்று அடையப்பெறுவது எந்நாளோ!

860. நாதனை நாதமிகுத் தோசைய தானவனை
ஞான விளக்கொளியாம் ஊனுயி ரைப்பயிரை
மாதனை மேதகுதன் பத்தர் மனத்திறையும்
பற்றுவி டாதவனைக் குற்றமில்
கொள்கையனைத்
தூதனை யென்றனையாள் தோழனை நாயகனைத்
தாழ்மக ரக்குழையுந் தோடு மணிந்ததிருக்
காதனை நாயடியேன் எய்துவ தென்றுகொலோ
கார்வயல் சூழ்கானப் பேருறை
காளையையே. 9

குழை அணிதல் அப்பனாதலையும் தோடணிதல், அம்மையாதலையும் குறிக்கும்.

நாதமிகுத்தோசைய தானவனை – நாத தத்துவனின்றும் மறைகளைத் தோற்றுவித்தவனை.

உலகிற்குத் தலைவனும், நுண்ணிய எழுத்தோசையும், பரியதாகிய இசையோசையு மாயும், ஞானமாகிய விளக்கினது ஒளியாயும், உடம்பின்கண் உள்ள உயிரும் நிலத்தில் வளரும் பயிருமாயும் நிற்பவனும், மாதொரு பாகத்தை உடையவனும், மேலான தகுதியையுடைய, தன் அடியார்களது உள்ளத்தின்மேல் வைத்துள்ள பற்றினைச் சிறிதும் நீங்காதவனும், குற்றம் இல்லாத கொள்கையையுடையவனும், என்னைத் தன் தொண்டினிடத்து ஆளுகின்ற என் தூதனும், தோழனும், தலைவனும் ஆகியவனும், தாழத் தூங்குகின்ற மகரக் குழையையும் தோட்டையும் அணிந்த அழகிய காதினையுடையவனும் ஆகிய, மிக்க நீரையுடைய, 'திருக்கானப்பேர்' என்னும் தலத்தில் எழுந்தருளியிருக்கின்ற, காளை வடிவினனாகிய பெருமானை, நாய்போலும் அடியேன் தலைக்கூடப்பெறுவது எந்நாளோ!

861. கன்னலை இன்னமுதைக் கார்வயல் சூழ்கானப்
பேருறை காளையையொண் சீருறை
தண்டமிழால்
உன்னி மனத்தயரா உள்ளுரு கிப்பரவும்
ஒண்பொழில் நாவலர்கோ னாகிய ஆரூரன்
பன்னும் இசைக்கிளவி பத்திவை பாடவல்லார்
பத்தர் குணத்தினராய் எத்திசை யும்புகழ
மன்னி இருப்பவர்கள் வானின் இழிந்திடினும்
மண்டல நாயகராய் வாழ்வது நிச்சயமே.
10

கிளவி – சொல்.

கிளத்தல் – சொல்லுதல்

கரும்பும், இனிய அமுதமும் போல்பவனாகிய, மிக்க நீரையுடைய வயல்கள் சூழ்ந்த, 'திருக்கானப்பேர்' என்னுந் தலத்தில் எழுந்தருளியிருக்கின்ற, காளை வடிவினனாகிய பெருமானை, 'எய்துவது என்று கொலோ' என்ற நினைந்து மனம் உளைந்து, உளம் உருகி, அழகிய, புகழ் பொருந்திய, தண்ணிய தமிழால் துதிக்க முயன்ற அழகிய சோலைகளையுடைய திருநாவலூரில் உள்ளார்க்குத் தலைவனாகிய நம்பியாரூரன் பாடிய இவ்விசைப் பாடல்கள் பத்தினையும் பாட வல்லவர்கள், சிவனடியார்க்கு உள்ள இயல்புகள் அனைத்தையும் எய்தி, எல்லாத் திசைகளும் புகழ் நெடிது வாழ்ந்து, பின்பு ஒருகால் பிறவி எய்துவாராயினும், மண்ணுலகிற்குத் தலைவராய் வாழ்தல் திண்ணம்.

## 85. திருக்கூடலையாற்றூர்

சுவாமிகள் திருப்புறம்பயத்திலிருந்து பல தலங்களையும் வணங்கிக் கொண்டு செல்லும் பொழுது திருக்கூடலையாற்றூர் சார, அதனையடையாது திருமுதுகுன்றத்தை நோக்கிச் செல்லுகின்றபொழுது வழியில் பெருமான் வேதியர் வடிவங் கொண்டு நம்பியாரூரர் முன் நின்றார். நம்பியாரூரர் எதிரில்லை நின்ற வேதியரை வணங்கி, 'திருமுதுகுன்று எய்துதற்கு வழி இயம்பும்' எனக் கூற, பெருமானும், 'கூடலையாற்றூர் ஏறச் சென்றது இவ்வழிதான் என்று கூறி, வழித்துணையாய்ச் சென்று மறைந்தருளினார். அப்பொழுது வேதியர் வடிவில் வந்தவர் பெருமானே' என்று அதிசயித்துப் பாடியருளியது இத் திருப்பதிகம். (தி. 12 ஏயர்கோன். புரா. 103)

பண் : புறநீர்மை — பதிக எண் : 85

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் புரிகுழலம்மை உடனமர் அருள்மிகு நெறிகாட்டு நாயகர். | | |
| **தல இருப்பிடம்** | நடுநாட்டில் நிவாநதியின் தென்கரையில் சிதம்பரம் – காவாலகுடி அடுத்து ஸ்ரீ முஷ்ணம் பகுதியில் அமைந்து உள்ளது. | | |
| **தல மரம்** | கல்லாலம், வில்வம் | | |
| **தீர்த்தம்** | பிரம, அகத்திய தீர்த்தங்கள் | | |
| **பாடியவர்** | நம்பியாரூரர் | **பதிகம்** | 1 |

862. வடியுடை மழுவேந்தி
மதகரியுரி போர்த்துப்
பொடியணி திருமேனிப்
புரிகுழ லுமையோடும்
கொடியணி நெடுமாடக்
கூடலை யாற்றூரில்
அடிகள்இவ் வழிபோந்த
அதிசயம் அறியேனே. 1

கூர்மையையுடைய மழுப்படையை ஏந்தி, மதத்தையுடைய யானையினது தோலைப் போர்த்துக்கொண்டு, பின்னிய கூந்தலை யுடைய உமாதேவியோடும், கொடிகள் நாட்டிய உயர்ந்த மாடங்களையுடைய திருக்கூடலை யாற்றூரில் எழுந்தருளியிருக்கின்ற, திருநீற்றை யணிந்த பெருமான், இவ்வழியிடை என்முன் வந்த வியத்தகு செயலை, அடியேன் அறியாதே யொழிந்தேன்; இஃதே என் ஏழைமை இருந்தவாறு!

வடிவு – அழகு; வண்ணம். வடிவுடை மழு – மழுவுக்கு வடிவாவது உயிர்களைப் புனிதஞ் செய்யும் தொழிலில் வருவது. "மங்கல மழுவால் கொல்கை வழக்குமன்று".

கூடலையாற்றூரில் அடிகள் இவ்வழி போந்த – என்றதனால் இறைவர் வழிகாட்டிக் கூடலையாற்றூரின் அணிமைவரை எழுந்தருளி மறைந்தனர் என்பது கருதப்படும்.

அறியேனே – முன் திருவதிகையில் திருவடி சூட்டிய போதும் அறிந்திலேனாயினேன்.

**863.** வையக முழுதுண்ட
மாலொடு நான்முகனும்
பையர வகலல்குற்
பாவையொ டும்முடனே
கொய்யணி மலர்ச்சோலைக்
கூடலை யாற்றூரில்
ஐயன்இவ் வழிபோந்த
அதிசயம் அறியேனே. 2

உலகம் முழுதையும் உண்ட திருமாலோடும், பிரம தேவனோடும், அரவப் படம்போலும் அல்குலையுடைய, இளைய, பாவைபோலும் உமாதேவியோடும் உடனாகி, கொய்யப் படுகின்ற அழகிய பூக்களையுடைய சோலை களையுடைய திருக்கூடலையாற்றூரில் எழுந்தருளியிருக்கின்ற தலைவன், இவ்வழியிடை என் முன்வந்த வியத்தகு செயலை, அடியேன் அறியாதேயொழிந்தேன்; இஃதே என் ஏழைமை இருந்தவாறு!

பதிகப்பாட்டு தோறும் அம்மையோடு இருப்பதை இயம்புகிறார்.

**864.** ஊர்தொறும் வெண்டலைகொண்
டுண்பலி யிடும்என்று
வார்தரு மென்முலையாள்
மங்கையொ டும்முடனே
கூர்நுனை மழுவேந்திக்
கூடலை யாற்றூரில்
ஆர்வன்இவ் வழிபோந்த
அதிசயம் அறியேனே. 3

ஊர்தோறும் சென்று, வெள்ளிய தலையோட்டை ஏந்தி, 'பிச்சை இடுமின்' என்று இரந்துண்டு, கச்சணிந்த, மெல்லிய தனங்களையுடைய வளாகிய உமாதேவியோடும் உடனாய், கூரிய முனையையுடைய மழுவை ஏந்திக் கொண்டு, திருக்கூடலையாற்றூரில் எழுந்தருளி யிருக்கின்ற, பேரன்புடையனாகிய பெருமான், இவ்வழியிடை என்முன் வந்த வியத்தகு செயலை, அடியேன் அறியாதே யொழிந்தேன்; இஃதே என் ஏழைமை இருந்தவாறு!

இரந்து வாழ்பவன் மங்கையை மணந்து வாழ்கிறான் என்று நயம்படக் கூறுகிறார். ஆர்வம் – பேரன்பு. ஆர்வன் – அடியார்களுக்கு அருள்புரிவதில் ஆர்வமுடையவன்.

**865.** சந்தண வும்புனலுந்
தாங்கிய தாழ்சடையன்
பந்தண வும்விரலாள்
பாவையொ டும்முடனே
கொந்தண வும்பொழில்சூழ்
கூடலை யாற்றூரில்
அந்தணன் வழிபோந்த
அதிசயம் அறியேனே. 4

பிறை முதலிய பிறவற்றோடு அழகு பொருந்திய நீரையும் தாங்கியிருக்கின்ற, நீண்ட சடைமுடியையுடையவனாய், பந்தின்கண் பொருந்திய விரலையுடையாளாகிய, பாவை போலும் உமையோடும் உடனாகி, பூங்கொத்துக்கள் பொருந்திய சோலை சூழ்ந்த திருக்கூடலையாற்றூரில் எழுந்தருளி யிருக்கின்ற, அழகிய கருணையை யுடையனவாகிய பெருமான், இவ்வழியிடை என்முன் போந்த வியத்தகு செயலை, அடியேன் அறியாதேயொழிந்தேன்; இஃதே என் ஏழைமை இருந்தவாறு!

சந்து – பெருமை; அழகு. அணவுதல் – உடன் விரவுதல். "இவ்வழி போந்த அதிசயம் அறியேனே" – பதிக மகுடம்.

**866.** வேதியர் விண்ணவரும்
மண்ணவ ரும்தொழநற்
சோதிய துருவாகிச்
சுரிகுழ லுமையோடும்
கோதிய வண்டறையுங்
கூடலை யாற்றூரில்
ஆதிஇவ் வழிபோந்த
அதிசயம் அறியேனே. 5

அந்தணரும், தேவரும், மக்களும் வணங்கி நிற்க, நல்ல ஒளியுருவமாய், சுரிந்த கூந்தலையுடைய உமாதேவியோடும், பூக்களில் மகரந்தத்தைக் கிண்டிய வண்டுகள் ஓசையைச் செய்கின்ற திருக்கூடலையாற்றூரில் எழுந்தருளியிருக்கின்ற முதல்வன், இவ்வழி யிடை என்முன் வந்த வியத்தகு செயலை, அடியேன் அறியாதேயொழிந்தேன்; இஃதே என் ஏழைமை இருந்தவாறு!

அடிகள் – ஐயன் – ஆர்வன் – அந்தணன் – ஆதி – அத்தன் – அழகன் – அறவன் – ஆலன் – ஆடலுகந்தான் என்று இப்பதிகத்தினுள் நம்பிகள் இறைவனது கருணைப் பெருக்கினைப் பாராட்டும் அருமைப்பாடுகள் அருமையானவை.

**867.** வித்தக வீணையொடும்
வெண்புரி நூல்பூண்டு
முத்தன வெண்முறுவல்
மங்கையொ டும்முடனே
கொத்தல ரும்பொழில்சூழ்
கூடலை யாற்றூரில்
அத்தன்இவ் வழிபோந்த
அதிசயம் அறியேனே. 6

தான் வல்லதாகிய வீணையோடும், வெள்ளிய முப்புரிநூலை அணிந்து, முத்துப்போலும் வெள்ளிய நகையினையுடைய உமாதேவி யோடும் உடனாகி, பூக்கள் கொத்தின்கண் மலர்கின்ற சோலைகள் சூழ்ந்த திருக்கூடலை யாற்றூரில் எழுந்தருளியிருக்கின்ற எந்தை, இவ்வழியிடை என்முன் வந்த வியத்தகு செயலை, அடியேன் அறியாதேயொழிந்தேன்; இஃதே என் ஏழைமை இருந்தவாறு!

வித்தகம் – பெருமை; நன்மை. பெருமையாவது உலகம் புனருற்பதிக்குக் காரணமாய் நாதத்தை உளதாக்குதல்.

**868.** மழைநுழை மதியமொடு
வாளர வுஞ்சடைமேல்
இழைநுழை துகிலல்குல்
ஏந்திழை யாளோடும்
குழையணி திகழ்சோலைக்
கூடலை யாற்றூரில்
அழகன்இவ் வழிபோந்த
அதிசயம் அறியேனே. 7

மேகத்தில் நுழைகின்ற சந்திரனையும், கொடிய பாம்பையும் சடைக்கண்வைத்து, நுண்ணிய இழைபொருந்திய உயர்ந்த உடையை அணிந்த அல்குலையும், தாங்கிய அணிகலங்களையும் உடைய உமாதேவியோடும் உடனாகி, தளிர்களது அழகு விளங்குகின்ற சோலை களையுடைய திருக்கூடலையாற்றூரில் எழுந் தருளியிருக்கின்ற அழகன், இவ்வழியிடை என்முன் வந்த வியத்தகு செயலை, அடியேன் அறியாதே யொழிந்தேன்; இஃதே என் ஏழைமை இருந்தவாறு!

குழை – இலைக் கொத்துக்கள்.

| | |
|---|---|
| **869.** மறைமுதல் வானவரும்<br>மாலயன் இந்திரனும்<br>பிறைநுதல் மங்கையொடும்<br>பேய்க்கண முஞ்சூழக்<br>குறள்படை யதனோடுங்<br>கூடலை யாற்றூரில்<br>அறவன்இவ் வழிபோந்த<br>அதிசயம் அறியேனே. 8 | வேதத்திற் சொல்லப்பட்ட தலைமைகளையுடைய பலராகிய தேவரும், அத்தேவர்க்கெல்லாம் தலைவனாகிய இந்திரனும், பேய்க் கூட்டமும் சூழ்ந்திருக்க, பிறைபோலும் நெற்றியையுடைய உமாதேவியோடும், பூதப்படையோடும், திருக்கூடலையாற்றூரில் எழுந்தருளியிருக்கின்ற புண்ணியனாகிய பெருமான், இவ்வழியிடை என்முன் வந்த வியத்தகு செயலை, அடியேன் அறியாதேயொழிந்தேன்; இஃதே என் அறியாமை இருந்தவாறு! |
| **870.** வேலையின் நஞ்சுண்டு<br>விடையது தான்ஏறிப்<br>பாலன மென்மொழியாள்<br>பாவையொ டும்முடனே<br>கோலம துருவாகிக்<br>கூடலை யாற்றூரில்<br>ஆலன்இவ் வழிபோந்த<br>அதிசயம் அறியேனே. 9 | கடலின்கண் எழுந்த நஞ்சினை உண்ட விடையை ஊர்ந்து, பால்போலும் இனிய மொழியை உடையவளாகிய உமாதேவியோடும் உடனாய கோலமே தனது உருவமாகக் கொண்டு, திருக்கூடலையாற்றூரில் எழுந்தருளியிருக்கின்ற ஆல்நிழற்பெருமான், இவ்வழியிடை என்முன் வந்த வியத்தகு செயலை, அடியேன் அறியாதே யொழிந்தேன்; இஃதே என் அறியாமை இருந்தவாறு! |

மணிமுத்தாறும், வசிட்டா நதியும் கூடிய பின் வரும் வடவெள்ளாறும் கூடும் இடத்தில் உள்ளமையால் இப்பெயர் பெற்றது. வசிட்ட நதி வட வெள்ளாற்றுடன் கூடிப் பின் நிவா நதி எனப்படுகிறது.

| | |
|---|---|
| **871.** கூடலை யாற்றூரிற்<br>கொடியிடை யவளோடும்<br>ஆட லுகந்தானை<br>அதிசயம் இதுவென்று<br>நாடிய இன்றமிழால்<br>நாவல வூரன்சொல்<br>பாடல்கள் பத்தும்வல்லார்<br>தம்வினை பற்றறுமே. 10 | திருக்கூடலையாற்றூரில், கொடி போலும் இடையினையுடையவளாகிய உமாதேவியோடும், அருள் விளையாட்டை விரும்பி எழுந்தருளியிருக்கின்ற பெருமானை, 'அவன் செய்த இச்செயல் அதிசயம்' என்று சொல்லி, ஆராய்ந்த இனிய தமிழால், திருநாவலூரனாகிய நம்பியாரூரன் பாடிய இப்பாடல்கள் பத்தினையும் பாட வல்லவர்களது வினை, பற்றறக் கெடுதல் திண்ணம். |

## 86. திருவன்பார்த்தான் பனங்காட்டூர்

**பண் : சீகாமரம்** **பதிக எண் : 86**

இது மருதப் பெரும்பண்ணில் செய்திறம் என்ற பெயருடையது. நான்காம் திறத்தில் புறநிலைப் பிரிவாகிய 82 எண் பெற்ற திறமாகும். இப்பண்ணை மூவரும் பாடியிருக்கிறார்கள். சம்பந்தர் 2 : 40–53. அப்பர் 4 : 19–20, சுந்தரர் 86–89, ஆக 20 பதிகங்கள். இதற்கு கட்டளை 2 இதன் சுவை அவலம், மருட்கை எனப்படும். இது இரவுப்பண். சம்பந்தர், மண்புகார் வான்புகுவர், மட்டிட்ட புன்னையங்கானல் மடமயிலை என்ற பூம்பாவைப் பதிகம், கண்காட்டு நுதலானும் என்ற சிறப்புடைய திருவெண்காட்டுப் பதிகம், பிழையுளன பொறுத்திடுவா என்று சுந்தரர், திருவெண்பாக்கத்தில் வேண்டிய பதிகம் என்பன இப்பண்ணுக்குரியன. இதற்குரிய ஒப்புமை இராகம் நாதநாமக்கிரியை. தேவார ஆசிரியர்களும் பிறரும் சீகாமரம் என்ற பெயரைக் காமரம் என்றே குறிப்பிடக் காண்கிறோம். இது 15 ஆவது மேளம் மாயமாளவ கௌளத்தில் இருந்து கிளைத்தது. இது நவசந்தியில் மேற்குச் சந்திக்குரிய பண்ணாகும்.

**சீகாமரம் (இலக்கணம்)**

சீரிற் காயமர்ந் திலங்கி நிற்கும்
சீர்கா யமர்வே சீகா மரமாய்
ஆறுதல் தருவதற்கு அமையும் பண்ணாகும்.

**பொருள்**

சீர்களில் காய்ச்சீர்கள் விளக்கமாக நிற்கும். காய்ச்சீர்கள் இன்றியும் பல சீர்கள் விரவியும் வரும். இங்ஙனம் காய்ச்சீர்கள் பொருந்தியும் அவை இன்றியும் உயிர்கள் அமைதி பெறும் இயல்பினை விளக்குதற்கு அமையும் பண் சீகாமரம் என்னும் பண்ணாகும்.

| **மூர்த்தி** | அருள்தரும் அமிர்தவல்லி உடனமர் அருள்மிகு தாளபுரீசுவரர் | | |
|---|---|---|---|
| **தல இருப்பிடம்** | தொண்டை நாட்டில் காஞ்சிபுரம் – கலவை – பெருங்கட்டூர் – வன்பாக்கம் என்னும் கிராமத்தினை அடுத்து உள்ளது. | | |
| **தல மரம்** | பனை | | |
| **தீர்த்தம்** | ஜடாகங்கை | | |
| **பாடியவர்** | நம்பியாரூரர் | **பதிகம்** | 1 |

இத்திருப்பதிகம், சிவபெருமானை உணரமாட்டாதாரது நிலைமைக்கு இரங்கி அருளிச் செய்தது. சிவபெருமானையே சார்தல் வேண்டும்; உணர்தல் வேண்டும்; அறிதல் வேண்டும்; அவனடிமைக்கண் குழைதல் வேண்டும்; அவ்வாறு சாராதார் சார்வு, உணராதார் உணர்வு முதலியவை பயனற்றவை. அவை பொருளல்ல.

872. விடையின்மேல் வருவானை
வேதத்தின் பொருளானை
அடையில்அன் புடையானை
யாவர்க்கும் அறிவொண்ணா
மடையில்வா ளைகள்பாயும்
வன்பார்த்தான் பனங்காட்டூர்ச்
சடையிற்கங்கை தரித்தானைச்
சாராதார் சார்வென்னே. 1

இடபத்தின்மேல் ஏறி வருபவனும், வேதத்தின் பொருளாய் உள்ளவனும், தன்னை அடைந்தால், அங்ஙனம் அடைந்தார்மாட்டு, அன்புடையனா கின்றவனும் ஆகிய, நீர் மடைகளில் வாளை மீன்கள் துள்ளுகின்ற திருவன்பார்த்தான் பனங்காட்டூரில் எழுந்தருளியிருக்கின்ற, யாவராலும் அறியவொண்ணாத, சடைமுடியின் கண் கங்கையைத் தாங்கியுள்ள பெருமானை அடையாதவரது அடைவுதான் என்னே!

அடையின் அன்புடையான் – சார்ந்தாரைக் காப்பவன்; அவ்வாறு சாராதார் சார்வென்னே? வேறு எச்சார்பும் சார்பன்று.

873. அறையும்பைங் கழலார்ப்ப
அரவாட அனலேந்திப்
பிறையுங்கங் கையுஞ்சூடிப்
பெயர்ந்தாடும் பெருமானார்
பறையுஞ்சங் கொலியோவாப்
படிறன்றன் பனங்காட்டூர்
உறையுமெங் கள்பிரானை
உணராதார் உணர்வென்னே. 2

ஒலிக்கின்ற, பசிய பொன்னாலாகிய கழல்கள் கலிப்பவும், அணியப்பட்ட பாம்புகள் சுழன்று ஆடவும், கையில் நெருப்பை ஏந்தி, தலையில் பிறையையும் கங்கையையும் அணிந்து கொண்டு, அடிபெயர்ந்து நின்று நடனம் ஆடுகின்ற பெருமானாகிய யாவராலும் அறிய வொண்ணாமையிற் கள்வனாய், முழங்குகின்ற பறைகளும், சங்குகளும் ஒலித்தல் ஒழியாத, தனது திருவன்பார்த்தான் பனங்காட்டூரில் எழுந்தருளிருக்கின்ற எங்கள் இறைவனை உணராதாரது உணர்வுதான் என்னே!

874. தண்ணார்மா மதிசூடித்
தழல்போலுந் திருமேனிக்
கெண்ணார்நாண் மலர்கொண்டங்
கிசைந்தேத்து மடியார்கள்
பண்ணார்பா டலறாத
படிறன்றன் பனங்காட்டூர்
பெண்ணாணா யபிரானைப்
பேசாதார் பேச்சென்னே. 3

குளிர்ச்சி பொருந்திய சிறந்த சந்திரனை முடிமேற் சூடி, கள்வனாய், நெருப்புப் போலும் தனது திருமேனிக்கு உரியனவாக எண்ணுதல் பொருந்திய, அன்று மலர்ந்த மலர்களைக் கொண்டு, மனம் பொருந்தித் துதித்து வழிபடும் அடியார்களது பண்ணிறைந்த பாடலின் ஒலி நீங்காத, தனது திருவன்பார்த்தான் பனங் காட்டூரில் எழுந்தருளியிருக்கின்ற, பெண்ணும் ஆணும் ஆய உருவத்தினனாகிய பெருமானைச் சொல்லாதவரது சொல்தான் என்னே!

இத்தலம் வன்பாக்கம் என்னும் கிராமத்தினை அடுத்து இருத்தலாலும், பனை தலமரமாதலாலும் இப்பெயர் பெற்றது. அகத்தியர், புலத்தியர் என்ற இரண்டு பெரு முனிவர்கள் பூசித்த தலம். இருவர் பூசித்த இரு சுவாமிகளும் அம்மையப்பராகக் காட்சி அளிக்கின்றனர்.

875. நெற்றிக்கண் ணுடையானை
நீறேறுந் திருமேனிக்
குற்றமில் குணத்தானைக்
கோணாதார் மனத்தானைப்
பற்றிப்பாம் பரையார்த்த
படிறன்றன் பனங்காட்டூர்ப்
பெற்றொன்றே றும்பிரானைப்
பேசாதார் பேச்சென்னே. 4

கோணாதார் – வஞ்சம் முதலிய தீமைகள் இல்லாதார்.
பெற்று – எருது.

நெற்றியில் கண்ணையுடையவனும், திருநீறு பொருந்திய திருமேனியை உடையவனும், குற்றம் இல்லாத இயல்பையுடையவனும், கோடுதல் இல்லாதவரது மனத்தில் உள்ளவனும், பாம்பைப் பிடித்து அரையிற் கட்டிய கள்வனும் ஆகிய, தனது திருவன்பார்த்தான் பனங் காட்டூரில் எழுந்தருளியிருக்கின்ற, எருது ஒன்றின்மேல் ஏறுகின்ற கடவுளைச் சொல்லாதவரது சொல்தான் என்னே!

876. உரமென்னும் பொருளானை
உருகிலுள் ளுறைவானைச்
சிரமென்னுங் கலனானைச்
செங்கண்மால் விடையானை
வரமுன்னம் அருள்செய்வான்
வன்பார்த்தான் பனங்காட்டூர்ப்
பரமன்எங் கள்பிரானைப்
பரவாதார் பரவென்னே. 5

உரம் – மனத்திண்மை. உரமென்னும் பொருளானை – அன்பின் உறைப்பினையே பொருளாகக் கொள்பவர்.

'ஞானம்' என்ற சொல்லப்படும் பொருளாய் உள்ளவனும், உள்ளம் அன்பால் உருகினால், அதன்கண் நீங்காது தங்குகின்றவனும், தலை ஓடாகிய உண்கலத்தை உடையவனும், சிவந்த கண்களையுடைய பெரிய இடப வாகனத்தை உடையவனும், தன்னை வழிபடுவார் விரும்பும் வரத்தை விரைந்து அருளுபவனும், மேலானவனும் ஆகிய, திருவன்பார்த்தான் பனங்காட்டூரில் எழுந்தருளியிருக்கின்ற எங்கள் இறைவனைத் துதியாதவரது துதிதான் என்னே!

877. எயிலார்பொக் கம்மெரித்த
எண்டோள்முக் கண்ணிறைவன்
வெயிலாய்க்காற் றெனவீசி
மின்னாய்த்தீ யெனநின்றான்
மயிலார்சோ லைகள்சூழ்ந்த
வன்பார்த்தான் பனங்காட்டூர்ப்
பயில்வானுக் கடிமைக்கட்
பயிலாதார் பயில்வென்னே. 6

பொக்கம் – பொய்மை, தீமை.
அடிமைக்கட் பயிலாதார் – அடிமை செய்தலைப் பழக்கமாகக் கொள்ளாதவர்.

பொலிவு நிறைந்த சில மதில்களை எரித்தவனும், எட்டுத் தோள்களையும், மூன்று கண்களையும் உடைய கடவுளும், வெயிலாய்க் காய்ந்து, காற்றாய் வீசி, மின்னாய் மின்னி, தீயாய் எரிந்து நிற்பவனும் ஆகிய, மயில்கள் நிறைந்த சோலைகள் சூழ்ந்த திருவன்பார்த்தான் பனங்காட்டூரில் நீங்காதிருக்கும் பெருமானுக்குச் செய்யும் தொண்டிற் பயிலாதவரது பயிற்சிதான் என்னே!

878. மெய்யன்வெண் பொடிபூசும்
விகிர்தன்வே தமுதல்வன்
கையின்மான் மழுவேந்திக்
காலன்கா லம்மறுத்தான்
பைகொள்பாம் பரையார்த்த
படிறன்றன் பனங்காட்டூர்
ஐயன்எங் கள்பிரானை
அறியாதார் அறிவென்னே. 7

காலம் – ஆயுள்

மெய்ப்பொருளாய் உள்ளவனும், வெள்ளிய நீற்றைப் பூசுகின்ற, வேறுபட்ட இயல்பினனும், வேதத்திற்குத் தலைவனும், கையில் மான் மழுக்களை ஏந்துபவனும், காலனது காலத்தை இடைமுரிவித்தவனும், படத்தைக் கொண்ட பாம்பினை அரையின்கண் கட்டியுள்ள கள்வனும், யாவர்க்கும் தலைவனும் ஆகிய தனது திருவன்பார்த்தான் பனங்காட்டூரில் எழுந்தருளியிருக்கின்ற எங்கள் பெருமானை அறியாதவரது அறிவுதான் என்னே!

---

879. வஞ்சமற்ற மனத்தாரை
மறவாத பிறப்பிலியைப்
பஞ்சிச்சீ றடியாளைப்
பாகம்வைத் துகந்தானை
மஞ்சுற்ற மணிமாட
வன்பார்த்தான் பனங்காட்டூர்
நெஞ்சத்தெங் கள்பிரானை
நினையாதார் நினைவென்னே. 8

மஞ்சுற்ற – மேகங்கள் தவழும்படி உயர்ந்த.

வஞ்சனையற்ற தூய மனம் உடையவரை என்றும் மறவாதவனும், பிறப்பில்லாதவனும், செம்பஞ்சு ஊட்டிய சிறிய அடிகளையுடையாளாகிய உமாதேவியை ஒரு பாகத்தில் விரும்பி வைத்துள்ளவனும் ஆகிய, மேகங்கள் பொருந்திய, மணிகள் இழைத்த மாடங்களையுடைய திருவன் பார்த்தான் பனங்காட்டூரிலும், எங்கள் நெஞ்சத்திலும் எழுந்தருளியிருக்கின்ற பெருமானை நினையாதவரது நினைவுதான் என்னே!

---

880. மழையானுந் திகழ்கின்ற
மலரோனென் றிருவர்தாம்
உழையாநின் றவருள்க
உயர்வானத் துயர்வானைப்
பழையானைப் பனங்காட்டூர்
பதியாகத் திகழ்கின்ற
குழைகாதற் கடிமைக்கட்
குழையாதார் குழைவென்னே. 9

உழையா – பக்கத்தில்.

மேகம்போலும் நிறத்தினனாகிய திருமாலும், மலரில் இருப்பவனாகிய பிரமனும் என்ற இருவரும் பணி செய்கின்றவராய் நினைந்து நிற்க, உயர்ந்த வானத்தினும் உயர்ந்து நிற்பவனும், எல்லாரினும் பழையவனும் ஆகிய, திருவன்பார்த்தான் பனங்காட்டூரைத் தனது ஊராகக் கொண்டு விளங்குகின்ற, குழையணிந்த காதினையுடைய பெருமானுக்குத் தொண்டுபடுதலில் மனம் நெகிழாதவரது மனநெகிழ்ச்சிதான் என்னே!

881. பாரூரும் பனங்காட்டூர்ப்
பவளத்தின் படியானைச்
சீரூருந் திருவாரூர்ச்
சிவன்பேர்சென் னியில்வைத்த
ஆரூரன் னடித்தொண்டன்
அடியன்சொல் அடிநாய்சொல்
ஊரூரன் உரைசெய்வார்
உயர்வானத் துயர்வாரே. 10

தனது பெயர் நிலம் முழுதும் பரவிய திருவன் பார்த்தான் பனங்காட்டூரில் எழுந்தருளி யிருக்கின்ற பவளம் போலும் உருவத்தை யுடைய பெருமானை, புகழ்மிக்க திருவாரூரில் எழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானது பெயரைத் தலையில் வைத்துள்ள, அப்பெருமானுக்கு அடித்தொண்டு செய்யும் அடியவனாகிய, அவன் அடிக்கீழ்க் கிடக்கும் நாய் போலும் நம்பியாரூரன் பாடிய இப்பாடல்களை, அவரவர் ஊரின்கண் உரை செய்வாரும் சிவலோகத்தில் உயர்வு பெற்று விளங்குவர்.

## 87. திருப்பனையூர்

பண் : சீகாமரம்

பதிக எண் : 87

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் பெரியநாயகி உடனமர் அருள்மிகு சௌந்தரநாதர் | | |
| **தல இருப்பிடம்** | சோழநாட்டில் காவிரி தென்கரையில் திருவாரூரிலிருந்து திருவாரூர் மயிலாடுதுறை மார்க்கத்தில் 10 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | பனை | | |
| **தீர்த்தம்** | அமிர்தபுட்கரணி | | |
| **பாடியவர்** | திருஞானசம்பந்தர், சுந்தரர் | **பதிகம்** | 2 |

882. மாட மாளிகை கோபு ரத்தொடு
மண்ட பம்வள ரும்வ ளர்பொழில்
பாடல் வண்டறையும் பழ னத்திருப் பனையூர்த்
தோடு பெய்தொரு காதி னிற்குழை
தூங்கத் தொண்டர்கள் துள்ளிப் பாடநின்
றாடு மாறுவல்லா ரவரேய ழகியரே. 1

வண்டு பாடலறையும் பழனம். துள்ளுதல் ஆனந்தத்தின் மெய்ப்பாடு. இறைவர் நடங்கண்டு அன்பர்கள் ஆனந்தக் கூத்தாடுவர். எதிர்க்காட்சியாக நடனங்கண்டு பாடிய பதிகம் ஆதலின் இவ்வாறு போற்றிப் பரவுகின்றார்.

உயர்ந்த மேல் மாடங்களும், சிறந்த மாளிகை களும், கோபுரங்களும், மண்டபங்களும் நாளும் நாளும் பெருகுகின்ற, ஓங்கி வளர்கின்ற சோலைகளில் இசைபாடுதலையுடைய வண்டுகள் ஒலிக்கின்ற, நல்ல வயல்களை யுடைய திருப்பனையூரில் எழுந்தருளி யிருக்கின்ற, ஒருகாதிற் குழை தூங்க, மற்றொரு காதினில் தோட்டினை இட்டு, அடியார்கள் ஆடிப்பாட நின்று ஆடுமாறு வல்லாராகிய அவரே, யாவரினும் மிக்க அழகுடையவர்.

883. நாறு செங்கழு நீர்ம லர்
நல்ல மல்லிகை சண்ப கத்தொடு
சேறுசெய் கழனிப் பழ னத்தி ருப்பனையூர்
நீறு பூசிநெய் யாடித் தம்மை
நினைப்பவர் தம்ம னத்த ராகிநின்
றாறு சூடவல்லா ரவரேய ழகியரே. 2

நெய்யாடல் – ஒரு திருவிழா.

மணம் வீசுகின்ற செங்கழுநீர் மலரையும், நல்ல மல்லிகை மலரையும், சண்பக மலரையும், சேறு செய்யப்பட்ட கழனியாகிய வயல்களையும் உடைய திருப்பனையூரில் எழுந்தருளி யிருக்கின்ற, நீற்றைப் பூசி நெய்யில் மூழ்கி, தம்மை நினைப்பவரது மனத்தில் உறைபவராய் நிற்பவரும், நீரை முடியில் தாங்குகின்றவரும் ஆகிய அவரே, யாவரினும் மிக்க அழகுடையர்.

884. செங்கண் மேதிகள் சேடெ றிந்து
தடம்ப டிதலிற் சேலி னத்தொடு
பைங்கண் வாளைகள்பாய் பழ னத்தி
ருப்பனையூர்த்
திங்கள் சூடிய செல்வ னாரடி
யார்தம் மேல்வினை தீர்ப்ப ராய்விடில்
அங்கிருந் துறைவா ரவரேய ழகியரே. 3

சிவந்த கண்களையுடைய எருமைகள், வயலைச் சேறாக்கிக் குளங்களில் சென்று வீழ்தலினால், அங்குள்ள கயல்மீனின் கூட்டமும், பசிய கண்களையுடைய வாளை மீன்களும் துள்ளி வீழ்கின்ற வயல்களையுடைய திருப்பனையூரில் எழுந்தருளியிருக்கின்ற, சந்திரனைச் சூடிய செல்வனார், தம் அடியார்மேல் வருகின்ற வினையைத் தீர்க்கின்றவராகி விடுவாராயின், அத்தலத்தில் நீங்காது தங்கி வாழ்கின்ற அவரே, யாவரினும் மிக்க அழகுடையர்.

885. வாளை பாய மலங்கி ளங்கயல்
வரிவ ராலுக ளுங்க ழனியுள்
பாளை ஒண்கமுகம் புடை சூழ்தி ருப்பனையூர்த்
தோளும் ஆகமும் தோன்ற நட்டமிட்
டாடு வாரடித் தொண்டர் தங்களை
ஆளு மாறுவல்லா ரவரேய ழகியரே. 4

வாளை மீன்கள் துள்ள, மலங்கும், இளமையான கயலும், வரிகளையுடைய வராலும் ஆகிய மீன்கள் பிறழ்கின்ற கழனிகளில் பக்கம் எங்கும், பாளையையுடைய கமுக மரங்கள் சூழ்ந்துள்ள திருப்பனையூரின்கண் எழுந்தருளி யிருக்கின்ற, திரண்ட தோள்களும், அகன்ற மார்பும் பொலிவுற நடனத்தை அமைத்து ஆடுபவரும், தம் அடிக்குத் தொண்டரா யுள்ளாரை ஆளுமாறு வல்லவரும் ஆகிய அவரே, யாவரினும் மிக்க அழகுடையர்.

| | |
|---|---|
| **886.** கொங்கை யார்பல ருங்கு டைந்<br>தாட நீர்க்குவ ளைம லர்தரப்<br>பங்க யம்மலரும் பழ னத்தி ருப்பனையூர்<br>மங்கை பாகமும் மாலொர் பாகமுந்<br>தாமுடையவர் மான்ம ழுவினொ<br>டங்கைத் தீயுகப்பா ரவரேய ழகியரே. 5<br><br>மங்கையும், மாலும் இருத்தல் இடப்பாகத்திலே. | மகளிர் பலரும் மூழ்கி விளையாடுதலினால், குளத்து நீரில் குவளைப் பூக்கள் மலர, அவற்றிற்கு எதிராகத் தாமரை மலர்கள் மலர்கின்ற வயல்களையுடைய திருப்பனையூரில் எழுந்தருளி இருக்கின்ற, உமையையுடைய ஒரு பாகத்தையும், திருமாலை உடைய ஒரு பாகத்தையும் உடையவரும், அகங்கையில் 'மான், மழு, தீ' என்னும் இவற்றை விரும்பி ஏந்துபவரும் ஆகிய அவரே, யாவரினும் மிக்க அழகுடையர். |
| **887.** காவி ரிபுடை சூழ்சோ ணாட்டவர்<br>தாம்ப ரவிய கருணை யங்கடற்<br>பாவி ரிபுலவர் பயி லுந்தி ருப்பனையூர்<br>மாவிரிமட நோக்கி அஞ்ச<br>மதக ரியுரி போர்த்து கந்தவர்<br>ஆவி லைந்துகப்பா ரவரேய ழகியரே. 6 | பக்கம் எங்கும் காவிரி நதி சூழ்ந்த சோழ நாட்டில் உள்ளவர்கள் துதிக்கின்ற கருணைக் கடலாய், பாக்களை விரித்துப் பாடுகின்ற புலவர்கள் பலகாலும் சொல்லும் திருப்பனையூரில் எழுந்தருளியிருக்கின்ற, மான் தோல்வியுறுகின்ற பார்வையையுடையவளாகிய உமாதேவி அஞ்சுமாறு, மதம் பொருந்திய யானையினது தோலை விரும்பிப் போர்த்தவரும், பசுவிற்றோன்றுகின்ற ஐந்தினை விரும்பி மூழ்குகின்றவரும் ஆகிய அவரே, யாவரினும் மிக்க அழகுடையார். |
| **888.** மரங்கள் மேல்மயி லால மண்டப<br>மாடமா ளிகை கோபு ரத்தின்மேல்<br>திரங்கல் வன்முகவன் புகப் பாய்தி ருப்பனையூர்த்<br>துரங்கன் வாய்பிளந் தானுந் தூமலர்த்<br>தோன்ற லும்மறி யாமை தோன்றிநின்<br>றரங்கி லாடவல்லா ரவரேய ழகியரே. 7<br><br>வன்முகவன் – வலி முகம் – குரங்கின் பெயர்களுள் ஒன்று. | மரக்கிளைகளின்மேல் நின்று மயில்கள் ஆட, மண்டபம், மாடம், மாளிகை, கோபுரம் இவைகளின்மேல், தோல் சுருங்கிய முகத்தை யுடைய குரங்குகள் தாவுகின்ற திருப்பனையூரில் எழுந்தருளியிருக்கின்ற, குதிரை உருவங்கொண்டு வந்த, 'கேசி' என்னும் அசுரனது வாயைப் பிளந்து அழித்த திருமாலும், தூய மலரின்கண் இருக்கும் தலைவனாகிய பிரமனும் அறியாதபடி விளங்கி நின்று, மன்றில் நடனம் ஆட வல்லாராகிய அவரே, யாவரினும் மிக்க அழகுடையர். |

889. மண்ணி லாமுழ வம்ம திர்தர
மாட மாளிகை கோபு ரத்தின்மேல்
பண்ணி யாழ்முரலும் பழ னத்தி ருப்பனையூர்
வெண்ணி லாச்சடை மேவிய
விண்ண வரொடு மண்ண வர்தொழ
அண்ண லாகிநின்றா ரவரேய ழகியரே. 8

மத்தளத்தில் பூசப்படுகின்ற மண்ணினை "மார்ச்சனை" என்பர்.

மாடம், மாளிகை, கோபுரம் இவைகளில், மண் பொருந்திய மத்தளம் அதிர, யாழ்கள் பண்களை இசைக்கின்ற, நல்ல வயல்கள் சூழ்ந்த திருப்பனையூரில் எழுந்தருளியிருக்கின்ற, வெண்மையான சந்திரன் சடைமேல் பொருந்தப்பட்ட விண்ணவரும் மண்ணவரும் தொழுமாறு தலைவராகி நின்றவராகிய அவரே, யாவரினும் மிக்க அழகுடையர்.

890. குரக்கி னங்குதி கொள்ளத் தேனுகக்
குண்டு தன்னயற் கெண்டை பாய்தரப்
பரக்குந் தண்கழனிப் பழ னத்தி ருப்பனையூர்
இரக்கம் இல்லவர் ஐந்தொ டைந்தலை
தோளி ருபது தாள்நெ ரிதர
அரக்கனை யடர்த்தா ரவரேய ழகியரே. 9

குண்டு – ஆழம். அஃது அதனையுடைய குளத்தைக் குறித்தது.

குளத்தினுள் பூக்களில் உள்ள தேன் சிந்தும்படி குரங்கின் கூட்டம் குதிக்க, அவற்றின் அருகில் கெண்டை மீன் துள்ளும்படி பரந்திருக்கின்ற, குளிர்ந்த வயல்களாகிய பழனத்தையுடைய திருப்பனையூரில் எழுந்தருளியிருக்கின்ற, இரக்கமில்லாதவராய், அரக்கனாகிய இராவணனை அவனுடைய பத்துத் தலைகளும், இருபது தோள்களும் நெரியும்படி, தமது காலால் நெருக்கியவராகிய அவரே, யாவரினும் மிக்க அழகுடையர்.

891. வஞ்சி நுண்ணிடை மங்கை பங்கினர்
மாத வர்வள ரும்வ ளர்பொழில்
பஞ்சின் மெல்லடியார் பயி லுந்திருப் பனையூர்
வஞ்சி யும்வளர் நாவ லூரன்
வனப்ப கையவ ளப்பன் வன்றொண்டன்
செஞ்சொற் கேட்டுகப்பா ரவரேய ழகியரே. 10

வஞ்சிக் கொடிபோலும் நுண்ணிய இடையினை யுடைய உமையது பங்கை உடையவராய், பெரிய தவத்தவர்கள் மிகுகின்ற, வளர்கின்ற சோலைகளையுடைய செம்பஞ்சு ஊட்டிய மெல்லிய அடிகளை யுடையவராகிய மகளிர், ஆடல் பாடல்களைப் பயிலுகின்ற திருப்பனையூரில் எழுந்தருளியிருக்கின்ற, நொச்சியே யன்றி வஞ்சியும் வளர்கின்ற திருநாவலூரில் தோன்றியவனும், வனப்பகைக்குத் தந்தையும் ஆகிய வன்றொண்டனது செவ்விய சொற்களாகிய பாடல்களைக் கேட்டு மகிழ்கின்றவராகிய அவரே, யாவரினும் மிக்க அழகுடையர்.

## 88. திருவீழிமிழலை

பண் : சீகாமரம் பதிக எண் : 88

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் சுந்தரகுஜாம்பிகை உடனமர் அருள்மிகு வீழியழகர். | | |
| **தல இருப்பிடம்** | சோழநாட்டில் காவிரி தென்கரையில் திருவாரூர் மாவட்டம் – பூந்தோட்டம், ஏரவாஞ்சேரி – கும்பகோணம் சாலையில் பூந்தோட்டத்திலிருந்து 12 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | வீழிச்செடி | | |
| **தீர்த்தம்** | விட்டுணு தீர்த்தம் | | |
| **பாடியவர்** | மூவர் | **பதிகங்கள்** | 24 |

இத்திருப்பதிகம் இறைவர் திருமால் முதலிய பலருக்கு அருள் புரிந்தமையைக் குறிப்பாகவும், வெளிப்படையாகவும் புலப்படுத்தி, தமக்கும் அருளுமாறு வேண்டி அருளிச் செய்தது.

892. நம்பி னார்க்கருள் செய்யும் அந்தணர்
நான்ம றைக்கிட மாய வேள்வியுள்
செம்பொ னேர்மடவா ரணி பெற்ற திருமிழலை
உம்ப ரார்தொழு தேத்த மாமலை
யாளொ டும்முட னேயு றைவிடம்
அம்பொன் வீழிகொண்டீர் அடியேற்கும்
அருளுதிரே. 1

அந்தணர்களது நான்கு வேதங்களுக்கு இடமாகிய வேள்வியினுள் உம்மை விரும்பி வழிபடுவோர்க்கு அருள் செய்கின்றவரே! செம்பொன்னால் இயன்ற பாவைபோலும் மகளிர் அழகுபெற்று விளங்குகின்ற திருமிழலையுள், நீர் உயர்ந்த மலைமகளோடு உடனாகித் தேவர்கள் தொழுது துதிக்க உறைகின்ற இடத்தை, அழகிய பொன்போலச் சிறந்த வீழி மரத்தின் நிழலாகக் கொண்டவரே! அடியேனுக்கும் அருள் செய்யீர்.

நம்புதல் – நம்பி வழிபடுதல். செல்வம் உடையாரது செல்வச் சிறப்பு அவர்தம் மகளிரிடத்தே இனிது விளங்குமாதலின் மிழலைநகரச் செல்வச் சிறப்பை விளக்குதற்கு மடவாரது அழகினை விதந்தருளிச் செய்தார்.

893. விடங்கொள் மாமிடற் றீர்வெள் ளைச்சுருள்
ஒன்றிட்டு விட்ட காதி னீர்என்று
திடங்கொள் சிந்தையினார் கலி காக்கும்
திருமிழலை
**மடங்கல் பூண்ட விமானம் மண்மிசை**
**வந்தி ழிச்சிய** வான நாட்டையும்
அடங்கல் வீழிகொண்டீர் அடியேற்கும்
அருளுதிரே. 2

'நஞ்சினை உண்ட கரிய கண்டத்தை உடையவரே! வெண்மையான சங்கக் குழை ஒன்றினை இட்டுத் தூங்கவிட்ட காதினை உடையவரே!' என்று போற்றி, உறுதி கொண்ட உள்ளத்தையுடைய அந்தணர்கள், உலகிற்கு வறுமை வாராமல் காக்கின்ற திருவீழி மிழலையுள் சிங்கங்கள் தாங்குகின்ற விமானம் ஒன்றை, உம் பொருட்டு மண்மேல் வந்து இறங்கச் செய்த வானுலகத்தையும் தன்கீழ் அடக்குதலையுடைய வீழி மரத்தின் நிழலை இடமாகக் கொண்டவரே! அடியேனுக்கும் அருள் செய்யீர்.

மடங்கல் – சிங்கம். இத்தல மூலவர் விமானம் திருமாலால் கொண்டு வரப்பட்டு விண்ணிழி விமானம் எனப் பெயர் பெற்று விளங்குகிறது. வீழிமிழலைக் கருவறை விமானம் ஒரு வினோதமான வடிவமானது. காழி பாதி; வீழி பாதி என்று திருஞானசம்பந்தர் இவ்வீழி விமானத்தில் காழியைக் கண்டார். அதன் அமைப்பே ஒரு வித்தியாசமாக உள்ளது. இக்கோயிலுக்கு 2001 ஆம் ஆண்டு முதல் குடமுழுக்கு விழா நடந்தபின் இரண்டாவது குடமுழுக்குவிழா 2014 ஆம் ஆண்டு நடந்த போது பதிப்பாசிரியரும், அடியார்களும் அதற்கு பஞ்சலோகத் தகட்டைச் சாற்றி மகிழ்ந்தார்கள். சிதம்பரம் கோயிலுக்குப் பொன் வேய்ந்துள்ளது போல 2026 ஆண்டு குடமுழுக்கு விழாவிற்குள் அதற்குப் பொன்தகடு வேய வீழிநாதர் திருஉள்ளம் கொள்ள வேண்டும். அடியார்களாகிய நாமெல்லாம் பிரார்த்தனை செய்வோமாக!

894. ஊனை யுற்றுயி ராயி னீர்ஒளி
மூன்று மாய்த்தெளி நீரோ டானஞ்சின்
தேனை ஆட்டுகந்தீர் செழு மாடத் திருமிழலை
மானை மேவிய கையி னீர்மழு
வேந்தி னீர்மங்கை பாகத் தீர்விண்ணில்
ஆன வீழிகொண்டீர் அடியேற்கும் அருளுதிரே.
3

உடம்பைப் பொருந்திய உயிரானவரே, 'ஞாயிறு, திங்கள், தீ' என்னும் மூன்று ஒளிகளும் ஆனவரே! தெளிவாகிய நீரோடு ஆனஞ்சிடைத் தேனை ஆடுதலை விரும்புபவரே! மானைப் பொருந்திய கையை யுடையவரே, மழுவை ஏந்தியவரே! மலைமகள் பாகத்தை உடையவரே! வளவிய மாடங்களையுடைய திருமிழலையில், வானின் கண் ஓங்கிய வீழி மரத்தின் நிழலை இடமாகக் கொண்டவரே! அடியேனுக்கும் அருள் செய்யீர்.

ஊனை உற்றுயிராயினீர் – உயிர், ஊனுடம்பில் நின்று இயக்குதல் போல நீர் உயிரினை உடம்பாகக் கொண்டு உள்நின்று இயக்குகின்றீர்.

**895.** பந்தம் வீடிவை பண்ணி னீர்படி
நீ்ம திப்பிதிர்க் கண்ணி யீரென்று
சிந்தைசெய் திருக்குஞ் செங்கை யாளர்
திருமிழலை
வந்து நாடகம் வான நாடியர்
ஆட மாலயன் ஏத்த நாள்தொறும்
அந்தண் வீழிகொண்டீர் அடியேற்கும் அருளுதிரே.
4

'உயிர்களுக்கு, 'பந்தம்' வீடு' என்னும் இரண்டையும் அமைத்தவரே! அவ்வாறு அமைத்தும் அவைகட்கு ஒளித்து நிற்பவரே! நிலாத் துண்டமாகிய கண்ணியைச் சூடியவரே! என்று நினைந்திருக்கும் செவ்விய ஒழுக்கத்தை யுடையவர்களது திருமிழலையுள், நாள்தோறும் வானுலகத்தில் உள்ள நாடக மகளிர்கள் வந்து நடனம் ஆடவும், திருமாலும் பிரமனும் துதிக்கவும் அழகிய குளிர்ந்த வீழி மரத்தின் அடியை இடமாகக் கொண்டவரே! அடியேனுக்கும் அருள் செய்யீர்.

**896.** புரிசை மூன்றையும் பொன்றக் குன்றவில்
ஏந்தி வேதப் புரவித் தேர்மிசைத்
திரிசெய் நான்மறையோர் சிறந் தேத்துந்
திருமிழலைப்
பரிசி னால்அடி போற்றும் பத்தர்கள்
பாடி யாடப் பரிந்து நல்கினீர்
அரிய வீழிகொண்டீர் அடியேற்கும் அருளுதிரே.
5

புரிசை மூன்று – மும்மதில்; திரிபுரம்.

வேதங்களாகிய குதிரைகளைப் பூண்ட தேரின் மேல், மலையாகிய வில்லை ஏந்தி நின்று, மதில்கள் மூன்றையும் அழியும்படி வேறுபடுத்தவரே! நான்கு வேதங்களையும் உணர்ந்த அந்தணர்கள், அறிவு மிகுந்து துதிக்கின்ற திருமிழலையுள், அரிய வீழி மரத்தினது நிழலை இடமாகக் கொண்டவரே! நீர், உமது திருவடியைப் போற்றுகின்ற அடியவர்கள் அன்பினால் பாடி ஆட, மனம் இரங்கி, அவர்க்கு வேண்டுவனவற்றை அளித்தீர்; அதுபோல, அடியேனுக்கும் அருள் செய்யீர்.

**897.** எறிந்த சண்டி இடந்தகண் ணப்பன்
ஏத்து பத்தர்கட் கேற்றம் நல்கினீர்
செறிந்த பூம்பொழில்தேன் துளிவீசுந் திருமிழலை
நிறைந்த அந்தணர் நித்த நாள்தொறும்
நேசத்தால் உமைப் பூசிக் கும்மிடம்
அறிந்து வீழிகொண்டீர் அடியேற்கும்
அருளுதிரே. 6

இடத்தல் – தோண்டுதல்

மரங்கள் நெருங்கிய பூஞ்சோலைகள், தம்மிடத்து வருவோர்க்குத் தேன் துளிகளை வழங்குகின்ற திருமிழலையுள், நிறைந்துள்ள அந்தணர் பலரும் நாள்தோறும் நிலையாக அன்பினால் உம்மை வழிபடும் இடத்தை அறிந்து, வீழி மரத்தின் நிழலை இடமாகக் கொண்டவரே! நீர், தந்தையது தாளை எறிந்த சண்டேசுர நாயனார், தம் கண்ணைப் பெயர்த்து அப்பிய கண்ணப்ப நாயனார் முதலாக, உம்மை வழிபட்ட அடியவர் பலர்க்கு உயர்கதியைத் தந்தருளினீர்; அதுபோல, அடியேனுக்கும் அருள்செய்யீர்.

898. பணிந்த பார்த்தன் பகீர தன்பல
பத்தர் சித்தர்க்குப் பண்டு நல்கினீர்
திணிந்த மாடந்தொறுஞ் செல்வம்மல்கு
திருமிழலைத்
தணிந்த அந்தணர் சந்தி நாடொறும்
அந்தி வானிடு பூச்சி றப்பவை
அணிந்து வீழிகொண்டீர் அடியேற்கும்
அருளுதிரே. 7

நெருங்கிய மாடங்கள்தோறும் செல்வம் நிறைந்த திருமிழலையுள், சினம் தவிர்ந்த அந்தணர்கள், காலை, நடுப்பகல் இவற்றிலும், அந்திக் காலத்திலும் உயர்வாக இடுகின்ற பூக்களின் ஒப்பனையை அணிந்துகொண்டு, வீழி மரத்தினது நிழலை இடமாகக் கொண்டவரே! நீர், உம்மை வணங்கிய 'அருச்சுனன்', 'பகீரதன்', பல அடியவர், சித்தர் முதலியோர்க்கு முற்காலத்தில் அருள் பண்ணினீர்; அதுபோல, அடியேனுக்கும் அருள்செய்யீர்.

899. பரந்த பாரிடம் ஊரி டைப்பலி
பற்றிப் பாத்துணுஞ் சுற்ற மாயினீர்
தெரிந்த நான்மறையோர்க் கிடமாய திருமிழலை
இருந்து நீர்தமி ழோடி சைகேட்கும்
இச்சை யாற்காசு நித்தல் நல்கினீர்
அருந்தண் வீழிகொண்டீர் அடியேற்கும்
அருளுதிரே. 8

பாரிடம் – பூதகணம்.

மிக்க பூத கணங்களை, ஊர்களில் பிச்சையேற்று அதனைப் பகுத்து உண்ணும் சுற்றமாக உடையவரே! ஆராய்ந்த நான்கு வேதங்களை உணர்ந்தோராகிய அந்தணர்க்கு இடமான திருமிழலையுள், அரிய, குளிர்ந்த வீழி மரத்தின் நிழலை இடமாகக் கொண்டவரே, நீர், இனிதிருந்து இசையைத் தமிழோடு கேட்கும் விருப்பத்தால், அத்தகைய தமிழைப் பாடியோர்க்குப் பொற்காசினை நாள்தோறும் வழங்கினீர்; அதுபோல, அடியேனுக்கும் அருள் செய்யீர்.

900. தூய நீரமு தாய வாறது
சொல்லு கென்றுமை கேட்கச் சொல்லினீர்
தீய றாக்குலையார் செழு மாடத் திருமிழலை
மேய நீர்பலி யேற்ற தென்னென்று
விண்ணப் பஞ்செய் பவர்க்கு மெய்ப்பொருள்
ஆய வீழிகொண்டீர் அடியேற்கும் அருளுதிரே.
9

'தீ வளர்த்தலை ஒழியாத கூட்டத்தவராகிய அந்தணர்களது வளவிய மாடங்களையுடைய திருமிழலையுள் விரும்பி வீற்றிருக்கின்ற நீர், 'பிச்சை எடுப்பது என்' என்று வினாவுவோர்க்கு மெய்ப்பொருளாய் விளங்குகின்ற, வீழி மரத்தின் நிழலை இடமாகக் கொண்டவரே! நீர், 'உமக்குத் தூய்மையாகிய நீரே அமுதமாயினவாற்றினைச் சொல்லுக' என்று உமையவள் கேட்க, அதனைச் சொல்லியருளினீர்; அதுபோல, அடியேனுக்கும் அருள்செய்யீர்.

தூயநீர் அமுதாதல், அடியவர் ஆட்ட விரும்பி ஆடுதல்; நீராட்டி வழிபடுதலை மிகவும் விரும்புகின்றவர். எனவே, 'எதனையும் விரும்பாத நீவிர் வழிபாட்டினை விரும்புவது ஏன்' என்று உமையவள் வினாவ, அதனைச் சிவபெருமான் இனிது விளக்கியருளினமையை எடுத்தோதியவாறாம், சிவபிரான் உமைக்கு ஆகமங்கள் பலவற்றையும் சொல்லி, அவற்றின் முடிபாக 'யாம் விரும்புவது பூசை ஒன்றையே' என அருளினமையை,

எண்ணில் ஆகமம் இயம்பிய இறைவர்தாம் விரும்பும்
உண்மை யாவது பூசனை எனஉரைத் தருள
அண்ண லார்தமை அர்ச்சனை புரியஆ தரித்தாள்
பெண்ணி னல்லவ ளாயின பெருந்தவக் கொழுந்து (தி. 12 திருக்குறிப்பு. புரா. 51)

என்ற சேக்கிழார் திருமொழியான் அறிக. இனி, இன்னதொரு வரலாறு இத்தலத்தைப் பற்றி உளதேனும் கொள்க. "உமைக் கேட்க" என்றும் "தீயராக் குலையாளர்" என்றும் ஓதும் பாடங்களே எல்லாப் பதிப்புக் களிலும் காணப்படுகின்றன. இத்திருப்பாடல் இனிது பொருள் விளங்காமையின், இவ்வாறு அவை பிழை பட்டனபோலும்! பிச்சையேற்றல், தனக்கென யாதும் இன்மையைக் குறிப்பதாகலின், அஃது, 'அவன் உலகிற்கு வேறானவன்' என்பதையே உணர்த்தும் என்பார். 'பலி ஏற்றது ஏன்? என்று வினவுவார்க்கு மெய்ப்பொருளாயினீர்' என்று அருளினார். வினவுதல், ஆராய்தல்.

இருந்தவா காணீர், இதுஎன்ன மாயம்!
அருந்தண் கயிலாயத் தண்ணல் – வருந்திப்போய்த்
தான்நாளும் பிச்சை புகும்போலும், தன்அடியார்
வான் ஆள மண்ஆள வைத்து (தி. 11 கயிலைபாதி. 53)

என மருட்கையுற்று ஓதியதும், இக்கருத்துப் பற்றியாதல் உணர்க.

---

901. வேத வேதியர் வேத நீதிய
தோது வார்விரி நீர்மி ழலையுள்
ஆதி வீழிகொண் டீர் அடியேற்கும் அருளுகென்று
நாத கீதம்வண் டோது வார்பொழில்
நாவ லூரன்வன் றொண்டன் நற்றமிழ்
பாதம் ஓதவல்லார் பர னோடு கூடுவரே. 10

'வேதத்தை ஓதுகின்ற வேதியர்களும், வேதத்தின் பொருளை விளக்குபவர்களும் வாழ்கின்ற, பரந்த நீரையுடைய திருமிழலையுள், பழையதாகிய வீழி மரத்தினது நிழலை இடமாகக் கொண்டவரே! அடியேனுக்கும் அருள் செய்யீர்' என்று பாடிய, இனிய இசையை வண்டுகள் பாடுகின்ற நீண்ட சோலைகளையுடைய திருநாவலூரில் தோன்றினவனும், வன்றொண்டனும் ஆகிய நம்பியாரூரனது இந்நல்ல தமிழ்ப்பாடல்களை, அப்பெருமான் திருவடிக்கீழ் நின்றுபாட வல்லவர், அவனோடு இரண்டறக் கலப்பர்.

## 89. திருவெண்பாக்கம்

பண் : சீகாமரம் பதிக எண் : 89

சுவாமிகள், திருவொற்றியூரில் சங்கிலியாரை மணப்பதற்காகச் செய்த சபத மொழியைக் கடந்ததனால் கண் ஒளி மறைய, வழிச் செல்வோருடன் சென்று வடதிருமுல்லை வாயிலை வணங்கிப் பாடியபின், திருவெண்பாக்கம் அடைந்து தொண்டர்களுடன் வலமாகத் திருக்கோயில்முன் எய்தி கைதலை மேற்கொண்டு புகழ்ந்து பரவி, 'நீர் கோயிலுள் உளீரோ?' என்று கேட்க, பெருமானும் ஊன்று கோல் ஒன்றை அருளி, அயலார் போல, 'உளோம் போகீர்' என்று கூறிய மொழி கேட்டு வருந்திப் பாடியருளியது இத்திருப்பதிகம் (தி. 12 ஏயர்கோன். புரா. 280).

| மூர்த்தி | அருள்மிகு மின்னலொளியம்மை உடனமர் அருள்மிகு வெண்பாக்கநாதர். | | |
|---|---|---|---|
| தல இருப்பிடம் | தொண்டை நாட்டில் பூண்டியில் உள்ளது. | | |
| தல மரம் | இலந்தை | | |
| தீர்த்தம் | பூண்டி நீர்த்தேக்கம் | | |
| பாடியவர் | நம்பியாரூரர் | பதிகம் | 1 |

**"முன்னின்று முறைப்பாடு போல் மொழிந்த மொழி மாலை" – சேக்கிழார்.**

902. பிழையுளன பொறுத்திடுவர்
 என்றடியேன் பிழைத்தக்கால்
பழியதனைப் பாராதே
 படலம்என்கண் மறைப்பித்தாய்
குழைவிரவு வடிகாதா
 கோயிலுளா யேஎன்ன
உழையுடையான் உள்ளிருந்
 துளோம்போகீர் என்றானே. 1

'குழை பொருந்திய, தூங்குங்காதினை உடையவனே, நம்மாட்டுப் பிழை உளவா வனவற்றை நம் பெருமானார் பொறுத்துக் கொள்வார் என்னும் துணிவினால் அடியேன் பிழை செய்தால், அதனைப் பொறாததனால் உனக்கு உளதாகும் பழியை நினையாமலே நீ என் கண்ணைப் படலத்தால் மறைத்துவிட்டாய். இதுபோது இக்கோயிலினுள்ளே இருக்கின்றாயோ? என்று யான் வினாவ, மானை ஏந்திய அவன், 'உளோம், போகீர்' என்று சொன்னானன்றே! இதுவோ அவனது கண்ணோட்டம்!

உளோம் போகீர் – கோயிலுளீரே என்று கேட்டமையின், நாம் இருக்கின்றோம் – நீர் போவீராக என்றது இறைவர் வாக்கு. இக்கோயில் இதனால் உளோம் போகிர் புரம் என வழங்கும் வழக்கும் கல்வெட்டுக்களிற் காண உள்ளது.

சரித அகச்சான்றாகும். ஊன்றுகோல் அருளுதல் – பற்றுக்கோடாகிய அருள் உள்ளமை காட்டுதலாம். இப்பதிகத்தினை நம்பிகள் இறைவர்பால் தமது குறைகளை எடுத்தியம்பி முறையிட்டது போல அருளினாரன்றி, உண்மையில் அது மகிழ்ச்சியுடன் அன்பு ததும்ப இறைவரது அருளைப் போற்றிப் புகழ்ந்தபடியேயாம் என்று குறிக்கப் "போல் பொழிந்த" என்றார்.

படலம் – கண்ணினுள் பார்வைக்குதவும் பகுதி – மறைக்கும் பகுதி.

903. இடையறியேன் தலையறியேன்
எம்பெருமான் சரணம்என்பேன்
நடையுடையன் நம்மடியான்
என்றவற்றைப் பாராதே
விடையுடையான் விடநாகன்
வெண்ணீற்றன் புலியின்தோல்
உடையுடையான் எனையுடையான்
உளோம்போகீர் என்றானே. 2

சுந்தரரை இறைவன் எவ்வாறு புறக்கணிப்பினும் அவர் அவனைப் பாடுதலை நிறுத்தியதேயில்லை.
நிறைவாக அவர் அருளுவார் என்ற நம்பிக்கையும் வீண் போகவில்லை.

யான் யாதொரு செயலிலும் 'முதல் இன்னது; நடு இன்னது; முடிவு இன்னது'; என்று அறியேன்; 'எம் பெருமானே எனக்குப் புகலிடம்; ஆவது ஆகுக' என்று கவலையற்றிருப்பேன்; அதனை யறிந்திருந்தும், இடப வாகனத்தையுடையவனும், விடம் பொருந்திய பாம்பை அணிந்தவனும், வெண்மையான நீற்றைப் பூசுபவனும், புலியின் தோலாகிய உடையை உடையவனும், என்னை ஆளாக உடையவனும் ஆகிய இறைவன், 'இவன் நம்மையே அடைக்கலமாக அடைதலை யுடையவன்; நமக்கு அடியவன்' என்ற முறைமைகளை நினையாமலே, 'உளோம்; போகீர்' என்று சொன்னானன்றே; இதுவோ அவனது கண்ணோட்டம்!

904. செய்வினையொன் றறியாதேன்
திருவடியே சரணென்று
பொய்யடியேன் பிழைத்திடினும்
பொறுத்திடநீ வேண்டாவோ
பையரவா இங்கிருந்தா
யோஎன்னப் பரிந்தென்னை
உய்யஅருள் செய்யவல்லான்
உளோம்போகீர் என்றானே. 3

''உளோம்; போகீர்'' என்றது, ''யாம் கோயிலினுள் இல்லாமலில்லை; இருக்கின்றோம்; நீர் உம் வழியிற் சென்மின்'' என்றதாம்.

படத்தையுடைய பாம்பை அணிந்தவனே! 'உனது திருவடியே புகல்' என்று கருதி, 'செய்யத்தக்க செயல் இது; தகாத செயல் இது' என்பதைச் சிறிதும் அறியாத பொய்யடியேனாகிய யான், அறியாமையாற் பிழைசெய்தேனாயினும், பொறுத்தல் உனக்குக் கடமையன்றோ; அங்ஙனம் பொறுத்து எனக்கு அருள் பண்ணாமையின், நீ இங்கே இருக்கின்றாயோ' என்று யான் உரிமையோடு வினாவ, எப்பொழுதும் என்மேல் அருள்கூர்ந்து, என்னை உய்யுமாறு தன் திருவருளைச் செய்ய வல்ல எம்பெருமான், இதுபோது, 'உளோம்; போகீர்' என்று சொன்னானன்றே; இதுவோ அவனது கண்ணோட்டம்!

| பாடல் | | விளக்கம் |
|---|---|---|
| 905. கம்பமருங் கரியுரியன்<br>கறைமிடற்றன் காபாலி<br>செம்பவளத் திருவுருவன்<br>சேயிழையோ டுடனாகி<br>நம்பியிங்கே யிருந்தாயே<br>என்றுநான் கேட்டலுமே<br>உம்பர்தனித் துணையெனக்கு<br>உளோம்போகீ ரென்றானே. | 4 | 'நம்பியே! நீ, செவ்விய அணியினையுடைய மலைமகளோடு உடனாயினவன் ஆதலின், இருவீரும் இங்கே இருக்கின்றீர்களோ?' என்று நான் வினவ, அசைதல் பொருந்திய யானையினது தோலையும் கறுத்த கண்டத்தையும், கபாலத்தையும், செவ்விய பவளம் போலும் உருவத்தையும் உடையவனும், தேவர்களுக்கு ஒப்பற்ற துணைவனும் ஆகிய இறைவன், எனக்கு, 'உளோம்; போகீர்' என்று சொன்னானன்றே; இதுவோ அவனது கண்ணோட்டம்! |
| 906. பொன்னிலங்கு நறுங்கொன்றை<br>புரிசடை மேற்பொலிந்திலங்க<br>மின்னிலங்கு நுண்ணிடையாள்<br>பாகமா எருதேறித்<br>துன்னியிரு பால்அடியார்<br>தொழுதேத்த அடியேனும்<br>உன்னமதாய்க் கேட்டலுமே<br>உளோம்போகீர் என்றானே. | 5 | பொன்போல விளங்குகின்ற, நறுமணம் பொருந்திய கொன்றைமலர், சடையின்மேற் பொருந்துதலால், மேலும் பொலிவுற்று விளங்க, மின்னலினது தன்மை விளங்குகின்ற நுண்ணிய இடையினை உடையவள் ஒரு பாகத்தில் இருக்க, எருதை ஏறுபவனாகிய சிவபெருமானை, இருபாலும் அடியார்கள் நெருங்கி, வணங்கித் துதிக்க, யானும் உயர்ந்த முறைமையினாலே, 'கோயிலுளாயே?' என்று கேட்க, அவன், 'உளோம்; போகீர்' என்று சொன்னானன்றே; இதுவோ அவனது கண்ணோட்டம்! |
| 907. கண்ணுதலால் காமனையுங்<br>காய்ந்ததிறற் கங்கைமலர்<br>தெண்ணிலவு செஞ்சடைமேல்<br>தீமலர்ந்த கொன்றையினான்<br>கண்மணியை மறைப்பித்தாய்<br>இங்கிருந்தா யோஎன்ன<br>ஒண்ணுதலி பெருமான்றன்<br>உளோம்போகீர் என்றானே. | 6 | யாவரையும் வெல்லுகின்ற காமனையும் தனது நெற்றிக்கண்ணால் எரித்த ஆற்றலையுடைய, கங்கை விளங்குகின்ற, தெள்ளிய நிலவை அணிந்த சடையின்மேல் தீயின்கண் மலர்ந்தது போலத் தோன்றுகின்ற கொன்றை மலரை உடைய பெருமானை, அடியேன், 'என் கண்மணியை மறைப்பித்தவனே! இங்கு இருக்கின்றாயோ? என்று வினவ, ஒள்ளிய நெற்றியையுடையவளாகிய உமையம்மைக்குத் தலைவன், 'உளோம்; போகீர்' என்று சொன்னானன்றே; இதுவோ அவனது கண்ணோட்டம்! ' |

| | | | |
|---|---|---|---|
| 908. | பார்நிலவு மறையோரும்<br>பத்தர்களும் பணிசெய்யத்<br>தார்நிலவு நறுங்கொன்றைச்<br>சடையனார் தாங்கரிய<br>கார்நிலவு மணிமிடற்றீர்<br>ஈங்கிருந்தீ ரேஎன்ன<br>ஊரரவம் அரைக்கசைத்தான்<br>உளோம்போகீர் என்றானே. | 7 | 'மாலையாகப் பொருந்திய மணம் உடைய கொன்றைப் பூவை அணிந்த சடையை உடையவரே! தாங்குதற்கரிய நஞ்சு பொருந்திய, நீலமணிபோலும் கண்டத்தை யுடையவரே! நீர், மண்ணுலகிற் பொருந்திய அந்தணர்களும், அடியவர்களும் பணி செய்ய இங்கு இருக்கின்றீரே? என்று யான் வினவ, ஊர்கின்ற பாம்பை அரையிற்கட்டிய இறைவன், 'உளோம்; போகீர்' என்றானன்றே; இதுவோ அவனது கண்ணோட்டம்! |
| 909. | வாரிடங்கொள் வனமுலையாள்<br>தன்னோடு மயானத்துப்<br>பாரிடங்கள் பலசூழப்<br>பயின்றாடும் பரமேட்டி<br>காரிடங்கொள் கண்டத்தன்<br>கருதுமிடந் திருவொற்றி<br>யூரிடங்கொண் டிருந்தபிரான்<br>உளோம்போகீர் என்றானே. | 8 | கச்சினது இடம் முழுவதையுங் கொண்ட அழகிய தனங்களையுடையவளாகிய உமையோடு, பூதங்கள் பல சூழ, முதுகாட்டிற் பலகாலும் ஆடுகின்ற, மேலான நிலையில் உள்ளவனும், கருமை நிறம் தனக்கு இடமாகக் கொண்ட கண்டத்தையுடையவனும், தான் விரும்பும் இடமாகிய திருவொற்றியூரையே தனக்கு இடமாகக் கொண்டவனும் ஆகிய இறைவன், யான் வினவியதற்கு, 'உளோம்; போகீர்' என்று சொன்னானன்றே; இதுவோ அவனது கண்ணோட்டம்! |
| 910. | பொன்னவிலுங் கொன்றையினாய்<br>போய்மகிழ்க் கீழிருவென்று<br>சொன்னஎனைக் காணாமே<br>சூளுறவு மகிழ்க்கீழே<br>என்னவல்ல பெருமானே<br>இங்கிருந்தா யோஎன்ன<br>ஒன்னலரைக் கண்டாற்போல்<br>உளோம்போகீர் என்றானே. | 9 | 'பொன்போலுங் கொன்றை மலரை அணிந்த பெருமானே! நீ, கோயிலை விட்டுப்போய் மகிழ மரத்தின் கீழ் இரு' என்று சொன்ன என்னை, அதன் பொருட்டுக் காணாமலே, சங்கிலியிடம் சென்று, 'சூளுறவு, மகிழ மரத்தின் கீழே ஆகுக' என்று சொல்ல வல்ல பெருமானே! நீ, 'இங்கு இருக்கின்றாயோ?' என்று யான் வினவ, எம்பெருமான், என்னை, பகைவரைக் கண்டாற் போல வெறுத்து, 'உளோம்; போகீர்' என்று சொன்னானன்றே; இதுவோ அவனது கண்ணோட்டம்! |

| | | |
|---|---|---|
| 911. | மான்றிகழுஞ் சங்கிலியைத்<br>தந்துவரு பயன்களெல்லாம்<br>தோன்றஅருள் செய்தளித்தாய்<br>என்றுரைக்க உலகமெலாம்<br>ஈன்றவனே வெண்கோயில்<br>இங்கிருந்தா யோஎன்ன<br>ஊன்றுவதோர் கோலருளி<br>உளோம்போகீர் என்றானே. 10 | 'மான் போல விளங்குகின்ற சங்கிலியை எனக்கு ஈந்து, அதனால் உளவாகின்ற பயன்களெல்லாம் எனக்கு நன்கு விளங்கும்படி திருவருள் செய்து காத்தாய்' என்று சொல்லுதற்கு, 'உலகத்தையெல்லாம் பெற்ற தந்தையே! வெண்கோயிலாகிய இவ்விடத்தில் நீ இருக்கின்றாயோ?' என்று யான் வினவ, எம் பெருமான், ஊன்றுவதாகிய ஒருகோலை அருளி, 'உளோம்; போகீர்' என்றானன்றே! இத்துணையதுதானோ அவனது கண்ணோட்டம்! |
| 912. | ஏராரும் பொழில்நிலவு<br>வெண்பாக்கம் இடங்கொண்ட<br>காராரும் மிடற்றானைக்<br>காதலித்திட் டன்பினொடும்<br>சீராருந் திருவாரூர்ச்<br>சிவன்பேர்சென் னியில்வைத்த<br>ஆரூரன் தமிழ்வல்லார்க்<br>கடையாவல் வினைதானே. 11 | புகழ் நிறைந்த திருவாரூரில் உள்ள சிவபெருமானது திருப்பெயரைத் தலையில் வைத்துள்ள நம்பியாரூரன், அழகு நிறைந்த சோலைகள் விளங்குகின்ற திரு வெண்பாக்கத்தை இடமாகக் கொண்ட, கருமை நிறைந்த கண்டத்தை யுடையவனை மிக விரும்பி, அன்போடும் பாடிய இத்தமிழ்ப் பாடல்களைப் பாட வல்லவர்மேல், வலிய வினைகள் வந்து சாராவாம். |

## 90. கோயில்

பண் : குறிஞ்சி பதிக எண் : 90

குறிஞ்சியாழ் என்ற பெரும்பண்ணின் எட்டுத் திறங்களில் ஏழாவது திறமாகிய அரற்று என்ற திறத்தின் அகநிலைப் பண், 103 வரிசையில் 61 ஆவதாகும். இப்பண்ணில் மூவரும் பாடியிருக்கிறார்கள். சம்பந்தர் 1.75–103, அப்பர் 4.21, சுந்தரர் 90–94, ஆக 35 பதிகங்கள். இதற்குரிய சுவை திருமுறைதோறும் உவகை, மருட்கை, பெருமிதம் என மாறுவதுண்டு. இதில் 5 கட்டளைகள் உள்ளன. (சம்பந்தர்) கற்றாங் கெரியோம்பி என்ற தில்லைப் பதிகம், வாசிதீரவே, நன்றுடையானைத் தீயதிலானை, வம்பார் குன்றம் நீடுயர் சாரல் என்ற திருக்குற்றாலப் பதிகம், (அப்பர்) முத்துவிதான மணிப் பொற்கவரி, (சுந்தரர்) முதலையைப் பிள்ளை தரச் சொல்லு என்பன இப்பண்ணில் அமைந்தவை. இது 29–ஆவது மேளகர்த்தா தீரசங்கராபரணத்தில் ஜன்னியம்.

குறிஞ்சி, குறிஞ்சி இராகத்துக்கு நேர் என்பர். மலகரி (பிலகரி)யில் பாடுவது மரபு. குறிஞ்சி நள்ளிரவில் பாடப்படும். அகநானூற்றுப் பாடல் (102.5–9) இதை உணர்த்தும்.

ஒலியர் வார்மயிர் உளரினள் கொடிச்சி
பெருவரை மருங்கிற் குறிஞ்சி பாட
..................................................................
மறம் புகல் மழகளிறு உறங்கும்

என்பது பாட்டு, குறிஞ்சிப் பண்ணின் ஆற்றல் குறித்து இப்பாடல் கூறும் செய்தி மிக்க சுவையானது. மலைப்பகுதியில் யானை வந்து தினைக்கதிரை நாசம் செய்த நிலைக்கண் காவல் இருந்த கொடிச்சி குறிஞ்சிப் பண்ணைப் பாடினாள். கேட்ட யானை தான் பறித்த தினைக்கதிரையும் மென்று விழுங்காது, இடத்தைவிட்டு நிலைபெயராது துயில்வரப் பெற்று அவ்விடத்திலேயே உறங்கியிருந்ததாம். குறிஞ்சியின் கவர்ச்சி அத்தகையது. குறிஞ்சிக்குச் சிறுபொழுது இடையாமம் என்று தண்டியலங்கார உரையாசிரியர் ஒரு பாடலுக்குக் குறிப்பெழுதுகிறார்.

பாடல் பயிலும் பணிமொழி தண்பணைத்தோள்
கூடல் அவாவாற் குறிப்புணர்த்தும் – ஆடவற்கு
மென்றீந் தொடையாழின் மெல்லவே தைவந்தாள்
இன்தீங் குறிஞ்சி யிசை

தருமபுரம் ஆதீனத்தலைவர் மார்கழி மாதத்தில் தினமும் இடையாமத்தில் நீராடிச் சிறப்பு அனுட்டானம் செய்தல் வழக்கம். அப்போது ஓதுவார்கள் குறிஞ்சிப்பண் பாடுவது மரபு.

| மூர்த்தி | அருள்தரும் உமையம்மை உடனமர் திருமூல நாயகர்.<br>அருள்தரும் சிவகாமசுந்தரி உடனமர் நடராசப் பெருமான். | | |
|---|---|---|---|
| தல இருப்பிடம் | சோழ நாட்டில் கடலூரிலிருந்து 40 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| தல மரம் | தில்லை, ஆல் | | |
| தீர்த்தம் | சிவகெங்கை, பிரமானந்த கூபம், வியாக்ரபாத தீர்த்தம் | | |
| பாடியவர் | மூவர் | பதிகங்கள் | 11 |

913. மடித்தாடும் அடிமைக்கண் அன்றியே மனனேநீ
வாழு நாளுந்
தடுத்தாட்டித் தருமனார் தமர்செக்கி லிடும்போது
தடுத்தாட் கொள்வான்
கடுத்தாடும் கரதலத்தில் தமருகமும் எரிஅகலுங்
கரிய பாம்பும்
பிடித்தாடிப் புலியூர்ச்சிற் றம்பலத்தெம்
பெருமானைப்
பெற்றா மன்றே. 1

மனமே! நீ குஞ்சித்து ஆடுகின்ற தனது திருவடிக்குச் செய்யும் தொண்டின்கண் வாழாமல் உண்டு உடுத்தே வாழும் நாள்களிலும், உன்னை அவ்வாறே சென்று கெடாதவாறு தடுத்து, தனது இச்சைவழி நடாத்தி, பின்பு நீ முன்செய்த பாவத்தின் பொருட்டு உன்னைக் கூற்றுவனது ஏவலர்கள் ஒறுக்க முயலும்போது அதனையும் தடுத்து ஆட்கொள்பவனாகிய, கையில் தமருகத்தை யும், நெருப்பு எரிகின்ற தகழியையும், சினந்து ஆடுகின்ற கரிய பாம்பையும் பிடித்துக்கொண்டு ஆடுகின்ற, பெரும்பற்றப் புலியூரில் திருச்சிற்றம்பலத்தில் விளங்குகின்ற நம்பெருமானை அடைந்து விட்டோமன்றே; இனி நாம் பெறவேண்டுவது யாது!

மடித்தாடும் அடிமை – ஒரு தாளை மடித்து ஊன்றியும் ஒரு தாளை மடித்துத் தூக்கியும் ஆடுகின்ற திருவடிக் கீழ்ச்செய்யும் அடிமைத்திறம்.
அடிமைக்கண் அன்றியே வாழும் நாளும் –
அடிமைத்திறத்தினின்றும் வழுவி நிகழும் நாள்களிலேயும்.
தடுத்தாட்டி – மேற்செல்லாதபடி தடுத்துத் தமது புரத்துக்குட் கொண்டு புகுத்தி.

**914.** பேராது காமத்திற் சென்றார்போ லன்றியே
பிரியா துள்கிச்
சீரார்ந்த அன்பராய்ச் சென்றுமுன் னடிவீழ்ந்
திருவி னாரை
ஓராது தருமனார் தமர்செக்கி லிடும்போது
தடுத்தாட் கொள்வான்
பேராளர் புலியூர்ச்சிற் றலம்பலத்தெம் பெருமானைப்
பெற்றா மன்றே. 2

பேராது – நீங்காது. பெயர்தலின்றி.
பேராளர் – பெரியோர்.
ஓராது – அத்தன்மைகளை எண்ணாது.

மனமே! சாங்காறும், நீங்காது உலக இன்பத்தில் சென்றவர்போலன்றி, புகழ் நிறைந்த அன்பை யுடையவர்களாய், தன்னை இடைவிடாது நினைத்து, திருமுன் சென்று தனது திருவடியில் வீழ்ந்து வணங்கும் திருவுடையவரை, அவரது நிலையை அறியாமல், கூற்றுவனது ஏவலர்கள் ஒறுக்க முயலும்போது அதனைத் தடுத்து ஆட்கொள்பவனாகிய, பெருமையுடையவர் களது பெரும்பற்றப் புலியூரில் உள்ள திருச்சிற்றம்பலத்தில் விளங்குகின்ற நம் பெருமானை அடைந்துவிட்டோமன்றே; இனி நாம் பெறவேண்டுவது யாது!

**915.** நரியார்தங் கள்ளத்தாற் பக்கான பரிசொழிந்து
நாளும் உள்கித்
திரியாத அன்பராய்ச் சென்றுமுன் னடிவீழுஞ்
சிந்தை யாரைத்
தரியாது தருமனார் தமர்செக்கி லிடும்போது
தடுத்தாட் கொள்வான்
பெரியோர்கள் புலியூர்ச்சிற் றம்பலத்தெம்
பெருமானைப்
பெற்றா மன்றே. 3

மனமே! நரியினது வஞ்சனைபோலும் வஞ்சனையினால் இரண்டுபட்ட தன்மையின் நீங்கி, நாள்தோறும் தன்னை நினைந்து, மாறுபடாத அன்பை உடையவராய்த் திருமுன் சென்று, தனது திருவடியில் வீழ்ந்து வணங்குங் கருத்துடையவரை, கூற்றுவனது ஏவலர்கள் ஒறுக்க முயலும்போது சிறிதும் தாழாது அதனைத் தடுத்து ஆட்கொள்பவனாகிய, பெரியோர்களது பெரும்பற்றப் புலியூரில் உள்ள திருச்சிற்றம்பலத்தில் விளங்குகின்ற நம் பெருமானை அடைந்து விட்டோமன்றே; இனி நாம் பெறவேண்டுவது யாது!

**916.** கருமையார் தருமனார் தமர்நம்மைக் கட்டியகட்
டறுப்பிப் பானை
அருமையாந் தன்னுலகந் தருவானை மண்ணுலகங்
காவல் பூண்ட
உரிமையாற் பல்லவர்க்குத் திறைகொடா
மன்னவரை
மறுக்கஞ் செய்யும்
பெருமையார் புலியூர்ச்சிற் றம்பலத்தெம்
பெருமானைப்
பெற்றா மன்றே. 4

மனமே! கருமை நிறம் பொருந்திய கூற்றுவனது ஏவலர் நம்மைக் கட்டுவராயின், அக்கட்டினை அறுத்தெறிபவனும், நமக்கு, பிறர் பெறுதற்கரிய தனது உலகத்தையே தருபவனும், பல்லவ மன்னன் இந்நிலவுலகத்தை நன்நெறியில் வைத்துக் காத்தலை மேற்கொண்ட இயைபினால், அவனுக்குத் திறைகொடாது மாறுபடும் பிற மன்னர்களை வருத்துதல் செய்கின்றவனும் ஆகிய, பெருமையுடையவர் களது பெரும்பற்றப்புலியூரில் உள்ள திருச்சிற்றம்பலத்தில் விளங்குகின்ற நம் பெருமானை அடைந்துவிட்டோமன்றே; இனி நாம் பெறவேண்டுவது யாது!

| | |
|---|---|
| 917. கருமானின் உரியாடைச் செஞ்சடைமேல் வெண்மதியக்<br>கண்ணி யானை<br>உருமன்ன கூற்றத்தை உருண்டோட உதைத்துகந்<br>துலவா இன்பம்<br>தருவானைத் தருமனார் தமர்செக்கி லிடும்போது<br>தடுத்தாட் கொள்வான்<br>பெருமானார் புலியூர்ச்சிற் றம்பலத்தெம் பெருமானைப்<br>பெற்றா மன்றே. 5<br><br>உரும் – இடி. உலவா – கெடாத; அழியாத. | மனமே! யானையினது தோலைப் போர்வையாக உடைய, சிவந்த சடைமேல் வெள்ளிய பிறை யாகிய கண்ணியைச் சூடினவனும், இடிபோல முழங்கும் கூற்றுவனை நிலத்தில் உருண்டு ஒழியும்படி உதைத்துப் பின் அருள்செய்து, அவனால் வெருட்டப்பட்ட சிறுவனுக்கு அழியாத இன்பத்தைத் தந்தவனும், நம்மை, அக்கூற்றுவனது ஏவலர்கள் ஒறுக்க முயலும் போது அதனைத் தடுத்து ஆட்கொள்பவனும் ஆகிய, பெருமை நீங்காதவர்களது பெரும்பற்றப் புலியூரில் உள்ள திருச்சிற்றம்பலத்தில் விளங்குகின்ற நம் பெருமானை அடைந்துவிட்டோமன்றே; இனி நாம் பெறவேண்டுவது யாது! |
| 918. உய்த்தாடித் திரியாதே உள்ளமே ஒழிகண்டாய்<br>ஊன்க ணோட்டம்<br>எத்தாலுங் குறைவில்லை என்பர்காண் நெஞ்சமே<br>நம்மை நாளும்<br>பைத்தாடும் அரவினன் படர்சடையன் பரஞ்சோதி<br>பாவந் தீர்க்கும்<br>பித்தாடி புலியூர்ச்சிற் றம்பலத்தெம் பெருமானைப்<br>பெற்றா மன்றே. 6 | மனமே! படம் எடுத்து ஆடும் பாம்பையும், விரிந்த சடையையும் உடையவனும், மேலான ஒளியாய் உள்ளவனும், அடைந்தவரது பாவங்களை நீக்குகின்றவனும், பித்துக் கொண்டு ஆடுகின்றவனும் ஆகிய, பெரும் பற்றப்புலியூரில் உள்ள திருச்சிற்றம்பலத்தின் கண் விளங்குகின்ற நம் பெருமானை அடைந்து விட்டோமன்றே; இனி நாம் பெற வேண்டுவது யாது! இதனால், நமக்கு எதனாலும் குறைவில்லாத வாழ்வு உளதாயிற்று என்று நம்மை நாள்தோறும் பலரும் புகழ்கின்றனர்; ஆதலின், மனமே! இனி நீ, உடம்பின் மேற் கண்ணோட்டம் செலுத்தி அலைந்து திரியாது, அதனை முற்றிலும் ஒழி. |
| 919. முட்டாத முச்சந்தி மூவா யிரவர்க்கும்<br>மூர்த்தி என்னப்<br>பட்டானைப் பத்தராய்ப் பாவிப்பார் பாவமும்<br>வினையும் போக<br>விட்டானை மலைஎடுத்த இராவணனைத் தலைபத்தும்<br>நெரியக் காலால்<br>தொட்டானைப் புலியூர்ச்சிற் றம்பலத்தெம் பெருமானைப்<br>பெற்றா மன்றே. 7<br><br>மூன்று பொழுதும் தவறாது வழிபடும் 3000 அந்தணர்க்கு வழிபடப்படும் மூர்த்தி ஒருவனேயாதல் வியப்பு என்பது நயம். தில்லை மூவாயிரவர் பிறிதொரு கடவுளை நோக்கார். | மனமே! 'தப்பாத, முப்போதும் செய்யும் வழி பாட்டினையுடைய மூவாயிரவர் அந்தணர்க்கும் ஒரு மூர்த்தியே' என்று அனைவராலும் சொல்லப்பட்டவனும், அடியவராய் நின்று தன்னை நினைப்பவரது, பாவமும் புண்ணியமும் ஆகிய இரு வினைகளும் விலகுமாறு நீங்குகின்றவனும், தனது மலையை எடுத்த இராவணனை, அவனது பத்துத் தலைகளும் நெரியும்படி காலால் ஊன்றினவனும் ஆகிய, பெரும்பற்றப் புலியூரில் உள்ள திருச்சிற்றம்பலத்தின்கண் விளங்குகின்ற நம் பெருமானை அடைந்து விட்டோமன்றே; இனி நாம் பெறவேண்டுவது யாது! |

| | |
|---|---|
| **920.** கற்றானுங் குழையுமா றன்றியே கருதுமா<br>கருத கிற்றார்க்<br>கெற்றாலுங் குறைவில்லை என்பர்காண் உள்ளமே<br>நம்மை நாளுஞ்<br>செற்றாட்டித் தருமனார் தமர்செக்கி லிடும்போது<br>தடுத்தாட் கொள்வான்<br>பெற்றேறிப் புலியூர்ச்சிற் றம்பலத்தெம்<br>பெருமானைப்<br>பெற்றா மன்றே. 8 | மனமே! கல்லும் தன் தன்மை மாறி உருகும்படி, தன்னை நினைக்கும் முறையில் நினைக்க வல்லராயினார்க்கு, எத்தன்மைத்தாய பொருளாலும் குறைவில்லை என்று பெரியோர் சொல்லுவர்; அவ்வகையில் நாம், நம்மை, கூற்றுவனது ஏவலர்கள் பலகாலும் ஆட்டக்கருதிச் செக்கிலிட முயலும்போது, அதனைத் தடுத்து ஆட்கொள்ளுகின்ற, விடையேறுபவனாகிய, பெரும்பற்றப் புலியூரில் உள்ள திருச்சிற்றம்பலத்தின்கண் விளங்கும் நம் பெருமானை அடைந்து விட்டோமன்றே; இனி நாம் பெறவேண்டுவது யாது! |
| **921.** நாடுடைய நாதன்பால் நன்றென்றுஞ் செய்மனமே<br>நம்மை நாளும்<br>தாடுடைய தருமனார் தமர்செக்கி லிடும்போது<br>தடுத்தாட் கொள்வான்<br>மோடுடைய சமணர்க்கும் முடையுடைய<br>சாக்கியர்க்கும்<br>மூடம் வைத்த<br>பீடுடைய புலியூர்ச்சிற் றம்பலத்தெம் பெருமானைப்<br>பெற்றா மன்றே. 9<br><br>தாருடைய – தாடுதல் – தடுத்து வருத்துதல்.<br>மோடு – அறியாமை; முருடு. முடை – தீ நாற்றம்.<br>சமணர் நீராடார் . சாக்கியர் ஊன் உண்பர். | மனமே! நம்மை, தலைமையையுடைய கூற்றுவனது ஏவலர் பலநாளும் செக்கிலிட்டு ஆட்ட முயலும்போது, அதனைத் தடுத்து ஆட்கொள்பவனும், முடைநாற்றத்தையுடைய சமணர்கட்கும், வயிற்றையுடைய சாக்கியர்கட்கும் அறியாமையை வைத்த பெருமையையுடையவனும் ஆகிய, பெரும்பற்றப்புலியூரில் உள்ள திருச்சிற்றம் பலத்தின்கண் விளங்குகின்ற நம் பெருமானை அடைந்து விட்டோமன்றே; இனி நாம் பெற வேண்டியது யாது! அதனால், உயர்ந்தோரால் விரும்பப்படுதலையுடைய அவ்விறை வனிடத்தில் என்றும் நன்றாய தொண்டினைச் செய். |
| **922.** பாரூரும் அரவல்குல் உமைநங்கை யவள்பங்கன்<br>பைங்கண் ஏற்றன்<br>ஊரூரன் தருமனார் தமர்செக்கி லிடும்போது<br>தடுத்தாட் கொள்வான்<br>ஆரூரன் தம்பிரான் ஆரூரன் மீகொங்கில்<br>அணிகாஞ் சிவாய்ப்<br>பேரூரர் பெருமானைப் புலியூர்ச்சிற் றம்பலத்தே<br>பெற்றா மன்றே. 10<br><br>சிவபெருமானது திருக்கோயில் இல்லாத ஊர் ஊரன்று.<br>ஆதலின் அப்பெருமானை ஊரூரன் என்று அருளினார். | மனமே! நிலத்தில் ஊர்ந்து செல்கின்ற பாம்பினது படம்போலும் அல்குலையுடைய உமை என்னும் நங்கையது பாகத்தையுடையவனும், பசிய கண்களையுடைய இடபத்தையுடைய வனும், ஊர்தோறும் எழுந்தருளியிருப்பவனும் நம்மை, கூற்றுவனது ஏவலர்கள் ஒறுக்க முயலும் போது அதனைத் தடுத்து ஆட்கொள்பவனும், நம்பியாரூரனுக்குத் தலைவனும், திருவாரூரை உடையவனும், மேற்றிசையில் உள்ள கொங்கு நாட்டில், அழகிய காஞ்சிநதியின் கரையில் விளங்கும் பேரூரில் உள்ளவரது கடவுளும் ஆகிய இறைவனை, பெரும்பற்றப் புலியூரில் உள்ள திருச்சிற்றம்பலத்தில் அடைந்து விட்டோமன்றே; இனி நாம் பெறவேண்டுவது யாது! |

## 91. திருவொற்றியூர்

பண் : குறிஞ்சி

பதிக எண் : 91

| மூர்த்தி | அருள்தரும் வடிவுடை நாயகி உடனமர் அருள்மிகு படம்பக்கநாதர். | | |
| --- | --- | --- | --- |
| தல இருப்பிடம் | தொண்டை நாட்டில் சென்னைப் பெருநகரில் அமைந்து உள்ளது. | | |
| தல மரம் | மகிழமரம் | | |
| தீர்த்தம் | பிரம்மதீர்த்தம் | | |
| பாடியவர் | மூவர் | பதிகங்கள் | 8 |

923. பாட்டும் பாடிப் பரவித் திரிவார்
ஈட்டும் வினைகள் தீர்ப்பார் கோயில்
காட்டுங் கலமுந் திமிலுங் கரைக்கே
ஓட்டுந் திரைவாய் ஒற்றி யூரே. 1

உரையாற் சொல்லுதலேயன்றிப் பாட்டாலும் பாடித் துதித்து நிற்பார் செய்த வினைகளை நீக்குகின்ற இறைவரது இடம், மக்கள் தம்பால் சேர்க்கின்ற பெரிய மரக்கலங்களையும், சிறிய படகுகளையும் கரையிற் சேர்க்கின்ற கடல் அலைகள் பொருந்திய திருவொற்றியூரே.

கலம் – மரக்கலம். திமில் – சிறுபடகு. திரை – இவற்றைக் கரையிற் செலுத்தும் அலைகள். கரைக்கே திரை ஓட்டும் – பிறவிக்கடலுட்பட்டு அலையும் உயிர்களைக் கரை சேர்க்கும் குறிப்பு.

924. பந்துங் கிளியும் பயிலும் பாவை
சிந்தை கவர்வார் செந்தீ வண்ணர்
எந்தம் மடிகள் இறைவர்க் கிடம்போல்
உந்துந் திரைவாய் ஒற்றி யூரே. 2

பந்தாடுதலையும், கிளியை வளர்த்தலையும் பலகாலும் செய்கின்ற, பாவை போல்வாளாகிய உமையவளது மனத்தைக் கவர்பவரும், சிவந்த நெருப்புப்போலும் நிறத்தையுடையவரும், எங்கள் தலைவரும் ஆகிய இறைவருக்கு இடமாவது, பல பொருள்களைத் தள்ளி வருகின்ற கடல் அலைகள் பொருந்திய திருவொற்றியூரே.

925. பவளக் கனிவாய்ப் பாவை பங்கன்
கவளக் களிற்றின் உரிவை போர்த்தான்
தவழும் மதிசேர் சடையாற் கிடம்போல்
உகளுந் திரைவாய் ஒற்றி யூரே. 3

பவளமும், கனியும் போலும் இதழையுடைய, பாவை போன்றவளாகிய உமையது பாகத்தை உடையவனும், கவளத்தை உண்கிற களிற்றி யானையினது தோலைப் போர்த்தவனும், தவழ்ந்து பெயரும் பிறை பொருந்திய சடையையுடையவனும் ஆகிய இறைவனுக்கு இடமாவது, புரளுகின்ற கடல் அலைகள் பொருந்திய திருவொற்றியூரே.

**926.** என்ன தெழிலும் நிறையும் கவர்வான்
புன்னை மலரும் புறவில் திகழும்
தன்னை முன்னம் நினைக்கத் தருவான்
உன்னப் படுவான் ஒற்றி யூரே. 4

முதலில் யான் நினைக்குமாறு தன்னைத் தருபவனும், பின்பு என்னால் நினைக்கப் படுவனும் ஆகிய இறைவன், எனது அழகையும், மன உறுதியையும் கவர்தற்பொருட்டு, திருவொற்றியூரில், புன்னை மலர்கள் மலர்கின்ற கானலிடத்தே விளங்குவான்.

என்ன தெழிலும் நிறையும் கவர்வான் – அகப்பொருள்துறை; தலைவி கூற்று.
புன்னை... புறவு – நெய்தற் கரு. தன்னை முன்னம் நினைக்கத் தருவான் – நான் நினைப்பதன் முன் தான் நினைத்துத் தன்னை நினைக்குமருள் தருவான். அவனை நினைத்தற்கும் முன்னர் அவன் அருள் புரிய வேண்டும். உன்னப்படுவான் – தன்னை முன்னம் தந்த பின் நினைப்பினுள் வருபவன்.
புறவு – கடற்கரைச் சோலை.

**927.** பணங்கொள் அரவம் பற்றி பரமன்
கணங்கொள் சூழக் கபாலம் ஏந்தி
வணங்கும் இடைமென் மடவார் இட்ட
உணங்கல் கவர்வான் ஒற்றி யூரே. 5

உணங்கல் – பலிச்சோறு

படத்தையுடைய பாம்பைக் கையில் பிடித்திருப்பவனும், மேலானவனும், பூத கணங்கள் சூழத் தலையோட்டை ஏந்திச் சென்று, துவளுகின்ற இடையினையுடைய மகளிர் இடுகின்ற சோற்றை ஏற்பவனும் ஆகிய இறைவன் திருவொற்றியூரிலே நீங்காது எழுந்தருளியிருப்பான்.

**928.** படையார் மழுவன் பால்வெண் ணீற்றன்
விடையார் கொடியன் வேத நாவன்
அடைவார் வினைகள் அறுப்பான் என்னை
உடையான் உறையும் ஒற்றி யூரே. 6

படைக்கலத் தன்மை பொருந்திய மழுவையும், பால்போலும் வெள்ளிய திருநீற்றையும், இடபம் பொருந்திய கொடியையும், வேதத்தை ஓதுகின்ற நாவையும் உடையவனும், தன்னை அடைக்கலமாக அடைபவரது வினைகளை ஒழிப்பவனும், என்னை ஆளாக உடையவனும் ஆகிய இறைவன் திருவொற்றியூரிலே நீங்காது எழுந்தருளியிருப்பான்.

**929.** சென்ற புரங்கள் தீயில் வேவ
வென்ற விகிர்தன் வினையை வீட்ட
நன்று நல்ல நாதன் நரையே
றொன்றை உடையான் ஒற்றி யூரே. 7

வானத்தில் உலாவிய மதில்கள் நெருப்பில் வெந்தொழியுமாறு அவற்றை வென்ற, வேறுபட்ட தன்மையை உடையவனும், வினைகளைப் போக்குதற்கு மிகவும் நல்ல கடவுளும், வெண்மையான இடபம் ஒன்றை உடையவனும் ஆகிய இறைவன், திருவொற்றியூரிலே நீங்காது எழுந்தருளியிருப்பான்.

| | | | |
|---|---|---|---|
| 930. | கலவ மயில்போல் வளைக்கை நல்லார்<br>பலரும் பரவும் பவளப் படியான்<br>உலகின் உள்ளார் வினைகள் தீர்ப்பான்<br>உலவுந் திரைவாய் ஒற்றி யூரே. | 8 | தோகையையுடைய மயில்போலும், வளையை அணிந்த கைகளையுடைய அழகிய மகளிர் பலரும் துதிக்கின்ற, பவளம்போலும் உருவத்தையுடையவனாகிய இறைவன், கரையில் வந்து உலாவுகின்ற கடல் அலைகள் பொருந்திய திருவொற்றியூரில் இருந்தே, உலகில் உள்ளவரது வினைகளை எல்லாம் தீர்ப்பான். |
| 931. | பற்றி வரையை யெடுத்த அரக்கன்<br>இற்று முரிய விரலால் அடர்த்தார்<br>எற்றும் வினைகள் தீர்ப்பார் ஓதம்<br>ஒற்றுந் திரைவாய் ஒற்றி யூரே. | 9 | தமது மலையைப்பற்றி அசைத்த அரக்கனாகிய இராவணனை, அவனது உறுப்புக்கள் ஒடிந்து முரியும்படி நெருக்கினவராகிய இறைவர், கடல் நீர் சூழ்ந்த, அலைகள் பொருந்திய திருவொற்றியூரிலே இருந்தே, அடியவரைத் தாங்குகின்ற வினைகளை நீக்குவார். |
| 932. | ஒற்றி யூரும் அரவும் பிறையும்<br>பற்றி யூரும் பவளச் சடையான்<br>ஒற்றி யூர்மேல் ஊரன் உரைத்த<br>கற்றுப் பாடக் கழியும் வினையே. | 10 | ஒன்றை ஒன்று உராய்ந்து ஊர்கின்ற பாம்பும், பிறையும் பற்றுக்கோடாக நின்று ஊரும் பவளம் போலும் சடையை உடைய இறைவனது திருவொற்றியூர்மேல் நம்பியாரூரன் பாடிய இப்பாடல்களை நன்கு கற்றுப் பாடினால், வினைகள் நீங்கும். |



திருப்புக்கொளியூர் அவினாசி : முதலையுண்ட பாலனை அழைத்தல்

## 92. திருப்புக்கொளியூர் அவினாசி

சுவாமிகள், ஆரூரிலிருக்கும் நாளில் மலைநாடணைவதற்கு விருப்புக் கொண்டு, ஆரூர்ப் பெருமானிடம் விடைகொண்டு, பல பதிகளையும் வணங்கிக் கொண்டு, கொங்கு நாட்டில், திருப்புக்கொளியூர் அவினாசி சென்று, நெடுநாள்களுக்கு முன்னர், முதலை விழுங்கிய மகனை, இறையன்பு மிகுந்த அவனது பெற்றோர்களது துயரத்தை நீக்குதற் பொருட்டு, முதலை வாயினின்றும் அழைத்துத் தருதற்கு அக்குளக் கரைக்கண் சென்று பாடியருளியது இத் திருப்பதிகம். (தி. 12 வெள்ளானைச் சருக். 10–11). இதன் நான்காவது பாடல் முடிவதற்குள், பெருமான் அருளால் முதலை, மகனைக் கரையில் சேர்த்தது.

பண் : குறிஞ்சி — பதிக எண் : 92

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் கருணாம்பிகை உடனமர் அருள்மிகு அவிநாசியப்பர். | | |
| **தல இருப்பிடம்** | கொங்கு நாட்டில் கோவை – பெருந்துறை நெடுஞ்சாலையில் கோவையிலிருந்து 40 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | பாதிரி | | |
| **தீர்த்தம்** | நாக கன்னிகை | | |
| **பாடியவர்கள்** | நம்பியாரூரர் | **பதிகம்** | 1 |

933. எற்றான் மறக்கேன் எழுமைக்கும்
எம்பெரு மானையே
உற்றாய்என் றுன்னையே உள்குகின்றேன்
உணர்ந் துள்ளத்தால்
புற்றா டரவா புக்கொளி
யூர்அவி னாசியே
பற்றாக வாழ்வேன் பசுபதி
யேபர மேட்டியே. 1

புற்றின்கண் வாழ்கின்ற, படமெடுத்து ஆடுகின்ற பாம்பை அணிந்தவனே! உயிர் களுக்கெல்லாம் தலைவனே! மேலான இடத்தில் உள்ளவனே! திருப்புக்கொளியூரில் உள்ள, 'அவினாசி' என்னும் திருக்கோயிலில் எழுந்தருளியிருப்பவனே! ஏழு பிறப்பிலும் எமக்குத் தலைவனாய் உள்ள உன்னையே எனக்கு உறவினன் என்று உணர்ந்து, மனத்தால் நினைக்கின்றேன்; உன்னையே எனக்குப் பற்றுக்கோடாகக் கொண்டு வாழ்வேன்; உன்னை எக்காரணத்தால் மறப்பேன்!

அவினாசி – அழியாதது. இத்தலத்தில் உள்ள திருக்கோயிலின் பெயராகிய இஃது ஆகுபெயராய் அதன்கண் இருக்கும் இறைவனைக் குறித்தது.

எற்றான் மறக்கேன் – எவ்வாற்றாலும் மறக்கில்லேன்.

உற்றாய் – உற்றவர்.

934. வழிபோவார் தம்மோடும் வந்துடன்
கூடிய மாணிநீ
ஒழிவ தழகோசொல் லாய்அரு
ளோங்கு சடையானே
பொழிலா ருஞ்சோலைப் புக்கொளி
யூரிற் குளத்திடை
இழியாக் குளித்த மாணிஎன்
னைக்கிறி செய்ததே. 2

அருள்மிக்க, தவக்கோலத்தையுடையவனே! பெருமரப் பொழில்களையும், நிறைந்த இளமரக் காக்களையும் உடைய திருப்புக்கொளியூரில் உள்ள குளத்தின்கண் இறங்கிக் குளித்த அந்தணச் சிறுவன் செய்த குற்றம் யாது? உன்னை வணங்கச் செல்பவர்களுடன் வந்து உடன் சேர்ந்த அச்சிறுவன், உன் திருமுன்னே இறந்து போவது உனக்குப் பொருந்துவதோ? நீ சொல்லாய்.

935. எங்கேனும் போகினும் எம்பெரு
மானை நினைந்தக்கால்
கொங்கே புகினுங் கூறைகொண்
டாறலைப் பார்இலை
பொங்கா டரவா புக்கொளி
யூர்அவி னாசியே
எங்கோ னேஉனை வேண்டிக்கொள்
வேன்பிற வாமையே. 3

மிகுதியான, ஆடுகின்ற பாம்பை அணிந்தவனே! திருப்புக்கொளியூரில் உள்ள, 'அவினாசி' என்னும் திருக்கோயிலில் எழுந்தருளியிருப்பவனே! எங்கள் தலைவனே! எம்பெருமானாகிய உன்னை நினைத்தால், கொங்கு நாட்டிலே புகுந்தாலும், மற்றும் எங்கேனும் சென்றாலும், என்னை ஆறலைத்துக் கூறையைப் பறித்துக்கொள்பவர் இலராவர்; ஆகவே, உன்னிடம் நான் பிறவாமை ஒன்றையே வேண்டிக் கொள்வேன்.

"இம்மையில் எனக்குக் குறை யாதும் இல்லை; இனிப் பிறவாமை ஒன்றே வேண்டும்" என்றவாறு. 'சிறுவனை உயிர்ப்பிக்க எழுந்த அவா நிரம்பாதுவிடின் பிறப்பு உளதாம்' என்பது குறிப்பாகக் கொள்ள வேண்டும். சிவனருள் நினைவுடன் இருப்பார்க்கு எத்துன்பங்களும் வாரா என்பது அறிவுறுத்தி அருளப்பட்டது.

936. உரைப்பார் உரைஉகந் துள்கவல்
லார்தங்கள் உச்சியாய்
அரைக்கா டரவா ஆதியும்
அந்தமும் ஆயினாய்
புரைக்காடு சோலைப் புக்கொளி
யூர்அவி னாசியே
கரைக்கால் முதலையைப் பிள்ளை
தரச்சொல்லு காலனையே. 4

"காலனை முதலையிடத்தும், முதலையைக் கரையிடத்தும் தரச்சொல்லு" என்றபடி. செம்பொருள்பட சுவாமிகள் இவ்வாறு இப்பாடலை அருளிச் செய்து முடிக்குமுன்பே, பிள்ளை கரைக்கண் தரப்பட்டது வரலாறு.

உன்னைப் புகழ்கின்றவர்களது சொல்லை விரும்புபவனே! உன்னை எஞ்ஞான்றும் மறவாது நினைக்க வல்லவரது தலைமேல் இருப்பவனே! அரையின்கண் ஆடுகின்ற பாம்பைக் கட்டியுள்ளவனே! எல்லாப் பொருட்கும் முதலும் முடிவுமானவனே! சிறந்த முல்லை நிலத்தையும், சோலைகளையும் உடைய திருப்புக்கொளியூரில் உள்ள, 'அவினாசி' என்னும் திருக்கோயிலில் எழுந்தருளியிருப்பவனே! கூற்றுவனையும் முதலையையும், இக்குளக்கரைக்கண் பிள்ளையைக் கொணர்ந்து தருமாறு ஆணையிட்டருள்.

**937.** அரங்காவ தெல்லா மாயிடு
காடது அன்றியும்
சரங்கோலை வாங்கி வரிசிலை
நாணியிற் சந்தித்துப்
புரங்கோட எய்தாய் புக்கொளி
யூர்அவி னாசியே
குரங்காடு சோலைக் கோயில்கொண்
டகுழைக் காதனே. 5

திருப்புக்கொளியூரில் உள்ள, குரங்குகள் குதித்து ஆடுகின்ற சோலையையுடைய, 'அவினாசி' என்னும் திருக்கோயிலை இடமாகக் கொண்ட, குழையையணிந்த காதினை உடையவனே! உனக்கு நடனமாடும் இடமாய் இருப்பது, எல்லாரும் அழிகின்ற முதுகாடு, அதுவன்றியும், நீ, அம்பை எடுத்து, வரிந்த வில்லில் உள்ள நாணியில் தொடுத்து, மூன்று ஊர்கள் அழிய அழித்தாய்.

**938.** நாத்தா னும்உனைப் பாடல்அன்
றிநவி லாதெனாச்
சோத்தென்று தேவர் தொழநின்ற
சுந்தரச் சோதியாய்
பூத்தாழ் சடையாய் புக்கொளி
யூர்அவி னாசியே
கூத்தா உனக்குநான் ஆட்பட்ட
குற்றமுங் குற்றமே. 6

நாத்தனும் – நாவின் செய்கையாலும் சோத்தென்று – வணக்கமென்று; போற்றி என்று.
பூத்தாழ் – பூக்கள் மிகுந்த

'எங்கள் நாவும் உன்னைப் பாடுதலன்றி வேறொன்றைச் சொல்லாது' என்றும், 'உனக்கு வணக்கம்' என்றும் சொல்லித் தேவர்கள் வணங்க நிற்கின்ற அழகிய ஒளிவடிவாய் உள்ளவனே! பூவையணிந்த, நீண்ட சடையை உடையவனே! நடனம் ஆடுபவனே! திருப்புக்கொளியூரில் உள்ள, 'அவினாசி' என்னும் திருக்கோயிலில் எழுந்தருளி யிருப்பவனே! நான் உனக்கு ஆளான தன்மையும் குற்றமோ?

**939.** மந்தி கடுவனுக் குண்பழம்
நாடி மலைப்புறம்
சந்திகள் தோறுஞ் சலம்புட்பம்
இட்டு வழிபடப்
புந்தி உறைவாய் புக்கொளி
யூர்அவி னாசியே
நந்தி உனைவேண்டிக் கொள்வேன்
நரகம் புகாமையே. 7

புக்கொளியூர் என்பது ஊர்ப்பெயர். ஆனால் தற்காலத்தில் பழைய ஊர்ப்பெயர் மறைந்து கோவில் – இறைவர் பெயர் அவிநாசியே ஊர்ப் பெயராகிவிட்டது.

பெண்குரங்கு, ஆண்குரங்குக்கு, அது செல்லும் மலைப்புறங்களில், உண்ணத் தக்க பழங்கள் கிடைக்கவேண்டி, 'காலை, நண்பகல், மாலை' என்னும் காலங்கள் தோறும் நீரையும், பூவையும் இட்டு வழிபாடு செய்ய, அதன் மனத்திலும் புகுந்து இருப்பவனே! திருப்புக்கொளியூரில் உள்ள, 'அவினாசி' என்னும் திருக்கோயிலில் எழுந்தருளி இருக்கின்ற, 'நந்தி' என்னும் பெயரை உடையவனே! உன்னிடம் நான் நரகம் புகாதிருத்தலையே வேண்டிக் கொள்வேன்.

940. பேணா தொழிந்தேன் உன்னைஅல்
லாற்பிற தேவரைக்
காணா தொழிந்தேன் காட்டுதி
யேல்இன்னங் காண்பன்நான்
பூணாண் அரவா புக்கொளி
யூர்அவி னாசியே
காணாத கண்கள் காட்டவல்
லகறைக் கண்டனே. 8

'அணிகலமாகவும், வில்நாணாகவும் பாம்பைக் கொண்டுள்ளவனே! திருப்புக்கொளியூரில் உள்ள, 'அவினாசி' என்னும் திருக்கோயிலில் எழுந்தருளியிருப்பவனே! அடியேன் உன்னை யன்றிப் பிறதேவரை விரும்பாது நீங்கினேன்; அதனால் அவர்களைக் காணாதும் விட்டேன்; காணும் தன்மையற்ற என் கண்களைக் காணும்படி செய்யவல்ல, நஞ்சினையணிந்த கண்டத்தை யுடையவனே! என் அறிவாகிய கண்ணையும் அங்ஙனம் அறியச் செய்வையாயின், உனது பெருமைகளை இன்னும் மிகுதியாக அறிந்து கொள்வேன்.

ஒவ்வொரு பயனைப் பெற ஒவ்வொரு தேவரை அணுகுவோர் போலன்றி, எல்லாவற்றிற்கும் உன்னையே அடியேன் அணுகுவேன்; நீயும் அங்ஙனம் எனக்கு எல்லாவற்றையும் அளிக்கின்றாய்; இனியும் அளிப்பாய்" என்பதை இப்பாடலால் பெறலாம்.

941. நள்ளாறு தெள்ளா றரத்துறை
வாய்எங்கள் நம்பனே
வெள்ளாடை வேண்டாய் வேங்கையின்
தோலை விரும்பினாய்
புள்ளேறு சோலைப் புக்கொளி
யூரிற் குளத்திடை
உள்ளாடப் புக்க மாணியென்
னைக்கிறி செய்ததே. 9

திருநள்ளாறு, திரு அரத்துறைகளில் உள்ள நம்பனே! வெள்ளாடையை விரும்பாது, புலித்தோல் ஆடையை விரும்புபவனே! பறவைகள் தங்கும் சோலைகளையுடைய திருப்புக்கொளியூரில் உள்ள குளத்தில் உள்ளே முழுகப் புகுந்த அந்தணச் சிறுவன் செய்த மாயம் யாது?

942. நீரேற ஏறு நிமிர்புன்சடை
நின்மல மூர்த்தியைப்
போரேற தேறியைப் புக்கொளி
யூர்அவி னாசியைக்
காரேறு கண்டனைத் தொண்டன்ஆ
ரூரன் கருதிய
சீரேறு பாடல்கள் செப்பவல்
லார்க்கில்லை துன்பமே. 10

நீர் தங்குதலால் பெருமை பெற்ற, நீண்ட புல்லிய சடையை உடைய, தூய பொருளானவனும், போர் செய்யும் எருதை ஏறுபவனும், கருமை பொருந்திய கண்டத்தையுடையவனும் ஆகிய, திருப்புக்கொளியூரிலுள்ள, 'அவினாசி' என்னும் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கின்ற பெருமானை, அவனது தொண்டனாகிய நம்பியாரூரன், ஒரு பயன் கருதிப் பாடிய, இப்புகழ்மிக்க பாடல்களைப் பாடவல்லவர் கட்குத் துன்பம் இல்லையாகும்.

இப்பதிகத்துள் முதல் நான்கு திருப்பாடல்கள் குளக்கரையில் நின்று மகன் உயிர் பெற்று வருமுன்னும், ஏனைய ஆறு பாடல்கள் அதன்பின் அவனையும் கொண்டு சென்று திருக்கோயிலில் இறைவர் முன்பும் அருளப்பட்டன என்று கருதப்படும்.

‘பயன், முதலையுண்ட பாலனைப் பெறுதல்’ என்பது வெளிப்படை. இவ்வதியற்புதச் செயலைச் செய்தமையின், இப்பாடல்கள் புகழை மிக உடையவாயின. மூவர் முதலிகள் வாயிலாக நிகழ்ந்த அற்புதச் செயல்கள் பலவற்றுள்ளும் இதனையே அதியற்புதச் செயலாகத் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் நால்வர் நான்மணிமாலை – 19 ஆம் பாடலில் குறிப்பிட்டுள்ளார். நாவரசருக்கு பாம்பு விடமேறிய அப்பூதியடிகளின் திருமகனாரைப் பிழைப்பிக்க அவர்தம் உடல் இருந்தது. திருஞானசம்பந்தருக்குத் திருமயிலையில் பூம்பாவையின் சாம்பலிருந்தது. நம்பியாரூரருக்கு எதுவுமில்லாமலே திருவருளால் சாதித்தார். மகனை இழந்து நெடுநாள் வருந்தினோரது வருத்தத்தைப் போக்கிய இப்பாடல்களைப் பாடுவோர்க்கு, ஏனைத் துன்பங்கள் நீங்குதல் சொல்ல வேண்டுமோ என்பது திருவுள்ளம்.

## 93. திருநறையூர்ச் சித்தீச்சரம்

நறையூர் – ஊர்ப்பெயர், சித்தீச்சரம் – கோயிலின் பெயர்.

**பண் : குறிஞ்சி** **பதிக எண் : 93**

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் அழகம்மை உடனமர் அருள்மிகு சித்தநாதர். | | |
| **தல இருப்பிடம்** | சோழ நாட்டில் காவிரி தென்கரையில் கும்பகோணத்திலிருந்து நாச்சியார் கோயில் செல்லும் சாலையில் கும்பகோணத்திலிருந்து 9 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | பவள மல்லிகை | | |
| **தீர்த்தம்** | பிரமதீர்த்தம் | | |
| **பாடியவர்கள்** | திருஞானசம்பந்தர், நம்பியாரூரர் | **பதிகங்கள்** | 4 |

**943.** நீரும் மலரும் நிலவும் சடைமேல்
ஊரும் மரவும் உடையான் இடமாம்
வாரும் மருவி மணிபொன் கொழித்துச்
சேருந் நறையூர்ச் சித்தீச் சரமே. 1

இடையறாது ஒழுகும் நீர்ப்பெருக்கு, மணியையும் பொன்னையுங் கொழித்துக்கொண்டு சேர்கின்ற திருநறையூரில் உள்ள, ‘சித்தீச்சரம்’ என்னும் திருக்கோயிலே, சடையின்மேல் நீரையும், பல மலர்களையும், பிறையையும் ஊர்ந்து செல்லுகின்ற பாம்பையும் உடையவனாகிய இறைவனது இடமாகும்.

அருவி போலக் கடிதாய ஓட்டத்தை உடைய காவிரி நீர். நீர்ச்சிறப்பு பெற்ற பதி.

**944.** அளைப்பை அரவேர் இடையாள் அஞ்சத்
துளைக்கைக் கரித்தோல் உரித்தான் இடமாம்
வளைக்கைம் மடவார் மடுவில் தடநீர்த்
திளைக்குந் நறையூர்ச் சித்தீச் சரமே. 2

அளைப்பை – நஞ்சுப்பை; இவை பாம்பின் வாயினுள் பற்களின் மேற்பகுதியில் உள்ளன. துளைக்கை – துளையை உடைய கை – துதிக்கை.

வளையையணிந்த கைகளையுடைய இளமகளிர், மிக்க நீரினுள் மூழ்கி இன்புறும் திருநறையூரில் உள்ள, 'சித்தீச்சரம்' என்னும் திருக்கோயிலே, புற்றில் வாழ்கின்ற, படத்தை யுடைய பாம்பு போலும் இடையினையுடைய வளாகிய தன் தேவி அஞ்சும்படி, துளையை யுடைய துதிக்கையையுடைய யானையினது தோலை உரித்துப் போர்த்தவனாகிய இறைவனது இடமாகும்.

**945.** இகழுந் தகையோர் எயில்மூன் றெரித்த
பகழி யொடுவில் உடையோன் பதிதான்
முகிழ்மென் முலையார் முகமே கமலம்
திகழுந் நறையூர்ச் சித்தீச் சரமே. 3

இகழுந்தகையோர் – பகைவர்.

அரும்புபோலும், மெல்லிய தனங்களையுடைய மகளிரது முகங்களே, தாமரை மலர்போல விளங்குகின்ற திருநறையூரில் உள்ள, 'சித்தீச்சரம்' என்னும் திருக்கோயிலே, தன்னை இகழுந் தன்மையைப் பெற்ற அசுரர்களது மதில்கள் மூன்றை எரித்த அம்மையும், வில்லையும் உடைய இறைவனது இடமாகும்.

**946.** மறக்கொள் அரக்கன் **வரைதோள் வரையால்
இறக்கொள்** விரற்கோன் இருக்கும் இடமாம்
நறக்கொள் கமலந் நனிபள் ளிஎழத்
திறக்குந் நறையூர்ச் சித்தீச் சரமே. 4

மலர்கள் கூம்புவதைத் துயில்வதாகவும், மலர்தலை விழிப்பதாகவும் கூறுதல் இலக்கிய வழக்கு.
வரைதோள் வரையால் இறக்கொள் – கவிநயம்.

தேனைக் கொண்டுள்ள தாமரை மலரை, நன்கு துயிலெழும்படி வண்டுகள் திறக்கின்ற திருநறையூரில் உள்ள, 'சித்தீச்சரம்' என்னும் திருக்கோயிலே, வீரத்தைக் கொண்ட இராவணனது மலைபோலும் தோள்களை, தனது மலையால் முரியச்செய்த விரலையுடைய தலைவனாகிய இறைவன் இருக்கும் இடமாகும்.

**947.** முழுநீ றணிமே னியன்மொய் குழலார்
எழுநீர் மைகொள்வான் அமரும் இடமாம்
கழுநீர் கமழக் கயல்சேல் உகளும்
செழுநீர் நறையூர்ச் சித்தீச் சரமே. 5

சித்தர்கள் பூசித்தலால் சித்தீச்சரம்.

குளங்களில் செங்கழுநீர்ப் பூவின் மணங் கமழுமாறு அவைகளின்மேல் கயல்மீன்களும், சேல் மீன்களும் துள்ளி வீழ்கின்ற, மிக்க நீரையுடைய திருநறையூரில் உள்ள, 'சித்தீச்சரம்' என்னும் திருக்கோயிலே, திருமேனி முழுவதும் நீற்றை அணிந்தவனும், அடர்ந்த கூந்தலை யுடைய மகளிரது உயர்ச்சி பொருந்திய பண்புகளைக் கொண்டவனும் ஆகிய இறைவன் விரும்பி எழுந்தருளியிருக்கின்ற இடமாகும்.

948. ஊனா ருடைவெண் டலைஉண் பலிகொண்
டானார் அடலே றமர்வான் இடமாம்
வானார் மதியம் பதிவண் பொழில்வாய்த்
தேனார் நறையூர்ச் சித்தீச் சரமே. 6

"ஊனார் உடைதலையில் உண்பலிதேர் அம்பலவன்" என்ற திருவாசகத் திருக்கோத்தும்பி இரண்டாவது பாடலோடு இப்பாடலின் முதலடியை ஒப்பிட்டு உய்வோமாக.

விண்ணிற் பொருந்திய சந்திரன் நுழைந்து செல்லும், வளவிய சோலைகளினிடத்தில் தேன் நிறைந்து நிற்கும் திருநறையூரில் உள்ள, 'சித்தீச்சரம்' என்னும் திருக்கோயிலே, ஊன் பொருந்திய, உடைந்த, வெள்ளிய தலையில், உண்ணுதற்குரிய பிச்சையை ஏற்று, ஆனினத்த தாகிய, வெற்றியையுடைய ஏற்றை விரும்புபவ னாகிய இறைவனது இடமாகும்.

949. காரூர் கடலில் விடம்உண் டருள்செய்
நீரூர் சடையன் னிலவும் மிடமாம்
வாரூர் முலையார் மருவும் மறுகில்
தேரூர் நறையூர்ச் சித்தீச் சரமே. 7

கச்சு மேற்பொருந்தப்பெற்ற தனங்களையுடைய மகளிர் அழகுடன் நிறைந்து நிற்கும் தெருக்களில் தேர்கள் ஓடுகின்ற திருநறையூரில் உள்ள, 'சித்தீச்சரம்' என்னும் திருக்கோயிலே, கருமை நிறம் பொருந்திய கடலில் தோன்றிய நஞ்சினை உண்டு, தேவர்கட்கு அருள்செய்த, நீர்ததும்பும் சடையினையுடையவனாகிய இறைவன் விளங்கியிருக்கின்ற இடமாகும்.

950. கரியின் னுரியுங் கலைமான் மறியும்
எரியும் மழுவும் உடையான் இடமாம்
புரியும் மறையோர் நிறைசொற் பொருள்கள்
தெரியுந் நறையூர்ச் சித்தீச் சரமே. 8

புரிதல் – இடைவிடாது செய்தல்.

தமது கடமைகளை விரும்பிச் செய்யும் அந்தணர்கள், நிறைந்த சொற்களின் பொருளை ஆராய்கின்ற திருநறையூரில் உள்ள, 'சித்தீச்சரம்' என்னும் திருக்கோயிலே, யானைத் தோலையும், ஆண் மான்கன்றையும், எரிகின்ற மழுவையும் உடையவனாகிய இறைவனது இடமாகும்.

951. பேணா முனிவான் பெருவேள் வியெலாம்
மாணா மைசெய்தான் மருவும் மிடமாம்
பாணார் குழலும் முழவும் விழவில்
சேணார் நறையூர்ச் சித்தீச் சரமே. 9

மாணாமை – சிறவாமை; அழித்தான் என்பதனை மாணாமை செய்தான் என்றது மங்கல வழக்கு.

பண் நிறைந்த குழல்களின் ஓசையும், மத்தளங்களின் ஓசையும் விழாக்களில் சேய்மைக்கண் சென்று பொருந்துகின்ற திருநறையூரில் உள்ள, 'சித்தீச்சரம்' என்னும் திருக்கோயிலே, தன்னை விரும்பாது வெறுத்தவனாகிய தக்கனது பெருவேள்வியின் சிறப்புக்களை எல்லாம் சிறவாதபடி அழித்தவனாகிய இறைவன் பொருந்தி யிருக்கும் இடமாகும்.

| | |
|---|---|
| 952. குறியில் வழுவாக் கொடுங்கூற் றுதைத்த<br>ஏறியும் மழுவாட் படையான் இடமாம்<br>நெறியில் வழுவா நியமத் தவர்கள்<br>செறியுந் நறையூர்ச் சித்தீச் சரமே. 10 | நன்னெறியினின்றும் வழுவாத கடப்பாட்டினை யுடைய உயர்ந்தோர்கள் மிக்குள்ள திருநறையூரில் உள்ள, 'சித்தீச்சரம்' என்னும் திருக்கோயிலே, கொடிய கூற்றுவனை உதைத்த, குறியினின்றும் தவறாது எறியும் மழுப்படையை உடையவனாகிய இறைவனது இடமாகும். |
| 953. போரார் புரம்எய் புனிதன் அமரும்<br>சீரார் நறையூர்ச் சித்தீச் சரத்தை<br>ஆரூ ரன்சொல் லிவைவல் லவர்கள்<br>ஏரார் இமையோர் உலகெய் துவரே. 11<br><br>போரார் – பகைவர்கள்; போர் செய்பவர்கள். | போர் செய்தலை உடையவரது முப்புரத்தை அழித்த தூயவனாகிய இறைவன் விரும்பி எழுந்தருளியிருக்கின்ற, புகழ் நிறைந்த திருநறையூர்ச் சித்தீச்சரத்தை நம்பியாரூரன் பாடிய இப்பாடல்களைப் பாடவல்லவர்கள், எழுச்சி பொருந்திய தேவருலகத்தை அடைவார்கள். |

## 94. திருச்சோற்றுத்துறை

பண் : குறிஞ்சி பதிக எண் : 94

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் ஒப்பிலாவம்மை உடனமர் அருள்மிகு தொலையாச் செல்வர் | | |
| **தல இருப்பிடம்** | சோழ நாட்டில் காவிரி தென்கரையில் தஞ்சாவூரிலிருந்து 15 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | பன்னீர் மரம் | | |
| **தீர்த்தம்** | சூரிய, காவிரி தீர்த்தம் | | |
| **பாடியவர்கள்** | மூவர் | **பதிகங்கள்** | 6 |

| | |
|---|---|
| 954. அழல்நீர் ஒழுகி யனைய சடையும்<br>உழையீர் உரியும் முடையான் இடமாம்<br>கழைநீர் முத்துங் கனகக் குவையும்<br>சுழல்நீர்ப் பொன்னிச் சோற்றுத் துறையே. 1<br><br>உழை – மான். கழை – கரும்பு. | மூங்கில்களிடத்து உளவாகிய சிறந்த முத்துக்களும், பொற்குவியல்களும் சுழிகளில் சுழல்கின்ற நீரையுடைய காவிரியாற்றையுடைய, 'திருச்சோற்றுத்துறை' என்னும் தலமே, நெருப்பு உருகி நீர்த்தன்மையுடையதாய் ஒழுகினாற் போலும் சிவந்த சடையையும், மானையும், யானை, புலி இவைகளை உரித்த தோலையும் உடையவ னாகிய இறைவனது இடமாகும். |

**955.** பண்டை வினைகள் பறிய நின்ற
அண்ட முதல்வன் அமலன் னிடமாம்
இண்டை கொண்டன் **பிடைஅ றாத**
**தொண்டர்** பரவுஞ் சோற்றுத் துறையே. 2

இடையறாத அன்பு – இடையில் எக்காலமும் அறுதலில்லாத அன்புடைய.

அன்பு, இடையில் அற்றுப்போதல் இல்லாத அடியார்கள், இண்டை மாலை முதலியவை களைக் கொண்டு வழிபடுகின்ற, 'திருச்சோற்றுத்துறை' என்னும் தலமே, உயிர்கள் செய்த பழைய, வலிமையான வினைகள் நீங்குமாறு நிற்கின்ற, உலகிற்கு முதல்வனும், தூயவனும் ஆகிய இறைவனது இடமாகும்.

---

**956.** கோல அரவுங் கொக்கின் இறகும்
மாலை மதியும் வைத்தான் இடமாம்
ஆலும் மயிலும் ஆடல் அளியும்
சோலை தருநீர்ச் சோற்றுத் துறையே. 3

கொக்கிறகு என்ற பெயரில் ஒரு மலரும் உள்ளதாகவும் கூறுகின்றனர்.

சோலைகள், ஆடுகின்ற மயில்களையும், சுழலுதல் உடைய வண்டுகளையும் கொண்டு காட்டுகின்ற மிக்க நீரையுடைய, 'திருச்சோற்றுத்துறை' என்னும் தலமே, அழகிய பாம்பையும், கொக்கின் இறகையும், மாலைக் காலத்தில் தோன்றுகின்ற பிறையையும் முடியில் வைத்துள்ளவனாகிய இறைவனது இடமாகும்.

---

**957.** பளிக்குத் தாரை பவள வெற்பில்
குளிக்கும் போல்நூற் கோமாற் கிடமாம்
அளிக்கும் ஆர்த்தி அல்லால் மதுவம்
துளிக்கும் சோலைச் சோற்றுத் துறையே. 4

தேனை வண்டுகள் நிரம்ப உண்ணச்செய்து, மேலும் நிலத்திற் சிந்துகின்ற சோலைகளை யுடைய, 'திருச்சோற்றுத்துறை' என்னும் தலமே, பவளமலையின்மேல் பதிந்து ஓடுகின்ற பளிங்கு அருவிபோலும் முப்புரி நூலை அணிந்த தலைவனாகிய இறைவனுக்கு இடமாகும்.

---

**958.** உதையுங் கூற்றுக் கொல்கா விதிக்கு
வதையுஞ் செய்த மைந்தன் இடமாம்
திதையுந் தாதுந் தேனுஞ் ஞிமிறும்
துதையும் பொன்னிச் சோற்றுத் துறையே. 5

நிலைபெற்ற மகரந்தமும், தேனும், வண்டும் சோலைகளில் நெருங்கியிருக்கின்ற, காவிரி யாற்றையுடைய, 'திருச்சோற்றுத்துறை' என்னுந் தலமே, கூற்றுவனுக்கு உதையையும், ஒன்றற்கும் தோலாத ஊழிற்கு அழிவையும் ஈந்த வலிமை உடையவனாகிய இறைவனுக்கு இடமாம்.

ஒல்கா விதிக்கு வதை – கூற்றுக்கு உதை. ஒல்குதல் – தலை வணங்குதல்; வளைதல். விதி செய்பவன். விதி – பிரமன். வதை – சிரம் கிள்ளுதல். விதி – ஊழ். விதி – தக்கன் என்பாரும் உளர். மைந்து – வல்லமை. திதையும் – செறியும்.

**959.** ஓதக் கடல்நஞ் சினைஉண் டிட்ட
பேதைப் பெருமான் பேணும் பதியாம்
சீதப் புனல்உண் டெரியைக் காலும்
சூதப் பொழில்சூழ் சோற்றுத் துறையே. 6

குளிர்ந்த நீரை உண்டு, தீயை உமிழ்கின்ற மாஞ்சோலைகள் சூழ்ந்த, 'திருச்சோற்றுத்துறை' என்னும் தலமே, மிக்க நீரையுடைய கடலில் உண்டாகிய நஞ்சினை உண்ட, அருள்மிகுந்த பெருமான் விரும்பும் ஊராகும்.

பேதைப் பெருமான் – பிறர் நலமே கருதுவதாகிய அன்பே ஆக; அருளே ஆக அவை தமக்கு வருங்கேட்டினை அறியும் அறிவைப் போக்குமாதலின், அத்தன்மை புலப்படுத்தும் வண்ணம் இறைவனையும் விளைவை அறியாது நஞ்சினை உண்டானாக அருளிச் செய்தார். எனவே 'பித்தன்' முதலிய போல பேதைப் பெருமான் என்றதும் பழிப்பது போலப் புகழ் புலப்படுத்தலாயிற்று.
சூதம் – மா.

**960.** இறந்தார் என்பும் எருக்குஞ் சூடிப்
புறங்காட் டாடும் புனிதன் கோயில்
சிறந்தார் சுற்றந் திருவென் றின்ன
துறந்தார் சேருஞ் சோற்றுத் துறையே. 7

உயிர்போலச் சிறந்த மனைவி மக்களும், ஏனைய சுற்றத்தாரும், செல்வமும் என்று சொல்லப்பட்ட இன்னோரன்னவற்றைத் துறந்த ஞானியர் சேர்கின்ற, 'திருச்சோற்றுத்துறை' என்னுந் தலமே, இறந்தவரது எலும்புகளையும், எருக்கம் பூவையும் அணிந்து கொண்டு, புறங்காட்டில் ஆடுகின்ற தூயவனாகிய இறைவனது இடம்.

**961.** காமன் பொடியாக் கண்ஒன் றிமைத்த
ஓமக் கடலார் உகந்த இடமாம்
தேமென் குழலார் சேக்கை புகைத்த
தூமம் விசும்பார் சோற்றுத் துறையே. 8

தேன் பொருந்திய, மெல்லிய கூந்தலையுடைய மகளிர், தம் இருக்கையில் இட்ட நறும்புகைகள், வானத்தில் சென்று நிறைகின்ற, 'திருச்சோற்றுத்துறை' என்னும் தலமே, மன்மதன் சாம்பலாகுமாறு கண் ஒன்றைத் திறந்த, வேள்வியாகிய கடலையுடையவராகிய இறைவர் விரும்பும் இடமாகும்.

962. இலையால் அன்பால் ஏத்தும் அவர்க்கு
நிலையா வாழ்வை நீத்தார் இடமாம்
தலையால் தாழுந் தவத்தோர்க் கென்றும்
தொலையாச் செல்வச் சோற்றுத் துறையே. 9

தன்னைத் தலையால் வணங்குகின்ற தவத்தினை உடையோர்க்கு, எஞ்ஞான்றும் அழியாத செல்வத்தைத் தரும், 'திருச்சோற்றுத்துறை' என்னும் தலமே, இலையாலாயினும் அன்போடு துதிக்கின்ற அவர்கட்கு, நிலையாத இவ்வுலக வாழ்வை நீக்குபவராகிய இறைவனது இடமாகும்.

இலை – அருச்சிக்கும் தழை.

"என்போலிகள் பறித்திட்ட இலையும் முகையு மெல்லாம்
அம்போ தெனக்கொள்ளும் ஐயன் ஐயாறன் அடித்தலமே" **4–92–10**

"போதும் பெறாவிடிற் பச்சிலையுண்டு புனலுண்டெங்கும்
ஏதும் பெறாவிடில் நெஞ்சுண்டன்றே" **11–12–**திருக்கழுமல மும்மணிக்கோவை

"நொச்சியாயினுங் கரந்தை யாயினும்
பச்சிலையிட்டுப் பரவுந் தொண்டர்" **11–19–**திருவிடைமருதூர் மும்மணிக்கோவை

"யாவர்க்குமாம் இறைவர்க்கொரு பச்சிலை" **10–** திருமந்திரம்

"நிலையிலா வாழ்வை நீத்தார்" – நிலைத்த பெருவாழ்வு தருபவர் என்பது குறிப்பு.

"தொலையாச் செல்வம்" – அளவில்லாத சிவச் செல்வம்.

963. சுற்றார் தருநீர்ச் சோற்றுத் துறையுள்
முற்றா மதிசேர் முதல்வன் பாதத்
தற்றார் அடியார் அடிநாய் ஊரன்
சொற்றான் இவைகற் றார்துன் பிலரே. 10

பற்றற்றவராகிய அடியார்களது அடிக்கு நாய் போலும் நம்பியாரூரன், சுற்றிலும், நிறைந்த நீரையுடைய திருச்சோற்றுத்துறையில் எழுந்தருளியிருக்கின்ற, இளமையான சந்திரனைச் சூடிய முதல்வனது திருவடிக்கண் இப்பாடல்களைப் பாடினான்; இவைகளைக் கற்றவராவார், யாதொரு துன்பமும் இல்லாதவராவர்.

## 95. திருவாரூர்

**பண் : செந்துருத்தி** **பதிக எண் : 95**

இது குறிஞ்சிப் பெரும்பண்ணின் எட்டாவது செந்திறம் எனப்படும் திறத்தில் அகநிலைப் பண்ணாய் 65 என்னும் எண் பெற்றது. செந்திறம் என்றும் பெயர்பெறும். இது செம்பாலையில் தோன்றிய திறமாதலின் செந்திறம் என்பர். இது இன்று மத்யமாவதி என்ற இராகத்தில் பாடப்பெறும். நாரத சங்கீத மகரந்தம் குறிப்பிடும் மதுமாதவியே மத்தியமாவதி என்பர் யாழ்நூலார். இது இரவுக்கும் பகலுக்குமுரிய பொதுப்பண். இப்பண்ணில் (சம்பந்தர் பாடவில்லை); சுந்தரமூர்த்தி ஒருவரே பதிகம் பாடியிருக்கிறார். அதுவும் ஒரே பதிகம், "மீளா அடிமை உமக்கே ஆளாய்" (95) என்பது திருவாரூர்ப் பெருமானை தமது வலக்கண்ணையும் தருமாறு வேண்டிய பதிகம். ஒரே கட்டளை, இது மங்களகரமான பண் என்று கருதப்பெறுவது. ஏனெனில், பண்கள் பிற பாடியபோது நேர்ந்த பிழைகளால் வந்த தோஷங்கள் இதன் சுகத்தால் நீங்கிவிடும் என்பது நம்பிக்கை. பொதுவாக இசை நிகழ்ச்சிகளின் முடிவில் இதைப் பாடுவது மரபு. இதைக் கேட்டோருக்கு நல்வாழ்வு சித்திக்கும். இப்பண்ணைப் பாடியே சுந்தரமூர்த்தி முன் இழந்த கண்ணைத் திருவாரூரில் பெற்றார். இது 22ஆவது மேளமாகிய கரகரப்ரியாவில் ஜன்னியம். காலை 9 –12 மணிக்கிடையில் பாடுதல் சிறப்புடையது.

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் அல்லியங்கோதை உடனமர் அருள்மிகு புற்றிடங்கொண்டீசர் – வன்மீகநாதர். | | |
| **தல இருப்பிடம்** | சோழ நாட்டில் காவிரி தென்கரையில் தஞ்சை மாநகரிலிருந்து 70 கி.மீ. நாகைக்காரோணத்திலிருந்து 30 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | பாதிரி | | |
| **தீர்த்தம்** | கமலாலயம் | | |
| **பாடியவர்** | மூவர் | **பதிகங்கள்** | 33 |

சுவாமிகள், திருத்துருத்தியிலிருந்து திருவாரூருக்கு எழுந்தருளி, பரவையுண்மண்டளிப் பெருமானைப் பணிந்து, "தூவாயா" என்று தொடங்கும் திருப்பதிகம் பாடி, பின்னர், திருமூலட்டானரை வழிபட அர்த்தயாம வழிபாட்டிற்குச் செல்லும் பொழுது, அன்பர்கள் எதிரணையக்கண்டு அயலார் வினவுவது போல, "குருகுபாய" என்று தொடங்கும் திருப்பதிகம் பாடி, திருத்தேவாசிரியன்முன் வணங்கி, கோபுரத்தைக் கைதொழுது, உள்புகுந்து, பூங்கோயிலை வணங்கி, அவனியில் வீழ்ந்து எழுந்து தொழுது, "ஆழ்ந்த துயர்க்கடலிடை நின்றடியேனை எடுத்தருளிக் கண்தாரும்" எனத்தாழ்ந்து, திருமூலட்டானம் சேர் பிஞ்ஞகனைக் கண்களாற் பருகுதற்கு "மற்றைக்கண் தாரீர்" என வணங்கிப் பாடியருளியது இத்திருப்பதிகம். (தி. 12 ஏயர்கோன் புரா. 304). இதில் பாடல் தோறும் 'வாழ்ந்து போதீர்' என்று கூறியுள்ள தோழமை கருதத்தக்கது.

**964.** மீளா அடிமை உமக்கே ஆளாய்ப்
பிறரை வேண்டாதே
மூளாத் தீப்போல் உள்ளே கனன்று
முகத்தால் மிகவாடி
ஆளாய் இருக்கும் அடியார் தங்கள்
அல்லல் சொன்னக்கால்
வாளாங் கிருப்பீர் திருவாரூரீர்
வாழ்ந்து போதீரே. 1

திருவாரூரில் எழுந்தருளியிருக்கும் பெருமானிரே! உம்மையன்றிப் பிறரை விரும்பாமலே, உமக்கே என்றும் மீளாத அடிமை செய்கின்ற ஆட்களாகி, அந்நிலையிலே பிறழாதிருக்கும் அடியார்கள், தங்கள் துன்பத்தை வெளியிட விரும்பாது, மூண்டெரியாது கனன்று கொண்டிருக்கின்ற தீயைப்போல, மனத்தினுள்ளே வெதும்பி, தங்கள் வாட்டத்தினை முகத்தாலே பிறர் அறிய நின்று, பின்னர் அத்துன்பம் ஒருகாலைக்கொருகால் மிகுதலால் தாங்க மாட்டாது, அதனை, உம்பால் வந்து வாய்திறந்து சொல்வார்களாயின், நீர் அதனைக் கேட்டும் கேளாததுபோல வாளாவிருப்பீர்; இஃதே நும் இயல்பாயின், நீரே இனிது வாழ்ந்துபோமின்!

மீளா அடிமை – பெத்த நிலை – முத்தி நிலை இரண்டிலும் என்றென்றும் ஏழேழ் பிறவிக்கும் நீங்கா அடிமைத்திறம். "வாழ்ந்து போதீரே" என்பது பதிக மகுடமாகும்.

---

**965.** விற்றுக் கொள்வீர் ஒற்றி யல்லேன்
விரும்பி ஆட்பட்டேன்
குற்றம் ஒன்றுஞ் செய்த தில்லை
கொத்தை யாக்கினீர்
எற்றுக் கடிகேள் என்கண் கொண்டீர்
நீரே பழிப்பட்டீர்
மற்றைக் கண்தான் தாரா தொழிந்தால்
வாழ்ந்து போதீரே. 2

அடிகளே! நீர் என்னைப் பிறருக்கு விற்கவும் உரிமையுடையீர்; ஏனெனில், யான் உமக்கு ஒற்றிக் கலம் அல்லேன்; உம்மை விரும்பி உமக்கு என்றும் ஆளாதற்றன்மையுட்பட்டேன்; பின்னர் யான் குற்றம் ஒன்றும் செய்ததில்லை; இவ்வாறாகவும் என்னை நீர் குருடனாக்கி விட்டீர்; எதன் பொருட்டு என் கண்ணைப் பறித்துக் கொண்டீர்? அதனால் நீர்தாம் பழியுட்பட்டீர்; எனக்குப் பழி யொன்றில்லை; பன்முறை வேண்டியபின் ஒரு கண்ணைத் தந்தீர்; மற்றொரு கண்ணைத்தர உடன்படா விடின், நீரே இனிது வாழ்ந்துபோமின்!

ஒற்றி – மீட்டுக் கொள்ளும் உரிமையுடன் ஒரு பொருளைப் பிறன் வசம் ஒப்படைக்கும் கடன் வகை.
விற்றுக் கொள்ளுதல் – உரிய பொருளைப் பெற்றுக் கொண்டு முழு உரிமையுடன் விற்று விடுதல்.
கொத்தை – குருடு.
மற்றைக்கண் – காஞ்சிபுரத்தில் தந்த இடது கண் போக எஞ்சிய வலது கண்

**966.** அன்றில் முட்டா தடையுஞ் சோலை
ஆரூ ரகத்தீரே
கன்று முட்டி உண்ணச் சுரந்த
காலி யவைபோல
என்றும் முட்டாப் பாடும் அடியார்
தங்கண் காணாது
குன்றின் முட்டிக் குழியில் விழுந்தால்
வாழ்ந்து போதீரே. 3

அன்றிற் பறவைகள் நாள்தோறும் தப்பாது வந்து சேர்கின்ற, சோலையையுடைய திருவாரூரில் எழுந்தருளியிருக்கின்ற பெருமானிரே! கன்றுகள் முட்டி உண்ணத் தொடங்கிய பின்னே பால் சுரக்கின்ற பசுக்களிடத்தில் பாலை உண்ணும் அக்கன்றுகள் போல, நாள்தோறும் தப்பாது பாடியே உம்மிடத்துப் பயன் பெறுகின்ற அடியார்கள், பலநாள் பாடிய பின்னும் தங்கள் கண் காணப்பெறாது, குன்றின்மேல் முட்டிக் குழியினுள் வீழ்ந்து வருந்துவராயின், நீரே இனிது வாழ்ந்துபோமின்!

**967.** துருத்தி யுறைவீர் பழனம் பதியாச்
சோற்றுத் துறையாள்வீர்
இருக்கை திருவா ரூரே உடையீர்
மனமே யெனவேண்டா
அருத்தி யுடைய அடியார் தங்கள்
அல்லல் சொன்னக்கால்
வருத்தி வைத்து மறுமைப் பணித்தால்
வாழ்ந்து போதீரே. 4

அருத்தி – அன்பு
மறுமைப் பணித்தால் – பின்னே அருள்வதென்றால்.

இருக்குமிடம் திருவாரூராகவே உடையவரே! நீர் இன்னும், 'திருத்துருத்தி, திருப்பழனம்' என்பவைகளையும் ஊராகக் கொண்டு வாழ்வீர்; திருச்சோற்றுத்துறையையும் ஆட்சி செய்வீர்; ஆதலின், உமக்கு இடம் அடியவரது மனமே எனல் வேண்டா; அதனால் உம்பால் அன்பு மிக்க அடியார்கள், தங்கள் அல்லலை உம்மிடம் வந்து சொன்னால், நீர் அவர்களை இப்பிறப்பில் வருத்தியே வைத்து, மறுபிறப்பிற்றான் நன்மையைச் செய்வதாயின், நீரே இனிது வாழ்ந்துபோமின்!

**968.** செந்தண் பவளந் திகழுஞ் சோலை
இதுவோ திருவாரூர்
எந்தம் அடிகேள் இதுவே யாமா
றுமக்காட் பட்டோர்க்குச்
சந்தம் பலவும் பாடும் மடியார்
தங்கண் காணாது
வந்தெம் பெருமான் முறையோ என்றால்
வாழ்ந்து போதீரே. 5

எங்கள் தலைவரே! இது செவ்விய தண்ணிய பவளம்போலும் இந்திரகோபங்கள் விளங்கு கின்ற சோலையையுடைய திருவாரூர்தானோ? நன்கு காண இயலாமையால் இதனைத் தெளிகின்றிலேன்; உமக்கு அடிமைப் பட்டோர்க்கு உண்டாகும் பயன், இதுதானோ? இசை வண்ணங்கள் பலவும் அமைந்த பாடலால் உம்மைப் பாடுகின்ற அடியார்கள், தங்கள் கண் காணப்பெறாது, உம்பால் வந்து, 'எம் பெருமானே, முறையோ' என்று சொல்லி நிற்றல் ஒன்றே உளதாகுமானால், நீரே இனிது வாழ்ந்துபோமின்!

969. தினைத்தாள் அன்ன செங்கால் நாரை
சேருந் திருவாரூர்ப்
புனத்தார் கொன்றைப் பொன்போல் மாலைப்
புரிபுன் சடையீரே
தனத்தா லின்றித் தாந்தாம் மெலிந்து
தங்கண் காணாது
மனத்தால் வாடி அடியார் இருந்தால்
வாழ்ந்து போதீரே. 6

''பொருளின்மையால் வருந்தினும் பெரிதன்று; கண்ணின்மையால் வருந்துதலைத் தீர்க்க வேண்டாவோ ?" என்றவாறு.

தினையது தாள்போலும் சிவந்த கால்களையுடைய நாரைகள் திரளுகின்ற திருவாரூரில் எழுந்தருளியிருக்கின்ற, முல்லை நிலத்தில் உள்ள கொன்றையினது மலரால் ஆகிய பொன்மாலை போலும் மாலையை அணிந்த, திரிக்கப்பட்ட புல்லிய சடையை யுடையவரே! உம் அடியவர், தாம் பொருளில்லாமையால் இன்றி, தங்கள் கண் காணப்பெறாது வருந்தி, மனத்தினுள்ளே வாட்ட முற்றிருப்பதானால், நீரே இனிது வாழ்ந்து போமின்!

970. ஆயம் பேடை அடையுஞ் சோலை
ஆரூ ரகத்தீரே
ஏயெம் பெருமான் இதுவே ஆமா
றுமக்காட் பட்டோர்க்கு
மாயங் காட்டிப் பிறவி காட்டி
மறவா மனங்காட்டிக்
காயங் காட்டிக் கண்ணீர் கொண்டால்
வாழ்ந்து போதீரே. 7

மாயங்காட்டியது – மாதல் மேல் மனம் போக்கச் செய்தது. மறவா மனங்காட்டியது – திருக்கயிலையில் அணுக்கத் தொண்டராகச் செய்தது.

ஆண் பறவைக் கூட்டம், பெண்பறவைக் கூட்டத்துடன் வந்து சேர்கின்ற சோலையை யுடைய திருவாரூரில் எழுந்தருளி யிருக்கின்றவரே! எங்களுக்குப் பொருந்திய பெருமானிரே! உமக்கு அடிமைப்பட்டோர்க்கு உண்டாகும் பயன் இதுதானோ ? நீர் எனக்கு உம்மை மறவாத மனத்தைக் கொடுத்து, பின்பு ஒரு மாயத்தை உண்டாக்கி, அது காரணமாகப் பிறவியிற் செலுத்தி, உடம்பைக் கொடுத்து, இப்போது கண்ணைப் பறித்துக் கொண்டால், நீரே இனிது வாழ்ந்துபோமின்!

971. கழியாய்க் கடலாய்க் கலனாய் நிலனாய்க்
கலந்த சொல்லாகி
இழியாக் குலத்திற் பிறந்தோம் உம்மை
**இகழா தேத்துவோம்**
பழிதா னாவ தறியீர் அடிகேள்
பாடும் பத்தரோம்
வழிதான் காணா தலமந் திருந்தால்
வாழ்ந்து போதீரே. 8

வாழ்ந்து போதீரே என்று வசைமொழிக் குறிப்புப்படக் கூறுதல் இழிகுலத்தோர் வழக்கு. நாங்கள் அவ்வாறன்றி இழிவில்லாத குலத்தில் பிறந்தவர் ஆனதால் இவ்வாறு கூறுதல் புகழ்கின்ற / ஏத்துகின்ற வகையைச் சாரும்.

அடிகளே! யாங்கள் இழிவில்லாத உயர் குலத்திலே பிறந்தோம்; அதற்கேற்ப உம்மை இகழ்தல் இன்றி, நீர், கழியும், கடலும், மரக்கலமும் நிலமுமாய்க் கலந்து நின்ற தன்மையைச் சொல்லும் சொற்களையுடையே மாய்த் துதிப்போம்; அவ்வாறாகலின், எம்மை வருத்துதலால் உமக்குப் பழி உண்டாதலை நினையீர்; அதனால், உம்மைப்பாடும் அடியே மாகிய யாங்கள், வழியைக் காணமாட்டாது அலைந்து வாழ்வதாயின், நீரே இனிது வாழ்ந்து போமின்!

972. பேயோ டேனும் பிரிவொன் றின்னா
தென்பர் பிறரெல்லாம்
காய்தான் வேண்டிற் கனிதா னன்றோ
கருதிக் கொண்டக்கால்
நாய்தான் போல நடுவே திரிந்தும்
உமக்காட் பட்டோர்க்கு
வாய்தான் திறவீர் திருவா ரூரீர்
வாழ்ந்து போதீரே. 9

இப்பாடலின் மூன்றடிகளில் மூன்று உவமைகளைக் கூறுகிறார்.

திருவாரூரில் எழுந்தருளியிருக்கின்ற பெருமானிரே! விரும்பப்பட்டது காயே எனினும், விரும்பிக் கைக்கொண்டால், அது கனியோ டொப்பதேயன்றோ? அதனால் உம்மைத் தவிரப் பிறரெல்லாம், பேயோடு நட்புச் செய்யினும், பிரிவு' என்பதொன்று துன்பந்தருவதே என்று சொல்லி, அதனைப்பிரிய ஒருப்படார், ஆனால், நீரோ, உமது திருவோலக்கத்தின் நடுவே நாய் போல முறையிட்டுத் திரிந்தாலும், உமக்கு ஆட்பட்டவர்கட்கு, வாய்திறந்து ஒருசொல் சொல்லமாட்டீர்; இதுவே உமது நட்புத் தன்மையாயின், நீரே இனிது வாழ்ந்து போமின்!

973. செருத்தி செம்பொன் மலருஞ் சோலை
இதுவோ திருவாரூர்
பொருந்தித் திருமூ லட்டா னம்மே
இடமாக் கொண்டீரே
இருந்தும் நின்றும் கிடந்தும் உம்மை
இகழா தேத்துவோம்
வருந்தி வந்தும் உமக்கொன் றுரைத்தால்
வாழ்ந்து போதீரே. 10

திருமூலட்டானத்தையே பொருந்தி இடமாகக் கொண்டவரே! இது, செருந்தி மரங்கள், தமது மலர்களாகிய செம்பொன்னை மலர்கின்ற திருவாரூர்தானோ? இருத்தல், நிற்றல், கிடத்தல் முதலிய எல்லா நிலைகளினும்' உம்மை இகழாது துதிப்போமாகிய யாம், உம்பால் வருத்தமுற்று வந்து, ஒரு குறையை வாய்விட்டுச் சொன்னாலும், நீர் வாய் திறவாதிருப்பிராயின், நீரே இனிது வாழ்ந்து போமின்!

974. காரூர் கண்டத் தெண்டோள் முக்கண்
கலைகள் பலவாகி
ஆரூர்த் திருமூ லட்டா னத்தே
அடிப்பேர் ஆரூரன்
பாரூர் அறிய என்கண் கொண்டீர்
நீரே பழிப்பட்டீர்
வாரூர் முலையாள் பாகங் கொண்டீர்
வாழ்ந்து போதீரே. 11

தமக்குக் கண் வேண்டிப் பாடும் பதிகம் என்பதால் இங்கு பதிகப்பயன் கூறவில்லை. இதன் பின்னர் இறைவர் நம்பியாரூரர் பெரு மகிழ்வெய்துமாறு கண்ணளித்து அருளுகிறார்.

பல நூல்களும் ஆகி, கருமை மிக்க கண்டத்தையும், எட்டுத் தோள்களையும், மூன்று கண்களையும் உடைய, திருவாரூர்த் திருமூலட்டானத்தில் எழுந்தருளியிருக்கின்ற கச்சுப்பொருந்திய தனங்களையுடையவளாகிய உமாதேவியது பாகத்தைக் கொண்டவரே! இவ்வுலகில் உள்ள ஊரெல்லாம் அறிய, நீர், உமது திருவடிப் பெயரைப் பெற்ற நம்பியாரூரனாகிய எனது கண்ணைப் பறித்துக் கொண்டீர்; அதனால் நீர்தாம் பழியுட்பட்டீர்; இனி நீர் இனிது வாழ்ந்து போமின்!

## 96. திருவாரூர்ப் பரவையுண் மண்டளி

பரவை – கடல்; உண் – உண்கின்ற; மண்தளி – நிலவுலகத்தில் கடலுள் மூழ்கி விடாது நிலைத்த கோயில் என்பதாகும். துர்வாச முனிவர் பூசித்துப் பேறு பெற்ற பதி.

**பண் : கௌசிகம்** **பதிக எண் : 96**

இது பாலை யாழாகிய பெரும்பண்ணின் மூன்றாவது திறனாகிய உறுப்பு என்னும் திறனில் அகநிலைக்குரிய பண் 25 என்னும் எண்ணுடையது. இதற்குத் தெய்வம் காமன் என்றும், சுவை நகையும் உவகையும் என்றும் இது முதுவேனிற் பருவத்துக்கு உரியதென்றும் சொல்லியுள்ளனர். இது மாலைக்குரிய பண். இதற்கு நேரான இராகம் ஆகிரி. இதற்குக் கட்டளைகள் மூன்று. இப்பண்ணில் அப்பர் சுவாமிகள் பாடல் இல்லை ஏனை இருவரும் பாடியுள்ளனர். சம்பந்தர் 3:55–56 சுந்தரர் 96–100; ஆக 17 பதிகங்கள். சம்பந்தர் கண்பொலி நெற்றியினான், பைங்கோட்டு மலர்ப்புன்னை என்ற திருச்செங்காட்டங்குடிப் பதிகம், சுந்தரர் கடைசி நொடித்தான் மலைப்பதிகம். வெள்ளையானை மேல் கயிலாயம் சென்று பாடியது "தானெனை முன் படைத்தான்" என்பன இப்பண்ணில் அமைந்தனை.

மிகவும் சிறப்பாகச் சொல்லத்தக்கது திருவிசைப்பா இதிலடங்கிய 29 பதிகங்களில் 27 பதிகங்கள் பஞ்சமப் பண் (திருப்பல்லாண்டு உட்பட) திருவிசைப்பா பாடிய 9 ஆசிரியன்மாரும் பஞ்சமப் பண்ணில் பாடியிருக்கிறார்கள் என்பது இப்பண்ணுக்கு எல்லாரிடத்திலும் இருந்த ஈடுபாட்டைப் புலப்படுத்துகிறது. ஒன்பதாந் திருமுறையில் இறுதிப் பதிகமாகிய திருப்பல்லாண்டும் பஞ்சமப் பண்ணில்தான் அமைந்திருக்கிறது.

பஞ்சமத்துக்கு நேரான இராகம் ஆகிரி என்று சொல்கிறார்கள். ஆகிரி சம்பந்தமாக இசைவாணரிடையே ஒரு நம்பிக்கை நிலவுகிறது. ஆகிரி பாடினால் சோறு கிடைக்காது என்பது அவர்களிடை ஒரு பழமொழி. இதற்கு ஒரு கதையும் உண்டு. பண்டைக் காலத்தில் ஒரு சங்கீத வித்துவான் ஒரு சோற்று மூட்டையோடு வந்தார். அதை நன்றாய் வளைந்திருந்த ஒரு மூங்கிலில் கட்டித் தொங்கவிட்டார். கீழே வைத்தால் எறும்புகள் நாய் முதலியன தீண்டிவிடும் என்ற அச்சம். எதிரில் இருந்த ஆற்றில் நன்றாக நீராடி துணிகளைத் துவைத்து உலர்த்திவிட்டு ஜப தபங்களை முடித்துக்கொண்டு ஆனந்தமாய் ஆகிரி பாடிக்கொண்டு கரையேறிச் சோற்றுமூட்டையைத் தேடி வந்தார். மூங்கிலானது வெயில் வரவரத் தலைதூக்கி முழுமையும் நிமிர்ந்து விட்டது. மூட்டை அதிக உயரம் போய்விட்டது. இவருக்கு எட்டவே இல்லை. மீண்டும் மூங்கில் வளையுமா ? வளையுமா, வளைவது எப்போது அதுவரையில் இவருக்குப் பசி தாங்குமா, மறுநாள் காலையில் அது பனி ஈரத்தில் வளைகிறவரையில் கட்டுச்சோறுதான் கெடாமல் இருக்குமா ? அது முதல் இந்த ஆகிரிப் பழமொழி வழங்கலாயிற்று.

**பஞ்சமப் பண்ணின் இலக்கணம்**

நிரையசை நடுவாய் நிற்க இயற்சீர்
வெண்டளை யிரண்டி ரண்டாய் மருங்கின்
அமையச் செந்தூக் காக வந்ததொடு
ஐம்பூதத்தின் அகத்திற் சமஞ்சமம்
ஆகநிற்கும் அக்கினி யென்னக்
காயுந் தன்மையால் காய்ச்சீர் சமமாய்ச்
சமய வந்த அமைவு பஞ்சமம்

**பொருள்**

பண் சமம் என்பது பஞ்சமம் ஆகிறது. மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகளும் சமமாம் ஒரு நிலை எய்தி இறையிடம் ஒன்றுவதை நுட்பமாக விளக்குவது பஞ்சமம். பாட்டின் ஒவ்வோர் அடியிலும் வரும் ஐந்து சீர்களிலும் நிரையசையாம் ஓரசைச்சீர் நடுவாக அமைந்திருக்க நிரையசைச் சீருக்கு முன்னுள்ள இரண்டு சீர்களும், பின்னுள்ள இரண்டு சீர்களும் இயற்சீர் வெண்டளை அமையும்படி நிற்றலால் இதன் தோற்றம் செந்தூக்காக வந்ததல்லாமல், ஐம்பூதங்களின் அகத்தும் நிறைந்துள்ள அக்கினிபோன்று எல்லாச் சீர்களின் நடுவில் காயுந்தன்மையுடைய காய்ச்சீர் சமமாகி நிற்றலால் இது பஞ்சமம் என்று பகரப் பெறுகிறது.

| மூர்த்தி | அருள்தரும் பஞ்சின் மெல்லடியம்மை உடனமர் அருள்மிகு மண்டலேசுவரர். | | |
|---|---|---|---|
| தல இருப்பிடம் | திருவாரூரில் கீழை வீதியில் பெரிய கோயில் மகாரத நிலைக்கு அணிமையில் தென்மேற்கில் உள்ளது. | | |
| தல மரம் | பாதிரி | | |
| தீர்த்தம் | கமலாலயம் | | |
| பாடியவர் | நம்பியாரூரர் | பதிகம் | 1 |

**975.** தூவாயா தொண்டுசெய் வார்படு துக்கங்கள்
காவாயா கண்டுகொண் டார்ஐவர் காக்கிலும்
நாவாயால் உன்னையே நல்லன சொல்லுவேற்
காவாஎன் பரவையுண் மண்டளி அம்மானே. 1

தூவாயா – சுவாமி பெயர். தூவாய் – வேதத்தைச் சொல்லும் வாய். இங்ஙனம் வாயைச் சிறப்பித்து அருளியது. ''அதனால் அஞ்சேல் என்று சொல்'' என்றற்காம். "காவாயா" என்றது காப்பவன் அல்லையோ என்றபடி. ஆவா – இரக்கச்சொல். என் – என்று அபயம் சொல்க; நல்லன சொல்லுவார்.

தூயதாகிய வாயினையுடையவனே! திருப்பரவையுண் மண்டளியில் எழுந்தருளி யிருக்கின்ற தலைவனே! உனக்குத் தொண்டு செய்பவர்கள் படுகின்ற துன்பங்களை நீக்கமாட்டாயோ! ஐவர்கள் என்னை எப்போதும் குறிக்கொண்டு நோக்கி, உன்னை அடையவொட்டாமல் தடுப்பினும், நாவையுடைய வாயால், உன்னையே, நல்லவற்றைச் சொல்லிப் புகழ்வேனாகிய எனக்கு, 'ஆவா' என்று இரங்கி, அச்சந் தீர்த்தருள்.

**976.** பொன்னானே புலவர்க்கு நின்புகழ் போற்றலாம்
**தன்னானே தன்னைப் புகழ்ந்திடுந் தற்சோதி**
மின்னானே செக்கர்வா னத்திள ஞாயி
றன்னானே பரவையுண் மண்டளி அம்மானே. 2

<u>தன்னானே தன்னைப் புகழ்ந்திடுந் தற்சோதி</u>
"புகழ்வோனும் நீயே; புகழப்படுபவனும் நீயே" என்றவாறு. இறைவனையன்றி யாதொரு பொருளும் இல்லை ஆகலின் அவன் புகழ்வோனாகியும் நிற்குமாறு அறிய வேண்டும். இவ்வுண்மையை உணர்ந்தால் நான் என்னும் தற்போதம் நீங்கும். இதன் பொருட்டே சிவபூசையின் முடிவில் செபம், கன்மம் முதலியவற்றை சிவபெருமானுக்கு அளிக்கும் மந்திரத்துள் கொடுப்பவன், அனுபவிப்பவன், வழிபடுபவன் சிவனே எனக் கூறப்படுகின்றது. அதனையே

பூசையும் பூசைக்கேற்ற பொருள்களும் பூசை செய்யும்
நேசனும் பூசை கொண்டு நியதியிற் பேறு நல்கும்
ஈசனும் ஆகிப் பூசையான் செய்தேன் எனும்என் போத
வாசனை யதுவுமான மறைமுதலடிகள் போற்றி

– திருவிளையாடற் புராணம் – இந்திரன் பழி தீர்த்தப் படலம் 90

என்று திருவிளையாடற் புராண ஆசிரியர் கூறினார். ''ஐயாறதனில் சைவனாகியும்'' என்று கீர்த்தித் திருவகவலில் மாணிக்கவாசகர் அருளிச் செய்கிறார்.

பொன்போலச் சிறந்தவனே! தன்னாலே தன்னைப் புகழ்கின்ற, தானே விளங்குவதோர் ஒளியானவனே! ஒரோவொருகால் தோன்றி மறைதலால் மின்னலொடு ஒப்பவனே! செக்கர் வானத்தில் தோன்றும் இளஞ்சூரியன் போலும் திருமேனியை உடையவனே! திருப்பரவையுண் மண்டளியில் எழுந்தருளி இருக்கின்ற தலைவனே! நின் புகழை எடுத்துரைத்தல், ஞானியர்க்கு இயல்வதாம்.

977. நாமாறா துன்னையே நல்லன சொல்லுவார்
போமாறென் புண்ணியா புண்ணிய மானானே
பேய்மாறாப் பிணமிடு காடுகந் தாடுவாய்க்
காமாறென் பரவையுண் மண்டளி அம்மானே. 3

"நீ அருளாது விடின்" என்பது "போமாறென், ஆமாறென்" என்ற குறிப்பால் விளங்கும்.

புண்ணியத்தின் பயனாயும், புண்ணியமாயும் உள்ளவனே! திருப்பரவையுண்மண்டளியுள் எழுந்தருளியிருக்கின்ற தலைவனே! நீ அருளாதுவிடின், நாப்பிறழாது உன்னையே நல்லனவற்றாற் புகழ்கின்றவர்கள் போவது எவ்வாறு? பேய்கள் நீங்காத பிணத்தை இடுகின்ற காட்டில் விரும்பி ஆடுகின்ற உனக்கு அடியவராதல் எவ்வாறு?

978. நோக்குவேன் உன்னையே நல்லன நோக்காமைக்
காக்கின்றார் கண்டுகொண் டார்ஐவர் காக்கிலும்
வாக்கென்னும் மாலைகொண் டுன்னை என்மனத்
தார்க்கின்றேன் பரவையுண் மண்டளி அம்மானே.
4

திருப்பரவையுண்மண்டளியில் எழுந்தருளி யிருக்கின்ற தலைவனே! ஐவர் என்னை நல்லனவற்றை நோக்காது குறிக்கொண்டு காக்கின்றார். அவ்வாறு காத்து நிற்பினும், சொல்லென்னும் மாலையால், உன்னை என் மனத்தில் இருத்துகின்றேன்; உன்னையே நினைக்கின்றேன்.

979. பஞ்சேரும் மெல்லடி யாளையொர் பாகமாய்
நஞ்சேரும் நன்மணி கண்டம் உடையானே
நெஞ்சேர நின்னையே உள்கி நினைவாரே
அஞ்சேலென் பரவையுண் மண்டளி அம்மானே.
5

ஏர்தல் – எழுதல், அழுந்தி நினைத்தல்.

செம்பஞ்சு காணப்படும் மெல்லிய அடிகளை யுடையவளாகிய உமாதேவியை ஒரு பாகமாகக் கொண்டு நஞ்சு காணப்படும், நல்ல நீலமணி போலும் கண்டத்தை உடையவனே! திருப்பரவையுண் மண்டளியில் எழுந்தருளி யிருக்கின்ற தலைவனே! உன்னை நெஞ்சில் விளங்கும்படி அழுந்தி நினைக்கின்ற அடியார் களை, 'அஞ்சேல்' என்று சொல்லிக் காத்தருள்.

980. அம்மானே ஆகம சீலர்க் கருள்நல்கும்
பெம்மானே பேரரு ளாளன் பிடவூரன்
தம்மானே தண்டமிழ் நூற்புல வாணர்க்கோர்
அம்மானே பரவையுண் மண்டளி அம்மானே. 6

யாவர்க்கும் தலைவனே! ஆகம ஒழுக்கத்தை உடையவர்கட்கு, உனது திருவருளைத் தருகின்ற பெரியோனே! திருப்பிடவூரில் உறையும் பேரருளாளனுக்குத் தலைவனே! தண்ணிய தமிழால் இயன்ற நூல்களை வல்ல புலமை வாழ்க்கை உடையவர்க்கு, ஒப்பற்ற முதல்வனே! திருப்பரவையுண் மண்டளியில் எழுந்தருளியிருக்கின்ற இறைவனே! உன்னை மறவாது நினைக்கின்ற அடியார்களை, 'அஞ்சேல்' என்று சொல்லிக் காத்தருள்.

981. விண்டானே **மேலையார் மேலையார் மேலாய**
எண்டானே எழுத்தொடு சொற்பொருள்
எல்லாம்முன்
கண்டானே கண்தனைக் கொண்டிட்டுக் காட்டாயே
அண்டானே பரவையுண் மண்டளி அம்மானே. 7

'மேல் உள்ளார்க்கு மேல் உள்ளார்க்கு மேல் உள்ள வானம், எண், எழுத்து, சொல், பொருள் மற்றும் எல்லாவற்றையும் முதலிற் படைத்தவனே! வானுலகத்தில் உள்ளவனே! திருப்பரவையுண் மண்டளியில் எழுந்தருளி யிருக்கின்ற தலைவனே! முன்பு என் கண்ணைக் கொண்டாய்; இப்பொழுது அதனைக் கொடுத்து உன்னைக் காட்டியருள்.

982. காற்றானே கார்முகில் போல்வதொர் கண்டத்தெம்
கூற்றானே கோல்வளை யாளையொர் பாகமாய்
நீற்றானே நீள்சடை மேல்நிறை யுள்ளதோர்
ஆற்றானே பரவையுண் மண்டளி அம்மானே. 8

கார் முகில் – மிகக் கருமை குறித்தது.
கூற்று – சொல்.

காற்றாய் உள்ளவனே! கரிய மேகம் போல்வதாகிய ஒப்பற்ற கண்டத்தையுடைய, எம் இனத்தவனே! கோல் தொழில் அமைந்த வளைகளை அணிந்தவளாகிய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டு திருநீற்றை அணிந்தவனே! நீண்ட சடையின் மேல் நிறைவுள்ளதாகிய ஒரு நதியை உடையவனே! திருப்பரவையுண் மண்டளியில் எழுந்தருளியிருக்கின்ற தலைவனே!

983. செடியேன்நான் செய்வினை நல்லன செய்யாத
கடியேன்நான் கண்டதே கண்டதே காமுறும்
கொடியேன்நான் கூறுமா றுன்பணி கூறாத
அடியேன் நான் பரவையுண் மண்டளி அம்மானே.
9

"ஆயினும் எனக்கு இரங்கி அருள்" என்கிறார். சுவாமிகள் தமது துயர மிகுதியால் இவ்வாறு கூறி இறைவரை இறைஞ்சுகிறார். "நான்" "நான்" என்று நான்கடிகளிலும் தம் குறையைக் கூறுகிறார்.
பணி – பணிக்கப்பட்ட நெறி – சொற்றமிழ் பாடுதல்.

திருப்பரவையுண் மண்டளியில் எழுந்தருளி யிருக்கின்ற தலைவனே! நான் குற்றமுடையேன்; செய்யும் செயல்களை நல்லவனவாகச் செய்யாத தீமையேன்; கண்டதையெல்லாம் பெற விரும்பும் கொடியேன்; உன் ஆணையின் வண்ணம் உன்னைப் பாடுமாற்றாற் பாடாத ஓர் அடியேன்.

984. கரந்தையும் வன்னியும் மத்தமுங் கூவிளம்
பரந்தசீர்ப் பரவையுண் மண்டளி அம்மானை
நிரம்பிய ஊரன் உரைத்தன பத்திவை
விரும்புவார் மேலையார் மேலையார் மேலாரே.
10

கரந்தை, வன்னி, ஊமத்தை, கூவிளை இவைகளை அணிந்த பரவிய புகழையுடைய திருப்பரவையுண் மண்டளியில் எழுந்தருளி யிருக்கின்ற தலைவனை, அன்பு நிறைந்த நம்பியாரூரன் பாடிய பத்துப் பாடல்களாகிய இவைகளை விருப்புற்றுப் பாடுவோர், மேலோர்க்கு மேலோர்க்கு மேலோராவார்.

## 97. திருநனிபள்ளி

நனிபள்ளி திருஞானசம்பந்தரின் தாயார் பகவதியம்மையாரின் ஊராகும். இரண்டாவது தல யாத்திரையில் இங்கு திருஞானசம்பந்தர் தம் தந்தையாரது தோளின் மேல் இருந்து தம்மீது ஆணை வைத்துப் பாலை நெய்தல் பாடியருளிய ஞானம் பெற்ற நிகழ்வை ஒன்பதாம் பாடலில் போற்றி மகிழ்கிறார்.

பண் : பஞ்சமம் பதிக எண் : 97

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் பருவதராஜ புத்திரி உடனமர் அருள்மிகு நற்றுணையப்பர். | | |
| **தல இருப்பிடம்** | சோழநாட்டில் காவிரி தென்கரையில் மயிலாடுதுறையிலிருந்து 12 கி.மீ. தொலைவில் செம்பொனார் கோயில் வழியில் உள்ளது. | | |
| **தல மரம்** | வன்னி, வில்வம் | | |
| **தீர்த்தம்** | சூரியதீர்த்தம் | | |
| **பாடியவர்** | மூவர் | **பதிகங்கள்** | 3 |

985. ஆதியன் ஆதிரையன் அயன்
மாலறி தற்கரிய
சோதியன் சொற்பொருளாய்ச் சுருங்
காமறை நான்கினையும்
ஓதியன் உம்பர்தங்கோன் உல
கத்தினுள் எவ்வுயிர்க்கும்
நாதியன் நம்பெருமான் நண்ணும்
ஊர்நனி பள்ளியதே. 1

எப்பொருட்கும் முதலானவனும், ஆதிரை நாண் மீனைத் தனக்கு உரியதாகக் கொண்டவனும், பிரமனும் திருமாலும் அறிதற்கரிய ஒளி வடிவானவனும், சொல்லும் சொற்பொருளுமாய் நின்று, சுருங்குதல் இல்லாத வேதங்கள் நான்கினையும் ஓதியவனும், தேவர்களுக்குத் தலைவனும், உலகில் உள்ள எல்லா உயிர்கட்கும் தந்தையும் ஆகிய இறைவன் பொருந்தி யிருக்கின்ற ஊர், திருநனிபள்ளியே.

சொல்லும், சொற்பொருளுமாய் இருப்பவன்.

எனவே எல்லாம் தெரிவிக்கும் முதனூலையும் செய்ய வல்லவனாகிறான்.

இத்திருப்பாடலின் முதலடியை "ஆதியன் ஆதிரையன் அனலாடிய ஆரழகன்" என்ற **(3–61–1)** திருஞானசம்பந்தர் மூன்றாம் திருமுறை தேவாரத்தோடு ஒப்பிட்டு மகிழலாம்.

எவ்வுயிர்க்கு நாதியன் – எண்பத்து நான்கு நூறாயிரமாம் யோனி பேதம் படைத்து.... உயிர்க்குயிராய் அங்கங்கே நின்றான். நாதியன் – நாதன் – தலைவன் – ஆதரவு தருபவன்.

**986.** உறவிலி ஊனமிலி உண
ரார்புரம் மூன்றெரியச்
செறுவிலி தன்னினைவார் வினை
யாயின தேய்ந்தழிய
அறவில கும்மருளான் மரு
ளார்பொழில் வண்டறையும்
நறவிரி கொன்றையினான் நண்ணும்
ஊர்நனி பள்ளியதே. 2

உறவிலி – ஆருற்றார்?
இலகுதல் – விளங்குதல்
மருள் – இசைவகை. நறவு – தேன்

உறவுத் தொடக்கு இல்லாதவனும், குறைவில்லாதவனும், தன்னை மதியாதவரது மூன்று ஊர்களும் எரிந்தொழியும்படி அழித்த வில்லை உடையவனும், தன்னை நினைபவரது வினையெல்லாம் வலிமை குன்றி அழியும்படி, மிகவும் விளங்குகின்ற திருவருளை உடையவனும், தேனோடு மலர்கின்ற கொன்றை மலர் மாலையை அணிந்தவனும் ஆகிய இறைவன் பொருந்தியிருக்கின்ற ஊர், மயக்கத்தைத் தருகின்ற சோலைகளில் வண்டுகள் ஒலிக்கின்ற திருநனிபள்ளியே.

**987.** வானுடை யான்பெரியான் மனத்
தாலும் நினைப்பரியான்
ஆனிடை ஐந்தமர்ந்தான் அணு
வாகியொர் தீயுருக்கொண்
டூனுடை இவ்வுடலம் ஒடுங்
கிப்புகுந் தான்பரந்தான்
நானுடை மாடெம்பிரான் நண்ணும்
ஊர்நனி பள்ளியதே. 3

தீயுருக்கொண்டு... உடலில் உயிர்த் தீ உருவாய்ப் போந்து உயிருள்ளளவும் நிற்பவன்.

விண்ணுலகத்தைத் தனதாக உடையவனும், யாவரினும் பெரியோனும், மனத்தாலும் நினைத்தற்கரியவனும், பசுவினிடத்துத் தோன்றுகின்ற ஐந்து பொருள்களை விரும்புபவனும், நுண்ணிய பொருளாகி, சுடர் வடிவத்தைக் கொண்டு, ஊனையுடையதாகிய இவ்வுடம்பினுள் அடங்கிப் புகுந்தவனும், உலகம் எல்லாம் தன்னுள் அடங்க விரிந்தவனும், நான் உடைய செல்வமாய் இருப்பவனும் ஆகிய எம்பெருமான் பொருந்தியிருக்கின்ற ஊர் திருநனிபள்ளியே.

**988.** ஓடுடை யன்கலனா உடை
கோவண வன்னுமையோர்
பாடுடை யன்பலிதேர்ந் துணும்
பண்புடை யன்பயிலக்
காடுடை யன்னிடமா மலை
ஏழுங் கருங்கடல்சூழ
நாடுடை நம்பெருமான் நண்ணும்
ஊர்நனி பள்ளியதே. 4

ஓட்டினை உண்கலமாகவும், கோவணத்தை உடையாகவும் உடையவனும், ஒரு பக்கத்தில் உமையை உடையவனும், பிச்சை எடுத்து உண்ணும் தன்மையை உடையவனும், வாழ்வதற்குரிய இடமாகக் காட்டை உடையவனும், ஏழு மலைகளையும், கரிய கடல் சூழ்ந்த ஏழு நாடுகளையும் உடையவனும் ஆகிய நம்பெருமான் பொருந்தியிருக்கின்ற ஊர், திருநனிபள்ளியே.

இடமாமலை.... – ஏழ் மலையும், ஏழ் கடலும் சூழ்ந்த எல்லா நாடுகளையும் தனதாக உடையவன்.

**989.** **பண்ணற் கரியதொரு படை**
**ஆழி** தனைப் படைத்துக்
கண்ணற் கருள்புரிந்தான்
கரு தாதவர் வேள்விஅலி
உண்ணற் கிமையவரை
உருண் டோட உதைத்துகந்து
நண்ணற் கரியபிரான் நண்ணும்
ஊர்நனி பள்ளியதே. 5

ஆக்குதற்கு அரிதாகிய சக்கரப்படை ஒன்றை ஆக்கி, அதனைத் திருமாலுக்கு அளித்தவனும், தன்னை மதியாதவனாகிய தக்கனது வேள்வியில் அவிசை உண்ணச் சென்ற தேவர் அனைவரையும் சிதறி ஓடும்படி வீரபத்திரரைக் கொண்டு தாக்கிப்பின், அவர்கட்கு அருள்செய்து, ஒருவராலும் அணுகுதற்கரிய தலைவனாகி யவனும் ஆகிய இறைவன் பொருந்தியிருக்கும் ஊர், திருநனிபள்ளியே.

மாலுக்களித்த சக்கரம் சாதாரணமானதன்று. அதை ஆக்குவது அரிது. அது சிவனால்தான் முடியும். அவரால் கால் விரலால் வட்டமாகக் கீறி எடுக்கப்பட்டது.

**990.** மல்கிய செஞ்சடைமேல் மதி
யும்மர வும்முடனே
புல்கிய ஆரணன்எம் புனி
தன்புரி நூல்விகிர்தன்
**மெல்கிய விற்றொழிலான்** விருப்
பன்பெரும் பார்த்தனுக்கு
நல்கிய நம்பெருமான் நண்ணும்
ஊர்நனி பள்ளியதே. 6

ஆரணன் – வேதங்களின் பொருளானவர்.

நிறைந்த, சிவந்த சடையின்மேல், சந்திரனும் பாம்பும் ஒருங்கியைந்து பொருந்திய திருமேனியனாகிய வேத முதல்வனும், எங்கள் தூயோனும், முப்புரி நூலையணிந்த, வேறுபட்ட தன்மையை உடையவனும், தன்மேல் அன்புடையவனாகிய மிக்க தவத்தையுடைய அருச்சுனனுக்கு, வன் கண்மை காரணமாக வன்றி மெல்லிய வில்தொழிலினால் அருள்பண்ணினவனும் ஆகிய இறைவன் பொருந்தியிருக்கும் ஊர், திருநனிபள்ளியே.

**991.** அங்கமொ ராறவையும் அரு
மாமறை வேள்விகளும்
எங்கும் இருந்தந்தணர் எரி
மூன்றவை யோம்புமிடம்
பங்கய மாமுகத்தாள் உமை
பங்கன் உறைகோயில்
செங்கயல் பாயும்வயல் திரு
வூர்நனி பள்ளியதே. 7

தாமரை மலர்மேலும் முகத்தையுடைய உமாதேவியைப் பாகத்தில் உடையவனாகிய இறைவன் எழுந்தருளியிருக்கின்ற இடம், அந்தணர்கள் மூன்று எரிகளோடே, ஆறு அங்கங்களையும், அரிய வேதங்களையும், வேள்விகளையும் எவ்விடத்தும் இருந்து வளர்க்கின்ற இடமாகிய, செவ்விய கயல் மீன்கள் துள்ளுகின்ற வயல்களையுடைய அழகிய ஊரான திருநனிபள்ளியே.

**992.** திங்கட் குறுந்தெரியல் திகழ்
கண்ணியன் **நுண்ணியனாய்**
நங்கட் பிணிகளைவான் அரு
மாமருந் தேழ்பிறப்பும்
மங்கத் திருவிரலால் அடர்த்
தான்வல் அரக்கனையும்
நங்கட் கருளும்பிரான் நண்ணும்
ஊர்நனி பள்ளியதே. 8

சிறிய பிறையாகிய, விளக்கம் அமைந்த கண்ணிமாலையைச் சூடியவனும், நுண்ணியனாய் நின்று, எழுவகைப் பிறப்புக்களும் கெடும்படி, நம்மிடத்து உள்ள வினையாகிய நோயை நீக்குகின்ற, உயர்ந்த, அரிய பெரிய மருந்தாய் உள்ளவனும், வலிய அரக்கனாகிய இராவணனையும், அழகிய ஒரு விரலால் நெரித்தவனும் ஆகிய, நமக்கு அருள்செய்யும் பெருமான் பொருந்தியிருக்கின்ற ஊர், திருநனிபள்ளியே.

"நம் பெருமான் நண்ணும் ஊர் நனி பள்ளியதே" என்பது பதிக மகுடமாகும்.
நுண்ணியனாய் – யானேதும் அறியாமே என்னுள் வந்து.

---

**993.** ஏன மருப்பினொடும் எழில்
ஆமையும் பூண்டுகந்து
வான மதிள் அரணம் மலை
யேசிலை யாவளைத்தான்
ஊனமில் காழிதன்னுள் ளுயர்
**ஞானசம் பந்தர்க்கன்று**
**ஞானம் அருள்புரிந்தான் நண்ணும்**
ஊர்நனி பள்ளியதே. 9

பன்றியின் கொம்பையும், அழகிய ஆமை யோட்டையும் விரும்பியணிந்து, வானத்திற் செல்லும் மதிலாகிய அரணின்முன், மலையையே வில்லாக வளைத்து நின்றவனும், குறையில்லாத சீகாழிப்பதியுள் உயர்ந்தோராகிய ஞானசம்பந்தர்க்கு ஞானத்தை அருள் செய்தவனும் ஆகிய இறைவன் பொருந்தி யிருக்கும் ஊர், திருநனிபள்ளியே.

---

**994.** காலமும் நாள்கழியுந் நனி
பள்ளி மனத்தின்உள்கிக்
கோலம தாயவனைக் குளிர்
நாவல ஊரன்சொன்ன
மாலை மதித்துரைப்பார் மண்
மறந்துவா னோர்உலகில்
சாலநல் லின்பமெய்தித் தவ
லோகத் திருப்பவரே. 10

காலமும் நாள்தோறும் கழியாநிற்கும், அதனால், குளிர்ந்த திருநாவலூரனாகிய நம்பியாரூரன், கருணையால் திருவுருக்கொண்ட இறைவனைத் திருநனிபள்ளியுள் வைத்து மனத்தில் இடைவிடாது எக்காலமும் நினைத்துப் பாடிய இப்பாமாலையின் பெருமையை உணர்ந்து பாடுவோர், தேவருலகில் மிக்க இன்பத்தைத் துய்த்து, பின்பு மண்ணுலகத்தில் வருதலை மறந்து, சிவலோகத்தில் இருப்பவரே யாவர்.

தவம் – சிவபூசை

## 98. திருநன்னிலத்துப் பெருங்கோயில்

பண் : பஞ்சமம் பதிக எண் : 98

| மூர்த்தி | அருள்தரும் மதுவனநாயகி உடனமர் அருள்மிகு மதுவநேசுவரர். | | |
|---|---|---|---|
| தல இருப்பிடம் | சோழநாட்டில் காவிரி தென்கரையில் திருவாரூரிலிருந்து 20 கி.மீ. தொலைவில் அமைந்து உள்ளது. | | |
| தல மரம் | வில்வம் | | |
| தீர்த்தம் | பிரமதீர்த்தம், சூலதீர்த்தம் | | |
| பாடியவர் | நம்பியாரூரர் | பதிகம் | 1 |

995. தண்ணியல் வெம்மையினான் தலை
யிற்கடை தோறும்பலி
பண்ணியன் மென்மொழியா ரிடங்
கொண்டுழல் பண்டரங்கன்
புண்ணிய நான்மறையோர் முறையா
லடிபோற் றிசைப்ப
நண்ணிய நன்னிலத்துப் பெருங்
கோயில் நயந்தவனே. 1

புண்ணியத்தைச் செய்கின்ற, நான்கு வேதங்களையும் உணர்ந்த அந்தணர்கள், முறைப்படி தனது, திருவடிக்குப் போற்றி சொல்லி வழிபடும்படி, பலரும் அடைந்து வணங்கும் திருநன்னிலத்தில் உள்ள பெருங் கோயிலை விரும்பி எழுந்தருளியிருக்கின்ற பெருமான், தண்ணிய இயல்பினையும், வெவ்விய இயல்பினையும் ஒருங்குடையவன்; வாயில்கள்தோறும் சென்று, பண்போலும் இயல்பினையுடைய இனிய மொழியையுடைய மகளிரிடம் தலையோட்டில் பிச்சை யேற்றுத் திரிகின்ற 'பாண்டரங்கம்' என்னும் கூத்தினையுடையவன்.

சிவபெருமானிடத்து அறமாய்க் காணப்படுவதும், மறமாய்க் காணப்படுவதும் கருணை ஒன்றேயாதலின், தண்மையையும், வெம்மையையும் ஒருங்குடையவன் என்றருளினார்.

மாறுபட்ட இரு தன்மைகள் ஒரு பொருளில் காணப்படுவது உலகில் இல்லாததோர் அற்புதம் என்றவாறு.

தண்ணியல் வெம்மை – தட்பமுடைய வெம்மை. முரண் அணி. தண்ணியல்பாவது கருணை;

வெம்மை – சங்காரம். சங்காரமும் அருளே. "அங்கங் குளிர்ந்தனலாடும் எங்களப்பன்" அம்மை மூத்த பதிகம் : தண்ணியல் வெம்மையினாள் – இறைவர் ஏந்தியாடும் தீ உயிர்களுக்குப் பிறவி வெப்பம் தீரத் தன்மை செய்து குளிர்விக்கும் தன்மை பொருந்தியது. பலி – இட.

பண்டரங்கன் – பண்டரங்கம் என்னும் கூத்தாடுபவன்.

| | | |
|---|---|---|
| **996.** வலங்கிளர் மாதவஞ்செய் மலை<br>மங்கையொர் பங்கினனாய்ச்<br>சலங்கிளர் கங்கைதங்கச் சடை<br>யொன்றிடை யேதரித்தான்<br>பலங்கிளர் பைம்பொழில்தண் பனி<br>வெண்மதி யைத்தடவ<br>நலங்கிளர் நன்னிலத்துப் பெருங்<br>கோயில் நயந்தவனே. | 2 | பயன்மிகுந்த, பசிய சோலைகள், குளிர்ந்த, வெள்ளிய சந்திரனைத் தடவுதலால் அழகு மிகுகின்ற திருநன்னிலத்தில் உள்ள பெருங் கோயிலை விரும்பி எழுந்தருளியிருக்கின்ற பெருமான், வெற்றி மிக்க, பெரிய தவத்தைச் செய்த மலைமகளை ஒருபாகத்தில் உடையவனாய், வெள்ளம் மிகுந்த கங்கையைத் தனது சடைகளுள் ஒன்றிலே தங்கும்படி தடுத்து வைத்துள்ளான். |
| **997.** கச்சியன் இன்கருப்பூர் விருப்<br>பன்கரு திக்கசிவார்<br>உச்சியன் பிச்சையுண்ணி உல<br>கங்களெல் லாமுடையான்<br>நொச்சியம் பச்சிலையான் நுரை<br>தீர்புன லால்தொழுவார்<br>நச்சிய நன்னிலத்துப் பெருங்<br>கோயில் நயந்தவனே. | 3 | நொச்சியின் பச்சிலையும், நுரை இல்லாத தூய நீரும் கொண்டு வழிபடுவோர் விரும்புகின்ற திருநன்னிலத்தில் உள்ள பெருங்கோயிலை விரும்பி எழுந்தருளியிருக்கின்ற பெருமான், கச்சிப்பதியில் எழுந்தருளியிருப்பவன்; இனிய கரும்பின்கண் செல்லுகின்ற விருப்பம்போலும் விருப்பம் செல்லுதற்கு இடமானவன்; தன்னை நினைந்து உருகுபவரது தலைமேல் இருப்பவன்; பிச்சையேற்று உண்பவன்; உலகங்கள் எல்லாவற்றையும் உடையவன். |

நுரை தீர் புனல் – நுரையுடைய நீர் வழிபாட்டிற்கு ஆகாது. நொச்சியம் பச்சிலை – பூசைக்கு இன்றியமையாதவை. "புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு" – திருமந்திரம்
"குடங்கை நீரும் பச்சிலையும்" – திருவிளையாடல்.

| | | |
|---|---|---|
| **998.** பாடிய நான்மறையான் படு<br>பல்பிணக் காடரங்கா<br>ஆடிய மாநடத்தான் அடி<br>போற்றியென் றன்பினராய்ச்<br>சூடிய செங்கையினார் பலர்<br>தோத்திரம் வாய்த்தசொல்லி<br>நாடிய நன்னிலத்துப் பெருங்<br>கோயில் நயந்தவனே. | 4 | தலைமேற் குவித்த கையை உடைய பலர், மிக்க அன்புடையவர்களாய், 'திருவடி போற்றி' என்று, பொருந்திய தோத்திரங்களைச் சொல்லி அடைகின்ற திருநன்னிலத்தில் உள்ள பெருங்கோயிலை விரும்பி எழுந்தருளி யிருக்கின்ற இறைவன்; தன்னால் பாடப்பட்ட நான்கு வேதங்களையுடையவன்; இறந்த பல பிணங்களையுடைய காடே அரங்கமாக ஆடுகின்ற, சிறந்த நடனத்தையுடையவன். |
| **999.** பிலந்தரு வாயினொடு பெரி<br>தும்வலி மிக்குடைய<br>சலந்தரன் ஆகம்இரு பிள<br>வாக்கிய சக்கரம்முன்<br>நிலந்தரு மாமகள்கோன் நெடு<br>மாற்கருள் செய்தபிரான்<br>நலந்தரு நன்னிலத்துப் பெருங்<br>கோயில் நயந்தவனே. | 5 | நன்மையைத் தருகின்ற திருநன்னிலத்தில் உள்ள பெருங்கோயிலை விரும்பி எழுந்தருளி யிருக்கின்ற பெருமான், பிலம் போன்ற வாயையும், பெரிதும் மிகுந்த வலிமையையும் உடைய சலந்தராசுரனது உடலை இரண்டு பிளவாகச் செய்த சக்கராயுதத்தை, முன்பு, மண்ணை உண்டு உமிழ்ந்த திருமகள் கணவனாகிய திருமாலுக்கு அளித்த தலைவன். |

| | |
|---|---|
| 1000. வெண்பொடி மேனியினான் கரு<br>நீல மணிமிடற்றான்<br>பெண்படி செஞ்சடையான் பிர<br>மன்சிரம் பீடழித்தான்<br>பண்புடை நான்மறையோர் பயின்<br>றேத்திப்பல் கால்வணங்கும்<br>நண்புடை நன்னிலத்துப் பெருங்<br>கோயில் நயந்தவனே. 6 | நல்ல பண்பினையுடைய நான்கு வேதங்களை உணர்ந்தவர்களாகிய அந்தணர்கள், பல மந்திரங்களையும் நன்கு பயின்று, பன்முறை துதித்து வணங்கும், நட்பாம் தன்மையுடைய திருநன்னிலத்தில் உள்ள பெருங்கோயிலை விரும்பி எழுந்தருளியிருக்கின்ற பெருமான், வெண்பொடியைப் பூசிய மேனியை உடையவன்; நீலமணிபோலும் கரிய கண்டத்தை உடையவன்; கங்கையாகிய பெண் பொருந்தியுள்ள சடையை உடையவன்; பிரமதேவனது தலையை, பெருமை கெட அறுத்தவன். |
| 1001. தொடைமலி கொன்றைதுன்றுஞ் சடை<br>யன்சுடர் வெண்மழுவாட்<br>படைமலி கையன்மெய்யிற் பகட்<br>டீருரிப் போர்வையினான்<br>மடைமலி வண்கமலம் மலர்<br>மேன்மட வன்னம்மன்னி<br>நடைமலி நன்னிலத்துப் பெருங்<br>கோயில் நயந்தவனே. 7 | இளமையான அன்னப் பறவைகள், நீர்மடைகளில் நிறைந்துள்ள, வளவிய தாமரை மலர்மேல் தங்கிப் பின் அப்பாற் சென்று நடத்தல் நிறைந்த திருநன்னிலத்தில் உள்ள பெருங்கோயிலை விரும்பி எழுந்தருளியிருக்கின்ற பெருமான், மாலையாக நிறைந்த கொன்றைமலர் பொருந்திய சடையை உடையவன்; ஒளிவீசுகின்ற வெள்ளிய மழுவாகிய ஆளும் படைக்கலம் நிறைந்த கையை உடையவன்; திருமேனியில் யானையினது உரித்த தோலாகிய போர்வையை உடையவன். |
| 1002. குளிர்தரு திங்கள்கங்கை குர<br>வோடரக் கூவிளமும்<br>மிளிர்தரு புன்சடைமேல் உடை<br>யான்விடை யான்விரைசேர்<br>தளிர்தரு கோங்குவேங்கை தட<br>மாதவி சண்பகமும்<br>நளிர்தரு நன்னிலத்துப் பெருங்<br>கோயில் நயந்தவனே. 8<br><br>நளிர்தரு – குளிர்ச்சி செய்கின்ற. | நறுமணம் பொருந்திய, தளிர்களைத் தருகின்ற கோங்கு, வேங்கை, வளைவையுடைய குருக்கத்தி, சண்பகம் முதலிய பூமர வகைகள் பலவும் குளிர்ச்சியைத் தருகின்ற திருநன்னிலத்தில் உள்ள பெருங்கோயிலை விரும்பி எழுந்தருளியிருக்கின்ற பெருமான், தனது ஒளிவீசுகின்ற, புல்லிய சடையின்மேல், குளிர்ச்சியைத் தருகின்ற சந்திரன், கங்கை, பாம்பு, குராமலர், கூவிள இலை முதலிய இவைகளை உடையவன்; இடபத்தை ஊர்கின்றவன். |

1003. கமர்பயில் வெஞ்சுரத்துக் கடுங்
கேழற்பின் கானவனாய்
அமர்பயில் வெய்தி அருச்
சுனற்கருள் செய்தபிரான்
தமர்பயில் தண்விழவில் தகு
சைவர்த வத்தின்மிக்க
நமர்பயில் நன்னிலத்துப் பெருங்
கோயில் நயந்தவனே. 9

உலகத்தவர் மிக்குள்ள தண்ணிய விழாக்களை யுடைய, தகுதி வாய்ந்த சைவர்களாகிய, தவத்திற் சிறந்த நம்மவர் மிக்கு வாழ்கின்ற திருநன்னிலத்தில் உள்ள பெருங்கோயிலை விரும்பி எழுந்தருளியிருக்கின்ற பெருமான், நிலப் பிளப்புக்கள் மிகுந்த கொடிய கற்சுரத்தில், கொடிய பன்றியின்பின்னே வேடுவனாய்ச் சென்று அருச்சுனனோடு போராடுதலைப் பொருந்தி, அவனுக்குத் திருவருள் செய்த தலைவனாவான்.

தவத்தின் மிக்காரை 'நமர்' எனத் தம்மொடு படுத்து அருளினமையின் தமர் என்றது அயலவராகிய உலகத்தார் என்று கொள்ளலாம். ஆகவே தண்மை மகிழ்ச்சியைக் குறித்தது. தவமாவது இறப்பில் தவமாகிய சிவபுண்ணியம் என்பதன் பொருட்டு "சைவராகிய தவத்தவர்" என்றருளினார்.

1004. கருவரை போல்அரக்கன் கயி
லைம்மலைக் கீழ்க்கதற
ஒருவிரலால் அடர்த்தின் னருள்
செய்த வுமாபதிதான்
திரைபொரு பொன்னிநன்னீர்த் துறை
வன்திகழ் செம்பியர்கோன்
நரபதி நன்னிலத்துப் பெருங்
கோயில் நயந்தவனே. 10

நரபதி – மக்களுக்குத் தலைவன்; அரசன்.

அலை மோதுகின்ற காவிரியாற்றினது நல்ல நீர்த்துறையை உடையவனும், சோழர் கோமகனும் ஆகிய அரசன் செய்த, திருநன்னிலத்துப் பெருங்கோயிலை விரும்பி எழுந்தருளியிருக்கின்ற பெருமான், அரக்கனாகிய இராவணன், கயிலாய மலையின் கீழ், கரியமலைபோலக் கிடந்து கதறும்படி ஒரு விரலால் நெருக்கிப் பின்பு அவனுக்கு அருள்புரிந்த உமை கணவனாகும்.

1005. கோடுயர் வெங்களிற்றுத் திகழ்
கோச்செங்க ணான்செய்கோயில்
நாடிய நன்னிலத்துப் பெருங்
கோயில்ந யந்தவனைச்
சேடியல் சிங்கிதந்தை சடை
யன்திரு வாரூரன்
பாடிய பத்தும்வல்லார் புகு
வார்பர லோகத்துளே. 11

சிங்கடி என்பது சிங்கி எனக் குறுக்கப்பட்டது.
கோடு – கொம்பு.

தந்தங்கள் உயர்ந்து காணப்படுகின்ற வெவ்விய யானையின்மேல் விளங்குகின்ற கோச்செங்கட் சோழ நாயனார் செய்த, யாவரும் விரும்புகின்ற, திருநன்னிலத்தில் உள்ள பெருங்கோயிலை விரும்பி எழுந்தருளியிருக்கின்ற பெருமானை, அழகு பொருந்திய சிங்கடிக்குத் தந்தையும், சடையனார்க்கு மகனும் ஆகிய நம்பியாரூரன் பாடிய இப்பத்துப் பாடல்களையும் பாட வல்லவர்கள், பரலோகத்துள் புகுவார்கள்.

## 99. திருநாகேச்சரம்

பண் : பஞ்சமம் | பதிக எண் : 99

| | | | |
|---|---|---|---|
| **மூர்த்தி** | அருள்தரும் குன்றாமுலைநாயகி உடனமர் அருள்மிகு சம்பகாரணியர். | | |
| **தல இருப்பிடம்** | சோழநாட்டில் காவிரி தென்கரையில் கும்பகோணத்திலிருந்து 5 கி.மீ. தொலைவில் உள்ளது. | | |
| **தல மரம்** | சண்பகம் | | |
| **தீர்த்தம்** | சூரியதீர்த்தம் | | |
| **பாடியவர்** | மூவர் | **பதிகங்கள்** | 6 |

இத்திருப்பதிகம், இறைவரது அருட்செயல்களை அவரை வினவு முகத்தால் சிறப்பித்து அருளிச் செய்தது.

1006. பிறையணி வாணுதலாள் உமை
யாளவள் பேழ்கணிக்க
நிறையணி நெஞ்சனுங்க நீல
மால்விடம் உண்டதென்னே
குறையணி குல்லைமுல்லை அளைந்
துகுளிர் மாதவிமேல்
சிறையணி வண்டுகள்சேர் திரு
நாகேச் சரத்தானே. 1

சிறகுகளையுடைய அழகிய வண்டுகள், இன்றியமையாத, அழகிய துளசியிலும் முல்லை மலர்களிலும் மகரந்தத்தை அளைந்து, பின்பு குருக்கத்திக் கொடியின்மேல் சேர்கின்ற திருநாகேச்சரத்தில் எழுந்தருளியிருப்பவனே! நீ பிறைபோலும், அழகிய, ஒளிபொருந்திய நெற்றியை உடையவளாகிய உமையவள் மருளவும், திட்பம் பொருந்திய மனம் கலங்கவும், நீல நிறத்தை உடைய, பெரிய நஞ்சினை உண்டதற்குக் காரணம் யாது ?

கணித்தல் – எண்ணுதல். பேழ்கணித்தல் – பெரிதும் எண்ணுதல். இது கழிவிரக்கம், ஐயம், மருட்கை முதலிய பொருட்களை உணர்த்தும். குறை – இன்றியமையாமை. பிறைஅணி – பிறை போன்ற. அனுங்க – வருந்த.

1007. அருந்தவ மாமுனிவர்க் கரு
ளாகியொர் ஆலதன்கீழ்
இருந்தற மேபுரிதற் கியல்
பாகிய தென்னைகொலாம்
குருந்தய லேகுரவம் மர
வின்னெயி றேற்றரும்பச்
செருந்திசெம் பொன்மலருந் திரு
நாகேச் சரத்தானே. 2

குருந்த மரத்தின் பக்கத்தில் குராமரம், பாம்பினது பல்லைத் தாங்கினாற்போல அரும்புகளைத் தோற்றுவிக்க, செருந்தி மரம், செம்பொன்போலும் மலரைக் கொண்டு விளங்கும் திருநாகேச்சரத்தில் எழுந்தருளி யிருப்பவனே! நீ, அரிய தவத்தையுடைய சிறந்த முனிவர்கள்மேல் கருணை கூர்ந்து, ஓர் ஆலமரத்தின் கீழ் இருந்து அறத்தைச் சொல்ல இசைந்தற்குக் காரணம் யாது ?

புரிதல் – நினைதல்

1008. பாலன தாருயிர்மேற் பரி
யாது பகைத்தெழுந்த
காலனை வீடுவித்துக் கருத்
தாக்கிய தென்னைகொலாம்
கோலம லர்க்குவளைக் கழு
நீர்வயல் சூழ்கிடங்கில்
சேலொடு வாளைகள்பாய் திரு
நாகேச் சரத்தானே. 3

அழகிய குவளை மலர்களையும், செங்கழுநீர் மலர்களையும் உடைய வயல்களைச் சூழ்ந்துள்ள வாய்க்கால்களில், சேல் மீன்களும், வாளை மீன்களும் துள்ளுகின்ற திருநாகேச்சரத்தில் எழுந்தருளியிருப்பவனே! சிறுவன் ஒருவன்மேல் இரக்கங் கொள்ளாது பகைத்து, அவனது அரிய உயிரைக் கவர வந்த இயமனை அழிவித்து, அச்சிறுவனுக்கு நீ, அருளை வழங்கியதற்குக் காரணம் யாது?

கருத்து – திருவுள்ளம். வீடுவித்துக் கருத்தாக்கிய – வீட்டிப்பின் உயிர்ப்பித்து அருளியது.

1009. குன்ற மலைக்குமரி கொடி
யேரிடை யாள்வெருவ
வென்றி மதகரியின் னுரி
போர்த்ததும் என்னைகொலாம்
முன்றில் இளங்கமுகின் முது
பாளை மதுஅளைந்து
தென்றல் புகுந்துலவுந் திரு
நாகேச் சரத்தானே. 4

இல்லங்களின் முன்னுள்ள இளைய கமுக மரத்தின் பெரிய பாளைகளில் கட்டப்பட்ட தேன் கூடுகளில் உள்ள தேனை, தென்றற் காற்றுத் துழாவி, தெருக்களில் வந்து உலவுகின்ற திருநாகேச்சரத்தில் எழுந்தருளியிருப்பவனே! நீ, பல குன்றுகளையுடைய இமய மலையில் மகளாகிய, கொடி போலும் இடையையுடைய உமை அஞ்சும்படி, வெற்றியையும், மதத்தையும் உடைய யானையின் தோலை உரித்ததேயன்றி, அதனைப் போர்வையாகப் போர்த்துக் கொண்டதற்குக் காரணம் யாது?

இடையான் – உமை

1010. அரைவிரி கோவணத்தோ டர
வார்த்தொரு நான்மறைநூல்
உரைபெரு கவ்வுரைத் தன்
றுகந்தருள் செய்ததென்னே
வரைதரு மாமணியும் வரைச்
சந்தகி லோடும்உந்தித்
திரைபொரு தண்பழனத் திரு
நாகேச் சரத்தானே. 5

மலைகள் தந்த சிறந்த மாணிக்கங்களையும், அவற்றில் உள்ள சந்தனக்கட்டை, அகிற்கட்டை என்பவைகளுடன் தள்ளிக்கொண்டு வந்து, அலைகள் மோதுகின்ற, குளிர்ந்த வயல்களை யுடைய திருநாகேச்சரத்தில் எழுந்தருளி யிருக்கின்ற பெருமானே! நீ, அரையின்கண், அகன்ற கோவணத்தோடு பாம்பைக் கட்டிக் கொண்டு, ஒப்பற்ற நான்கு, வேதங்களின் பொருளை, அன்று விரிவாகச் சொல்லி, அதனைக் கேட்டோரை விரும்பி, அவருக்கு அருள் செய்தற்குக் காரணம் யாது?

முதல் நூலின் உண்மைப் பொருள் பிறழாது விளங்கக் கருதி சிவபிரான் வேதமாகிய முதல் நூலை அருளியதோடு மட்டுமின்றி அதன் பொருளுரைத்த வரலாறுகளும் சொல்லப்படுகின்றன. திரை – காவிரி நீரின் அலைகள்.

| | | |
|---|---|---|
| **1011.** தங்கிய மாதவத்தின் தழல்<br>வேள்வியி னின்றெழுந்த<br>சிங்கமும் நீள்புலியுஞ் செழு<br>மால்கரி யோடலறப்<br>பொங்கிய போர்புரிந்து பிளந்<br>தீருரி போர்த்ததென்னே<br>செங்கயல் பாய்கழனித் திரு<br>நாகேச் சரத்தானே. 6 | செவ்விய கயல்மீன்கள் துள்ளுகின்ற வயல்களையுடைய திருநாகேச்சரத்தில் எழுந்தருளியிருப்பவனே! நீ, நிலைபெற்ற பெரிய தவத்தினால், வேள்வித் தீயினின்றும் தோன்றிய சிங்கமும், நீண்ட புலியும், பருத்த பெரிய யானையோடே கதறி அழியும்படி மிக்க போரைச் செய்து கிழித்து, அவற்றினின்றும் உரித்த தோலைப் போர்த்ததற்குக் காரணம் யாது? |

யானை உருவம் கொண்ட அசுரனை அழித்ததன்றி இவ்வாறு கூறும் வரலாறும் உளதென்பது இப்பாடலால் அறியப்படுகிறது.

| | |
|---|---|
| **1012.** நின்றஇம் மாதவத்தை யொழிப்<br>பான்சென் றணைந்துமிகப்<br>பொங்கிய பூதங்கணைவேள் பொடி<br>யாக விழித்தலென்னே<br>பங்கய மாமலர்மேல் மது<br>வுண்டுவண் தேன்முரலச்<br>செங்கயல் பாய்வயல்சூழ் திரு<br>நாகேச் சரத்தானே. 7 | இப்பாடல், ஏடெழுதினோரால் பிழைபட்டதும் மிகையாகப் பிரதிகளில் சேர்ந்தது போலும்! இதனை, ஒன்பதாந் திருப்பாடல் கொண்டு உணர்க. |
| **1013.** வரியர நாணதாக மா<br>மேரு வில்லதாக<br>அரியன முப்புரங்கள் எவை<br>ஆரழல் ஊட்டல்என்னே<br>விரிதரு மல்லிகையும் மலர்ச்<br>சண்பக மும்மளைந்து<br>திரிதரு வண்டுபண்செய் திரு<br>நாகேச் சரத்தானே. 8 | சோலைகளில் திரிகின்ற வண்டுகள், மலரும் நிலையில் உள்ள மல்லிகை மலரிலும், சண்பக மலரிலும் மகரந்தத்தை அளைந்து, இசையைப் பாடுகின்ற திருநாகேச்சரத்தில் எழுந்தருளியிருப்பவனே! நீ, கீற்றுப் பொருந்திய பாம்பே நாணியாகவும், மாமேரு மலையே வில்லாகவும் கொண்டு, அரியவான மூன்று ஊர்களை, அரிய தீ உண்ணும்படி செய்ததற்குக் காரணம் யாது? |
| **1014.** அங்கியல் யோகுதனை யழிப்<br>பான்சென் றணைந்துமிகப்<br>பொங்கிய பூங்கணைவேள் பொடி<br>யாக விழித்தல்என்னே<br>பங்கய மாமலர்மேல் மது<br>வுண்டுபண் வண்டறையச்<br>செங்கயல் நின்றுகளுந் திரு<br>நாகேச் சரத்தானே. 9 | குளங்களில், தாமரை மலர்களின் மேல் வண்டுகள் தேனை உண்டு இசையைப் பாட, செவ்விய கயல்மீன்கள், நிலைபெற்று நின்று துள்ளுகின்ற திருநாகேச்சரத்தில் எழுந்தருளியிருப்பவனே! நீ, கயிலையின்கண் செய்த யோகத்தைக் கெடுத்தற்குச் சென்று சேர்ந்து, பெரிதும் சினங்கொண்ட, மலர்க்கணையை உடைய மன்மதன் சாம்பலாகும்படி ஒரு கண்ணைத் திறந்ததற்குக் காரணம் யாது? |

**1015.** குண்டரைக் கூறையின்றித் திரி
யுஞ்சமண் சாக்கியப்பேய்
மிண்டரைக் கண்டதன்மை விர
வாக்கிய தென்னைகொலோ
தொண்டிரைத் துவணங்கித் தொழில்
பூண்டடி யார்பரவும்
தெண்டிரைத் தண்வயல்சூழ் திரு
நாகேச் சரத்தானே. 10

அடியார்கள், அடிமைத்தொழில் பூண்டு, ஆரவாரித்து வணங்கித் துதிக்கின்ற, தெளிந்த அலைகளையுடைய, குளிர்ந்த வயல்கள் சூழ்ந்த திருநாகேச்சரத்தில் எழுந்தருளியிருப்பவனே! மூர்க்கரும், மனவலியுடையவரும் ஆகிய, உடையின்றித் திரியும் சமணரும், புத்தரும் என்னும் பேய்போல்வாரை, அவர் கண்டதே கண்ட தன்மையைப் பொருந்தச் செய்ததற்குக் காரணம் யாது?

**1016.** கொங்கணை வண்டரற்றக் குயி
லும்மயி லும்பயிலும்
தெங்கமழ் பூம்பொழில்சூழ் திரு
நாகேச் சரத்தானை
வங்கம லிகடல்சூழ் வயல்
நாவல வூரன்சொன்ன
பங்கமில் பாடல்வல்லா ரவர்
தம்வினை பற்றறுமே. 11

மகரந்தத்தை அடைந்த வண்டுகள் ஒலிக்க, குயிலும், மயிலும் பாடுதலையும், ஆடுதலையும் செய்கின்ற, தேனினது மணங் கமழ்கின்ற பூஞ்சோலைகள் சூழ்ந்த திருநாகேச்சரத்தில் எழுந்தருளியிருக்கின்ற இறைவனை, மரக்கலங்கள் நிறைந்த கடல்போலச் சூழ்ந்துள்ள வயல்களையுடைய திருநாவலூரா னாகிய நம்பியாரூரன் பாடிய, குறையில்லாத இப்பாடல்களைப் பாட வல்லவர்களது வினை பற்றறக் கழியும்.



திருக்கயிலாயம்: தெற்கு முகம்

## 100. திருநொடித்தான் மலை

சுவாமிகள், திருவஞ்சைக்களத்துப் பெருமானைப் பணிந்து, 'இவ்வுலக வாழ்வை நீக்குதல் வேண்டும்' என்று வேண்டி, "தலைக்குத் தலைமாலை" என்னும் திருப்பதிகத்தில் பாடிய குறிப்பால், திருக்கயிலைப் பெருமான், 'நம் ஆரூரனை வெள்ளானையில் ஏற்றிக் கொணர்க' என்று அருளியவாறு, மால் அயன் முதலாகிய தேவர்கள் திருவஞ்சைக்களம் வந்து, சுவாமிகளை வணங்கி, 'அருளிப்பாடு' எனப் போற்றி, 'ஏவல்' என்றனர்.

சுவாமிகளும் பணிந்து எழுந்து எதிரேற்று, சேரர் பெருமானை எண்ணியவராய், வெள்ளானையின்மீதேறி, சேரர் பெருமானும் பின்பு வந்து தமது குதிரையில் முன்னே செல்ல, வான் வழியில் பாடிக் கொண்டே சென்று, திருக்கயிலையில் முடித்தருளியது இத்திருப்பதிகம். (தி. 12 வெள்ளானைச் சரு. 39)

சுவாமிகள், இத்திருப்பதிகத்தின் திருக்கடைக்காப்பில் அருளிய அருளாணையின் வண்ணம் வருணனால் திருவஞ்சைக் களத்தில் இது சேர்ப்பிக்கப் பெற்றது.

குறிப்பு : இத்திருப்பதிகம் பல பெருமைகளையுடையது. அவை, தேவாரத் திருமுறைகளை நிறைவு செய்தமை, களையா உடலோடு நம்பியாரூரர் வெள்ளானையின்மீது வான் வழியாகத் திருக்கயிலை செல்லுங்கால், இறைவரது எல்லையற்ற பேரருட்டிறத்தை நினைந்து எழுந்த இன்ப மேலீட்டால் பாடிக்கொண்டு சென்றமை, நம்பியாரூரது வரலாற்றுக்குரிய அகச்சான்றுகள் பலவற்றைத் தருதலுடன், உரையளவைக்குரிய சிறப்பியல்பு தெற்றென விளங்க நிற்றல், திருக்கயிலையில் முற்றப்பெற்று நாயனாரது அருளாணையால் வருணனால் நிலவுலகிற் கொணர்ந்து அளிக்கப்பட்டமை முதலியனவாம்.

பண் : பஞ்சமம் | பதிக எண் : 100

1017. தானெனை முன்படைத்தான் அத
நிந்துதன் பொன்னடிக்கே
நானென பாடலந்தோ நாயி
னேனைப் பொருட்படுத்து
வானெனைவந் தெதிர்கொள்ள மத்த
யானை அருள்புரிந்து
ஊனுயிர் வேறுசெய்தான் நொடித்
தான்மலை உத்தமனே. 1

திருக்கயிலை மலைக்கண் வீற்றிருந்தருளும் முதல்வன், தானே முன்பு என்னை நிலவுலகில் தோற்றுவித்தருளினான்; தோற்றுவித்த அத்திருக் குறிப்பினையுணர்ந்து அவனது பொன் போலும் திருவடிகளுக்கு, அந்தோ, நான் எவ்வளவில் பாடல்கள் செய்தேன்! செய்யாதொழியவும், அப்புன்மை நோக்கி ஒழியாது, என்னை அடியவர்களுள் ஒருவனாக வைத்தெண்ணி, வானவர்களும் வந்து எதிர் கொள்ளுமாறு, பெரியதோர் யானை யூர்தியை எனக்கு அளித்து, எனது உடலொடு உயிரை உயர்வுபெறச் செய்தான்; அவனது திருவருள் இருந்தவாறு என்!

நொடித்தான் மலை என்றது ஒடுக்குதற் கடவுளது மலை என்னும் பொருளதாய் பூலோகக் கயிலை மலைக்குப் பெயராயிற்று. எண்ணிலாத் தேவர் யாவரையும் ஈறு செய்து, தான் ஈறின்றி நிற்கும் முதன்மையை விளக்குதற் பொருட்டு அவ்வாறு நிற்றல் பெறப்பட்டது.

இறைவன் என்னைத் தென்திசையில் தோன்றுமாறு ஆணையிட்டுத் திருநாவலூரில் பிறக்கச் செய்தான். அதனை முன் அறியாமலிருந்தேன். அவன் வல் வழக்கிட்டு என்னை ஆட்கொண்டபின் அதனை அறிந்து அர்ச்சனை பாட்டேயாகும் என்ற ஆணையின்படி பல பாடல்கள் பாடினேன். அப்பாடல்களுள் முத்தி விண்ணப்பம் செய்த (திருவஞ்சைக்களம் 8 ஆவது பாடல்) பாடலையும் கேட்டு, நாயினேனையும் பொருளாகக் கொண்டு அயன் முதல் வானவர் வந்து எதிர்கொள்ள வெள்ளை யானையினை அருளி; இதனை மேல்வரும் எல்லாப் பாடல்களிலும் பாடித் திருவருளின் பெருமையை நினைந்து நினைந்து உருகுகிறார். எனை ஏறவைக்க ஆனை (2) மால்விசும்பில் அழகான ஆனை அருள் (3) வேழம் அருள்புரிந்தான் (4) வெள்ளை யானை மேல் என்னுடன் காட்டுவித்தான் (5) வெஞ்சின ஆனை தந்தான் (6) யானை ஏறி (7) யானை தந்தான் (8) மத்த யானை அருள்புரிந்து (9) என்று பாடி மகிழ்கிறார். ஊன் உயிர் வேறு செய்தல் – பசு கரணங்களைப் பதி கரணங்களாக்குதல் அருளொளியில் அடங்கச் செய்தல்.

**1018.** ஆனை உரித்தபகை அடி
யேனொடு மீளக்கொலோ
ஊனை உயிர்வெருட்டி ஒள்ளி
யானை நினைந்திருந்தேன்
வானை மதித்தமரர் வலஞ்
செய்**தெனை யேறவைக்க**
**ஆனை** அருள்புரிந்தான் நொடித்
தான்மலை உத்தமனே. 2

முன் யானையினை உரித்ததோர் கோபமாகியது. பகையருட் செயல். இப்போது யானைக்கும் என் பொருட்டு அருள்செய்தது பிரசாதமாகிய அருட் செயல்.

யான், கருவி கரணங்களை அறிவினால் அடக்கி, அறிவே வடிவாய் உள்ள தன்னை உள்கியிருத்தலாகிய ஒன்றே செய்தேன்; அவ்வளவிற்கே, திருக்கயிலை மலைக்கண் வீற்றிருந்தருளும் அம் முதல்வன், வானுலகத்தையே பெரிதாக மதித்துள்ள தேவர்கள் வந்து என்னை வலம்செய்து ஏற்றிச் செல்லுமாறு, ஓர் யானையூர்தியை எனக்கு அளித்தருளினான்; அஃது, அவன் முன்பு யானையை உரித்ததனால் நிலைத்து நிற்கும் பகைமையை அடியேனால் நீங்கச்செய்து, அதற்கு அருள்பண்ணக் கருதியதனாலோ! அன்றி என்மாட்டு வைத்த பேரருளாலோ!

**1019.** மந்திரம் ஒன்றறியேன் மனை
வாழ்க்கை மகிழ்ந்தடியேன்
சுந்தர வேடங்களால் துரி
சேசெயுந் தொண்டனெனை
அந்தர **மால்விசும்பில் அழ**
**கானை யருள்புரிந்த**
துந்தர மோநெஞ்சமே நொடித்
தான்மலை உத்தமனே. 3

அந்தரம் – வெளி.

நெஞ்சே! அடியேன், மறைமொழிகளை ஓதுதல் செய்யாது இல்வாழ்க்கையில் மயங்கி, அடியவர் வேடத்தை மேற்கொள்ளாது? அழகைத்தரும் வேடங்களைப் புனைந்துகொண்டு, இவ்வாறெல்லாம் பொருந்தாதனவற்றையே செய்து வாழும் ஒரு தொண்டன்; எனக்கு, திருக்கயிலை மலைக்கண் வீற்றிருந்தருளும் முதல்வன், வெளியாகிய பெரிய வானத்திற் செல்லும் அழகுடைய யானையூர்தியை அளித்தருளியதும் என் தரத்ததோ!

**1020.** வாழ்வை உகந்தநெஞ்சே மட
வார் தங்கள் வல்வினைப்பட்
டாழ முகந்தவென்னை அது
மாற்றி அமரரெல்லாம்
சூழ அருள்புரிந்து தொண்ட
னேன் பரமல்லதொரு
**வேழம் அருள்புரிந்தான்** நொடித்
தான்மலை உத்தமனே. 4

ஆழமுகத்தல் – அழுந்துதல்.

உலக இன்பத்தை விரும்பிய மனமே, பெண்டிரால் உண்டாகும் வலிய வினையாகிய குழியில் விழுந்து அழுந்திக் கிடந்த என்னை, திருக்கயிலை மலைக்கண் வீற்றிருந்தருளும் முதல்வன், அந்நிலையினின்றும் நீக்கி, தேவரெல்லாரும் சூழ்ந்து அழைத்து வருமாறு ஆணையிட்டு, என் நிலைக்குப் பெரிதும் மேம்பட்டதாகிய ஓர் யானையூர்தியை அருளித் தருளினான்; அவனது திருவருள் இருந்தவாறு என்!

---

**1021.** மண்ணுல கிற்பிறந்து நும்மை
வாழ்த்தும் வழியடியார்
பொன்னுல கம்பெறுதல் தொண்ட
னேன்இன்று கண்டொழிந்தேன்
விண்ணுல கத்தவர்கள் விரும்
ப**வெள்ளை யானையின்மேல்**
**என்னுடல் காட்டுவித்தான்** நொடித்
தான்மலை உத்தமனே. 5

உடல் மட்டும் யானையின் மேலிருந்தது.
உயிர் சிவத்தைச் சார்ந்திருந்தது.

'மண்ணுலகில் மக்களாய்ப் பிறந்து நும்மைப் பாடுகின்ற பழவடியார், பின்பு பொன்னுலகத்தைப் பெறுதலாகிய உரையளவைப் பொருளை, அடியேன் இன்று நேரிற்கண்டேன்' என்று தன்பால் வந்து சொல்லுமாறு, திருக்கயிலை மலைக்கண் வீற்றிருந்தருளும் முதல்வன், தேவரும் கண்டு விருப்பங்கொள்ள, என் உடம்பை வெள்ளை யானையின்மேல் காணச் செய்தான்; அவனது திருவருள் இருந்தவாறு என்!

---

**1022.** அஞ்சினை ஒன்றிநின்று அலர்
கொண்டடி சேர்வறியா
வஞ்சனை யென்மனமே வைகி
வானநன் னாடர்முன்னே
துஞ்சுதல் மாற்றுவித்துத் தொண்ட
னேன்பர மல்லதொரு
**வெஞ்சின ஆனைதந்தான்** நொடித்
தான்மலை உத்தமனே. 6

அலர் – பழிச்சொல். துஞ்சுதல் – இறத்தல்.

திருக்கயிலை மலைக்கண் வீற்றிருந்தருளும் முதல்வன், ஐம்புலன்களைப் பொருந்தி நின்று, பூக்களைக் கொண்டு தனது திருவடியை அணுக அறியாத வஞ்சனையையுடைத்தாகிய என்மனத்தின்கண்ணே வீற்றிருந்து, எனக்கு இறப்பை நீக்கி, தேவர்களது கண்முன்னே, என் நிலைக்குப் பெரிதும் மேம்பட்ட, வெவ்விய சினத்தையுடைய யானையூர்தியை அளித்தருளினான்; அவனது திருவருள் இருந்தவாறு என்!

**1023.** நிலைகெட விண்ணதிர நிலம்
எங்கும் அதிர்ந்தசைய
மலையிடை **யானைஏறி** வழி
யேவரு வேனெதிரே
அலைகட லால்**அரையன் அலர்**
**கொண்டுமுன் வந்திறைஞ்ச**
உலையணை யாதவண்ணம் நொடித்
தான்மலை உத்தமனே. 7

திருக்கயிலை மலைக்கண் வீற்றிருந்தருளும் முதல்வன், விண்ணுலகம் தனது நிலை கெடுமாறு அதிரவும், நிலவுலகம் முழுதும் அதிரவும் மலையிடைத் திரியும் யானை மீது ஏறி, தனது திருமலையை அடையும் வழியே வருகின்ற என் எதிரே, அலைகின்ற **கடலுக்கு அரசனாகிய வருணன், பூக்களைக் கொண்டு, யாவரினும் முற்பட்டு வந்து வணங்குமாறு, உடல்** அழியாதே உயர்ந்து நிற்கின்ற ஒருநிலையை எனக்கு அளித்தருளினான்; அவனது திருவருள் இருந்தவாறு என்!

---

**1024.** அரவொலி ஆகமங்கள் அறி
வார்அறி தோத்திரங்கள்
விரவிய வேதஒலி விண்ணெ
லாம்வந் தெதிர்ந்திசைப்ப
வரமலி வாணன்வந்து வழி
தந்தெனக் கேறுவதோர்
சிரமலி **யானைதந்தான்** நொடித்
தான்மலை உத்தமனே. 8

சிரம் – தலையாய தன்மை.
அரவொலி – அர என்னும் சிவநாம முழக்கம்.

'அரகர' என்னும் ஒலியும், ஆகமங்களின் ஒலியும், அறிவுடையோர் அறிந்து பாடும் பாட்டுக்களின் ஒலியும், பல்வேறு வகையாகப் பொருந்திய வேதங்களின் ஒலியும் ஆகாயம் முழுதும் நிறைந்துவந்து எதிரே ஒலிக்கவும், மேன்மை நிறைந்த, 'வாணன்' என்னும் கணத்தலைவன் வந்து, முன்னே வழிகாட்டிச் செல்லவும், ஏறத்தக்கதொரு முதன்மை நிறைந்த யானையை, திருக்கயிலை மலைக்கண் வீற்றிருந்தருளும் முதல்வன் எனக்கு அளித்தருளினான்; அவனது திருவருள் இருந்தவாறு என்!

---

**1025.** இந்திரன் மால்பிரமன் னெழி
லார்மிகு தேவரெல்லாம்
வந்தெதிர் கொள்ளஎன்னை **மத்த**
**யானை யருள்புரிந்து**
மந்திர மாமுனிவர் இவன்
ஆர்என எம்பெருமான்
நந்தமர் ஊரனென்றான் நொடித்
தான்மலை உத்தமனே. 9

திருக்கயிலை மலைக்கண் வீற்றிருந்தருளும் முதல்வனாகிய எம்பெருமான், இந்திரன், திருமால், பிரமன், எழுச்சி பொருந்திய மிக்க தேவர் ஆகிய எல்லாரும் வந்து என்னை எதிர் கொள்ளுமாறு, எனக்கு யானையூர்தியை அளித்தருளி, அங்கு, மந்திரங்களை ஓதுகின்ற முனிவர்கள், 'இவன் யார்' என்று வினவ, 'இவன் நம் தோழன்; ஆரூரன் என்னும் பெயரினன்' என்று திருவாய் மலர்ந்தருளினான்; அவனது திருவருள் இருந்தவாறு என்!

மந்திர மாமுனிவர் – உபமன்னிய முனிவர். சிவபெருமானைத் தவிர யாரையும் வணங்காத உபமன்னிய முனிவர். நம்பியாரூரரை வணங்குவதைக் கண்ட மற்றவர் "இவர் யாரென" வினவ, அவர் ஆரூரன் என்று சலகர்களுக்கு அறிமுகம் செய்து வைக்கிறார்.

1026. ஊழிதொ றூழிமுற்றும் உயர்
பொன்நொடித் தான்மலையைச்
சூழிசை யின்கரும்பின் சுவை
நாவல ஊரன்சொன்ன
ஏழிசை இன்றமிழால் இசைந்
தேத்திய பத்தினையும்
ஆழி கடலரையா அஞ்சை
யப்பர்க் கறிவிப்பதே. 10

இத்திருப்பதிகம் நிலவுலகத்தில் மலைநாட்டில் உள்ள திருவஞ்சைக்களத்தில் எழுந்தருளியிருக்கும் பெருமானுக்கு உரித்தாதலை அறிய வேண்டும் என்று வருணனுக்கு ஆணையிட அவன் கொண்டு சேர்த்தான் என்பதும் வரலாறு.

ஆழ்ந்ததாகிய கடலுக்கு அரசனே! உலகம் அழியுங்காலந்தோறும் உயர்வதும், பொன் வண்ணமாயதும் ஆகிய திருக்கயிலை மலைக்கண் வீற்றிருந்தருளும் முதல்வனை, திருநாவலூரில் தோன்றியவனாகிய யான், இசை நூலிற் சொல்லப்பட்ட ஏழாகிய இசையினையுடைய, இனிய தமிழால், மிக்க புகழையுடையனவாகவும், கரும்பின் சுவை போலும் சுவையினையுடையனவாகவும் அப் பெருமானோடு ஒன்றுபட்டுப் பாடிய இப் பத்துப் பாடல்களையும், திருவஞ்சைக்களத்தில் வீற்றிருந்தருளும் பெருமானுக்கு, நீ அறிவித்தல் வேண்டும்.



**திருக்கயிலாயம் :**
**சேரமான் பெருமாள் சென்று வலம் வந்து வணங்க,**
**சுந்தரர் திருக்கயிலைக்கு எழுந்தருளல்**

## ஏழாந் திருமுறை

# பாட்டு முதற்குறிப்பு அகராதி

## ஏழாந் திருமுறை

# தல அட்டவணை

| வ. எண் | தலம் | பதிக எண் | பதிகத் தொடக்கம் |
|---|---|---|---|
| 1. | அஞ்சைக்களம் | 4 | தலைக்குத்தலை |
| 2. | அஞ்சைக்களம் (பொது) | 44 | முடிப்பது கங்கை |
| 3. | அதிகை வீரட்டானம் | 38 | தம்மானை அறியாத |
| 4. | அரிசிற்கரைப்புத்தூர் | 9 | மலைக்கும்மகள் அஞ்ச |
| 5. | ஆமாத்தூர் | 45 | காண்டனன் காண்டனன் |
| 6. | ஆரூர் | 83 | அந்தியும் நண்பகலும் |
| 7. | ஆரூர் | 8 | இறைகளோ டிசைந்த |
| 8. | ஆரூர் | 73 | கரையும் கடலும் |
| 9. | ஆரூர் | 37 | குருகுபா யக்கொழுங் |
| 10. | ஆரூர் | 51 | பத்திமையும் அடிமையையும் |
| 11. | ஆரூர் | 59 | பொன்னு மெய்ப்பொருளும் |
| 12. | ஆரூர் | 95 | மீளா அடிமை உமக்கே |
| 13. | ஆரூர்ப் பரவையுண் மண்டளி | 96 | தூவாயா தொண்டுசெய் |
| 14. | ஆலங்காடு | 52 | முத்தா முத்தி |
| 15. | ஆவடுதுறை | 70 | கங்கை வார்சடை |
| 16. | ஆவடுதுறை | 66 | மறைய வானொரு மாணி |
| 17. | ஆனைக்கா | 75 | மறைகளாயின நான்கும் |
| 18. | இடைமருதூர் | 60 | கழுதை குங்குமம் |
| 19. | இடையாறு (பொதுப் பதிகம்) (இடையாற்றுத் தொகை) | 31 | முந்தையூர் முதுகுன்றம் |
| 20. | எதிர்கொள்பாடி | 7 | மத்த யானை ஏறி |
| 21. | ஐயாறு | 77 | பரவும் பரிசொன்றறியேன் நான் |
| 22. | ஒற்றியூர் | 54 | அழுக்கு மெய்கொடுன் |
| 23. | ஒற்றியூர் | 91 | பாட்டும் பாடிப் |
| 24. | ஓணகாந்தன் தளி | 5 | நெய்யும் பாலும் தயிரும் |
| 25. | கச்சிஅனேகதங்காவதம் | 10 | தேனெய் புரிந்துழல் |
| 26. | கச்சியேகம்பம் | 61 | ஆலந்தான் உகந்து |

| வ. எண் | தலம் | பதிக எண் | பதிகத் தொடக்கம் |
|---|---|---|---|
| 27. | கச்சி மேற்றளி | 21 | நொந்தா ஒண்சுடரே |
| 28. | கச்சூர் ஆலக்கோயில் | 41 | முதுவாயோரிகதற |
| 29. | கடவூர் வீரட்டம் | 28 | பொடியார் மேனியனே |
| 30. | கடவூர் மயானம் | 53 | மருவார் கொன்றை |
| 31. | கயிலாயம் (நொடித்தான் மலை) | 100 | தானெனை முன் படைத்தான் |
| 32. | கருப்பறியலூர் | 30 | சிம்மாந்து சிம்புளித்து |
| 33. | கலயநல்லூர் | 16 | குரும்பை முலை மலர்க்குழலி |
| 34. | கழிப்பாலை | 23 | செடியேன் தீவினையில் |
| 35. | கழுக்குன்றம் | 81 | கொன்று செய்த |
| 36. | கழுமலம் | 58 | சாதலும் பிறத்தலும் |
| 37. | கற்குடி | 27 | விடையாரும் கொடியாய் |
| 38. | காளத்தி | 26 | செண்டாடும் விடையாய் |
| 39. | கானப்பேர் | 84 | தொண்டரடித் தொழலும் |
| 40. | கானாட்டு முள்ளூர் | 40 | வள்வாய மதிமிளிரும் |
| 41. | குருகாவூர் வெள்ளடை | 29 | இத்தனை யாமாற்றை |
| 42. | கூடலையாற்றூர் | 85 | வடிவுடை மழுவேந்தி |
| 43. | கேதாரம் | 78 | வாழ்வாவது மாயம் மிது |
| 44. | கேதீச்சரம் | 80 | நத்தார் படை ஞானன் பசு |
| 45. | கோடிக்குழகர் | 32 | கடிதாய்க் கடற்காற்று |
| 46. | கோயில் | 90 | மடித்தாடும் அடிமைக்கண் |
| 47. | கோலக்கா | 62 | புற்றில் வாளரவு |
| 48. | கோளிலி | 20 | நீள நினைந்தடியேன் |
| 49. | சுழியல் | 82 | ஊனாய் உயிர் புகலாய் |
| 50. | சோற்றுத்துறை | 94 | அழல்நீர் ஒழுகி |
| 51. | தினைநகர் | 64 | நீறுதாங்கிய திருநுத லானை |
| 52. | துருத்தி (வேள்விக்குடி) | 74 | மின்னுமா மேகங்கள் |
| 53. | துறையூர் | 13 | மலையார் அருவித் |
| 54. | நள்ளாறு | 68 | செம்பொன் மேனி |
| 55. | நறையூர்ச் சித்தீச்சரம் | 93 | நீரும் மலரும் நிலவும் சடைமேல் |
| 56. | நனிபள்ளி | 97 | ஆதியன் ஆதிரையன் |
| 57. | நன்னிலத்துப் பெருங்கோயில் | 98 | தண்ணியல் வெம்மையினான் |

| வ. எண் | தலம் | பதிக எண் | பதிகத் தொடக்கம் |
|---|---|---|---|
| 58. | நாகேச்சுரம் | 99 | பிறையணி வாணுதலாள் |
| 59. | நாகைக்காரோணம் | 46 | பத்தூர் புக்கிரந்துண்டு |
| 60. | நாட்டியத்தான்குடி | 15 | பூணாணாவதோர் |
| 61. | நாவலூர் | 17 | கோவலனான் முகன் |
| 62. | நின்றியூர் | 19 | அற்றவனாரடியார் தமக் |
| 63. | நின்றியூர் | 65 | திருவும் வண்மையும் |
| 64. | நீடூர் | 56 | ஊர்வதோர் விடை |
| 65. | நெல்வாயில் அரத்துறை | 3 | கல்வாயகிலும் கதிர் |
| 66. | பரங்குன்றம் | 2 | கோத்திட்டையும் கோவலும் |
| 67. | பருப்பதம் | 79 | மானும் மரையினமும் |
| 68. | பழமண்ணிப்படிக்கரை | 22 | முன்னவனெங்கள் பிரான் |
| 69. | பனையூர் | 87 | மாடமாளிகை |
| 70. | பாச்சிலாச்சிராமம் | 14 | வைத்தனன் தனக்கே |
| 71. | பாண்டிக்கொடுமுடி | 48 | மற்றுபற்றெனக்கின்றி |
| 72. | புகலூர் | 34 | தம்மையே புகழ்ந்து |
| 73. | புக்கொளியூர்-அவினாசி | 92 | எற்றான் மறக்கேன் |
| 74. | புறம்பயம் | 35 | அங்கமோதியோர் |
| 75. | புனவாயில் | 50 | சித்தம் நீ நினை |
| 76. | புன்கூர் | 55 | அந்தணாளனுன் |
| 77. | பூவணம் | 11 | திருவுடையார் திரு |
| 78. | பைஞ்ஞீலி | 36 | காருலாவிய நஞ்சை |
| 79. | மழபாடி | 24 | பொன்னார் மேனியனே |
| 80. | மறைக்காடு | 71 | யாழைப் பழித்தன்ன மொழி |
| 81. | முதுகுன்றம் | 25 | பொன் செய்த மேனி |
| 82. | முதுகுன்றம் | 43 | நஞ்சியிடையின்று |
| 83. | முருகன்பூண்டி | 49 | கொடுகுவெஞ்சிலை |
| 84. | முல்லைவாயில் (வட) | 69 | திருவும் மெய்ப்பொருளும் |
| 85. | வலம்புரம் | 72 | எனக்கினித் தினைத்தனைப் |
| 86. | வலிவலம் | 67 | ஊனங்கத்துயிர்ப் |

| வ. எண் | தலம் | பதிக எண் | பதிகத் தொடக்கம் |
|---|---|---|---|
| 87. | வன்பார்த்தான் பனங்காட்டூர் | 86 | விடையின்மேல் வருவானை |
| 88. | வாஞ்சியம் | 76 | பொருவனார்புரி நூலர் |
| 89. | வாழ்கொளிப்புத்தூர் | 57 | தலைக்கலன் தலை |
| 90. | வீழிமிழலை | 88 | நம்பினார்க்கருள் |
| 91. | வெஞ்சமாக்கூடல் | 42 | எறிக்கும் கதிர் |
| 92. | வெண்காடு | 6 | படங்கொள்நாகம் |
| 93. | வெண்ணெய்நல்லூர் | 1 | பித்தா பிறைசூடி |
| 94. | வெண்பாக்கம் | 89 | பிழையுளன பொறுத்திடுவீர் |
| 95. | வேள்விக்குடி (துருத்தி) | 18 | மூப்பதுமில்லை |
| | பொது | | |
| 96. | ஊர்த்தொகை | 47 | காட்டூர்க்கடலே |
| 97. | திருத்தொண்டத்தொகை | 39 | தில்லைவாழந்தணர்தம் |
| 98. | நமக்கடிகளாகிய அடிகள் | 33 | பாறுதாங்கிய |
| 99. | நம்பி - திருப்பதிகம் | 63 | மெய்யை முற்றப்பொடி |
| 100. | நாட்டுத்தொகை | 12 | வீழக்காலனை |

